அத்தியாயம் ஐம்பத்தொன்று

## மாண்டவர் மீண்டும் வருவாரோ?

கோயில் மாடத்தின் மீது நின்ற பொன்னியின் செல்வரின் மனதிலிருந்த பிரதானக் கேள்வி இதுதான். ஊமை ராணியைக் கூட்டத்தில் கண்ட பின், ஒரு கணம் ஆச்சரியப்பட்டுப் போனார். யுகம் போல் தோன்றிய சில நொடிகளுக்குச் சித்திரப்பாவையைப் போல் செயலற்று நின்றிருந்தார்.

அந்தக் காட்சியைக் கண்டவருக்கு ஆகாயத்திலிருந்து கீழே விழும் உணர்ச்சிதான் ஏற்பட்டது. அதி சீக்கிரத்தில் பூமியுடன் மோதப் போவதாக ஒரு எண்ணம்.

இல்லை, இல்லை. அவர் காலின் கீழ் பூமி பிளந்து விட்டதாகவே தோன்றியது. வெகு விரைவில் பூமி அவரை விழுங்கப் போவதாகவே பயம்.

சிலை போல் நின்றவர் மனம் மட்டும் சித்தப் பிரமை கொண்டது போல இங்கும் அங்குமாய்த் தாவித் தாவிக் குழம்பியது. அருள்மொழி வர்மர் இப்படி மதி குழம்பி கதி கலங்கக் காரணம்தான் என்ன?

இக்கதை நடந்த காலத்தில் தஞ்சை இணையற்ற சீருடனும் சிறப்புகளுடனும் செல்வ வளத்துடனும் விளங்கி வந்தது. சோழ நாட்டின் வளமையையே அதன் தலைநகராம் தஞ்சையில் பிரதிபலித்தது.

இவற்றுக்கெல்லாம் நடுநாயகமாக இருந்த சோழ அரச பரம்பரை நிலைத்து நிற்கப் பெரும் பாடுபட்டுத் தன்னுயிரைத் தியாகம் செய்த ஊமை ராணிக்குக் கோயில் எழுப்பிக் கொண்டிருந்தனர் சோழர். அதன் கும்பாபிஷேக விழாவில் கோயிலின் மேல் மாடத்திலிருந்து பார்வையாளர்களைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தனர் சோழ அரச குடும்பத்தினர். அரச குடும்பம் குதூகலத்தில் இருந்தது. நகரவாசிகளும் உற்சாகம் பொங்கித் ததும்பும் மனநிலையோடுதான் திரளாகக் கூடியிருந்தனர்.

தலைநகரைச் சுற்றியமைந்த கிராமங்கள் பலவிருந்தன. ஆங்காங்கு வசித்த மக்கள் அனைவரும் ஒன்று திரண்டு இன்று

தஞ்சைக்கு வந்திருந்தனர். அது மட்டுமல்ல, சோழ சாம்ராஜ்யத்துக்கு உட்பட்டோ, நேசப்பான்மையுடனோ இருந்த பல நாடுகளின் தலைவர்களும் வந்திருந்தனர். அவர்கள் எல்லாரும் கோயிலின் ஒரு பக்கம் அமர்ந்திருக்க, அவர்களுக்கு அடுத்து அவர்கள் குடும்பத்தினரும், பரிவாரங்களும் காணப்பட்டனர். அனைவரும் இது சோழர்களின் மனதுக்குப் பிடித்த விசேஷம் என அறிந்து தவறாமல் வந்துவிட்டனர்.

தன்னைப் பெற்றெடுக்காத அன்னைக்கு இவ்வளவு மரியாதையா என்ற வியப்புடன் கூட்டத்தைச் சுற்றிப் பார்த்த பொன்னியின் செல்வர் ஓர் அதிர்ச்சியான காட்சியைக் கண்டார். யாருக்காகக் கோயில் கட்டிக் கொண்டிருந்தாரோ, அந்தப் பெண்ணே கூட்டதில் நின்று கொண்டிருந்தாள்.

ஆம், ஊமைராணி கூட்டத்தில் நின்று தனக்கெனச் சோழர்கள் கட்டும் கோயிலைத் தரிசித்துக் கொண்டிருந்தாள். ரசித்துக் கொண்டுமிருந்தாள். முதலில் தன் கண்களில்தான் கோளாறு இருக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டார் பொன்னியின் செல்வர். 'இதெல்லாம் நிச்சயமாக உண்மை இல்லை. இந்திர ஜாலம், மகேந்திர ஜாலம் என்று சொல்லுகிறார்களே, அப்படி ஏதாவது இருக்க வாய்ப்புண்டோ? அதனால்தான் நம் கண்ணே நம்மை ஏமாற்றுகிறது போலும்!' என்று முதலில் முடிவு செய்தார்.

பின்பு, 'இல்லை, இல்லை. இது போல நம் வாழ்வில் இதுவரை நடந்ததில்லையே. இதற்கு முன் பலர் இறந்து நாம் பார்த்திருக்கிறோம். ஏன், நம் கையால் கூடப் பகைவர் பலரைக் கொன்றிருக்கிறோம். அதில் ஒருவரின் பிம்பத்தைக் கூட இதுவரை நாம் மீண்டும் பார்த்ததில்லையே. ஆனால், பலரது கண்களுக்குமுன் மாண்டு, நாமே சிதைக்குத் தீ மூட்டிய பெண் எப்படிக் கூட்டத்தில் நிற்கிறாள்? இதில் வேடிக்கை என்னவென்றால், அவள் நினைவாலே கோயில் எழுப்பும் நிகழ்ச்சிக்கு எப்படி வந்தாள்?' என்று நினைத்தார்.

'இல்லை, இல்லை' என்றது அவரது பகுத்தறிவு. ஓய்வு கிடைத்த போதெல்லாம் பொன்னியின் செல்வர் கட்டப்பட்டுக் கொண்டிருந்த இந்தக் கோயிலுக்கு வருவதுண்டு. ஒவ்வொரு சிற்பத்தையும் கண்டு களிப்படைவதுண்டு. 'அதுவே நம் மனதில் ஆழமாகவும் அழுத்தமாகவும் பதிந்திருக்குமோ? தினந்தோறும் ஊமை நாச்சியாரின் கோயில் வேலைப்பாடுகளையே பார்த்ததற்கும் இந்தப் பிரமைக்கும் ஏதேனும் சம்பந்தம் இருக்குமோ?' என்ற சந்தேகங்கூட அவர் மனத்தில் தோன்றியது.



'இல்லை, இப்படியிருக்குமோ? மாண்டு போய் வெகு காலமான மனிதர்களின் ஆவிகள் தங்களுக்குப் பிடித்தமான நிகழ்ச்சிகளுக்கு வருமென்று சொல்லுவார்களே.' ஆண்டு தோறும் உயிர்நீத்த ஊமைராணிக்குப் பிதுர்க்கடன் செய்யும் கடமையை அவர் ஏற்றிருந்தார். 'அதனால் எனக்கு நன்றி செலுத்த ஆவி ரூபத்தில் வந்தாளோ?' என்றும் தோன்றியது.

சக்கரவர்த்திக்கு அருகேதான் நின்று கொண்டிருந்தார் பொன்னியின் செல்வர். இருவரும் கோயிலின் மேல் மாடத்திலிருந்த நெரிசலில் ஒருவரோடு ஒருவர் உரசியபடிதான் நின்றார்கள். அவருடைய உடல் நடுக்கமுற்றதைக் கவனித்த அரசர், "பொன்னியின் செல்வரே, தங்களுக்கு என்ன நேரிட்டது? உங்கள் முகம் வியர்த்திருக்கிறது. உடலெங்கும் ஒரு நடுக்கம் தெரிகிறது. கூட்ட நெரிசலினாலா?" என்று கேட்டார்.

அவரது குரல் பொன்னியின் செல்வருடைய மயக்கத்தைக் கலைத்தது. அரசர்பால் திரும்பி, இல்லையெனத் தலையை மட்டும் அசைத்தார். பேச வார்த்தைகள் வரவில்லை. அரசரைப் பார்த்து விட்டுப் பொன்னியின் செல்வர் மீண்டும் கூட்டத்தை நோக்கினார். அவர் மறுபடி சுயமாக அறிவைப் பயன்படுத்தும் திறன் பெற்றபோது, என்ன அதிசயம்! அங்கு யாரும் இல்லை. அந்தப் பெண் நின்றிருந்த இடம் காலியாக இருந்தது. உற்று நோக்கிய இடத்தில், கோயிலுக்கு முன் கூடியிருந்த பெரும் ஜனக் கூட்டத்தின் மத்தியில் ஊமை ராணி புகுந்து மாயமாய் மறைந்து விட்டாள் போலும்.

முதலில் ஊமை ராணியைக் கூட்டத்தில் கண்டவுடன் பயந்து பதற்றமடைந்தார் பொன்னியின் செல்வர். எல்லாருக்கும் முன்னால் எவ்வளவு பெரிய முட்டாளாகி விடுவோம் என்ற எண்ணம் அவருக்கு வந்தது. உயிருடன் இருப்பவரை தெய்வமாக்கிக் கோயில் வேறு கட்டியாயிற்று. அவள் இறந்து விடவில்லை. உயிருடன்தான் இருக்கிறாள் என்ற உண்மை வெளியில் தெரிந்தால் ஊர் சிரிக்கும். உலகம் நகைக்கும்.

பின் பயம் மூடி மறைத்த அறிவு தன் நிலையை மீண்டும் பிடித்துக் கொண்டது. அவருக்குப் பாடம் கற்பிக்கும் ஆசான் போல எடுத்துச் சொன்னது. 'இல்லை. இறந்து கிடந்த ஊமை ராணியின் சிதைக்குத் தீ மூட்டியது நீ. இது அவளாய் இருக்க முடியாது!' என்றது அவரது பகுத்தறிவு. 'பின்தொடர்ந்து போய்ப் பார்' என்றது அவரது ஆர்வம்.

பொன்னியின் செல்வருக்கு ஒன்றும் புரியவில்லை. கூட்டத்துக்கு அப்பாலுள்ள அந்த மாயையைக் கண்டறிய, விதி விடுத்த விடுகதையெனும் முடிச்சைக் கட்டவிழ்க்க வேண்டிய நிர்பந்தம் அவருக்கு ஏற்பட்டிருந்தது. அப்போது அவருடைய மனதில் ஒரு பெரும் போராட்டமே நடந்தது. போகலாமா, வேண்டாமா என்று மனதுக்குள் விவாதித்துக் கொண்டே சில நொடிகள் கழித்தார்.

அப்போது அவர் மனதில் எழுந்தது அடுத்த எண்ணம். 'இந்த அரிய சந்தர்ப்பத்தை விடக்கூடாது. எப்படியாவது அந்த ஊமை ராணியை அணுகி முழு விவரத்தை அறிந்து கொள்ள வேண்டும். இது எப்படி நிகழ்ந்தது என்று தெரிந்து கொள்ளவேண்டும். இன்று மட்டும் நாம் இதைச் செய்யவில்லை என்றால், பின்னர் வாழ்க்கையெல்லாம் வருத்தப்படப்போவது உறுதி. இதனால் எதை நாம் இழந்தோம், எதை நாம் அனுபவிக்கவில்லை என்று ஏக்கம் நிச்சயம் பின்னால் வரும். இதை உடனே செய்து முடிக்க வேண்டும்' என்று நினைத்தார்.

'இனி இங்கே தாமதித்து விடக்கூடாது. இந்தக் கும்பாபிஷேகத்தைக் காண்பதை விட அது முக்கியம்' என்று முடிவும் செய்தார்.

ஆனால், முடிவெடுத்ததைச் செயல் படுத்துவது சுலபம் இல்லையே! அவளைப் பின் தொடர்ந்துதான் செல்ல வேண்டும். ஆனால், கோயிலைச் சுற்றிலும் நின்று கொண்டிருந்த ஜனத்திரளை ஊடுருவிக் கொண்டு எப்படிச் செல்வது? தஞ்சைத் தெருக்களில் எள்ளைப் போட்டால் எள்ளை எடுக்க இடமில்லை. கோயில் திருவிழாவுக்கு அரச குடும்பத்தினர் அனைவரும் விஜயம் செய்யப் போகிறார்கள் என்ற செய்தி பரவியதிலிருந்தே அக்கம் பக்கத்தில் பத்துப் பதினைந்து காத தூரம் வரையில் இருந்த எல்லா ஊர்களும் காலியாகித் தஞ்சை நிறைந்திருந்தது. கோயிலைக் காணும் பொருட்டு ஆயிரக் கணக்கானோர் தஞ்சை நகரில் வந்து மொய்த்த வண்ணம் இருந்தார்கள். ஒரே இடத்தில் அரச குலம் அனைத்தையும் பார்ப்பதற்கு யார்தான் ஆர்வம் கொள்ளாமலிருக்க முடியும்?

அவரைச் சூழ்ந்துள்ள மக்கள் அனைவரும் தம் மீதுள்ள அன்பின் மிகுதியினால் தம்மைப் போகவிடாமல் தடுப்பார்கள் என்னும் எண்ணம் பொன்னியின் செல்வருடைய மனதில் வேரூன்றியது.

'அப்பப்பா! அவசரத்தில் கூட இவர்களுடைய அன்புச் சிறையிலிருந்து தப்ப முடியவில்லையே?' என்று நினைத்துவிட்டு, ஊமை ராணி மறையும் முன் நின்ற இடத்தைப் பார்த்தார் பொன்னியின் செல்வர். அது இன்னும் காலியாகத்தான் இருந்தது.



கொஞ்சம் பின் நகர்ந்தார், பொன்னியின் செல்வர். அரச குடும்பத்தினரும், கீழே இருந்த பார்வையாளர்களும், கோயில் கலசத்தையும் அதைச் சுற்றியுள்ள சாரத்தின் மீது குடத்துடன் ஏறிக் கொண்டிருந்த குருக்களையுமே பார்த்திருந்தனர்.

கோயிலுக்குள் அரச குடும்பம் பிரவேசித்தபோது, விழாவை நடத்துபவர்கள் பட்டினால் நெய்த பொன்னாடையை அவர்களுக்குப் போர்த்தினார்கள். பொன்னியின் செல்வர் அதை இப்போது எடுத்துத் தலையை ஒரு சுற்றுச் சுற்றி முகத்தின் அடிப்பாகத்தை மறைத்துக் கொண்டார். தன்னை யாரேனும் அடையாளம் கண்டு கொண்டால் அங்கிருந்து ஒரு அடி கூட நகர முடியாது என்று அவருக்குத் தெரியும்.

விரைவாகச் சாரம் வழியாகக் கீழே இறங்கினார் பொன்னியின் செல்வர். அதி வேகமாகக் கூட்டத்துக்கு இடையே நகர்ந்தார். ஆனால், அச்சமயம் அவர் வெளியேற யத்தனித்தபோது, முடியவில்லை. ஆண்களும், பெண்களும், சிறுவர்களும், சிறுமிகளும், வயோதிகர்களும் அக்கூட்டத்தில் இருந்தார்கள். எல்லாரும் முண்டியடித்துக் கொண்டு முன்னால் வர முயன்று கொண்டிருந்தார்கள். சிலர் விருப்பப்பட்டுக் கோயிலில் நடப்பதைச் சற்று அருகில் சென்று பார்க்கலாம் என்று எண்ணி முன் நகர்ந்தார்கள். ஒரே இடத்தில் நிற்க எண்ணும் மக்களும் அதனால் வேறு திக்கில் தள்ளப்பட்டார்கள். வாழ்வில் என்றோ வரும் சந்தர்ப்பமிது. அரச குலத்தை அருகிலிருந்து பார்க்கும் பாக்கியம். இதை விட்டால் இனி என்றோ என்று ஆண்கள் கூட்டத்தினிடையே இடித்துப் பிடித்துக் கொண்டு முன்னால் வரப் பிரயத்தனம் செய்தார்கள்.

அந்த மக்கள் வெள்ளத்தை எதிர்த்து வெளியே செல்வது மிகவும் கடினம். நாடே எதிர்த் திசையில் கோயிலை நோக்கி முண்டி முன்னேறிக் கொண்டிருந்தது. இவர் மட்டும் எப்படி எதிர் நீச்சல் போட முடியும்? ஜனங்களை விலக்கிக் கொண்டு போக முயன்றும் பலிக்கவில்லை. எப்படியாவது இந்த நகர மாந்தர்களின் அன்புச் சூழலிலிருந்து தப்பித்துப் போனால் போதும் என்று இளவரசருக்குத் தோன்றி விட்டது.

கூட்டத்தில் பலரையும் இடித்துத்தள்ளிவிட்டு, முந்திக் கொண்டு சென்ற பொன்னியின் செல்வரைப் பெரும்பாலோர் திட்டினார்கள். பாவம், யாருடைய காட்சிக்காகக் கோயில் மேல் மாடத்தில் தேடிக்கொண்டிருந்தனரோ- அவர்தான் இது எனத் தெரியாமல்! சோழ நாடு தவம் செய்து பெற்ற புதல்வரும், காவிரித் தாய் காப்பாற்றிக் கொடுத்த செல்வரும், ஈழம் வென்ற வீராதி வீரருமான பொன்னியின் செல்வர்தான் தங்களைத் தள்ளுகிறார்

என்று தெரிந்தால் என்னவாகும்?' ஆனால், அந்த வசவுகளை எல்லாம் பொருட்படுத்தாமல் பொன்னியின் செல்வர் முன்னால் சென்றார்.

பொன்னியின் செல்வர் முதலில் வெளிவர மிகவும் சிரமப் பட்டார். ஆனால், அவரைப் போலவே இந்த ஜனக் கூட்டத்தின் நடுவே நசுக்கப்படுவதைத் தாங்க முடியாமல் சிலரும் வெளியேற முயன்றனர். கூட்டத்தின் நடுவில் மாட்டிக் கொண்ட வயோதி கர்கள் பாடு பாவம்தான். எல்லாருமாய் அவர்களை நசுக் கினார்கள். கூட்டம் அலையைப் போல ஒரு பக்கத்திலிருந்து வேறு ஒரு பக்கம் நகர்ந்தது. அந்த அசைவில் பலருடைய கால்களே தரையில் படாமல் தூக்கப்பட்டனர். இந்த முதியோர்கள் தாங்கள் நெரிசலில் மூர்ச்சை அடைந்து விழுந்தால் என்னவாகும் என்று நினைத்தார்களோ என்னவோ, "இல்லை, இல்லை. வெளியே சென்று விட வேண்டும்" என்று முடிவு செய்தனர். அவர்களுடன் இவரும் வெளியே செல்ல வழியைக் கண்டு பிடித்தார்.

சற்றுப் போராட்டத்துக்குப் பின் கூட்டத்தின் நெரிசலிலிருந்து விடுபட்டார் பொன்னியின் செல்வர். அவ்வப்போது திரும்பிப் பார்த்தார். தம்மைத் தொடர்ந்து யாரும் அகப் பரிவார வீரர்கள் வரக் கூடாது என்று கவனமாய் இருந்தார். அண்ணன் ஆதித்யனின் கொலைக்குப்பின் வேளக்காரப் படையினரின் பாதுகாப்பு அரச குலத்து ஆண்களுக்கெல்லாம் உண்டு எனத் தீர்மானிக்கப்பட் டிருந்தது. அரச குலத்தினருக்கே தெரியாமல் கூட இந்த அகப்பரி வாரப் படையினர் வரலாம். மாறுவேடத்தில் தொடரலாம்.

ஊமை ராணி முதலில் நின்றிருந்த இடத்தை அடைந்தார் பொன்னியின் செல்வர். அவ்விடத்துக்குப் பின்னே நான்கைந்து வரிசைகளில் மட்டும்தான் மக்கள் நின்றிருந்தார்கள். கூட்ட நெரிசலுக்கு அப்பால்தான் ஊமைராணி நின்றிருந்தாள் போலும். 'வேணும் என்கின்ற போது வெளியேறலாம் என்று ஓரமாய் நின்றாளோ?'

அவளைக் காணாமல் எழுந்த தன் ஏமாற்றத்தை அடக்கிக் கொண்டு, சற்றுச் சுதாரித்துகொண்டு மூளையை வேலையில் இறக் கினார். அவள் வெளியேறும்போது எத்திசையில் சென்றிருப்பாள் என்று யூகித்து அதே திசையில் ஓடினார்.

அவள் சோகம் தழுவிய முகத்துடன் அவரையே பார்த்திருந்த அந்தக் காட்சி இன்னும் அவர் மனத்தை விட்டு அகலவில்லை. அந்தப் பார்வையை நினைக்கும் போதெல்லாம் அவருக்கு ரோமம் சிலிர்த்தது.



'ஐயோ! இது என்ன மாயா ஜாலமோ! அதைத் தொடர்ந்து போகிறோமே' என்று நெஞ்சில் ஒரு பக்கம் அச்சம் தோன்றிக் கொண்டிருந்தபோது, 'அட, மாயமாயிருந்தால்தான் என்ன! தன் உயிரைக் கொடுப்பதின் மூலம் சுந்தர சோழரின் வாழ்வை யமனிட மிருந்து மீட்டுக் கொடுத்த அந்த உத்தமி இங்கு வந்திருக்கும் வாய்ப்பு உள்ளது. போய்த்தான் பார்ப்போமே!' என்ற முடிவுக்கு வந்தார்.

அவள் சென்றிருக்கக் கூடுமென்றெண்ணிய திசையில் ஓடியும் நடந்துமாய்ச் சென்றார், பொன்னியின் செல்வர். ஒவ்வொரு வீதியைக் கடக்கும் போதும் இடப் பக்கமும் வலப் பக்கமுமாய்ப் பார்த்தார். ஆள் நடமாட்டம் இல்லை. அதில் உலவும் மாந்த ரெல்லாம் ஓரிடத்தில் சங்கமித்த பின்னே, தஞ்சை நகர வீதிகள் இதற்கு முன் எந்த நாளிலும் கண்டிராத அமைதியுடன் விளங்கின. ஆனால், அவரது இருதயம் அடித்த சப்தம் போர் முரசினை ஒத்திருந்தது என்றே சொல்ல வேண்டும்.

வீதிகள் வெறுமையாய் இருந்தன. கூட்டத்தில் ஊமைராணியை தேடிப் பார்த்துவிட்டு வெகு வேகமாக நடந்து பல ஆளில்லாச் சாலைகளைக் கடந்த பின், கடைசியாக ஒரு நாற்சந்தியை அடைந் தார். எக்காலத்திலும் அது ஜன நெருக்கம் வாய்ந்த பகுதியாயிருந் தாலும், இன்று அவ்விடம் அமைதியாய் விளங்கியது. அமைதியை விட வெறுமையாய் இருந்ததாகப் பொன்னியின் செல்வருக்குப் பட்டது. வீதியில் விளங்கிய சூனியம், அவர் மனம் இருக்கும் நிலையைப் பிரதிபலித்ததாகவே அவருக்குத் தோன்றியது.

மூச்சிரைக்க நாற்சந்தியில் நின்றபோது, அவர் அந்தக் காட்சி யைக் கண்டார். ஒரு மரத்தடியில் அவர் தேடி வந்த பெண் அமர்ந்து மடியில் தலை புதைத்துக் குலுங்கிக் குலுங்கி அழுது கொண் டிருந்தாள். அருள்மொழிக்குப் படபடப்பு. மடியில் தலையைப் புதைத்து அழுதவள்தான் கூட்டத்தில் நின்றிருந்தவள் என்று உறுதியாய் நினைத்தார். சந்தேகமில்லை. இவ்வளவு நேரம் அவருடைய கால்கள் கடுக்க ஓடிக் கண்கள் சுற்றிச் சுழன்று தேடிக் கொண்டிருந்தவள் இவள்தான்.

மெல்ல நடந்து சென்று அவள் முன்னால் நேருக்கு நேர் நின்ற பொன்னியின் செல்வர் என்ன பேசுவதெனத் தெரியாது விழித்தார். 'வாழும் நாட்களில் இவளோ ஊமை, செவிடு. இன்றோ ஆவியுலகத்திலிருந்து வந்திருப்பாள் போலும். மாண்ட பின் மனித ஊனங்கள் மறைந்துவிடுமோ?' என்று யோசித்தார்.

'ஐயோ! எனக்குமட்டும் ஏன் இப்படியெல்லாம் நடக்கிறது?' என்று நினைத்த பொன்னியின் செல்வர் ஒரு முடிவுக்கு வந்தார். குரலைச் சற்றுத் தாழ்த்தி, ''நான் அருள்மொழி வந்திருக்கிறேன்'' என்றார்.

குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு அவள் தலையை உயர்த்தி நிமிர்ந்து பார்த்தாள். சித்தப் பிரமை கொண்டவளைப் போல் அப்படியும் இப்படியும் பார்த்துக் கொண்டிருந்த பெண் யாரென்று ஒரு நொடியில் பொன்னியின் செல்வருக்குத் தெரிந்தது. அந்தப் பெண் தன் முகத்தை நிமிர்ந்து பார்க்கவே, அவள் யாரென்று சரியாக ஊகித்துக் கொண்டார். தலைவிரி கோலமாய்க் காட்சி யளிக்கும் இவள் ஊமை ராணியல்ல. அவள் மகள் நந்தினி! 'ஆ! இது என்ன அதிசயமான உருவ ஒற்றுமை! தத்ரூபமாய் அப்படியே இருக்கிறதே!'

இன்ப துன்பம் இரண்டையும் ஒரே நிமிடத்தில் அனுபவித்த குழப்பம் பொன்னியின் செல்வர் முகத்தில் தாண்டவமாடியது. முதலில் ஊமை ராணியின் பிம்பத்தைக் கண்டவுடன் பொன்னி யின் செல்வருக்கு உற்சாகம் கூடியிருந்தது. 'நம்மை யார் வேணு மானாலும் என்ன வேணுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும். என் தாய் எனக்கு உயிருடன் கிடைத்து விட்டால் போதும்!' என்றிருந்தார். ஆனால், நந்தினியைக் கண்டவுடன் அவருடைய உற்சாகம் குன்றி விட்டது.

முகத்தில் மோகனப் புன்னகையுடன் இந்த உலகத்தையே ஒரு காலத்தில் வசீகரித்தவள் இவள். அழகியதோர் உடையலங்காரம் செய்த பின் அவள் பவனி வரும் எழிலென்ன! ஒரு காலத்தில் நந்தினியைக் கண்ட பலருக்கும் ஆசை வரும். சிலருக்குப் பயம் வரும். அது ஆண்களைப் பொறுத்த மட்டில். பெண்கள் அனை வருக்கும் ஆத்திரமும், பொறாமையும் கூட வரும்.

ஒரு காலத்தில் கர்வத்துடன் கூடிய ஏளனப் புன்னகைக்குச் சொந்தக்காரி அவள். ஆனால், அதற்கு நேர் மாறாகச் சொல்ல முடியாத வேதனை இப்போது நந்தினியின் முகத்தில் குடி கொண் டிருந்தது. அழுததற்கான அறிகுறி தெரிந்தது. அழுது அழுது அவளு டைய முகமும் கண்ணிமைகளும் வீங்கிப் போயிருந்தன. திருதிரு வென்று விழித்துக் கொண்டு அவரையே பார்த்தாள் நந்தினி.

நந்தினியின் முகமும் பொன்னியின் செல்வரைக் கண்டவுடன் மலர்ந்தது. ஆனால், ஒரு நொடிதான். பின் தன்னை அறியாமல் வந்த மகிழ்ச்சியை அடக்கிக் கொண்டாள் போலும். உடனே மறுபடியும் சோகம் அவள் முகத்தைத் தழுவியது. சுய நினைவும்



சுற்றுப்புறத்தைப் பற்றிய உணர்வும் வந்ததும், பயமும் கூட வந்தது. சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள். சுற்றித் திரும்பிப் பார்த்தாள். தன்னை ஒரு குற்றவாளியாய்ப் பார்க்கும் நகரம் இது என்று ஒரு கணத்தில் நினைவு வந்தது. ஆனால், பொன்னியின் செல்வர் தனியாய் நிற்பதைக் கண்டாள்.

ஒரு வினாடி கூட ஓய்வின்றி விளையாடும் விதியின் விந்தை. கோயிலின் திறப்பையொட்டித் தஞ்சையின் தெருக்களெல்லாம் காலியாயிருந்தன. ஆனால், அந்தக் காலித் தெருக்களில் இருவர் மாத்திரம் தனியே இருந்தனர்.

ஒருவர் கோயில் கட்டப் பிரம்மப் பிரயத்தனம் செய்த பொன்னியின் செல்வர்.

மற்றொருவர் அந்த விழாவில் பிரதம விருந்தாளியாக இருந் திருக்க வேண்டிய ஊமை ராணியின் மகள் நந்தினி.

இருவரும் கும்பாபிஷேகமே வேண்டாம் என்று ஆளில்லாத் தெருவில் ஒருவரை ஒருவர் ஏறிட்டுப் பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

❖ ❖ ❖

## அத்தியாயம் ஐம்பத்திரண்டு
## 'இவனுக்கு மலரையொத்த இதயமா?'

**கா**ட்டில் வாழ்ந்த நந்தினி தன் தாய்க்குத் தஞ்சையில் ஒரு கோயில் கட்டப்படுகிறது என்று வழிப்போக்கர்களிடமிருந்து கேள்விப்பட்டாள். தன் உறைவிடத்தின் அருகே ஓடிய சாலையில் வழக்கத்துக்கு அதிகமாகப் பலரும் தலைநகரை நோக்கிச் செல்லவே, என்னவென்று விசாரித்தாள். அந்த மக்களும் தஞ்சை யில் நடக்கவிருந்த விசித்திர நிகழ்ச்சியைப் பற்றிச் சொன்னார்கள்.

''ஈழத்தில் பிச்சியாய்த் திரிந்த அந்தப் புண்ணியவதியாம் ஊமை ராணிக்குத் தலைநகரில் கோயில் எழுப்புகிறார்கள், சோழர்கள்!'' என்று கூறினார்கள்.

முதலில் அவளுக்கு வந்தது சந்தேகம்தான். 'நம்மை வயப் படுத்தவோ, சிறைப்பிடிக்கவோ நடக்கும் முயற்சியா இது? சோழர்கள் நல்லவர் போலப் போக்குக் காட்டி தன்னை நய வஞ்சகமாகத் தண்டித்து விடுவார்கள்!' என்று நினைத்து விட்டாள்.

''சோழனின் மனம் திறவுகோல் இல்லாத பூட்டு. உடைத்துத் தான் திறக்க வேண்டும்'' என்று ரவிதாசன் அடிக்கடி சொல்வானே. ''சோழன் எப்போதும் நேர்மை நெறி தவறாதவனாகவும் நீர விசாரித்து நீதி வழங்கும் அரசனாகவும் தன்னை வெளிக் காட்டிக் கொள்வான். பசுவைத் திருப்தி செய்யத் தேர்க் காலைத் தன் மகன் மீது ஏற்றுவான். ராஜாளியைத் திருப்தி செய்யத் தன் தொடையி லிருந்து தசையை அறுத்துக் கொடுப்பான். அவை எல்லாம் இலக்கியத்தில் இடம் பிடிக்கும் வரைதான்!'' என்றும் சொல்வான் அவன்.

அது போலத்தான் ஜன்மப் பகையாளிகளாம் எதிரணித் தலை வர்கள் இருவரின் தாய்க்குக் கோயிலும் எழுப்புகிறானோ என்னவோ! ஒளிந்திருக்கும் அவர்களையெல்லாம் வெளிக் கொண்டுவரத் தீட்டிய திட்டமா இது?

ஆனால், தாயின் கோயிலை நிர்மாணிக்கும் வேலைகள் தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன என்று கேள்விப் பட்டவள், அதைக் காண ஆர்வம் கொண்டாள். எனினும் தஞ்சைக்கு வர மிகவும் தயங்கினாள். சென்றால் யாரேனும் அடை யாளம் கண்டு கொள்வார்களா?

'அந்த நயவஞ்சகரின் நாட்டுக்குத் திரும்ப நினைக்கும் எனக்கு அசாதாரணத் தைரியம் ஏற்பட்டிருக்க வேண்டும்!' என்று தனக்கே சொல்லிக் கொண்டு நகைத்தாள். போகும் வழியில் அல்லது சோழ நாட்டில் பிராணாபத்தில் சிக்கிக் கொண்டால் என்னாவது?

'அந்த நாட்டுக்குள் நீ அகப்பட்டுக் கொண்டாயென்றால் உனக்கு என்ன தண்டனை தெரியுமா?' என்று கேட்டது அவள் மனம். தன் ஆசைகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு போகாம லிருந்துவிட முயற்சித்த நந்தினிக்குக் காட்டில் இருப்புக் கொள்ள வில்லை. மனம் தஞ்சையிலும் உடல் கானகத்திலும் மாட்டிக் கொண்டு அந்தப் பிரிவினையில் துடியாய்த் துடித்துக் கொண் டிருந்தாள்.

'ஓரிரு நாள்தானே பயணம். இன்று நாம் இருக்கும் நிலையில் நம்மை யாரும் அடையாளம் கண்டு கொள்ளக்கூட மாட் டார்கள். சென்று வந்து விடலாமே' என்று நினைத்தாள்.

காரிய காரணங்கள் கேட்டு அறிந்து செயல்படுவது இதற்குப் பொருந்தாது. இந்த விநோதத்தைப் பார்க்கப் பொது ஜனங்களுக்கே ஆர்வம் மிகுந்திருந்தபோது, தன் தாய்க்கு ஒரு கோயில் என்பது எப்படிப்பட்ட ஒரு கிளர்ச்சியை அவளிடம் தூண்டி விட்டிருக்க வேண்டும்?



அலைச்சலினால் சிரமந்தான். ஆபத்தினால் சிரமந்தான். ஆனால், அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் போய்த்தான் பார்ப்போமே என்ற முடிவுக்கு வந்தாள்.

நந்தினி தஞ்சைக்குக் கிளம்பி வந்தாள். நீண்ட நெடுநேரப் பயணம் முடியும் தறுவாயில் களைத்துப் போயிருந்தாள். ஆனால், அவள் கண்ட காட்சி அவள் சோர்வை எல்லாம் போக்கியது. ஜனங்கள் அளவில்லாத ஆர்வம் கொண்டு, அலையலையாய்க் கோட்டை வாசல் வழியாக வந்து கொண்டிருந்தனர். தன் தாய்க் காகத் திரள் திரளாகத் தஞ்சைக்குள் இவ்வளவு பேர் நுழைந் தார்கள் என்பது நந்தினிக்குச் சற்றுப் பெருமையையும் தந்தது.

நாடே விழாக் கோலம் கொண்டிருந்தது. தங்கள் இதயம் கவர்ந்த அரச குடும்பம் செய்த திருப்பணியைப் பற்றி இராஜ வீதிகளிலெல்லாம், ஜனங்கள் ஆங்காங்கு கூடிக் கூடி நின்று பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு துணி மூட்டையைச் சுமந்தபடி, தலைவிரி கோலமாக நந்தினி தஞ்சைக்குள் பிரவேசித்தாள். கோட்டை வாசலில் கட்டுக் காவல் கோயில் விழாவை ஒட்டித் தளர்த்தப் பட்டிருந்தது.

கூட்டத்தோடு கூட்டமாகக் கலந்து நந்தினி கோயில் விழாவைக் காண வந்தாள். தனது தற்போதைய அவல நிலையை, கடந்த காலத்தில் அவளை அறிந்தவர்கள் யாரும் கண்டுவிடக்கூடாது என்று கவனமாகவுமிருந்தாள்.

கோட்டை கொத்தளங்களைத் தாண்டியவுடன் வேறு உலகுக்கு வந்து விட்டோமோவென்று நினைக்கும்படி கொண்டாட்டங் களும் கோலாகலங்களும் தஞ்சை நகரில் நடந்து கொண்டிருந்தன. சிரிப்பும் கேலியுமாக இருந்தது ஊர். எல்லாரிடத்திலும் உவகை, உற்சாகம். அந்தக் கூட்டத்தில் அவையெல்லாம் குன்றிக் காணப் பட்டவள் நந்தினி மட்டும்தான்.

அவள் இந்த நாட்டை விட்டுச் சென்று ஐந்து ஆண்டு காலம் தான் ஆனது. ஆனால், 'நாம் இந்த நாட்டை விட்டு வெளியேறி எத்தனை நாள் ஆயின?' என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டாள் நந்தினி. நந்தினிக்கு அது எத்தனையோ யுகங்கள் போலத் தோன்றியது. அவ்வளவு மாற்றங்கள்! அவ்வளவு செல்வம்!

அவள் மனதில் ஏற்பட்ட வேதனைக்கு அளவே கிடையாது. அந்தக் காட்டை விட்டு வெளியே வருவதற்கே அவளுக்கு வெட்கமாயிருந்தது. எனினும் தன் அன்னைக்கு ஒரு கோயில் என்பது யாருக்குமே கிட்டாத பாக்கியம். அதை அவள் கண்கள் இரண்டும் பாராமல் போனால் இந்த ஜன்மத்தில் அவளுக்கு

மோட்சம் கிட்டுமா என்றே வந்தாள். ஆனால், இப்போது நடந்து கொண்டிருந்த களியாட்டங்கள் அவளுக்குத் தன் வாழ்க்கையின் வெறுமையை வெளிக்காட்டின. ஆனால், மனதைத் தேற்றிக் கொண்டாள். 'நமது மனோ நிலைக்கு எது மாறுபட்டிருந்தாலும் பரவாயில்லை. நம்மை யாரும் கண்டுகொள்ளாமலிருக்கும் வரை அது நல்லதே!' என்று சமாதானப் படுத்திக் கொண்டாள்.

யாரேனும் அவளை அடையாளம் கண்டு கொண்டால் என்ன வாகும் என்று தெரியும் நந்தினிக்கு. இவள் யாரெனத் தெரிந்து கொண்டார்களென்றால் காலையும் கையையும் சேர்த்துக் கட்டிச் சிறைப்படுத்திச் சென்று, பெண்ணென்றுகூடப் பாராமல் தன்னை நாற்சந்தி மத்தியில் கழுமரத்தில் ஏற்றிவிடுவார்கள். அவள் மீது சோழர்களுக்கு அவ்வளவு வெறுப்பு.

இந்த ஊரில்தான் ஒரு காலத்தில் அவள் காலாலிட்டதைத் தலையால் செய்து முடிக்க அரசர்கள் தவமிருந்தார்கள். ஆனால், அரியணைக்கு அடுத்த வாரிசு கடம்பூரில் கொல்லப்பட்டவுடன், ''இப்படியும் ஒரு ராட்சசி உலகில் இருக்க முடியுமா?'' என்று நாடே அவளைச் சபித்தது.

நந்தினியின் கணிப்பு சரியாகத்தான் இருந்தது. இந்தக் கூட்டத்தில் யாரும் அவளைக் கவனித்ததாகத் தெரியவில்லை. இம்மாதிரிச் சமயங்களில் மக்களின் தர்ம சிந்தனை கூடும் என்பது தெரிந்து, பல பரதேசிகள் ஊருக்குள் வந்திருந்தார்கள். அதில் அவளும் ஒருத்தியென்று நினைத்து விட்டனர் போலும். அதைக் கண்டு அவளுக்கே சிரிப்பு வந்தது. ஒரு காலத்தில், அவள் கண்ணில் ஒரு சொட்டுக் கண்ணீர் துளிர்த்தால், நெஞ்சம் பதறுகிறவர்கள் சோழ நாட்டில் ஆயிரம் பதினாயிரம் பேர் இருந்தார்கள். அவளது பவழச் செவ்வாயில் தோன்றிய புன்னகை இந்த நாட்டில் எத்தனை பேரைத் தடுமாறச் செய்திருந்தது! அவள் கன்னங்கள் குழிந்த போது கண் கொட்டாமல் அதையே பார்த்துக் களிப்படைந்தவர்கள் எத்தனை பேர்!

அவளே தினந்தோறும் கண்ணாடியில் முகம் பார்த்துத் தன் அழகைக் கண்டு பெருமைப்பட்டாள். தன் அழகைக் கண்டவுடன் எதிரில் நிற்கும் ஆண்களின் கண்களில் மின்னும் மோகமெனும் ஜுவாலையைக் கண்டு பரவசப்பட்டாள். இன்று அவளை இரண்டாவது முறை திரும்பிப் பார்க்கக்கூட இவ்வுலகில் ஆள் இல்லை. ஒரு காலத்தில் இந்த நகரில் அவள் வந்த பவனி என்ன! செலுத்திய அதிகாரம்தான் என்ன! இந்த ஐந்தாண்டுகளில் அவளை அடையாளம் கண்டு கொள்ளக் கூட இங்கு ஆளில்லையே?



நியாயம்தானே. இவள் அப்போது மூன்று உலகங்களிலும் ஈடு இணையற்ற அழகி. ஆனால், இன்று அவளிடம் முன்பு இருந்த யௌவனத்தின் சோபை பிரகாசிக்க வில்லை. இந்த மோகினியின் முன்னால் புத்தி மயங்கி விடுகிறது என்று பலரும் அச்சப்பட்ட அழகா இது? இளமையின் நிலையாமையைப் பற்றிச் சித்தர்கள் சொன்னது சரிதான். அவள் அழகில் அவ்வளவு மாற்றம். அவளுடைய நடையுடை பாவனைகளிலே அவ்வளவு வித்தியாசம். நந்தினியிடம் ஆயிரம் பேரை அடக்கி ஆண்ட அழகு மங்கி விட்டது. இல்லை, தனக்கே இட்டுக் கொண்ட தண்டனை போலக் குறைத்துக் கொண்டாளா?

நந்தினி தன் தாயின் கோயிலுக்கு வழி கூடக் கேட்கத் தேவையில்லை. எல்லாருமே ஒரே திசையில்தான் நடந்து கொண்டிருந்தார்கள். 'இப்படிக் கூட்டம் ஒரே திசையிலேயே நடந்தால் கோயிலை லட்சக்கணக்கானவர்கள் அல்லவா சூழ்ந்து கொண்டிருப்பார்கள்!' என்ற சந்தேகம் வந்தது நந்தினிக்கு. தன் தாய்க்கு இப்படியொரு பெருமையா? இப்படியொரு மகத்துவமா? கூட்டத்தினால் தள்ளப்பட்ட நந்தினி தன் தாய்க்குக் கட்டப்பட்ட கோயிலின் முன் வந்து நின்றபோது, அவளுக்குக் கண்ணீரே வந்து விட்டது.

'இந்தச் சோழர்களைத் தவறாக நினைத்து விட்டோம். என்னைக் காட்டிலிருந்து வெளிக்கொணர இது ஒரு சதியென்று நினைத்தோமே. இல்லை, இல்லை. இது ஒரு பக்தியின் சின்னம். அன்பின் அடையாளம். நன்றி மறவாமைக்கு எடுத்துக்காட்டு. ஊமைராணி செய்த தியாகங்களை உண்மையில் மறக்கவில்லை சோழர்கள்!' என்று நினைத்துக் கொண்டாள்.

கூட்டத்தில் திடீரென ஒரு சலசலப்பு. கூட்டமே ஒரு திசையில் திரும்பியதில் வந்த பரபரப்பு அது. எல்லாரும் பார்க்கும் திசையில் நந்தினியும் கவனித்தாள். கூட்டத்தினரின் தலைக்கு மேலே சாலையின் திருப்பத்தில் ஒரு யானை. அதன் மேல் அலங்கார அம்பாரி. அதில் மூவுலகையும் ஆளும் சோழச் சக்கரவர்த்தி யானையின் அசைவுக்கு ஏற்றாற் போல் ஆடிக் கொண்டே வந்தார்.

அரசர் ஏறியிருந்த யானை வந்ததும் கூட்டத்தில் ஒரே அல்லோல கல்லோலம். அம்பாரியின் மேலிருந்த சக்கரவர்த்தியை அடையாளம் கண்டு கொண்டு, 'ஆகா! இவன் கோட்டைச் சுவருக்கு வெளியே நந்தவனத்தில் பூப்பறித்த சிறுவனல்லவா? இன்று பேரரசனாகி விட்டான்!' என்று வியந்து கொண்டாள் நந்தினி.

அடுத்துக் குதிரையின் மேல் வந்த ஆண்களைப் பார்த்தாள். இது என்ன அதிசயம். பொன்னியின் செல்வர் மற்றும் வந்தியத் தேவனை எதிர் பார்த்துத்தான் வந்திருந்தாள். 'அந்த மூன்றாவது யார்? கந்த மாறனா? ஆகா, இப்போது கடம்பூர் சோழர்களுடன் சமரசம் ஆகிவிட்டதா என்ன?' என்று யோசித்த நந்தினியின் மனதில் ஒரு லேசான வலி. தன் சொந்த வேலையை நிறைவேற்ற, மாறனின் தங்கை மணிமேகலையின் மனதைக் கெடுத்துப் பித்துப் பிடிக்க வைத்ததே நந்தினிதான்.

அந்த நினைவுகளைக் கலைத்தது கூட்டத்தின் சப்தம். இந்த முறை சர்வ அலங்காரத்துடன் அரச குல மகளிர் வந்தனர். சோழ அரச குலத்துப் பெண்களைப் பார்த்தவுடன் நந்தினியின் மனதில் இன்னுமொரு வேதனையின் வலி. குந்தவையுடன் இவளுக்கு நெடுநாள் பகையும் பொறாமையும் இருந்தது.

அங்கே உத்தம சோழரின் பட்ட மகிஷி பூங்குழலி அம்மையார் அக மகிழ்ந்து முக மலர்ந்து ஜனங்களுக்குக் கையசைத்துக் கொண் டிருந்தாள்.

'ஆகா! அவள் கூட அழகாய் இருக்கிறாளே!' என்று நினைத்தாள் நந்தினி. பின் ஞாபகம் வந்தது, அவள் தன் மாமன் மகள் என்று.

சற்று நேரத்துக்கெல்லாம் அரச குடும்பத்தினர் எல்லாரும் கோயிலின் மேல் மாடத்துக்கு ஏறினார்கள். அப்போதுதான் உச்ச கட்டமாக மக்களின் ஆரவாரம் வானைப் பிளந்துவிடும் போலிருந்தது. இந்த அன்பு நிஜமானது எனத் தெரிந்து கொண்டாள் நந்தினி. விலை கொடுத்து வாங்கிய வாழ்த்தொலியல்ல.

மேல் மாடத்திலிருந்த அரச குலத்தினரை நன்றாகக் கவனித் தாள். எல்லாரும் தங்களைப் பார்த்து மகிழ்ச்சி ஆரவாரம் செய்து கொண்டிருந்த மாந்தரைப் பார்த்துக் கையசைத்தனர்.

மற்றவரை எல்லாம் ஒரு கணம் பார்த்துவிட்டு, அவள் பொன்னி யின் செல்வரை மட்டுமே நெடுநேரம் பார்த்தாள். பாண்டியரின் குல நாசினி அவன். தனக்கு ஜன்ம விரோதி. அவனைத் தன் மகனாய் மதித்து ஊமை ராணி எவ்வளவு நாள் மகிழ்ந்திருக்கிறாள். நியாயமாகத் தன் தாயிடமிருந்து தனக்கு வர வேண்டிய அன்பை அபகரித்தவன் இவன்தான். 'ஆனாலும் அவன் மேல் ஒரு வெறுப்பு வரவில்லையே எனக்கு' என்று வியந்தாள்.

அப்போது கூட்டத்தைப் பார்வையிட்ட பொன்னியின் செல்வர் தன்னைக் கண்டுவிட்டதாக மனதினோரம் ஒரு சிறிய ஐயம் கொண்டாள். அருள்மொழியின் பார்வை அவள் மீது பட்டது போல் ஒரு பிரமை. அவர்கள் இருவரின் கண்களும் சந்தித்ததாக



அவள் நினைத்த நொடியில் அவன் ஓர் அடி பின் வைத்தான் என்பதை மட்டும் கண்டு கொண்டாள்.

அவர்களின் பார்வை சந்தித்ததும் சுய நினைவுக்கு வந்தாள் நந்தினி. உடனே விழா முடியும்வரை இங்கே இருக்க முடியாது என்று முடிவு செய்தாள். இருந்தால் அபாயம்! சோழர்களுக்கு இன்னும் நம் மேல் உள்ளூரப் பகைமையுண்டு. இனி இங்கு இருக்காதே எனத் துரிதப்படுத்தியது அவள் நெஞ்சம்.

கிளம்ப வேண்டுமென நினைத்து விட்டாள். உடனே நந்தினி விலகினாள். கூட்டத்தினுள் மறைந்தாள். பின் வெளியேறினாள்.

சுற்றியிருந்தவர்கள் செய்த ஆரவாரத்தை அப்போதுதான் முழுமையாக அவள் உணர்ந்தாள். மக்களின் குரலையே கேட் காமல் இருந்துவிட்டு, இன்று இவ்வளவு பெரிய ஜனக்கடலின் முழக்கத்தைக் கேட்டது அவள் மனோநிலையை வெகுவாகப் பாதித்தது.

நந்தினிக்கு அழ வேண்டும் போலிருந்தது. அது மட்டுமல்ல. ''இது என் தாயின் கோயில்!'' என்று கதற வேண்டும் போலிருந் தது. ''இது என் குடும்பத்துக்குக் கொடுக்கப்பட்ட அங்கீகாரம்!'' என்று எல்லாருக்கும் கேட்கும்படி அலற வேண்டும் போலிருந்தது. இனிமேல் தனக்குள் பொங்கிவரும் உணர்ச்சிகளைக் கட்டுப் படுத்த முடியாதென உணர்ந்தாள். அவளுக்கு இப்போது தேவைப் பட்டது அமைதியான ஒரு இடம். சற்று நேரம் ஆற அமர யோசிக்க ஊரின் கோடியில் ஓரிடம் தேவைப்பட்டது.

நீண்ட பெருமூச்சு விட்டாள். திரும்பச் சென்றபோது நந்தினி யின் கால்கள் தடுமாறின. நடக்க முடியாமல் காலியாய் இருந்த ஒரு தெருவில் ஒரு மரத்தடியில் அமர்ந்து தன் மடியில் தலையைப் புதைத்தவாறு அழுதாள்.

இந்த நாடே கொண்டாடியபோது, தான் மட்டும் கனவுக ளெல்லாம் ஆயிரம் சுக்கல்களாகி விட்ட ஒரு பெண் என்று அழுதாளோ? நாம் மட்டும் விதியுடன் விளையாடித் தனியாக இருக்கிறோம் என்று நினைத்து அழுதாளோ? தன்னை மறந்த தாயை, தானும் மறந்த தாயை மற்றவர் மறக்கவில்லை என்று அழு தாளோ? இல்லை, கஷ்டம் வரும்போது அதுவரை அனுபவித்த எல்லாக் கஷ்டங்களும் சேர்ந்தாற்போல் நினைவில் வந்து அழுகை வருமே- அதற்காக அழுதாளோ?

எது எப்படியிருந்தாலும் மனதின் துன்பங்களையெல்லாம் வெளியில் வாரிக் கொட்டக் கண்ணீர்தான் சிறந்த வழி என நன்கு தெரிந்தே அழுதாள்.

மரத்தடியில் அமர்ந்து நெஞ்சிலிருந்த சோகத்தை எல்லாம் கண்ணீராய் வெளியேற்றினாள். காய்ந்து போய்விட்டன என்று எண்ணிய கண்கள் இன்று தாரை தாரையாகக் கண்ணீர் சிந்தின. எதற்கும் கலங்காத மனம் இன்று கலக்கமுற்றது. எவ்வளவு நேரம் அழுதாள் என்று அவளுக்கே தெரியவில்லை.

இச்சமயத்தில், யாரோ அருகில் வந்து தொண்டையைக் கனைத்த சப்தம் ஒன்றைக் கேட்டபின் வெளி உலக நினைவு வரத் தொடங்கியது. அவளுடைய கண்கள் முதலில் இலேசாக மேலே பார்த்தன.

குன்று போலத் தேகம் கொண்டவன் ஒருவனின் நிழல் அவள் மேல் படர்ந்தது. அவள் எதிரே ஒரு மனிதன் நின்றான். அவள் தலை நிமிரும்வரை காத்திருந்துவிட்டு, ''நான்தான், பொன்னியின் செல்வன் வந்திருக்கிறேன்'' என்றான்.

எதிரில் பொன்னியின் செல்வரைப் பார்த்ததும் நந்தினியின் கண்கள் அகன்று விரிந்தன. அவற்றில் அச்சம் தாண்டவமாடியது. பின்னர் நாற்சந்தியில் கழுமரம் ஞாபகம் வந்தவுடன், ஒரு நொடி நந்தினியின் இருதயம் துடிக்க மறந்தது. ஆனால், அவன் தனியாகத் தான் இருந்தான் என்று அறிந்தவுடன், அவளுடைய பீதியும் படபடப்பும் ஓரளவு குறைந்தன.

சிறிது மனக் கிளர்ச்சிக்கு உள்ளானாள் நந்தினி. பயமென்பது ஓரிரு நொடிக்குத்தான் அவளிடம் பலிக்கும். தஞ்சைக்கு வருமுன் எங்கேனும் சோழர் அரச பரம்பரையினரைப் பார்க்கும்படி நேர்ந்து விடுமோ என்று அஞ்சித்தான் வந்தாள். தென்பட்டாலும் பாராமுகமாக இருப்பது என்ற முடிவுடன்தான் இருந்தாள். எனினும் இப்படிக் கும்பாபிஷேகத்தைத் துறந்து அவள் பின்னால் அருள்மொழி வருவானென்று அவள் சற்றும் நினைக்கவில்லை.

அவள் முகத்தை உயர்த்தி அவரைப் பார்த்தவுடன், பொன்னி யின் செல்வர் வியப்போடு உற்றுப் பார்த்தார். அவள் யாரெனத் தெரிந்தவுடன் ஸ்தம்பித்தார், சிலையானார். அவளையே வெறித்துப் பார்த்தார்.

ஊமை ராணியால் சோழ இராஜ்யத்துக்கும், இராஜ குலத்துக் கும் நல்ல காலம் உருவானபோது, இவ்வேளையில் அவளுடைய மகளான நந்தினிக்குப் பெரிய நெருக்கடி ஏற்பட்டிருந்தது என்று அவருக்குத் தெளிவாகத் தெரிந்தது. அவளைக் கண்டவுடன் எப்படியெல்லாம் வதைக்கும் வேதனைச் சுமையைச் சுமந்து கொண்டிருக்கிறாள் என்று தெரிந்தது.



நந்தினியிடம் அளவுக்கு மீறி மூப்பு வந்திருந்தது. எல்லாருக்கும் ஒவ்வொரு நாளும் அதற்குண்டான மூப்பு ஏற்படும்போது, இவளுக்கு மட்டும் எப்படி வயது அடங்காப் புரவிபோலப் பாய்ந் தோடிவிட்டது? அவள் முகத்தில் பழைய பொலிவைக் காண வில்லையே. அழகு குன்றி வெறிச்சென்றிருந்தது அவள் முகம். நந்தினியின் ஆரண்ய வாழ்க்கை தொடங்கிப் பாதி வியாழ வட்டம் ஆகியிருந்தது. ஐந்து ஆண்டுகள் கடந்ததில் இவ்வளவு மூப்பா! பஞ்சு மெத்தையும் வெண்சாமரக் காற்றும் என வாழ்ந்த நந்தினிக்கு அந்தக் கானக வாழ்க்கை வயதைக் கூட்டியிருக்க வேண்டும்.

இந்தப் பெண்ணின் எழில் ஒரு காலம் எத்தனை பேரை வசிய மாக்கியது! பிரம்மன் மறந்து போய்ப் பலருக்குக் கொடுக்க வேண்டிய அழகையும் அறிவையும் இவள் ஒருத்திக்கே கொடுத்து விட்டானோ என்று கூடப் பார்ப்பவருக்கு நினைக்கத் தோன்றும். பழுவூர் அரண்மனையில் அவள் கொடுங்கோல் அரசியாக விளங்கி வந்தாள். அவள் இட்டதே மாளிகைக்குள் சட்டமாக இருந்து வந்தது. சில காலத்துக்குச் சோழ நாட்டிலும் அப்படித்தான். இந்த நாடே இவள் சொல்படி தலையாட்டியதற்குக் காரணம் இவளிட மிருந்த காந்த சக்திதான். ஆனால், அதே எழில் இன்று எங்கே போனது? எடுக்க எடுக்கக் குறையாத பாத்திரம் அது என்று நினைத்து எழிலின் சக்திகளை உபயோகித்தவளுக்கு ஒரு நாள் அதனுள் கையை விட்டுப் பார்த்தபோது அது காலியாய் இருப்பது தெரிய வந்தது போல ஆனா[illegible] நந்தினி? இன்று பிச்சியாய், பைத்தியக்காரியாய்த் திரிகிறாளே என்பது போலான நினைவுகள் பொன்னியின் செல்வருக்கு வந்தன.

பொன்னியின் செல்வர் என்ன பேசப் போகிறார் என்றறிய நந்தினிக்கு ஆவலாய்த்தானிருந்தது. தன்னைத் துவேஷித்த குலத்தின் கொழுந்து. தன்னைக் கடுஞ்சொற்களால் ஏசுவானோ. இல்லை, சிறைப் பிடிப்பானோ. இல்லை, கூட்டத்தை அழைத்துக் கல்லால் அடிக்கச் சொல்லுவானோ? தன் தமையனைக் கொன்ற வள் இவளென்று நினைத்திருந்தான். அதனால் இதில் எது வேண்டு மானாலும் செய்வான்.

ஆனால், சற்றும் எதிர்பாராத விதமாய்ப் பொன்னின் செல்வர் பேசினார். ''கோயில் மேடையிலிருந்து நாற்புறமும் பார்க்கையில் தற்செயலாக என்னை அறியாமல் உங்கள் பக்கம் பார்த்தேன். ஊமை அன்னையென்று நினைத்து விட்டேன். தனக்கெனக் கட்டப் படும் கோயிலில் கும்பாபிஷேகம் செய்கிற நாளில் ஊமை ராணியே காட்சியளித்தார் என்று யூகித்துத் துரத்தி வந்தேன். உங்கள் உருவம் ஊமை ராணியை அச்சடித்து வைத்தது மாதிரி

இருக்கிறது. தாங்களும் ஒருவேளை இந்தக் கோயில் விழாவைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள், இங்கு வந்து சேருவீர்கள் என்று நான் நினைக்கவேயில்லை. அதனால்தான் உம்மை உமது தாய் என்றே நினைத்துவிட்டேன். இங்கு வந்த பின்னே நீர் யாரென மெல்ல மெல்லப் புலனாயிற்று. மூன்று நாள் உறக்கமில்லை. முழு நேரமும் அவளது கோயில் சிற்பங்களையே பார்த்துக் கொண்டிருந்தேனல்லவா? அதனால் வந்த பிரமை என்று கூட நினைத்து விட்டேன்'' என்று சொல்லிச் சிரித்தார்.

'தன்னைக் கண்டதில் இவனுக்கு மகிழ்ச்சியா?' என்று நந்தினிக்கு வியப்பாக இருந்தது.

ஆனால் சட்டென அவர் முகம் இறுக்கமானது. இரு கைகளையும் கூப்பியவாறு, கண்களில் நீர் மல்கக் கூறினார். ''தாயே, இவ்வளவு தூரம் வந்தீர்கள். கோயிலுக்குள் வந்திருக்கலாமே! கூட்டத்தோடு கூட்டமாய் நின்றுவிட்டு, எங்களையெல்லாம் தண்டிப்பது போல மெல்ல நழுவி விட்டீர்களே! இவ்விதம் தண்டிப்பதற்கு என்ன குற்றம் செய்தேன், நான்?..'' என்றார்.

அதிர்ந்து போனாள் நந்தினி. எதிர்பார்ப்புக்கு நேர்மாறாக இப்படி நல்லவனாய் இருக்கிறானே, இந்தப் பொன்னியின் செல்வன். 'இரும்பையொத்த இவன் தேகத்தில் இப்படி மலரையொத்த இதயமா!' என்று நினைத்தாள்.

❖ ❖ ❖

### அத்தியாயம் ஐம்பத்து மூன்று

## அன்பெனும் சிலந்தி வலை

மரத்தடியில் அமர்ந்திருந்த நந்தினி சற்றுத் தள்ளி அமரவே தன்னையும் அமரச் சொல்லுகிறாள் என்று புரிந்து கொண்டார், பொன்னியின் செல்வர். அவரும் அவளருகில் அமர்ந்தார்.

நந்தினிக்கு அதிசயம். கூட்டத்தில் அவளும், கோயிலின் மேல் மாடத்தில் பொன்னியின் செல்வரும் நிற்கையில், இருவரின் கண்களும் சந்தித்தன எனத் தெரிந்து கொண்டாள். ஆனால், தன்னைத் தேட இவன் முற்படுவான் என்று நினைக்கவில்லை. நினைத்திருந்தால் இந்த மரத்தடியில் நில்லாமல், தஞ்சைக் கோட்டைச் சுவர்களுக்கு அப்பால் அவன் சென்றிருப்பது உறுதி. தஞ்சையில் யாரா வது அவளை அடையாளம் கண்டு கொண்டால் பாராமுகமாய்



நடந்து சென்று விடவேண்டும் என்ற உறுதி பூண்டுதான் வந்திருந்தாள். பொன்னியின் செல்வரோ தன் பங்குக்கு இன்று நடந்த விஷயத்தைத் தீர விசாரிக்கமல் விட்டு விடுவது சரியல்ல என்று நினைத்து விட்டார் போலும்.

பொன்னியின் செல்வர் அருகிலிருந்த நந்தினியை நன்கு கவனித்தார். நந்தினியின் தோற்றம் பரிதாபமாயிருந்தது. கண்ணீர் மிகுதியாய்ப் பெருக்கெடுத்ததால் கன்னங்கள் கறை படிந்திருந்தன. அவள் கண்களில் மருந்துக்குக் கூட ஒளி இல்லை. அதைக் கண்ட பொன்னியின் செல்வருடைய மனம் அளவில்லாத வேதனை அடைந்தது. ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை ஆகிய நாலு பேர் ஒருருவம் கொண்டு விளங்கியது போன்ற நந்தினியா இன்று இப்படியிருக்கிறாள்?

அன்பாய்ப் பேசிய பொன்னியின் செல்வருடைய முதல் வார்த்தைகள் நந்தினியைப் பிரமிக்க வைத்தன. சோழர்களில் எல்லாரும் கல் நெஞ்சம் கொண்டவர்கள் அல்ல என்ற புதுக் கருத்தை ஏற்றுக் கொண்டாள். ஆதித்யனின் தலைமையில் சோழர் படைகள் பாண்டிய நாட்டில் சொல்ல முடியாத அளவுக்கு அட்டூழியங்களைச் செய்துவிட்டுப் போயிருந்தன. ஆனால், அவனது சொந்தத் தம்பி இப்படி மென்மையான இதயம் கொண்டுள்ளானே!

இருவரும் மௌனத்தை எப்படிக் கலைப்பது என அறியாமல் தவித்தனர். ஒரே அரண்மனையில் குழந்தைப் பருவத்தைக் கழித்தாலும், பொன்னியின் செல்வர் நந்தினிக்கு மிகவும் இளையவர். அதனால் இருவருக்கும் நேரடித் தொடர்பு மிகவும் கொஞ்சம் தான்.

அச்சமயம் அவர்கள் அமர்ந்திருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்திலிருந்த விழா மேடையிலிருந்து மாறி மாறிச் சப்தமும் நிசப்தமும் நிலவியது. அவ்வப்போது யாரோ முக்கியமானவர் கையுயர்த்தி அமைதி ஏற்படுத்தினார் போலும். உயர்ந்த அந்தக் கைக்கு மரியாதை கொடுத்த கூட்டத்தில் ஏற்பட்ட நிசப்தத்தில், கட்டியங் கூறுவோன் உயர்ந்த மேடை மீது நின்று இடி முழக்கக் குரலில், ''இன்னார் இந்த தர்மத்தை இந்தக் கோயிலுக்கு அர்ப்பணிக்கின்றார்!'' என்று கூவினான். உடனே கூட்டத்தின் பேரிரைச்சலும் கேட்கும்.

அந்தச் சப்தங்களைக் கேட்டுக் கொண்டிருந்தனர் இருவரும். நந்தினியே மௌனத்தைக் கலைத்தாள். புடவை முந்தானையில் முகத்தைத் துடைத்த வண்ணம் கூறினாள். ''உம் நாட்டு மக்கள்

இந்த விழாவினால் ஒரே உற்சாகமாக இருக்கிறார்கள். தஞ்சைக் குள் தனலட்சுமியே பிரவேசித்தது போலக் களிப்படைந்திருக் கிறார்கள். இப்போது நீங்கள் அவர்களுடன் இல்லாமல் இங்கே ஓர் அபலைக்காகக் காத்திருகிறீர்களே!'' என்றாள்.

பொன்னியின் செல்வர் சிரித்தார். ''வந்ததில் தவறில்லை, நந்தினி தேவியாரே. ஆனால், உண்மையில் சொல்லப் போனால் நீர் என்று நினைத்து நான் வரவில்லை. முதலில் கூட்டத்தில் என் அன்னையும் ஒதுக்கமாக நின்று விழாவைப் பார்த்துக் கொண்டிருந் தாள் என நினைத்து விட்டேன். ஆனால், வந்ததற்கு வருத்த மில்லை. உம்மைக் கண்டதில் அதே அளவுக்கு மகிழ்ச்சி கொண்டேன்.''

அவர் பேசிய உண்மையைக் கேட்டுப் புன்னகைத்தாள் நந்தினி. அம்மாவே மீண்டும் உயிர் பெற்று வந்து விட்டாள் என்று வந்தான் போலும். அவள் இறந்தவுடன் ஆவியாக வந்தாளோ? இல்லை, இறக்கவே இல்லையோ என்ற குழப்பத்தில் இருந்திருக்கிறான். 'மாண்டவர் மீண்டு விட்டாரோ, என்ற ஐயம் தீர்க்கவே வந்திருக்கிறான் இவன்' என்று நந்தினி நினைத்தாள்.

''உருவத்திலே அவளைப் போலிருக்கிறேன்! ஆனால், அவ ளுடைய சக்தியிலே லட்சத்தில் ஒரு பங்கு கூட எனக்குக் கிடையாது.'' நந்தினியின் விரக்தியான சிரிப்பொலி கலந்த வார்த்தைகளைக் கேட்டுவிட்டு, இளவரசருக்கு மனம் நெகிழ்ந்தது.

மேலும் தொடர்ந்தாள் நந்தினி: ''பூமியிலிருந்து ஒருவர் மறைந்த வுடன் அவரைப் பற்றிய நினைவுகள் நாளடைவில் மறைந்து விடும் என நினைத்திருந்தேன். அம்மா இறந்து போய் ஐந்தாண்டு களானது. இன்னும் அவர் நினைவை மனதில் பசுமையாய் வைத்திருக்கிறீரே!''

''நந்தினி தேவியாரே! கேளுங்கள், எனக்கு வினாத் தெரிந்த நாள் முதல் நான் உம் அன்னையையும் என் தாயாய்க் கருதித்தான் வாழ்ந்து கொண்டு வந்தேன்'' என்றார் பொன்னியின் செல்வர். ''உமது தாயின் மீது எனக்கு ஆழ்ந்த பற்றுதல் உண்டு. அவளிடம் நான் வைத்திருந்த அன்புக்கு இந்த உலகத்தில் இணை ஒன்றுமே இல்லை. எனக்கென ஒரு தாயிருந்தாள். என் குழந்தைகளுக்கு ஒரு தாய் இருக்கிறாள். எனினும் எனக்கு அந்தப் பெண் தெய்வத்தை மிஞ்சியது ஏதுமில்லை'' என்றார்.

நந்தினி அதற்குப் பதிலாக, ''என் பேரில் என் தாய்க்கு எவ் வளவோ பாசம்தான். ஆனாலும், அதைக் காட்டிலும் எத்த னையோ மடங்கு அதிகமான பாசம் உங்கள் பேரில் ஏற்பட்டது.



ஏன் என்று எனக்குத் தெரியவில்லை. உமக்கும் தெரியாது. அது தெய்வ சங்கல்பமோ அல்லது முன்ஜன்மங்களிலிருந்து பின் தங்கிய வாசமோ?'' என்றாள்.

பொன்னியின் செல்வர் தலையை அசைத்தார். ''அப்படித்தான் இருக்க வேண்டும். அவள் எவ்வளவோ எனக்கும் எங்கள் குலத்துக் கும் செய்திருக்கிறாள். நான் என்ன கைம்மாறு செய்வேன் அவள் குலத்துக்கு என்றுதான் எனக்குத் தெரியவில்லை.''

இந்த வார்த்தைகள் அவருடைய இதழ்களிலிருந்து விடுபட்ட யுடன் ஒரு இனம் காண முடியாத சஞ்சலம் அவருடைய நெஞ்சில் நிறைந்தது. பெற்ற தாயைக் காட்டிலும் பதின்மடங்கு அவருடைய அன்பைக் கவர்ந்திருந்த ஈழத்து ராணியின் மகள் நந்தினி. இவள் வாழ்வில் துன்பப்படுவது, அதுவும் சோழர்களின் செயல்களால் துன்பப்படுவது எவ்வளவு கொடுமை என்று நினைத்த பொன்னி யின் செல்வர் மேலும் தொடர்ந்தார்.

''தாயே! நீங்கள் எங்களுக்கு அநீதி செய்கிறீர்கள். ஏன் எங்களை யெல்லாம் வெறுத்து விட்டுக் காட்டில் இருக்கிறீர்கள்? தெரிந்தவர் யாருமில்லாத கானகத்தில் உமக்கு யார் துணை. அங்கு என்ன வேலை?''

அந்தக் கேள்வியைக் கேட்டபோது பொன்னியின் செல்வ ருடைய மனதில் விசித்திரமான எண்ணங்கள் எல்லாம் அந்த நேரத்தில் உதித்தன. நந்தினி அந்தப் பொல்லாத பாண்டிய ஆபத்துத விகளிடம் அகப்பட்டுக்கொண்டு கூண்டுக் கிளியைப்போல் தவித்துக் கொண்டிருக்கிறாள் என்பதில் சந்தேகமில்லை எனத் தோன்றியது.

பொன்னியின் செல்வர் தன் குரலை உயர்த்தினார். ''உமக்குத் துர்புத்தி புகட்டுபவர் யார்? எங்களுடன் மீண்டும் நீங்கள் வந்திணையத் தடையாய் இருப்பவர் யார்? சொல்லுங்கள். அவர்களை வெட்டிச் சாய்த்துவிட்டு உங்களை மீட்டு வருகிறேன்'' என்றார்.

அவளது முகத்தை நோக்கினார், அவளுடைய நோக்கம் அறிய. ஆனால், நந்தினி முகத்தைச் சுருக்கிக் கொள்ளவும் இல்லை. கோபத்தின் அறிகுறியைச் சிறிது கூடக் காட்டவும் இல்லை. அதற்கு மாறாகச் சிரித்தாள்.

''என்னைக் காட்டில் கட்டாயமாக வைத்திருப்பவரை வெட்டிச் சாய்க்க வேண்டுமென்றால் உங்கள் வாளை உறையி லிருந்து உருவுங்கள். நீங்கள் வெட்டிச் சாய்க்க வேண்டியது என்னைத்தான். எனக்குப் புத்திமதி சொல்வது என் மனச்சாட்சி.

என் குல தர்மம் சொல்லும் அறிவுரைகளைக் கேட்டுத்தான் நான் காட்டில் இருக்கிறேன். நாட்டில் நிலவும் அநியாயங்களை எதிர்த்துப் போராட நாங்கள் நாட்டுக்குள் இருக்கலாகாது, இளவரசே!'' என்றாள் உணர்ச்சி ததும்பிய குரலில்.

நந்தினி பெருமூச்சு விட்டாள். ''சுலபமாய்ச் சொல்லி விட்டேன், பொன்னியின் செல்வா! ஆனால், அது கஷ்டமில்லாமல் இல்லை. ஒரு நாட்டின் சுதந்திரத்தின் பேரில் ஏற்பட்ட விருப்பத்தினால் இப்படிப்பட்ட துன்பங்களை அனுபவிக்க நேரிடும் என்று நான் கனவிலும் கருதியதில்லை. காடு மேடெல்லாம் சுற்றி அலைந்து அநேகக் கஷ்டங்களையும் பட்டாயிற்று. உமது படையினரிடமிருந்து தப்பி ஓடி ஓடிக் கால்கள் கடுத்து விட்டன. பசியும், தாகமும் எவ்வளவு கொடுமையானவை என்பதைக் காட்டில்தான் உணர்ந்தேன். பஞ்சணையில் புரண்டு புரண்டு தூக்கம் வராமல் தவித்த எனக்குப் பசி மயக்கத்தில் தினந்தோறும் நல்ல உறக்கம் வருகிறது. துன்பம் என்பது போராடுகிறவர்களின் வாழ்க்கையில் சகஜம்தான். எனினும் உடல் வேதனைப்பட்ட போது என் மனம் வலிமை பெற்றது.''

நந்தினி விம்மலுக்கும் அழுகைக்கும் இடையே தட்டுத் தடுமாறி இதைச் சொல்லி முடிக்கும் முன்னே தன் செவிகளைப் பொத்தினார் பொன்னியின் செல்வர். ''கொடுமை, தாயே! கொடுமை!'' என முணுமுணுத்தார்.

இந்த நாட்டுக்கே அவள் மீது அனுதாபம் இல்லாமலிருக்க, அவனுக்கு மட்டும் அவள் நிலை கண்டு இதயம் வெடித்தது. அவனிடம் பொய் பேச வேண்டும், எதையும் மறைக்க வேண்டும் என்ற நோக்கமோ அணுவளவும் அவள் முகத்தில் காணப்படவில்லை. அவள் உடல், உள்ளம், இதயம் எல்லாம் அந்தப் போராட்டம்தான் எனப் பொன்னியின் செல்வர் அறிந்தார். ஆனால், 'இப்படி ஒரு நாளும் நடைபெற முடியாத விஷயத்தை நினைத்து யாராவது வாழ்க்கையை வீணடித்துக் கொள்வார்களா? சோழரின் படை பலம் எங்கே? காட்டில் பதுங்கிப் பதுங்கி ஒளிந்திருக்கும் பாண்டியரின் பலமெங்கே?' என்று நினைத்தார்.

'இவளுக்குத் தவறான தகவலைக் கொடுத்துப் பொய் நம்பிக்கை ஊட்டுகிறார்களா? இல்லை, இவளுக்கு உண்மை தெரிந்தேதான் போராடுகிறாளா? புரியவில்லையே!' என்று பொன்னியின் செல்வர் குழம்பினார்.

நந்தினி மேலும் தொடர்ந்தாள்: ''என் விதி என்னை எங்கெல்லாம் இட்டுச் செல்கிறதோ, செல்லட்டும். அதன் இழுப்புக்



கெல்லாம் செல்ல நானும் சித்தமாயிருக்கிறேன். என் லட்சியம் அங்கிருக்கிறது. கடமையைச் செய்யும்போது மற்ற அனைத்துக்கும் நாம் குருடாகி விடுகிறோம். இப்போது எனக்கொரு கடமை இருக்கிறது. அது தோல்வியடைவதற்கு முன்னால் என் உடலிலிருந்து உயிர் பிரிந்து போயிருக்கும். அதனால் அரண்மனை வாழ்வையும் அரச போகத்தையும் காட்டிலும், காட்டில் இருப்பதும், போர்க்களத்தில் இறப்பதும் கோடி மடங்கு எனக்குப் பெரிது'' என்றாள்.

அவள் மனமுவந்து அந்தப் போராட்டத்தில் கலந்து கொண்டிருக்கிறாள் என்பதை அவள் வாயாலேயே சொல்ல கேட்ட பொன்னியின் செல்வருக்கு முதலில் அதிர்ச்சி. 'விதியின் விளையாட்டு மிகவும் விசித்திரமானது. வீரியம் கொண்டது. மகாநதியின் பெருவெள்ளத்தில் விழுந்துவிட்ட சிறு துரும்பு அதை எதிர்த்து முன்னேற முடியுமா என்ன? தானே அந்த ஜனக் கூட்டத்தில் முண்டி வருவதற்கு எவ்வளவு சிரமப்பட்டோம். இவள் எத்தனை போராட்டங்களை எதிர்த்து நின்று வெற்றி பெற எண்ணுகிறாள்!' என்ற பிரமிப்பும் வந்தது.

பொன்னியின் செல்வருக்கு நந்தினியின் போக்கு புரிந்தது. 'அவர்கள் ஓரிடத்தில் நிம்மதியாகக் காலந்தள்ள முடியாமல் வேட்டையாடப்படும் மிருகம் போல சர்வ ஜாக்கிரதையாய், எதிரியின் கண்களில் பட்டுவிடாமல் இடத்தை மாற்றிக்கொண்டே இருக்க வேண்டும். அந்தக் கவலையிலேயே அளவுக்கு மீறி வயதானது. இளமையிலேயே முதிர்ச்சி தழுவியது.'

நந்தினியைப் பார்க்கப் பார்க்கப் பொன்னியின் செல்வருக்கு மனமுடைந்தது. இவளை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்பதுதான் அவரது தீவிர எண்ணம். ஆனால், யாரிடமிருந்து காப்பாற்றுவது? அவளோ யாருடைய விருப்பத்துக்காகவும் தான் காட்டில் இல்லை என்று அடித்துச் சொல்கிறாள். அவளிடமிருந்தே அவளைக் காப்பாற்ற வேண்டியதுதான். அவளுடைய புத்தியற்ற யோசனைகளிலிருந்தே அவளைக் காப்பாற்ற வேண்டும். இதுவரை கேட்காமலிருந்த அந்தக் கேள்வியை அருள்மொழி கேட்டார்.

''நீங்கள் என்னுடன் மாளிகைக்கு வந்து விடுங்களேன்!''

நந்தினி ஆச்சரியத்துடன், ''நான், அங்கு வந்து என்ன செய்வேன்?'' என்றாள்.

''எங்களுடன் ஒருவராய் வாழலாம் அல்லவா?'' என்று சின்னக் குழந்தைக்கு எடுத்துச் சொல்வது போலச் சொன்னார் இளவரசர்.

அவருடைய பேச்சு நந்தினிக்குச் சிரிப்பை உண்டாக்கிற்று. முகத்தில் மெல்லிய புன்னகை தோன்றியது. பின்பு வாய்விட்டுச் சிரித்துவிட்டாள்.

"நீங்கள் இப்படிச் சிரிப்பது எனக்கு சந்தோஷத்தைத் தந்தாலும் எனது கோரிக்கையின் நிராகரிப்பு அது என எனக்குத் தோன்றுவதால், என் வேதனை அதிகரிக்கவே செய்கிறது!" என்றார் பொன்னியின் செல்வர்.

"உமக்கு இத்தனை நாளும் என்னால் ஏற்பட்ட சங்கடமெல்லாம் போதாதா?" என்றாள் நந்தினி.

"ஊமை ராணி என் குலத்துக்குச் செய்திருக்கும் உதவிக்கு நூறு ஜன்மம் எடுத்து நான் அவர்களுக்குத் தொண்டு செய்தாலும் ஈடாகாது" என்றார் இளவரசர்.

"ஐயா! தங்களுடைய யோசனையை நினைத்தால்தான் அதிசயமாயிருக்கிறது! சோழ குலத்தின் பரம வைரியான பாண்டியர் குழுவின் தலைவியை வந்து எங்களுடன் இருந்து விடு என்கிறீர். அதை எண்ணினால்தான் விந்தையிலும் விந்தையாயிருக்கிறது. நூறு போர்க்களம் கண்ட பின்னும் குழந்தையாகவே இருக்கிறீரே என்றுதான் சிரித்தேன். உலகெல்லாம் போற்றும் வீரரும் ராஜ தந்திரியுமான உங்களுக்குத் தோன்றுகிறதா, நான் மீண்டும் தஞ்சைக்கு வந்து இருக்க முடியும் என்று?" என்றாள்

அருள்மொழியின் முகம் சுருங்கியது. "என்னடா உளறுகிறாய்? என்று கேட்காமல் கேட்கிறீர்கள். நீங்கள் மனது வைத்தால் என்னால் அதைச் சாதித்துக் காட்ட முடியும்" என்று உறுதி அளித்தார்.

"நான் அங்கு வந்து என்ன செய்வேன்? நான் அவ்வளவு வல்லமையுடன் அங்கிருக்கும்போதே, பெண் பேயென்றும், பதவிக்கு அலையும் பிசாசு என்ற பேச்சும் பராபரியாக என் காதில் விழாமற் போகவில்லை. நான் இன்று சோழ நாடு திரும்பினால் நாற்சந்தியில் என்னைக் கழுமரத்தில் ஏற்றுவார்கள். காட்டில் வாழ்வதால் அந்த ஒரு அவமானம் இல்லாமற் போயிற்று!" என்றாள் நந்தினி.

"அஞ்சவேண்டாம், கோமகளே! நீங்கள் இங்கே இருக்கும் போது உமக்கு ஆபத்து ஒன்றும் வராமல் நான் பாதுகாப்பது உறுதி. என்னை மீறியே எவரும் உமக்குத் துன்பம் தர வேண்டும். இந்த ஊரில் தாங்கள் என் விருந்தாளியாகத் தங்கியிருக்கும்போது தங்களுக்கு அணுவளவும் தீங்கு நேராது என்று ஆணையிட்டுக் கூறுகிறேன்" என்று உறுதி அளித்தான் சோழன்.



"கோமகள் என்றா கூறினீர்? நான் ஏழைப் பிராமணன் குடிலில் வளர்ந்தவள் என்பதை மறந்து விட்டீரா? ஆனால், ஒன்று. குழந்தைப் பிராயம் முதல் என்னை அன்பும் ஆதரவுமாய் அந்தக் குருக்களின் குடும்பத்தார் பேணி வளர்த்து வந்தார்கள். ஆனால், அதில் என் மனம் அமைதி பெறவில்லை. என்னுள் ஓடிய ரத்தம் அரச குல ரத்தம் என்று எனக்கு அன்று தெரியாது. எனினும் அந்தத் தகவலும் கிடைத்தபோது என் குலம் காலம் காலமாய்க் கொண்ட வெறுப்பு விருப்புகளை நானும் கடைப்பிடித்தேன். சோழர்களை வெறுத்தேன். இன்று மீண்டும் என்னை வந்து உங்கள் குடும்பத்துடன் இணையச் சொல்கிறீர். பொன்னியின் செல்வா! எதற்காக இந்த முயற்சி?" என்றாள்.

"என் தமக்கையைப் பாதுகாக்கவும், ஒரு நல்ல வாழ்க்கை அவளுக்கு அமைக்கவும் நான் செய்யும் முயற்சி!" என்றார் அவர்.

நந்தினியின் கண்ணில் நீர் வந்தாலும், தன்னைப் பொன்னியின் செல்வர் தமக்கை என்று கூறியதால் பாதிப்புக்கு உண்டாகாதவள் போல நடந்து கொண்டாள்.

"நாம் பரம எதிரிகள். எப்படித் தமக்கை- தம்பி உறவு கொண்டாட முடியும்?" என்றாள். ஆனால், அவள் குரலில் உறுதி குறைந்து கொண்டே இருந்தது.

"உமது அன்னையை என் அன்னையாய்ப் பாவிக்கிறேன். பின் நீங்கள் என் தமக்கைதானே?" என்றார் பொன்னியின் செல்வர்.

"உமது அன்பில் என்னைக் கட்டிப் போடுகிறீர். என் கடமையை அவ்வப்போது நினைவூட்டியே நான் கட்டவிழ்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது" என்றாள் நந்தினி. சற்று யோசித்துவிட்டு அறிவுரை கூறும் தொனியில், "பொன்னியின் செல்வரே! உறவு என்பது எல்லாரையும் பித்துப் பிடிக்கச் செய்யும் மந்திர வலை. இரும்புக் கயிற்றில் பின்னிய சக்தி வாய்ந்த வலை. திமிங்கிலம் சிக்கினால்கூட அதிலிருந்து வெளிவர இயலாது. அதில் நீரும் சிக்காதீர். இப்போது பாருங்கள். உமது குலத்தின் பரம எதிரியுடன் சிரித்துப் பேசிக் கொண்டிருக்கிறீர். என்னைப் பிடித்துச் சங்கிலியால் பிணைத்து நாய் போலத் தெருத் தெருவாய் இழுத்துச் செல்வதுதானே உமது குல தர்மம். அதை நீரும் செய்யவில்லை. அதுதான் உறவு. நீர் மட்டுமல்ல. என்னைப் பாருங்கள். எது என் எதிரியின் பிரதேசமோ, அங்கேயே என்னை வர வைத்துவிட்டது என் உறவு!" என்று விரக்தியாய்ச் சிரித்தாள்.

"அதை ஏன் நீங்கள் தெய்வ சங்கற்பமாய் எடுத்துக் கொள்ளக் கூடாது? சேர வேண்டிய இடம் வந்து சேர்ந்தாயிற்று என்று ஏன்

எடுத்துக் கொள்ளக் கூடாது?'' என்றார் இளவரசர். கெஞ்சினார், மன்றாடினார். முடியாதென்றாள். அவளது கடமையின் இரும்புப் பிடியிலிருந்து அவளால் விடுபட முடியவில்லை போலும்.

''ஐயோ! யோசித்துப் பாருங்கள். கோமகனே! உமது குலத்துக்கும் எங்கள் குலத்துக்கும் நெடுங்கால விரோதம். என்னோடு நீங்கள் பேசுவதே சோழ குலத்துக்கு நீர் செய்யும் துரோகம். நமது வழிகள் என்றோ பிரிந்து விட்டன. நாம் அதில் பயணிக்க வேண்டியதுதான். இது போல ஆங்காங்கே இரு சாலைகளும் சந்திக்கும்போது நலம் விசாரிப்போம். ''நீ நன்றாய் இருக்கிறாயா? நான் நலமாய் இருகிறேன்!'' என்று மனதாரப் பேசிக் கொள்வோம். அதற்கு மேல் உறவாட எண்ணினால் அது நம் இருவரின் குலத்துக்கும் துரோகம் செய்கிறோம் என்றே பொருளாகும்'' என்றாள் நந்தினி.

அவள் பேசப் பேசக் கேட்டுக் கொண்டு வந்த சோழனுக்கு இப்போது நெஞ்சு உருகி விட்டது. தன்னுடைய கண்களில் துளிர்த்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டார். ''தாயே! யாருடைய நினைவாகக் கோயில் கட்டுகிறோமோ, யார் வாழ்க்கைக்கு இறைவனுக்கு நன்றி சொல்கிறோமோ, அவளுடைய மகள் நீங்கள்!'' என்று இளவரசர் மீண்டும் தன் பக்கத்து நியாயத்தைக் கூற முயன்றார். ஆனால், பயனில்லை.

அவளால் தாளவே முடியவில்லை, ''ஏன் என்னை இப்படி வதைக்கிறீர்? முதலில் உம்மைப் பார்க்கவே மனம் கூசியது எனக்கு. நான் எப்படி அங்கு வந்திருக்க முடியும்? உம்மோடெல்லாம் உறவாட நான் வரவில்லை. பழைய நடப்புகளைச் செப்பனிடுவதற்காகவும் நான் வரவில்லை. என்னை ஈர்த்தது அந்தக் கோயில்!'' என்று சிங்கள நாச்சியார் கோயில் இருந்த பக்கம் விரலை நீட்டினாள். இருவருமாய்த் திரும்பி வெய்யிலில் மின்னிய அந்தக் கோபுர கலசத்தைக் கண்டனர்.

''எதிரி நாட்டுக்கு என்னைக் கவர்ந்து இழுத்த அம்சம் என் தாய்க்கு ஒரு கோயிலென்பது. என்னவொரு அற்புதம் என்று ஊரெங்கும் பேச்சு. என் தாய்க்காக எங்களால் ஒரு சொட்டுக் கண்ணீரைக் கூடச் சிந்த முடியவில்லை. ஒருவன் அவளுக்குக் கோயிலே கட்டுகிறானா? உள்ளத்தை உருக்கிய அந்த நிகழ்ச்சியைத் தூரத்திலிருந்து பார்த்துப் பிரமிக்கலாம் என்றுதான் இங்கே வந்தேன். அந்தச் செய்தி என் செவிகளில் தேன் துளிகளாய் இனித்தது. சேதி கேட்டவுடன் தஞ்சையின் திக்கில் என் கால்கள் தாமாக நடந்தன. அந்தக் கும்பாபிஷேக விழாக் கோலாகலங்களை என் விழிகள் விழுங்கிப் பேரானந்தமடைய வந்தேன். உமது



வேளக்காரப் படையிடம் சிக்கிக்கொண்டால் என் கதி என்னவாகும் என்று தெரியும். எனக்கு மட்டுமல்ல, எங்கள் இயக்கத்துக்கு அது பேரிடியாய் இருக்கும். எனினும் வந்தேன்'' என்றாள்.

''ஆனால், ஒன்று. என்னைப் பிடித்து விடலாம் என சோழர் என்னை மாட்ட வைக்கச் செய்த திட்டம் இது என முதலில் எண்ணினேன். இங்கு வந்து பார்த்தால் என் கர்வம் சுக்கு நூறாய் உடைந்தது. நான் இருப்பதையே அவர்கள் முழுக்க மறந்து விட்டார்கள் என்று தெரிந்தது. சூழ்ச்சியில் சிக்கி விடக் கூடாது என்று தேவையில்லாமல் எச்சரிக்கையாய் இருந்தேன். நீரோ சூதுவாதற்ற அன்பெனும் வலையை விரிக்கிறீர். இரண்டுமே எனக்கு அபாயகரமானவைதான்!'' என்றாள் நந்தினி.

❖ ❖ ❖

### அத்தியாயம் ஐம்பத்து நான்கு

## சரித்திரத்தில் சந்தித்த பாதை

நந்தினியும் பொன்னியின் செல்வரும் மரத்தடியில் அமர்ந்தபடி பழையதை யெல்லாம் பேசினார்கள். விரக்தியாய்ப் பேசிய நந்தினியைச் சமாதானப் படுத்திவிட வேண்டும் என்று பொன்னியின் செல்வர் தீவிரமாக முயற்சி செய்து கொண்டிருந்தார்.

அப்போது ''டுமீல் டுமீல்'' என்று ஒரு சப்தம் கேட்க, இருவரும் சப்தம் வந்த திசையில் திரும்பினார்கள். நந்தினி பரபரப்படைந்தாள். உயிருக்குப் பயந்து காட்டில் வாழ்பவர் ஒவ்வொரு சப்தத்தையும் சாதாரணமாக எடுத்துக் கொள்ளமுடியாது. அந்த அலட்சியம், அந்த மெத்தனம்தான் வாழ்வுக்கும் சாவுக்கும் அவர்களுக்கு உள்ள வித்தியாசம். அதிலும், இது பகைவர் நாடு.

அவள் பரபரப்பை அறிந்த இளவரசர் ''ஒன்றும் இல்லை, வாண வேடிக்கை நிகழ்ச்சி தொடங்கி விட்டது'' என்றார்.

கூட்டத்தில் சிறியவர் பெரியவர், ஆண் பெண் என்று வேறுபாடின்றி, எல்லாருமே ''ஹோ''வென்று உற்சாகமாகக் கத்தினார்கள். காலை வானில் இவ்வளவு நட்சத்திரங்களா என்று வானைப் பார்த்து வியந்தனர். இத்தகைய வாண வேடிக்கையை வாழ்நாளெல்லாம் இனி அவர்களால் பார்க்க இயலாது என்று தெரிந்து கொண்டு முழுமையாக ரசித்தனர். மரத்தடியில் இருந்த

இருவரோ அதைப் பற்றிக் கவலையில்லாமல் பேச்சை மீண்டும் தொடங்கினார்கள்.

பொன்னியின் செல்வர், "நந்தினி தேவியாரே! என்னுடன் நிரந்தரமாக வாருங்கள் என்று நான் சொல்லவில்லை. சில நாள் இங்கே தங்கியிருந்து செல்லுங்கள் என்றுதானே கேட்கிறேன்?" என்றார்.

நந்தினி முடியாதென்பது போலத் தலையசைத்தாள் "ஐயா! என்னால் இந்தச் சித்திரவதையைப் பொறுக்க முடியாது. நான் புறப்படுகிறேன்" என்றாள்.

"கோமகளே! எவ்விதத்தில் நான் உங்களுடைய மன வெறுப்புக்குப் பாத்திரமானேன்? அதை மட்டும் சொல்லிவிட்டு இந்த இடத்தை விட்டுச் செல்லுங்கள்" என்றார் இளவரசர்.

"வெறுப்பெல்லாம் இல்லை. ராஜாளிக்குக் குருவியின் மேல் என்ன வெறுப்பு? இல்லை, வேங்கைக்குத்தான் புள்ளி மானின் மீது என்ன பகை? உமது உள்ளப் போக்கும், என் உள்ளப் போக்கும் முற்றும் மாறானவை. அவை ஒத்துவர மாட்டா. பல ஆண்டு காலம் பகைவர்களின் நகரில் ஆனந்தமாய்ச் சொத்து சுகத்துடன் வாழ்ந்து விட்டேன். நிர்கதியாய், நிராதரவாய் இருக்கும் நான் என் நாட்டைக் காப்பாற்றவே என் மீதி நாட்களைச் செலவழிப்பேன். இப்போதுகூட பிராயச்சித்தம் தேடி இங்கு வரவில்லை. செய்ததை நியாயப்படுத்தவும் வரவில்லை. வழிப் போக்கனாய் வந்தேன். அப்படியே செல்கிறேன்" என்றாள்.

'தன் தாயின் கோயிலைப் பார்க்க மட்டுமே வந்திருந்தாள். வேறு காரணங்களைக் கற்பித்து என்னை நானே ஏமாற்றிக் கொண்டேனே!' என்ற ஏமாற்றமும் இருந்தது பொன்னியின் செல்வருடைய மனதில். ஆனால், அவளது பிடிவாதம் நியாயமானது என்று பட்டது நேரம் செல்லச் செல்ல.

"இச்சமயம் அங்கு யாரையும் பார்க்க எனக்கு விருப்பமில்லை" என்றாள். "நான்தான் உங்கள் அண்ணனின் கொலைக்குக் காரணம் என்று அங்கு எல்லாரும் நினைக்கிறார்கள்."

அந்தக் கொலையைப் பற்றிப் பேச்செடுத்தவுடன் இருவரும் அடுத்து என்ன பேசுவது என்று தெரியாமல் தடுமாறினார்கள். ஏன் அந்தப் பேச்சை எடுத்தாள் நந்தினி எனக்கூட நினைத்தார் பொன்னியின் செல்வர். அளவற்று நொந்த நந்தினியின் மனம் மேலும் துன்புறுவதைப் பொன்னியின் செல்வர் விரும்பவில்லை.

பின்பு நந்தினியே பேசினாள். "நான் கிளம்பும் முன் உமது அண்ணனைப் பற்றிச் சொல்ல வேண்டும்" என்றாள்.



"பழையதைப் பேச வேண்டாமே! நடந்து முடிந்த அந்தப் பழைய கதையெல்லாம் இப்போது எதற்கு?" என்று கெஞ்சாத குறையாகக் கேட்டார் பொன்னியின் செல்வர்.

"நீங்கள் மறந்து விட்டாலும், நான் மறப்பதற்கில்லை" என்றாள் நந்தினி

"நானும் மறக்கவில்லை, நந்தினியாரே. பழையதைப் பற்றிப் பேச வேண்டாம் என்று நினைத்தேன். ஒன்று சொல்கிறேன், கேளுங்கள். இன்று கூட ஆதித்யனின் முடிவைப் பற்றி அநேக வதந்திகள் தினந்தினமும் கிளம்புகின்றன. பலரும் அதைத் தீர விசாரிக்க வேண்டும் என்று எங்களை வலியுறுத்துகிறார்கள். நான் கூடாது என்று சொல்லி விட்டேன். அதில் உங்கள் பெயர் அடிபட்டாலும் படலாம் என்பதற்காக" என்றார் பொன்னியின் செல்வர்.

நந்தினி குறுக்கிட்டு, "ஆனால், அந்த ராட்சசி காட்டில் இருக்கிறாளே. அவள் செய்த வேலைதானிது என்று எல்லாரும் இன்னும் பேசுகிறார்கள் அல்லவா? அன்று சம்புவராயன் மாளிகையில் ஆயிரம் ஆண் மகன்கள் சேர்ந்து சோழர்களுக்கு எதிராகச் சதியாலோசனை செய்தார்கள். ஆனால், எல்லாப் பழியும் என் தலையில் தான் விழுந்தது. ஆனால், கவலைப் படவில்லை நான். எந்த நேரத்தில் வீர பாண்டியரின் மரணத்தை என் கண்ணால் பார்த்தேனோ, அதே நேரத்தில் என்னுடைய இதயத்திலிருந்து என் சொந்த பந்தம், பாசம் மட்டுமின்றி நியாயம், நீதி எல்லாவற்றையும் அப்புறப்படுத்தி விட்டேன். அவை இருந்த இடத்தை விடுதலை வேட்கையும் சுதந்திர தாகமும் ஆக்கிரமித்துக் கொண்டன. நான் சொல்ல விரும்புவது ஒன்றுதான். அதை மட்டும் சொல்கிறேன். உமது அண்ணனைக் கொலை செய்யச் சதி செய்தேன். மறுக்கவில்லை. ஆனால், அவரைக் கொன்ற கத்தி என் கையிலிருந்து புறப்படவில்லை!" என்றாள்.

தான் ஆதித்யனின் கொலையில் சம்பந்தப்பட்டிருந்ததால் அதைப் பற்றிய விசாரணையையே தடுத்து விட்டார் பொன்னியின் செல்வர் என்று நந்தினிக்கு ஒரு யூகத்தின் மூலம் தெரியும். அதையும் இப்போதே கேட்டு விளக்கம் பெற்று விடலாம் என்று எண்ணினாள்.

"இத்தனை நாள் என் பிழையைப் பொறுத்திருந்தீர்கள். அது அவளுக்காகத்தானே?" என்று தன் தாயின் கோயிலிருந்த பக்கம் திரும்பினாள். பின்பு விம்மி விம்மி அழத் தொடங்கினாள்.

பொன்னியின் செல்வர் அதை மறுக்கவில்லை. ''ஊமை ராணி என் குலத்துக்குச் செய்திருக்கும் உதவிக்கு நூறு ஜன்மம் எடுத்து நான் அவர்களுக்குத் தொண்டு செய்தாலும் ஈடாகாது!'' என்றார்.

அவள் விம்மி ஓய்வதற்குச் சிறிது நேரம் கொடுத்துவிட்டுப் பொன்னியின் செல்வர் மீண்டும் ஆரம்பித்தார். ''என்னுயிரினும் மேலாகக் கருத வேண்டிய உங்களை எல்லாம் எதிரி என நினைக்க வைக்கக் காரணமாயிருக்கும் இராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொள்வது விபரீதம் எனச் சிந்தித்தேன். பின்பு உம்மையெல்லாம் வேட்டையாடும் வேலையும் என் தலையில் விழுந்திருக்கும். உடனே தீர்மானம் செய்து விட்டேன். சோழ நாட்டு அரியாசனம் ஏறும் எண்ணத்தை விட்டு விட்டேன். இன்று என் மனம் வகுத்த வழியையே பின்பற்றுகிறேன். தாயே! இவ்வுலகில் முதலில் வந்தவர்தான் முதலில் செல்ல வேண்டும் என்று நியதியில்லை. ஆனால், நானிருக்கும்வரை, அல்லது நீர் இருக்கும்வரை உமது பெயர் கெட நான் விடமாட்டேன்!'' என்ற உறுதியும் அளித்தார்.

''தங்கள் வாக்குறுதி எனக்கு மிக்க மகிழ்ச்சி அளிக்கிறது. ஆனால், இது பெரும் பிழையல்லவா? உமக்கும் கடமையிருக் கிறது'' என்று நினைவூட்டினாள் நந்தினி. எதிரியானாலும் ஒரே க்ஷத்திரிய ரத்தம் ஓடியதால் அவளுக்குக் கவலை வந்தது போல.

வரும் வழியெல்லாம் மனம் பூரிப்படைந்த மாந்தர் இவனைப் பற்றி அடுக்கடுக்காகப் பேசியதெல்லாம் உண்மைதான் என்று உணர்ந்தாள். ''உமது பெரும் கருணைக்கு நான் இன்று பாத்திர மானேன். உமது பெரிய மனதைக் குறித்து நான் செவி வழியாகக் கேட்டுதான் அறிந்திருக்கிறேன். ஆனால், அதனுடைய பூரண மகிமையையும் இன்றுதான் பார்த்தேன்!'' என்றாள்.

பின்னர் சற்று அறிவுரை கூறினாள். ''மனிதரை மயக்கும் மாயக் கலை தெரிந்தவர்கள் நாம் இருவரும். யாரையும் நம் வசம் இழுத்துக் கொள்ளும் தன்மை கொண்டவர்கள். நான் சுய நினை வோடு அதைப் பயன்படுத்தினேன். நீர் உம்மை அறியாமல் அதைச் செயல்படுத்துகிறீர். ஓராயிரம் ஆண்டு காலம் கழித்து என்னை மறக்கும் இந்த நாடு. அப்போதும் உம்மை நினைவில் வைத்திருக்கும்!'' என்று வாழ்த்தவும் செய்தாள்.

திடுதிப்பென்று நந்தினியைப் பார்த்ததில் கும்பாபிஷேகமே மறந்து போனது பொன்னியின் செல்வருக்கு. இப்போது அவருக் குப் பின்னால் நாதஸ்வரமும் மேளமும் எவ்விதப் பண்ணுக்கும் கட்டுப்படாமல் முழங்கியது கேட்டது. கும்பாபிஷேகம் முடிந்தது



என இருவரும் அறிந்தனர். ''கோயில் விழா முடியப் போகிறது. தாங்களும் அதைப் பொருட்படுத்தவில்லையே!'' என்றாள் நந்தினி.

''அவர்கள் எல்லாரும் ஒரு தெய்வத்தின் வாழ்வைக் கொண் டாடுகிறார்கள். அவர் வாரிசு நீங்கள், உம்மை விட இப்போது வேறெதுவும் எனக்கு முக்கியமில்லை!'' என்று பதிலளித்தான் சோமகன்.

தூரத்தில் மேளச் சத்தம் வானளாவியது. ஏக ஆரவாரங்களுக் கிடையில், கும்பாபிஷேகம் முடிந்திருந்தது. இனிக் கூட்டம் கலைந்து விடும். இனி இங்கிருப்பது சரியல்ல என்று முடிவு கட்டினாள் நந்தினி.

புறப்பட வேண்டிய சமயத்தில் தயங்கித் தயங்கி நின்றாள். இந்தத் தயக்கம் விந்தையாக இருந்தது நந்தினிக்கு. ஒரு காலத்தில் சோழ அரச பரம்பரையைச் சேர்ந்த ஒவ்வொருவனையும் தன் கரத்தாலே கழுத்தை நெரித்துக் கொல்ல வேண்டும் என்று எண்ணியவள் அவள். ஆனால், இன்று இவனை விட்டுப் பிரியவே மனம் வரவில்லையே என்று நினைத்தாள். அதற்கு மாறாக இவனிடம் இன்னும் எவ்வளவோ பேச வேண்டும் போலிருந்தது.

விடைபெற்றுக் கிளம்ப வேண்டிய சமயம் வந்தபோது, ஏக்கம் நிறைந்த குரலில், பொன்னியின் செல்வர், ''தங்களைச் சாந்தப் படுத்தி அழைத்துப் போகும் சக்தி எனக்கு இல்லையே! என் செய்வேன்?'' என்று நாத்தழுதழுக்க, குரல் நடுங்கக் கூறினார்.

பாசமெனும் இரும்பு விலங்கு தன்னைக் கட்டிப் போடுகிறது என அறிந்த நந்தினி அதற்கு ஒரு முடிவு கட்டிவிட நினைத்தாள். பாசமற்ற வறண்ட குரலில், ''இத்தனை நேரம் சொன்னதெல்லாம் உமது மனதில் ஏறவே இல்லையா? மறுபடியும் மறுபடியும் அதையே குறிப்பிடுகிறீர்கள். அதைத்தான் நான் கைவிட்டு விட்டேன் என்று சொன்னேனே! என்னை உம்மோடு அழைத்துப் போகும்படி நினைக்காதீர். காவிரியில் ஒரு முறை ஓடிய நீர் ஓடியதுதான்.''

''தாயே! எதற்கும் ஒரு குதர்க்கம் பேசுவது என்று வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்!'' என்றார் பொன்னியின் செல்வர். ''நந்தினி யாரே! இன்னும் எவ்வளவு நாள்தான் காட்டில் கஷ்டப்படு வீர்கள்? எனக்கு அது எவ்வளவு துன்பமளிக்கிறது என்று வாய்ச் சொல்லில் விளக்கமுடியாது.''

''சரித்திரம் பூட்டிய சிறைக் கதவுகளை உடைத்துக் கொண்டு நாங்கள் வெளிவர வேண்டும். விதி என் குலத்துக்கு இட்ட கை விலங்குகளைத் தகர்த்தெறியவேண்டும். ஒரு நல்ல நாள் வரட்டும்.

அதுவரையில் சமாளிப்பேன்'' என்றாள். ''ஆனால், நான் நினைத்த தெல்லாம் கை கூடினால் இந்த உலகம் மிகவும் அமைதியானதாய் ஆகிவிடும். அப்போது மீண்டும் வருகிறேன். உம்முடன் ஓரிரு வாரமென்ன, வாழ்நாள் முழுவதும் தங்குகிறேன்'' என்றாள்.

தூரத்தில் கூட்டம் கலையத் தொடங்கியது. வெவ்வேறு இடங்களில் நகரத்தார்கள் விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அத்திசைகளில் கூட்டம் நகரத் தொடங்கியது. ''நாழிகையாகி விட்டது. நான் போய் வருகிறேன்'' என்று நந்தினி கிளம்பினாள்.

மனமில்லாமல் விடை கொடுத்தார் பொன்னியின் செல்வர். அதற்கு முன், ''உம்மை நான் மீண்டும் எங்கு வந்து பார்க்க முடியும்?'' என்று கேட்டார்.

''தம்பி! என் வாயைக் கிளறாதீர்கள். பின் பொய் பேசும் சந்தரப்பம் எழலாம்'' என்று சொல்லிப் புன்னகைத்தாள் நந்தினி. சிரித்து விட்டார் பொன்னியின் செல்வர்.

''சரி, உம் இருப்பிடத்தைச் சொல்ல வேண்டாம். நீர் திரும்பிச் செல்வதையும் நான் தடுக்கவில்லை. ஆனால், என்னால் உமக்கு ஏதேனும் உதவி செய்ய இயலுமா என்று மட்டும் யோசியுங்கள். அப்போது திரும்பி வாருங்கள். இல்லை, செய்தி அனுப்புங்கள்'' என்றார் பொன்னியின் செல்வர்.

சரி என்பது போலத் தலையை அசைத்துக் கோட்டையின் தெற்கு வாயிலை நோக்கி நடந்தாள். முதலில் தடுமாறித்தான் நடந்தாள். வெகு நேரம் அமர்ந்திருந்தபடியால் கால்கள் மரத்து விட்டனவோ? இல்லை, தன் தாயின் கோயிலை விட்டுச் செல் கிறோமே என அவள் கால்கள் நடக்க மறுத்து விட்டனவோ?

பின்பு சுதாரித்துக் கொண்டாள். ஊரின் எல்லையை எட்டிய போது, நந்தினியின் நடையில் ஒரு மிடுக்குத் தெரிந்தது. அவளது நோக்கங்களை இந்தச் சந்திப்பு அவளுக்கே தெள்ளத் தெளிவாக விளக்கியிருக்க வேண்டும். விடுவிடு என்று ஊர் எல்லையை நோக்கி நடந்தாள்.

வீதியில் திரும்பும் இடத்துக்கு வந்ததும் நடை மெதுவாயிற்று. மீண்டும் ஒரு முறை தாயின் கோயிலைப் பார்க்கலாமா வேண் டாமா என்று நினைத்தாள் போலும். ஆனால், அவள் உடம்பு விரைப்பானது. வேகம் அதிகரித்தது. தஞ்சையை விட்டு வெளியேறினாள்.

அவள் சென்ற வழியையே பார்த்துக் கொண்டிருந்தார் பொன்னியின் செல்வர். அவள் ஒரு தெருவின் திருப்பத்தில்



மறையும்வரை காத்திருந்துவிட்டு அருள்மொழியும் திரும்ப நடந்தார்.

ஆனால், இப்போது நடந்ததெல்லாம் நனவா கனவா என்று அப்புறந்தான் சந்தேகப்பட்டுக் கொண்டே திரும்பித் திரும்பிப் பார்த்தார். 'அவளுக்கு எவ்வளவோ சமாதானம் சொல்லிப் பார்த் தோமே. ஆயினும் பலன் கிட்டவில்லை. எவ்வளவு கெஞ்சி னோமே! போகலாமா, வேண்டாமா என்று அவள் மனத்தில் ஒரு எள்ளளவுக்கும் ஒரு போராட்டம் நிகழவில்லையே' என்ற ஆதங்கம் கொண்டார்.

உண்மைதான். தனக்கென்று ஒரு தனி வழியை வகுத்துவிட்ட அவளுக்கு அதில் எப்படிக் குழப்பம் வரும்? எதிரியென்றாலும், அவளுள் ஓடிய க்ஷத்திரிய ரத்தம் நந்தினியைக் கண்டு பெருமைப் பட்டது. காட்டில் வாழ்ந்தபடி கடமையை நினைக்கிறாள். நந்தினி தேவியிடம் அவருடைய மதிப்பும், அபிமானமும் முன்னை விடப் பன்மடங்கு அதிகமாக வளர்ந்தன. ஆனால், ஒன்று. இனி அவருடைய மனக் கண்ணின் முன்னால் அடிக்கடி அவள் பாவமாய் மரத்தடியில் கதறிய காட்சி வந்து கொண்டேயிருக்கும்.

இவள் இடர்ப்படுவது தன்னால்தான் என்ற குற்ற உணர்வு அவரைச் சுட்டது. அவர் மனம் அமைதி இழந்து தவித்தது. கண்ணிருந்தும் குருடனாகி விட்டோமே என்ற வருத்தம் மனதை உறுத்தியது. 'நமக்கு வேண்டியவர்களைப் புண்படுத்தக்கூடாது என்று எச்சரிக்கையாய் இருக்கும்போதே, எத்தனை சோதனைகள் நேருகின்றன. நேர்மை நெறியாக வாழ நினைத்தாலும் முடிய வில்லையே' என்று மனம் தவித்தது.

சில சமயங்களில் மிகவும் தேர்ச்சி பெற்ற மானிட மனமே தடுமாறித் திண்டாடிப்போகிறது. பிறருடைய மதிப்பில் குன்றாத படி அரசர்கள் நடந்துகொள்ள வேண்டும் என்பதால் மனம் சொல்லும் பாதையில் நடைபோட முடிவதில்லையே என்ற வருத்தம் அவரைத் தாக்கியது.

'இது என் வாழ்க்கை என்றாலும், எனக்கு விருப்பமில்லாத காரியங்களையே ஆதரிக்க வேண்டிய கட்டுப்பாடுகளில் சிக்கித் தினம் தினம் சாகிறோமே' என்று நினைத்தவுடன் மூச்சு முட்டியது.

'காட்டிலே ஒரு பெண், அதுவும் போராட்டத்தின் நடுவில் எவ்வளவு நாள் உயிர் வாழ முடியும்? இவளை மீண்டும் பார்ப் போமா?' என அவர் மனம் பதைபதைத்தது. 'ஏன் நம்முடன் வந்து தொலைக்கமாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கிறாள். காட்டி

லிருந்தே உங்களை எல்லாம் நான் ஜெயித்துக் காட்டுகிறேன் என்ற தீர்மானமா? இல்லை, இங்கிருந்தவருக்குத் தன்னால் ஏற்பட்ட கஷ்டங்களை எண்ணி வெட்கமா? என்ன காரணமோ, மற்றவர்களுடன் ஒட்ட முடியாமல் காட்டில் காலம் கழிக்கிறாள். ஊமை ராணிக்குத் தான் பட்ட கடனை அடைக்காமல் போக போகிறோமோ?' என்று பலவித எண்ணங்கள் கரையின் மீது கடலலைகள் போல அடுத்தடுத்து வந்து மோதின.

தூரத்தில் மேளச் சப்தமும் மக்கள் அரச குடும்பத்தையும், சோழ வம்சத்தையும் வாழ்த்திய முழக்கமும் கேட்டது. திரும்பும்போது பொன்னாடை கொண்டு தன் முகத்தை நன்றாய் மறைத்துக் கொண்டே நடந்தார். வெளிப்படையாகச் சென்றால் கூட்டம் சேரும். தேவையில்லாத கேள்விகளுக்குப் பதிலளிக்கவேண்டும். தமக்கை குந்தவை கேட்பார். வந்தியத் தேவர் சந்தேகப் பார்வை பார்ப்பார்.

முதலில், நந்தினியைச் சந்தித்ததில் மனப்பாரம் அதிகரித் திருந்தது. இதுவரை நடந்தவையெல்லாம் ஒன்று சேர்ந்து அவரைக் கீழே அமுக்கியது போல ஒரு வலி. ஆனால், நேரம் செல்லச் செல்ல அந்த அன்பெனும் மாய வலையிலிருந்து விடுபட்டார். அதற்கு முக்கியக் காரணம் தன் நாட்டு மக்களைப் பார்த்ததுதான்.

பொன்னியின் செல்வர் திரும்பும்போது கும்பாபிஷேகம் முடிந்து மக்கள் கலைந்து போய்க் கொண்டிருந்தார்கள். திரு விழாவைத் தரிசித்த களிப்பில் மக்கள் ஆனந்தமாகச் சென்றனர். சோழ தேசத்தவரைக் கண்டவுடன் தன் தலையாய கடமை நினைவுக்கு வந்தது பொன்னியின் செல்வருக்கு. 'இவர்கள் நிம்மதியும் நல்வாழ்வுமே முக்கியம். நம் தனிப்பட்ட விருப்பு வெறுப்புகளையெல்லாம் ஓரம் தள்ளிவிடவேண்டும்' என்ற எண்ணம் பொன்னியின் செல்வருக்குத் தோன்றியது. 'தேசப் பணிக்கு வருபவன் தன் தனிப்பட்ட வாழ்க்கையில் எழும் லாப நஷ்டங்களைப் பார்க்கலாமா?' என்ற கேள்விகள் எழுந்தன.

பொன்னியின் செல்வர் நினைத்துக்கொண்டார்: 'பாடலுக்குப் பண்போல அரசனுக்கு வீரம் அவசியம். அது போல விருப்பு வெறுப்பு என்ற நீர்த்துளிகள் ஒட்டாத தாமரை இலை போன்ற இதயமும் வேண்டும். நூறு வருஷ காலமாகத் தம் முன்னோர்கள் பாடுபட்டு விஸ்தரித்த ராஜ்யத்தை, விஜயாலய சோழரும், ஆதித்த சோழரும், மகாபராந்தகச் சக்கரவர்த்தியும் ஈழம் முதல் கோதாவரி வரையில் நிலை நாட்டிய சோழ மகாராஜ்யத்தை ஆள்வதென்றால் சுலபமா? பலரின் பகையைச் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. நமக்கு வேண்டியவருக்கே துன்பம் கொடுக்க வேண்டியிருக்கிறது.



ஆனால், சிம்மாசனத்தில் வீற்றிருந்து அரசு புரிய ஆசைப்படு கிறவர்கள் பகைவர்களையும், சதிகாரர்களையும் கொன்றுதான் ஆக வேண்டும். சக்கரவர்த்தியாய் இருந்து உலகை ஒரு குடை நிழலில் ஆளப்பிறந்தவர்கள் பகையரசர்களை விரட்டியடித்தே தீரவேண்டும். இதைப் பற்றி நமக்கு ஏன் இவ்வளவு கலக்கம்? புறா தவிப்பதைப் பார்த்து இராஜாளிக்கு இரக்கம் வரலாமா? வந்தால் அதுவும் ஒரு புறாவாய் மாறிவிடும். அதற்கென ஒரு தர்மமுண்டு அல்லவா?'

அவர் எண்ணத்தை எதிர்த்து அவருக்குள்ளே ஒரு குரல் கேட்டது. 'இப்போது பட்டம் பதவி உங்களுக்குப் உயர்ந்ததாகி விட்டது. மன சாட்சியைக் கால்களுக்கு அடியில் போட்டு நசுக்கி விட்டு நடைபோட வேண்டியிருக்கிறது' என்று அது சொன்னது.

'இல்லை, இல்லை!' என்றது இன்னும் ஒரு மனம். 'நந்தினியைப் பார் காட்டில் கஷ்ட ஜீவனம் நடத்தியே படை திரட்டி உங்களை வெல்வேன் என்கிறாள். அவள் கடமையை நிறைவேற்றுவதில் எவ்வளவு தீவிரம் காட்டுகிறாள். நாம் ஏன் அப்படியில்லை?' என்ற வெட்க உணர்வும் வந்தது.

எது சரி? எது தப்பு? ஆயிரம் கேள்விகள் இருந்தன. ஆனால், அவர் மனம் விடையேதும் அளிக்கவில்லை. 'இந்தச் சிக்கலைத் தீர்க்க வேறு வழி இருக்கிறதா?' என்று தனக்குத் தானே கேட்டார்.

அவன் மனக்கண் முன் நந்தினி வானுற ஓங்கி நின்றாள். ஆனால், அவள் எதிரிதான். அதில் சந்தேகமில்லை. பெண் என்பதற்காகவோ, ஊமை ராணியின் மகளென்பதற்காகவோ அவளிடம் பரிதாபம் காட்டுவது நம் குலதர்மத்துக்குத் தகுந்த செயலல்ல. இன்னும் சற்று நேரம் அவளுடன் பேசியிருந்தால் நம் சுயநிலையை மறந்து ஏதேதோ வாக்குறுதிகளெல்லாம் கொடுத் திருப்போம். சற்று முன் நந்தினியின் முன் தன் நாவிலே வந்த வார்த்தைகள் அவருக்கே வியப்பை அளித்தன. ''இதெல்லாம் எப்படிச் சாத்தியமாகும்?''

மனதின் ஓரத்திலிருந்த சலனம் மெல்ல மெல்ல மறையத் தொடங்கியது. 'ஒரு பெண்ணுக்கு இரங்கிக் கடமையை மறக்க லாமா?'

நேரம் செல்லச் செல்ல அவள் மீதிருந்த இரக்கமெல்லாம் அணு அணுவாய்க் குறைந்து ஒன்றுமில்லாமல் போனது. உண்மை புலப் பட்டது. 'இது பெரிய மேடை. எல்லாரும் வேஷம் கட்டி நடிக் கிறோம். வேஷத்தை கலைத்தவுடன் அவள் யாரோ நான் யாரோ

என்று போய்விடவேண்டும். அதை அவள் புரிந்து கொண்டாள். நாமும் இப்போது புரிந்து கொண்டோம்.'

'நமக்கென வகுக்கப்பட்ட பாதையில்தான் நாம் பயணிக்க வேண்டும். நந்தினிக்கும் அப்படித்தான். வழிகள் எங்காவது சந்தித்தால் மட்டுமே பேசி நலம் விசாரிக்க வேண்டும். அல்லது ஒருவரை ஒருவர் கொல்ல வேண்டும். அது அந்த வழிகள் சந்திக்கும் போது நிலவும் சரித்திரத்தின் சூழ்நிலையைப் பொறுத்தது' என்று முடிவு செய்தார் பொன்னியின் செல்வர்.

❖ ❖ ❖

## அத்தியாயம் ஐம்பத்து ஐந்து
## பேய் சூழ்ந்த போர்க்களம்

நந்தினி ஊர் மீண்ட வழியில் இரண்டாம் நாள், சாலையில் ஆள்நடமாட்டம் அதிகமாக இல்லை. முதல் நாள் பயணமானது பல பாதைகள் சந்திக்கும் பெரிய ராஜபாட்டையில் நிகழ்ந்தது. ஆதலால் அங்கே இடைவிடாமல் வண்டிகளும் மக்களும் வந்த வண்ணமும் போன வண்ணமுமாக இருந்தனர்.

வண்டி வாகனங்கள் போவதற்கென்றும், ஜனங்கள் நடப்பதற்கென்றும் பல ராஜபாட்டைகளைச் சோழர்கள் உருவாக்கி இருநதனர். சோழ நாட்டு எல்லைகளைக் கடந்து அவை பாண்டிய நாட்டுகுள்ளேயும் செந்நீர்ப் பிரவாகம் போல நெடுந்தூரம் சென்றன. அவற்றில் வண்டிச் சக்கரங்கள் பதிந்து பதிந்து பாதையில் இரு நேர்கோடுகளாகச் சிறிய பள்ளமே உண்டாக்கியிருந்தது. அதில் கால்கள் தடுக்கிவிடாமல் சற்று ஒதுங்கியே நடந்தார்கள் கால்நடையாய்ச் சென்ற எல்லாரும்.

ஆங்காங்கே, மரத்தடிகளில் வண்டிகளிலிருந்து மாட்டை அவிழ்த்து விட்டு, ஓய்வெடுத்தனர் பயணிகள். உச்சி வேளையில் அங்கே கட்டுச் சாதம் அருந்துவதற்காகத் தங்கிய பிரயாணிகளின் ஆரவார ஒலிகளும் அதிகமாயிருந்தன.

உண்ணும்போது அவர்களைத் தாண்டிச் சென்ற நந்தினியிடம், "உண்டு விட்டுப் போயேன், அம்மா!" என்று சிலர் பரிவுடன் கேட்டனர். வேண்டாமென்று தலையை அசைத்துவிட்டு அவள் பாட்டுக்கு வேகம் குறையாமல் நடந்தாள். இப்படித் தன்னைத்



தவிர எல்லாரும் சந்தோஷமாய் இருப்பது அவள் மனதைப் புண்படுத்தியது.

இராஜபாட்டையைத் தாண்டியதும் இருபுறத்திலும் மரங்களடர்ந்த விசாலமான சாலைகள் மெல்ல மெல்ல மாறின. தஞ்சையிலிருந்து கிளம்பிய இரண்டாம் நாளான இன்று, நந்தினி வந்தது சிறிய கிளைப்பாதை. சுத்தமாக அதன் மேல் சக்கரச் சுவடுகளே இல்லை.

முதலில் பாதையின் இருபுறமும் ஆளுயர மரங்கள் இருந்தன. பின்பு வெறும் முட்செடிகள்தான். ஆனால், காடும் நாடும் சந்திக்கும் இடத்தில் இன்னும் ஜன நடமாட்டம் காணப்பட்டது. தரையில் விறகு கிடக்கும் என்று எதிர்பார்த்துக் கொண்டு நாலைந்து பெண்கள் கையில் கூடையுடன் இங்கும் அங்குமாய் அலைந்தார்கள். சில சிறுவர்கள் காலையிருந்து மேய்த்த ஆடுகளை ஒன்று சேர்த்து வீடு திரும்ப ஆயத்தமாகிக் கொண்டிருந்தனர். ஆனால், போகப்போக அந்தச் சாலையில் போகிறவர்கள் வருகிறவர்கள் குறைந்து கொண்டே வந்தார்கள்.

இப்பேர்ப்பட்ட காட்டு வழியில் முன்னிருட்டு வேளையில் தன்னந்தனியாகப் புறப்பட்டு வருபவரின் தைரியமே தைரியம்! எப்படிப்பட்ட வீரனுக்கும் இந்தப் பிரதேசத்தில் கூட்டமாகச் சென்றாலும் சற்றுக் கதிகலக்கம் உண்டாகிவிடும். நந்தினி எத்தனையோ தடவை இந்த வழியே தனியாகப் பிரயாணம் செய்திருந்தாள். எப்போதும் போலச் சிறிதும் தயக்கமின்றி நடந்த நந்தினி கொஞ்சம் கூடப் பயந்ததாகத் தெரியவில்லை.

அவள் அந்தச் சிறிய பாதையில் சென்றதைக் கண்டால் பலரும் வியப்படைந்திருப்பார்கள். ஆனால், அவள் என்ன வாணிபம் செய்யும் வணிகரா முக்கியப் பாதையில் செல்ல. தன் உயிருக்குப் பயந்து வாழும் தீவிரவாதி அல்லவா?

தனியாய்ச் சென்ற மனிதனைப் பிசாசு அறைந்து கொன்றுவிடும். இருபது மனிதனாயிருந்தாலும் ஓரிரு பிசாசுகளுக்கு ஈடு கொடுக்க முடியாது என்ற பயமே ஜன நடமாட்டத்தைக் குறைத்திருக்க வேண்டும். அதுவும், பிசாசுகள் இவ்வுலகில் இருந்தால், அவற்றின் முக்கிய உறைவிடம் இந்த இடமாகத்தான் இருக்க முடியும்.

இந்த மலைப் பிரதேசத்தில் பிசாசுகள் இரவு வேளைகளில், "ஹோ ஹோ, ஹா ஹா!" என்று அலறிக் கொண்டு அலைவதாகக் கதைகள் பரவியிருந்தன. "அவன் பார்த்தான், இவன் பார்த்தான்" என்றே எல்லாரும் சொல்லுவார்கள். யாரும் நேரடியாகப்

பார்த்ததில்லை. எனினும் எதற்கப்பா வம்பு என்று ஒதுங்கியியே இருந்தனர் எல்லாரும்.

'இந்தக் காட்டைக் காலையில் கடக்காமல் போனோமே' என்று நினைக்க இடமில்லாமல் ஆதவன் ஆதரவுடன் பயணிகள் கடந்து விடுவார்கள். நடுநிசியில் கடக்க வேண்டிய பிரதேசமன்று அது.

மனித சஞ்சாரமே இல்லாத இவ்விடம் சேலூர் என்றழைக்கப் பட்டது. அப்பிரதேசத்தின் நெடும் செந்நிற நிலப் பரப்பை வைத்துச் செவ்லூர் என்று கூடப் பேர் வைத்திருக்கலாம். இல்லை, அங்கு சிந்திய உதிரத்துக்காகவாவது மதிப்புக் கொடுத்துச் செவ்லூர் என்று அழைத்திருக்கலாம். ஏனோ தெரியவில்லை, சேலூர் என்று நாமாகரணம் வைத்தனர்.

சேலூர் என்னும் இவ்விடத்தில் சோழ சைன்யத்துக்கும் பாண்டிய சைன்யத்துக்கும் சில காலம் முன் பெரும் போர் நடை பெற்றது. சேலூரில் தான் ஒரு சிறிய சைனியத்தைத் திரட்டியது மல்லாமல் சோழருக்குச் சவால் விட்டான் மதுரையில் சுதந்திர ராஜ்யத்தை ஸ்தாபிக்கும் முயற்சியில் இறங்கியிருந்த வீரபாண் டியன்.

பின்னர், எதிர்பார்த்தபடி பெரிய சைனியத்துடனே வந்தனர் சோழர். தன் அதிகாரத்துக்கு நேர்ந்த அவமானத்துக்குப் பழி வாங்கும் பொருட்டுப் அதிவேகமாகப் புறப்பட்டு வந்தனர். பாண்டிய சைனியமும் சோழர் சைனியமும் இந்த மலைக் காட்டுப் பிரதேசத்திலேதான் சந்தித்தன. இரண்டு நாள் இடைவிடாமல் யுத்தம் நடந்தது. ஆயிரக் கணக்கான வீரர்கள் போரில் மாண் டார்கள். இரத்த வெள்ளம் பெருக்கெடுத்து ஓடி, ஏற்கெனவே சிவந்திருந்த பிரதேசத்தை எல்லாம் குருதியால் நனைத்தது.

இரண்டு நாள் போர் நடந்த பின் ஒரு பெரிய கலகலப்பு ஏற்பட்டது. திடீரென்று பல ஆயிரம் சோழ வீரர்களின் குரல்கள் எழுப்பிய ஜயகோஷம் வான்வெளியையெல்லாம் நிரப்பி மலையடி வாரம் வரை சென்று எதிரொலி செய்தது. சங்கங்களும், முரசங் களும், பேரிகைகளும் சேர்ந்து முழங்கின. ''சோழம், சோழம்!'' என்ற பேரொலி வானமுகடு வரையில் சென்று முட்டித் திரும்பியது.

அதன் காரணம். வீர பாண்டியன் போர்க்களத்தை விட்டு வெளி யேறிய விஷயம் சோழர்களுக்குத் தெரிந்துவிட்டது. அவ்வளவு தான்! அவசரத்தில் ஒன்று சேர்க்கப்பட்டு, போர்க்கலையில் அரை குறையாய்ப் பயிற்சி கொடுக்கப்பட்ட ஆயிரமாயிரம் பாண்டிய



வீரர்கள் தலை தெறிக்க ஓடினார்கள். சோழர்களின் மாபெரும் சைன்யம் பாண்டியர்களுடைய சேனையையும், சிங்கள நாட்டுப் படையையும் சேலூரில் முழுமையாக முறியடித்தது.

அந்தப் போரில் இறந்த ஆயிரக்கணக்கான வீரர்களின் ஆவிகள் இன்னும் இங்கே உலாவிக் கொண்டிருப்பதாக அக்கம் பக்கத்துக் ஜனங்கள் நம்பிக் கொண்டிருந்தார்கள். ஆவியாய் வந்த வீரர்களின் மின்னிய வாள்களும், வேல்களும் மோதும்போது தீப்பொறி பறக்கச், சத்தம் கேட்பதாய்ப் பலரும் கூறினார்கள்.

வெற்றி பெற்றவர் ''ஹா ஹா'' என்று கூவிக்கொண்டும் தோல்வியுற்றவர் ''ஓ ஓ'' என்று கதறிக்கொண்டும், இருகோஷ்டி எல்லோரும் இறந்தபோது வெற்றி தோல்வியை பற்றிச் சிறிதும் எண்ணாமல் கதறிய சப்தமும் கேட்டதாக எல்லாரும் சொன் னார்கள். கண்ட துண்டமாக வெட்டப்பட்ட ஆயிரமாயிரம் மனிதர்கள், ஆசைகளெல்லாம் நிராசைகளாகியபின், ஆவிகளாகச் சுற்றுகிறார்கள் என்று அடித்துச் சொன்னார்கள். 'வாழும்போதே ரத்த வெறி பிடித்த இந்த வீரர்களுக்குச் செத்த பின்பு அந்த வெறி அதிகரித்திருக்கும் அல்லவா? தனியாய் வந்தால் கொன்று ரத்தத்தைக் குடித்துத் தாகத்தைத் தணித்துக் கொள்ளுவார்கள்' என்று பயம் காட்டினார்கள்.

ஆவியாய் இருக்குமோவென்று நினைத்தால் இவ்விடத்தில் பயப்படப் பல விஷயங்களிருந்தன. செக்கச் சிவந்த சூரியன் எழும் போதும், அஸ்தமிக்கும் போதும் பார்ப்பவருக்கு அந்தப் பயங்கர மான போரில் இரத்த வெள்ளம் ஓடிய யுத்தகளத்தை ஞாபகப் படுத்தும். மரங்களுக்கு இடையிலும் பிளவு பட்ட பாறைகளுக்கு நடுவிலும் ஊளையிடும் காற்று ஆயிரம் ஆவிகள் ஒன்று திரண்டு ஓடி வருவது போலப் பிரமையை உருவாக்கும்.

ஆகையால் பிரயாணிகள் அதிகமாக இந்த வழியே வரவில்லை. அந்தப் பிரதேசத்தில் வாழ்ந்த மலைச்சாதியர் கூட இங்கு வருவ தைத் தவிர்க்கவே, மொத்தத்தில் இது நிர்ஜனப் பிரதேசமானது.

சேலூர்ப் போர் களத்துக்கும் அங்கு நிரந்தரமாக உறங்கும் ஆயிரக்கணக்கான வீரர்களுக்கும் காவலாக நின்ற, சாலையோர மாகப் பரந்து கிடந்த குன்றுகளும் பாறைகளும் நந்தினியுடைய பாதையில் நிழல்களைப் படர விட்டன. அந்தப் பாறைகளும் விதவிதமான கோணங்களிலும் கோலங்களிலும் இருந்தன. அதனால் நிழல்களும் பலவிடங்களில் பயமுறுத்தும் விதங்களில் தான் இருந்தன.

குன்றுகளின் மாலை நேரத்து நெடிய நிழல் நந்தினி நடந்த பாதையின் மேல் விழுந்தது. அது இதமாகத்தான் இருந்தது. ஏன் என்றால் ஆங்காங்கே காணப்பட்ட சிறு மரங்கள் எவ்வகை நிழலும் தரவில்லை. எலும்பும், சதையும், ரத்தமும் விழுந்த இடத்தில் தாவரங்கள் ஏனோ அவ்வளவு விமரிசையாக வளருவதில்லை.

எதற்கும் கவலையில்லாமல் நடைபோட்டாள் நந்தினி. இவ்விடத்தில் ஓரிரு ஆண்டுகள் வாழ்க்கை நடத்திய நந்தினிக்கு அங்கே ஆவிகள் அலைவது பற்றிய கதையெல்லாம் வெறும் மூட நம்பிக்கை என்ற உறுதி ஏற்பட்டது. நிழல்களும், ஊதிவரும் காற்றும், அதிகபட்சமான மனிதக் கற்பனா சக்தியுமே இதற்கெல்லாம் காரணம் என்று நினைத்தாள். அப்படியே ஆவிகள் இருந்திருந்தாலும் அவள் முகத்திலிருந்த வீரம் ஆயிரம் பிசாசுகளை விரட்டியடித்து விடும். பொதுவாகவே வீரமான பெண்தான் நந்தினி. அவள் வாழ்க்கையில் பார்த்த கோரத்தினால் கொஞ்சம் நஞ்சம் பாக்கியிருந்த பயமும் போய் விட்டது.

பழைய போர்க்களத்தைக் கடந்தபின் மலை அடிவாரம் ஒன்றுக்கு வந்தாள் நந்தினி. அப்போதுதான் முதல் முறையாகத் திரும்பிப்பார்த்தாள்- யாரேனும் பின் தொடர்ந்து வருகிறார்களா என்று. யாரும் வரவில்லை என ஊர்ஜிதம் செய்து கொண்டு பின் மெல்ல மேலே ஏறத்தொடங்கினாள். என்றோ ஆடு மேய்ப்பவர் நடந்த தடம் இருந்தது - ஒற்றையடிப் பாதை போல. அதில் ஏறினாள். இந்த மலையில்தான் வாசம் செய்கிறாளா என்று பார்ப்பவர் கேட்கலாம். ஆம், ஆனால், அதற்கு மேலாக இந்த மலையின் மீது தமிழகத்தின் சரித்திரமே இருந்தது.

சோழர்களிடம் படுதோல்வியடைந்த வீரபாண்டியன் படையிழந்து, தன் உயிரை மட்டும் காப்பாற்றிக் கொண்டு சேவூர்ப் போர்க்களத்திலிருந்து ஓடித் தப்பித்தான். பாலை நிலப் பகுதியொன்றின் நடுவில் இருந்த மலைக் குகையில் ஒளிந்து கொண்டு காலங்கழிக்கலானான். இந்தக் கதையைக் கேட்ட நந்தினி அந்தக் குகையைத் தேடிக் கண்டுபிடித்தாள். வீர பாண்டியன் மகனை அவன் கோரச் சாவுக்குப் பழி வாங்கத் தயார் செய்ய அதை விடச் சிறந்த இடம் கிடைக்கவில்லை அவளுக்கு.

மலை மேலிருந்த அவள் வீடு தூரத்திலிருந்து பார்த்தால் தெரியாது. பாதி மலையேறிய பின்தான் தெரியும். அதுவொரு பாழடைந்த கோயில் மண்டபம். வீரபண்டியன் இருந்த காலத்துக்கு இப்போது இன்னும் பாழடைந்து போயிருந்தது மண்டபம். அந்த மலையுச்சிக் கட்டடத்தில் கப்புங் கிளையுமாகப் படர்ந்திருந்த பெரிய ஆலமரம் இருந்தது. இன்னும் எத்தனை நாள்தான் அது அந்த ஆல மரத்தை எதிர்த்து நிற்குமோ தெரியாது.



வெகு நேரம் ஏறியவுடன், உச்சிக்கு ஓர் ஐம்பது படிகள் கீழே ஒரு மரத்தைப் பிடித்து மூச்சுவாங்கினாள் நந்தினி. காற்றில் முக்கால் வாசி இலைகளை இழந்த பின்னும் அந்த மரம் நின்றது.

பாறையிலும் வேரூன்றிக் காற்றுடன் போராடி வளர்ந்த மரம் தன் சகோதரர்கள் எல்லாரைவிடவும் மிக உயர்த்தில் வளர்ந்து வானைத் தொட்டது. எப்பொழுதும் அந்த மரத்தைப் பார்க்கும் போது அவளுக்கு பாண்டியரின் போராட்டம் நினைவுக்கு வரும்.

மாலை வெளிச்சம் சற்று வழி காண்பித்தது. சற்று நேரத்தில் அதுகூடப் போய்க் கும்மிருட்டு வந்துவிடும். பின் தட்டுத் தடுமாறித்தான் மலையேறவேண்டும் என்ற நினைப்பில் வேகமாகவே ஏறினாள். அதை விட மற்றும் ஒரு பரபரப்பும் இருந்தது. அவள் மலையேறும் போது மனம் ''பக் பக்'' என்றடித்தது. கடைசிச் சில காலடிகள் ஒரு யுகம் போலிருந்தது. 'மலைமேல் அவள் விட்டுச் சென்ற சிறுவன் இருக்கிறானா? நலமாய் இருக்கிறானா?'

ஒரு வாரமானது அவள் சென்று. இதுவரை ஒரு நிமிடம்கூட அவனை விட்டுப் பிரிந்திருக்க அவளுக்கு மனம் வந்ததில்லை. 'ஒருவேளை, தானில்லாத போது அவனுக்கு ஏதேனும் நேர்ந்துவிட்டால்?' என்ற பயம். பாறைப் பிளவுகளில் கொடிய சர்ப்பம் உண்டு. புதர்களில் வாலால் கொட்டும் தேள்களுண்டு. மலைப் புலிகளும் உண்டு. ஆனால், எல்லாவற்றைவிடவும் பயப்பட வேண்டிய சோழர்களும் இருந்தனர்.

சட்டென அவள் மனதில் ஒரு பயம். 'மேலே ஏறிச் சென்றவுடன் அவன் அங்கு இல்லையென்றால்? கீழே இறங்கிச் சென்றிருந்தால்?'

'இல்லை, இல்லை. அங்கு தானிருப்பான். பயப்பட அவசியம் இல்லை' என்று தன்னைத் தானே தேற்றிக் கொண்டாள். சரியாகப் பயமுறுத்தி வைத்திருக்கிறோம் அல்லவா?'

பின் மேலே மலையின் உச்சியை நோக்கினாள். அந்தச் சிறுவன் அங்கிருந்தபடி அவளை எதிர் பார்க்கவுங்கூடும் என்று அவளுக்குத் தெரியும். அது போலவே அவன் உருவமும் தெரிந்தது. தூரத்தில் அவன் நின்று அவள் வருவதை எதிர்நோக்கி நின்று கொண்டிருந்தான். அந்தக் காட்சியைக் கண்ட பின்னே அவள் மனம் சாந்தி அடைந்தது.

நந்தினி திரும்ப வந்ததைக் கண்டவுடன் ''அம்மா!'' என்று ஓடிவந்தான். அவன் முகத்தில் அவளைக் கண்டதில் உண்மையான ஆனந்தம் பிரகாசித்தது.

தேகம் மெலிந்து காணப்பட்டான். காட்டில் வாழும் இவனுக்கு உணவுப் பற்றாக்குறையினால் பிற்காலத்திலும் ஆஜானுபாஹு' வான தோற்றம் பெறுவது கடினம்தான். எனினும் அவனுடைய இளைய முகத்தில் பல நூறு வருஷங்களாக வாழையடி வாழை யாக வந்த இராஜ குலத்தின் வீரக்களை இருந்தது.

முதலில் பேசியது அவன்தான். சில நாட்கள் தனிமையில் கழித்து விட்டுத் தாயைக் கண்டவுடன் அவன் முகம் மலர்ந்தது. ஆனால், அவள் முகம் களைப்புற்று இருப்பதைக் கவனித்தான்.

''அம்மா, உன் முகம் ஏன் இப்படி வாடிப்போயிருக்கிறது? ஐயோ, பாவம்! நான் தனியாக இருப்பேன் என்று நில்லாமல் நடந்து வந்தாய் போல் இருக்கிறதே?'' என்றான்.

தலையாட்டிய அன்னையிடம், ''ஆனால், நீ வந்ததுதான் நல்லது. அம்மா! ஒருவேளை தாமதித்து விடுவீரோ என்று பயந்தேன்'' என்றான்.

''மகனே! நீ சொல்லியனுப்பியிருக்கும் போது எப்படித் தாமதிப்பேன்?''

''இன்னும் சில நாள் நீ வராவிட்டால், நான் கீழே இறங்கி வந்து உன்னைத் தேடலாம் என்றிருந்தேன்'' என்று அவன் சொன்னவுடன் அவளுக்குப் 'பகீர்' என்றது.

''அதை மட்டும் என்றும் நீ செய்யவே கூடாது. உன்னைப் பிடித்து அடிமை செய்யச் சோழர்கள் மலையடிவாரத்தில் இருக் கிறார்கள். மகனே! நீ இந்த இடத்தை விட்டுப் போய்விட்டால் உன்னை சோழர்கள் பிடிப்பது உறுதி. அவர்கள் பாதாளச் சிறை யைப் பற்றி உனக்கு தெரியாது. எப்போதும் இருட்டாய் இருக்கும். மேலே இரண்டு புலிகள் வேறு காவலிருக்கும். அங்கு உன்னை அடைத்துவிட்டால் வாழ் நாள் முழுவதும் வெளியே விட மாட்டார்கள்.''

அவனைப் பயமுறுத்துவதில் அவளுக்கு உடன்பாடில்லை. இரவும் பகலும் தன்னைச் சுற்றிச் சுற்றி வந்து இவன் நடத்தும் வாழ்க்கை போதாதென்று இப்படி அவன் கோழையாக வளர் வதை அவள் விரும்பவில்லை. ''இது என்ன வெட்கக்கேடு...!'' என்று மனதுக்குள் நினைத்துக் கொண்டாள்.



''வளரும் சிறுவனைப் பயமுறுத்துவதே தவறு. இவனோ ஒரு சாம்ராஜ்யத்தைத் தன் வாழ்நாட்களில் கட்டி ஆளப் போகிறவன். இவனைப் பயம்கொள்ளியாக வளர்க்க வேண்டியிருக்கிறதே!'' என்று வருத்தப்பட்டாள். எனினும் அவன் கீழே செல்லாமல் இருப்பதற்காக அதை விட அதிகமான பயம் காட்டும் வழிகளைப் பிரயோகிக்கவும் தயாராக இருந்தாள்.

''சென்றிருக்க மாட்டேன், அம்மா. நீ வரும்வரை உன் வரவை எதிர்நோக்கிக் காத்திருந்தேன். ஆனால், இது என்ன மர்மம்? எதற்காக என்னைத் தனியே விட்டுச் சென்று விட்டாய்?'' என்று கேட்டான் சிறுவன்.

''மகனே! அதை உன்னிடம் சொல்வதற்கில்லை. அது நம் இராஜாங்க சம்பந்தமானது'' என்றாள். அவன் அவ்வப்போது கேட்கும் பல கேள்விகளுக்கு அவளால் மறுமொழி சொல்ல இயலுவதில்லை. உடனே பேச்சையாவது மாற்றுவாள். இன்று அதற்கும் முயற்சிக்கவில்லை.

வீடும் வாசலும் பதவியும் அந்தஸ்துமற்ற அந்த அநாதைச் சிறுவன் ஒரு மாபெரும் பேரரசாய் விளங்கிய பாண்டியர்களின் வாரிசு. போராளிகளால் முறைப்படி அந்தப் பதவிக்கு முடி சூட்டப்பட்டவன். அன்று முடிசூட்டல் நடந்தது ஒரு பள்ளிப் படையைச் சுற்றி வளர்ந்திருந்த காட்டில். மதுரைச் சிம்மாசனத்தில் அவனை ஏற்றி வைக்கத் தீர்மானித்திருப்பதாகப் பலர் அன்று உறுதிமொழி எடுத்தனர். ஆனால், ஐந்து ஆண்டுகள் சென்ற பின்னும் ஒரு முன்னேற்றமும் இல்லை.

நெடுந்தூரம் நடந்து களைத்துப்போய் வந்திருந்தாள் நந்தினி. குகைக்குப் பின் ஒரு நீர்த் தேக்கமிருந்தது. அந்தக் குளம் ஆழமானது. அதில் மழை நீர் தேங்கியிருந்தது. அதில் சென்று முகம் கழுவினாள். என்றோ பெய்திருந்த மழையின் குளிர் அதில் இன்னும் நின்றது.

குகைக்குள், ஒரு மண் பானையில் நீர் இருந்தது. அதில் ஒரு குவளை நீரை எடுத்துக் குடித்தாள். அது என்னவோ தன் வயிற்றி லிருந்த காலியான இடத்தை இன்னும் எடுத்துக் காட்டியது. நந்தினி நேராகச் சென்று ஒரு பாறையின் மீது அமர்ந்தாள். அதன் மேலிருந்து பார்த்தால் பல காத தூரம் அமைந்திருந்த காட்சிக ளெல்லாம் தெரியும். எனினும் எதையும் குறிப்பிட்டு அவள் பார்க்கவில்லை.

அம்மா அந்தப் பாறையின் மீது அமர்ந்தபடி வெறித்து பார்த் தாள். அவள் ஏதோ முக்கியமான விஷயத்தைப் பற்றிச் சிந்தனை

செய்து கொண்டிருக்கிறாள் என்று சிறுவன் அறிந்தவனான படியால், அவன் அவளைத் தொந்தரவு செய்யவில்லை. அவன் பிராயத்தில் இருந்த மற்றச் சிறுவர்களின் வாழ்க்கை விளை யாட்டும், வேடிக்கையுமும், களியாட்டமுமாகக் கழிந்து வந்தது. ஆனால், அவன் தன் ஏக வயதில் ஒரு சிறுவனைக்கூட இதுவரை சந்தித்ததே இல்லை.

காட்டிலேயே வளர்ந்த அவனுக்கு இரு ஆண்டுகளுக்கு முன்னால் அவனுடைய வாழ்க்கையில் முதன் முதலாக ஒரு பெரும் மாறுதல் ஏற்பட்டது. தன் தாய் நந்தினி அம்மையாருடன் அவன் தனியாக இந்த மலைக் குகையில் குடியேறினான். அன்றி லிருந்து அவளது விருப்பத்துக்கு விரோதமான காரியத்தை அவன் செய்ய வேண்டும் என்று நினைப்பதில்லை. இது வேண்டும், அது வேண்டும் எனப் பிடிவாதம் பிடிக்கவும் மாட்டான். இன்று ஆழ்ந்த யோசனையில் அம்மா இருக்கிறாள் என்றறிந்து ஒதுங்கிச் சென்றான்.

நந்தினியின் சுவீகார புத்திரனுக்கு இன்னும் உண்மை தெரி யாது. தன் தாய் என்று அவன் நினைத்து வந்தவள் அவனுடைய தமக்கை என்று. என்ன ஒரு உறவு? வெவ்வேறு தாய் வயிற்றில் பிறந்திருந்தாலும் இருவரின் தந்தையும் வீர பாண்டியர்தாம். ஏதோ ஓர் விதியின் விளையாடல், அற்புதமான ஒரு சிருஷ்டி அதிசயத் தினால் தமக்கையும் தம்பியும் தாய் சேய் போலப் பழகிக் கொண்டிருந்தார்கள்.

❖ ❖ ❖

## அத்தியாயம் ஐம்பத்தாறு

## அழையா விருந்தாளி

இரவில் வெகு நேரம் மலை உச்சியிலிருந்த பாறையின் மீதமர்ந்தபடி யோசித்தாள் நந்தினி. அந்தப் பாறையின் மீதுதான் தினந்தோறும் உட்கார்ந்து மகனுடன் மணிக் கணக்காகப் பேசிக் கொண்டிருப்பாள். ஆனால், அவளுக்கு உரையாட எப்போது விருப்பமில்லை என அவனுக்கு நன்கு தெரியும். இன்று அது போல ஒரு சந்தர்ப்பம். ஒன்றும் சொல்லாமல் தான் உறங்குமிடத்துக்குச் சென்றுவிட்டான்.



அவன் ஒதுங்கிச் சென்றதைக் கூட நந்தினி கவனிக்கவில்லை. அவள் மனதை அவ்வளவு எண்ணங்கள் இத்தருணத்தில் ஆக்கிரமித் திருந்தன. தஞ்சையில் நடந்த அந்த நிகழ்ச்சிகளை வரும் வழி யெல்லாம் மீண்டும் நினைவு கூர்ந்து பார்த்தபோது, அவளுடைய உடல் சிலிர்த்தது. அவ்வப்போது தலை சுற்றுவது போலிருந்தது. முதலில் அளவில்லாத அதிசயம் அவளைப் பற்றிக் கொண் டிருந்தது. இவ்வளவு கொடூரங்களும், பயங்கரங்களும் செய்ததாகக் குற்றம் சாட்டப்பெற்ற நந்தினிக்கு எதிரியின் தலைநகரில் இப்படி ஒரு வரவேற்பா? பழையதைப் புரட்டிப் பார்த்த நந்தினி நடுநிசி வரை உறங்க வில்லை.

'ஆதித்யனின் கொலையை நினைத்தால் எனக்கு அவமானமா யிருக்கிறது. என்றைக்காவது ஒரு நாள் அவர்களுடைய முகத்தில் விழிக்க வேண்டிநேர்ந்தால், என்ன சமாதானம் சொல்வேன்?' என்று நந்தினி நினைத்த நாட்கள் உண்டு.

தேடும் சோழனுக்குக் காடு ஒரு பெரிய தடை இல்லை. இவர் களைத் தேடிப் பிடித்து, நாய்கள் போலச் சங்கிலியால் பிணைத்துத் தஞ்சை வீதிகளில் இழுத்துச் சென்று, பெயருக்கு ஒரு விசாரணை நடத்தி, நாற்சந்தியில் கழுவேற்றியிருக்கலாம். ஆனால், ஏன் செய்யவில்லை, ஐந்தாண்டுகளாக? தஞ்சைக்குச் சென்று வந்தபின் அது அவளுக்காகத்தான் என்று தெரிந்தவுடன் வெட்கினாள்.

முன்பே அவள் மீது தனிப் பரிவு எதிரிக்கு இருந்தது என்று மற்ற பாண்டியர்கள் தெரிந்து வைத்திருந்தார்கள். அங்குதான் ஆரம் பித்தது பாண்டியருக்குள் பிரிவினை. சோழர்களுடன் இன்னும் தொடர்பு இருந்ததாக நந்தினி மீது அவர்கள் குற்றம் சாட்டினர். பாண்டிய நாட்டுத் தலைமையைத் தான் கவர எண்ணியதாகத் தன் மீது சாட்டப்பட்ட குற்றம் ஆதாரமற்றது என்று நிரூபிக்க அவள் ஆர்வம் கொள்ளவில்லை. தன் மீது குற்றம் சாட்ட யாருக்கும் அருகதை இல்லை என்று நினைத்தாள். போராளிகளின் தர்மத்தை மீறி நடந்ததாகத் தன் மீது ஏற்படக்கூடிய அபவாதத்தைக் கூடிய விரைவில் போக்கிக் கொள்ளவும் அவள் விரும்பவில்லை.

அதனால் பாண்டியர் கூட்டத்தில் பிளவு ஏற்பட்டது. முக்கிய மாகத் தன் தாயைக் கொன்ற ஆளைத் துரத்த வேண்டும் என்ற நந்தினியின் கோரிக்கையை ஏற்றுக் கொள்ள மறுத்தனர் மற்றவர்கள் யாவரும். தான் சொன்னதையே மற்றவர்கள் கேட்டுப் பழகியிருந்த நந்தினிக்கு இது ஒரு அவமானமாய்ப் பட்டது. பின்னர் சிறுவனைக் கூட்டிகொண்டு மலை மேல் உள்ள குகையை அடைந்து, அங்கேயுள்ள அடர்ந்த முட்காட்டில் சோழ வீரர்களுக்கு பயந்து ஒளிந்து வாழ்ந்தாள்.

இரவே மிகவும் அமைதியானதுதான். அதுவும் இந்த உயரத்தில் சப்தத்தின் சஞ்சாரமே இல்லை. அவ்வப்போது காற்று மட்டும் நரி ஊளையிடுவது போலச் சப்தமிட்டது. கார் காலத்தில் மலையி லிருந்து கீழே பார்க்கும் போது ஆங்காங்கே பனி மூட்டமாக இருக்கும். மேகத்தை மேலிருந்து பார்க்கும் பாக்கியம் வேறு யாருக்குத்தான் உண்டு?

இது மிகவும் பாதுகாப்பான இடம். அடிவாரத்தில் வெகு நாட்களாக மனித சஞ்சாரமே இல்லை- அதாவது சேலூர்ப் போருக் குப் பின். குகையில் பின்புறமாய் மலையின் விளிம்பிருந்தது. யாராலும் அந்தப் பக்கத்திலிருந்து ஏறி வரவும் இயலாது. வந்தால் இந்த வழியாகத்தான் வர வேண்டும். அந்தப் பாறையின் மீதிருந்து பார்த்தால் கீழிருந்த அந்த மொத்தக் காடே கண்ணுக்குள் அடங்கும் என்பதால் ஒளிந்திருப்பவருக்குக் கூடுதல் பாதுகாப்பு.

மலையுச்சியில் குகையொன்று இயற்கையாகத் தோன்றியிருக்க வேண்டும். அதன் முகப்புக்கு வெளியே சமணர்கள் முன் மண்ட பத்தை நான்கு தூண்கள் கொண்டு அமைத்திருந்தனர். காலையில் அந்த மண்டபம் வெய்யிலிலிருந்து காத்திடும். இரவு குளிருக்குப் பயந்து குகைக்குள் சென்று விடுவதே சிறந்தது. அதன்படியே குகைக்குள் சென்று உறங்கிவிட்டான் அந்தச் சிறுவன்.

சற்று நேரம் சென்ற பின்தான் சிறுவன் அருகில் இல்லை என்பதை உணர்ந்தாள் நந்தினி. வரும் வழியெல்லாம் நினைவுகள் பறந்தோடின. ஆற அமர யோசிக்கவேண்டும். நடந்தவற்றை யெல்லாம் தீர மனதுக்குள் விவாதிக்கவேண்டும் என்றுதான் அவனுடன் அவள் பேச்சுக் கொடுக்கவில்லை.

ஒன்றும் பேசாமல் சென்ற அந்தச் சிறுவனை நினைத்தவுடன் ஒரு கணம் நந்தினிக்குத் தன்னுடைய சுயநல எண்ணம் வெட் கத்தை அளித்தது. பெற்றோர் இல்லாத அந்தச் சிறுவனுக்குப் பிறந்ததிலிருந்து யாருமே சிநேகம் இல்லை. அனுதாபத்துடன் அவனுக்கு உதவி செய்வாரும் கிடையாது. 'நாமும் இப்படி அவனைக் விட்டு வெகு நாள் தள்ளியிருந்து விட்டோமே' என்று தோன்றியது. உள்ளே சென்று அவனைச் சமாதானப் படுத்தலாமா என்று யோசித்த நந்தினி தன் மனதை மாற்றிக் கொண்டாள்.

அந்தச் சிறுவனின் விஷயத்தில் தன்னுடைய கடமை என்ன என்பதைப் பற்றி மிகத் தெள்ளத்தெளிவாகச் சிந்தித்து வைத்திருந் தாள். அவனை மதுரைக்கு மேள தாளத்துடன் அழைத்துச் சென்று மீனாட்சி அமர்ந்த அரியணையில் அமரச்செய்து பட்டாபிஷேகம் செய்ய வேண்டும். அது இவன் வாழ் நாட்களில் நடவாவிட்டா



லும் இவன் மகன் காலத்தில் நடக்க வேண்டும். அதுவரை இந்தப் பாண்டிய வம்சாவளியைத் தீங்கின்றிக் காக்கவேண்டும்.

நந்தினி பெருமூச்சு விட்டாள். முன் போலப் பாண்டியர் குழு வுக்குள் பிரிவில்லாமல் இருந்திருந்தால், அவளுக்குப் பொறுப்பு என்றும் இல்லாமல் போயிருக்கும். ஆனால், போராளிகளே உட் பூசல் காரணமாகப் பிரிந்திருந்தனர். சரிசமமாகப் பிரியவில்லை. இவர்கள் இருவர் மட்டும் வெளியேறினார்கள்.

மீண்டும் மீண்டும் அவள் யோசனை எல்லாம் தஞ்சையைச் சுற்றியேயிருந்தது. பொன்னியின் செல்வர் தன்னுடன் இன்னும் எவ்வளவோ விஷயங்கள் பேச எண்ணியிருந்தாரென்று அவளுக்குத் தெரியும். ஆனால், முடிந்தவரை தவிர்த்துவிட்டாள். அவரிடமிருந்தும் ஒரு புது விஷயமும் தெரியவும் இல்லை. மிகவும் ஆனந்தமாகத் தன் எதிரிகள் வாழ்க்கையை நடத்துகிறார்கள் என்று மட்டும் யூகிக்க முடிந்தது. அதை நினைத்தால் கோபம் கோபமாய் வந்தது.

'சோழர்களைப் பற்றி இனி நினைத்திருப்பதில் பயனில்லை. நாம் இழந்த சுக போகங்களையே அது நினைவூட்டும். குகைக்குள் சென்று காலை நீட்டிப் படுப்போம்' என்று நினைத்து உள்ளே நடந்தாள்.

அழகான வேலைப்பாடுகள் நிறைந்த தூண்கள் அவள் கடந்த மண்டபத்தைத் தாங்கிப் பிடித்திருந்தன. குகை இருட்டாய் இருந்தது. சிறுவனின் மேல் போர்வையைச் சரி செய்து விட்டாள். மலையுச்சிகளில் இரவு மிகவும் குளிரும்.

படுத்த பின்னும் அவளுக்கு உறக்கம் வரவில்லை. நித்திரா தேவி குகைக்குள் வந்து சேரும் வரையில், குகையின் சுவர்களைக் கவனித்தாள். ஏற்றி வைத்திருந்த விளக்கின் தீபம் இங்கும் அங்கு மாய் அசைய, அதில் அந்தச் சுவரெல்லாம் இருந்த ஓவியங்கள் உயிர் பெற்று ஆடின.

இரு நூறு ஆண்டுகளுக்கு முன்பு மதுரையில் பெரியதொரு சமயக் கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தது. 'சைவமா சமண மதமா?' என்று மக்கள் முடிவெடுக்க முடியாமல் தவித்தனர். முதலில் இரு சமயத்தினருக்கும் இடையே வாதப் போர்கள் நடந்தன. பின்னர் இதுவே கைகலப்பாக மாறிச் சட்ட ஒழுங்கில் பெரும் பிரச்சனை களை உருவாக்கியது. அரசர்கள் எந்த மதமோ அந்தச் சமயத் தினரின் கை ஓங்கி எதிரணியினரைக் கொடுமைப் படுத்தினர். சமண மதத்தைச் சேர்ந்தவர்களைச் சுண்ணாம்புக் காளவாயில்

இட்டு வாட்டியும், கற் தூண்களில் கட்டிக் கடலில் பாய்ச்சியும் வேடிக்கை பார்த்தனர்.

தமிழகத்தில் சமணம் கை ஓங்கக் காரணம் பல்லவர் பாண்டியரெனும் இரு மகா சாம்ராஜ்யங்களின் அரச குலங்களும் அந்த மதத்தைப் பின்பற்றியது தான். அதே சமயத்தில் தமிழகத்தில் சைவ, வைணவ சமயங்கள் புத்துயிர் பெற்றுத் தழைக்கத் தொடங்கின. சிவனடியார்களும், வைணவப் பெரியார்களும் ஸ்தல யாத்திரை என்ற வியாஜத்தில் தேசமெங்கும் பிரயாணம் செய்து, தத்தம் சமயங்களைப் பரப்பி வந்தார்கள்.

இந்தப் புத்துணர்ச்சியைத் தடுக்கச் சமணர்கள் முடிந்தவரை முயற்சித்தனர். பூச்சி புழுவுக்குக் கூடத் தீங்கு இழைக்கக் கூடாது என்று எண்ணிய சமணர்கள், சைவ மதத்தினரைப் பலவகைக் கொடுமைக்குள்ளாக்கினர்.

சமண மதம் ஆணிவேர் ஒன்றைப் பதித்து ஆல மரமாய் வளரத் தொடங்கியது தென் ஆலவாயில்தான். நெடுமாறன் எனும் அரசன் அவர்களை ஆதரித்துத் தானும் அம்மதத்தையே பின்பற்றி வந்தான். பின்பு சம்பந்தன் என்று சீர்காழியில் புறபட்ட சைவப் புயல் ஒன்று அந்த ஆலமரத்தை வேரோடு சாய்த்தது.

மதுரைக்கு வந்த ஞானக் குழந்தை சம்பந்தன், பாண்டிய அரசரின் நெடுநாள் காய்ச்சலைப் போக்கினான். அரசன் முதுகிலிருந்த கூனை நிமிர்த்தினான். அவனைக் 'கூன் பாண்டியன்' என்ற நிலையிலிருந்து 'நின்றசீர் நெடுமாற'னாய் ஆக்கினான். சமணரை வாதப் போரிலும் தோற்கடித்தான். அதிசயத்திலும் அதிசயம், அவனது பாடல்கள் கொண்ட ஏடுகள் வைகை நதியின் நீர்ப் போக்குக்கு எதிரே நகர்ந்தன. தீயினில் இட்டாலும் வேகாமல் இருந்தன.

அதைக் கண்ட அரசன் சைவனாக மாறியதுதான் தாமதம். உடனே பாண்டிய நாட்டின் சமணர்கள் எல்லாரும் ஒரே நாளில் வேண்டாதவர்களாக மாறினர்கள். இதுதான் சமயமென்று சமண சமயத்தைத் தழுவிய மக்களின் மீது பாண்டிய நாட்டு மக்களும் பற்பல குற்றங்களைச் சுமத்தினார்கள். அவர்களது பொருளாதார நிலையே அதற்குக் காரணம். அரசரின் ஆதரவும், பல நாடுகளில் இருந்த அதே மதத்தினருடைய ஒத்துழைப்பும் சேர்ந்து அவர்களது வியாபாரத்தைப் பல மடங்கு அந்த நாள் வரை விஸ்தரித்திருந்தது.

தங்களை விட்டு விட்டால் போதும், ஓடி விடுகிறோம் என்று அவர்கள் பாண்டியச் சக்கரவர்த்தியிடம் விண்ணப்பம் செய்து கொள்ள, அதைப் பாண்டிய அரசன் ஏற்கவில்லை. தனக்கு எதிராக



இருப்பவர்கள் என்றேனும் சதி செய்யலாம் என்று எண்ணி அனைவரையும் தண்டிக்க ஏற்பாடு செய்தான்.

பலர் நாற்சந்தியில் கழு மரம் ஏறினார்கள். பலரும் அரசனின் கொடுமைக்குப் பயந்து ஓடோடிச் சென்று காட்டினிலும், குகைகளிலும் பதுங்கினர். சமணர்கள் வாழ்ந்த இடங்களில் இன்றுவரை குன்றுகளைக் குடைந்த கோயில்களாக இருந்தன. அவற்றில் ஓவியங்களும், சிற்பங்களும் நிறைந்து இருந்தன.

சமண சன்னியாசிகளுக்கு என்ன, வாரிசுகளா உள்ளன? அதுவும் அழியும் மதத்தில் யார் வந்து துறவறம் பூணுவார்கள்? அதனால் அவர்கள் வாழ்ந்த இடங்கள் மெல்ல மெல்லப் பாழாயின.

நந்தினி படுத்திருந்த குகையெங்கும் தங்களைப் பற்றிய தத்துவங்களை அழகான சிற்பங்களாகவும் ஓவியங்களாகவும் தீட்டி வைத்திருந்தனர் சமணர்கள்- என்றாவது வந்து பார்ப்பவர் தங்கள் நிலைமையையும், தங்கள் பக்க நியாயத்தையும் புரிந்து கொள்வார்கள் என்ற நினைப்பில். கலா ரசிகர்களெல்லாம் ஒப்புக்கொள்வது தானிருந்தது. பரத கண்டத்திலேயே இணையற்ற ஓவியர்கள் சமணர்கள்தாம்.

விளக்கின் ஒளியில் ஓவியங்களை ரசித்தாள் நந்தினி. குகையின் சுவரெல்லாம் படங்கள். அவள் வாழும் குகையில் இருந்த கலை நூறு ஆண்டுக் கடும் முயற்சி; ஏன், சமணர்களின் தவமென்று கூடச் சொல்லலாம். கடும் சிரமத்தில் தங்கள் நிலையை உலகுக்கு விளக்கும் முயற்சியில் இந்தக் குகை வேறு உருவங் கொண்டது. அவர்களுடைய துன்ப துயரங்களையே ஓவியமாய் வரைந்திருந்தனர்.

சமணர்கள் நந்தினியின் முன்னோர்களையும் வரைந்திருந்தார்கள். ஆனால், கொடூரமாக இருந்தன அவர்களது உருவங்கள். [illegible]யாள் தோழர்களைச் சமணர்கள் துரோகிகளாக நினைத்தனர்.

சித்திரவதைக் காட்சிகளைக் கண்டால் பாவமாய் இருந்தது. கல்லும் கசிந்திருக்கும் அவர்கள் சோகக் கதையைக் கேட்டு. ஆனால், இதில் வேடிக்கை என்னவென்றால், இன்றோ அவர்களைத் துரத்தியடித்த பாண்டியரும் சர்வ நாசமடைந்திருந்தனர்.

பாண்டிய வம்சாவளியில் வந்த நந்தினி அடிக்கடி நினைப்பதுண்டு: ''நாம் அடித்து விரட்டிய சமணர்களே நமக்கு இந்த இடத்தைத் தயார் செய்து வைத்துவிட்டுச் சென்றிருந்தார்கள் போலும். அவர்களைப் போல நமக்கும் இது பிற்காலத்தில் தேவைப்படும் என்று முன்பே அறிந்து.''

சேலூரில் போர் நடந்த பின், சோழனின் மாபெரும் சைனியத்திற்கு அரைகுறையாக எதிர்ப்புத் தெரிவித்துவிட்டுப் பின்வாங்கி மதுரைக்குத் திரும்பும் வழியில் கண்மறைவாக வாழலாம் என்று இதைத் தேர்ந்தெடுத்தார் வீரபாண்டியர். அவரும் இது போலத் தான் சித்திரங்களைப் பார்த்துப் பார்த்துத் தனிமையில் நொந்து போயிருப்பார் என்று நினைத்தாள் நந்தினி.

சித்திரங்களைப் பார்த்துக்கொண்டிருந்த நந்தினி எப்போது உறங்கினாள் என்று தெரியவில்லை. எனினும் காலையில் சிறுவன் முதலில் எழுந்து குளத்தில் நீர் முகர்ந்த சப்தம் கேட்டது. சாப்பிட ஏதாவது தயார் செய்து விடுவான். மிகவும் பொறுப்பானவன். இவனுக்கு மற்றக் குழந்தைகள் போல் ஓர் இனிய இளமையில்லை. குழந்தையாக இருக்கும்போதே தலையில் பாண்டியக் கிரீடத்தைத் தூக்கி வைத்தார்கள்- பெரியவர்கள் சுயநலனுக்காக. அதுவும் அரண்மனையில் இல்லை, முடிசூட்டும் விழா. காட்டில் பள்ளிப் படைக்கு அருகில் அரைகுறையாய் ஒரு பதவியேற்பு. சொல்லப் போனால் இவன் நாடில்லாத அரசன். இவனுக்கு இந்த மலைக்கு அப்பால் என்னவெல்லாம் இருக்கிறது என அறியத் துடிப்பு. ஆயினும், தனது ஆர்வத்தை எல்லாம் அடக்கிக் கொண்டு தாயார் திரும்பி வரும்வரை அவள் வார்த்தைப்படி மலை மேலே இருக்க வேண்டுமென்று உறுதியாக இருந்திருக்கிறான்.

அந்த வயதுச் சிறுவனுக்குத் தனியாகப் பொழுது போக்குவது என்னவோ மிகவும் கஷ்டமாக இருந்தது. ஆனால், இயற்கையை ரசிப்பதில் காலம் கழித்தான். பறவைகளைப் பார்த்தே நேரத்தைப் போக்கினான். அவ்வப்போது வெண் நாரைகள் மலைக்குப் பின்னிருந்த ஏரியில் ஒற்றைக் காலில் நின்று தவம் புரிவதை நிறுத்திவிட்டு, நாடு விட்டு நாடு பறந்து செல்லும். முக்கோண அமைப்பில் தலைவனுக்கு பின்னே, அவசரமாய் ஓடும் வெண் மேகம் போல, மலை உச்சியின் வெகு சமீபத்தில் செல்லும். அதைக் கண்டு கைகொட்டி ரசிப்பான்.

அடுத்த நாளும் இருவரும் அதிகம் பேசாமலேயே போனது. மதியம் வந்தவுடன் நந்தினிக்குக் களைப்பு. மலையின் மீது சுட்டெரித்த சூரியன் அவளைத் துன்புறுத்தியது. குகைக்குள் சென்று படுத்துவிட்டாள். எழுந்திருக்க நினைத்தாலும் உடல் உடன்படவில்லை. படுத்தேயிருந்தாள்.

அப்போது சிறுவன் ஓடிவரும் சப்தம் கேட்டது. அவசரமாய் ஓடிவந்த சிறுவன், ''அம்மா! யாரோ மலையேறி வருகிறார்!'' என்றான்.



சிறுவன் கூறியதைக் கேட்டு அவள் திடுக்கிட்டு எழுந்தாள். வெளியே ஓடோடி வந்து, ''எங்கே?'' என்றாள் நந்தினி பரபரப்புடன். இது என்ன நகரத்து வீடா, விருந்தாளிகள் அடிக்கடி வர? உண்மையில் இங்கு அவள் வந்து சேர்ந்த இரு ஆண்டுகளில் ஒருவர் கூட வந்ததில்லை.

''அதோ!'' என்று அவன் சுட்டிக் காட்டிய திக்கில், அடர்ந்த பாறைகளுக்கு இடையிடையே ஒரு மனிதனின் மெதுவான நடை கவனத்தைக் கவர்ந்தது. ஆனால், அவனுடைய முகம் தெரிய வில்லை.

இந்த வழியோ குகையோ யாருக்கும் தெரியாதே! வழி தவறி வருகிறானா? இல்லை, இல்லை. அவ்வளவு அலட்சியமாக வரும் மனிதன் நிச்சயமாக அவன் தேடிய பொருள் இருக்கும் இலக்கு இதுதான் எனத் தெரிந்துகொண்டு வருபவனாகத்தான் தோன்றியது.

'யாரோ அந்நியன் இந்த இடத்துக்கு யோசிக்காமல் வருகிறான் என்றால், நாம் நினைத்த அளவுக்கு இதில் எந்த ரகசியமும் இல்லை!' என்ற முடிவுக்கு வந்தாள் நந்தினி. எங்கு தேடினாலும் இருப்பிடத்தைச் சோழனும் சரி, பாண்டியனும் சரி, காண முடியாது என நினைத்து விட்டாள், அசட்டுத் தனமாக.

பின்யோசனையில் பார்க்கும்போது, அது முட்டாள்தனமாய் இருந்தது. இந்த மலையின் மேல் ஏறிவந்துவிட்டால் உலகுக்கு மாயமாய் மறைந்தது போலாகிவிடும் என்று தப்புக் கணக்குப் போட்டுவிட்டோமே என்று இப்போது வருத்தப்பட்டாள்.

தூரத்திலிருந்து யார் அந்த ஆள் என்பது தெரியவில்லை. ஆனால், அவன் வழி தெரிந்தவன் போல நேரே அவர்களின் இருப்பிடத்துக்கு வந்து கொண்டிருந்தான். சற்றும் தயக்கம் கொண்ட மாதிரித் தெரியவில்லை. ஏதேனும் வழியில் அடையாளக் குறிகளுக்காகத் தேடி நிற்கவும் இல்லை. அவன் முகத்தை அடையாளம் காணக் காத்திருந்த ஒவ்வொரு விநாடியும் நந்தினிக்கு ஒரு யுகமாகத் தோன்றியது.

இவ்வளவு துணிச்சலாக அந்த மலைக் காட்டில் நுழைந்து வரும் அந்நிய மனிதன் யார்? யாராயிருந்தாலும் இருக்கட்டும், நாம் அதற்குள் இந்தச் சிறுவனை மறைத்து வைத்து விடவேண்டும்' என்ற எண்ணத்தோடு, ''குழந்தாய்! நீ உள்ளே போய் மறைவாய் இரு. நான் அழைத்ததும் வந்தால் போதும்'' என்றாள்.

சிறுவனும் ஆர்வமாய் வருபவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். தாயின் கட்டளையைக் கேட்டு அவன் முகம் சுருங்கியது.

''சரி, அம்மா'' என்று ஏக்கக் குரலில் கூறி, அவ்வப்போது திரும்பிப் பார்த்துக்கொண்டே, மனமில்லாமல் குகைக்குள் போய் விட்டான்.

நந்தினியின் கண் பார்வைக்கு அசைவுகள் சற்றுத் தெளிவாகத் தெரிந்த தூரத்தில் அந்த மனிதன் வந்து விட்டான். நந்தினி நினைத்துக் கொண்டாள். 'நல்ல வேளை, இளவரசன் தனியாய் இருக்கும்போது அவன் வரவில்லையே. சமாளிக்க நான் இருக் கிறேன்' என்று.

பின்பு சட்டென ஒரு யூகம் வந்தது. 'தான் தஞ்சை சென்றதால் தான் இந்த விருந்தாளியோ?' வருவது யாரென்பது தெரியவில்லை. ஆனால், நந்தினி அவன் வந்த காரணத்தை ஒரு வழியாக யூகித்து விட்டாள். நிச்சயமாகத் தனது தஞ்சை விஜயத்தை முன்னிட்டுத் தான் இந்த மனிதன் வருகிறான். இப்போது திரும்பித் தொலைவில் வரும் ஆளைப் பார்த்தாள்.

மலையில் முக்கால் பங்கு ஏறியபின், அந்த மனிதன் இன்னும் எவ்வளவு தூரம் செல்ல வேண்டும் என்பது போல, மேலே நிமிர்ந்து பார்த்தான். அப்போது அவன் முகம் தெளிவாக நந்தினிக் குத் தெரிந்தது. யாரென்று புலப்பட்டவுடன் நந்தினியின் தேகம் முழுவதையும் ஒரு குலுக்குக் குலுக்கி விட்டது.

'ஐயோ! நிஜமாகவா! இவனா?' ஏற்பட்ட அதிர்ச்சியினால் தடுமாறி விழுந்துவிட இருந்தாள். அருகில் நீட்டிக் கொண்டிருந்த மரக்கிளையைப் பிடித்துக் கொண்டு சமாளித்தாள். அவன் யாரென்று தெரிந்ததும் ஒரு நிமிடம் பதற்றமடைந்தாள். 'இப்போது தான் தஞ்சையிலிருந்து திரும்பி வந்து, மலையேறிப், பெருமூச்சு விடுகிறேன். இதற்குள் ரவிதாசன் என்னைத் தேடிக் கொண்டு இங்கே வந்து விட்டானே!' என்று அதிர்ந்தாள்.

முதலில் அவளுக்குத் தோன்றியது: 'நாம் இப்போது சென்று ஒளிந்து கொண்டால், வந்தவன் அங்கும் இங்கும் தேடிவிட்டு வந்த வழியே திரும்ப வேண்டியதுதான்' என்று.

ஆனால், தான் இங்கு இரண்டு ஆண்டுகளாய் வாழ்ந்ததற்கான தடையங்கள் ஏராளம். அவள் இங்குதான் வாசம் செய்கிறா ளென்று உறுதியாய்த் தெரிந்து விடும். அதை விட ரவிதாசனுக்கு பயந்து கொண்டுதான் ஒளிந்திருக்கிறாள் என்றும் தெரிந்துவிடும். அது நந்தினிக்குப் பிடிக்கவில்லை. அவனுக்குப் பயந்தே அவள் மறைந்தாள் என்று அவன் நினைத்தால், அவன் கை ஓங்கிவிடும். ஒரு காலத்தில் அவளுக்கு முன் கை கட்டிச் சேவகம் செய்தவன் இவன்.



அவள் இந்த மலைக் குகையில் இருந்தது, அமைதியாய்ப் பொழு தைப் போக்கவும் இந்தச் சிறுவனை ஆபத்திலிருந்து காக்கவும்தான், ரவிதாசனுக்குப் பயந்தல்ல. அது அவனுக்குத் தெரிய வேண்டு மென்றால் இங்கே, இதே இடத்தில் நிமிர்ந்து துணிவுடன் நின்றிருக்க வேண்டும் என்று முடிவு செய்தாள் நந்தினி.

கடைசிப் படிகளில் ஏறி நந்தினிக்கு எதிரே வந்து நின்றான் ரவிதாசன். அவனுக்கு மலை ஏறியதனால் மூச்சிரைத்தது. அப்போது கோபத்தில் நந்தினியின் முகம் கருத்ததை ரவிதாசன் கண்டுகொண்டான். வெறுப்போடு ஒரு பார்வை செலுத்தினாள், வரவேற்பாக.

இருவரும் பேச நாவெழாமல் ஒருவரை ஒருவர் பார்த்தபடியே நின்றார்கள்.

❖ ❖ ❖

## அத்தியாயம் ஐம்பத்தேழு
## மலையேறி வந்தான் ரவிதாசன்

**ம**லையேறி வந்த ரவிதாசன் வெகு தூரம் வழிநடந்து களைப் புற்றவனாகக் காணப்பட்டான். பார்த்தால் பாவமாய் இருந்தது. எனினும், ரவிதாசனைக் கண்டதில் நந்தினியின் உள்ளமானது கடல் பொங்குவது போல் கொந்தளித்தது.

''ஏன் இங்கு வந்தாய்?'' என்று வெறி கொண்ட குரலில் கேட்டு விட்டுக் குகைக்குள் சென்றுவிடலாம் என்று நந்தினி முதலில் எண்ணினாள். 'நாம் வரும்போதே எதற்காக இவ்வளவு கடுகடுத்த முகத்துடன் வரவேற்கிறார்? எதற்காக இப்படி ஆத்திரமாகப் பேசுகிறார்?' என்ற எண்ணம் அவனுக்கு நிச்சயம் வர வேண்டும்.

'அதனால் அவன் உடனே திரும்பிச் செல்லா விட்டாலும் அவன் இங்கு இருக்கும் நாட்கள் குறையும்படி இந்த வரவேற்பு இருக்க வேண்டும்' என்று நினைத்தாள். ஆயினும், பாண்டியர் போராட்டத்தில் இரண்டு ஆண்டுகளாக என்ன நேர்ந்தது என்று தெரிந்து கொள்ளும் ஆவலும் அவளுக்கு மிகுந்திருந்தது. அதனால் அப்படி நந்தினி பேசவில்லை. அதற்காக, அவனை கண்டதில் இவளுக்கு எவ்வித ஆர்வமும் இருகின்றது என்றும் அவன் எண்ணி விடக்கூடாதென்று ரவிதாசனை நோக்கும்போது தன் புருவம்

சுழித்து, அருவருப்பை வெளிக்காட்டிக், கோபம் கொப்புளிக்கின்ற குரலில், ''வாருங்கள்'' என்றாள்.

அதைக் கண்டவுடன் வந்தவன் நந்தினியைப் பணிந்து வணங்கி விட்டுக் கூறினான்; ''பாண்டிமாதேவியே! தங்கள் அனுமதியின்றி வந்ததற்காக இந்த ஏழையை மன்னிக்க வேண்டும்.''

''என்ன, இன்றைக்கு இவ்வளவு தூரம்?'' என்றாள். அவள் குரலில் இருந்த சீற்றம் அவனுக்குப் புரிந்தது. அவளுடைய கோபம் முகம் சிவந்து சுருங்கியதிலும் அவளது கண்களின் சிவப்பிலும் தெரிந்தது. வந்த இடத்தில் வரவேற்பு கடினமாகத்தான் இருக்கும் என்று தெரிந்தேதான் அவன் வந்தான். அதனால் அவன் முகத்தில் ஏமாற்றம் படரவில்லை.

ரவிதாசன் எப்போதும் பிரயோகிக்கும் அதிகார தோரணையை விட்டு விட்டு இன்று வேறு ஸ்வரத்தில் பேச ஆரம்பித்தான். ''ஏன், பாண்டிமாதேவி! உம்மைக் காண நான் வரக் கூடாதா? நமக்குள் என்ன பகை?''

''தஞ்சைக்கு ஒரு முறை சென்று வந்தால் போதும், இப்பொழுது மட்டும் பாசம் வந்து குதிக்குமா நம்மிடம்?'' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள் நந்தினி.

ரவிதாசன் தொடர்ந்தான்: ''பாண்டி மாதேவியே! ஏன் இவ்விதம் மாறிப் போயிருக்கிறாய்? எவ்வளவோ ஆர்வத்துடன் நான் உன்னைத் தேடி வந்தேன் தெரியுமா? நான் வந்ததே உமக்குப் பிடிக்கவில்லை என்று தோன்றுகிறது. போய்விடு என்று நீர் கட்டளையிட்டால், இதோ போகிறேன்'' என்றான். கிளம்புவது போலப் பாசாங்கு செய்தான். அவளோ இவன் ஏன் வந்தான் என்று தெரிந்து கொண்டு பின் விரட்டியடிக்க வேண்டுமென்று முடிவு செய்தாள்.

''என் காதில் யட்சிணி வந்து எல்லா விஷயத்தையும் சொல்லும்!'' என பல முறை சொல்வான், ரவிதாசன். இன்றும் யட்சிணி கோள் மூட்டித் தான் வந்தானோ?'' என்ற பயம் அவளுக்கு. ஆனால் வேகமாக யோசிக்கத் தொடங்கினாள்.

வந்தவனிடம் தான் வெளியூர் சென்றதைச் சொல்லவேண்டாம் என்று முடிவு செய்திருந்தாள். 'தன்னைத் தேடி வரும் இவன் தன் சமீப நடவடிக்கைகள் பற்றிய விஷயம் தெரிந்து வருகிறானா? இல்லை, இது சம்பந்தமில்லாமல் நடக்கும் நிகழ்ச்சியா என்று கண்டறிய வேண்டும். ஏதாவது நேரடியாக கேட்டால் பொய் என்று மறுத்துவிடலாம். நாம் என்ன சொன்னாலும் ஓரளவுக் காவது அவன் நம்பித்தான் ஆக வேண்டும். இல்லை, நம்பியவன்



போலப் பாவனை செய்ய வேண்டும். மலையேறி வந்து ஏன் என் மேல் அபாண்டப் பழி சுமத்துகிறாய் என்று அவனை நோக்கிப் பாயலாம். ஆனால், அவன் அப்படிச் செய்ய மாட்டான். நேரடி யாகக் கேள்வி கேட்க மாட்டான். திடீரெனக் கேட்பான். அவன் எப்போது கேட்கப் போகிறான் என்று நினைத்தே பயப்பட்டிருக்க வேண்டும்- அந்த விஷமக் கேள்வியை எதிர்கொண்டு காத்திருக்க வேண்டும்?'

இப்போதே அவள் குரலில் ஒலித்த நடுக்கம் நந்தினிக்கே புதியதொரு சப்தமாய் இருந்தது.

நந்தினி குழப்பத்தில் இருந்தாள். அவளுக்கு ஒன்றும் விளங்க வில்லைதான். அவன் ஏன் வந்தான் என்று ஒரு விதமாக ஊகித் திருந்தாள் நந்தினி. அப்போது யாரோ தன்னைப் பின் தொடர்ந்து வந்து கண்காணித்து வருகிறார்கள். அவளைத் தஞ்சையில் கண்ட வர்கள் அவனுக்குச் செய்தி அனுப்பியிருக்க வேண்டும். செய்தி கிடைத்ததும் உண்மையை அறிய இவன் கிளம்பி வந்திருக்கிறான் - தான் செவியுற்றது உண்மைதானா என்று தெரிந்து கொள்ளும் நோக்கத்தோடு. தஞ்சைக்குச் சென்று வந்த ஓரிரு நாட்களில் ரவிதாசன் வந்து சேந்ததால் இந்த யூகமே சரியானதாக இருக்க வேண்டும்.

'நமக்கு இடம் கொடுக்கும் இந்த மலைக் குகை வேறு யாருக்கும் தெரியாது என்று நினைத்தே இவ்வளவு நாளாக அமைதியாய்த் தூங்கினோம். இனி அது முடியாது. அடிக்கடி வந்து நம்மைப் பார்த்துப்போவதில்லை என்றாலும், நம் இருப்பிடம் அவர் களுக்குத் தெரிந்ததே' என்றும் உணர்ந்தாள்.

பாண்டியப் போராளிகளில் பெரும் பகுதியுடன் காட்டில் தங்கியிருந்த ரவிதாசனுக்குத், தான் தஞ்சைக்கு சென்றது தெரியாது என எண்ணிக் கொண்டிருந்தாள். ஆனால், ஒன்று மட்டும் நிச்சயம். அவள் எங்கு சென்றாலும் அவளைப் பின்பற்றி ரவிதாசன் வருவான். 'இல்லை, குறைந்த பட்சம் அவளிருக்கும் திசையில் ஒரு கண்ணை வைத்திருப்பான்!' என நந்தினி இப்போது தெரிந்து கொண்டாள். 'ஆனால், அவசரப்பட்டு உண்மையை வெளியிட்டு விடக் கூடாது. காத்திருந்து பார்ப்போம்' என்று முடிவெடுத்தாள்.

ரவிதாசன் அவள் கண்களையே உற்று நோக்கினான். அவளால் தொடர்ந்து அந்தப் பார்வையைச் சந்திக்க முடியவில்லை. அவன் முகத்தில் சோகமான புன்னகை தோன்றிப் பின் பறந்தோடியது. அவனுக்கு ஒற்றன் தந்த தகவல் உண்மைதான் போலும் என்று உறுதிப்படுத்திய புன்னகை அது.

நந்தினி ஒரு முடிவுக்கு வந்தாள். இரண்டு விஷயங்களில் ரவிதாசனின் கவனம் செல்லக் கூடாது. ஒன்று அந்தச் சிறுவன், மற்றொன்று அவளது தஞ்சை விஜயம். ஆகையால் அவளே முந்திக் கொண்டு பேச்சைத் திசை திருப்பினாள்.

"எப்படி நடக்கிறது உங்கள் போராட்டம்? இன்னும் எத்தனை நாளில் மதுரையைப் பிடிக்கப் போகிறீர்கள்?" என்றாள் கேலியாக.

அமைதியாய் இருந்தான், ரவிதாசன். ஆனால், அவளது கிண்டல் அவனைப் புண்படுத்தியது. 'என் விடுதலை வேட்கையைத் தீர்த்து என்னைக் காப்பாற்றுவார் யாரும் இல்லையா என்று பாண்டிய நாடு கதறுகிறது. அந்தக் குரல் மட்டுமே என் காதுகளில் கேட்கிறது. அதுவும் என் காதில் மட்டும்தான் கேட்கிறது' என்று நினைத்துக் கொண்டான்.

நந்தினி தொடர்ந்தாள்: "காட்டிலேயே கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்தால் என்ன பிரயோஜனம்? வெற்றி பெறும் வழியைப் பார்க்க வேண்டும். அல்லது, ஏதாவது சமரச வழியைத் தேடிக் கொள்ள வேணும். சும்மாயிருந்தால் எப்படி ஜீவனம் நடக்கும்?" என்றாள்.

இதற்குப் பதில் சொன்னான் ரவிதாசன். "சமர்த்துப் பிள்ளைகளாய் இருக்க நாம் என்ன சம்புவராயரா? இல்லை,முத்தரையரா? நாம் பாண்டியர். கல் தோன்றி மண் தோன்றும் முன் கையில் வாளேந்தி நாம் மதுரையை ஆண்டு வந்தோம். நேற்றுப் பெய்த மழையில் இன்று தலைகாட்டும் புல் பூண்டல்ல. நம் பெயரைச் சொன்னால் நாடு நகரமெல்லாம் நடுங்கிக் கொண்டிருந்த காலம் ஒன்று உண்டு. அந்நியனுடன் நாம் ஏன் சமரசம் செய்து கொள்ளவேண்டும்?" என்று குரலைச் சற்றுக் கூட உயர்த்தாமல் கேட்டான். சமரசம் என்ற வார்த்தையைக் கேட்டவுடன், அவனுக்கு வெறி மூண்டது போல. "சோழர்களிட்ட பிச்சை வேண்டாம். தன்னுடைய கட்டுகளைத் தானே அவிழ்த்துக் கொள்ள முயல வேண்டும் பாண்டியநாடு. அப்போதுதான் அந்தச் சுதந்திரம் நிலைத்து நிற்கும்!" என்றான்.

ஒரு நொடி அமைதி காத்துவிட்டு, "என்னைச் சுற்றியுள்ளச் சிலர் பேச்சு வார்த்தை மூலம் உரிமைகளைப் பெற்று விடலாம் என்று நினைக்கிறார்கள். ஆனால், எனக்கு நன்றாய்த் தெரியும். ரத்தம் சிந்தாமல் பெறும் எந்த நிலமும் நம்மிடம் தங்காது. நாடு பலி கேட்கிறது. ரத்தப் பலி. மன்றாடிக் கேட்டு வாங்கும் உரிமை மறுபடி பறிக்கப்படும். போராடி வாங்கும் உரிமை எஃறென்றும் பறிபோவதில்லை!" என்றான் ரவிதாசன்.



நந்தினி அத்துடன் அரசியல் பேச்சை நிறுத்திக் கொண்டாள். அவனைச் சண்டைக்கு இழுத்ததில் பலனேதுமில்லை. அவன் அவளோடு சண்டையிட வரவில்லை. அதுவும் நல்லதுதான். இனி ரவிதாசனுடன் சண்டை போடக் கூடாது என்ற முடிவில் இருந்தாள். ஆனால், அது குகைக்குள் ஒளிந்திருக்கும் இளவரசனுக்காக. இப்போது கூட ஏதாவது மறைவிலிருந்து அவன் அவர்களை வேடிக்கை பாரத்துக் கொண்டிருப்பான். காரசாரமான உரையாடலை அவன் கேட்டால் பின் விபரீதங்கள் வரும். பின்னொரு நாள் நந்தினியிடம் மனதைத் திறந்து கேள்விகள் கேட்க மாட்டான். எனினும் அவையெல்லாம் அவன் பிஞ்சு மனதில் ஆழமாய்ப் பதியும்.

நந்தினி அவனைத் துரத்திவிட மாட்டாள் என்று ரவிதாசனுக்கு நன்கு தெரியும். எவ்வளவு விஷயங்களில், எத்தனை எத்தனை சதிவேலைகளில் இருவரும் கூட்டுக் களவாணிகளைப்போல் செயல்பட்டிருந்தார்கள்! ஆனால், முன்னெச்சரிக்கை செய்து கொண்டு தான் அவன் வந்தான். அவள் ஆத்திரமாக ஏதாவது பேசினாலும், எடுத்தெறிந்து பேசினாலும், பதில் சொல்லாமலிருப்பது நல்லது. அப்படியே பதில் சொன்னாலும், குரலை உயர்த்தக் கூடாது என்ற முடிவில் இருந்தான்.

மலைக் குகைக்கு வரும் வழியெல்லாம் காட்டில் நடந்த பழைய சம்பாஷணையைப் பற்றி ரவிதாசன் நினைத்தபடி பயணித்தான். இரண்டு ஆண்டுகளுக்கு முன் கலவரம் மூண்டது. சகோதர சகோதரிக்கு நடுவே. நந்தினியை வாய்ச் சொல்லெனும் வாளால் தாக்க எண்ணினார்கள் எல்லாரும். அதில் வெற்றியும் பெற்றனர். நந்தினி கூட்டத்திலிருந்து வெளியேறிச் சென்றபோது, அவளைத் தடுத்து நிறுத்தவில்லை, ரவிதாசன். அதனால்தான் அவளுக்கு இன்னும் அவன் மேல் ஆத்திரம் தீரவில்லை என்று நன்கு அறிவான்.

நந்தினி சென்ற பிறகு, "ரவிதாசரே! உம்முடைய தாட்சண்யத்துக்காகப் பார்த்தேன். இல்லாவிட்டால் அங்கேயே அவளை என் கத்திக்கு இரையாக்கியிருப்பேன்!" என்றான் அவனது சகோதரன் [illegible] புஜங்கன்.

மடையன்! அவனுக்கு என்ன தெரியும், நந்தினியின் சேவையைப் பற்றி? அவள் கொட்டிக் கொட்டிக் கொடுத்த தங்கத்தில்தான் இந்தப் போராட்டம் வலுவடைந்தது. ரவிதாசனின் முகம் சுருங்கிப் புருவங்கள் நெரிந்தன. அதைக் கண்ட புஜங்கன் வாயடைத்துப் போனான். பேருக்குத்தான் அவன் அரசன். குழுவின் தலைவன் சந்தேகமில்லாமல் ரவிதாசன்தான்.

நந்தினியைச் சென்ற இரண்டு ஆண்டுகளாக உன்னிப்பாகக் கண்காணித்துக் கொண்டிருந்தான் ரவிதாசன். அவளும் நாட்டு மக்களின் முன் வராமல் இத்தனை காலமும் மறைந்து திரிந்து கொண்டிருந்தாள். இப்படியே காலம் செல்ல, தஞ்சையிலிருந்து ஓர் ஒற்றன் அதிர்ச்சிச் செய்தி கொண்டு வந்தான்.

தஞ்சையில் பாண்டியர் கூட்டத்தின் சார்பாக ஒற்றர் ஓரிருவர் மட்டும் அவ்வப்போது தூரத்தில் நின்று நாட்டு நடப்புகளைக் கவனித்து வந்து காட்டுக்குள்ளே சென்று சொல்லுவர்கள். மிகவும் நம்பிக்கையானவனையும், வெளியுலகின் மேல் ஆர்வம் கொள்ளாதவனுமாய்த்தான் நகருக்குள் அனுப்புவான் ரவிதாசன். சென்றவன் நகரத்தின் நாகரிகத்தைக் கண்டு மயங்கி அதற்கு ஆசைப்பட்டுவிட்டால் பின் கஷ்டம்.

தஞ்சையிலிருந்து வந்த ஒற்றன் பைத்தியம் பிடித்து உளறுகிறான் என்று தான் முதலில் நினைத்தான் ரவிதாசன். நந்தினி தஞ்சைக்கு வந்ததாகவும், பொன்னியின் செல்வருடன் பேசியதாகவும் அவன் கூறினான். ஆனால், சூழ்நிலைகளை அலசிப் பார்க்கும் போது, அதில் உண்மையிருப்பதாகவே தோன்றியது ரவிதாசனுக்கு.

'சோழர்களின் மீது இருந்த ஈர்ப்பினால் இப்படிச் செய்திருப்பாளோ? அவள் விஷயத்தில் நாம் ஏமாந்து போய் விட்டோமோ?' என்ற ஐயமும் அவனுக்கு உண்டாகி விட்டது. 'நந்தினிக்கு ஏற்ற காரியம் முடியாமல் மனத்தளர்ச்சி ஏற்பட்டு விட்டதோ? தன்னுடைய சபதத்தைக் கைவிடும்படியான சூழ்நிலை ஏற்பட்டு விட்டதோ?' என்று மனம் கலங்கினான்.

அப்படி நேருவதற்கு ஒரு நாளும் இடங்கொடுக்கக் கூடாது என்ற முடிவுக்கு வந்தபின், முதல் முறை ரவிதாசனே சேவூருக்குக் கிளம்பி வந்தான். சோழரின் குடும்பத்தினருக்கு விரோதமாக அவன் ஈடுபட்டிருக்கும் இரகசிய முயற்சியை பற்றி நந்தினிக்கு முழுமையாகத் தெரியும் என்பதைக் குறித்து நினைவு வந்து கொஞ்சம் அவனை வருத்தியது. நிச்சயம் சென்று உளவறிய வேண்டும்.

ஆனால், அங்கே சென்றால் ஏதாவது மூர்க்கத்தனமாகப் பேசி மறுபடியும் இவன் வராதபடி நந்தினி அனுப்பிவிடலாம். ஆனால், உண்மை தெரிந்தால்தான் ஒரு முடிவெடுக்கலாம். எல்லா வற்றிற்கும் முடிவு கட்டலாம் என்று கிளம்பி வந்தான்.

அவன் எதிர்பார்த்தபடியே நந்தினி மேலும் தொடர்ந்தாள். ஆனால், குரலை உயர்த்தி அவள் பேசவில்லை. "எப்படி இருக்கிறார் உங்கள் குழுவின் தலைவர்?" அவள் குறிப்பிட்டது



[illegible]ளை. ஒரே பிரசவத்தில் புஜங்கனும், நந்தினியும் ஊமை [illegible]க்குப் பிறந்த இரட்டைக் குழந்தைகள்.

"[illegible]ர்களுடன் யுத்தத்துக்குப் போக வேண்டுமென்று அவர் [illegible]தான் துடியாய்த் துடிக்கின்றது!" என்றான் ரவிதாசன்.

"[illegible] குறுக்கே விழுந்து மறிக்கிறார்கள்?"

"[illegible] பலம் இல்லையே!"

"[illegible] இருந்தாலும் வெட்டி முறித்து விடுவானாக்கும்!" என்று [illegible]செய்தாள் நந்தினி.

"[illegible]கள் நடவடிக்கை எதுவுமே எனக்குப் பிடிக்கவில்லை!" [illegible] நந்தினியைப் பார்த்து வருத்தப்பட்டான் ரவிதாசன்.

"ஏன் அப்படி? புதிய தலைவரின் நடவடிக்கை மட்டும் [illegible]றதோ?" என்றாள்.

"[illegible] உங்கள் சகோதரர். அவர் மீது ஏன் பாய்கிறீர்கள்?"

இல்லாத அரியணைக்கு இப்படிப் போட்டி ஆரம்பமாகி [illegible]தே என்று அவனுக்கு வருத்தம். ஒருவேளை வாரிசுகளில் [illegible]றும் போர்க்களத்தில் வீர சொர்க்கம் அடைந்தால் பாண்டிய [illegible] குலம் வாரிசு இல்லாமல் போய்விடுமென்று பல சந்ததியரை [illegible] வைத்திருந்தான் ரவிதாசன். பெண்ணைப் போல் [illegible]கோணி நடந்தும் பேசியும் வந்த மதுராந்தகனை மாபெரும் [illegible] ஆக்கியது ரவிதாசனின் செயல்தான்.

[illegible]க்குள் நினைத்தான் : 'நாடே இல்லை. காட்டில் இருக்கும் [illegible] கோஷ்டிப் பூசல்.' பின்பு உருக்கமாகப் பேசினான்: "நமது [illegible] வேறொருவன் கையில். பாண்டிய ராஜ குலத்தினர் காட்டில் [illegible]யாய் அலைகிறார்கள். தெய்வம் எப்போது கண் திறந்து [illegible]மோ தெரியவில்லை. இந்தக் கலியுகத்தில் தெய்வத்துக்கே [illegible] இல்லாமல் போய் விட்டது போலக் கூடத் தோன்றுகிறது. [illegible]விட்டால் இந்த மாதிரி அக்கிரமங்கள் எல்லாம் உலகத்தில் [illegible] என நான் வருத்தப்படுகிறேன். ஆனால், நீரெல்லாம் [illegible] பற்றிக் கவலைப்படுவதாய்த் தெரியவில்லையே" [illegible].

அந்த வார்த்தைகளில் நந்தினியின் வெறி அடங்கியது. அவன் [illegible]களில் இருந்த உண்மையை ஆராய்ந்த நந்தினி, அமைதி [illegible].

"யாருக்காகக் காட்டில் ரவிதாசன் வாழ்கிறான்? உமது [illegible]க்குத் தானே என்று நீங்கள் யாரேனும் ஒரு நொடியாவது [illegible]துண்டா?" என்று கேட்காமல் கேட்டான். பல்லைக்

கடித்து மனத்தை திடப்படுத்திக் கொண்டு, "உள்ளே வாரும்" என்றாள்.

அவனும் அவன் பங்குக்கு "பாண்டிமாதேவி, மனத்தை நிதானப் படுத்திக் கொள்ளுங்கள். உங்களுக்கோ சக்கரவர்த்திக்கோ ஒரு தீங்கும் எண்ணி நான் இங்கு வரவில்லை" என்று உறுதி அளித்தான்.

நந்தினியும், "சக்கரவர்த்தியை இந்தப் பாவியிடந்தான் விதி ஒப்புவித்திருக்கிறது. நான்தான் என் கண்மணியைப் போல அவரைக் காக்க வேண்டும். என்னால் யாரையும் நம்ப முடிய வில்லை" என்றாள்.

"உத்தரவின்றி வந்ததற்கு நானல்லவா தங்களிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்" என்றான் ரவிதாசன். பரஸ்பர மன்னிப்புக் கோரிக்கைகளில் தற்காலிகமாக அமைதி ஏற்பட்டது.

நந்தினிக்கு மனதின் ஓரத்தில் ரவிதாசன் மீது ஓர் அனுதாபமும் அன்பும் இருக்கத்தான் செய்தது. இந்தப் போராட்டம் ஜெயித்தால் வாரிசுகளில் ஒருவர் மதுரை அரியணை ஏறுவார். வரப்போகும் பலனுக்காக அவர்கள் போராடிக் கொண்டிருந்தார்கள். ஆனால், ரவிதாசன் பாண்டிய விடுதலைக்குத் தன்னலமற்றுச் சேவை செய்து கொண்டிருந்தான்.

பேசிக் கொண்டிருக்கும்போதே சுற்று முற்றும் ரவிதாசன் பார்த்தான். ரவிதாசனுடைய கண்கள் மற்றது எதையும் பொருட் படுத்தாமல் மனித சஞ்சாரம் இருக்கும் அறிகுறிகள் இருக்கு மிடத்தைத் தேடின. அப்போது அவனுடைய பார்வை அம்மண்ட பத்தின் இன்னொரு பக்கத்தில் ஒளிந்திருந்த சிறுவனின் மேல் விழுந்தது. ரவிதாசனை உற்றுப் பார்த்துகொண்டிருந்த நந்தினியும் முகம் திருப்பி ஒரு கல் தூணின் இடுக்கில் நின்று, வந்தவனை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த சிறுவனைப் பார்த்தாள்.

அவள் 'போ' என்று சொன்னவுடன், ஏன், என்ன என்றுகூடக் கேட்காமல் சென்று விட்டான் சிறுவன். சென்றவன் தூரத்தி லிருந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். வந்தவன் தன்னையே உற்றுப் பார்த்தான் என்று அறிந்த சிறுவனின் முகம் வெட்கம் கொண்டது.

அந்தக் காட்சியைக் கண்டவுடன் ஒரு விஷயம் நினைவுக்கு வந்த நந்தினி, கதி கலங்கினாள். அவசரத்தில் அவள் அந்தச் சிறுவனிடம் ஒன்றும் அறிவுறுத்தவில்லையே. அப்படி வந்த வனுடன் பேச நேர்ந்தால் அவன்முன் நடந்து கொள்ள வேண்டிய விதத்தையும் சொல்லவில்லை. "அவன் பேசுவதை மட்டும்



கேட்டுக் கொள். நீயாக ஒரு விஷயமும் அவனிடம் சொல்லாதே" என்றும் சொல்லியிருக்க வேண்டும். சொல்லவில்லையே என வருத்தப்பட்டாள்.

"நான் மகாராஜாவைப் பார்க்க வேண்டும்" என்றான் ரவிதாசன்.

நந்தினிக்குப் பரபரப்பு ஏற்பட்டது. ஆனால், அதை அடக்கிக் கொண்டு, அதைப் பற்றிக் கவலைபடாதவள் போல, "அவர் உன்னைப் பார்க்க விரும்பினால் பார்" என்றாள்

ரவிதாசன் நாலே எட்டில் கல் தூணின் இடுக்கில் ஸ்தம்பித்து நின்ற சிறுவனிடம் சென்றான். எதிரே நின்றது பன்னிரண்டு வயதுக்கு இளம் பிள்ளை. எனினும் அவன் முன் தண்ட னிட்டான். குரலை அடக்கியே பேசினான்.

"அரசர்க்கரசே!" என்றான்

தனக்கு அடிபணிந்து நடப்பவன் இவன் என்று தெரிந்தாலும் ரவிதாசனைக் கண்டு சிறுவனுக்குச் சற்றுப் பயம். காட்டிலிருந்து வந்து இரண்டு ஆண்டுகளாயின. அதற்குப் பிறகு அம்மாவைத் தவிர, அவன் வேறு யாரையும் பார்த்ததில்லை.

இத்தனை நேரமும் மௌனமாய் இருந்தவன், "ஐயா, நீர் யார்?" என்றான். எப்போதுமிருக்கும் ரவிதாசனின் கடூர முகத்தில் சற்று நேரம் விசித்திரமான பாவம் காணப்பட்டது.

"ஐயனே! நான் உமது அடிமை!" என்றான் ரவிதாசன். மேலும், "பாண்டிய [illegible]வை பகற்கனவாய்ப் போய்விடுமா நம் போராட்டம் என்று நினைப்பதுண்டு. ஆனால், உமது முகத்தைப் பார்த்தால், எனக்குப் புதுத் தெம்பு வந்துவிட்டது!" என்று சிறுவனின் கைகளை அன்போடு பற்றியவாறு ரவிதாசன் கூறினான்.

இவன் ஒருவனை வைத்துச் சோழர்களை வெற்றி பெற்றுவிட வேண்டும் என்று எண்ணி இவனைக் கண்ணின் இமை போலப் பாதுகாத்தனர் பாண்டியர் ஒரு காலத்தில். ஆனால், இன்று நிலைமையே வேறு.

சோழரின் பட்டத்து இளவரசன் ஆதித்யனின் மரணத்துடன் பாண்டியர் போராட்டம் அநேகமாக நிர்மூலமாகி விட்டது. ஆனால், அதில் எஞ்சிய ஒரே ஒரு வெற்றி பாண்டிய சிம்மாசனத் துக்குப் பல வாரிசுகள் தோன்றியதுதான். இந்த ஒரு சிறுவனை மட்டும் பாதுகாத்துப் போராட்டத்தை நடத்தி வந்த ரவி தாசனிடம் இன்று ஐந்து வாரிசுகள்.

ஆனால், அதிலும் ஒரு சங்கடம். ஒவ்வொரு குழுவும் மற்றொரு குழுவுக்குப் பாடம் கற்பிக்க எண்ணினார்கள். முதல் எதிரி

சோழன் என்று மறந்து தங்கள் சகோதர சகோதரிகளை அந்த அந்தஸ்துக்கு உயர்த்தினர். ஒரு கூட்டம் பிரிவினை செய்து கொண் டாலே இந்தத் தொல்லைதான். முதலாவது எதிரி எப்போதும் நம் கூட்டாளியாகத்தான் இருப்பான். மற்றவர் தனக்கு எதிராக என்ன செய்கிறார் என்ற சந்தேகம் ஒவ்வொருவர் பிராணனையும் வாங்கிவிடும்.

சிறுவனின் கரத்தை எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டு, "என் அரசே! இந்தப் பாண்டிய சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் நீர் சக்கரவர்த்தியாக வீற்றிருக்கும் நாள் சீக்கிரத்திலேயே வரும். உம் தலைமையில் நாங்கள் எல்லாரும் பகைவர்களின் வயிற்றைக் கிழித்துக் குடலை எடுத்து மாலையாய்ப் போட்டுக் கொள்ளும் நாள் வெகு தூரம் இல்லை" என்றான் ரவிதாசன்.

பின் மூவருக்கும் உணவு சமைத்தாள் நந்தினி. அதை உண்ட பின் உறங்கச் சென்றார்கள். குகைக்குள் சிறுவனும் நந்தினியும் படுத்திருக்க, வெளியே நட்சத்திரங்களை ரசித்தபடி படுத்தான் ரவிதாசன்.

அரைகுறைத் தூக்கத்தில் கனவெல்லாம் கொடூரமாயிருந்தது நந்தினிக்கு. இரவு மிகவும் கஷ்டங்களை அனுபவித்தாள். தூக்கம் வராமல் புரண்டு புரண்டு படுத்ததில் பழைய ஞாபகங்களெல்லாம் வெள்ளம் போல வந்து அவளை மூழ்கடித்தன. எப்படியோ தூங்கிவிட்டாள்.

காலை பொழுது விடிந்தது. உதய நேரத்தின் அறிகுறியாகக் கல் மண்டபம் வழியாக அந்தக் குகைக்குள் சூரிய ஒளி மஞ்சள் நிற அம்புகளெனப் புகுந்தது. அது அவள் முகத்தில் பட்டவுடன் சட் டென எழுந்தாள் நந்தினி. அவள் மேல் ஒளிபட்டாலும், குகையின் இதர பாகங்கள் இன்னும் இருளில்தான் மூழ்கியிருந்தன.

நந்தினியின் விழிகள் இருட்டினுள் ஊடுருவித் துளைத்தன. உடனே திடுக்கிட்டாள். ஆம். உண்மைதான். சிறுவன் குகைக்குள் இல்லை. அவளருகில் தரையில் படுத்திருந்த இளவரசனைக் காணவில்லை.

உடனே பகீர் என்றது நந்தினிக்கு. அவளுக்கு இன்னும் புரிய வில்லை. இது இரவு வந்தது போல இன்னும் ஒரு கொடூரக் கனவா என்று கூட ஐயம் வந்தது. சிறுவனை அபகரித்துச் சென்று விட்டானோ ரவிதாசன் என்று மனம் பதறியது. பக்கத்திலிருந்த மலைகளெல்லாம் பெயர்ந்து தலையில் விழுந்து விட்டன போலிருந்தது.



உற்றவனென்று மதித்து மற்றவரையெல்லாம் வெறுத்து இருந்தாளே. அவன் அவளை விட்டுப் போய்விட்டானா?

❖ ❖ ❖

அத்தியாயம் ஐம்பத்தி எட்டு

## இளவரசன் எங்கே?

**அ**வள் அருகில் சிறுவனைக் காணாதது நந்தினிக்கு வியப்பை உண்டாக்கியிருந்தது. அத்துடன் அச்சமும் இருந்தது. குகையைச் [illegible] நிசமும் அவளுக்கு ஆறுதல் தரும் ஆழ்ந்த அமைதி இன்று ஏனோ அவளைத் திடுக்கிடச் செய்தது.

'இந்த உலகில் எனக்கு ஒரே துணையாக இருந்த சிறுவனும் போய் விட்டால், இனிமேல் என் கதி என்ன ஆகப் போகிறது?' என்று எண்ணியபோது அவள் கண்களில் கண்ணீர் துளிர்த்தது.

'அவனுக்கு என்ன நேர்ந்திருக்கும்? இவ்வளவு நாள் [illegible]யின் கண்களில் பட்டுவிடக் கூடாது என்று மட்டும் இந்தக் குகையில் இவ்வளவு இடர்களுக்கு இடையில் இருவரும் வாழ வில்லை. அந்தச் சண்டாளன் ரவிதாசனின் கண்களில் படக் கூடாது என்று கூடத்தான்.'

தனக்கென ஏற்றுக் கொண்ட கடமையில் தவறிவிட்டோமோ என்று நினைத்தாள். மலை அடிவாரத்துக்கு ஓடவேண்டும் எனத் தோன்றியது.

'எல்லை கடந்த கஷ்டங்களை அனுபவித்தாயிற்று என்று நினைத்தோம். அந்த இடரின் தொடர் இன்னும் முடியவில்லை போலும்' என்று நினைத்த நந்தினியின் மனம் வலித்தது.

தட்டுத் தடுமாறி எழுந்தாள். இப்படி நேரும்படி அலட்சியமாக விட்டு விட்டோமே என்று பதறினாள். அலறி அடித்துகொண்டு குகை வாசலுக்கு ஓடோடி வந்தாள்.

இனித் தாமதிக்க நேரமில்லை. ரவிதாசனைத் துரத்திச் சென்றால் ஒருவேளை அவர்களைப் பிடித்துவிடலாம், சிறுவனை மீட்டு விடலாம் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால், நினைப்பது போல அது சுலபமில்லை எனவும் அவளுக்குத் தெரியும். தனி ஒருத்தி நாலா திசையிலும் தேட முடியாதல்லவா? அதுவும்

இதற்குள் வெகு தூரத்தில் அச்சிறுவனைக் கடத்திச் சென்றிருப் பான் ரவிதாசன்.

மேலும் நிச்சயமாக ரவிதாசன் தனியாக வந்திருக்க மாட்டான். அவனது கையாட்கள் மலையடிவாரத்தில் குதிரைகளுடன் காத் திருந்தார்களோ என்னவோ? சிரித்துப் பேசியே கழுத்தை அறுத்து விட்டானே ரவிதாசன். அவனை இங்கு தங்க அனுமதித்தது விபரீத விளைவுகளை ஏற்படுத்தியிருந்தது என்று உணர்ந்தாள்.

உதடுகள் நடுங்கின. பல்லால் உதடுகளைக் கடித்தாள். இப்படி வஞ்சித்து விட்டானே. அந்தச் சிறுவன் மீது அன்போ இரக்கமோ ரவிதாசனுக்கு இருக்காது. அவன் மனிதனல்ல. ஒரு போர்வாள் எப்படி ஆசாபாசம் காட்டாமல் வெட்டுகிறது? அதற்கு இதய மென்று தனியாய் ஒன்று இருக்கிறதா? அது போலத்தான் ரவி தாசனும். வெட்டுவது வாளின் இயல்பு. நயவஞ்சகம் ரவிதாசனின் குணம்.

'மலை உச்சியில் இருந்த பாறையின் மீதேறிப் பார்க்கலாம், புகை போலத் தெரியும் குதிரையின் குளம்படிகள் எழுப்பும் புழுதி மண்டலம் தெரிகிறதாவென்று. தெரியாவிட்டால் அப்படியே குதித்து உயிரை விடலாம்' என்று கூட நினைப்பு வந்தது. வெளியே ஓடி வந்த நந்தினி அந்தக் காட்சியைக் கண்டாள். சட்டெனத் தன்னையறியாமல் நின்றன கால்கள்.

அங்கு அவள் கண்ட காட்சியைக் கண்டு அழுவதா சிரிப்பதா என்றே தெரியவில்லை. கண்ணில் துளிர்த்த ஓரிரு துளிக் கண்ணீரைத் தவிர மற்ற உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டாள். இந்த நிலையில் அவர்கள் இருவரும் இருப்பார்கள் என்று ஒரு கணமும் அவள் நினைக்கவில்லை. பதைபதைக்க வைத்துவிட்டனர் இருவரும். ரத்தம் கொதித்துப்போயிருந்தது. ஆனால், இப்போது அந்தக் காட்சி அவள் மனதை நெகிழ வைத்துவிட்டது.

நந்தினி வெளியே ஓடோடி வந்தபோது அவள் கண்ட காட்சி விசித்திரமானது. அங்கு ஒரு பாறையின் மீது ரவிதாசனும், சிறுவனும் அவளுக்கு முதுகைக் காட்டியபடி அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். சற்று நேரம் அந்தக் காட்சியை உற்று நோக்கிக் கொண்டிருந்தாள் நந்தினி.

ரவிதாசன் எதைப் பற்றியோ சிறுவனுக்கு விளக்கிக் கொண் டிருந்தான். அதை ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்தான் சிறுவன். சிறுவனும் தீவிரவாதியும் ஒருவருடன் ஒருவர் ஒரே இரவில் பரிச்சயமானார்கள் போலும்.



நந்தினி சமாளித்துக்கொண்டு படபடப்பை அடக்கிக் கொண் டாள். 'பாண்டியர் போராட்டத்துக்கு ஆதரவாய் இருந்தவன் ரவிதாசன். அவன் இந்தத் தவறைச் செய்திருக்க மாட்டான். அரைகுறைத் தூக்கத்திலிருந்து எழுந்த களைப்பில் நம் மனம் நமக்கு எதையோ பிதற்றி ஏமாற்றி விட்டது' என்று தனக்கே சொல்லிக்கொண்டாள்.

'எதிரிகளுக்குக் கொடிய விஷ நாகத்தைவிடப் பன்மடங்கு கொடியவன் இவன். தன்குலநாசினியான சோழ குலத்தைப் பூண்டோடு ஒழித்துவிடச் சங்கற்பம் செய்திருந்தவன். கொலைகள் பல செய்தவன். சற்றும் ஈவு இரக்கமற்றவன். ஆயினும், இந்தச் சிறுவனுடன் எப்படி அன்பாய்ப் பேசுகிறான்!' என்று வியந்தாள் நந்தினி.

ரவிதாசனைப் போல ஒட்டுதலுடன் பழகிக் கொள்ள ஆளைத் தேட வேண்டும். சிறுவனுடன் சிறுவனாக, எதிரியுடன் எதிரியாக மாறிக் கொள்வான். அதைப் பல முறை, மக்கள் தொடர்பில் சேர்ந்து, பழகுவதற்குப் பெயர் போன நந்தினியே கண்டு அதிசயித்திருந்தாள்.

வயது வித்தியாசமின்றி இருவரிடையே ஒரு பாலம் உருவானதை நந்தினி உணர்ந்தாள். ரவிதாசனுக்கும் அந்தச் சிறுவனுக் கும் நடந்த சம்பாஷணை அரைகுறையாக நந்தினியின் செவியில் விழுந்தது. தூரத்தில் பறந்து கொண்டிருந்த ஒரு ராஜாளியைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர், இருவரும்.

நந்தினிக்குத் தெரியும். அந்த ராஜாளிகளின் சாகசங்களைத் தினந்தோறும் பார்க்கும் சிறுவன் வியப்பொலிகள் செய்து, கைகொட்டி ஆர்ப்பரித்துத் தன் ஆச்சரியத்தை வெளியிடுவான். அந்த ராஜாளிக் குடும்பத்தின் மீது அவனுக்கு அபாரப் பற்றுதல். ஆனால், ஒரு நாள் கூட அவனருகில் அமர்ந்து இந்தக் காட்சியை நந்தினி ஆர்வத்துடன் பார்த்ததில்லை.

சென்ற மாதம் சிறுவன் வந்து, ''அம்மா! அந்த ராஜாளி எதிர்க் குன்றில் கூடு கட்டியுள்ளது!'' என்றவுடன், நந்தினி வெளியே வந்து பார்த்தாள். எதிரே இருந்த மலை உச்சிக்குச் சற்றுக் கீழே ஒரு பாறையின் இடுக்கில் அது கூடு அமைத்திருந்தது.

ராஜாளியைக் கண்டபின் பறவைகளும், மிருகங்களும், புழுவும், பூச்சியும் பயம் கொள்ளும். ஆனால், அது தன் குஞ்சுகளைப் பெற்றெடுத்துப் பராமரிக்கும்போது மற்றவருக்குப் பயந்து மலை உச்சியிலோ, உயரமான மரத்திலோ கூடு கட்டும். அது தாய்மை தோன்றி வரும் அச்ச உணர்வு. அதுதான் இந்தச் சிறுவனிடம்

நந்தினிக்கும் வந்திருந்தது. ராஜாளியைக் கண்டவுடன் அவளுடைய கடமைகளும் நினைவுக்கு வந்தன. ஒன்றும் பேசாமல் குகைக்குள் சென்று விட்டாள். அன்று அந்தச் சிறுவனின் முகம் வாடிச் சுருங்கியதைக் கூட அவள் கவனிக்கவில்லை.

இப்போது நந்தினியும் அந்தப் பறவையைப் பார்த்தாள். அந்த ராஜாளிப் பறவை பார்வையாளர்கள் இருவர் இருந்ததைக் கவனித்திருக்க வேண்டும். அல்லது கூட்டில் இருக்கும் அதன் குஞ்சுகளுக்காகப் பறந்து காட்டிக் கொண்டிருக்க வேண்டும்; அற்புதமான ஒரு கலைஞனைப் போல நடனத்தை அரங்கேற்றிக் கொண்டிருந்தது.

ராஜாளி சிறகுகளைப் படபடவென்று அடித்துக் கொண்டு வானில் ஏறி அங்கிருந்து வட்டம் வட்டமாகச் சிறகடிக்காமலேயே இறங்கிய காட்சியைக் கண் கொட்டாமல் இருவரும் பார்த்துக் கொண்டிருந்தனர்.

திடீரெனத் தரையில் எங்கோ முயலோ சின்னப் பறவையையோ அதன் கண்ணில் தட்டுப்பட்டிருக்க வேண்டும். மின்னல் போலத் தரையை நோக்கிப் பாய்ந்து வந்து அப்படியே அதைக் கொத்திக் கொண்டு போனது. கூட்டில் பசியுடன் இருக்கும் குஞ்சுகளைக் காக்கும் வேலை இப்போது அதற்கு முக்கியமாக இருந்திருக்க வேண்டும். அது தன் இரையைப் பிடித்தவுடன் சிறுவன் கை கொட்டி ஆரவாரம் செய்தான். அவனுடன் ரவிதாசனும் சேர்ந்து கைதட்டினான்- சின்னஞ்சிறு குழந்தைபோல.

பின்பு அந்த ராஜாளி மீண்டும் வானத்தில் சாகசங்கள் புரிய வருவதற்கு முன் இருவரும் மீண்டும் பேச்சைத் தொடர்ந்தனர். இப்போது அவர்கள் பேசுவது முக்கியத்துவம் வாய்ந்தது என்று யூகித்த நந்தினி மறைவிலிருந்து என்ன நடக்கிறது என்று எட்டிப் பார்த்தாள்; ஒட்டுக் கேட்டாள்! இருவரும் ஒத்த வயதுடைய ஆத்ம சிநேகிதர்களைப் போல அருகருகே அமர்ந்தபடி பேசிக் கொண்டிருந்தனர்.

ரவிதாசனின் வார்த்தைகளில் என்ன மாய மந்திர சக்திதான் இருந்ததோ, தெரியாது. அவனது பதில்கள் சிறுவனுக்கு வியப்பையும் குதூகலத்தையும், அளித்தன என்பது அவன் அடுத்தடுத்துக் கேட்டுக்கொண்டிருந்த விநோதமான கேள்விகளில் தெரிய வந்தது.

ரவிதாசனைப் பார்த்து அவன், "நிஜந்தானா? உண்மையா?" என்று அடிக்கடி கேட்டு கொண்டிருந்தான். பொதுப்படையாகத் தான் பேசுகிறார்கள் என்று அவர்கள் சம்பாஷணைகளிலிருந்து தெரிந்து அமைதி கொண்டாள் நந்தினி. சிறுவன் சரமாரியாகக்



கேள்விகளைப் பொழிந்தான் போலும். அதற்குப் பதில் மட்டும் தான் ரவிதாசன் கொடுத்திருக்க வேண்டும். தன் பிரச்சாரத்தை முன் வைத்திருக்க மாட்டான்.

நந்தினியின் மனதில் சலனம். அந்த இருவருக்கிடையே ஏற்பட்டுக் கொண்டிருந்த உறவு அவளுடைய மனத்தில் பெருங் குழப்பத்தை உண்டாக்கிற்று. 'தன் கட்டுப்பாட்டிலிருந்து இந்தச் சிறுவனை ரவிதாசன் அபகரிக்க முற்படுவானோ?' என்று குழம்பினாள்.

அந்தச் சிறுவன் இவ்வளவு பற்றுதலுடன் நேற்று வந்தவனிடம் பழகியது அதிசயம்தான். ஆனால், அதில் ஒரு நியாயம் இருந்தது. அவனும் பல நாள் தனியாக இருந்து விட்டான். இதுவரை இயற்கையை ரசிப்பதிலும், குகையின் சுவர்களிலே தீட்டப்பட்டிருந்த அருமையான சித்திரக் காட்சிகளைப் பார்ப்பதிலேயேயும் காலம் முழுவதும் சென்றது. தனிமை அவனை வாட்டியது. அறிவு பெற வேண்டிய வயதில் அவளிடம் என்னதான் கற்றுக் கொள்ள முடியும். அந்தத் தாகத்தைத் தணிக்க இப்போது ரவிதாசன் கிடைத்திருந்தான். அதை உபயோகித்துக் கொள்கிறான்.

நந்தினியின் அன்பில் அவன் மூழ்கிக் குளித்தான் என்று சொல்ல முடியாது. அம்மா கவலைகளால் கட்டுண்டு இராத நேரங்களில் அவளுடன் சம்பாஷிப்பதிலே கழிந்த பொழுது அவனுக்கு உற்சாகத்தை அளித்தது. ஆனால், எப்போது நந்தினி நன்றாய்ப் பேசுவாள், எப்போது மௌனமாவாள், எப்போது சீறுவாள் என்று சொல்ல இயலாத பிஞ்சு உள்ளம் தன்னைச் சுற்றியும் ஒரு கற்பனை உலகை அமைத்தது. வெளி உலகைப் பற்றிக் கற்பனைக் கண்ணால் கண்டு, மானஸ உலகில் பலரோடு பேசிப் பழகி, மனக் கண்ணில் தென்படும் போர்க் களங்களில் சோழர்களோடு சண்டை போட்டு... இப்படியெல்லாம் பகற்கனவு காண்பதில் காலம் போக்கி வந்தான்.

உடனே அழைத்து ரவிதாசனைப் பற்றிச் சிறுவனை எச்சரிக்க வேண்டும் என்று கூட நந்தினி நினைத்தாள், வேண்டாம். இந்த வயதில் எச்சரிக்கை ஆர்வத்தைக் கூட்டுமே தவிரக் குறைக்காது. ஆனால், இருவருக்கும் தனது கண்கள் அவர்களை எப்போதும் கவனிக்கின்றன என்று தெரியவேண்டும். அப்போதுதான் இருவரும் எச்சரிக்கையுடன் இருப்பார்கள். தன் தொண்டையைக் கனைத்தாள்.

இவள் வேண்டுமென்றே செய்த சப்தத்தைக் கேட்டு ஏக காலத்தில் இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். அவர்கள் கண்களில்

பயமோ கோபமோ இல்லை. நந்தினிக்கு முதன் முதலில் அந்த சிறுவனின் ஆவல் ததும்பிய கண்கள்தான் தெரிந்தன. தினந்தோறும் வாடியிருந்த அவன் முகத்தில் ஒருகணம் புது மலர்ச்சி காணப் பட்டது. ஆனால், ஒரு கண நேரந்தான்! அம்மாவைப் பார்த்தபின் அடுத்த கணத்தில் பேசியதைப் பாதியில் விட்டு உடனே எழுந்து நின்றான்.

அம்மா தன்னை உள்ளே போகச் சொல்லுவாளோ என்று பரிதாபமாய்ப் பார்த்தான். ஆனால், நந்தினி "இப்படி சரமாரியாகக் கேள்விக் கேட்டு அவரைத் துளைத்தால், அவர் எப்படி மறுமொழி சொல்லுவார்? கொஞ்சம் நேரம் கழித்துப் பேசலாம். உள்ளே சென்று மற்ற வேலைகளைக் கவனி" என்றாள். சிறுவனின் முகம் வாட்டமுற்றது. ரவிதாசனின் பேச்சு அவனது ஆவலைக் கிளறி விட்டிருக்க வேண்டும். மறு மொழி சொல்லாமல் உள்ளே சென்றான். ஆனால், அவன் நடையில் தெரிந்த தயக்கத்தை இருவரும் கவனிக்கத் தவறவில்லை.

தனியாய் அமர்ந்திருந்த ரவிதாசனிடம் "என்ன ரவிதாசரே, இரவு தூங்கவேயில்லையா?" என்று கேட்டாள் நந்தினி.

"சுதந்திர தாகம் என்றைக்கு வந்ததோ, அன்றைக்கே என்னை விட்டுத் தூக்கமும் விடைபெற்றுக் கொண்டு போய்விட்டது. உதிரம் கொண்டு தணிக்க வேண்டிய தாகமது!" என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டான். பின் விரக்தியாய், "வயதானதும் கத்தி பிடிக்கும் சக்தியைக் கை இழந்து விடுகிறது. வருவது வரட்டும் என்று மனமும் இருப்பதில் இனிமை காண்கிறது. அந்த மூப்பு வருமுன் பாண்டிய நாட்டுக்கு ஒரு வெற்றியைத் தேடித் தந்துவிட வேண்டும்!" என்றான். நந்தினி மௌனமானாள்.

ரவிதாசன் சிரித்தபடி, "நம் நாட்டு விவரங்களை ஆதியோடந்த மாகச் சொல் என்று கேட்கிறார் அரசர்" என்று சொன்னான் ரவிதாசன்.

அதைப் பற்றிப் பேச நந்தினிக்குப் பிடிக்க வில்லை. "ரவிதாசரே சற்றுப் பொறுங்கள். நான் குளித்துவிட்டு உண்ண ஏதாவது ஏற்பாடு செய்கிறேன்" என்று அவ்விடத்திலிருந்து அகன்று விட்டாள்.

எளிமையாய் அவள் செய்த உணவை அருந்தியபடி ரவி தாசனும் சிறுவனும் பேசலானார்கள். "உடனடியாகச் சென்று சோழர்களுடன் யுத்தம் நடத்தினால்தான் என்ன?" என்றான் சிறுவன்.



அவனுடைய அவசரத்தைக் கண்டு , "நீர் போர்க் கலையில் முற்ற தேர்ச்சி அடைந்த பிறகு, நாம் சோழர் மீது படை தொடுக்கலாம்" என்று ஒரு முறுவலுடன் போரைத் தள்ளிப் போட்டான் ரவிதாசன்.

அவனுக்குத் தெரியும், இருக்கும் பலத்தை வைத்துப் போருக்குச் சென்றால் பாண்டிய சேனை அதோகதி அடைவது உறுதியென்று. ஆனால், போரை நினைத்தவுடன் ஒரு நடுக்கம் கொண்டான் தன்னையறியாமல். சேலூரில்தான் அலைமோதி அழிந்த நகரம் போலச் சிதறியது பாண்டியரின் படை. அவர்களுக்கு உதவ வந்த சிங்களவரின் நிலையும் அதுதான். அந்த ஓட்டத்தைக் கண்டபின் தான் மறுபடியும் பெருஞ்சேனை திரட்டிச் சோழர்களுடன் போராட வேண்டுமென்ற எண்ணங்களை மாற்றிக்கொண்டு ரவி தாசன், வேறு வழிகளை யோசிக்கத் தொடங்கினான். இப்போது இந்தச் சிறுவனிடம், "போர் நடந்தால் நாம் நிர்மூலமாகி விடுவோம்" என்று சொல்லவா முடியும்?

"அரசே! நாட்டின் எதிர்காலமும் சாம்ராஜ்யங்களின் எல்லை களும் வாள்களாலும் வேல்களாலும் நிர்ணயிக்கப்படுகின்றன என்பது பைத்தியக்காரத்தனம். அதை விடச் சிறந்த வழிகள் உண்டு. இனி ஒரு சந்தர்ப்பம் வராமலா போகும். வரும் போது பார்த்துக் கொள்ளலாம்" என்றான்.

அவன் சொன்னதை முழுமையாகச் சிறுவன் நம்பினான். நந்தினிக்கு அதில் ஏற்கெனவே நம்பிக்கை உண்டு. ஆள் பலம் குறைவானால் அதிக பலத்தின் முன் சரணடைய வேண்டும் என்பது நியதி. ஆனால், புத்திசாலி ஒருவனின் யோசனைக்கு முன் எவ்விதப் பலமும் நடுக்கம் கொள்ளும். லட்சோப லட்சம் வீரர்கள் கொண்ட சோழரின் படையை எதிர்க்க இவன் ஒருவனால் தான் முடியும். சோழவள நாட்டை இடுகாடாய் மாற்ற வல்லமை கொண்டது ரவிதாசனின் விடுதலை வேட்கையெனும் தீ என்று நந்தினிக்குப் புரியும்.

விடுதலைப் போருக்கு ஆட்கள் சேர்க்க ஏற்ற சூழ்நிலை தேவை. ஒரு மாவீரனின் பெயரைச் சொல்லி ஆள் சேர்க்கலாம். அந்தத் தலைவனுக்காக உயிர் துறக்கச் சித்தமாயிருக்கும் வீரர்கள் வரு வார்கள். வீரத் தமிழ்ப் பண்பின்படி 'போர்க்களத்தில் பகைவர் களுக்கு எதிரே நின்று போரிடும்போது அச்சம் கூடாது' என்று சொல்லி வீரர்களை உயிர் துறக்கத் தயார் செய்யவேண்டும். அப்படிப் பயப்பட்டு, புறமுதுகு காட்டுகிறவன் கோழை என்றும் சொன்னார்கள். அந்த நிலையில் ஓடிச் சென்ற வீர பாண்டியரின்

வீரத்தை முன் வைத்து எப்படிப் போராட முடியும் என்ற கேள்வி பாண்டியரின் போராட்டத்தைப் பின் தள்ளியது.

அதைவிட ஒரு பெரிய காரணம் பாண்டியர் போராட்டத்துக்கு இடரளித்தது. ஒரு போராட்டம் உயிர் வாழ இரண்டு அம்சங்கள் தேவை. அநியாயம் செய்யும் ஆட்சியாளன். அதைத் தட்டிக் கேட்கும் குடிமக்கள்.

சுந்தர சோழர் காலத்தில் அடிக்கடி சச்சரவு மூண்டு சில சமயம் குழப்பமும் விளைந்தது. இதனால் பாண்டியரின் விடுதலை வேட்கை வளர்ந்தது. ஆதித்ய கரிகாலனின் வெறியாட்டத்தில் புண்பட்டவர் ஏராளம். அனைவரும் உடல், பொருள், ஆவியென விடுதலைப் போராட்டத்துக்கு அர்ப்பணித்தனர். ஆனால், உத்தம சோழர் ஆட்சிக்கு வந்ததும் பாண்டியர் போராட்டத்துக்குப் பேரிடி. உத்தம சோழனுக்கு உலகத்தைக் கட்டி ஆள வேண்டு மென்ற ஆசையுண்டா என்பது சந்தேகம்தான். ஆனால், ஏற் கெனவே வென்ற நாடுகளையெல்லாம் அழித்து இடுகாடு போலப் புகையவிட வேண்டும் என்ற எண்ணமோ அந்த நாட்டு மக்களை அடிமைப்படுத்த வேண்டுமென்ற ஆர்வமோ நிச்சயம் கிடையாது.

இந்த மாறுதல் பாண்டியர் போராளிகளுக்கு விபரீதமான விளைவுகளை ஏற்படுத்தியிருந்தது. எதிரியின் நாட்டுக்கே நேரே சென்று பாடல் பெற்ற பாண்டியக் கோயில்களுக்கும் திருப்பணி செய்தார் உத்தம சோழர். மானியங்கள் கொடுத்தார்.

தடைப்பட்ட எல்லா விசேஷங்களும் மீண்டும் தொடங்கின. சோழ அரசர்கள் ரத்த வெறிபிடித்த அரக்கர் என்ற எண்ணம் மக்கள் மனதில் மாறிவிட்டது. பரந்த மனப்பாங்குள்ள சோழ மன்னர் களின் ஆட்சியில் பாண்டிய நாட்டில் குறை கூறும் அளவுக்கு அங்கு ஒரு கஷ்டமும் இல்லை. பசியில்லை, பிணியில்லை. அதனால் தங்கள் சுதந்திரம் பறிபோனதாகவே பாண்டிய நாட்டு மக்கள் நினைக்கவில்லை. இப்போது அமைதியுடன், செல்வமும் செழிப்பும் பாண்டிய நாடெங்கும் பரவின. பொது மக்களும் அந்த வளமையில் தேசிய நீரோட்டத்தில் மனமார ஒன்று கலந்தனர்.

இதையெல்லாம் ஒரு நொடியில் நினைத்துப் பார்த்த ரவிதாசன் வந்த வேலையை நினைவு கொண்டான். நந்தினியும் அந்தத் தேசிய நீரோட்டத்தில் கலக்க முற்பட்டு விட்டாளோ? ஈழத்திலிருந்துத் திரும்பி வந்து கோடிக்கரைக் காட்டிலிருந்த ரவிதாசனுக்குச் செய்தி வந்தது. நந்தினி தஞ்சை சென்று அருள்மொழியுடன் வெகு நேரம் அன்னியோன்னியமாகப் பேசியதாக ஒற்றன் வந்து சொன்னான்.



ரவிதாசன் நெடுமரமென நின்றான். சற்று நேரம் செயலற்றுப் போய்விட்டான்.

'தோளைப் பற்றிக் குலுக்கலாமா?' என்று கூட நினைத்தான் வில்லையைக் கொணர்ந்தவன்.

எனினும் முதலில் ரவிதாசன் நம்பவில்லை. சோழர்களின் மீது நந்தினிக்கு அளவற்ற கோபமிருந்தது தெரியும். தங்களையெல்லாம் விட ஏதோ ஒரு விஷயத்தில் அவர்களால் அவள் அதிக பாதிப்புக்கு உள்ளாகியிருந்தாள். அவள் தஞ்சைக்குச் சென்றிருக்க மாட்டாளே என்பது தான் ரவிதாசனின் மனதில் உதித்த முதல் எண்ணம்.

ஆனால், மெல்ல மேல்ல யோசித்தான். சூத்திரதாரிகள் திரைக்கு முன் எப்போதும் வருவதில்லை. ஆட்சிப் பொறுப்புக்கும் ஆசைப்படுவதில்லை. தங்கள் மதிநுட்பத்தால் மற்றவரை ஆட்டிப் படைக்கிறோம் என்ற பெருமிதமே அவர்களுக்குப் போதுமானது. பொம்மலாட்டம் போல் பின்னிருந்து இயக்குவதில் அவர்களுக்கு ஒரு தனி மகிழ்ச்சி. ஆனால், இப்போது ஒரு பொம்மைக்குத் தான் பிடி வைத்திருந்த கயிறு அறுபடுவது போல ஓர் எண்ணம் ஏற்பட்டது ரவிதாசனுக்கு.

'இடையூறில்லாமல் வளர்ந்து வந்த நமது திட்டங்கள் வீண் போகுமா? இல்லை. விடக்கூடாது. நந்தினியைச் சென்று பார்க்கவேண்டும்' என்ற முடிவுக்கு வந்தான்.

சிற்சில சந்தர்ப்பங்களில்தான் அவனே காட்டைவிட்டு வெளிவர வேண்டும். அந்த மாதிரியான சந்தர்ப்பம் இப்போது ரவிதாசனுக்கு ஏற்பட்டிருந்தது. காட்டை விட்டு நாட்டுக்கு வந்தான். தனக்கென உதவிக்கு ஊருக்குள் வைத்திருந்த ஆட்களிடம் குதிரை வாங்கினான். சேலூரை நோக்கி விரைந்தான். இது வரை வந்த விஷயத்தைப் பற்றிப் பேசவில்லை. திடீரெனக் கேட்கவேண்டும் என்று இருந்தவன் ''தஞ்சையில் ஏதோ விழாவாம். கேள்விப் பட்டீரா?'' என்று ஓரக் கண்ணால் நந்தினியைப் பார்த்தான் சொன்னான். இவ்விதம் அவன் சொல்லி வரும் போதே அவள் முகம் வெளிறியது.

''என்ன விழாவாம்?'' என்று தட்டுத் தடுமாறிக் கேட்டாள் நந்தினி.

''கோயில் கும்பாபிஷேகமாம். கோயில் யாருக்குத் தெரியுமா? உனது அன்னைக்கு.''

என்ன பேசுவது என்று தடுமாறினாள் நந்தினி. அதிசயத்துடன் ரவிதாசனைப் பார்த்த நந்தினி 'ஆகா! இவன் இலேசுப்பட்டவன்

இல்லை போலிருக்கிறது! பெரிய கைகாரனாயிருக்கிறானே. நாம் அங்கு சென்றதைச் சந்தேகமறத் தெரிந்து கொண்டுதான் வந்திருக்கிறான்' என நினைத்தாள்.

'இல்லை, இல்லை. நாம் இங்கு குடியேறிய நாள் முதலாய் நாம் இங்கு இருக்கிறோம் என்று தெரிந்தவன் ஒரு ஓரக் கண்ணால் நம்மை வேவு பார்த்துக்கொண்டு தான் இருக்கிறான் போலும்' என்று நினைத்தவள், 'அதனால் பாதகமில்லை, பேசிச் சமாளித்துக் கொள்ளலாம். ஆனால், ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்' என்ற முடிவுக்கு வந்தாள். ரவிதாசனின் ஊடுருவும் கண்கள் அவளை அந்த நிலையில் பார்த்துவிட்டால், தன் பயம் வெளிப்பட்டுவிடும். பயம் ஒரு போராளியின் பலவீனத்தை வெளிக்காட்டிவிடும்.

அந்த அமைதியில் ரவிதாசன் கேட்டான் "அங்கு கூட உம்மை யாரோ பார்த்தார்களாம்" என்றான். அவளை உற்றுப் பார்த்து, அவன் பார்வையைச் சந்திக்க இயலாமல் அவள் தலை குனிந்தாள். எச்சில் விழுங்கினாள்.

மெல்லிய புன்னகை ஒன்று ரவிதாசனின் இதழ்களில் தவழ்ந்தது. மின்னல் கீற்றென அவன் புன்னகையின் நிழலைப் பார்த்தவுடன் கலங்கிப் போனாள் நந்தினி.

❖ ❖ ❖

### அத்தியாயம் ஐம்பத்தொன்பது

## நந்தினி அகப்பட்டாள்

"உம்மைத் தஞ்சையில் யாரோ பார்த்தாராமே?" என்று ரவிதாசன் கூறியவுடன், நந்தினியின் புருவங்களுக்கு மேல் முத்துக்களாக வேர்வைத் துளிகள் பலவும் தானாகத் தோன்றின.

ரவிதாசன் வந்த நாள் முதலாக அவ்வப்போது அவனைச் சற்றுக் கவனமாக உற்றுப் பார்ப்பாள் நந்தினி- அவன் முகத்திலிருந்து ஏதேனும் துப்பு துலங்கலாமென்று. 'ரவிதாசன் தன் தஞ்சை விஜயத்தைப் பற்றிச் சந்தேகப்பட்டு வரவில்லையோ?' என்று முதலில் நினைத்தவள், பின்பு, 'ஒருவேளை அவனுக்கு ஏதேனும் உண்மையான சந்தேகம் இருக்குமோ? நிச்சயம் விஷயம் தெரிந்து தான் வந்திருக்கிறானோ? இல்லையென்றால் என்றும் வராதவன் இன்று எதற்காக வந்தான்?' என்று பலவாறு எண்ணிக் குழம்பினாள்.



ரவிதாசன் வந்ததிலிருந்து அவள் தஞ்சைக்குப் போனதைப் பற்றி எங்கே கேட்டுவிடப் போகிறானோ என்று மனதுக்குள் தவித்தாள். ஓரிரவு தங்கிவிட்டான். இன்னும் கேட்கவில்லை என்றவுடன் 'இல்லை, இல்லை தற்செயலாகத்தான் வந்தான் போலும்' என்று மனசாந்தி அடைந்திருந்த போது இப்படித் திடீரென கேட்டுத் தொலைத்து விட்டான்.

'ஆகா! ஆரம்பித்து விட்டான். இனி இவன் துருவித் துருவிக் கேட்கும் கேள்விகளிலிருந்து தப்பிப்பது எப்படி?' என யோசிக்கலானாள். ஆனால், அவளுக்குத் தெரியும். ரவிதாசன் கொடூரமான காரியம் பல செய்தாலும் வெளிப்படையாக அவன் முரடன் அல்ல. வெறுப்பையோ விருப்பையோ வெளிப்படையாகக் காட்டமாட்டான். அதுவே அவனது பலம். அவனது அந்தச் செயலில் முகத்தின் ஒவ்வொரு பாகமும் ஒத்துழைக்கும். ஒரு [illegible] கூட அவன் அனுமதியின்றி சற்று மேலே சென்றுவிடாது. இவ்வளவு நாட்களில் எந்த ஒரு முரட்டுத் தனமான செயலையும் அவள் அவனிடம் கண்டதில்லை. ஆனாலும் அவனுடன் பழகிய [illegible]களுக்கு அநேகமாக அனைவருக்குமே அவன் நினைவே சிம்ம சொப்பனம். எல்லாரும் தங்களை அறியாமல் ஒரு நடுக்கம் கொள்[illegible]டு. அவ்வளவு பயம் உண்டாக்கும் அவனது நினைவுகள்.

நந்தினியின் முகபாவங்களை உற்றுக் கவனித்தான் ரவிதாசன். நந்தினி தஞ்சைக்குச் சென்றாள் என்ற செய்தி அவன் வியப்பைப் பன் மடங்கு அதிகமாக்கியதுடன், அவனுடைய மனத்தில் என்ன என்னவெல்லாமோ சந்தேகங்களைக் கிளப்பி விட்டிருந்தது. மகராணி போல அவள் வாழ்ந்திருந்த தஞ்சைக்கு இன்று பிச்சிப் போலச் செல்ல விரும்பமாட்டாள் என்றுதான் அவன் முதலில் நினைத்தான். பெண்கள் சபல சித்தம் படைத்தவர்கள்தான். ஆனால் இவள் அப்படியில்லை. திடமான நெஞ்சமும், தெளிவான குறிக்கோளும், அதில் அசைக்கமுடியாத பற்றும் கொண்டிருப்பாள். தன் வாழ்வின் நோக்கத்தைத் தெளிவாகத் தெரிந்து வைத்திருந்தாள்.

'ஆனால், தனிமையில் சஞ்சல புத்தி வளர்ந்ததோ என்னவோ?' என்று ரவிதாசன் நினைத்தான். ஏற்கெனவே மற்ற பாண்டியர்களின் மீது மிகவும் கோபமாய் இருந்தாள் நந்தினி. பாண்டியர் குழுவில் இதர சகாக்களின் மீது அவளுக்கு இருந்த அந்தத் [illegible] அளவற்றது. அதனால் சோழர்களிடம் சரணாகதி அடைந்து விட்டாளோ என்ற அச்சம் ரவிதாசனுக்கு.

அந்த அச்சத்தைப் போக்கிக் கொள்ளவே இங்கு வந்தான். அதைப்பற்றி அவளிடம் கேட்க வேண்டுமென்று அவன் எண்ணினான். கேட்பதனால் வருவது வரட்டும், பிறகு நடப்பது

நடக்கட்டும். பார்த்துக் கொள்ளலாம் என்ற நிலையில் தான் அவன் வந்தான்.

ஏற்கெனவே பாண்டியரின் உட்கட்சிப் பூசலில் தலையான பங்கு இவளுடையது. போதும் போதாததற்கு இப்போது சோழனுடைய கூட்டுறவும் வைத்துக் கொண்டிருக்கிறாள்! 'இவள் துரோகியென்று தெரிந்தால் கொன்றுவிடலாம்' என்ற எண்ணம் கூட ரவிதாசனின் மனதில் ஒரு ஓரத்தில் இருந்தது.

இவ்விதம் ரவிதாசன் செய்திருந்த முடிவு நந்தினியை கண்டதும் அடியோடு கரைந்து மறைந்து விட்டது. ஒரு முடிவுக்கு வந்தான். 'நம் போராட்டத்தைக் காட்டிக் கொடுப்பவள் அல்ல இவள். அவ்வப்போது புரியாமல் நடந்து கொள்வாள், வீம்பாக ஏதாவது செய்வாள். அடம் பிடிக்கும் குழந்தை போல. அவ்வளவுதான்' என்று நினைத்துக் கொண்டான்.

ரவிதாசன் வந்தவுடன் அவள் பேச்சில் மென்மையில்லை. சண்டைபோடுவது போல ஒரு தர்க்கம் இருந்தது. ஆயினும், அஞ்சா நெஞ்சமும், அளவிலாத மனோதிடமும் வாய்ந்த பெண் நந்தினி என அவனுக்குத் தெரியும். அவளைப் பகைத்துக் கொண்டு பாண்டியரின் உரிமைப் போராட்டத்தைப் பலவீனப்படுத்த அவன் எண்ணவில்லை. முன்பொரு காலத்தில் போராட்டத்தின் நிதி நிலவரம் கையில் சுண்டியிழுத்தபோது மூட்டை மூட்டையாகப் பொற்காசுகளைக் கொடுத்தவள் இவள். இன்று எதிரியின் மீது தேவையில்லாத பாசத்தால் தவிக்கிறாள்.

'அருள்மொழியிடம் நெடு நேரம் பேசினாளாமே! கண்ணீரும் கம்பலையுமாக நின்றாளாமே! பைத்தியக்காரி. இதிலுள்ள மான அவமானமெல்லாம் பாண்டிய குலத்துக்குத்தான் என்று நினைத்தாளா?' ரவிதாசன் வந்தது அவளை எச்சரிக்கை செய்ய. அதுவும் வார்த்தைகளாலோ செயல்களாலோ அல்ல. அவன் வந்ததே ஓர் எச்சரிக்கை தான். தான் சொல்ல முடியாததைத் தன் செய்கை அறிவுறுத்துகிறதல்லவா? ''உம்மைக் கண்கொட்டாமல் கவனிக்கிறோம்'' என்று சொல்லாமல், மிரட்டாமல் எடுத்துச் சொல்லி விட்டான்.

நிகழ்ந்ததை மறைக்க நந்தினியும் ரொம்பவும் தவித்துக் கொண்டிருந்ததாகத் தெரிந்தது. பட்சணப் பாத்திரத்தில் கையை நுழைத்த குழந்தை பின்னால் தாய் வந்து நிற்பதைக் கண்டு மிரள மிரள விழிப்பது போலத் தடுமாறினாள் நந்தினி.

ஆனால், அவளிடமிருந்து வந்த உணர்சிகளில் முதன்மையானது வியப்புத் தான். 'எப்படிக் கண்டு பிடித்தான்? மந்திரத்தினாலா?



இல்லை, இல்லை, இருக்காது.' பாண்டிய நாட்டு மந்திரவாதிகள் ஆவிப வித்தையினால் சோழர்களை முடக்கப் போகிறார்கள் என்ற ஒரு காலத்தில் பரவலாகப் பேச்சிருந்தது. மந்திர தந்திர மெல்லாம் அவ்வளவு சுலபமல்ல. இருகின்றன; ஆனால், அவற்றை வெளியில் பிரயோகிக்க முடியாது. 'இவன் உண்மையான மந்திரவாதியாய் இருந்தால், இவன் சோழர் வம்சத்தையே பூண்டோடு அழித்துவிட்டுத், தான் நினைத்ததைச் சாதித்து இருப்பானே!'

'சரி, இப்போது தெளிவாகக் கேட்டு விட்டான். இனி மறைப்பது ஆபத்தானது. அப்புறம் தவறான யூகத்துக்குச் சென்று விடுவான். நான் தஞ்சைக்குள் பிரவேசிக்கவே இல்லை என்று அப்பட்டமாகப் புளுகினால், ஆதாரத்துடன் தன் மீது குற்றச்சாட்டுகளை அடுக்குவான்.'

கரத்தைப் பிடித்து நாடியைச் சோதிப்பார் மருத்துவர். அது போலத் தன் நாடியைச் சோதிக்க வந்திருக்கிறான். 'என்னுள் இன்னும் விடுதலை வேட்கை உயிருடன் இருக்கிறதா? அதன் உயிர்த் துடிப்புத் தெரிகிறதா? என்று கண்டறிய வந்திருக்கிறான். அதில் ஒரு மாற்றமும் இல்லை என்றால் சென்று விடுவான்' என்று முடிவெடுத்தாள்..ஆனால், செய்ததில் தவறில்லை என அடித்துப் பேச வேண்டும் என்று முடிவு செய்து கொண்டு சிறிது அதிகாரத் தோரணையில் அவனிடம் பேசத் தொடங்கினாள்.

''சரியாய்ப் போச்சு, ரவிதாசரே! எனது ஒவ்வொரு செயலையும் வேவு பார்க்கிறீர் போல?'' என்றாள்.

''உங்களை வேவு பார்க்க நான் யார், பாண்டிமாதேவி?'' என்று ரவிதாசன் கேட்டான்.

''இன்னும் என் மேல் சந்தேகமா?'' என்றாள் நந்தினி. ''இன்னும் என்னைச் சோதிக்கிறீர்களா?''

ரவிதாசன் வார்த்தைகளுக்குத் தடுமாறினான் ''சரி, சுற்றி வளைக்காமல் வந்த விஷயத்துக்கு வருகிறேன். உமது தஞ்சை விஜயத்தைக் குறித்து எல்லாரும் பலவாறு பேசிக் கொண்டு இருக்கிறார்கள்.''

''ரவிதாசரே! நான் தஞ்சை சென்றேன். உண்மைதான். ஆனால், [illegible]. ஒரு தேவையும் இல்லை. என் தாய்க்கு ஒரு கோயில் கட்டியிருக்கிறார் அருள்மொழிவர்மர். அதைக் காணவே சென்றேன். வேற்றுருவில் செல்லக் கூட அவசியம் இல்லையென நினைத்தேன். என் முகத்தோற்றம் அவ்வளவு மாறியிருக்கிறது!'' என்றாள்.

ரவிதாசன் முகம் மாறியது. ஒரு காலத்தில் இருந்த அவளுடைய மோகன வடிவும், முகப் பொலிவும், மனக்கண் முன் வந்தன. இன்று இப்படித் தலைவிரிகோலமாய் அலங்கோலமாய் இருந்தவள், ஐந்து ஆண்டுகளுக்கு முன் பரத கண்டத்தில் ஒரு மாபெரும் அழகி. 'உங்களுடன் சேர்ந்து போராடி இன்று பிச்சியாய்ப் போனேன் என்று சொல்லாமல் சொல்கிறாளா?'

நந்தினி தொடர்ந்தாள். "அதனால் ஒரு அபாயம் கூட வராது என யூகித்தேன். முதலில் என்னைச் சிறைப்பிடிக்க அது ஒரு சோழச் சூழ்ச்சியாய் இருக்கக் கூடும் என நினைத்தேன். போய் வந்த பின்புதான் அந்த எண்ணமே அவர்களுக்கு இல்லை எனத் தெரிந்தது. என்னை மறந்தே போய்விட்டார்கள் என்று தெரிய வந்தது ."

"இப்படி அஜாக்கிரதையாக இருக்கக்கூடாது. உமது இருப்பிடத்தைப் பின் தொடர்ந்து வந்து கண்டு பிடித்திருக்கலாம்" என்றான் ரவிதாசன்.

"அக்கம் பக்கம் பார்த்து விட்டு, யாராவது என்னைப் பின் தொடர்கிறார்களா என்று பார்த்துவிட்டுத்தான் வந்தேன்" என்று தன் வாதத்தை முன் வைத்தாள் நந்தினி.

"பாண்டிமாதேவி! ஜாக்கிரதை! பாண்டிய நாட்டுச் சதிகாரர்களோடு சேர்ந்தவள் நீங்கள் என எல்லாருக்கும் தெரியும். இப்போது நீங்கள் அங்கு செல்லலாமா? கோயிலைப் பற்றிக் கேள்விப்பட்டவுடன் நிராயுதபாணியாகத் தஞ்சைக்குள் பிரவேசிக்கச் சித்தமாயிருப்பீர்கள் என்று அவர்களுக்குத் தெரியும். உம்மைப் பிடிப்பதற்காகவே சோழன் நயவஞ்சகமாகத் தீட்டிய திட்டமது என நினைத்து விட்டேன். நீர் பத்திரமாக வந்து சேர்ந்திரா என்று பார்ப்பதற்காகவே வந்தேன். நாம் பாதுகாப்பான புகலிடம் தேடி ஓடிக்கொண்டே இருக்கிறோம். சோழனின் மூச்சு நம் கழுத்துப் பிடரியில் எப்போதும் பட்டு பயமுறுத்துகிறது. நமக்கு ஒரு அடி பின்னால் எப்போதும் அவனிருக்கிறான். அதை மறக்காதீர்!" என்று எச்சரித்தான். அவள் பாதுகாப்புக்காக மட்டுமே கவலைப்படுபவன் போலப் பேசினான். "நல்ல வேளை உங்களை யாரும் அங்கு பார்க்க வில்லை" என்றான் ரவிதாசன்.

அவன் கேள்விக்குப் பதிலளிக்க ஆர்வம் கொண்டு, "ஏன், பொன்னியின் செல்வர் பார்த்தாரே!" என்று யோசிக்காமல் நந்தினி சொல்லி விட்டாள். சொன்னவுடன் உதட்டைக் கடித்துக் கொண்டாள். உளறி விட்டோமேயென்று.



"பொன்னியின் செல்வன் நல்லவன் மாதிரிப் பேசி உம்மிடம் விஷயம் தெரிந்து கொள்ள முயன்றான். ஏன், அந்தக் கோயிலே சோழர்களின் கபட நாடகம்!" என்ற ரவிதாசனுக்கு வேறொரு கவலை. நாசூக்காகத் தம் பெருங்குணத்தைக் காட்டிச் சோழர்கள் கோயிலைக் கட்டிவிட்டனர். இவள் அதில் மயங்கிவிடக் கூடாது.

நந்தினி முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன.

அதைப் பொருட்படுத்தாமல் தொடர்ந்தான் ரவிதாசன் "சோழர்களின் கோபத்திற்கு இரையாகாமல் உங்கள் எல்லோரையும் காக்க நான் சபதம் ஏற்றுள்ளேன். நீங்கள் இப்படிச் செல்லலாமா? நீங்கள் சோழர்களுடன் தொடர்பேற்படுத்திக் கொள்ளவே தஞ்சைக்குச் சென்றீர்கள் என்று எல்லாரும் ஏதேதோ பேசியபோது என் மனம் கொதித்த கொதிப்பை என்னவென்று சொல்வது? உமது மனத்தைக் கெடுப்பதற்காக என்னவெல்லாமோ சோழர்கள் தந்திரங்களைக் கையாளலாம். எதிரி ஆசை வார்த்தை காட்டி மயக்க முயலுகிறான். கொஞ்சம் பொறுமையாக இருங்கள்! சீக்கிரம் நமக்கெல்லாம் பொழுது விடியும்! என்றாவது சோழர்களின் பலவீனம் கண்ணுக்குத் தெரியும் எனச் சொல்லவே வந்தேன். சோழர்கள் நமக்கெல்லாம் பொதுவான எதிரி என்று எச்சரிக்கை செய்வதற்காகவே ஓடி வந்தேன். நமது வீழ்ச்சியைக் கண்டு சிரிக்கிறார்கள் என்று சொல்லவே வந்தேன். அந்தக் குலம் உம் தந்தையைக் கொடூரமாகக் கொன்ற குலம். அவர்களுடன் உறவாட நினையாதீர். உம்மையும் கொல்வதற்கு தயங்க மாட்டார்கள். இதை எப்படியாவது உம்மிடம் சொல்லி விட்டுப் போகத்தான் நான் முக்கியமாக இங்கே வந்தேன்" என்று படபடவென்று பேசினான் ரவிதாசன்.

"ரவிதாசரே! அதில் சந்தேகம் வேண்டாம். நான் சாகும்வரை சோழன் என் பகையாளிதான். அவனால் நான் பட்ட கஷ்டங்கள் ஏராளம். ஆனால், இந்தக் கோயில் சகாப்தம் அதற்கு விதி விலக்கு. பொன்னியின் தாய் என்று அறிந்தும் தெரிந்தும் அவளுக்குக் கோயில் கட்டும் மக்களை நாம் எவ்விதத்தில் சந்தேகம் கொள்வது?"

"கோயில் கட்டிவிட்டால் அவள் குழந்தைகளின் மீது பாசம் வந்திடுமோ என்ன ?" என்று விவாதித்தான் ரவிதாசன்.

"எதையும் வெகுவாக ஆராய்ந்தால் கஷ்டம்தான். அப்படிப் பார்த்தால் என் தாயைக் கொலை செய்தவன் உங்களுடன் இருக்கிறான். என் தாய்க்குக் கோயில் எடுக்கும் சோழர்கள் அங்கே. இருவருக்குள் எப்பேர்ப்பட்ட வித்தியாசம்! அவளைக் கொன்ற கொலையாளியை நீங்கள் உங்களுடன் வைத்துக்கொண்டு திரிகிறீர்கள்.

என் ஜன்மப் பகையாளிகள் அவளுக்குக் கோயில் எழுப்பு கிறார்கள். வேடிக்கையைப் பாருங்கள்!'' என்றாள் நந்தினி.

அதைக் கேட்டவுடன் ரவிதாசனுக்கு அவன் வந்த வேலை பூர்த்தியாகவில்லை எனத் தெரிந்தது. ''இங்கு பாருங்கள், தேவி. அவன் உங்கள் தாயைக் கொல்ல வேண்டும் என்று கொல்ல வில்லை. அவன் எறிந்த வேல் அதன் இலக்கைச் சென்று அடையும் முன் இவள் நடுவில் பாய்வாள் என இவனுக்குத் தெரியுமா? சொல்லுங்கள். வேண்டுமென்றே கொல்வானா? அந்த வேல் அவள் மீது பாய்ந்ததால் நஷ்டப்பட்டவர் நாம்தான்.''

பழையதை யோசித்தனர் இருவரும். சக்தியற்றுக் கிடந்த பாண்டியரின் போராட்டம் தலை நிமிர யாரும் எதிர்பாராத விதமாக ரவிதாசனுக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. அரியணைக்கு வெகு அருகில் அவனால் ஒரு ஆளை நிறுத்த முடிந்தது. தன அதி காரியின் மனைவியாக நந்தினி தஞ்சைக்குள் நுழைந்தாள். கிளியை வளர்த்துப் பூனை கையில் கொடுப்பது என்று சொல்வார்கள். ஆனால், கிளி தானாகப் பூனைக்கு மாலை சூட்டியது.

ரவிதாசன் பொறுமையுடன் விளக்கினான். ''ஒரு காலத்தில் உம்மை வைத்து அரசனையும் அவன் மகன்கள் இருவரையும் ஒரே சமயத்தில் கொல்லத் திட்டம் தீட்டினேன். ஒரே நாளில் சோழர் வம்சமே பூண்டோடு அழிந்திருக்கும். இருபது அடிமை நாடுகள் உடனே போராட்டமின்றி விடுதலை பெற்றிருக்கும். அதில் பாண்டியர் நாடும் ஒன்றாய் இருந்திருக்கும். சரித்திர ஏடுகளையே மாற்றி எழுதும் எழுதுகோல் என் கையிலிருந்தது. சோழர் குலம் வாயிலே மண்ணை வாரிப் போட்டுக் கொண்டு போய்விடப் போகிறது என்று எண்ணி எல்லாருமாகச் சேர்ந்து காத்திருந்தோம். ஆனால் என்ன ஆனது? அந்தத் திட்டம் முடிவடையாமல் தடுத்தது உமது தாய்தான். வீர பாண்டியரின் கொடூரக் கொலையை வைத்தே மக்களைத் திரட்டிச் சோழனை அழிக்கலாம் என்றால் அதுவும் முடியவில்லை. ஆனால், நான் செய்த சதியில் சோழ சாம்ராஜ்யமே திண்டாடியிருக்கும். அதைத் தடுத்தது உம் தாய். உங்கள் இருவர் மேல் இல்லாத பாசம் அவர்கள் மேல் அவளுக்கு? தெரியாமல்தான் கேட்கிறேன், அவள் உம்மை அணைத்திருக் கிறாளா? இல்லை. உம்மைப் பாலூட்டிச் சீராட்டி மடியில் வைத்திருந்தாளா? இல்லையே. பெற்றவுடன் அனாதை போல விட்டுவிட்டு ஓடிய பிச்சி அவள். அவளிடம் உமக்கு என்ன பரிவு? நாம் உயிரைப் பணயம் வைத்து நடத்தும் தர்ம யுத்தத்தை விடவா அவள் மேல் உமக்குப் பாசம்?'' என்று கேட்டான்.



நந்தினி கூறினாள்: ''நாம் மூன்று கொலைகளையும் ஒரே நாளில் செய்வது என்று அகலக் கால் வைத்து விட்டோம். அதனாலேயே நமது போராட்டத்துக்குப் பின்னடைவு ஏற்பட்டது. என்னால் அல்ல!''

''உண்மைதான்'' என்று ரவிதாசன் ஒப்புக் கொண்டு தலை அசைத்தான். ''சிறப்பாகச் செய்யப்படும் திட்டங்கள் கூடச் சில எதிர்பாராத சம்பவங்களால் தடுமாறிப் போய்விடும். அந்த நிகழ்வு களுக்காக, திட்டமிடும் போதே சிறிய இடம் ஒதுக்கிவிட வேண்டும்.''

சோழர்களின் அரச குலமே இறந்தொழிய வேண்டும் என்று திட்டம் தீட்டினான். அத்திட்டம் தவறக் கூடிய எல்லா வழி களையும் அடைத்தான். தோல்விக்கே வழியில்லை எனக் காற்றுக் [illegible] போக முடியாத வியூகம் அமைத்தான். ஆனால், விதி அவனுடன் பல்லாங்குழி ஆடிவிட்டது.

''சோழர்குலம் அழிய ஒரு முறை சந்தர்ப்பம் வந்தது. பல ஆண்டுகளாக நாம் பாடுபட்டு அந்தச் சந்தர்ப்பத்தை உருவாக் கினோம். ஆனால், ஏதோ ஒரு சக்தி அவனைக் காப்பாற்றியது'' என்ற ஆதங்கம். பெருமூச்சு விட்டான். ''அதை விடுங்கள், பாண்டியமாதேவி. இதையெல்லாம் காட்டிலும் மிகப் பயங்கரமான இன்னொரு அபாயம் நமக்குக் காத்திருக்கிறது. நம்மைப் பிரிக்க [illegible]வார்கள் சோழர்கள்'' என்றான் ரவிதாசன்.

''நம்மைப் பிரிப்பதால் என்ன பயன் அவர்களுக்கு?'' என்று வினவினாள் நந்தினி.

''நம்முடன் போராடி நேரத்தைச் செலவழிக்காமல் நமக்குள் சண்டையை மூட்டிவிட்டு வேடிக்கை பார்ப்பார்கள்'' என்று ரவிதாசன் விளக்கியவுடன் சிரித்து விட்டாள் நந்தினி.

''ஆ! நம்மிடம் பத்தாயிரம் வீரர்கள் இருக்கிறார்கள். சரியாக [illegible]க்கு ஐயாயிரம் என்று பிரிப்பார்களா?'' என்றாள். ''இது என்ன விந்தை! நம்மை எதிரியாய் நினைத்துத் தஞ்சை நகரில் இன்னும் சோழர் சதிக்காரியங்களை நடத்திக் கொண்டிருக் கிறார்களா? சென்று வந்த எனக்கு அப்படி ஒன்றும் புலப்பட வில்லையே. நீர் ஒரு முறை தஞ்சைக்குச் சென்று வாருங்கள், ரவிதாசரே. இனி நாம் தலையெடுக்க மாட்டோம் என்று அவர்கள் [illegible]வெடுத்து விட்டனர்.''

''புரியாமல் பேசாதீர். நம்மைக் குறைத்து மதிப்பிட்டு விட்டீர்கள். நான் அரச குடும்பத்தைச் சொல்லவில்லை. பாண்டியர்கள்! அவர்களுக்கு வாளேந்துவதைத் தவிர வேறேதும்

தெரியாது. நான் அந்த ராஜ தந்திரி பிராமணனைச் சொல்கிறேன். இன்னும் அந்தச் சோழப் பிரதமர் அநிருத்தன் நம்மைத்தான் பிரதம எதிரியாய் நினைக்கிறான். நாம் என்ன செய்கிறோம் என்று கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கிறான்'' என்றான் ரவிதாசன்.

அநிருத்தரைப் பற்றிப் பேசியவுடன் சற்றுக் கூர்ந்து கவனிக்கலானாள் நந்தினி. இவன் சோழர்களின் மீது வெறுப்பினால்தான் பேசுகிறான் என்று முதலில் எண்ணிவிட்டாள்.

மேலும் விவரித்தான் ரவிதாசன். ''மாபெரும் சதியது. அதன் ஒத்திகைதான் இந்தக் கோயில். ஆழம் பார்க்கத் தடாகத்தில் ஒரு காலை விட்டு ஆராய்வோமல்லவா? அதுதான் இது. அந்தக் கோயிலே ஒரு நாடகம். அது உங்கள் மனதை மாற்றச் சோழர்கள் பிரத்யேகமாகப் போட்ட நாடகம் என்று தீவிரமாக நினைத்தேன். யாரேனும் தன்னைப் பெற்ற தாயைத் தெய்வமென நினைக்கும் குலத்துடன் போருக்குப் போவானா?''

நந்தினி இதுதான் சமயம் என்று தன் சந்தேகத்தைக் கேட்டாள். ''எனக்குத் தெரியாத இன்னொரு செய்தியை மட்டும் சொல்லி விடுங்கள்'' என்றாள். ''இப்படி என்னைத் தொடர்ந்து எந்நேரமும் நான் செய்யும் செயலைக் கண்காணித்து வருவதற்கு என்ன காரணம்?''

அவள் கண்காணிக்கப் படுவதை அவன் மறுக்கவில்லை. ''தாயே, நம்முடன் பேச்சு வார்த்தை நடத்த முயலும் சோழர்கள் உம்மிடம்தான் பேச ஆரம்பிப்பார்கள் என நினைக்கிறேன். வேறு யாருடனும் அவர்கள் பேசத் தயாராக இல்லை.''

''பேச்சு வார்த்தையா? நம்முடனா?'' சிரித்தாள் நந்தினி. ''நாம் மொத்தம் எட்டுப் பேர் இருக்கிறோம். அவர்கள் படையில் குதிரைகளைக் குளிப்பாட்ட இருக்கும் சேவகரே எண்ணூறு பேர். நம்முடன் அவர்கள் ஏன் பேச வேண்டும்?நமது போராட்டத்தில் முன்னைப் போல் செல்வம் கொட்டிக் கிடக்கிறதா?'' என்றாள் நந்தினி. பாண்டியர் போராட்டத்தை வெகு நாள் தூக்கிப்பிடித்துத் தாங்கியதே நந்தினி கொடுத்த பணமுடிப்புகளில்தான். ''என்னமாய் உழைத்தாலும் என் பேரில் உமக்கெல்லாம் நல்லெண்ணம் வரப்போவதில்லை. இப்போது தெரிகிறதா என் அருமை?'' என்று வினவினாள்.

ரவிதாசனுக்குக் கத்த வேண்டும் போலிருந்தாலும், அவள் வீர பாண்டியரின் மகள் என்ற நினைவினால் தன் மனத்துக்கு அரண் போட்டு வந்தான். நந்தினி தொடர்ந்தாள். ''மதுரையைச் சோழன் தென் சோழப் பிரதேசம் என்றே அறிவித்து விட்டான். இன்று



நம்மை ஒரு பொருட்டாகவே அவன் நினைப்பதில்லை. பெரும் படை இரட்டிக் கீழைக் கடல்களில் செல்கிறான். சாவகம், புஷ்பகம், கடாரம் முதலிய தேசங்களுக்குச் சென்று வெற்றிக் கொடி என்று புலிக் கொடியை நிலைநாட்டுகிறான். எனக்கு என்னவோ சம்புவராயர் போல, முத்தரையர் போலப் பாண்டிய கதியும் ஆனதோ என்று தோன்றுகிறது'' என்றாள்.

''பாண்டிய சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினி நீர். உம் மனம் உருகும்படியான அவசியம் என்ன நேர்ந்தது? வீர பாண்டியர் குலத்திலே பிறந்து இத்தகைய பயத்துக்கு ஆளாகலாமா? இது என்ன அவமானம்?'' என்றான் ரவிதாசன்.

❖ ❖ ❖

## அத்தியாயம் அறுபது
## மணிமகுடம் எங்கே?

''நந்தினி மனம் தளர்ந்து விட்டாள் போலும். வாளேந்தும் முன்பே தோல்வியை ஒப்புக் கொண்டாள் போலும். அதனால் தான் பகைவரிடம் பழக முற்பட்டாளோ?'' என்ற சந்தேகம் ரவிதாசன் மனதில் உதித்தது. ''இல்லை, இல்லை. அப்படி விட்டு விடக் கூடாது'' என்று முடிவெடுத்தான் ரவிதாசன்.

''பாண்டிமாதேவி, மனம் தளராதீர்கள். என்னைப் போல் ஆயிரமாயிரம் விசுவாசிகள் இருக்கிறார்கள். எங்கள் உயிரைப் பற்றியோ உடைமைகளைப் பற்றியோ எங்களுக்குக் கவலை இல்லை. எப்படியாவது ஒரு சுதந்திரப் பாண்டிய நாட்டை ஸ்தாபிப்போம்'' என்று உறுதி அளித்தான். ''போரினால் அதைச் சாதிப்போம். இல்லை, சூதினால் சாதிப்போம். நாம் அடிபணிந்து போனால் ஒரு வேளை சோழன் நம்மை நிம்மதியாய் வாழ விடலாம். ஆனாலும் அவ்வித வாழ்க்கையை நாம் விரும்பவில்லை'' என்றான் ஆவேசமாக.

அதைக் கேட்ட நந்தினி தன் விரக்தியான வாதத்தை முன் வைத்துக் கொண்டிருந்தாள். ''சோழர்களின் தயவால் நாடாளும் உரிமை நமக்கு வேண்டாம் என்று கூறுகிறீர். அவர்களோ கருவூலத்தில் மூட்டை மூட்டையாய்த் தங்கம் கொண்டவர்கள். நாமோ அடுத்த வேளை உணவுக்குத் திண்டாடும் பரதேசிகள். வீரமும் வேண்டும், ராஜ தந்திரமும் வேண்டும். பல வருடமாக போராடு

கிறோம். என்ன பலனைக் கண்டீர்? ஏதாவது ஒரு முன்னேற்ற மாவது உண்டா? அதுவும் கிடையாது'' என்றாள் நந்தினி.

''பாண்டிமாதேவி! இப்படிப்பட்ட சூழ்நிலைகள் போராளியின் வாழ்க்கையில் இயல்பு. இவற்றைக் கண்டு அஞ்சும் அளவுக்கு நீர் கோழையாகி விட்டீரா? ஆனால், ஒன்று. சோழருக்கு வந்த வாழ்வை நினைக்க நினைக்க எனக்குக் கோபம் கோபமாய்த்தான் வருகிறது. ஆனால், நான் விரக்தியடையவில்லையே!'' என்றான் ரவிதாசன்.

''கோபித்து என்ன பயன்? அவர்கள் யுத்த களத்துக்குப் போய் வீராதி வீரர்கள் என்று பெயர் எடுத்து வந்திருக்கிறார்கள். இன்று மதுரைக்குச் சென்று 'சோழர் ஒழிக' என்று ஒருவனைச் சொல்லச் சொல். சொல்ல மாட்டான்! பொருளாதார ரீதியாக அப்படி அவர் களைக் கவர்ந்திருக்கிறர்கள். இந்த அழகில் மதுரையில் இந்தச் சிறுவனுக்கு மகுடாபிஷேகம் செய்கிறீரா?'' என்றாள் நந்தினி.

சற்றுத் தூரத்தில் அமர்ந்தபடி வான்வெளியைப் பார்த்துக் கொண்டிருந்தான் சிறுவன். அவனை நோக்கி ஒரு கையை நீட்டி விட்டு நந்தினி தொடர்ந்தாள்: ''ஆடை ஆபரணங்களால் அலங் கரித்துப் பவனி வர வேண்டியவன். காட்டில் தன்னந்தனியாக ராஜாளிப் பறவைகளுக்காகக் காத்திருக்கிறான். இதுதான் தெய்வத்தின் ஆக்ஞையோ? இவன் வாழ்நாட்களில் நாடு திரும்பக் கிடைக்குமா? இல்லை, காட்டில் இவன் அனாதை போலச் சாக வேண்டும் என்பது தெய்வத்தின் சித்தமோ? இன்னும் அது எனக்குத் தெரியவில்லை. தலைமுறை தலைமுறையாகத் தலை குனிந்தே நிற்கிறோம். இவன் காலத்திலாவது நிமிர்ந்து நிற்க வேண்டும். அந்த தினத்தைப் பார்க்க யார் இருபார்களோ, தெரியாது!'' என்றாள்.

சோழர்களைப் பற்றிப் பேசும்போது முன்பெல்லாம் நந்தினி கொதிப்படைந்திருப்பாள். ஆனால், இன்று அப்படியில்லை. ''பழைய அன்பையெல்லாம் எட்ட நிற்க வைத்துவிடுவாள் என்று நினைத்தோமே'' என்று சந்தேகப்பட்டு விட்டான் ரவிதாசன்.

அதனால் ஆவேசத்துடன் பேசினான். ''அரசன் என்று பாண்டியர் ஒருவருக்கு வெறும் பட்டம் கட்டுவதற்காகவா நாம் இவ்வளவு பாடுபடுகிறோம்? நமது கலையும், கலாசாரமும், நாட்டு மரபுகளும் நொடித்துப் போயின சோழர் ஆட்சியில். தென் சோழ மண்டலம் என்று நம் பிரதேசத்தின் பெயரையும் மாற்றிவிட்டனர். நமது குலத்தின் பெயரைக் கூடச் சரித்திரத்திலிருந்து அகற்றிவிட நினைக்கும் எதிரி. ஆனால், நீர் சொல்வது போல வென்ற நாடு



களைக் கட்டி ஆளத் தெரிந்தவன் எதிரி. சோழனெனும் கொடிய வனுடைய விஷ நெஞ்சத்தில் ஈரம் வருமெனக் காத்திருக்க முடியுமா? இல்லை, கெஞ்ச முடியுமா? அவன் நெஞ்சைக் கிழிக்க வேண்டும் என்ற வெறி வருவதில் தவறேதும் உண்டா? ஆனால், ஒரு நாள் அவன் தலை நகரை இடித்துக் தள்ளித் தீக்கு இரையாக்கி கோவேறுகழுதைகள் கொண்டு உழுது விஷக்கடுகுப் பயிரை விதைத்து அவனையும் சரித்திரத்திலிருந்து அகற்றப் போகிறோம் நாம்'' என்று சபதம் பூண்டான்.

பின் நந்தினியை நேரே உற்றுப் பார்த்தான். ''தாயே! நீங்கள் பார்த்திராத சோழர்களின் கொடுமையா? உங்கள் கண்முன் எவ்வளவு பயங்கரமாக நடந்து கொண்டிருக்கின்றனர்? போர் மற்றும் தர்ம நெறிகளுக்கு அவர்கள் என்றும் மதிப்புக் கொடுத்த தில்லையே!'' என்றான்.

நந்தினிக்கு அந்தப் பயங்கரமான சம்பவம் ஞாபகம் வந்தது. பல ஆண்டுகளுக்கு முன்பு போரில் அடிபட்டுக் கிடந்த வீரபாண்டி யனைத் தன் குடிசையில் வைத்துப் பராமரித்தாள். அப்போது அவளுக்குத் தெரியாது, அவர் தன் தந்தையென்று. அவளைக் கண்டவுடன் தன் தாயிடம் இருந்த முக ஒற்றுமையைக் கண்டு அந்த மனிதர் பேசினார்- இல்லை, இல்லை, மரணத் துடிப்பில் உளறினார்.

பின் சோழ இளவரசன் ஆதித்யன் வந்தான். சற்றும் தாட்சண் யம் பார்க்காமல் மூர்க்கமாய் நடந்து கொண்டான் ஆதித்யன். தான் காதலித்த நந்தினி மற்றொருவனுக்காகக் கெஞ்சுவதில் அவன் கோபம் அதிகரித்தது. தான் அருகில் இருந்திராவிட்டால் வீர பாண்டியர் உயிர் தப்பியிருப்பார். சரித்திரம் மாறிப் போயிருக்கும் என்று நந்தினிக்குப் பின்புதான் புரிந்தது.

ஆனால், அந்தக் கஷ்டத்திலும் ஒரு புதுத் துளிர் தலையெடுத்தது. சேவூர்ப் போருக்குப் பின்னால் அடிபட்டுக் கிடந்த எதிரியின் தலையைக் கொய்தான் ஆதித்யன். ''சேச்சே! என்ன கேவலமான காரியம்! ஆதித்யனுக்கு ஏன் அப்படிப் புத்தி போயிற்று?'' என்று பொங்கி எழுந்தனர் ஆபத்துதவிகள். பின் மறைமுகப் போரில் ஈடுபட்டனர். அழிந்து கொண்டிருந்த பாண்டியப் போராட்டம் எழுந்து உட்கார்ந்தது. புத்துயிர் பெற்றது. அதற்கு அந்த க்ஷணமே உயிர் வந்து விட்டது! அன்றிலிருந்து சோழர்களுக்குப் போதாத காலந்தான்.

ரவிதாசன் ஒரு மாயாவிதான். எதைப் பேசினால் நந்தினியின் மாயத் திரையை அகற்றலாம் என்று தெரிந்து கொண்டு அவற்

றையே ஞாபகப்படுத்தினான். அது போலவே நடந்தது. பழையதை நினைத்தவுடன் நந்தினியும் அமைதியானாள். ஏட்டிக்குப் போட்டியாய்ப் பேசுவதை நிறுத்தினாள்.

''போரில் நம் அரசரைக் கொன்றிருந்தால் கூடச் சோழனை மன்னித்து விட்டிருப்பேன்!'' என்று ரவிதாசன் உணர்ச்சி பொங்கக் கூறினான். ''போரில் புறமுதுகிட்ட அபகீர்த்தியை விட மானக் கேடாய் அல்லவா ஏற்பட்டு விட்டது. மாமிசக் கடையில் தொங்க விடும் ஆட்டுத்தலையைப் போல நம் மன்னரின் தலையைக் கொண்டுபோய் ஊர்வலம் நடத்தினார்கள்.''

ஆனால், அந்தக் கொலை வெறிக்குப் பழிவாங்குகிறேன் என்று தன் சிறிய கூட்டத்தை வைத்துச் சோழர் சாம்ராஜ்யத்தையே கலங்கடித்து விட்டான் ரவிதாசன். அந்த விஷயத்தில் அவனுடைய சமர்த்தை மெச்சத்தான் வேண்டும்.

நந்தினி மெல்லப் பேசத் தொடங்கினாள். ''வீரபாண்டியன் போர்க்களத்தில் தன்னுடைய மார்பிலே காயம்பட்டுத்தான் படுத் திருக்கக் கூடாதா? எவ்வளவு கௌரவமாயிருக்கும்! அப்படி யின்றி, ஒரு வெறி பிடித்த சோழன் படுத்திருந்த வீரபாண்டியனின் தலையைக் கொய்துவிட்டான். நாமும் உணர்ச்சிவசப்பட்டு அதற்கு பழி தீர்க்க இறங்கி அவசரமாய் நம்மை வெளிக் காட்டிக் கொண்டோம்!'' என்றாள். ''என்னுடைய மூடப் பிடிவாதத் தினால் ஆதித்யனைக் கொன்று விட்டோம்!'' என்றாள்.

''பாண்டி மாதேவி! அது நிச்சயமாகத் தோல்வியல்ல. ஆதித் யனைக் கொன்றோம். அருள்மொழியையும், அவன் தந்தையான சக்கரவர்த்தியையும் நம்மால் தாக்க முடியும் என்று உலகுக்கு அறிவுறுத்தினோம். இனி வாழ்நாளெல்லாம் சோழர்கள் நம் ஈட்டி பாயும் தூரத்தினுள்தான் இருக்கிறார்கள் என்று புவியெங்கும் வலியுறுத்தினோம். அதுவும் வெற்றிதான். இனி நிம்மதியாக உறங்க முடியாது என்று சோழன் அறிந்தானல்லவா?''

நந்தினி, முகத்தில் ஒரு புன்முறுவலுடன், ''ரவிதாசா! உன் சாமர்த்தியமே சாமர்த்தியம்! தோல்வியைக் கூட நீ வெற்றியாக மாற்றக் கூடியவன்!'' என்றாள். கிண்டலாகச் சொன்னாளா இல்லை நன்றாய்ச் சொன்னாளா என்று கவலைப் படாமல் தொடர்ந்தான் ரவிதாசன்.

''ஆனால், நானும் ஒப்புக் கொள்கிறேன். இப்போது பின் யோசனையில் நாம் செய்தது ஒரு விதத்தில் தவறென்று நினைக்கிறேன். ஆதித்யனைக் கொன்றிருக்கக் கூடாது'' என்றான் ரவிதாசன்.



ஆதித்யனின் கொலையென்பது அந்தக் கால கட்டத்தில் பிரசித்தி பெற்ற சம்பவம். சரித்திரத்தை மாற்றக் கூடிய சம்பவம். சோழரின் பாசறைக்குள் புகுந்து தங்களால் கொலை செய்ய முடியும் என்று நிரூபித்தனர் பாண்டியர்.

''எதிரி இருந்தான் என்பது நமது ஒற்றுமைக்கு வழி வகுத்தது. அவன் மாண்ட பின் நமது வேலை முடிந்தது என்று ஓய்வெடுத்து விட்டது வீரம். நம்முள் இருந்த வேற்றுமைகள் வெளிவரத் தொடங்கிவிட்டன'' என்றான்.

பாண்டிய நாட்டில் மீண்டும் மீன் கொடியையேற்ற நினைத்த போராளிக் கூட்டத்துக்குச் சோழர்களுடன் நெடுங்காலமாய்ச் சச்சரவு நடந்து கொண்டிருந்தது. இந்தப் போராட்டத்தை முன்னால் நின்று நடத்தும் பொறுப்பு ரவிதாசனின் தலையில் பல நாளாக விழுந்திருந்தது. அந்தப் போராளிகளுக்குச் சமீப காலத்தில் பல இடர்கள் ஏற்பட்டிருந்தன. ஆனால், விநோதமானவை. எதிரிகளை விடத் தன் கூட்டத்தினரே சண்டையிலும் சச்சரவிலும் ஈடுபட்டு அவன் நிம்மதியைக் குலைத்தனர். மதியால் மட்டும் எதிரியை வீழ்த்த எண்ணிய ஒரு ராஜ தந்திரிக்கு அவன் வெற்றிக்கு வழி வகுக்கத் தேவைப் பட்ட நிம்மதி கிட்ட வில்லை.

மலையுச்சியில் எதைப் பற்றியும் கவலையில்லாமல் இருந்த நந்தினிக்கு இப்போது போராட்டத்தின் நிலைமை எப்படியுள்ளது என அறிய ஆவல். ரவிதாசனும் எதையும் மறைக்காமல் கூறினான். அவளுக்கு மீண்டும் ஆர்வம் பிறந்துவிட்டது என யூகித்தான்.

''பாண்டிமா தேவி! புஜங்கனையும் அவன் மனைவியையும் நான் இலங்கையில் கொண்டு விட்டு விட்டேன். அவர்கள் இல்லாத சமயத்தில் சோழர்களின் மீது ஏதாவது தாக்குதல் நடத்த லாமா என்று நினைத்தேன். ஆனால், அதைவிட ஒரு முக்கியமான வேலை வந்துள்ளது. அவர்களை மீண்டும் இங்கு ஓரிரு மாதங் களில் அழைத்து வர முடிவு செய்துள்ளேன்'' என்றான்.

நந்தினிக்குப் புஜங்கனைப் பற்றியோ அவன் திமிர் பிடித்த மனைவியைப் பற்றியோ கவலை இல்லை. அதனால் ரவிதாசன் அடுத்த விஷயத்துக்குச் சென்றான்.

''பழுவூர்க் குலம்...'' என்று ஆரம்பித்தான். பின்பு தயங்கினான், காலஞ்சென்ற பழுவூர் மன்னரின் மனைவி அவள் என்று நினைவு வந்தது. அவள் முகத்தில் தென்பட்ட ஆவலைக் கண்டு, ''பழுவூர்க் குலமும் சோழர்களும் நெருங்க நினைக்கிறார்கள். உறவைப் புதுப்பித்துக் கொள்ள எண்ணுகிறார்கள். குந்தவை பழுவூர் இளவரசி

லோகாவை அருள்மொழிக்கு மணமுடிக்க விரும்புகிறாள்'' என்றான்.

நந்தினி, ''கட்டிக் கொடுத்தால் கொடுக்கட்டுமே. அருள் மொழிதான் அரியணையில் அமர்ந்திருக்கவில்லையே'' என்றாள்.

தலையாட்டிவிட்டு, ரவிதாசன், ''ஆம். அதனால் இந்தத் திருமணத்துக்கு முக்கியத்துவம் இராது என்றுதான் நான் முதலில் நினைத்தேன். ஆனால்,..'' என்று நிறுத்தினான்.

''ஆனால், என்ன?'' என்றாள் நந்தினி. அருள்மொழியுடன் நந்தினி அவ்வளவாகப் பழகியதில்லை. சென்ற வாரம் அவனைத் தஞ்சையில் சந்தித்த பின்பே அவன் இயல்புகளைக் கண்டு மனமுருகிவிட்டாள். அவனுக்கு ஒரு நல்லது நடக்குமானால் மகிழ்ச்சியடையும் நிலையில் இன்று அவள் இருந்தாள்.

அவனுடைய முகமாற்றத்தைப் பார்த்துவிட்டு, ரவிதாசன் தொடர்ந்தான்: ''அரசர்களின் திருமணங்கள் சாதாரணத் திருமணங்கள் அல்ல. இராஜரீகக் கலியாணங்கள் என்று நீர் கேள்விப்பட்டது இல்லையா? முன்பெல்லாம் பழுவூர் அரசரே அந்தரங்கச் சூழ்ச்சியைச் செய்து இவளை அருள்மொழியின் தலையில் கட்டி வைத்திருப்பார். ஆனால், இன்று அந்தத் திருமணத்தை நடக்க விடக்கூடாது. பழுவூரைச் சோழர்களுடன் நெருங்க விடக்கூடாது. புஜங்கனின் மனைவியும் பழுவேட்டரையரின் மகள்தான். அதனால் அவர்கள் நமது சகாக்களாகும் வாய்ப்பு என்றாவது உண்டு.''

புஜங்கனுக்கு ஏன் இவ்வளவு முன்னுரிமை கொடுக்கிறான் ரவிதாசன் என்று ஒரு நொடியில் புரிந்தது நந்தினிக்கு.

ரவிதாசன் தொடர்ந்தான்: ''இதில் கூத்து என்னவென்றால், இது தெரியாமல் சம்புவராயன் மகன் மாறன் அந்தப் பெண்ணை உயிருக்கு உயிராய்க் காதலிக்கிறான்'' என்று சொல்லிச் சிரித்தான். ''சம்புவராயர் வீட்டுக்கு நான் சென்றேன். மாறனிடம் பேச்சுக் கொடுத்து நம் பக்கம் அவனை இழுக்க முற்பட்டேன். எவ்வளவு நாள்தான் நாம் காட்டிலேயே அலைவது? நமக்கும் நாட்டில் ஒரு முகாம் வேண்டாமா? கடம்பூரே அதற்குச் சிறந்தது என யூகித்துத் தான் சென்றேன். பின்பு அந்தப் பிரதமர் மகா சமர்த்தனான ஒற்றனை ஏவி அவன் மனதைக் கலைத்து, மீண்டும் அவர்களின் கும்பலில் கலக்க வைத்து விட்டான்.''

''யார், திரு மலையப்பனையா?'' என்றாள் நந்தினி

''ஆம், உம் சகோதரனை!'' என ஒப்புக்கொண்டான் ரவிதாசன். ''எனக்குக் கூட ஒன்று தோன்றியது. இந்தத் திருமணம் நடந்தால் மாறன் கோபப்படுவான். அவன் சினமெனும் கனலில் நாம் குளிர் காயலாம் என்று தோன்றியது. ஆனால், பழுவூர் அரசருக்கு வேண்டப்பட்டவர்கள் இந்த நாட்டில் பலரும் இருக்கிறார்கள். அவரை எப்படியாவது நம் பக்கம் இழுத்தால் ....'' என்று நிறுத்திவிட்டு யோசனையில் மௌனம் காத்தான்.



''கனவு காணாதீர், ரவிதாசரே. ஜன்மத்துக்கும் அவர் உம் பக்கம் வர மாட்டார்!'' என்றாள் நந்தினி தீர்மானமாக.

''ஏன் வர மாட்டார்? இருப்பது இரு மகள்கள். ஒருத்தி புஜங்கனின் மனைவி. நம்முடன் இருக்கிறாள். இன்னொருத்தியையும் அழைத்து வந்துவிட்டால் பின் பழுவூர் அரசருக்கு வேறு வழி என்ன? தன்னந்தனியாகத் தஞ்சையில் இருப்பாரா?'' என்றான் ரவிதாசன்.

அவன் அறிவுக் கூர்மையைப் பற்றியும் எதிர்காலத்தில் என்ன நடக்கும் என்ற அவனுடைய கணிப்பைப் பற்றியும் நந்தினி அளவற்ற வியப்புக் கொண்டவளாய்த் திகைத்து நிற்கையில் தொடர்ந்தான் ரவிதாசன்.

''சோழர்கள் மீண்டும் நம் கிரீடத்தைத் தேடப் போகிறார்கள். இலங்கைக்கு ஆள் அனுப்பப் போகிறார்கள்'' என்றான். சோழர்களுக்குப் பயந்து பாண்டியரின் மணி மகுடத்தையும், இந்திர தேவன் பாண்டிய வம்சத்துக்கு அளித்த ரத்தின ஹாரத்தையும் ஒளித்து வைத்து ஒரு நூற்றாண்டு ஆனது.

''நமது புராதனக் கிரீடம் மற்றும் ஹாரம் இலங்கையில் இருக்கிறது எனப் பொதுவாக நம்பப்படுகிறது. பாண்டிய மணி மகுடம் இலங்கையில் இருக்கிறதா என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. அவர்கள் கட்டுப்பாட்டில் அது இல்லை என்று சிங்களவர் இன்று கூறுகின்றனர்'' என்றான் ரவிதாசன்.

''கருத்திருமன் என்ன கூறுகிறான்? அவன்தானே அது ஈழத்தில் இருக்கிறது என்று முதலில் சொன்னவன் ?'' என்றாள் நந்தினி

கருத்திருமன் ஒரு பாண்டியப் போராளி. சோழரின் நிலவறைச் சிறையில் பைத்தியக்காரன் போலிருந்தவன். பழையதைப் பற்றிய பல செய்திகளை அறிந்தவன். அவனே புஜங்கனுக்கு அவன் பிறப்பின் ரகசியத்தைக் கூறிப் பாண்டியரிடம் கொண்டு வந்து சேர்த்தான்.

''என்னிடமும் கருத்திருமன் அந்த ரகசியத்தைச் சொன்னான். ஆனால், எனக்கு நம்பிக்கையில்லை. கருத்திருமன் தப்பிப்பதற்காகக் கட்டிவிட்ட கதையைப் போல் அற்புதமான கதை இந்த உலகத்திலேயே கிடையாது. கிரீடம் உள்ள இடம் அவனுக்குத்

தெரியும் என்று சொன்னான். நம்பி வெளியே விட்டார்கள். ஆனால், சோழர்களைப் போல நம்மையும் மடையர்கள் ஆக்கி விட்டானோ? தெரியவில்லை. ஆனால், என் மனதில் பட்டது ஒன்றுதான். நம் பாண்டிய மணிமகுடத்தைத் நாமெல்லாரும் தவறான இடத்தில் தேடிக் கொண்டிருந்தோம்'' என்றான் ரவிதாசன்.

அது நந்தினிக்கு முன்பே தெரியும். அதனால் அவன் கூறிய போது அவள் தேகமெல்லாம் நடுங்கிற்று. உள்ளம் பதைத்தது. இந்தப் புதிரின் விளக்கம் அவள் வாழ்ந்த இந்த இருள் படிந்த குகையின் சுவரில் இருந்தது. புதையலைக் கண்டுபிடிக்க ஒரு கவிதை. அதைப் பலரும் பலவிதமாகப் புரிந்து கொள்ளலாம். ஆனால், இரு வரிச் செய்தியொன்று இந்தக் குகையில் கிறுக்கப் பட்டிருந்தது. அது அந்தக் கவிதைக்கு முற்றிலுமாக வேறு அர்த்தம் கற்பித்தது.

மதுரை மாநகரின் அழகிய விசாலமான வீதிகளையும், மாட மாளிகைகளையும் விட்டு ஓடோடி வந்த சமணர்கள் சிற்ப சித்திர மண்டபங்களை இந்தக் குகையில் அமைத்தனர். அந்தக் குகைச் சுவரில் கூன் பாண்டியன் சமணர்களைக் கழுவேற்றக் கட்டளை யிடும் காட்சியைச் சித்திரித்திருந்தனர். கொடுமையாய் இருந்தது அரசன் முகம். பாண்டியன் தலையில் மணிமகுடமும் நெஞ்சில் ரத்தின ஹாரமும் இருந்தன. அவன் அணிந்திருந்த மணிமகுடமும் ஹாரமும் அருகே கோடிட்டு ஒரு வரி கிறுக்கப்பட்டிருந்தது.

நந்தினிக்கு முன் இந்தக் குகையில் வாழ்ந்த வீர பாண்டியர் மணி மகுடத்தின் ரகசியம் தெரிந்ததால்தான் அதைக் கிறுக்கியிருந்தார். வீர பாண்டியர் இந்தக் குகையிலே நிச்சயமாக இருந்திருக்க வேண்டும். அதற்குச் சான்றாகச் சுவரில் பல கிறுக்கல்கள் இருந்தன. தனியாய் இருந்த அரசன் மனதின் பிதற்றல்களாக இருக்கலாம் அவை என்று இது நாள்வரை நினைத்து விட்டாள். பாண்டியர் மூடுமந்திரமாகக் கிறுக்கிக் கூறியது அவள் உள்ளத்தில் மீண்டும் நினைவு வந்தது.

ரவிதாசனின் வார்த்தைகள் அவள் எண்ணங்களைக் கலைத்தன. ''அந்தப் பொக்கிஷம் எங்கிருக்கிறது என்பதைச் சமயம் வரும் போது எனக்கு விதி தெரியப்படுத்தும் என நம்புகிறேன்'' என்றான் ரவிதாசன்.

இதற்கு நந்தினி மறு மொழி சொல்லுவதற்கு முன் அவள் முகத்தைப் பார்த்த ரவிதாசன், அது மாறியிருந்ததைக் கவனித்து விட்டான். அப்படியென்றால் அவளுக்குத் தெரிந்த எதையோ மறைக்கிறாள் என்று அவனுக்குப் புரிந்தது.



நந்தினியின் முழு ஆர்வத்தையும் பெற்றது அந்த மணிமகுடம் பற்றிய செய்திகள். அந்த மணிமகுடம் அணிந்திருந்தால், பாண்டிய அரசர்களை யாராலும் தோற்கடிக்க முடியாது என்று ஒரு நம்பிக்கை. அதைத் தொலைத்த பின்பே இப்படிச் சீரழிந்தது பாண்டிய வம்சம்.

நந்தினிக்கு ஒரு யோசனை. இப்போது பாண்டியர் தலைமைக்கு மும்முனைப் போட்டி. ஒரு பக்கம் புஜங்கன். மற்றொரு பக்கம் தான். அதைத் தவிர அந்தச் சிறுவன். நந்தினிக்குச் சிறுவனின் மீது அபாரமான பிரியம். தனக்குப் பாத்தியதை இருந்தும் ஒரு நாள் கூட அவள் பாண்டிய நாட்டுக்கு அரசியாக வர வேண்டும் என நினைக்கவில்லை என்றால், அது அவனுக்காகத்தான். தன் உரிமையை அச்சிறுவனுக்காக விட்டுக் கொடுத்து விட்டாள். இப்போது அந்தக் கிரீடம் மட்டுமே அந்த மூவரில் யார் பாண்டிய சிம்மாசனத்துக்கு முதன்மையானவர் என்று நிர்ணயிக்கும்.

அந்த வினாடியில் மணிமகுடத்தை முதலில் கண்டுபிடிப்பது யார் என்ற போட்டி ஆரம்பமானது. சோழர்களை முந்திக் கொண்டு பாண்டியர்கள் அதைக் கண்டு பிடிக்க வேண்டும். அதிலும் மற்றக் கோஷ்டியினருக்கு முன்பே தான் அதைக் கைப்பற்ற வேண்டும் என்ற உறுதி நந்தினிக்கு வந்தது.

'ஆனால், வீரபாண்டியர் கிறுக்கிய வாசகம் குறிப்பிடும் இடத்தில் அது எப்படியிருக்கும்? பின் சோழர்கள் அதைத் தேடத் தேவையென்ன?' என்று நினைத்தாள்.

❖ ❖ ❖

## அத்தியாயம் அறுபத்தொன்று
## ரவிதாசன் கிளம்பினான்

''உன்னிடம் ஒரு வாக்குறுதி கோரப்போகிறேன்'' என்றாள் நந்தினி. அதைக் கேட்டுத் திகைத்தான் ரவிதாசன், நந்தினி கையேந்துகிற காலமும் வந்துவிட்டதாவென்று!

''வரமென்ன, தாயே! கட்டளையென்று உரிமையுடன் சொல் லுங்கள்'' என்றான்.

''இந்தச் சிறுவனுக்குத் தந்தையில்லை. தாய் யாரென்றே தெரியாது. அவன் உறவு முறையில் என் தம்பியாய் இருந்தாலும், என்னை அம்மா என்றே அழைக்கிறான். நானும் அவனை அப்படியே வளர்க்க எண்ணுகிறேன்'' என்றாள்.

ரவிதாசன் முகத்தில் முன்னைவிடத் திகைப்பு அதிகமானது. ''மனம் திறந்து சொல்லுங்கள். என் அரசன் இடும் கட்டளையைப் போல் பாண்டிமா தேவியின் கட்டளையும் என் சிரமேல் கொள்ளத் தக்கது. உமது விருப்பமே என் சிரசின்மேல் சூடும் கட்டளை'' என்று பணிவுடன் கூறினான்.

''அவனுக்கு ஓர் ஆபத்தும் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அது உமது பொறுப்பு'' என்றாள் நந்தினி.

ரவிதாசன் சிரித்து விட்டான். ''தாயே! நாம் என்ன ஊர்த் திருவிழாவிலா பங்கேற்கிறோம்? உரிமைப் போராட்டத்தில் ஒரு மறைமுகப் போர் நடத்தி வருகிறோம். எதிரி வலிமையானவன். இவரைப் பாதுகாக்க முடியுமே தவிர, உயிருக்கு உத்தரவாதம் கொடுப்பவன் மடையன். ஆபத்துதவிகளால் வீரபாண்டியரின் உயிரையே காப்பாற்ற முடியவில்லையே. அதனால்தானே இப்படி நாயாய்ப் பேயாய் அலைந்து கொண்டிருக்கிறோம். சோழனைப் பழி வாங்க. சோழர்களுடன் பெரிய யுத்தம் இனிமேல்தானே நடக்க இருக்கிறது. சக்கரவர்த்தி வீரச் செயல்கள் புரிவதற்கு இனிமேல்தானே சந்தர்ப்பங்கள் வரப் போகின்றன. இதில் நீர் கேட்பது எப்படிப் பொருந்தும்?'' என்றான்.

''தவறாய்ப் புரிந்து கொண்டீர். நான் சோழர்களிடமிருந்து அவனைப் பாதுகாக்கச் சொல்லவில்லை. மற்ற பாண்டியரால் இவனுக்கு ஆபத்து ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்றாள் நந்தினி. ''முக்கியமாக, இந்தச் சிறுவன் மீது தீய சிந்தனைகள் எதற்கும் இடமளியாமல் நீர் எதிர்காலத்தில் செயல்படவேண்டும்'' என்றாள்.

நந்தினி கேட்ட வரம் ரவிதாசனுக்குப் 'பளீர்' என்று அறைந்தாற் போலிருந்தது. நந்தினியால் யாரையும் அதிர்ச்சியூட்ட முடியும் என்று ரவிதாசனுக்கு முன்பே தெரியும். ஆனால், இது அபாண்டம். அவனுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்ட இந்தச் சுதந்திரப் போராட்டத்தில் பல கொலைகளைச் செய்திருந்தான் ரவிதாசன். ஆனால், அதில் பாண்டிய ராஜ வம்சத்தாருக்கு ஒரு கொசுக்கடி வந்தால்கூடத் தவித்துப் போய்விடுவான். எந்த நிலையிலும் அந்தச் சிறுவனுக்கோ, ஏன், நந்தினிக்கோ கூட மற்றவரால் ஒரு தீங்கும் ஏற்பட விட மாட்டான். 'பாண்டிய வம்ச விளக்குக்குத் தன்னால்



தீங்கு நேரக்கூடும் என்று அவள் நினைக்கிறாளே. கடமை உணர்ச்சியுடன் இருந்த அவனைச் சந்தேகித்து விட்டாளே!' என்ற ஆதங்கம் கொண்டான். அப்போது எழுந்த அவமானத்தின் அளவை அவன் உள்ளம்தான் அறியும்.

அவனது மன வேதனைகளைப் பொருட்படுத்தாமல் நந்தினி தொடர்ந்தாள். ''அப்படி அவனுக்குத் தீங்கு ஏதாவது நீர் செய்தால் உம்மை என் பரம எதிரியாகக் கருதுவேன். ஆனால், ஒன்று. என்னையும் கொன்றாலொழிய இவன் சுண்டு விரலையும் உங்களால் ஒன்றும் செய்ய முடியாது!'' என்றாள். ''அவனுக்கு உங்களால் தீங்கு நேரத்தான் வேண்டுமென்றால், என்னுடைய இந்தக் கையினாலேயே அவனைக் கொல்லுவேன். கொன்றுவிட்டு நானும் மாளுவேன். ஆனால், எங்களை உபயோகிக்கும்வரை உபயோகித்துச் சாறு உறிஞ்சிய பழம் போல விட்டெறிந்துவிட்டு உம்மால் வெற்றியை நினைத்துக்கூடப் பார்க்க முடியாது'' என்றும் மிரட்டினாள்.

அவனுக்குக் கோபம் வரும் என்று நினைத்தாளோ என்னவோ, ரவிதாசனின் முகத்தையே உற்றுப் பார்த்தாள் நந்தினி. உள்ளே குமுறிக்கொண்டிருந்த ரவிதாசன் சிரித்துச் சமாளித்தான்.

''பாண்டிமாதேவி! இது என்ன அபாண்டம்! நம் குழுவினரால் நம் சக்கரவர்த்திக்கு அபாயமா? என்ன சொல்கிறீர்? சக்கரவர்த்தியின் விரல் நகத்துக்குக்கூட எங்களால் கேடு வராது!'' என்றான்.

''யாசகம் கேட்பவனைக் கண்டு அஞ்ச வேண்டும் என வாமன அவதாரத்தைப் பற்றி அறிந்தவருக்குத் தெரியும். மூன்றடி மண் கேட்டு மகாபலியின் தலையில் மகாவிஷ்ணு பாதத்தை வைத்து அவனைப் பூமிக்குள் அழுத்தியது போல என் சிரசில் உமது பாதத்தை வைக்க இடம் கேட்டிருந்தால் கூடப் பரவயில்லை. இப்படி என்னைச் சந்தேகித்து விட்டீரே!'' என்றான். அவன் நடிக்கவில்லை. அவனது சோகம் உண்மையாகவே அவன் முகத்தில் பிரதிபலித்தது.

நந்தினி இதிலெல்லாம் ஏமாறுவதாகத் தெரியவில்லை. ''என்ன, ரவிதாசரே! உமது அதிவேகமாகச் செயல்படும் மூளைக்கு இன்னும் இது எட்டவில்லையா? இல்லை, நடிக்கிறீரா? இப்போது தான் உங்கள் போராட்டத்துக்கு ஒரு புதுத் தலைவன் வந்து விட்டானே. அதனால்தான் நாங்கள் தேவையில்லை என்று நினைக்கிறீரா?''

''ஐயோ, தாயே! அவர் உங்கள் கூடப் பிறந்த சகோதரர். அதுவும் ஒரே பிரவசத்தில் உம்முடன் பிறந்தவர். அவர் மீது உமக்கென்ன ஆத்திரம்?'' என்றான்.

நந்தினி இந்தப் பாசமெனும் வலையில் சிக்க விரும்பவில்லை. ''பழைய பேச்செல்லாம் இப்போது வேண்டாம். பட்டம் பதவி என்று வந்து விட்டால் யாருக்கும் ஈவு இரக்கம், தயவு தாட்சண்யம், பாசம் பரிவு கிடையாது. ஒரே வயிற்றில் எம்மைச் சுமந்து ஒரே பிரவசத்தில் எங்களைப் பெற்றெடுக்கவில்லையா எங்கள் தாய்? பத்து மாதம் நாங்கள் ஒரே கருவாய்ச் சேர்ந்திருந்தோம். என்னோடு பிறந்த இரட்டைக் குழந்தை எனக்கே சத்துரு என்றால், பின் யாரை நம்புவது?'' என்றாள்.

என்ன பதில் சொல்வதென்று அறியாமல் அமைதி காத்தான் ரவிதாசன்.

''நான் கேட்ட வரத்தைத் தர ஒப்புக் கொள்கிறீரா?'' என்றாள்.

ரவிதாசன் 'ஆம்' என்பதற்கு அடையாளமாகத் தலையசைத் தான்.

நந்தினியின் சூடான பேச்சுக்குப் பின்பு ரவிதாசன் சில முடிவு களுக்கு வந்தான். 'அவள் பேச்சே வேறு விதமாக இருக்கிறது. எந்தப் பாதிப்பினால் அப்படிப் பேசுகிறாள் எனத் தெரியவில்லை. எது எப்படியானாலும் இனிமேல் நந்தினியை இங்கே காட்டில் தனிமையில் இருக்கச் செய்து அந்தச் சோழர்களின் சதிக்கு உள்ளாக்குவது கூடவே கூடாது. அவளை அழைத்துக் கொண்டு போய் மற்ற ஆபத்துதவிகளிடம் விட்டுவிடுவது மிக்க அவசியம்' என்று முடிவெடுத்தான்.

''பாண்டி மாதேவி! முக்கியமாக நான் வந்தது ஒரு விஷயத்துக் காகத்தான். நான் உமது சகோதரனையும் குடும்பத்தையும் ஈழத்தில் விட்டு வந்தேன். அவர்களைப் பாதுகாக்கவே எங்களுக்கு நேரம் சரியாக இருக்கிறது. அது போலவே உம்மையும் அங்கு கூட்டிச் சென்று விடுகிறேன்'' என்றான் ரவிதாசன்.

நந்தினி சிரித்தாள். ''என்ன பயம், ரவிதாசரே? எனக்காகப் பயமா? அல்லது என்னைக் கண்டு பயமா?'' என்று நகைத்தாள்.

''உம்மைக் கண்டு என்ன பயம்? நான் உம்மை மீண்டும் வரும்படி அழைப்பது சக்கரவர்த்திக்காக.''

''அவருக்கு என்ன? சேலூர் மலைக் குகையில் இருந்தாலும் ஒன்று தான். ஈழத்துக் காட்டிலிருந்தாலும் ஒன்று தான்'' என்றாள்.



''இடையில் ஏதேதோ நமக்குள் களைகள் போல முளைத்து விட்டன. எனினும், நந்தினி தேவி! நம் சக்கரவர்த்தியின் விஷயத் தில் உமது கடமையை உம்மால் முடிந்தவரை பெரும் இடர்ப் பாட்டுக்கு நடுவே நிறைவேற்றுகிறீர்கள். ஆனால், இப்படி அன்பு செலுத்தி வளர்க்கிறீரே!'' என்றான்.

''அதனால் என்ன? தாய் தந்தையில்லாத சிறுவன் அவன்'' என்றாள் நந்தினி.

''ஆனால், இவர் என்றாவது போர்க்களம் போக நேரிடும். அன்று அவருக்கு ஆயுதம் ஏந்தத் தெரிய வேண்டாமா? ஆயுதப் பயிற்சியின்றி இவருக்குப் போர்க்களத்தில் ஏதாவது நேர்ந்து விட்டால்... பாவம்! இவர் உம்மைச் சபிப்பார். விற்போர், வாள்போர், வேல்போர், மல்யுத்தம் என்று இவருக்குப் பயிற்சி தர வேண்டாமா? மீசையரும்பியவுடன் வீரமும் வந்துவிடுமா?''

அவன் சொன்னதில் உண்மை இருந்ததை நந்தினி உணர்ந்தாள்.

ரவிதாசன் தொடர்ந்தான். ''ஆர்வமிருந்தாலும் அரசர் இன்னும் குழந்தையாகத்தான் இருக்கிறார். சோழருடன் மாபெரும் யுத்தம் காத்திருக்கின்றதென்பதை அவர் அறியவில்லை. போர்க்கலையில் அவர் தேர்ச்சி பெற வேண்டும். இவர் ஒரு மாபெரும் வீரராய் விளங்கவேண்டும் என்பதே என் முழு நேர நினைப்பு. புஜங்களை எப்படியொரு கோழையாக வளர்த்திருந்தனர் சோழர்கள்? அவரை வெகு சீக்கிரத்தில் எப்படிப்பட்ட வீரராய் மாற்றினோம் நாம்? இளவரசரை என்னுடன் அனுப்பி வைக்க வேண்டும். நீங்களும் அங்கு வந்துவிட வேண்டும். ஓரிரு ஆண்டுகள் இவர் என்னுட விருந்தால் இவரையும் மாவீரனாக்கி விடுவேன்'' என்று உறுதி அளித்தான் ரவிதாசன்.

சோழர்களிடையே யௌவனத்தைக் கழித்த மதுராந்தகன், 'துறவியாகப் போகிறேன்! சிவ கைங்கரியம் செய்யப் போகிறேன்!' என்று சொல்லிக் கொண்டிருந்தவன், சோழர் சிம்மசனத்தின் மீது பற்றில்லாமல் வளர்க்கப்பட்டவன். அவன் நடை உடை பாவனை யில் கூட ஒரு பெண்மை தெரியும். மதுராந்தகனை முழு அசடன், கையில் வாள் எடுத்து அறியாதவன், பெண்ணாய்ப் பிறக்கத் தவறி ஆணாகப் பிறந்தவனெனச் சோழ நாட்டில் கேலி செய்தனர். அவனுக்குத் தேவாரம் பாடவும், திருவாசகம் ஜபிக்கவும் மட்டும் தான் தெரியும் என்றனர். அப்படிப்பட்டவனை மாபெரும் வீரனாக உருவெடுக்கச் செய்தவன் ரவிதாசன். அதுவும் காடெனும் குருகுலத்தில் ரவிதாசனை ஆசானாய்க் கொண்டு. இன்று

பாண்டியரின் விடுதலைப் போராட்டத்துக்குத் தலைமை தாங்கும் அளவுக்கு புஜங்கன் என்ற பெயருடன் உயர்ந்துவிட்டான்.

நந்தினிக்கும் அந்தக் கவலையுண்டு. "இவன் பத்திரமாக இருப்பான் என்று தெரிந்தால் உம்முடன் அனுப்ப நான் தயங்க மாட்டேன். ஆனால், இந்தச் சிறுவனுக்கு நீர் செய்த மகுடாபிஷேகம், அவனை அரியணை மேல் ஏற்றி அழகு பார்க்கிறேன் என்று நீர் செய்த உறுதிமொழி எல்லாம் நீரின் மேல் எழுதிய எழுத்துதான் போலும் என்ற எண்ணம் எனக்குத் திடமாக வந்து விட்டது" என்றாள்.

பதில் சொல்ல இயலாமல் இருந்தான் ரவிதாசன். உண்மைதான். அந்தச் சிறுவன் ஒருவனே வீரபாண்டியரின் வம்சம் என நினைத்து அதையெல்லாம் செய்திருந்தான். இன்றோ வாரிசுகள் சகட்டு மேனிக்குத் தோன்றிவிட்டனர். ஏன், இந்த நந்தினி கூட வீர பாண்டியரின் மகள்தானே. ஆனால், இவர்கள் எல்லாரை விட அமர புஜங்களின் மேலே அதிக நம்பிக்கை வைத்திருந்தான் ரவிதாசன். அவனுக்குப் பழுவூர்த் தொடர்பிருந்தது ஒரு காரணம்; என்றாவது பழுவூருடன் பாலம் ஏற்பட அவன் வழி வகுப்பான் என்பதனால்.

ஆனால், ஒன்று. பல வாரிசுகள் என்று வந்தவுடன் போராட்டத்தைக் கிரகணம் புகுந்து பற்றிக் கொண்டது. சகோதர சகோதரிகளுக்குள் என்றும் அன்பும் பரிவுமே திகழும் என்றால், இப்பொழுது, ஒருவர் மீது ஒருவர் குற்றங்குறை கூறிக் கொண்டிருந்தார்கள்.

'இதைப் பற்றிப் பேச்செடுத்தால் இன்னும் பொல்லாப்பு வரும். புறப்படும் போது நட்புணர்வுடன் செல்ல வேண்டும். கசப்புடன் சென்றால் நாளை திரும்ப முடியாது' என்று நினைத்த ரவிதாசன், பேச்சை மாற்றினான்: "நமது எதிர்காலம் நம் விருப்பமில்லாமல், நம் எதிரிகளால் நிர்ணயிக்கப்படுகின்றது. நம்மைச் சுற்றி நடக்கும் பல விஷயங்கள் நம்மையும், நம் குலத்தின் எதிர் காலத்தையும் பாதிக்கும். ஆனால், நம்மால் ஒன்றும் செய்ய இயலவில்லை. நாட்டை மட்டும் கைப்பற்றியதில் சோழன் மனம் திருப்தியடையாது போலிருக்கிறது. நாம் உயிரோடிருப்பதே அவர்களுக்குப் பிடிக்கவில்லை. நம்மையும் கொன்று போட்டால்தான் அவன் வெறியடங்கும் போல. நம் குலத்தின் நம்பிக்கையான பாண்டிய குல வாரிசுகளுக்கு எந்தச் சமயத்தில் என்னவாகுமோ என்ற பயம் எனக்கு. அதனால்தான் பலரையும் எதிர்காலத் தலைமைக்குத் தயார் செய்ய வேண்டியிருக்கிறது. ஆனால்,



அவர்களுக்கிடையில் முடிந்தவரை பாரபட்சம் இல்லாமல் நடந்து கொள்ளவே நான் முயற்சிக்கிறேன்" என்றான் ரவிதாசன்.

ஓரிரு நாட்கள் தங்கியிருந்துவிட்டு ரவிதாசன் கிளம்ப முடிவு செய்தான். கடைசியாக ஒரு முறை நந்தினியிடம் பேசிப் பார்க்கலாம் என்று முடிவு செய்தான். "பாண்டிமா தேவியிடம் நானும் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளப் போகிறேன். நீங்கள் எல்லாரும் தேவி மீனாட்சியின் வழித் தோன்றல்கள்..." என்று அவன் முடிப்பதற்கு முன்னால், "போதும் போதும்! அப்படியெல்லாம் சொல்லித்தான் எல்லாருமாகப் பாண்டிய சாம்ராஜ்யத்தை இந்தக் கதிக்குக் கொண்டு வந்து விட்டார்கள்!" என்றாள் நந்தினி கோபமாக.

"சரி, தாயே! நீங்கள் மூவரும் வீரபாண்டியரின் வழித் தோன்றல்கள். நீங்கள் மூவரும் சேர்ந்தீர்களென்றால் எவ்வளவோ அரும் பெரும் காரியங்கள் செய்யலாம்!" என்றான் ரவிதாசன். "மனித வாழ்க்கையை நீர்மேற் குமிழி என்று சான்றோர் சொல்லியிருக்கிறார்கள். அதிலும் நம் போன்ற போராளிகளின் வாழ்க்கை நிலையாமையைச் சொல்ல அவர்களுக்கே வார்த்தை கிட்டியிருக்காது. இதில் நாம் இப்படிச் சண்டை போட்டுக் கொள்கிறோம் என்றுதான் எனக்கு வருத்தமாய் இருக்கிறது" என்றான்.

"அதை உமது புதுத் தலைவனிடம் சென்று சொல்லும்!" என்று சீறினாள் நந்தினி.

நாடில்லை, அமர அரியாசனம் என்ன- ஒரு நாற்காலி கூட இல்லை. அதற்குள் தாயாதிச் சண்டை ஏற்பட்டு விட்டது என்று நினைத்த ரவிதாசனுடைய ஆத்திரம் பன்மடங்கானது. ஆனால், யார்மேல் அதைக் காட்டுவது என்றுதான் அவனுக்குத் தெரியவில்லை. நமக்கென்ன என்று ஒதுங்கவும் அவனால் முடியவில்லை. தேவைக்கு அதிகமான தேசப் பற்றுக் கொண்டவனும் ஒரு வகையில் பைத்தியக்காரன்தான் போலும்.

அந்தச் சிறுவனைப் பிரிந்து செல்வதற்கு முன்னால் அவனை அன்புடன் தழுவிக் கொண்ட, ரவிதாசன், நாத் தழுதழுக்க, "அரசே! சிறு பிராயத்தில் உங்கள் தந்தையை இழந்தீர்கள். காட்டில் வாழ முற்பட்டீர்கள். உம்மை என்றாவது மதுரையின் அரியணையில் ஏற்றிப் பார்க்க வேண்டும் என்பதே என் வாழ்க்கையின் குறிக்கோள்" என்றான்.

"ரவிதாசரே! உம்மிடம் நிறையக் கேள்விகள் கேட்டுப் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள எண்ணினேன். இவ்வளவு சீக்கிரமாய்ப் பிரிந்து செல்கிறீரே!" என்றான் சிறுவன்.

சிறுவனை மீண்டும் தழுவினான். "அரசே! உமக்கு ஒரு நாள் தெரிய வேண்டியதெல்லாம் தெரியும். இப்போதைக்கு உம் மனதைப் பாரப்படுத்திக் கொள்ளாதீர். ஒரு பைத்தியக்கார வார்த்தையை யாரேனும் உதிர்க்கும் வரைதான் ஒரு ரகசியம் உயிர் வாழும்" என்றான்.

"அரசே! விடைகொடுங்கள்." என்று சொல்லி ரவிதாசன் சிறுவனுக்கு முன் தரையில் தண்டனிட்டான். ஒன்றும் புரியாமல் விழித்தான் சிறுவன். அவன் கண்ணில் கண்ணீர் வந்தது. நந்தினியின் கண்ணும் கலங்கியது.

விரல் கொண்டு சிறுவனின் கண்ணீரைத் துடைத்தான் ரவிதாசன். "துன்பமெல்லாம் இந்தக் கண்ணீருடன் கரையட்டும். இனி நீர் கண் கலங்கும் சந்தர்ப்பமே ஏற்படாது. கடவுளின் கருணையை நம்பி வாழ்ந்த காலங்கள் போயின. இனி நாமேதான் போராடித் தர்மத்தை நிலை நாட்ட வேண்டும்" என்றான் ரவிதாசன்.

அரியணையில் அமர்ந்திருக்கும் அரசன் கட்டளையைச் சிரமேற்கொண்டு செயல்பட ஆயிரமாயிரம் பேர் இருப்பார்கள். ஆனால், இந்த நிலையிலும் அன்பு செலுத்தும் ரவிதாசன் மேல் நந்தினிக்கு மதிப்பு வந்தது.

ரவிதாசன் கிளம்பினான். மலை மேலிருந்து நந்தினியும் சிறுவனும் கையசைத்தனர். அப்போது சட்டென முந்திய இரவு நடந்த உரையாடல் ரவிதாசன் நினைவுக்கு வந்தது.

"விடுதலை வேட்கையில்லாதவன் வெறும் கற்பாறைக்குச் சம மானவன்!" என்று அவன் சொல்ல, நந்தினி குறுக்கிட்டு, "அதைப் போய் மதுரை மக்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள்" என்றாள்.

"உண்மைதான், பாண்டிமாதேவி. மெய்யான பேச்சு!" என்று ரவிதாசனும் ஒப்புக் கொண்டான். "பாண்டிய நாட்டுப் பட்டறையில் மலை மலையாக வேலும் வாளும் குவிந்திருக்கும் என எதிர்பார்க்க முடியாது. சொந்தத்தையும் பந்தத்தையும் உதறிவிட்டு வாலிபர்கள் போர்க் களத்தில் உயிரை விடத் தயாராக இருப்பார்கள் என்றும் சொல்ல முடியாது. யுத்தம் ஆரம்பமாகும் போது கூடப் பலரும் பெண்கள் போல வீட்டை வெளியே பூட்டிவிட்டு உள்ளே பதுங்கியிருக்கிறார்கள். சுத்த வீரர்களுக்குத் தட்டுப்பாடிருந்தது. அஞ்சா நெஞ்சம் கொண்ட வீரர்கள் இல்லை. இன்று மதுரை மக்கள் சோழனுக்கு ஒரு வார்த்தை எதிர்த்துப் பேசுவதற்குக் கூடப் பயந்து பயந்து இருந்தபடியால் தான் இந்த நாடு இந்த கதிக்கு வந்தது!" என்றான். "ஆனால், ஒன்று. நம் உயிரினும் மேலான விடுதலை வரும்வரை கஷ்டமோ நஷ்டமோ போராடித்தான் ஆக வேண்டும். கொடுந்தண்டனை கொடுத்திருக்கிறான் சோழன். நம்மைக் கொன்றிருந்தால் கூட, நாம் சிந்திய ரத்தத்தில் பல நூறு வீரர்கள் உதித்திருப்பார்கள்!" என்றான்.



இவர்களின் சம்பாஷணையை உற்றுக் கேட்டுக் கொண்டிருந்த சிறுவன், "அம்மா சொல்லும் கதையில் கேட்பது போல இருக்கிறது. நீர் என்ன அதிசய வரம் பெற்ற அரக்கனா? உமது ரத்தத்துக்கு அந்த வலிமையுண்டா?" என்று கேட்டுவிட்டுச் சிரித்தான்

தனது வார்த்தைகளின் பொருளை விளக்கினான் ரவிதாசன். "இல்லை, அரசே. நம் தியாகத்தைக் கண்டு நூறு கோழைகள்கூட வீரர்கள் ஆவார்கள் என்பதுதான் அதன் பொருள்" என்றான்.

மலை இறங்கும் போது ஒரு முறை திரும்பி பார்த்தான் ரவிதாசன். இறுக்கமான முகத்துடன் நந்தினி. அவள் அருகே கையாட்டும் குழந்தைச் சக்கரவர்த்தி. நேற்றிரவின் சம்பாஷணை நினைவுக்கு வந்தபோது அந்தச் சிறுவன் கையை அசைத்துக் கொண்டிருந்தான். இரண்டையும் இணைத்துப் பார்த்தான் ரவிதாசன். நல்லதொரு யோசனை வந்தது.

'இவர்கள் எல்லாரும் வீரபாண்டியரின் வாரிசுகள். தாய் எப்படியிருந்தாலும், அரசர் மகிழ்ச்சியோடு வாழ்க்கை நடத்தியுள்ளார். அந்த மண வாழ்க்கை சில மணி நேரமாயிருந்தாலும் இவர்களெல்லாம் பாண்டியரின் சுதந்திரத்தின் சின்னமானார்கள். பாண்டிய மக்களைச் சோழர்களுக்கு எதிராகத் தூண்டும் சம்பவம் ஒன்று நடக்க வேண்டும். அப்போதுதான் பாண்டிய மக்கள் பொங்கி எழுவார்கள். சோழர் ஆட்சியைத் தூக்கியெறிவார்கள். அதற்காகப் பாண்டிய நாட்டு அரச குலத்தில் பிறந்த இம்மூவரில் ஒருவரை பலி கொடுத்தால் கூடத் தவறில்லை' என்று முடிவெடுத்தான். 'ஏதாவது விபரீதம் நடந்தால்தான் பாண்டிய நாட்டு மக்கள் எழுச்சியூட்டப் படுவார்கள். எதிரியின் யுவராஜன் கொலையுண்டதில் அந்த எழுச்சி வரவில்லை. நமது யுவராஜன் மாண்டலாவது அந்த எழுச்சி வருமா?'

சுதந்திரப் போரில் யாரை பலி கொடுப்பது என்று ரவிதாசன் இப்போது ஒரு முடிவுக்கு வந்துவிட்டான். 'புஜங்கன் மற்றும் நந்தினியின் போக்கு அவ்வளவு திருப்திகரமாயில்லை. எனினும் அவர்கள் இருவரின் சேவையும் தேவைப்பட்டது. அதனால்.....'

ஆனால், அவன் மனச்சாட்சி கேட்டது. 'இப்போது நந்தினிக்குச் செய்து கொடுத்த சத்தியம்?' சிரித்தான். 'சாகும் தறுவாயில்

இருக்கும் ஒருவனைக் காப்பாற்ற எந்தச் சத்தியத்தையும் மீறலாம் என்று பெரியவர்கள் சொல்லுவார்கள்.'

சாகும் தறுவாயில் இருந்த பாண்டிய விடுதலைப் போராட்டத்தை மீட்க இந்தச் சத்தியத்தை மீறலாம்.

நேரம் வந்தால்; சந்தர்ப்பம் இருந்தால்!

❖ ❖ ❖

## அத்தியாயம் அறுபத்திரண்டு
## ஆடல்வல்லானின் அபிஷேகம்

ஆடல்வல்லான் உலகம் தழைக்க நடனமாடும் சிற்றம்பல நகரின் தென் எல்லையில் குடந்தைக்குச் செல்லும் ராஜபாட்டை தொடங்கியது.

இந்த ராஜபாட்டையில் பயணத்தை ஆரம்பித்தவுடனேயே ஒரு பெரிய ஆற்றைக் கடக்கும் நிர்பந்தம் பயணிகளுக்கு ஏற்படும். ஏன் என்றால் கடலையொத்த கொள்ளிட நதி அந்த ராஜபாட்டையை வெட்டியது.

இன்று வழக்கத்தை விட அதிகமாக அந்த ராஜபாட்டையில் போக்குவரத்து இருந்தது. அந்த ராஜபாட்டையில் ஓரிரு நாட்களாகப் பயணித்த மக்களுக்கும் குறைவில்லை. இப்படிச் சோழ சாம்ராஜ்யமே இந்தத் தில்லை நகரில் கூடத்தான் காரணம் என்ன?

அந்த ராஜபாட்டையின் ஓரத்தில் ஓர் அரேபியக் குதிரையின் மேல் அமர்ந்திருந்தான் அந்த வீரன். தெற்கிலிருந்து வந்து சேரும் சாலையைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். அவ்வப்போது பின்னால் திரும்பிப் பார்த்தவனுக்கு உச்சி வெய்யிலில் சிதம்பரம் கோயில் கோபுரங்களின் மேலிருந்த கலசங்கள் ஜொலித்தன.

அது போலவே உள்ளிருக்கும் கூத்தனின் சபையும் ஜொலிக்கும்; ஜகஜோதியாக இருக்கும்தான். பராந்தகர் வேய்ந்த பொன், அதன் மேல் சோழரின் சைவ பக்தியைக் காலம் உள்ளவரை பறை சாற்றும் அல்லவா? ஆனால், குதிரையின் மேல் அமர்ந்த வீரனுக்கே அந்தக் காட்சி கிடைக்கவில்லை. கோட்டை கொத்தளங்களை ஒத்த கோயிலின் மதில் சுவர்கள் அதை மறைத்தன.

ஒரே இடத்தில் அதிக நேரம் இருந்ததால் புரவி பொறுமையிழந்தது. 'அதே இடத்தில் எஜமானர் நிற்க வேண்டுமென்றால் ஒரு



நாற்காலியைத் தேர்ந்தெடுத்திருக்கலாமே. நம்மை ஏன் ஓரிடத்தில் நிற்க வைத்து வதைக்கிறார்!' என்றும் நினைத்தது.

அதன் பொறுமை குறைந்ததை அறிந்த வீரன். அதன் பிடரியைத் தடவிக் கொண்டே, "இன்னும் கொஞ்ச நேரம்தான். பொன்னியின் செல்வரும் வந்தியத் தேவரும் வருகிறார்கள். நம் நாட்டுக்கு வருகிறார்கள். அவர்களை வரவேற்காமல் இருக்கலாமா?" என்றான் மாறன்.

ஏதோ எஜமானர் பேசியது புரிந்தது போலப் பிடரி மயிரைச் சிலிர்த்துக் கொண்டது குதிரை.

"அவர்கள் மட்டுமல்ல. உனது எஜமானியும் வருகிறாள்!" என்று சொல்லத் துடித்தான். ஆனால், சொல்லவில்லை.

எஜமானரிடம் சென்ற சில காலமாகக் காணப்படாத பரபரப்பை உணர்ந்தது அந்த ஐந்தறிவு ஜீவன். ஆனால், அதனிடம் கூட அவனுக்குத் தெரிந்த விஷயத்தைச் சொல்ல வில்லை. பொன்னியின் செல்வர் வருகிறார், வந்தியத் தேவர் வருகிறார். அவர்களுடன் குந்தவையும் வருகிறார். வானதியும் வருகிறார். முக்கியமாக அவர்களுடன் தான் உயிருக்கு உயிராய் நேசிக்கும் பழுவூர் இளவரசி லோகாவும் வருகிறாள். ஆசைக் கண்மணியோடு கனவிலும், நினைவிலும் எத்தனை யுகம் கொஞ்சினாலும் தனக்கு ஆசை தீராது. ஆயிரமாயிரம் கவிதைகளை எழுதி அவளுக்குச் சமர்ப்பணம் செய்தாலும் போதாது. ஆனால், அவள் அவன் நாட்டுக்கே விஜயம் செய்தது பேரானந்தத்தைத் தந்தது.

இப்படிக் குதிரையுடன் கடம்பூர் இளவரசர் சல்லாபம் செய்கிறதைப் பார்த்துத் தூரத்திலிருந்த மக்களுக்கெல்லாம் சிரிப்புத்தான். அதை விட அருகில் தரையில் படுத்து உறங்கிய வீர வைணவனைக் கண்டும் வருவோர் போவோருக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. அன்று மனதுக்குள் விழுந்து விழுந்து சிரித்துவிட்டு வெளியே ஒரு புன்முறுவலை மட்டும் காட்டிச் சென்றவர் ஏராளம்.

சிறுபிள்ளையின் ஏக்கத்துடன் சாலையைப் பார்த்தான், மாறன். 'போர்க்களம் எனக்குப் புதியதா? இல்லை, யுத்தந்தான் புதியதா?' என்று வீராவேசத்துடன் ஒவ்வொரு முறையும் காலனைச் சந்திக்க நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு போகும் வீரன் கூடக் காதல் வந்தால் மாறிவிடுகிறான். புதிதாய்க் காதல் கொள்ளும்போது முகத்தில் அரும்பியிருந்த இள மீசையுடன் பெண்ணின் மீது ஒரு ஆசை வருமே, அந்தக் காலத்துக்குச் சென்று விடுகிறான் அல்லவா? சாலையைத் துருவித் துருவி ஆராய்ந்தான். குதிரைக்கு நின்று

நின்று கால்கள் வலித்தன. எஜமானருக்குக் கண்களும்கூட வலித் தன. ஆனால், மனம் மட்டும் மகிழ்ச்சியில் தாண்டவம் ஆடியது.

சாலை நிரம்பி வழிந்தது. சிதம்பரம் வந்து சேரும் சாலையில் கூண்டு போட்ட இரட்டை மாட்டு வண்டிகள் பலவும் வந்தன. ஆனால், அவன் எதிர்பார்த்துக் காத்திருந்த அரச குலத்தின் ஊர் வலம் வந்தால் தூரத்திலேயே தெரிந்துவிடும் என்று மாறனுக்குத் தெரியும். கொள்ளிடத்தின் மறு கரையிலேயே தெரிந்து விடும். அரச குலம் பல்லக்கிலும் தேரிலும்தான் வரும். ஆனால், அரச குலத்துக்குக் காவலாக, அவர்களுக்குச் சேவை செய்ய, அவர்களை ஆடிப்பாடி மகிழ்விக்கும் மக்களெல்லாம் நூற்றுக் கணக்கான வாகனங்களையே உபயோகிப்பார்கள். அவர்களுடன் வந்த பரிவாரங்கள் கிளப்பிய தூசு வானம்வரை மேக மண்டலம் போல் அல்லவா எழும்? அது இன்னும் கண்ணுக்குப் புலப்படவில்லையே?

கொள்ளிடத்தின் வடகரையில் கடம்பூர் ஆட்கள் இருவரை நிறுத்தி வைத்திருந்தான் மாறன். அக்கரைக்கு ஊர்வலம் வந்த வுடன் காற்றெனப் பறந்து வந்து இவனுக்குச் சொல்லிவிட்டுப் பின் ஊருக்குள் சென்று மேள தாளத்தைக் கொண்ட வரவேற்பை ஏற்பாடு செய்ய வேண்டும் என்பது அவர்களின் கடமை.

அரச குலத்தின் விஜயத்தை ஒட்டி மட்டுமல்ல. நடராஜருக்கு ஆனித் திருமஞ்சனம் என்பதால் மக்களெல்லாம் பெரும் எண்ணிக் கையில் வந்து கொண்டிருந்தனர். சோழர்கள் கலந்து கொள் வார்கள் என்பதால் கூட்டம் இன்னும் அதிகம். தினம் தோறும் மூன்றோ, ஆறு காலமோ அபிஷேகம் நடக்கும் கடவுள்களுக்கு இல்லாத மகிமை நடராஜருக்கு உண்டு. வருடம் ஆறு முறை மட்டுமே தேனிலும், பாலிலும், சந்தனத்திலும் குளிக்கும் நடராஜரின் போக்கே மக்களை அந்த அபிஷேகங்களுக்குக் கவர்ந் திழுத்தது.

இளம் சம்புவராயன் நின்றிருந்த இடத்தின் அருகே பயணி களின் வண்டிகள் பலவும் நின்று கொண்டிருந்தன. ஊரை அடை யும் முன் கடைசியாக ஒரு முறை ஓய்வெடுத்தனர். மதிய உணவை உண்டுவிட்டு ஊருக்குள் பொழுது சாயும் முன் நுழையலாம் என்று முடிவெடுத்திருந்தனர்.

பலவிடங்களில் மதிய உணவைச் சமைக்கத் தொடங்கி விட்டனர். அருகிலிருந்த கிணறுகளிலிருந்து நீர் இறைத்துக் குளித்தார்கள். குழந்தைகளோ விடுதலை பெற்ற பறவைகள் போல அங்கும் இங்குமாய் இரைந்து கொண்டே ஓடினர்.



மாறன் சற்று நேரம் வந்தவர்களைக் கவனித்தான். எல்லாம் இரட்டை மாடு பூட்டிக் கூடிட்ட வண்டிகள். ஒரு குடும்பத்தையே சுமக்கக் கூடிய வண்டிகள். எல்லாரும் நின்றிருந்த வண்டிகளி லிருந்து மாடுகளை அவிழ்த்துவிட்டனர். மாடுகளும் அருகிலிருந்த புல்லை மேய ஏதுவாக இருந்தது.

அந்தக் கூட்டத்திலிருந்து பலரும் வந்து இவர்களுடன் கட்டுச் சாதத்தைப் பகிர்ந்து கொள்ள ஆசை தெரிவித்தபோதும், மாறன் சிரித்தே மறுத்து விட்டான். அடியானை எழுப்பி உணவு வேண்டுமா என்று கேட்க அவனுக்குத் தோன்றவில்லை.

ஒரு நேரம் வண்டிகளைக் கவனித்தான். பின்பு அது சலித்துப் போகவே வண்டிகள் சென்ற பாதை அருகே புன்செய்க் காடு களைப் பார்த்தான். அங்கு கம்பும் கேழ்வரகும் வளர்ந்திருந்தன. அதை நாடி வந்த கிளிக் கூட்டத்தைக் கல்லால் அடித்து விரட்டக் காத்திருந்தார்கள் இளம் பெண்கள். அவர்கள் பொழுது போகாமல் பாடிய பாடலைக் கேட்டான்.

நாம் போன முறை பார்த்ததிலிருந்து இந்தக் கடம்பூர்ப் பகுதி யில் பெரிய மாற்றம். ஒன்பது மாதங்களில் இவ்வளவு மாற்றம் ஏற்படுமா என்று எல்லாரும் கேட்கலாம். ஐந்தாண்டுகளாக வறட்சி தலைவிரி கோலமாகத் தாண்டவமாடிய நாடு இது. நடராஜருக்குக் கூட அன்னம் படைக்கத் தடுமாறினார்கள் தில்லை வாழ் அந்தணர். பின்பு திடீரென ஐந்து வருடங்களாகக் கடம்பூரை மறந்த மேகங்கள் அதன் மேல் சங்கமித்தன.

மழை பிடித்துக் கொண்டு பதினைந்து நாட்கள் வரையில் விடாமல் பொழிந்தது. அதன் காரணமாக, ஏரிகளெல்லாம் தண்ணீர் நிறைந்து ததும்பிக் கொண்டிருந்தன. தென்னந் தோப்புகளும் வாழைத் தோட்டங்களும் எங்கும் செழித்திருந்தன. சுற்றியிருந்த நன்செய் வயல்களில் இந்த ஆண்டு மூன்று போக வேளாண்மையுண்டென்று மக்களே பேசி மகிழ்ந்தனர்.

ஆனால், முதலில் விதைக்கு வைத்திருந்த நெல்லைக்கூட இந்த ஐந்தாண்டுப் பஞ்சத்தில் உண்டு தீர்த்து விட்டனர் கடம்பூர் மக்கள். பல ஆண்டுகளுக்குப் பின் முதல் முறையாகச் சம்புவராயர் வீட்டுக்கு முன் நின்று மக்கள் குறைகளைத் தெரிவித்தார்கள். அதில் மகிழ்ச்சியடைந்த அவருக்கு என்ன செய்வதென்று தான் புரியவில்லை. வேகமான குதிரையில் வீரன் ஒருவனைக் கொண்டு மாறனுக்குச் செய்தி அனுப்பினார்.

அவசர அவசரமாகத் தஞ்சைக்குச் செய்தி அனுப்பியதுதான் நாமதம். மாறன் சென்று பிரதமரைப் பார்க்க, அடுத்திருந்த

மயிலாடுதுறையிலிருந்து வண்டி வண்டியாக விதை நெல் வந்தது. அடுத்த ஆண்டு ஒரு வண்டிக்கு இரண்டு வண்டியாகத் திருப்பி அனுப்ப வேண்டும் என்று செங்கண்ணார் சம்புவராயர் கட்டளை யிட்டிருந்தார்.

மக்களும் விதை நெல் பெற்ற ஆனந்தத்திலும் இனி அரை வயிற்றையாவது நிரப்பிவிட வேண்டும் என்று போராடிய காலங்கள் போயின என்ற நிம்மதியிலும் ஒப்புக் கொண்டனர். அது இந்த ஆண்டே நிச்சயம் சாத்தியம்தான் என்று அருகிலிருந்த செழிப்பைப் பார்த்தால் தெரிந்தது. இந்தச் செழிப்பில் இன்னும் பல விஷயங்களும் தெரிந்தன. சோழர்கள் சம்புவராயரை மீண்டும் அரவணைத்துக் கொண்டனர் என்று அனைவருக்கும் தெரிந்தது. சோழர்களின் நல்ல ராசி சம்புவராயருக்கு ஒட்டிக் கொண்டது என்றும் தெரிந்தது.

மீண்டும் சாலையை நோட்டம் விட்ட மாறனிடம் இனம் காண முடியாத ஆனந்தம். இன்னதென்று சொல்ல முடியாத பரபரப்பு. சில நாட்களாகவே தென்றல் போன்ற ஞாபகம் ஒன்று அவனைச் சூழ்ந்து அவன் செல்லுமிடமெல்லாம் சென்றது.

'லோகா வருகிறாள்! லோகா வருகிறாள்!' முக்கியமாக அவள் அப்பா வரவில்லை என்பது மாறனுக்கு இன்னும் நிம்மதியைக் கொடுத்தது. அந்தப் பழுவூர்ப் பெண்ணுடன் இவ்வளவு நாட் களாகப் புன்னகையைத் தவிர வேறு எவ்வித உணர்ச்சியையும் பரிமாறிக் கொள்ளவில்லை. மனத்தில் அத்தகைய பிரளயக் குழப்பத்தைச் சுமந்துகொண்டு இவ்வளவு நாட்கள் இருந்த மாறனே இன்று வேறொரு மனிதனாய் இருந்தான். 'இந்த முறை மனம் திறந்து பேசிவிட வேண்டும். அவளைக் கடம்பூரிலிருந்து வந்த அம்மாவிடம் அழைத்துச் சென்று அறிமுகம் செய்ய வேண்டும்' எனப் பற்பல ஆசைகள் கொண்டான்.

திடீரென இவர்கள் அனைவரும் தன் நாட்டுக்கு விஜயம் செய்தது தனக்குச் சாதகம்தான். தாங்கள் இன்னும் சோழர்களின் நண்பர்கள்தாம் என்று வெளிக்காட்ட இது உதவும். ஐந்தாண்டு களாக ஒன்றும் நன்றாய் நடக்காமல் தவித்தான். ஒரு மாற்றமும் இன்றி இதே ரீதியில் அவர்களுடைய வாழ்க்கைப் பிரயாணம் நடந்து கொண்டிருந்தது. ஆனால், இன்று புது அந்தஸ்து, ஒரு பெண்ணின் நட்பு, அரச குலத்தின் மரியாதை என்று திக்குமுக்காடி விட்டது மாறனின் வாழ்க்கை.

ஆனால், இந்தத் திடீர் விஜயம் எதற்காக நிகழ்கிறது? ஐந்தாண்டு களாகச் சிதம்பரத்தில் ஆனித் திருமஞ்சனம் நடந்ததே? அப்போ



தெல்லாம் வரவில்லையே. வந்தாலும் கோயிலில் கும்பிட்டு விட்டு நேரே சென்று விட்டனரே சோழர்கள்!

இது தீர்த்த யாத்திரை மட்டுமல்ல. அதற்கும் மேலானது என்று மாறன் யூகித்திருந்தான். இதற்குள்ளாக இந்த வைணவனுடன் சேர்ந்து எல்லாவற்றையும் தீர ஆராய்ந்து பார்க்கக் கற்றுக் கொண்டு, எதையுமே முகத்தோற்றத்தை வைத்து எடை போடக் கூடாது என்று முடிவெடுத்திருந்தான். அரசியலில் மறைமுகமாக எல்லாவற்றுக்கும் பின்னணிகள் இருந்தன என இப்போது அவனுக்கு புரிந்தது.

இப்போது கடம்பூர் நாட்டுக்குச் சோழர்களின் விஜயம் சிற்றரசர்களுடன் உறவை மீண்டும் பலப்படுத்துவதற்காகத்தான் என்று அதை ஆராய்ந்தவனுக்குத் தெரிந்தது. பழுவூரை மீண்டும் அரவணைப்பில் கொண்டு வந்து விட்டனர். அடுத்தது சம்புவராயர் தான். அதில் முதல் படியாக அவனை அழைத்துத் தஞ்சையில் கௌரவித்தாயிற்று. இனித் தந்தையாரை அன்பில் மூழ்கடித்துத் திக்குமுக்காடித் தத்தளிக்க விட்டுவிடுவார்கள்.

இரு வாரங்களுக்கு முன் பிரதமர் மாறனை அழைத்து இன்னும் ஒரு அரசாங்க வேலை இருக்கிறது என்றவுடன், மாறனின் விரக்தி வெளி வந்தது. அவர் என்ன வேலை என்று சொல்வதற்கு முன்பே, ''ஐயா! இதுவரை நான் சென்ற பல வேலைகளும் தோல்வியில் முடிந்தன. எனக்கும் மனச் சோர்வு அதிகமாக உள்ளது. எல்லாரும் என்னைக் கேலிப் பார்வையுடன் பார்ப்பது போலிருக்கிறது'' என்று வருத்தப்பட்டான்.

பிரதமர் ஆறுதலாய், ''நாட்டிலும் நகரத்திலும் வம்பு பேசுகிறவர் களுக்கு ஏது குறைச்சல்? அதெல்லாம் பற்றிக் கவலைப் படாதே!'' என்றார். அடியானும் அடிக்கடி சொல்வதையே பிரதமர் அப்போது சொன்னார். ''இது என்ன போரா? அரைமணி நேரத்தில் வெற்றி தோல்வியை நிர்ணயிக்க. இது ஒரு மறைமுக யுத்தம். வெற்றி என்று பறைசாற்றுவது தோல்வியாகலாம். தோல்வியென்று தலை குனிவது பின்னொரு நாளில் மாபெரும் வெற்றியாக இருக்கலாம். இந்த வேலைக்கு நீரே உகந்தவர்!'' என்றார். ''வேறு யாரையும் அனுப்ப முடியாது.''

''நமக்கு இவ்வளவு மதிப்பா?'' என்று மாறனே திகைத்தான்.

பரம்பரையான ஆச்சாரியத் தொழிலை விட்டுவிட்டுப் பிரதமர் இராஜ சேவையில் இறங்கியது இந்த நாடு செய்த தவப்பயன்தான். ''நாட்டில் நடக்கும் எல்லாவற்றையும் அது நிகழும் முன்பே

யூகித்தறியும் இவருக்கு ஜோதிடமும் தெரிந்திருக்க வேண்டும்!'' என்றுகூட மாறன் நினைப்பதுண்டு.

எனினும் மாறன் உடனடியாக ஒப்புக் கொள்ளவில்லை. ''என் பெற்றோரையும் நான் பார்த்து வெகு நாட்களாகிறது....'' என்று இழுத்தான்.

பிரதமர் புன்னகைத்தார். ''ஆகா! அப்படியென்றால் உமக்குக் கொடுக்கப்படும் அடுத்த வேலை பிடித்திருக்கும். அதிகமாக ஒன்றும் இல்லை. நீர் செல்ல வேண்டியது உமது நாட்டுக்குத்தான். பெரிய பிராட்டி செம்பியன் மாதேவியின் விருப்பத்துக்கு இணங்கிச் சோழர் அரச குடும்பம் சக்கரவர்த்தியின் தலைமையில் உனது நாட்டுக்கு விஜயம் செய்கிறது'' என்றார்.

''என் நாட்டுக்கா? எதற்கு?'' மாறன் முகத்தில் ஆச்சரியம்.

''சிதம்பரத்தில் ஆனித் திருமஞ்சன விழா வருகிறதல்லவா? அதனால் நீர் இந்த வீர வைணவனை அழைத்துக் கொண்டு முன்பே சென்று அங்கு காவலைக் கவனிக்கிறீரா?''

''ஐயனே! இவர் பெற்றோருடன் ஓய்வெடுக்க எனக்கு அங்கு என்ன வேலை?'' என்றான் அடியான்.

பிரதமர் கேட்டார். ''ஓய்வா..? ஐந்தாண்டுகளாக இவர் ஓய் வெடுத்தது போதாதா? நம் போன்ற பெரிய தேசத்துக்குப் பகைவர்கள் என்றுமே ஓய மாட்டார்கள். நாமெல்லாம் ஓய் வெடுக்கவும் நேரமளிக்க மாட்டார்கள்.''

பின்பு தொடர்ந்தார்: ''அது மட்டுமல்ல. தாய் தந்தையைப் பார்த்துவிட்டு வரட்டும். ஆடல் வல்லானுக்கு ஆனித் திரு மஞ்சனம் முடிந்த பின் உம்மை வெகு தூரப் பயணத்துக்கு அனுப்பப் போகிறேன்.''

இருவரும் வியந்தபடி பிரதமரையே பார்த்தனர். ''உமக்குப் பிடித்த வேலைதான். பாண்டியரைப் பூண்டோடு அழிக்க ஒரு சந்தர்ப்பம் வந்திருக்கிறது'' என்று ஆவலையும் தூண்டிவிட்டார்.

''சிதம்பரத்தில் சோழ அரச குலம் முழுவதுமாய் ஓரிடத்தில் ஒன்று சேரப் போகிறார்கள். அவர்கள் பாதுகாப்புக்கு வேளக்காரப் படையினர் வருகிறார்கள். எனினும் உமது கவனமெல்லாம் அரச குடும்பத்தின் மீதே இருக்க வேண்டும்'' என்று சொல்லி அனுப்பினார் பிரதமர்.

அபிஷேக நாள்வரை தான் வருவதற்கில்லை என்றும் சொல்லி விட்டார். ''ஆனால், உமக்கு உறுதுணையாகத் திருமலையை அனுப்புகிறேன்'' என்றார்.



உறுதுணையாக அனுப்பப்பட்டவன் அருகில் மரத்தடியில் உறங்கிக் கொண்டிருந்தான். இதில் குறட்டை வேறு. மாறன் நினைத்துக் கொண்டான். 'ராஜ பரிவாரங்கள் வந்த பின்னும் இவனை எழுப்பக் கூடாது. அவர்கள் வந்து நாட்டின் பிரதம ஒற்றன் எப்படிக் குறட்டை விடுகிறான் என்று நேரடியாகப் பார்க் கட்டும்' என்ற ஆசை அவனுக்கு.

'எனினும் இவன் சமர்த்தன். அதற்குள் எழுந்து கக்கத்தில் கைத் தடியை வைத்து கொண்டு அவர்களைப் பார்த்தவுடன் கள்ளங் கபடு அறியாதது போல முகத்தில் பாவனை செய்துவிடுவான்' என்றும் தெரியும்.

திரும்பி மாறன் அடியானைப் பார்த்தான். அடியான் ஆனந்த மயமாகச் சயனம் செய்து கொண்டிருந்தது ஒரு சுமைதாங்கியின் நிழல். அக்காலத்தில் பல தர்மவான்கள் சுமைதாங்கிகளைத் தெரு வெங்கும் ஏற்படுத்தியிருப்பார்கள். கருங்கற்பாறையை நீள் சதுர மாகச் செதுக்கிச் சுமைதாங்கியாக அமைத்திருந்தனர். கர்ப்பிணிப் பெண் காலமானால் இதை வைப்பது அன்றிருந்த மரபு. பயணிகள் தோளிலோ தலையிலோ இருக்கும் சுமையைக் குனிந்து தரையில் வைக்காமல் இதன் மேல் வைக்கலாம். வழிபோக்கனைக் கூட கடவுளின் தூதுவனாக நினைத்த காலமது.

அந்தச் சுமைதாங்கியைப் பார்த்தவுடன் மாறனுக்குப் பல நினைவுகள். தனக்கு நேர்ந்த சம்பவங்களைப் பற்றித் தனிமையில் நினைத்து நினைத்து அசை போட அடியானது தூக்கம் ஏதுவாக இருந்தது.

ஓரிரு நாட்களாக எப்பேர்ப்பட்ட சம்பவங்கள்! உண்ணும் போதும் உறங்கும் போதும் லோகாவின் நினைவே வருகிறது என்றிருந்தவனுக்கு அவளையும் மறக்கடித்த சம்பவம் அது. இரு நாட்களக நடந்த சம்பவங்களிலிருந்து விடுதலை அவனுக்குத் தேவைப்பட்டது. ஆனாலும் மனதுக்கு இதமாக இருந்தது. ஏதோ பெரியதொரு சுமையை இறக்கி வைத்தது போலிருந்தது. அந்தச் சுமை தாங்கிகளைப் பார்த்தவுடன் அந்த எண்ணம் வலுப்பட்டது.

எல்லாம் ஆரம்பித்தது, சோழர் குலத்திலேயே மூத்தவரும், மிகவும் மரியாதைக்கு உரியவருமான செம்பியன் மாதேவி சிதம்பரத்துக்கு வந்து சேர்ந்தவுடன்தான்.

எல்லாரும் வருவதற்கு முன்பே செம்பியன் மாதேவி வந்து விட்டார். அந்த மூதாட்டியை வரவேற்று அவர் விருப்பப்படியே இளமையாக்கினார் மடத்தில் தங்க வைத்தனர். திருநீலகண்டரும் மனைவியும் ஒரு குளத்தில் இறங்கி முதுமை சென்று இளமை

யுடன் வந்தார்கள் அல்லவா? அந்தக் குளத்தை ஒட்டி இருந்த இளமையாக்கினார் மடம் நகரத்தார்களின் மேற்பார்வையி லிருந்தது. அளவில் ஒரு சிறிய அரண்மனை போன்றது அது.

'பெரிய பிராட்டி' என்று நாடு நகரமெல்லாம் போற்றும் செம்பியன் மாதேவி வருகிறார். இவர் மழவரையர் குலப் புதல்வி, சிவஞானச் செல்வரான 'கண்டராதித்தரின் பட்ட மகிஷி' என்ற வுடன் மாறன் பரபரப்பு அடைந்தான். 'நம்மைப் பெருமைப்படுத்த எல்லாரும் வருகிறார்கள். அதற்காக, பாவம்! இந்த மூதாட்டியை யெல்லாம் ஏன் அழைத்து வருகிறார்கள்' என்று இரக்கப்பட்டான்.

ஆனால், செம்பியன் மாதேவி வந்தது முற்றிலுமாக வேறொரு வேலைக்காக என்று கடந்த இரண்டு நாட்களில்தான் தெரிந்தது. அவர் வந்த பின்பே காரியங்கள் வெகு வேகமாக நடக்கத் தொடங்கின. அதுவும் குறிப்பாக நேற்று நடந்ததை மாறனால் உண்மையென்றே நம்ப முடியவில்லை.

அவனது பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டது அது!

❖ ❖ ❖

### அத்தியாயம் அறுபத்து மூன்று

## செம்பியன் மாதேவி

தன் நாட்டுக்கு அரச குடும்பம் வருகிறது, அவர்களுடன் தான் காதலித்த பெண்ணும் வருகிறாள் என்ற எண்ணத்தில் இருந்த மாறனுக்கு அதிசயமான அனுபவங்கள் நடந்து விட்டன. அவை யெல்லாம் ஆரம்பித்தது பெரிய பிராட்டியாம் செம்பியன் மாதேவி தில்லைக்கு வந்ததற்கு அப்புறம்தான்.

தில்லையில் கூத்தனைத் தரிசிக்க வரும் ஆயிரமாயிரம் பக்தர் களுக்காகவும், பல தேசங்களிலிருந்து வந்து இங்கு தங்கி அவன் அருளைப் பெறும் இறை அன்பர்களின் நலனுக்காகவும், தர்ம வான்கள் சத்திரம் பலவும் கட்டிவிட்டிருந்தனர். அதில் பிரதான மாக இளமையாக்கினார் மடம் இருந்தது.

அரண்மனை போன்ற அந்த மடத்தில் எவ்வளவு பேர் இருந் தாலும் பார்ப்பதற்கு அது வெறுமையாகவே தெரியும். ஆனால், இன்று அந்த இளமையாக்கினார் மடத்தின் உள்ளும் வெளியும் ஒரே ஜன நடமாட்டம். வாசலில் அரண்மனைப் பல்லக்கு ஒன்றும்,



பல்லக்குத் தூக்கிகளும், காவல் வீரர்களும் நின்றனர். வேங்கையின் சித்திரம் பொருத்தப்பட்ட கொடிகள் ஏந்திய வீரர்களும் நின்றனர். வெளிக் கதவுகள் தாழிடப்பட்டு வீரர்கள் காவல் நின்றனர். யாரும் அனுமதியின்றி உள்ளே செல்ல முடியாத நிலை.

தென்னகத்தை ஒரு குடையின் கீழ் ஆட்சி செய்யும் உத்தம சோழரின் தாய் செம்பியன் மாதேவி இந்த மடத்தில் தங்கி யிருந்தார். அதனால் மற்றவர் யாரும் இங்கு தங்கக் கூடாது என்று காவலுக்குப் பொறுப்பேற்றிருந்த இளம் சம்புவராயன் கட்டளை யிட்டிருந்தான். அதில் கண்டிப்பாகவும் இருந்தான்.

''கந்த மாறா! வருடா வருடம் இதே மடத்தில் வந்து தங்கும் அவர்கள் எங்கு செல்வார்கள்?'' என்று மூதாட்டி கூட அவனிடம் கேட்டுப் பார்த்தார்.

''இல்லை, தாயே! பிரதமர் ஒப்படைத்த பொறுப்பை நான் சரிவர நிறைவேற்ற வேண்டும். அதற்கு நீங்கள் ஒத்துழைப்புக் கொடுங்கள்!'' என்று சொல்லிவிட்டான்.

அவன் பேச்சுக்கு எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை அவரும். பெருமூச்சு விட்ட அந்தப் பெரிய பிராட்டி, ''சரியப்பா, அவர்கள் எல்லாரும் தங்குவதற்கு வேறு ஏற்பாடுகள் செய்து விடு'' என்றார்.

மூதாட்டியைப் பார்த்தவுடன், 'வயது முதிர்ந்த விதவைக் கோலத்திலும் இவருடைய முகத்தில் எத்தகைய தேஜஸ் ஜொலிக் கிறது!' என்று மாறனே நினைத்தான். 'கட்டளையிடும் தோரணை யில் அவர் பேசியிருக்கலாம். தான் அதை ஏற்றுக்கொண்டுதான் இருக்க வேண்டும்' என்று மாறனுக்குத் தெரியும். ஆனால், இவரோ என்றுமே அதிகாரத்தைப் பிரயோகித்ததில்லை. பார்க்கத் திருநீறு, உருத்ராட்சம் அணிந்து சாதாரணப் பெண் போலக் காட்சி தந்த இந்தப் பிராட்டியின் மகன் இன்று கடல் கடந்து விரிந்து கிடக்கும் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி.

''அப்படியே ஆகட்டும், தாயே!'' என்று சொன்னவன், அதைச் சரி வரச் செய்திருக்க வேண்டும். ஏனென்றால் ஏதும் சரியில்லை என்று ஒரு முணுமுணுப்புகூடக் கேட்கவில்லையே.

மடத்தின் வெளியே சிதம்பர நகர வாசிகள் ஆங்காங்கே கூட்டம் கூடி நின்றார்கள்; பெரிய பிராட்டி வெளி வரும்போது தரிசிக்கலாம் என்று. அது தேசப் பற்றினாலோ, சோழர் குலத்தின் மீது பொதுமக்கள் வைத்திருக்கும் அன்பினாலோ மட்டும் அல்ல. தமிழகெங்கும் பெரிய பிராட்டியின் கோயில் திருப்பணிகள் அவரை அவ்வளவு தூரம் பிரபலப்படுத்தியிருந்தன.

கடந்த காலத்தில் சோழர் குலத்தில் உதித்த மங்கையர்க்கரசியார் பாண்டி நாட்டின் மகாராணியாக விளங்கினார். தமிழகத்தில் சமண மதம் ஓங்கியிருந்த காலமது. அவருடைய அழைப்புக் கிணங்கிச் சிவஞான யோகீசுவரராகப் பிறந்த ஞானசம்பந்தர் மதுரைமா நகருக்குச் சென்றார். அங்கே சமணர்களை வாதப் போரில் வென்றார். அதுவே மீண்டும் சைவம் தழைக்க வழி வகுத்தது. அவர் மதுரைக்கு வரவும், சைவம் தழைக்க வழி வகுக்கவும் அந்தச் சோழர் குலப் பெண்ணே காரணம் என்றறிந்த ஆளுடைய பிள்ளையார் வியந்து பாடிய தேவாரப் பதிகங்களை மக்கள் அறிவார்கள்.

''மங்கையர்க்கரசி வளவர் கோன்
பாவைவரிவளைக்கைம் மடமானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழலுருவன் பூத நாயகன்
நால் வேதமும் பொருள்களும் அருளி
அங்கயர்க்கண்ணி தன்னொடும்
அமர்ந்த ஆலவாயாவதும் இதுவே!''

என்று பாடினார்.

தேவாரத்தில் மானிடரைப் பற்றிச் சொல்வது மிகவும் அரிது. தொண்டை நாட்டு மயிலையில் இறந்து போன செட்டிப் பெண்ணை உயிர்ப்பிக்கப் ''பூம்பாவை. பூம்பாவை'' என்று பதினோரு முறை குறிப்பிடுவார் சம்பந்தர். தனது பதிகங்களில், சுந்தரர் அடிக்கடி தன் மனைவியரின் பெயரைச் சொல்வார். அந்த வழியில் சோழ நாட்டு இளவரசிக்கும் ஒரு வாய்ப்பு.

இன்றோ செம்பியன் மாதேவியைப் பற்றிப் பாட நால்வரும் இல்லையென்பது எல்லார் மனதிலும் பெருங்குறை. சோழர் குலத்தில் வாழ்க்கைப்பட்ட ஒரு மாதரசி சைவம் தழைக்கப் பாடுபடுகிறார். எங்கும் கற்றளிகள் எழுப்பி, சைவம் இன்னும் பலவாயிரம் ஆண்டுகள் இந்தப் புனிதத் தமிழ் மண்ணில் தழைத் திட வழி செய்கிறார் என்றறிந்தால் நால்வரும் இவர் பெயரையும் தேவாரத்திலும் திருவாசகத்திலும் சேர்த்திருப்பார்கள்.

காந்தம் போலச் சிவ பக்தர்களை ஈர்க்கச் செம்பியன் மாதேவி யால் முடிந்தது. அவருக்குப் பல சிவனேசச் செல்வர்களுடன் நட்பிருந்தது. இன்றைக்குக் கூட அவரைக் காண நம்பியாண்டார் நம்பி வந்திருந்தார்.



திருநாரையூரில் அமைந்திருந்த சைவத் திருமடத்துக்கு அதிபராக விளங்கிய நம்பி அங்கேயே இருந்து விட்டார். ஒவ்வொரு முறை யும் செம்பியன் மாதேவியே சென்று அவரைப் பார்ப்பதுண்டு. ஆனால், இன்றோ அவரைப் பார்ப்பதற்காகவே நம்பி தில்லைக்கு வந்திருந்தார்.

மாறனைக் கூப்பிட்டு, ''கந்த மாறா! இன்று நம்பியடிகள் வருகிறார். அவருக்கும் அவருடன் வரும் சிவபக்தருக்கும் தகுந்த ஏற்பாடுகளைச் செய்துவிடு'' என்று சொன்னார் பெரிய பிராட்டி. ''நீயும் அவருடன் பழக்கம் ஏற்படுத்திக்கொள். என்றென்றும் சந்தோஷம் உன்னை விட்டு அகலாது. அவருடன் நான் பழகக் காரணமாயிருக்கும் பூர்வ ஜன்ம பாக்கியத்தை எண்ணி எண்ணித் தினம் தினம் மனம் பூரித்து மகிழ்கிறேன்!'' என்றார்.

மாறனுக்கு நம்பியடிகளைப் பற்றி நன்கு தெரியும். தன் கடம்பூர் நாட்டின் ஒரு பகுதியான கொள்ளிடத்தின் வடகரையிலுள்ள திருநாரையூர் என்னும் கிராமத்தில் நம்பியாண்டார் நம்பியின் மடாலயம் இருந்தது. ஆனால், இதுவரை அவரைச் சந்திக்கும் வாய்ப்பு அவனுக்குக் கிடைத்ததில்லை. அவன் வயதில், ஆண்மை யும் உடல் வலிமையும் மட்டுமே சிறந்ததாகத் தெரியும். ஆன்மீக மும் தவ வலிமையும் அவ்வளவு சிறப்பாகத் தெரிய மாட்டா.

சிதம்பர நகர எல்லையிலேயே நம்பி அடிகளுக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. மாறன் முன்னின்று அவரையும் அவரது சைவப் பெரியவர்கள் கொண்ட பரிவாரங்களையும் வரவேற்று இளமை யாக்கினார் மடத்துக்கு அழைத்துச் சென்றான்.

தான் யாரென்று அறிமுகப் படுத்திக் கொண்டான். நம்பி அவனை ஆசீர்வதித்தார். நம்பியாண்டார் நம்பிக்குச் சிறிய பிராயம்தான். ஆனால், அவருடைய கண்களில் வயதுக்கு அப்பாற் பட்ட பேரருள் ததும்பிற்று. திருமேனி முழுவதும் தூய வெண்ணீறு பூசியிருந்தார். அவருடைய கழுத்திலும், மார்பிலும், சிரசிலும், கரங்களிலும், உருத்திராட்சக் கண்டிகைகள் அலங்கரித்தன. இடையில் காவி நிறத் துகில் உடுத்தியிருந்தார்.

செம்பியன் மாதேவி சிவனேசரைப் பார்த்தவுடன் அக மகிழ்ந் தார். எப்போதெல்லாம் காவிரியின் வடகரைக்குத் தல யாத்திரை சென்றாலும் அவர் நம்பியைச் சந்திக்காமல் இருப்பதில்லை. அருளொளி விளங்கிய அவருடைய திருமுகத்தைப் பார்த்துக் கொண்டும், அவருடைய அமுத வார்த்தைகளைக் கேட்டு கொண்டும் செம்பியன் மாதேவி ஆனந்திப்பார்.

இத்தகைய மகிமை வாய்ந்த நம்பிக்கு ஒரு முக்கிய வேலையை வைத்துக் கொண்டுதான் தில்லைக்கு வந்தார் செம்பியன் மாதேவி. எல்லாம் தெரிந்த பரமஞானியான அந்த மூதாட்டிக்கு ஒரே ஒரு மனக்குறை. அதைத் தீர்த்து வைக்கும் பொறுப்பை இவரிடமே கொடுத்துவிடலாம் என்று முடிவெடுத்தார்.

அடுத்த நாட்களில் செய்ய வேண்டிய வேலையைப் பற்றி அந்த மூதாட்டியும் நம்பி அடிகளும் பேசிக் கொண்டிருந்தனர். பெரிய பிராட்டி எடுத்துச் சொல்லச் சொல்ல, நம்பியடிகள் கவனமாகக் கேட்டார். சொல்லும் கருத்துக்கு ஏற்றாற்போல் பெரிய பிராட்டியின் முகமும் கவலையாக மாறியது. ஆனால், நம்பியின் முகத்தில் எந்த வகை மாற்றமும் தெரியவில்லை. எல்லா வகைப் பாசங்களுக்கும் அப்பாற்பட்டிருந்தார் என்று தூரத்திலிருந்து பார்ப்பவருக்கே தெரியும்.

அப்போது ஒரு சேவகன் செம்பியன் மாதேவிக்கு முன் வந்து மண்டியிட்டு, "கடம்பூர் அரசர் உம்மைக் காண வந்திருக்கிறார்" என்று சொன்னான்.

"தந்தையாரை உடனே உள்ளே அழைத்து வா, கந்த மாறா!" என்றார் பெரிய பிராட்டி. எல்லாருடைய கண்களும் வாசற்புறம் நோக்கின.

சற்று நேரத்துக்கெல்லாம் மாறன் முன் வர, அவன் தந்தையும், தாயும் உள்ளே வந்தனர். மிகவும் எளிய உடையில் வந்த கடம்பூர் அரச தம்பதியர் பெரிய பிராட்டியைக் கை கூப்பி வணங்கினார்கள். பின் இருவரும் சென்று நம்பியாண்டார் நம்பியைப் பரிவும் பக்தியும் ததும்பிய கண்களினால் பார்த்துக், காலில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார்கள்.

அவர்களின் இடத்தில் அமர்ந்துவிட்டுக் கடம்பூர் அரசர், "உமக்கு இவ்வளவு வேலைகள் இருந்தும் எம்மைத் தேடி எம் நாட்டுக்கு வந்தீரே ! எம் நாட்டுக்கு விஜயம் செய்ததற்கு நன்றி!" என்றார்.

செம்பியன் மாதேவி, "தம்பி, எனக்கு ஒன்றும் தஞ்சையில் மிகுதியான வேலையில்லை. சொல்லப் போவதை நான் வாய் திறக்கும் முன்னே செய்து முடிக்கும் மைந்தனைக் கொடுத்திருக்கிறார் என் கடவுள்!"என்றார்.

பின், "உமக்கு மட்டுமென்ன? உமது மகன் கூட இப்போது தஞ்சையில் எங்களில் ஒருவராய் இருந்து அரச சேவை செய்கிறார். அங்கு எங்கள் குடும்பத்தில் அனைவருக்கும் அவர் மீது கொள்ளைப் பிரியம்!" என்று சொல்லிப் பாசமாய் மாறனைப் பார்த்தார்.



மாறனின் அன்னை மெய் சிலிர்த்தார். கண்களில் நீர்த் துளிகள் திரண்டன. தன்னடக்கம் என்ற அணை உடையக் காத்திருந்தது. மாறனின் தந்தை கூட மனம் நெகிழ்ந்து பேசினார்: "தாயே! நாங்கள் செய்த பாவத்தை ஆயிரமாயிரம் குடங்களில் கங்கை நீரைக் கொண்டு வந்து தலை மூழ்கினாலும் கழுவ முடியாது. அப்படியிருக்க எங்களையும் மதித்து நாடு தேடி வந்து கௌரவிக்கிறீர்கள். எங்கள் குலத்தவரைப் பற்றிய நல்வார்த்தை கூறுகிறீர்!" என்றார்.

செம்பியன் மாதேவி பேசினார்: "தம்பி! நீர்தான் தவறாய்ப் புரிந்து கொண்டு தனிமையை நாடுகிறீர்கள். இந்தச் சோழ குலத்துக்காக உமது முன்னோர்கள் போர்க்களத்தில் குற்றுயிரும் குலை உயிருமாகக் கிடந்து ஒரு வாய்த் தண்ணீருக்காக ஏங்கிச் செத்தவர் எத்தனை பேர்! அதையெல்லாம் நாங்கள் மறக்கவில்லை. எங்களில் யாரும் உமது நேர்மைக்கு மாசு கற்பிக்க எண்ணவும் இல்லை" என்று உறுதி அளித்தார்.

மேலும், "எங்களுக்கு வேண்டிய சிற்றரசர்கள் என்றும், வேண்டாதவர்களென்றும், என்றும், பேதம் பாராட்ட மாட்டோம். உமக்குத் தெரியாததா?அடங்கி ஒடுங்கி வாழ என்றுமே சோழர்கள் சிற்றரசர்களை நிர்ப்பந்தம் செய்யவில்லை. சுதந்திரமாக ஆட்சி செலுத்தவும், தஞ்சையில் பெரும் பதவிகள் ஏற்று நடத்தவும் விரும்புவோம். பாண்டியர் விரித்த வலையில் எல்லாருமே விழுந்து விட்டோம். அந்த நாட்கள் மிகவும் துன்பமான நினைவுகளையே விட்டுச் சென்றிருக்கின்றன. அபாயகரமான நிலைக்கு நாமெல்லாம் தள்ளப்பட்டோம். உண்மைதான். அவை எல்லாம் உமது நாட்டில் நடந்தவை என்பதற்காக உம் மேல் மட்டும் பழியைத் தூக்கிப் போடக் காலம் சென்ற சுந்தர சோழ மகாராஜா விருப்பப்படவில்லை. அந்தக் கால கட்டத்தில் நாட்டில் எத்தனையோ விபரீதங்கள் நிகழ்ந்து இருந்தன. அதில் உம்மை மட்டும் குறை சொல்லக் கூடாது என்று அவர் சொல்லுவார்."

சோழர்களின் பெருந்தன்மையைக் கண்டு மறுமொழிகூடச் சொல்ல நாவெழாமல் நின்றார்கள் மாறனும் அவன் தந்தையும். ஆன்மீகம் மட்டுமல்ல, அரசியலிலும் கைதேர்ந்தவர் இந்த மூதாட்டி என நினைக்கத் தோன்றியது மாறனுக்கு.

கண்களில் நீர் வழிய, "தாயே! உமது அன்புக்கு என்றென்றும் நன்றிக்குரியவராக நாங்கள் இருப்போம்!" என்றார் செங்கண்ணார் சம்புவராயர். பெரிய பிராட்டியைக் கண்டு, "உங்கள் குடும்பம் எங்கள் நாட்டில் ஆற்றியுள்ள இறைத் தொண்டுகள்தான் எத்தனை! தாயே! உங்கள் மாமனாராகிய பராந்தகத் தேவர்

தில்லைச் சிற்றம்பலத்துக்குப் பொற்கூரை வேய்ந்தார். அம் மாதிரியே வீர நாராயணபுரத்திலுள்ள அனந்தீசுவரர் கோயிலுக்கும் திருப்பணி செய்து மான்யம் அளித்தார். எங்கள் நாடு சமீபத்தில் ஏற்பட்ட கஷ்ட ஜீவனத்திலிருந்து மீள்வதற்கு நாட்களாய் விட்டது. அதனால்தான் மரியாதை நிமித்தமாக உங்களை எல்லாம் வந்து தஞ்சையில் பார்க்கவில்லை. பொறுத்து அருள வேண்டும்!'' என்று மன்னிப்புக் கோரினார்.

பெருமூச்சு விட்டார் செம்பியன் மாதேவி. ''யாவருமே வாழ் வில் துன்பத்தை விட இன்பமே அதிகரித்து நிகழ வேண்டுமென்று ஆசைப் படுகிறார்கள். ஆனால், ஏனோ அதற்கு நேர்மாறாகத்தான் நடக்கிறது. எல்லாம் அவன் இஷ்டம். ஆனால், ஒன்று தம்பி, தாங்கள் அலட்டிக் கொள்ளாமல் பொறுமையாயிருங்கள். உன் மகன் இந்தத் தென் திரு நாட்டுக்கே ஒரு காலத்தில் பெரும் சேவை செய்வான். எனக்கு நம்பிக்கை இருக்கிறது'' என்றார்.

இப்படியெல்லாம் அந்த மூதாட்டி கூறியது, அவருடைய பெருந் தன்மைக்கு உகந்தது. சற்று நேரம் அமைதி சூழ்ந்தது அச்சபையை. பெரிய பிராட்டி அப்போது ஏற்பட்டிருந்த சுமுகமும் நல்லெண்ண மும் பரவ அமைதி காத்தாரோ என்னவோ?

பின்பு, ''தம்பி! நீர் எனக்காக ஒன்று செய்ய வேண்டும்'' என்றார் பெரிய பிராட்டி.

''சொல்லுங்கள், தாயே. என்ன செய்ய வேண்டும்?'' என்றார் ஒரு நொடி தாமதமோ தயக்கமோ காட்டாமல் செங்கண்ணார்.

''கடம்பூர்க் கோட்டையில் ஆதித்யன் மாண்ட இடத்துக்கு நான செல்ல வேண்டும்'' என்றார் செம்பியன் மாதேவி.

சம்புவராயருக்குத் தூக்கி வாரிப் போட்டது. உடனே அவர் முகத்தில் மிகுந்த சோர்வும், அருவருப்பும் குடி கொண்டிருந்தன என்பதை மாறனால் யூகிக்க முடிந்தது.

ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால், தங்கள் வீட்டில் நிகழ்ந்த கொடுமையான ஒரு சம்பவம் அவர்களின் மனக் கண் முன்னால் தினமும் வந்து அகலாமல் நின்றது. அப்படியிருக்கும்போது அதைப் பற்றிய பேச்சை எடுத்துவிட்டாரே இந்தப் பெரிய பிராட்டி.

சம்புவராயர் இதற்கு முதலில் மறுமொழி சொல்லவில்லை. சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு, ''எதற்கெனத் தெரிந்து கொள்ளலாமா, தாயே?'' என்று கேட்கலாம் என்றிருந்தார். ஆனால், இவரோ சக்கரவர்த்தியின் தாய். அதனால், ''தாயே! ஒரு கேள்விக்கு மட்டும் செவி சாய்க்க வேண்டும். அதைக் கேட்பதற்குத் தயவுசெய்து என்னை மன்னியுங்கள். என் அரண்மனை ஆதித்யன் மாண்ட



அன்றே அக்கினிக்கு அர்ப்பணமாகி விட்டது. அங்கு நானே செல்வதில்லை. தாயே! உமக்கு அங்கு என்ன வேண்டும்?''

செம்பியன் மாதேவி, ''தம்பி செங்கண்ணா! வந்ததும் வராதது மாக இந்தக் கிழவி வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சுகிறாள் என்று யோசிக்க வேண்டாம். உமது மனக் காயங்கள் ஆறட்டும் என்றுதான் நான் ஐந்தாண்டுகள் காத்திருந்தேன். உமக்கும் ஒரு மகனை இழந்து பரிதவிக்கும் நிலை வந்தது. எனக்கும் அப்படிதான். நான் வளர்த்த பிள்ளை ஆதித்யன். அவன் மிகுந்த வேதனையில் உயிர் விட்டான். அவன் ஆன்மா சாந்தி அடைந்தால்தான் நல்லது. அப்போதுதான் உமது நாடும் செழிக்கும். அதற்காகத்தான் இந்தச் சிவ நேசரை இங்கு வரும்படி அழைத்தேன்'' என்று சொல்லி நம்பியாண்டார் நம்பியைத் திரும்பிப் பார்த்தார்.

மாறன் மூதாட்டியை முழுவதுமாய் நம்பி விட்டான். ஆதித் யனின் ஆவி செய்த தொல்லையில் அடிபட்டவன் அவன்தானே! ஆனால் அவன் தந்தைக்கு இன்னும் முழுமையாக நம்பிக்கை வரவில்லை. செங்கண்ணார் ஒன்றும் பேசவில்லை. நிகழ்வுகளை ஆராய்ந்து கொண்டிருந்தார்.

மூதாட்டி தொடர்ந்தார்: ''நான் வளர்த்தால் குழந்தைகளுக்கு ராசியில்லை என்று கூட நான் நினைப்பதுண்டு. என் மகன் பூந்தோட்டத்தில் ஒரு ஊமைச்சியிடம் வளர்ந்து இன்று திரிபுவனச் சக்கரவர்த்தியாய்த் திகழ்கிறான். ஆனால், என் மகன் போல வளர்த்த பிள்ளை மதுராந்தகன். அவன் நான் பெற்ற மகனல்ல. ஆனால், அந்தப் பிள்ளையை நான்தான் வளர்த்தேன். அவன் மேல் எனக்குப் பாசம் உண்டுதான். ஆனால், அவன் இன்று எதிரணியில் இருக்கிறான். காட்டில் கஷ்டப்படுகிறான். எனக்கு நெருக்கமானவருக்குப் பெரும் தொந்தரவு செய்கிறான். இதெல் லாம் எனக்கு வேதனையாகத்தான் இருக்கிறது.''

அவருடைய பிரியத்துக்குப் பாத்திரமான இளவரசன் அகால மரணம் அடைந்தது அந்த மூதாட்டியை வெகுவாகப் பாதித்திருந் தது. தன் உண்மையான மகனான சேந்தன் அமுதன் அவருக்குக் கிடைத்தது கூட அவ்வேளையில் அவருக்கு உறுதுணையாய் இல்லை என்று புரிந்து கொண்ட சம்புவராயர் அதிர்ந்து போனார். இன்றைய நிலையில் கடம்பூர் செல்லப் பலரும் விரும்பவில்லை. தன் மகனே தஞ்சை சென்ற பின் திரும்பி வர விருப்பம் தெரிவிக்க வில்லை. அப்பேர்ப்பட்ட துர்சம்பவம் நடந்த இடம் கடம்பூர். கொலையுண்டு கிடந்தான் அவ்விடத்தில் ஒரு மாவீரன். அவன் மட்டும் அன்றிரவு தப்பிப் பிழைத்திருந்தால் இந்த மூவுலகையும் நிச்சயம் வென்றிருப்பான். அவனுள் இருந்த வேகம் அவ்வளவு.

வீரம் அவ்வளவு. விவேகம் மட்டும்தான் ஆதித்யனுக்குக் குறைவு. அதுவே அவனைப் பலியும் வாங்கியது.

ஆதித்யனைப் பற்றிப் பேசிய போது செம்பியன் மாதேவியின் முகம் அவ்வளவாக மலர்ந்திருக்கவில்லை. அவருடைய உள்ளம் வேறு எங்கேயோ இருந்தது. செங்கண்ணாரின் சம்மதத்துக்காகப் பொறுமையுடன் உட்கார்ந்திருந்தார்.

மூதாட்டியைத் திருப்தி செய்வதற்காக அதை ஏற்பாடு செய்ய வேண்டும் என முடிவு செய்த சம்புவராயர். ஒரு மூறை பேசிப் பார்க்கலாம் என்று தொடங்கினார். "தாயே! உம்மைத் தடுக்கிறேன் என்று நினைக்காதீர். அந்த மாளிகையே தீக்கு இரையானது. ஆதித்யன் மாண்ட செய்தி கேட்டு அவன் பாட்டனார் மலையமான் என் மாளிகையைச் சுற்றி வளைத்தார். அவர்கள் கையில் அது தரைமட்டமாக ஆகாமல், நானே தீ வைத்துக் கொளுத்தி விட்டேன். அந்தக் கரிக் குவியலில் எது எங்கிருந்தது என எப்படிக் கண்டுபிடிப்பீர்?" என்றார்.

"அதெல்லாம் நானும் கேட்டு மனம் நொந்த செய்திகள்தாம். ஆனால், அவன் மாண்டு போன அறையிருந்த இடத்தையாவது காட்டுங்கள்" என்று கேட்டார் செம்பியன் மாதேவி.

"ஏன் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?"

"அவ்விடத்துக்கு இந்தச் சிவனடியாரை அழைத்துச் செல்லலாம் என்றிருக்கிறேன். ஆதித்யன் உற்றார் உறவினர் அருகில் இல்லாமல் செத்து மடிந்தான். அவன் இறந்தொழிய வேண்டும் எனப் போர்க் களத்தில் போராடிய எதிரிகள் எத்தனை பேர்! அவனைக் கொன்றதாகச் சரித்திரம் தன்னைப் புகழ வேண்டும் என்று அசாத்தியமாக இவனருகில் வந்து வெட்டுண்டு போனது அதில் எத்தனை பேர்! ஒரு இருட்டறையில் ஒரு மர்ம நபரால் கத்திக் குத்துப் பெற்று இறக்க வேண்டியவனா அவன்? அவன் ஆன்மா சாந்தி அடைய ஏதேனும் செய்ய முடியுமா என்று அவர் சொல்லட்டும், என்று அழைத்துச் செல்கிறேன்" என்றார்.

மௌனமாய் இருந்த சம்புவராயரிடம், "ஆதித்யன் துர்மரணம் அடைந்தான். அவனது பல ஆசைகள் நிறைவேறாமலேயே அவனுடன் இறந்தன. அதனால் அவன் ஆசை, நிராசைகள் இங்கேயே ஒரு உருக் கொண்டு திரிகிறது என யூகித்தேன். இப்படி அல்லும் பகலும் தப்பிக்க முடியாமல் அவனை மாயச் சங்கிலிகள் பிணைத்திருக்க வேண்டும். அதுவே இவ்விடத்தைச் சூன்யமாக ஆக்கியிருக்க வேண்டும். அவன் ஆன்மாவுக்கு ஒரு நிம்மதியைக் கொடுத்து வெளியேற வழி காட்ட வேண்டும் நம்பியாண்டார்



நம்பி. சங்கிலிகளைத் தகர்த்தெறியவே நம்பியடிகள் வந்திருந்தார். அதுதான் தாமதம். பின் இனி இந்த இடங்களில் செழிப்பு ஏற்பட்டுவிடும்" என்று உறுதியளித்தார்.

"அதுமட்டுமல்ல, தம்பி. இந்தக் காரியத்தைச் சீக்கிரம் முடிக்க வேண்டும் என்ற பயம் வந்து விட்டது. எல்லாம் வயதான தோஷந்தான்! போகும் போது மனதில் பாரமின்றிச் செல்ல வேண்டும்" என்றார் நடுங்கிய குரலுடன்.

சிரத்தையுடன் கேட்டுக் கொண்டிருந்த சம்புவராயர், "தங்கள் உசிதம் போல் செய்யலாம். என் மகனையும் உம்முடன் அனுப்புவது நல்லதல்லவா?" என்றார் சம்புவராயர். மூதாட்டியுடைய நோக்கம் நல்லதாய்த் தெரிந்தாலும் அங்கு என்ன நடகின்றது என்று அறிந்து கொள்ள ஒரு ஆர்வம் அவருக்கு.

அதற்குச் செம்பியன் மாதேவி ஆட்சேபம் தெரிவிக்கவில்லை. "நிச்சயம் வரட்டும். கரும்பு தின்னக் கூலியா? நன்றாய் வரச் சொல்லுங்கள். அவன் வந்தால் காரியம் விரைவில் முடியும், " என்றார்.

இப்போது அந்த மூதாட்டியின் கபடமில்லா நோக்கத்தை முழுமையாகப் புரிந்து கொண்டார் சம்புவராயர்.

"ஒரு வினாடி கூடத் தாமதியாமல் செல்லுங்கள், தாயே." என்றார் செங்கண்ணார் சம்புவராயர். அந்த மூதாட்டியின் உயரிய நோக்கத்தைச் சந்தேகித்து விட்டோமே என்ற குற்ற உணர்வுடன்.

❖ ❖ ❖

### அத்தியாயம் அறுபத்து நான்கு

## ஆதித்யனின் ஆவி

சிதம்பரத்திலிருந்து ஊர்வலமாய்க் கிளம்பினார்கள். கடம்பூருக்கான இரண்டு காத தூரத்தை மாலைக்குள் சென்று திரும்பிவிட வேண்டும் என்ற எண்ணத்தில் காலையில் சூர்யோதயத்துக்கு வெகு நேரம் முன்பே கிளம்பி விட்டனர்.

நம்பியடிகளும் பெரிய பிராட்டியும் தனித்தனியே சிவிகையிலும், அடியானும் மாறனும் புரவிகளின் மேலும் பயணித்தனர். ஊர்வலத்துக்கு முன்னும் பின்னுமாய்க் குதிரைகள். ஒவ்வொரு குதிரையின் மேலே வேல் பிடித்த வீரன் ஒருவன் உட்கார்ந்திருந்தான்.

கடம்பூருக்குச் செல்லும் வழியெல்லாம் மாறனுக்கு யோசனை. அவனுக்கு முதலில் புரியவில்லை. பேரன் இறந்த இடத்தில் ஒரு சாந்தி செய்ய வேண்டும் என்று சொல்கிறார் பெரிய பிராட்டி. ஆனால், அவர்களுடைய உண்மையான நோக்கம் இன்னதென்பது தெரியாது. ஒருவர் இறந்த ஐந்து ஆண்டுகளுக்குப் பின் ஏன் சாந்தி செய்ய வேண்டும்? அதுவும் இறந்த இடத்திலேயே? இந்த வைணவனிடம் கேட்கலாம் என்றால் அவன் யாருக்கெல்லாம் ஒற்றனாக இருக்கிறான் என்று தெரியாது. நாம் கேட்பதை நேரே சென்று அந்த மூதாட்டியிடம் கொட்டி விடுவான்.

ஒரு முறை மதிய உணவுக்காக வழியில் ஊர்வலம் நின்றது. கடம்பூர்ச் சாலையில் இரு புறமும் புளிய மரங்கள் வளர்ந்து வானோங்கி நின்றன. சிவிகைகளை நிழலில் நிறுத்தக் கட்டளையிட்டான் மாறன். எல்லாரும் இறங்கினார்கள். தரையில் பாய்கள் விரிக்கப்பட்டன.

நம்பியடிகள் மட்டும் விரதம் இருப்பதாகச் சொல்லிவிடவே, மற்ற மூவரும் கொண்டு வந்த உணவை அருந்தினர். பக்கத்தில் வேலையாட்கள் சாமரம் விசினார்கள்.

அப்போது, "தாயே! இன்று கடம்பூர்க் கோட்டையில் என்ன தான் செய்யப் போகிறோம்?" என்று கேட்டான் மாறன்.

பெரிய பிராட்டி பெருமூச்செறிந்தார். அவரது முகம் இன்று காலை முதல் முதுமையின் அறிகுறிகளை அதிகமாகக் காட்டிக் கொண்டிருந்தது. இன்று நடக்கப் போவதை நினைத்துக் குழம்புகிறார் என்று தெளிவாகத் தெரிந்தது.

"ஆதித்யனுக்கு உலகையே ஒரு குடைக்கு அடியில் ஆள வேண்டும் என்ற ஆர்வம் வந்தது எதனால்? தனக்குக் கிட்டாத பொருளை எண்ணி வாழ்விலேயே அமைதியற்றிருந்தவன் மரணத்துக்குப் பிறகு நிச்சயமாக அமைதியோடு இருக்க முடியாது. அவன் இறந்த அன்று இருந்த மனநிலைதான் அவனுக்கு இனி என்றென் றும். அந்தக் குரோதம் நிச்சயம் குறைந்திருக்காது" என்றார்.

பின்பு ஓரக் கண்ணால் பார்த்து, "உம்மையெல்லாம் சும்மா விட்டிருக்க மாட்டானே?" என்றார்

ஐந்தாண்டு காலமாகத் தன் தூக்கத்தை இழந்த மாறன் தலையசைத்தான்.

"என் நாட்டின் புகழை நிலைகுலையச் செய்தது அந்தக் கோரச் செயல். அவரைக் கொலை செய்த கத்தியில் சம்புவராயரின் கையில்லை. அவரைக் கொலை செய்ய வேண்டும் என்பது சம்புவ ராயரின் எண்ணமும் இல்லை" என்றான்.



"பதற்றமடையாமல் நான் சொல்வதைக் கேள். அவன் மரணத் துக்கு யாரேனும் காரணம் என்றால், அது நான்தான். ஊரெல்லாம் மறைமுகப் பேச்சென்ன வென்று தெரியுமா? என் மகனுக்கு அரியணை கிடைக்க வேண்டும் என்று நானே ஆதித்யனைக் கொன்றேன் என்கிறார்கள். அதைக் கேட்கக் கேட்க எனக்கும் அவன் மரணத்தில் பங்குண்டு என்று மட்டுமே என் மனத்தில் பதிந்தது. அதை நிவர்த்தி செய்யவே இப்போது நேரம் வந்தது."

ஒன்றும் புரியாமல் விழித்தான் மாறன்.

"தம்பி! ஆதித்ய கரிகாலன் ஒரு காலத்தில் என்னிடம் எவ்வளவு விசுவாசம் வைத்திருந்தான் தெரியுமா? சொந்தத் தாயைக் காட்டிலும் நூறு மடங்கு அன்பும் மரியாதையும் கொண்டிருந் தானே! ஆனால், பிற்காலத்தில் என்னைத் துவேஷிக்கத் தொடங்கி விட்டான். என்னை மட்டுமா? அவன் குடும்பத்தார் அனைவரையும்தான். எல்லாரையும் வெறுத்துக் காஞ்சியில் இருந்தான்" என்று விளக்கம் கொடுத்தார்.

அந்தத் துவேஷத்துக்கு என்ன காரணம் என்று அடியானுக்கு நன்றாய்த் தெரியும். பழையாறைப் பெரிய பிராட்டியார், நந்தினியுடன் ஆதித்யன் யௌவன காலத்தில் சகவாசம் வைத்துக் கொள்ளக்கூடாது என்று, அந்த நாளில் வற்புறுத்திச் சொன்னார். சிறு பிராயத்தில் அவளையும் அவனையும் பிரித்து வைப்பதற்குப் பெரிய பிராட்டி செம்பியன் மாதேவி செய்த முயற்சிகளைக் கண்டு அளவில்லாத கோபம் அடைந்தான் ஆதித்யன்.

"அதற்குப் பின் என்னிடமே வெடுக்கெனத்தான் பேசுவான். மற்றவரிடம் வெறியாய்ச் சீறுவான். அந்தக் குரோத உணர்வுகளை அடிக்கடி போர்க்களத்தில் வெளிக் காட்டியது அவனைப் பார்த்து அவன் வீரர்களே முகம் சுளிக்க வைத்தது" என மூதாட்டி தொடர்ந்தார்.

"அவன் சிறு பிள்ளையாக இருக்கும்போது நந்தினியின் மேல் காதல் கொண்டான். அவனுக்குப் பெண் கொடுப்பதற்கு இந்தப் பாரத தேசத்தில் மன்னர்கள் பலர் காத்திருக்கிறார்கள். ஆனாலும், தான் கட்டிக் கொள்ள முடியாத பெண்ணை விரும்பினான், அவளைப் பிரிந்த பின் தேன் கூட வேம்பானது. அம்ருதம் கூட விஷமானது என்பதுதான் உண்மை. அதைத் தடுத்து அந்தக் குடும்பத்தை வெளியூருக்கு அனுப்பினேன். ஆனால், அதில் வெறி கொண்டானே தவிர, நான் நினைத்தபடி அமைதியாகவில்லை. பின்பு அவளே பழுவேட்டரையர் மனைவியாய் வந்து சேர்வாள் என்று நான் கனவா கண்டேன்?"

இறுதியாகப் பெரிய பிராட்டி சொன்னார். "அவன் ஆசைகள் நிறைவேறாமல் இறந்து விட்டான் என்ற எண்ணத்தினால் நான் மனோவேதனைக்கு உள்ளானேன். அவனை விடுவித்து நிம்மதி அளிக்க நான் பெரும் பிரயத்தனம் செய்து கொண்டிருக்கிறேன். கெஞ்சாத குறையாகக் கேட்டவுடன்தான் நம்பியாண்டார் நம்பிகள் ஒப்புக் கொண்டார். அவனை ஏதோ ஒரு சக்தி இந்த உலகத்திலேயே கட்டிப்போட்டு விட்டது. அந்தச் சக்தியைப் பலவந்தமாகத் தடுத்து நிறுத்திவிட அவரால்தான் முடியும்" என்ற வார்த்தைகளுடன் அமைதியானார் செம்பியன் மாதேவி. கடந்த கால நினைவுகள் அவர் உள்ளத்தில் குமுறிக் கொந்தளித்துக் கொண்டிருந்தன.

சூரியன் தனது பாதையின் உச்சியில் இருக்கும்போதே கடம்பூர் வந்து சேர்ந்தார்கள். ஊர்வலத்தை நிறுத்திச் சிவிகையிலிருந்து இறங்கினார்கள். உடன் வந்த ஊழியர்களை அங்கேயே நிற்கச் சொல்லிவிட்டுக் கோட்டைக்குள் பிரவேசித்தார்கள் நால்வரும்.

தூரத்திலிருந்தே கோட்டை கருகிப் போய்க் கிடந்தது தெரிந்தது. சம்புவராயரின் பொக்கிஷமெல்லாம் சாம்பலாகிப் பல செடி கொடிகளுக்கு ஊட்டச் சத்தாகி இருந்தது .

"புராதனப் பெருமை வாய்ந்த சம்புவராயர் குலத்தின் அரண் மனையா இப்படி?" என்று வியந்தார் பெரிய பிராட்டி. ஒரு குலத் தைக் கண்ணுக்கு முன்னால் இப்படி நசிய விட்டு விட்டோமே என்ற மனத்தாங்கல் அவருக்கு.

ஐந்தாண்டுகளாக மனித சஞ்சாரமே இல்லாத இந்தக் கோட்டைப் பிரதேசத்தில் செல்லும் போது மாறன் நடுங்கினான். தன்னால் இந்தக் கோட்டையின் உட்பிரதேசத்துக்குள் பிரவேசிக்க முடியுமா என்று ஐயம்கூட வந்தது.

எனினும் பொங்கி வந்த வருத்தத்தையெல்லாம் மூட்டை கட்டி விட்டு மாறனே வழி காண்பித்தான். அவனுக்கு அடுத்து மூதாட் டியும் சிவனேசரும் சென்றனர். எல்லாருக்கும் பின்னால் அடியான் வந்தான்.

தன் பழைய நினைவுகள் துரத்தி வர, மாறன் அதிவேகமாக நடந்தான். அவனைப் பின் தொடர்ந்து வர மூதாட்டியும் நம்பியடிகளும் சற்றுச் சிரமப்பட்டனர். அவர்களை அடுத்து வந்த அடியானும் பின் தங்கினான்.

மாறனே ஐந்தாண்டுகளாகக் கோட்டையின் உட்பிரதேசம் வரை வந்ததில்லை. ஆனால், பழைய ஞாபகத்தில் சிந்தித்தபடி நடந்தான். "இதுதான் சுற்றுச் சுவர் இருந்த இடம். இங்குதான்



காவலர்கள் இருப்பார்கள். இது குதிரை கட்டும் இடம். இது நிலாக்கூடம்" என்று நினைத்து நினைத்து நடந்தான்.

அதே சமயத்தில் ஐந்து ஆண்டுகளுக்கு முன் சோழரின் சரித்திரத்தை மாற்றிய இரவை நினைத்தான். அன்று நிகழ்ந்தவற்றை மனக் கண்ணில் ஓடவிட்டுப் பார்த்தான்.

"ஆதித்யன் எங்கு இறந்தான்?" என்று கேட்டார் பெரிய பிராட்டி.

"ஆதித்யன் இறந்தது நந்தினிக்குக் கொடுக்கப்பட்ட அறையில் தான்" என்றான் இளம் சம்புவராயன்.

முகம் சுளித்தார் பெரிய பிராட்டி. "நந்தினிக்கு எந்த அறையைக் கொடுத்தீர்கள்?" என்று அடுத்த கேள்வி.

ஆதித்யன் கொலையுண்ட இடம் ஓர் அந்தப்புர அறை. அந்த அந்தப்புர அறையில் பொதுவாக ஆண்கள் வருவதில்லை. அது அரண்மனையின் பின் பகுதியில் இருந்தது.

"தாயே! இன்னும் கொஞ்சம் செல்ல வேண்டும்" என்றான். இடிபாடுகளுக்கு நடுவில் எல்லாரும் மீண்டும் சென்றனர்.

ஆனால், அவனுக்குள் சந்தேகம். சுவர்களெல்லாம் கருகிப் போய்க் கீழ் விழுந்திருந்தன. செடிகொடிகள் அவற்றின் மேல் வளர்ந்து பரவி விட்டன. பின் எந்த இடத்தில் அந்த மாவீரன் கொலையுண்டு கிடந்தான் என்று எப்படிக் கண்டு பிடிப்பது? அந்த நால்வரின் மனதிலும் அந்தக் கவலை இருந்தது.

ஆனால், வீணாகக் கவலை கொண்டனர். சற்று நேரத்து கெல்லாம் ஓரிடம் வந்தவுடன் ஏதோ ஒரு கண்ணில் தெரியாத சுவரொன்று முன் சென்ற மாறனைத் தடுத்தது. அவன் நினைத்தா லும், முயற்சித்தாலும் அடுத்த அடியை எடுத்து வைக்க முடிய வில்லை.

அவனுக்கு இப்போது உறுதியாய்த் தெரிந்தது. இதுதான் அந்த இடம். இங்குதான் பாண்டிய ஆபத்துதவிகள் ஆதித்யனை யமனு லகுக்கு அனுப்பினார்கள். அவனுடைய அசகாய சூரத்தனத்தைப் போரில் பார்த்துப் பார்த்து வியந்து கொண்டிருந்த பாண்டியர்கள் மறைமுகத் தாக்குதல்களில் அவனைக் கொன்றார்கள்.

"இந்த இடம்தான் கோரமான ரணகளமாய்க் காட்சியளித்தது. உயிரிழந்த ஆதித்யனின் பிரேதம் இங்கேயிருந்த அந்த அறையில் தான் கிடந்தது" என்றான்.

ஸ்தம்பித்த மாறனுக்குப் பின் வந்தவர்களும் நின்றார்கள். சுற்றியும் அமைதியாய் இருந்தது. பட்சிகள் பாடவில்லை. காற்று

அசையவில்லை. ஆனால், ஏதோ ஒரு தீய சக்தி அவர்களைச் சூழ்ந்து மூழ்கடிக்கப் பார்த்தது. நால்வரும் திடுக்கிட்டு நின்றனர். இன்னும் நாலைந்து அடிகள் முன் வைத்தால் ஏதாவது விபரீதம் நேரிடும் என்ற பயம். மூதாட்டியும் சிவனேசரும் ஒருவர் முகத்தை ஒருவர் ஏறிட்டுப் பார்த்தனர். மூதாட்டியின் பார்வையில் வருத்தம் இருந்தது.

திடீரெனச் சலசல என்று ஏதோ சப்தம் கேட்க, மாறனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவனது கை வாளுக்குச் சென்றது. பின்பு சப்தம் வந்த இடத்தைப் பார்த்தால், தரையில் இருந்த துவாரம் வழியாக ஒரு பெருச்சாளி வெளி வந்தது. மனிதர்களை அதன் வாழ்க்கையிலேயே அது பார்த்ததில்லை போலும். மாறன் எந்த அளவுக்கு ஆச்சரியப்பட்டானோ, அதைப் போல் அதுவும் திடுக் கிட்டது.

மாறன் அந்தத் துவாரத்தைப் பார்த்தான். ''ஆகா! அதுதான் வேட்டை மண்டபத்துக்கு வழி. இது வழியாகத்தான் கொலை காரர்கள் ஆதித்யனின் கொலைக்குப் பின் வெளியேறியிருக்க வேண்டும். அறையில் இறந்த எஜமானருக்குத் துணையாய் இருந்த வந்தியத் தேவனைச் சந்தேகித்து விட்டோமே!'' என்று வருத்தப் பட்டான்.

அவ்விடத்தை இப்போது நன்றாய் அடையாளம் கண்டு கொண்டான் மாறன். அருகிலிருந்த வேட்டை மண்டபமும் அதன் வழியில் செல்லும் நிலவறைப் பாதையும் இருப்பதைத் தெரிந்து கொண்டான். 'இந்த அறையில்தான் நந்தினி தங்கியிருந்தாள். விருந்தினரைத் தெய்வமென நினைக்கும் சம்புவராயர் குலத்துக்கு அழியாத அபகீர்த்தியை ஏற்படுத்திவிட்டு அந்தச் சுரங்கம் வழியாகத்தான் தப்பித்தாள்' என்று நினைத்துக் கொண்டான்.

சப்தம் ஓய்ந்த பின் அமைதி ஏற்பட்டது. ஆனால், வேறொரு சக்தி வழி மறித்தது எனச் சட்டென்று புலப்பட்டது எல்லாருக்கும். நம்பியாண்டார் நம்பிகூடத் தன் உருத்ராக்ஷ மாலையைப் பிடித்துக் கொண்டு ஏதோ முணுமுணுத்தார்.

நம்பியடிகள் சற்று நிதானித்து விஷயம் இன்னதென்று தெரிந்து கொண்டார். ''செம்பியன் மாதேவி சொன்னது உண்மைதான். அவர் சந்தேகித்தது போல ஆதித்யனின் ஆன்மா சாந்தி அடைய வில்லை. அதன் ஆசைகளெல்லாம் நிராசைகளான பின்பு எப்படிச் சாந்தி அடைய முடியும்?''

மாறனுக்குச் சட்டெனத் திரும்பி ஓட வேண்டும் என்ற உணர்வு. இதயம் படபடவென்று அடித்தது. ரோமங்களெல்லாம்



சிலிர்த்து நின்றன. 'பிடிவாதம் பிடித்து இங்கிருக்கும் சக்தி என்ன எனத் தெரியவில்லை. மனித சக்தியென்றால் வெட்டிச் சாய்த்து விடலாம். மனிதருக்கு அப்பாற்பட்ட சக்தி தாக்கினால் என்ன செய்வது? இனி எச்சரிக்கையாக இருக்கவேண்டும்' என்றும் முடிவுக்கு வந்தான். அங்கிருந்த நால்வரில் கடவுள் பக்தி குறைவாக இருந்தவன் அவன் மட்டும்தான். 'இந்த மூதாட்டி கற்றளிகள் எழுப்புகிறார். அந்த நம்பி ஊட்டியதை ஐங்கரனே வந்து உண்டு சென்றிருக்கிறான். இந்த வைணவன் ஒற்றனாய் இருந்தாலும், சதா ''நமோ நாராயணா'' என்று ஜபிக்கிறான். இந்தத் தீய சக்தி இவர்கள் மூவரையும் ஒன்றும் செய்யாது. நாம்தான் மாட்டிக் கொண்டோம்!' என்ற பயம் அவனுக்கு.

இப்போது ஓடினால் வீரத்துக்கு இழுக்கு ஏற்படாது என்று கூட மாறன் நினைத்தான். மாணிட எதிரியிடம்தான் புறமுதுகு காட்டக் கூடாது. ஆனால், இந்த மூதாட்டியும் அந்தச் சிவனேசரும் அசையாமல் நின்றனரே, எப்படி?

செம்பியன் மாதேவியை நினைத்தவுடன் மாறனுக்கு அடுத்த கவலை. ''காவலர்களை விட்டு வந்தோமே. விபரீதமாக ஒன்று மிராது என்று தீர்மானித்துக்கொண்டு வந்தோமே. இந்த மூதாட் டிக்கும் இதே இடத்தில் விபரீதம் நேர்ந்து விடக் கூடாதல்லவா? இந்தப் பெரிய பிராட்டிக்கு ஏதேனும் நேர்ந்தால் நம்மை உயிருடன் தோலை உரித்து விடுவார்கள். சோழர் குலத்தைச் சேர்ந்த இரண்டாம் நபர் இங்குக் கோட்டையில் மடியக் கூடாது. அவர் பாதுகாப்புக்கு ஆவன செய்ய வேண்டும்!'' என்ற கடமையுணர்வும் வந்தது.

மாறன் விழிப்போடிருக்க வேண்டும் என்று முடிவெடுத்தான். அவன் கை பழக்க தோஷத்தில் வாளின் பிடியை அடிக்கடி தேடியது. ஆனால், இந்த வாளால் ஒன்றும் செய்ய முடியாது என முடிவு செய்தான். இது மனிதர்களுக்கு அப்பாற்பட்ட சக்தி போலிருக்கிறது.

அடுத்து என்ன செய்வது எனத் தெரியாமல் நால்வரும் நின்றனர். அதைவிட, அந்தச் சக்தி என்ன செய்யப் போகிறது எனத் தெரியாமல் தவித்தனர்.

நால்வரும் திடீரெனத் திடுக்கிட்டார்கள். அந்த அமைதியான சூழலில் திடீரென ஒரு காற்று வீசி வந்தது. காற்றென்றால் மரமெல் லாம் அசையவில்லை. புயலுக்கு முன் சாலைகளில் தூசு சுற்றிச் சுற்றி ஓடுமே, அது போல் முழங்கால் அளவில்தான் அந்தக் காற்று. நந்தினியின் அறைக்குச் சுவர்கள் இல்லை. அந்த அறையின் கருகிய

தளத்தில் கிடந்த இலைகளெல்லாம் தலை வெட்டிய சேவல் போலச் சுற்றிச் சுற்றி ஓடின.

சுற்றி வரும் இலைகளைப் பார்த்து வியந்தவர்களில் முதலில் சுய உணர்வு பெற்றவர் நம்பியடிகள்தாம். அந்தச் சக்தியை எதிர் கொண்ட நம்பியின் முகத்தில் வியப்புக்குண்டான அறிகுறியைக் காண முடிந்தது. அதைத் தவிர அவர் சற்றும் அஞ்சியதாகத் தெரிய வில்லை. அவர் சிவ பக்தியினால் அந்தச் சக்தியை எதிர் கொள்ளவேயில்லையோ என்று கூட மாறனுக்கு ஐயம் உண் டாயிற்று.

சுற்றிச் சுற்றி ஓடும் இலைகளின் நடுவில் ஏதோ தென்பட்டது. அதையே நம்பி உற்று நோக்கினார். தரையில் கொஞ்சம் ஈரம் இருந்தது. அதை மாறனும் கண்டு வியந்தான். எப்படி? ஓரிரு நாட்களாக மழை கூடப் பெய்யவில்லையே!

நம்பியின் கண்கள் சுட்டிக்காட்டிய திக்கை அனைவரும் நோக்கினார்கள். தங்கள் கண்களை நம்பமுடியாமல் திண்டாடிப் போனார்கள். அது ஒரு ரத்தக் கறை. கொலையுண்டு கேட் பாரற்றுக் கிடக்கும் ஒரு சடலத்திலிருந்து குருதி ஓடி வந்து சிறிய கரிய குளம் போலக் கட்டிக் கிடக்குமே. அதுதான் இது.

மாறனும் அடியானும் வியப்புற்ற கண்களுடன் அதையே பார்த்தனர். 'நமக்கென்ன பைத்தியம் பிடித்து விட்டதா என்ன? தெளிவுள்ள சித்தமுடையவராயிருந்தால் இவ்விதம் ஒரு நாளும் நிகழ்ச்சிகள் நடக்காதே.'

அவர்கள் நா வரண்டது. அது எப்படிச் சாத்தியம்? அந்த மாவீரனிடம் மிச்சமிருந்தது இதுதான். 'ஆனால் அந்த ரத்தக் கறை எப்படி அந்தக் கோரத் தீயிலிருந்து தப்பித்தது?'

உயிருக்கு அஞ்சி யாரும் ஓடவில்லை. நின்ற இடத்திலேயே நின்றனர். தவ வலிமையினால் மூதாட்டியும் நம்பியடிகளும் திடமாய் நின்றனர். மாறனுக்கும் அடியானுக்கும் கால்கள் கற் தூண்களாய்ப் போனதால்தான் நின்றனர்.

நம்பி யாருடனோ பேசினார். சப்தங்கள் வந்தனவா என்று மாறன் உற்றுக் கேட்டான். இல்லை. தனக்குக் கேட்காதது ஏதோ அவருக்குக் கேட்டிருக்க வேண்டும். அவர் வார்த்தைகளுக்குப் பதில் கிடைத்திருக்க வேண்டும். ஏனென்றால் அவ்வப்போது மௌனம் சாதித்தார். பின் பேசினார். அவ்வப்போது தன் கைகளை அசைத்து ஏதேதோ முத்திரைகளைச் செய்தார்.

மற்ற மூவருக்கும் ஏதும் தெரியவில்லை. ஆனால், ஒரு துஷ்ட ஜீவன் இருந்தது மட்டும் உணர்வுகளுக்குப் புலப்பட்டது. ஏதோ



ஒரு சக்தி அவர்களை மிரட்டியது. பின்னே தள்ளியது. சற்றுமுன் சாந்தம் குடிகொண்டிருந்த பெரிய பிராட்டியின் முகத்தில் கூடப் பயத்தின் அறிகுறி காணப்பட்டது. ஆதித்யன் யாரையாவது பழி வாங்க வேண்டுமென்றல் அந்த வரிசையில் முதலாவது அவர் தான்.

மாறன் ஒரு பெருமுயற்சி செய்து அந்த மாயாஜாலத்திலிருந்து விடுவித்துக் கொண்டான். அந்த ஜீவன் அதன் வரம்பை மீறியே பூலோகத்தில் இன்னும் தங்கியிருந்தது. அது என்ன செய்யும், ஏது செய்யும் என்று தெரியாது. திரும்பிச் சென்று விடுவோம் என்று அந்த மூதாட்டியிடம் சொல்லப் பிரயத்தனப்பட்டான்.

ஆனால், அவன் வாயிலிருந்து வார்த்தைகள் வரவில்லை. நாரையூர் நம்பி மட்டும் முகம் பொலிவு இழக்காமல் வாயை மட்டும் அசைத்துப் பேசிக் கொண்டிருந்தார்.

தரையையும் நம்பியடிகளின் உதடுகளையும் மாறி மாறிப் பார்த்திருந்த மாறனுக்குப் பல நாள் சந்தேகம் ஊர்ஜிதமானது. இறந்து போனவர்களின் ஆவி வந்து தொந்தரவு படுத்துவது சித்தப் பிரமையாயிருக்கலாம் என்று இதுவரை நினைத்திருந்தான்.

ஐந்தாண்டு காலமாகப் பல நாள் இரவு, ஏதோ கூக்குரலைக் கேட்டுப் போய்ப் பார்த்தனர் காவலர்கள். ஆனால், கருகிப் போன கோட்டையினுள் யாரும் இல்லை. மாடு மேய்க்கச் சென்ற பலரும் திடுக்கிட்டு மூர்ச்சித்து விழுந்தார்கள் என்று மட்டும் அடிக்கடி செய்தி வரும். அதுமுதல் அந்தக் கோட்டைக்குள் ஏதோ சக்தி யொன்று இருக்கிறது என்பது உறுதியாயிற்று. அதன் பின் பொது மக்கள் உள்ளே செல்வதில்லை.

பழைய நினைவுகளிலிருந்து வெளிவந்தான் மாறன். முதல் முறையாக நம்பி உரக்கப் பேசினார்.

"நீ ஏன் இங்கே இன்னும் இருக்கிறாய்?" அவரது கடினமான குரல் அந்தச் சூனியமான பகுதியில் ஒவ்வொரு இடமாய்ப் பட்டு எதிரொலித்தது.

கடைசி எதிரொலியுடன் ஒரு பதில் வந்தது.

"எனது அமைதியைக் கெடுக்காதீர்!" என்றது ஒரு குரல். பூனை யின் குரலையும் சிம்மத்தின் குரலையும் ஒன்று சேர்த்தாற்போல் இருந்தது. தனது மனப்பிரமையா அந்தக் குரல் என்று யோசித்தபடி மாறன் மற்றவரைத் திரும்பிப் பார்த்தான். அவர்களுக்கும் அந்தப் பதில் கேட்டிருக்கவேண்டும். அரசி மற்றும் அடியானின் முகங்கள் சாம்பல் போல வெளுத்திருந்தன.

நம்பி அடுத்து என்ன செய்வது என்று நினைக்கையில் அந்த ஆவி தன் மாய வேலையைக் காண்பித்தது. முதலில் ஒரு கோரச் சிரிப்பு

அவர்களுக்கு முன்னால் கேட்டது. பின் அதுவே அவர்களுக்குப் பின்னாலும் கேட்டது. இப்படி அவர்களைச் சுற்றிச் சுற்றி அந்த துஷ்ட ஜீவன் செல்கிறது எனத் தெரிந்தது. ஒவ்வொரு முறையும் குரல் வரும் திசையில் மூவரும் திரும்பினார்கள். நம்பி மட்டும் திரும்பவே இல்லை. அந்த துஷ்ட ஜீவன் தன்னுடன் விளையாடுகிறது. தன் தவ வலிமையைச் சோதித்துப் பார்க்கிறது எனத் தெரிந்தது நம்பி அடிகளுக்கு. ஒரு முடிவுக்கு வந்தார்.

கையில் திருநீற்றுச் சாம்பலை எடுத்தார். அந்தச் சாம்பலுடன் ரகசியமாகப் பேசுவது போல் மந்திரங்களை உச்சரித்தார். அதை அந்த துஷ்ட ஜீவன் கண்டிருக்க வேண்டும். உடனே அந்த நால்வரைச் சுற்றி இலைகள் அதி வேகத்தில் பறக்க தொடங்கின.

பொல்லாப் பிள்ளையார் அருள் பெற்ற திருநாரையூர் நம்பியாண்டர் நம்பி தம் கையிலிருந்த திருநீற்றை எடுத்துக் காற்றில் வீசினார். ஏதோ ஒரு சக்தி அதைச் சுழலச்செய்தது. காற்றே இல்லாத போதும் அந்தத் திருநீறு ஒரு சுழலாய்ச் சுழன்று பறந்தது. மாறன் முதலில் கண்களை மூடிக் கொண்டான்- அது கண்ணுக்குள் போய்விடும் என்ற இயற்கையான பயத்தில்.

கண்ணிமைகள் திறந்தது பார்த்தால், எதிரே தோன்றிய அந்தச் சாம்பல் உருவம் அவனுடைய கண்களைக் கூசச் செய்தது. எல்லாத் திருநீறும் ஒரே இடத்தில் சங்கமித்தபோது ஒரு மனித உருவம் உருவானது போல் ஒரு பிரமை. மனிதக் கண்ணுக்குத் தெரியாத ஒருவன் மீது சாம்பல் ஒரு உருவத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டும்.

பின்பு வலியினால் ஒரு மனிதன் கதறும் ஈனக் குரல் கேட்டது. குரல் மட்டுமா? அதன் எதிரொலிகளும் கருகிய கோட்டையினுள் கேட்டன. ஏதோ அடிபட்ட ஒரு படையே மரணத்தை எதிர் கொண்டு கதறியழுதது போலிருந்தது.

முதல் முறையாக அந்தச் சப்தம் மற்ற ஜீவன்களுக்கும் கேட்டிருக்க வேண்டும். ஐந்தாண்டுகளில் ஓரளவுக்குக் கோட்டைக்குள் வளர்ந்திருந்த மரங்களிலிருந்தும், இடிசுவர்ப் பொந்துகளிலிருந்தும் காலை வேளையெனக்கூட பார்க்காமல் கோட்டான்கள் கிளம்பின. அவற்றின் கூவல்களும் ஆதித்ய கரிகாலனின் ஓலக் குரலுடன் ஒன்று சேர்ந்தன.

அதனால் கடம்பூர்க் கோட்டையின் இடிபாடுகளே நடுங்கின.

❖ ❖ ❖



## அத்தியாயம் அறுபத்தைந்து

# பேயுடன் போட்டி

ஆதித்ய கரிகாலன் சாகும் முன் கடைசிச் சில நாட்கள் கடம்பூரில்தான் தங்கினான். கடம்பூர் நாட்டின் அருகே இருந்த காடுகளில் தினமும் மிருகங்களை வேட்டையாடினான். பின் கடம்பூர்க் கோட்டையில் அவனுடன் தங்கியிருந்த எதிர் அணி மன்னர்களை வார்த்தைகளால் தினமும் சாட்டையாடினான்.

அது போதாதென்று கடம்பூருக்கு என்றும் அபகீர்த்தி ஏற்படும் வகையில் அங்கேயே மாண்டும் போனான். அதனால் அவனை நினைவு கூர்ந்தவர்களுக்கு அவன் கடைசி நாட்களில் இருந்த அந்த வெறியாவேசம்தான் ஞாபகம் வரும்.

அந்தக் கடைசிச் சில நாட்கள் மாறனும் ஆதித்யனுடனிருந்து படாத பாடு பட்டான். மாறன் நினைத்துக் கொண்டான்: 'அப்போது அவன் முகத்தில் கொந்தளித்த அதே கோபத்துடன் இன்றும் இருக்கிறான். அந்தத் திருநீறு தோய்ந்த முகத்தில் அந்தக் கோபம் இன்னும் கொடூரமாக இருக்கிறதே!'

தன் நிம்மதியை வந்தவர்கள் கலைத்தது அந்த ஆவிக்குப் பிடிக்கவில்லை. அந்தச் சாம்பல் உருவம் வேகமாக நகர்ந்தது. அவர்களைச் சுற்றிச் சுற்றி வந்தது. ஒரு நிமிடம் அவர்கள் முன்பே இருந்தது. அடுத்த நொடி சுற்றி வளைத்துப் பின்னாலிருந்து ஓலமிட்டது. அந்த அதி வேகச் சுழற்சி மாறனையும் அடியானையும் திக்கு முக்காடச் செய்துவிட்டது. அந்தக் காட்சியின் கோரத்தைக் காணச் சகியாமல், கண்ணை மூடி அக்காட்சியை அகற்றி விட முயன்றார்கள். ஆனால், கண்ணை மூடினால் இன்னும் பயமாயிருந்தது.

தன்னை விரட்ட வந்தவர்களை ஆதித்யனின் ஆவி திசை மாற்ற முயல்கிறது என அறிந்தனர் செம்பியன் மாதேவியும், நம்பி அடிகளும். ஆதித்யன் இவ்வுலகிலிருந்து விடைபெற்றுக் கொண்டு புறப்பட யத்தனித்ததாகத் தெரியவில்லை.

நம்பி சிறிது யோசனையில் ஆழ்ந்தார். அருகிலிருந்த மூதாட்டியைத் திரும்பிப் பார்த்தார்.

அவரும் மௌனமாகத் தலையசைத்தார். ஆனால், அந்தச் செய்கையில் அவர் சொல்ல வந்தது எல்லாருக்கும் தெளிவாகத் தெரிந்தது. ''ஆதித்யனின் மேல் உமது பக்தியின் பயனையெல்லாம் பிரயோகம் செய்யுங்கள்'' என்று சொல்லாமல் சொல்கிறார் மூதாட்டி.

புரிந்தது அங்கிருந்த நால்வருக்கு மட்டுமல்ல. ஆதித்யனின் உருவத்துக்கும்தான். சாம்பல் நிற உருவத்தின் ஆசாபங்கமும் அருவருப்பும் நிறைந்த கண்களில் இப்போது பயமும் சேர்ந்தது.

நம்பியடிகள் கையிலிருந்த உருத்ராக்ஷ மாலையை இறுகப் பிடித்தார். இரு விரல்களுக்கு நடுவே ஒவ்வொரு உருத்ராக்ஷத்தையும் நகர்த்தி ஏதோ மந்திரங்களை ஜபித்தார். பெரிய பிராட்டியும் கண்களை மூடி ஏதோ முணுமுணுத்தார்.

வரும்போது ஆதித்யனின் ஆவி இருக்குமென மூதாட்டி சொன்னதை அவநம்பிக்கையுடன் கேட்டுத்தான் வந்தான் மாறன். இப்போது நடந்தவற்றையெல்லாம் பார்த்தபோது அந்த வயோதிக மாதரசியை அழைத்துவரச் சம்மதித்தது தவறு எனத் தெரிந்தது அவனுக்கு. 'அதிக பட்சமாய்க் கருகிய கோட்டைப் பாகங்களிருந்து மறைவான இடங்களிலிருந்து எதிரிகள் இருப்பார்கள். அவர்களால் அபாயம் நேரும் என்று நினைத்தோமே. ஆனால், இப்படி வீறிட்டுக் கொண்டு வெகுண்டெழும் பிசாசை எதிர் பார்க்கவில்லையே!' என்று நினைத்துக் கொண்டான்.

இந்தப் புயலில் அகப்பட்ட மாறன் என்னவென்று சொல்லத் தெரியாமல் திகைத்து நின்றான். திரும்பியோடினால் வீரத்துக்கு இழுக்கு உண்டாகிவிடும் என்ற நினைப்பு ஒரு பக்கம். ஆனால், ஓட நினைத்தாலும் முடியாது. கால்கள் கருங்கல்லால் ஆனது என்று நினைக்கும் அளவுக்கு ஒரே இடத்தில் நின்றன.

'அடுத்து என்ன நடக்கப் போகிறது? இந்தச் சிக்கலான சூழலிலிருந்து விடுதலைதான் என்ன? ஆதித்யனுக்கு விடுதலையா? இல்லை, நமக்கெல்லாம் விடுதலையா?' என்று அடியானும் மாறனும் பயந்தனர்.

'கட்டுப்பாட்டில் இல்லாமல் நிகழ்ச்சிகள் நடக்கின்றனவே. இப்போது இன்னும் என்னன்ன புதுப் புது அபாயங்கள் நமக்கு வரப்போகின்றனவோ?' என்று பயந்தான் மாறன். ஆபத்து என்றால் மூதாட்டியைக் காப்பாற்றி அழைத்துச் செல்ல வேண்டுமென்று எண்ணம் மட்டும் மனதின் பின்னாலிலிருந்து முன் வந்தது. அரசரின் தாயான அந்த மூதாட்டி அருகிலிருந்தது அவன் பொறுப்பு உணர்ச்சியை அதிகப்படுத்துவதாகவே இருந்தது. அவரைப் பத்திரமாய்த் தில்லைக்குக் கொண்டு சென்று சேர்க்க வேண்டுமே என்ற கவலை.

அசையாமல் நின்றனர் மனிதர்கள். சுற்றிச் சுற்றிச் சுழன்று வந்தது அந்தக் கற்பனைக்கு அப்பாற்பட்ட சக்தி. தெய்வ சக்தியைப் பிரயோகித்து, அதைத் தடுத்தாட்கொள்ளப் பார்த்தார் நம்பி



யடிகள். தான்தான் பெரியவன் என்று காட்ட அவர் ஆசைப்படவில்லை. ஜெயித்துக் காட்டவேண்டும் என்று நினைக்கவில்லை. அந்த நொந்து போன ஆன்மாவுக்கு விடுதலை தரப் பிரயத்தனப் பட்டார். அதற்குத் தெரியாது, தனக்கு எது நல்லதென்று.

ஆதித்யனின் ஆவி விரைவில் விடைபெற்றுக் கொள்வதாகத் தெரியவில்லை. அந்தச் சாம்பல் உருவத்தின் கண்களில் கோபக் கனல் பொங்குவதைப் பார்த்து மாறனுடைய தலை உண்மையிலேயே சுழலத் தொடங்கியது. அதைப் பற்றியெல்லாம் கவலைப் படாமல் உரக்க ஜபித்துக் கொண்டு மீண்டும் மீண்டும் திருநீற்றைக் காற்றில் விட்டெறிந்தார் நம்பியடிகள். சுற்றி வரும் உருவத்தின் பின்னால் காற்றில் அகப்பட்ட அந்தத் திருநீறும் துரத்தியது.

பின்பு திடீரென அந்த ஆவி ஓடுவதை நிறுத்தியது. தரையில் கிடந்த ரத்தக் கறையின் மேல் சென்று நின்றது. பின்பு மெல்ல மெல்லச் சுருங்கியது. சுருங்கும் போது ஆதித்யனின் முகம் மிகவும் கோரமாய் இருந்தது. அதன் ஓலம் கேட்கவே சகிக்கவில்லை. பின்பு திடீரென அமைதி.

அமைதியைத் தொடர்ந்து உடனடியாக ஒரு வகை இதமான சூழல் உருவானது. முக்கியமாக அந்தச் சாம்பல் தோய்ந்த உருவம் காணாமல் போனது. முன்னால் ஒரு அடியெடுத்து வைத்தார் நம்பியடிகள். கைப்பிடித் திருநீற்றை எடுத்து அந்த ரத்தக் கறையின் மீது போட்டார்.

அதை ஏற்றுக் கொண்ட தரையிலிருந்த ஈரம் மெல்ல மெல்ல சுருங்கி மறைந்தது. அதையே நால்வரும் கண்ணிமைக்காமல் கவனித்தனர். கடைசியாகக் கண் மூடி நம்பியாண்டார் நம்பி ஏதோ ஒரு மந்திரத்தைப் பிரயோகித்தார். பின் கண்களைத் திறந்தார். சற்று நேரத்துக்கெல்லாம் சுற்றுச் சூழலில் இருந்த கனம் குறைந்தது என்று எல்லாரும் உணர்ந்தனர். உலக பந்தம் என்ற சங்கிலிக் கட்டிலிருந்து ஒரு ஜீவன் முழுவதுமாக விடுவிக்கப்பட்டது எனத் தெரிந்தது.

மாறனுக்கு ஒரு நினைப்பு, ''திருநீற்றுக்கு அவ்வளவு வலிமையா?' பின் அவனே நினைத்துக்கொண்டான். இருக்கத்தான் வேண்டும். 'மந்திரமாவது நீறு' என்று சம்பந்தப் பெருமான் பாடினாரே. பேயறைந்தாற்போல் நின்ற அடியானிடம் சைவத்தின் மகிமையை எடுத்துச் சொல்லலாம் என்று நினைத்தான். உமது நாமக்கட்டிக்கு அந்த வலிமையுண்டா என்று கேலியாக வினவ

லாம். ஆனால், தன் பேச்சுக் குரலைக் கேட்டு ஆதித்யன் திரும்ப வந்து விட்டால்...?'' என்ற பயம் தடுத்தது.

தூக்கத்தில் இருக்கும் ஒருவரைத் திடீரென எழுப்பினால் எப்படியொரு சூழல் ஏற்படும்? அது போலத் தோன்றியது மாறனுக்கு. வாளை வைத்து உலகை வெல்லலாம் என்று நம்பிய வீரர்களுக்கு அதற்கு அடங்காத ஒன்று இவ்வுலகில் இருக்கிறது என்று தெரிய வந்ததும், இனம் தெரியாத பயம். அது மட்டுமல்ல. இந்த வாளை விட வலிமையான சக்தியை வெல்லும் பலம் நம்பி களிடம்தான் இருந்தது என்று தெரிய வந்ததும் பெரும் ஆச்சரியம்.

பெரிய பிராட்டியே முதலில் பேசினார். அந்த அமைதியான சூழலில் அவரது குரல் இடியோசைபோலக் கேட்டது. ''வெறி யுடன் வாழ்ந்தான். சோகத்துடன் இறந்தான். அதனால் இனி அவனுக்கு நிம்மதிதான்.''

ஒரு நொடி பொறுத்திருந்து மாறனை நோக்கி, ''உமக்கும் நிம்மதி தான். உம் நாட்டுக்கும் நிம்மதிதான்'' என்றார் பெரிய பிராட்டி.

''ஆகா! நம் கனவில் தினந்தோறும் வந்து கொன்றாரே. இனி வர மாட்டார்'' என்று உடனே நினைத்தான் மாறன். கடம்பூர் நாட்டுக்கு மக்கள் திரும்புவார்கள். இனி வளமைதான்'' என்றும் அவனுக்குத் தோன்றியது.

ஊர்வலம் திரும்பும்போது கரித்துண்டுகளும் இலைச் சருகுகளும் எங்கும் மண்டிக் கிடந்தன. எல்லாம் சற்றுமுன் அடித்த காற்றில் புதிதாகக் குவிந்து கிடந்தன.

எல்லாருக்கும் ஏதோ நெடுந்தொலைவு கடந்து வந்தது போல் ஒரு உணர்வு. ஏதோ பெரும் வேலையைச் செய்து முடித்தது போல் ஓர் எண்ணம். ஏதோ பெரும் கனத்தைத் தலையிலிருந்து சுமை தாங்கியின் மேல் இறக்கி வைத்தாற்போல் ஓர் நிம்மதி. ஆனால், நால்வரில் இதைக் கண்டு ஆச்சரியமடைந்தவர்கள் அடியானும், மாறனும்தான். மற்ற இருவரும் இதை எதிர்பார்த்தேதான் வந்தார்கள் போலும்.

காட்டின் வெளியே வந்தவர்களைப் பணியாட்களும் வீரர் களும் ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். இந்த அனுபவத்தில் தங்கள் தோற்றம் மாறியிருக்க வேண்டும் என நால்வரும் நினைத்துக் கொண்டனர். ஏதோ மலை உச்சிக்கு ஏறியவர்கள் போல வியர்த் திருந்தது எல்லாருக்கும். கடின வேலை செய்தது போல உட லெங்கும் தூசு படிந்திருந்தது.



பெரியவர்கள் இருவரும் தத்தம் சிவிகைகளில் ஏற, மாறனும் தனது புரவியின் மீதேறினான். கடம்பூர்க் கோட்டையைத் திரும்பிப் பார்த்தவன் மனதில் தோன்றியது ''இன்று நடந்ததை வெளியில் சொன்னால் யாரும் நம்பக்கூட மாட்டார்கள்.''

அடியானிடம் மிகவும் மெல்லிய குரலில் கேட்டான். அவன் குரலே வித்தியாசமாக இருந்தது அடியானுக்கு. ஏதோ ரகசியம் பேசுவது போல் சப்தமின்றி வெளி வந்தது. ''எனக்கு ஒன்றும் புரியவில்லை, வைணவனே! இங்கு என்னதான் நடக்கிறது?''

அடியான் அரவணைக்கும் தோரணை கொண்ட குரலில், ''நம்மால் பொறுக்க முடியாத விஷயம் ஒன்றில் நம்மால் ஒன்றும் செய்ய இயலாமல் இருக்கும்போது நம் வயிறு கொதிக்கிறதே. தூக்கம் வருவதில்லையே. அது போலத்தான் இதுவும். மறைமுக சக்தியாய் இருந்திருக்கிறது ஆதித்யனின் ஆன்மா'' என்றான்.

''பேயாகவா?''

''பேய் பிசாசு இல்லை எனச் சொல்பவர்களும் உண்டு. ஆனால், துர்மரணம் கொள்பவர்கள் இறந்த இடத்தில் ஏதாவது விட்டுச் செல்கிறார்கள். இறந்த பின் ஆன்மாக்கள் எங்கு செல்கின்றன? இறைவனிடம் கலக்கின்றன. சிலர் மட்டும் வாழ்க்கையில் கொண்ட நிராசைகள் என்ற சங்கிலியால் பிணைக்கப்பட்டு இங்கேயே இருக்கின்றனர். அவன் உயிர்விடும் தறுவாயில் எவ்வளவு நிராசைகள் கொண்டிருந்தான் என்பதைப் பொறுத்தே அவன் ஆன்மா விடுதலையாகுமா என்பது முடிவாகும்'' என்று அடியான் விளக்கினான்.

நால்வருமாய்க் கோட்டையை விட்டு வெளியேறினார்கள். அமைதியாய்ப் புறப்பட்டது ஊர்வலம். இனித் தில்லை செல்ல இரவாகிவிடும். சிவிகைகளின் வேகம் குறைவல்லவா? ஒரு குதிரை வீரனை மட்டும் வெகு விரைவாகச் சென்று தந்தையிடம் வரத் தாமதமாகும் என்று தெரிவிக்கச் செய்தான் மாறன்.

போகும் வழியில் ஒரு சிறிய ஓடை வந்தது. நம்பிகள் அதில் ஸ்நானம் செய்ய வேண்டும் என்று விருப்பம் தெரிவித்தார். பின்பு சிறிது நேரம் பூஜை செய்யவும் ஆசைப்பட்டார். அதனால் எல்லாரு மாக வயல்காட்டோரமாக ஊர்வலத்தை நிறுத்தினர்.

அடியானும், மாறனும் செம்பியன் மாதேவியிடம் சென்றார்கள். பெருமூச்சு விட்டார் பெரிய பிராட்டி. நடந்த சம்பவங்களிலிருந்து பெரிய பிராட்டியும் முற்றிலுமாய் மீள வில்லை எனத் தெரிந்தது.

அவருக்கு ஏதோ அப்போதுதான் ஆதித்யன் மாண்டது போல ஒரு உணர்வு. "அவனைப் போன்ற வீரனைப் பெற சோழ சைனியம் மட்டுமல்ல, இந்தப் பரத கண்டமே கொடுத்து வைத்திருக்க வேண்டுமே. நந்தினியை நினைத்து நினைத்துச் சக்தியையெல்லாம் இழந்து விட்டான். அவனால் சோழ தேசத்துக்கு இனிமேல் பிரயோஜனம் ஒன்றுமில்லை என்று அவன் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். போர் முனையில் அவனைப் பகைவர் கொல்வதைவிட இங்கேயே மாண்டுவிடலாம் என்று எண்ணியே ஒரு முடிவுடன்தான் கடம்பூருக்கு வந்தான். இங்கிருந்து யமனுலகம் போக ஆயத்தமாக வந்தான். அதிவேகமாக வந்தான்!" என்றார்.

என்ன சொல்வது என அறியாமல் மற்ற இருவரும் மௌனம் காத்தனர். பெரிய பிராட்டி தொடர்ந்தார்: "அன்பு செலுத்துவது தவறில்லை. அதற்குத்தானே கடவுள் நம்மை ஆறறிவுடன் படைத்திருக்கிறார். அன்பு நம்மை மனிதனாக அடையாளம் காட்டுகிறது. ஆனால், அதுவே வெறியானால் நம்முள் இருக்கும் மிருகத்தை வெளிக்கொண்டு வருகிறது. அதிக பட்சமான அன்பே ஆபத்தில் முடியும் எனபதற்கு ஆதித்யனின் வாழ்க்கையே சான்று. எவ்வளவு கொடுமையுடையவனாக அவனை அந்தக் காதல் தோல்வி மாற்றியது! அவன் என்னென்ன கொடுமைகள் செய்தான் என மதுரையில் சென்று கேட்டால்தான் தெரியும். நண்பர்களையே அவன் விட்டு வைத்ததில்லையே. அவனது வெறி பகைவர்களை விட்டா வைத்திருக்கும்?" என்றார்.

மாறன், "தாயே! நடந்வை நடந்தவையாகவே போகட்டும். நீர் மனம் வருந்தக் கூடாது" என்றான், ஆறுதலாய்.

"தம்பி! என்னால் காதலை முழுவதுமாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. என் கணவருக்கும் எனக்கும் வயது வித்தியாசம் அதிகம். எனினும் என் மேல் காதல் கொண்டார். ஆனால், மிகவும் கண்ணியமான காதலது. ஆனால், ஆதித்யனைப் பார். தென்னாட்டின் ஏக சக்ராதிபதியாக முடி சூட்டிக் கொள்ளத் தகுதி இருந்தவன். ஆனால், அந்த மோகவலை அவனை என்ன செய்தது பார்த்தாயா? யார் அவனுக்கு யமனாக வந்தாளோ, அவளையே வெறியாய்க் காதலித்தான்." பின் உதிர்த்த வார்த்தைகளைப் பற்றி யோசித்துவிட்டு, மாறனது கண்களை நேரே பார்த்து, "உனக்கு அதெல்லாம் ஒன்றும் இல்லையே, மாறா?" என்றார் பெரிய பிராட்டி.



மனதிலுள்ளதை மறைக்கத் தெரியாமல் தடுமாறிய மாறன் திகைத்து நின்று விட்டதைக் கவனித்த பெரிய பிராட்டிக்கு, வள்ளுவர் பெருமான், "அடுத்தது காட்டும் பளிங்கு போல் நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்" என்று சொன்னது நினைவுக்கு வந்தது. அது போல மாறனின் முகத்தைக் கண்டு புரிந்து கொண்டார் மூதாட்டி. "மாறா! நீ கள்ளங்கபடு அறியாதவன். இதில் மாட்டிக் கொள்ளாதே" என்றார்.

மாறன் என்ன சொல்வதென வார்த்தைகளுக்காகத் திணறிய போது, சரியான சமயத்தில் நம்பிகள் பூஜை புனஸ்காரங்களை முடித்து வந்தார்.

பெரிய பிராட்டி, "அதோ நம்பியாண்டார் நம்பி வந்துவிட்டார். போகலாம், வா. ஆனால், சொன்னதை மறந்து விடாதே. பெரும் போராட்டத்துக்கிடையில் நீ உன் எதிர்காலத்தை நிர்ணயிக்கவும், உன் குலப் பெருமையை நிலை நாட்டவும் முயல்வது தஞ்சையெங்கும் பேச்சாய் இருக்கிறது. உனக்குச் சம அந்தஸ்து உள்ள குலத்தில் உனக்கு நல்லதொரு பெண்ணைப் பார்த்து நானே திருமணம் செய்து வைக்கிறேன்" என்று உறுதியளித்தார்.

கொள்ளிடக் கரையில் புரவியின் மேல் அமர்ந்தபடி மாறன் இப்போது நினைத்துக் கொண்டான். 'அந்தச் சம அந்தஸ்து உள்ள குலத்தின் பெண் இப்போது தில்லையை நெருங்கிக் கொண்டிருக்கிறாள்' என்று. அந்தப் பெண்ணுக்காகத்தான் மாறன் காத்திருந்தான். அரச குலத்துடன் லோகாவும் வருகிறாள் என்று கேட்டதும் மாறனின் உள்ளத்தில் குதூகலம் உண்டாயிற்று.

அங்கு தன் புரவியின் மீதிருந்து நடந்து முடிந்தவற்றையெல்லாம் நினைத்த மாறனுக்கு நேரம் போனதே தெரியவில்லை. அதற்குப் பின் மனதில் நிச்சயமாகப் பாரம் குறைந்திருந்தது. இனி நாடு தழைக்கும் என்ற நம்பிக்கை.

சோழர் பரிவாரங்கள் அங்கே வந்து சேரும் அறிகுறி தெரியவில்லை. மாறன் சுமைதாங்கியின் நிழலில் படுத்திருந்த அடியாளைப் பார்த்தான். சாலையின் இரு புறங்களிலும் வளர்ந்திருந்த மரங்களும் நிழலான தீவுகள் போலத் தோப்புகளை உருவாக்கியிருந்தன. தோப்பிலிருந்து மறுபுறம் இருந்த வயற்காட்டிற்குத் தாவிய குளிர்ந்த வாடைக் காற்று அடியானை ஓய்வெடுக்கச் செய்தது. அயர்ந்து தூங்குகிறான் அவன். வரும் வழியில் ஒரு சண்டை. வழக்கம் போலச் சைவர்களுடன்தான்.

தில்லையில் அடியானுக்கு ஏகக் கொண்டாட்டம். சிதம்பரத்தில் வைணவ சைவ சம்பிரதாயங்கள் ஏக பலத்தில் இருந்தன. கோயில்

என்று சைவர்களும், சித்திர கூடம் என்று வைணவர்களும் போற்றிப் புகழ்ந்தனர்.

ஒரே கோயிலில் அனந்த சயனத்தில் கோவிந்தராஜரும், நடனமாடிக் கொண்டிருந்த நடராஜரும் இருந்தார்கள். ஒரே வீட்டில் வாசம் செய்த கடவுள்கள் இருவருக்குள் தகராறு இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால், தினந்தோறும் தெருவெங்கும் வாதப் போர்தான், யார் வலிமையானவர்களென்று.

ஏதாவது வீர சைவருடன் அடியான் வாதப் போர் நடத்திக் கொண்டிருக்கும்போது சுற்றிக் கூட்டம் சேர்ந்துவிடும். நடுவிலிருந்த இருவரின் சூடான விவாதத்துக்கு இடையிடையே இரு தரப்பின் வாதத்திலும் சிரத்தையுள்ளவர்கள் ஆரவாரித்து உற்சாகப் படுத்திக் கொண்டிருப்பார்கள்.

"மற்போர் நடத்த வலிமையில்லை; சொற்போர்தான் நடத்துகிறீர். என்ன வாழ்க்கை இது?" என்று எப்போதும் ஏசுவான் மாறன். ஆனால், இன்று அவனுக்கும் பொழுது போனது.

"எம்பெருமான் படுத்து உறங்க, அவர் காலடியில் நடமாடுகிறார் உமது நடராஜர்!" என்று இவன் சொல்ல, சைவனோ "ஆடல் வல்லானின் ஆட்டத்தைக் கண்டு மயங்கி விழுந்து விட்டார் உமது பெருமான்!" என்றான்.

ஆனால், கொஞ்ச நேரம்தான். சிவன் வலிமையானவரோ விஷ்ணு வலிமையானவரோ- தெரிய வாய்ப்பில்லை. ஆனால், வாய்ப் பேச்சில் அடியானை மிஞ்ச இந்தச் சோழர் பிரதேசத்தில் ஒருவன் பிறந்துதான் வர வேண்டும்.

கடைசியாக, "உம் வைணவ முதுகில் பழுக்கக் காய்ச்சிய இரும்பினால் சூடு போட வேண்டும்! என்றும், "அத்துடன் நெற்றியில் திருநீற்றை நிரந்தரமாக இருக்கும்படி சூடு போடவேண்டும்!" என்றும் சபித்துவிட்டுப் போனான் அந்தச் சைவன். கோபத்தில் கைத்தடியைத் தலைக்கு மேல் சுழற்றினான் அடியான். அலறி அடித்துக் கொண்டு ஓடினார்கள் வீர சைவ சிகாமணிகள். இல்லையென்றால் அடியானின் கைத்தடியிடம் அவர்கள் கதி அதோ கதிதான்.

பின் அந்த வாய்ப்போரின் விளைவாய் அயர்ந்து தூங்கப் போய் விட்டான் அடியான். ஓடிய சைவன் இப்போது சமயம் பார்த்து வந்து நெற்றியில் சூடு போட்டால் முடியும். அப்படித் தூங்குகிறான்! 'அப்படித் திருநீறு இட்டால் இவன் முகம் எப்படியிருக்கும்?' என்று நினைத்தான் மாறன். சிரிப்பு வந்தது.



சூரியன் உதயமாகி ஓரிரு நாழிகைப் பொழுது ஆனபோதே, தூரத்தில் புழுதிப் படலம் தெரிந்தது. அதுதான் அரச குலம் வரும் ஊர்வலம். ஆனால், அது இன்னும் கொள்ளிடத்தைக் கடக்க வேண்டும். தனக்கு உயிரினும் இனியவள் அந்த ஊர்வலத்தில் வருகிறாள் என்றவுடன் ஓடோடிச் சென்று நதிக்கரையில் வரவேற்கலாம் என்ற எண்ணத்துடன் இருந்தான் மாறன். 'இல்லை, ஊர் வாசலில் வரவேற்பதே அழகு' என ஆசையை அடக்கிக் கொண்டான்.

கொள்ளிட நதியைக் கடக்கப் பல படகுகளை ஏற்பாடு செய்திருந்தான். அவையெல்லாம் எதிர்க் கரையில்தான் இருந்தன.

கொள்ளிடக் கரையை ராஜ பரிவாரங்கள் கடந்தாயிற்று. இனி அரைக் காத தூரம்தான். விரைவில் வந்து விடுவார்கள் என்று அறிந்த மாறன், 'சோழர்கள் மனமிரங்கி நம் நாட்டுக்கே வருகிறார்கள். அவர்களுக்கும் எவ்வளவு கஷ்டமாயிருக்கும்! அகால மரணம் அடைந்த அண்ணனின் நினைவுகள் வராதா? அப்படி வந்தால் நம் மேல் மீண்டும் வெறுப்புக் கொள்வார்களா என்ன?' என்று லேசாகக் குழம்பினான்.

மிக அருகில் ராஜ பரிவாரங்கள் வந்து சேர்ந்தன. ஏதோ மாயக் கையொன்று அவனைக் குலுக்கி எழுப்பியது போல அடியான் தூக்கத்திலிருந்து விடுபட்டான். மாறன் நினைத்தது போல எழுந்து நின்று கக்கத்தில் கைத்தடியை வைத்துக் கொண்டு கள்ளங் கபடு அறியாத பரம சாது போல முகத்தில் பாவனை செய்து கொண்டான்.

சோழர் பரிவாரங்கள் தில்லையின் வெளிப்புறத்துக்கு வந்து சேர்ந்தார்கள். ஊர்வலத்திலிருந்தபடியே அரச குடும்பத்தினர் வரவேற்பு ஏற்பாடுகளைக் கவனித்தார்கள். அவர்களை வரவேற்க நின்ற ஜனக் கூட்டம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. கொஞ்ச தூரத்தில் கூட்டத்திலிருந்து ஒரு தனி உருவம் வெளிப்பட்டு முன்னதாக விரைந்து வந்தது. இளம் சம்புவராயன் மாறன் தான் அது.

மாறனைப் பார்த்த நொடியில் பொன்னியின் செல்வருடைய முகத்தில் குறுநகை மலர்ந்தது. முதன் முதலில் பழுவூர் இளவரசியைப் பற்றிப் பேசியது இந்தச் சம்புவராயனிடம்தான் என்பது அவர் மனத்தில் ஆழமாய்ப் பதிந்து கிடந்தது. இதுவரை அந்தக் கனவுக் கன்னி கிடைத்து விட்டாள் என்று அவனிடம் சொல்லவேயில்லை. "ஊமை நாச்சியார் கோயில் வேலையில் ஈடுபட்டிருந்ததால் மறந்து விட்டோம். ஆனால், இந்த முறை அவனைப் பற்றி அவனிடம்

சொல்லிவிட வேண்டும். ஆனால், விருந்தாளிகளைக் கவனிப்ப தில் அவன் தீவிரமாக இருப்பான். தனிமையில் அவனுடன் பேச வாய்ப்புக் கிடைத்தால் சொல்லிவிட வேண்டும்'' என்று நினைத்தார்.

முன்னால் வந்த புரவிகளில் வந்தியத் தேவனும் பொன்னியின் செல்வரும் இருந்தனர். இருவரும் அவரவருடைய குதிரையி லிருந்து கீழே இறங்கி மாறனைக் கட்டித் தழுவி ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்து கொண்டார்கள். அதே சமயத்தில் மாறனின் கண்கள் இருவருக்கும் பின்னால் நின்ற பரிவாரங்களையும் அதில் நின்ற மூன்று அரசிளங் குமாரிகளையும் அதிலும் குறிப்பாகப் பழுவூர் இளவரசி லோகாவையும் நோட்டமிட்டன.

லோகாவும் வெளியேவந்து நின்றாள். அதற்குப் பின் மாறனுக் குப் பொன்னியின் செல்வர் பேசியது காதில் விழுந்தாலும், மனதில் பதியவில்லை. மாறனும் சோழனும் ஏக உயரம் கொண்ட வர்கள். இருவரும் கட்டித் தழுவியபோது அருள்மொழி வர்மரின் தோளிற்கு மேல் மாறன் லோகாவைப் பார்த்தான்.

இதழ் விரிந்தும் விரியாத மாதுளம்போது போன்ற அவள் செவ்விதழ்களைப் பார்த்து ரசித்தான். அதில் தவழ்ந்தும் தவழாத புன்னகை அவனுக்காகத்தான் என்று தெரிந்து கொண்டான். இவ்விடம் அவள் தங்கும் சொற்ப நேரத்தில் எப்படியாவது தன் காதலைச் சொல்லிவிட வேண்டும் என்றும் முடிவு செய்தான்.

'இந்தக் கடம்பூர் நாட்டுக்கு ஒரு நாள் நீதான் அரசியென்று உறுதியாகச் சொல்லி விட வேண்டும்' என்றும் நினைத்தான்.

❖ ❖ ❖

## அத்தியாயம் அறுபத்தாறு
## பக்தையின் விண்ணப்பம்

ஆடி மாதத்தில் பொதுவாகத் தமிழகத்தில் திருமணங்கள் நடப்பதில்லை. அதனால் ஆனி மாதம் முழுவதும் எங்கும் ஏகப்பட்ட கல்யாண வைபோகங்கள்தான்.

அப்படித்தான் அந்த ஆனி மாதத்தின் இறுதியில் சிதம்பரம் நகரில் கலகலப்புடன் கல்யாணக் களையும் கட்டியிருந்தது. ஒவ்



வொரு வீட்டின் வாசலிலும் தோரணமும், வாழை மரங்களும் கட்டப்பட்டிருந்தன.

அநேகமாக எல்லா வீடுகளிலும் விருந்து நடந்து கொண் டிருந்ததற்கு அடையாளமாகத் தெருவெங்கும் வாசனை மூக்கைத் துளைத்தது. தெருவில் செல்லும் ஒவ்வொருவரையும் வலுக் கட்டாயமாக உள்ளே அழைத்து ஊட்டிவிடாத குறையாகப் பரிமாறிச் சிதம்பர நகர மக்கள் சந்தோஷப்பட்டனர். ஆனால், இவையெல்லாம் அவரவர் வீட்டுத் திருமணங்களுக்காக இல்லை.

சைவர்களுக்குக் கோயில் என்றால் தில்லைதான். பஞ்ச பூத ஸ்தலங்களில், அளவிடமுடியாத ஆகாயத்தைக் குறிப்பது தில்லை. நடேசன் ஆடும் சபைகளில் பொற்சபையைக் குறித்தது.

இங்கு குடிகொண்ட நடராஜருக்கு வருடம் ஆறு முறை மட்டுமே அபிஷேகம். மார்கழித் திருவாதிரைக்கு வர முடியாத சோழச் சக்கரவர்த்தி உத்தமச் சோழர் அந்த விழாவுக்குச் சமமாக நடக்கும் அடுத்து வந்த ஆனித் திருமஞ்சனத்துக்குச் செல்வதென்று முடிவெடுத்தார். அவரது தாயாரான செம்பியன் மாதேவியும் அவ்வாறே விருப்பம் காட்டினார். அந்த முடிவுக்கு ஏற்பத் தில்லை நகருக்கு விஜயம் செய்திருந்தனர் இருவரும். அரசருடன் மற்ற அரச குடும்பத்தினரும் தில்லைக்குச் செல்வதென்று முடிவெடுத் தனர்.

கடம்பூர் நாட்டுக்கு உட்பட்டது சிதம்பரம் என்பதால், அரச குல வருகைக்கு ஏற்ற எல்லா ஏற்பாடுகளையும் மேற்கொள்ளுமாறு மாறனுக்குப் பிரதமரின் ஆக்ஞை. சம்புவராயர்கள் தங்கள் பரம்பரைக் குல தர்மமான விருந்தோம்பல் குணத்தைக் காட்ட ஒரு பெரும் சந்தர்ப்பம் வாய்த்தது என அதை எடுத்துக் கொண் டனர்.

முதலில் வந்து சேர்ந்தது செம்பியன் மாதேவிதான். அவருடன் சென்று மாறன் கடம்பூரில் பேய் விரட்டி வந்தாயிற்று. அடுத்து அரசரும் அரசியாரும் தனியாக வந்தார்கள். பிறகு மற்ற அரச குடும்பத்தினரும் வந்தனர். அவர்களுடன் மாறனின் ஆசைக் காதலி லோகாவும் வந்தாள்.

அந்த நாட்களில் காவிரியின் வட கரையில் தில்லை மிகவும் பிரசித்தி பெற்று விளங்கியது. இரு நதிகளுக்கு இடையில் இருந்த நகரில் பசுமைக்குப் பஞ்சமே இல்லை. அந்நகரின் வீதி ஒவ்வொன் றுமே தேரோடும் வீதியைப்போல் விசாலமாக அமைந்திருந்தது. சாலைகள் எல்லாம் அகண்ட காவிரியைப் போலிருந்தன. சொல்லப்போனால் அவை நேர் கோடுகளாக அமைந்திருந்தன.

செல்வச் சீருடனிருந்த சிதம்பரம் நகரே ஓர் அழகு. வீடுகள் எல்லாமே மாளிகைகள் தான். 'செல்வர் வாழ் தில்லை' எனச் சம்பந்தன் இவ்வூரைப் பற்றிப் பாடவில்லையா?

அதுவும் இப்போது ஆனித் திருமஞ்சன விழாவையொட்டி இன்னும் பத்து நாட்களுக்கு வீதிகளில் 'ஜே ஜே' என்று கூட்டம் இருக்கும். இன்றோ ஆங்காங்கே ஜனங்கள் கூட்டமாய் நின்றபடி வரும் ஊர்வலத்தைப் பார்த்தனர். அரசரும் குடும்பத்தாரும் தில்லைக் கோயில் தெற்கு வாசல் வழியாக உள்ளே நுழைந்தனர். தில்லைக் கோயிலுக்குள் சம்பந்தப் பெருமான் நுழைந்த வாயில் அது.

சிதம்பரம் கோயிலைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் தேரோடும் வீதிகளுண்டு. நான்கு திக்குகளிலும் நான்கு வாயில்களுண்டு. சமயக் குரவர் நால்வரும் ஆளுக்கொரு வாயில் வழியாக நுழைந்தார்கள் என்று சரித்திரம் சொல்லும். தெற்குத் திசையை நோக்கிக் கூத்தாடும் பெருமான் கோயிலுக்கு, மாணிக்கவாசகர் மாணவனாக, ஆசிரியர் முன் அடக்க ஒடுக்கமாக, நேரே வராமல் கிழக்கு வாசல் வழியாக வந்தார். அதுபோல அப்பரிடம் அடக்கத்துக்கா குறைவு? அவரும் அப்படியே மேற்கு வாசல் வழியாக வந்தார்.

சம்பந்தன், உமையின் பாலைக் குடித்தவனல்லவா? மகனென்ற உரிமையுடன் நேரே வந்தார்- சீர்காழியிலிருந்து வரும் தெற்குச் சாலை வழியாக. சுந்தரரோ, நட்பின் செருக்கில், "நானும் இந்த வீட்டில் ஒருவன்தான்!" என்று உள்ளிருந்து வருவதுபோல நடேசனுக்குப் பின்னாலிருந்து வந்தார் வடக்கு வாயில் மூலமாக. இதெல்லாம் கதையா, இல்லை நிஜமா, என்று யாருக்கும் தெரியாது. ஆனால், வெவ்வேறு வகை பக்திக்கு உதாரணமாக விளங்கின இந்த நான்கு வாயில்களும்.

இன்றோ, முதலில் நம்பியாண்டார் நம்பி செல்ல, அடுத்து உத்தம சோழரும், செங்கண்ணர் சம்புவராயரும் சென்றனர். அந்தப் பிரதேசத்தின் சக்கரவர்த்தியும் அந்தப் பிராந்தியத்தின் அரசரும் என்ற முறையில்.

உடனே கோயிலில் வாத்திய கோஷமும், வேத கோஷமும் எழுந்தன. சகல மரியாதைகளுடன் தில்லை வாழ் அந்தணர்கள் அரசரை வரவேற்றனர். கோயில் நிர்வாகம் தீட்சிதர்கள் என்று வழங்கப்படும் ஆதி சைவர் குலத்திடம் இருந்தது. தில்லை மூவாயிரவர் என்று பரத கண்டமெங்கும் பிரசித்தி பெற்றவர்கள் அவர்கள். கோயிலில் ஓராயிரம் ஆண்டு காலமாக மாறாத



வழிபாட்டு முறைகளைக் கடைப்பிடித்து வந்தனர். நடராஜரே இவர்களது உயிர் என்று வாழ்ந்தனர்.

கோயிலை வலமாகப் பிரதட்சிணம் வந்தனர் எல்லாரும். கோயிலின் வெளிச் சுவரை ஒட்டினாற் போல் அழகிய பூந்தோட்டம் இருந்தது. இந்த நந்தவனத்தில் பூத்துக் குலுங்கும் மலர்கள் நடராஜருக்கும், சிவகாம சுந்தரிக்கும் தினம் தினம் அர்ப்பணமாகும். அதையொட்டிக் கறவைப் பசுக்கள், கோயில் மாடுகள் கொண்ட கோசாலையும் இருந்தது.

முதல் முறை தில்லைக்கு விஜயம் செய்தவர்களும் இந்த ஊர்வலத்தில் இருந்தனர். அவர்கள் அடுத்து வந்த ஆயிரம் கால் மண்டபத்தைக் கண்கொட்டா ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டு வந்தார்கள்.

பின்னர் பிரதானக் கோயிலுக்குள் அனைவரும் நுழைந்தனர். இருபத்தோரு படிகள் கீழிறங்கித் தரைமட்டத்துக்கு அடியில் இருந்த கோயிலுக்குள் சென்றனர். உத்தம சோழருக்கு மழபாடியின் நினைப்பு வந்தது. தெருவை விடத் தாழ்ந்த கோயில்கள் விசேஷமானவை எனக் கேள்விப்பட்டிருந்தார். உள்ளே செல்லும் போது பணிவுடன் கீழே செல்வதும், கடவுளைக் கண்ட பின் நெஞ்சை நிமிர்த்தி மேலே ஏறுவதும் ஒரு சுகம்தானே?

அதற்கப்பால் அழகிய பொற்கூரை கொண்ட மாடமாளிகையைப் போலக் காட்சி தந்தது ஆடல்வல்லானின் அரங்கம். உச்சியை நோக்கிப் பயணித்த சூரியனின் தங்க நிறக் கிரணங்களில், நடேசனின் தலைக்கு மேலிருந்த பொற்கூரை "தகதக" வென ஜொலித்தது. கண்ணைக் கூச வைக்கும் வகையில் காட்சியளித்தது.

உலகத்தில் இருந்த அனைத்துச் செல்வமும் ஓரிடத்தில் சங்கமித்தது போன்ற ஒரு உணர்வைத் தில்லை ஏற்படுத்தியது. உலகைத் துறந்தவனுக்கும், செல்வச்சிறப்பை நினைவுபடுத்திய திருக்கோயில் தில்லை அல்லவா?

ஆம், குழந்தைப் பருவத்தில் உமையம்மையிடம் பால் பருகிப் பசியைப் போக்கிக் கொண்ட ஞானசம்பந்தப் பெருமான் தில்லையில் தேவாரம் பாடினார்.

> செல்வ நெடுமாடம் சென்று சேணோங்கிச்
> செல்வ மதி தோயச் செல்வமுயர்கின்ற
> செல்வர் வாழ் தில்லைச் சிற்றம்பலமேய
> செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே .

என்று மனமாரப் பாடினார்.

பெரியோர்கள் பலரும் இதில் குறிப்பிடப்பட்ட செல்வங்கள் பொன்னும் மணியும் அல்லவென்று சொல்லுவார்கள். எனினும் இதர செல்வங்களையெல்லாம் குறிப்பிடும் சம்பந்தர் ஒரே பாடலில் ஏழு முறை, செல்வம் எனக் கூறியிருக்க மாட்டார் என்பது பெரும்பான்மையானோரின் கருத்து.

கோயிலைப் பார்த்ததும் அரச குடும்பத்தினர் பலருக்கும் உடம்பு சிலிர்த்தது. பலர் கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்தது. சோழர் அரச குடும்பத்துக்குத் தில்லைச் சிற்றம்பலத்தின் மீது அபாரப் பிரியம். தங்கள் முடிசூட்டல் விழாக்களுக்கு இந்தக் கோயிலையே பயன்படுத்தினர்.

ஊர்வலத்தில் வராமல் ஏற்கெனவே கோயிலுக்குள் வந்தவர்களில் முக்கியமானவர் பெரிய பிராட்டி. நடராஜப் பெருமானுக்கு நேர் எதிரே விரிக்கப்பட்டிருந்த விரிப்பின் மீது அமர்ந்திருந்தார். அவருக்கு அருகில் மூன்று நிலவுகள் என்று வர்ணிக்கத்தக்க நிலையில் வானதியும் குந்தவையும் லோகாவும் அமர்ந்திருந்தார்கள்.

பழுவூர் இளவரசியுடன் மிக அன்புடன் பழகினார் பெரிய பிராட்டி. அவளைத் தன்னருகேயே அமர வைத்திருந்ததைக் கண்டு பலருக்கும் வியப்பு. பழுவூர்க் குடும்பத்தின் மீது அப்படியொன்றும் சொல்லும்படி பிரியமில்லை பெரிய பிராட்டிக்கு, என்று நினைத்தவரெல்லாம் இப்போது வியந்தனர்.

ஊர்வலத்தில் வந்த புருஷர்கள், ஸ்திரீகள், குழந்தைகள் எல்லோரும் கோயிலுக்குள் வந்து சேர வெகு நேரமானது. வந்தவுடன் சற்று நேரத்தில் அனைவருக்கும் இடம் கிடைத்து அமர்ந்தும் விட்டனர். ஆனித் திருமஞ்சனம் என்பது பத்து நாள் திருவிழா. ஒன்பதாவது நாள்தான் நடராஜர் தன் இடத்தை விட்டு வெளியே வருவார். தேரில் ஏறித் தன் நாட்டைப் பார்வையிடுவார். பின்னர் உள்ளே வந்தவுடன் நடேசனுக்கு அபிஷேகம் நடக்கும்.

இன்று திருவிழாவின் முதல் நாள். கொடியேற்றத் திருவிழா. அதற்கே விஜயம் செய்திருந்தனர் அரச குடும்பத்தினர். ஓரிரு மணி நேரத்தில் திருவிழாத் தொடங்கியது என்பதற்கு அறிகுறியாகக் கொடியேற்றம் மிக விமரிசையாய் முடிந்தது.

ஓதுவார் மூர்த்திகள் "குனித்த புருவமும்" என்று தொடங்கும் அப்பர் பெருமானின் பாடலைப் பாடினார். அவர் பாடிய பின் அனைவரையும் வணங்கிவிட்டு வெளியேறினார். பொது மக்களும் கலைந்து சென்றனர். இப்போது, அவ்விடத்தில் அமர்ந்திருந்தது அரசகுடும்பமும் அவர்களது நெருங்கிய சகாக்களும்தான்.



அப்போது "யாராவது ஒரு தேவாரப் பாடலைப் பாடுங்களேன்" என்றார் பெரிய பிராட்டி.

"பொன்னார் மேனியனே பாடலைப் பாடட்டுமா?"என்றார் சக்கரவர்த்தி உத்தம சோழர்.

"மகனே, மழபாடித் தேவாரம் நான் தொட்டிலிலிருந்தே கேட்டுவரும் பாடல். எனக்கு கேட்கக் கேட்கத் தெவிட்டாதது அந்தப் பாடல். எனினும் புதியதொரு தேவாரம் ஒன்றைக் கேட்க வேண்டும் என்ற ஆவல் மிகுந்திருக்கிறது" என்றார் அவர் தாய்.

சக்கரவர்த்தியின் குடும்பத்துக்குத் தேவாரத்தின் மீது அளவற்ற ஈடுபாடு. ஆனால், அவரவர் பிறந்து வளர்ந்த அல்லது அவர்களுக்குச் சம்பந்தம் உள்ள ஊர்களின் தேவாரத்தையே கற்று வைத்திருந்தனர். பெரிய பிராட்டியும், அரசரும் மழபாடித் தேவாரத்தில் கைதேர்ந்தவர்கள். அது போலவே சக்கரவர்த்தினி, பூங்குழலி அம்மையார் கோடிக்கரைத் தேவாரத்தை அழகாகப் பாடக் கூடியவர். ஆனால், இப்போது பெரிய பிராட்டி புதிய பாடல்களைப் பாடச் சொன்னால் அவர்கள் எங்கு செல்வார்கள்?

பெரிய பிராட்டியின் விண்ணப்பத்துக்குப் பதிலாகச் சற்று நேரம் சபையில் அமைதி சூழ்ந்திருந்தது.

"நான் பாடட்டுமா?" என்ற ஒரு மெல்லிய குரல் கேட்டது. எல்லாரும் அந்தக் திசையில் தலையைத் திரும்பினார்கள். அது பழுவூர் இளவரசி லோகமாதேவியின் குரல்.

தன் அழகிய கண்களை அகல விரித்துத் தன்னை ஆவலுடன் நோக்கிய பழுவூர்ப் பெண்ணைப் பெரிய பிராட்டி பார்த்தார்.

"எந்த ஊர்த் தேவாரமது?" என்று கேட்டார். 'பலரும் தினந்தோறும் ஜபிக்கும் தோத்திரங்களைத் தேவாரம் என்று நினைத்துக் கொள்வதுண்டு. அது போல இந்தப் பெண்ணும் நினைக்கிறளோ என்னவோ?' என்பது அவர் சந்தேகம்.

"எங்கள் ஊர்த் தேவாரம் எனக்குத் தெரியும், பாட்டி" எனச் சொன்னாள் லோகா, பணிவாக.

"பழுவூர்ப் பாடலா? நான் இதுவரை கேட்டதில்லையே!" என்று நம்பியாண்டார் நம்பியைத் திரும்பிப் பார்த்தார் செம்பியன் மாதேவி.

"ஆம். அது பாடல் பெற்ற தலம்தான். ஆனால், பாடல் நம்மிடம் இல்லை" என்றார் அவரும்.

மீண்டும் பழுவூர் இளவரசியைப் பார்த்தார் பெரிய பிராட்டி. இவ்வளவு பெரிய சபையில் பேசுகிறோமே என்று அவளுடைய முகத்தில் கொஞ்சம் கூட நாணமோ அச்சமோ இல்லையே!

லோகா, மீண்டும் மலர்ந்த முகத்துடன், ''பாடட்டுமா? உம்மைப் போல் அதை நானும் தொட்டிலில் இருந்து கேட்டு வருகிறேன்'' என்று துடுக்காகச் சொன்னாள்.

அதைக் கேட்டு அனைவரும் சிரித்தனர்.

''சரி, பாடு'' என்றார் செம்பியன் மாதேவி.

> முத்தன மிகு மூவிலை நல்வேலன் விரி நூலன்
> அத்தம் எமை ஆளுடைய அண்ணல் இடமென்பர்
> மைத்தழை பெரும் பொழிலன் வாசம் அது வீசப்
> பத்தரொடு சித்தர் பயில்கின்ற ஊரே

என்ற தேன் மதுரத் தேவாரத்தைப் பாடிவிட்டுச் சபையை ஒரு பார்வை பார்த்தாள் பழுவூர் இளவரசி.

பெரிய பிராட்டி கண்களில் வெள்ளமென நீர் பெருக் கெடுத்தது. லோகாவை அருகில் வரசொல்லி அணைத்துத் தழுவிக் கொண்டு, ''சந்தோஷம், அம்மா!'' என்றார்.

பெரிய பிராட்டி லோகாவைப் புகழ்ந்ததைக் கேட்டுக் குந்தவை பெருமிதம் கொண்டாள். ஒரு காரியமாகத்தான் லோகாவைத் தில்லைக்கு அழைத்து வந்திருந்தாள் குந்தவை.

குந்தவை பழுவூர் மாளிகைக்குச் சென்று லோகாவைத் தில்லைக்கு அழைத்துச் செல்லக் காலாந்த கண்டரிடம் ஒப்புதலைப் பெற்றாள். அவர் கண்ணில் அப்போது ஏதோ ஒரு உணர்ச்சி தோன்றி மறைந்தது. ஆனந்தமா, இல்லை தன்னையும் கூட்டிச் செல்லவில்லையே என்ற வருத்தமா அது என்று குந்தவையால் தீர்மானிக்க முடியவில்லை.

ஆனால், காரணமாகத்தான் குந்தவை பழுவேட்டரையரை அழைக்கவில்லை. அவரது நிழலிலிருந்து நகர்ந்தால்தான் லோகா மனப்பாரம் இன்றி இருப்பாள். அப்படிப்பட்ட சூழலில்தான் அவள் இருக்க வேண்டும், தன் காரியம் நிறைவேறுவதற்கு என்று முடிவு கட்டியிருந்தாள் குந்தவை.

''தந்தையைப் பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்று சாக்குப் போக்குச் சொல்லாமல் லோகாவும் ஒப்புக் கொண்டது குந்தவைக்கு ஆச்சரியம்தான். ஆனால், குந்தவைக்குத் தெரியாது லோகா உடனே ஒப்புக் கொண்டது வேறு ஒரு விஷயத்துக்காக



என்று. மாறனின் தாய்நாட்டில் தில்லை இருப்பதால், அங்கு செல்வது அவளுடைய ஆவலை அதிகமாக்கிற்று.

பெரியபிராட்டி, லோகாவிடம் பேச்சுக் கொடுத்தார். ''இந்தப் பாடலை நான் இதுவரை கேட்டதில்லையே, அம்மா. பழுவூர்த் தேவாரத்தில் நாலு வரியைப் பாடினாய். மீதி....?''

''எனக்குத் தெரியாது, பாட்டி'' என்று ஒப்புக்கொண்டாள் பழுவூர் இளவரசி.

''ஏனம்மா? கற்றுக் கொள்ள வேண்டாமா?''

அவள் நாணத்தில் தலை கவிழ்வாள் என்றால், இல்லை. லோகா துடுக்காகப் பெரிய பிராட்டியின் கூற்றுக்கெல்லாம் பதில் சொன்னாள்.

''பாட்டி, எங்கள் கோயிலில் ஒரு வயதான ஓதுவார் இருந்தார். அவர் சொல்லித்தான் எனக்கு இதுவே தெரியும். அவருக்கும் இதற்கு மேல் தெரியாதாம். ஏதோ ஒரு கோயிலில் எல்லாத் தேவாரமும் பூட்டி வைக்கப்பட்டிருக்கிறதாம். கற்றுக் கொள்ள ஆசை கொண்டவர்கள் ஏராளமாம். ஆனால், முடியவில்லை என்று அவர் சொன்னார். எங்கள் ஊர்த் தேவாரத்தினை முழுமையாகக் கற்றுக்கொள்ள எனக்கும் ஆசைதான். ஆனால், முடியவில்லையே. சொல்லித் தரும் ஓதுவார்களுக்கே தெரியவில்லையே'' என்றாள் லோகா.

அதைக் கேட்ட செம்பியன் மாதேவியின் முகம் மாறியது. கண்களில் நீர் பெருக்கெடுத்தது. உத்தம சோழச் சக்கரவர்த்தியைப் பார்க்காமல் பொதுவாகப் பார்வையைச் செலுத்திய செம்பியன் மாதேவி, ''முழுதாய் ஒரு தேவாரம் எனக்குச் சொல்லித் தாருங்கள் என்று இந்த நாட்டின் பிரஜை ஏங்குகிறாள். இந்த இளம் பெண் என்னைக் கேட்கிறாள், 'எனக்குத் தேவாரம் முழுமையாகப் பாட ஆசை. சைவ சமயக் குரவர்களின் பதிகங்களில் கனிந்து சொட்டும் பக்திரசத்தை எம்மிடம் தர மறுக்கிறீர்கள்' என்று இந்தப் பெண் குற்றம் சாட்டாமல் சாட்டுகிறாள். அவள் குற்றம் சாட்டுவது அரசாட்சியை'' என்றார்.

சபை மிகவும் அமைதியானது. எல்லாருக்கும், அரசரைக் குறி வைத்தே அவரது தாயார் பேசுகிறார் என்று தெரியும். ''சிபியின் வழித் தோன்றல்களின் மீதே குற்றச்சாட்டு. என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று சிடுசிடுத்தார் பெரிய பிராட்டி. அடுத்தடுத்து அமர்ந்திருந்த பொன்னியின் செல்வரும் அரசரும் மௌனம் காத்தனர்.

பெரிய பிராட்டியின் வார்த்தைகளில் ஏளனம் இல்லை. ஆனால், அந்த வார்த்தைகளில் கோபம் அதிகமாய்த் தொனித்ததா, இயலாமை அதிகமாய்த் தொனித்ததா என்று சொல்வதற்கு முடியாமல் இருந்தது.

''நம்மால் பிரஜைகளின் ஆசையைப் பூர்த்தி செய்ய முடிய வில்லையே. இந்தக் கொடுமைக்கு ஒரு அளவேயில்லையா? கடவுளுக்கும், மனிதனுக்கும் பாலம் அமைத்தது தேவாரம். அது முழுமையாக நமக்கு எப்போதுதான் கிட்டும்?'' என்று பெரிய பிராட்டி மனதில் இருந்ததையெல்லாம் கொட்டினார்.

மழவரையன் மகளார் சொன்னதைக் கேட்டு அக்கூட்டத்தில் நிசப்தம் நிலவியது. எல்லார் மனதிலும் நமக்கு உரியது கிட்ட வில்லையே என்ற ஏக்கம் மேலோங்கியது.

தன் தாயை உயிருக்கு உயிராய் மதிக்கும் சக்கரவர்த்தி உடனே துள்ளி எழுந்து, ''அன்னையே, உடனே தேடுகிறேன்'' என்று சொல்லவில்லை. அது பலருக்கும் வியப்பு.

சக்கரவர்த்தி மெல்லப் பேசினார். ''அம்மா, உமக்குத் தெரியாததா? இந்தத் தில்லைக் கோயிலில் ஏதோ ஒரு அறையில் அவையெல்லாம் இருக்கின்றன. மூவரின் தேவாரமும் இருக்கு மிடத்தைச் சொல்ல விருப்பமில்லை என்று தில்லை வாழ் அந்தணர்கள் ஏற்கெனவே தெரிவித்து விட்டனர். 'ஏன்? எதற்கு?' என்று கேட்கச் சோழ அரசருக்குக் கூட உரிமையில்லை'' என்றார்.

செம்பியன் மாதேவி கெஞ்சாத குரலில் மன்றாடினார். ''உத்தமா! நான் சொல்வதைக் கேள். மீதி இருக்கும் தேவாரப் பாடல்களும் ஒன்றோன் பின் ஒன்றாக மறைந்துவிடும். மக்கள் சுவைக்க வேண்டியதைக் கரையான் சுவைத்துவிடும். உலகமெல் லாம் நம்மைப் பார்த்துச் சிரித்தது போதும். நீ ஒருமுறை அதட்டிக் கேட்டால் அவை இருக்கும் இடத்தைச் சொல்லிவிடுவார்கள், தில்லை வாழ் அந்தணர்கள்.''

முதல் முறையாக இறுக்கமானது உத்தம சோழரின் முகம். ''என்ன வார்த்தை சொன்னீர்கள் தாயே? யாரை அதட்டுவது? நமக்கு முடிசூட்டும் உரிமை அவர்களுக்கு உண்டு. சுந்தரர் முதலில் வணங்குவது இவர்களைத்தான். சிவலோகம் தனில் சிவனுக்கே சேவை செய்யும் பூத கணங்களாக இவர்கள் காட்சி தருகிறார்கள் என்று சம்பந்தர் சொல்லவில்லையா? பின் இவர்களுடன் நான் எப்படிக் கோபித்துக் கொள்ள முடியும்?'' என்றார் அரசர். ''என் காலத்தில் அவை கண்டு பிடிக்கப்படா விட்டாலும் பரவாயில்லை. நான் இவர்கள் கோபத்துக்கு ஆளாகமாட்டேன். ஈசனின் விருப்பம்



இதற்கு இல்லை என நினைத்து விட்டு விடுவேன்'' என்றார் உறுதி யாக.

இவ்விதம் அரசர் கூறியதைக் கேட்ட செம்பியன் மாதேவி பேச்சை நிறுத்திவிட்டு மௌனத்தில் ஆழ்ந்தார். அவருடைய உள்ளமானது எதிர் காலத்தைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியது. சற்று நேரம் சபையெங்கும் மௌனம் குடி கொண்டிருந்தது.

சிவபக்தியே உருக்கொண்டவரான செம்பியன் மாதேவடிகள், தொடர்ந்தார். ''இங்கு வந்து நடராஜரை வேண்டுபவர்கள் எல்லாம் பொன்னும் மணியும் பதவியும் புகழும் வேண்டுவதில்லை. தனக் கென ஒன்றும் வேண்டாமல் அவன் சேவையைத் தொடர வேண்டு பவர்கள்தான் அதிகம். வியாக்ரபாதர், தன் முன் தோன்றும் நடேசனிடம் என்ன வேண்டினார்? பொன்னையா? மணியையா? இல்லையே! 'வில்வ மரத்தில் ஏறி உனக்கு வில்வ இலைகள் பறிக்க முடியவில்லை. மரம் வழுக்குகிறது. ஆகையால் எனக்குப் புலி நகம் வளர வேண்டும். அவ்வரத்தையே கொடு!' என்று தானே கேட்டார். என்ன ஒரு தன்னலமற்ற தொண்டு!'' என்றார்.

எதற்காக இதிகாசக் கதையைச் சொல்கிறார் பெரிய பிராட்டி என்று நினைத்தவர்களுக்கு அவர் அடுத்துச் சொன்ன வார்த்தைகள் பதிலளித்தன. ''நானும் அது போல இந்தப் பெண்ணுக்கும் அவள் சந்ததியில் வருவோருக்கும் வேண்டப் போகிறேன். அவர்களுக்கு அந்தத் தேவாரத் தேன் கிடைக்கவேண்டும்'' என்றபோது அந்த மாதரசியின் கண்கள் கலங்கியிருந்தன. அவருடைய உள்ளமும் கலக்கமடைந்திருந்ததாகத் தோன்றியது. பெரிய பிராட்டியின் முகமானது அவருடைய உள்ளத்தின் கொந்தளிப்பை நன்கு காட்டு வதாய் இருந்தது. 'என்னுடைய காலத்தில் தேவாரத்தையெல்லாம் ஒன்று திரட்டும் முயற்சியில் தோற்பேனா?' என்று உள்ளத்தில் உண்டான சோகத்தை அவருடைய கண்கள் பிரதிபலித்தன.

பதில் கூறாத சக்கரவர்த்தியைப் பார்த்து, ''என் மனம் கலக்கம் நீங்கித் தெளிவு அடையவே அடையாது. சிங்காதனம் ஏறிய சக்கரவர்த்தியாலேயே இது முடியாவிட்டால், இந்தப் பதிகங் களைப் பற்றி உலகம் அறிய என்னதான் வழி? சக்கரவர்த்தியிடம் பேசிப் பயனில்லை. என் காலத்தில் அது முடியாது போலிருக்கிறது. இந்தப் பெண்ணின் காலத்திலாவது எல்லாத் தேவாரப் பதிகங் களும் சேகரிக்கப் படவேண்டும். நீ என்ன நினைகிறாய், அருள் மொழி?'' என்றார்.

தாய் மகன் சண்டைக்குள் தன்னையும் இழுத்து விட்டார்களே என்று தயங்கிய அருள்மொழி, '' பிராப்தம் இருந்தால் கண்டு

பிடித்துவிடலாம்'' என்றார். பதிலைச் சொல்லிவிட்டு அந்தப் பழுவூர்ப் பெண்ணைப் பார்த்தார். அவளும் தன் கரிய கண்களினால் சோழனை உற்று நோக்கினாள். மீன் போன்ற கண்களைச் சந்தித்த போது திடீரென்று ஒரு நடுக்கம் கொண்டான் அவன். போரில் சந்திக்கும் அம்பினைத் தாங்கும் இதயம், இந்த மை தீட்டிய விழியின் அம்பினைத் தாங்கமுடியாமல் நடுநடுங் கியது. அந்தப் பார்வையின் வீரியத்தைத் தாங்க முடியாத சோழன் தலை குனிந்து தரையை நோக்கினான்.

தில்லைச் சிற்றம்பலத்தின் கருங்கல் தரையையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த பொன்னியின் செல்வர் ஒரு முடிவுக்கு வந்தார். 'நாம் இந்தப் பிரயாணம் வந்தது மிக நல்லதாய்ப் போயிற்று. தேவாரத்தைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும். என்றாவது இதைச் சாதித்தே ஆக வேண்டும்' என்று மனதுக்குள் உறுதி பூண்டார்.

❖ ❖ ❖

## அத்தியாயம் அறுபத்தேழு
## குளத்தருகே குரல்கள்!

நடராஜர் கோயிலில் இருந்த ஆயிரங்கால் மண்டபத்தின் கிழக்கே பல மரங்கள் வானுயர்ந்து வளர்ந்திருந்தன. அந்தச் சோலையில் நம்பியாண்டார் நம்பி தன் சிஷ்ய கோடிகளுடன் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். மதியம் கோயில் பூட்டப் பெற்றிருந்தாலும் வெளிச் சுற்றுத் திறந்தே தானிருக்கும். அங்கு சிவனடியார்கள் தங்குத் தடையின்றி இருக்கலாம்.

காலையில் நடேசனின் கோயில் ஆனித் திருமஞ்சன விழாத் தொடங்கியது என்பதற்கு அடையாளமாகக் கொடியேற்றம் நடந்திருந்தது. அந்த விழாவுக்கு வந்த மற்றவரெல்லாம் தங்கள் ஜாகையை நோக்கிச் சென்று விட்டனர். சென்றவர்களில் பலர் சலனத்துடன்தான் சென்றார்கள். தில்லைக் கோயிலில் எங்கோ ஒளிந்து இருந்த தேவார ஓலைகளைக் கண்டுபிடிப்பதைப் பற்றிக் காரசாரமாகத் அரசருக்கும் அவரது தாய்க்கும் பேச்சு வார்த்தை நடந்தது. நடந்து முடிந்த வாக்குவாதம் பலரது மனதில் கசப்பை ஏற்படுத்தியிருந்தது.



''மகனே, ஏன் இப்படிக் கதையை வளர்த்திக் கொண்டிருக் கிறாய்? அதி சீக்கிரத்தில் மீண்டும் இந்தத் தமிழகம் அந்தத் தேவாரத் தேனைச் சுவைக்க வேண்டும். அதற்கெல்லாம் என்ன தான் செய்யப் போகிறாய் என்று சீக்கிரம் சொல்லு'' என்று சற்று ஆத்திரத்துடன் கேட்டே விட்டார் செம்பியன் மாதேவி.

''தாயே, நான் தாமதிப்பதும்கூட ஏதோ கடவுளின் செயல் தான். நானே மூவுலகை ஆளும் சக்கரவர்த்தி என்று புலவர்கள் வாயாரப் பாடுகிறார்கள். கை வலிக்கும்வரை கவிதை எழுதித் தள்ளுகிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக் கொள்ளாவிட்டால் என்னை விட நிர்மூடன் உலகில் யாருமே இருக்க முடியாது என்று நினைப்பீர்கள், தாயே! என் ஆட்சியில் அந்தத் தேவார ஓலைகள் கிடைத்து விட்டால் என்னைப் போல் சந்தோஷப் படுபவன் வேறு யாருமில்லை. எனினும் என்னால் தில்லை வாழ் அந்தணரை அதட்டவோ, மிரட்டவோ ஒருநாளும் முடியாது'' என்று உறுதியாய்ச் சொல்லிவிட்டார் சக்கரவர்த்தி.

உடனே தாயின் கண்களில் கண்ணீர் பெருகத் தொடங்கியது. மகன் துடித்துடித்துப் போனார். ''வேண்டாம், தாயே! என்னை இப்படியெல்லாம் தண்டிக்கவேண்டாம்!'' என்று கூறிச் சமாதானம் செய்தார். இவ்வளவு குதூகலமான விழாவில் நடந்த அந்த வாக்கு வாதம் எல்லாரையும் கலங்கச் செய்திருந்தது. அதனால் விட்டால் போதும் என்று கிளம்பி விட்டார்கள்.

நம்பியடிகள் மட்டும் கோசாலைக்கு அருகில் நிழல் உள்ள இட மாய்ப் பார்த்துச் சில சீடர்களுடன் ஓய்வெடுத்தார். மாலையில் சிவகங்கைக் குளத்தில் நீராடிவிட்டு மீண்டும் நடேசனைத் தரிசிக்கலாம் என்று முடிவெடுத்தார்.

அப்போது ஒரு சிஷ்யன் ஓடோடி வந்து நம்பியாண்டார் நம்பிகளைக் காணப் பொன்னியின் செல்வர் வந்திருக்கிறார் என்று சொன்னவுடன் அவ்விடம் பரபரப்பு அடைந்தது.

பொன்னியின் செல்வருக்கு ஆன்மீகத்தின் மீது ஆர்வமில்லை எனக் கூற முடியாது. ஈழத்திலிருந்த போது புத்த பிட்சுக்களுடன் பல நாள் தங்கி அவர்களின் மதத்தைப் பற்றிக் கேட்டும் விவாதித் தும் இருந்தார். அது போலவே சைவ வைணவ சம்பிரதாயங் களைப் பற்றியும் அறிய ஆவல் காட்டுவார். ஆனால், தனக்குத் தெரியாத விஷயங்களைப் பற்றி அறியும் ஆவல்தான் அது. பொன்னியின் செல்வருக்குக் கடவுளின் மீது ஆழ்ந்த ஈடுபா டென்று சொல்ல இயலாது.

இன்று நடந்த நிகழ்ச்சிகளைக் கண்டவுடன் அவருக்கே ஆச்சரிய மாக இருந்தது. கெஞ்சாத குறையாகப் பெரிய பிராட்டி கேட்பதும், தாய் நினைத்ததை நினைத்தபடி, அவர் மனத்தில் நினைப்பதற்கு முன்னாலேயே நிறைவேற்றித் தர வேண்டும் என்றே வாழும் சக்கரவர்த்தி அதை மறுத்ததும் விந்தையாக இருந்தது. ஏன், அது ஒரு மர்மப் புதிராயிருந்தது. தாய்க்குத் தேவார ஓலைகளைக் கண்டு பிடிப்பதில் ஆர்வம். ஆனால், மகனுக்கு அதைப் பாது காக்கும் தில்லை வாழ் அந்தணரிடம் மிரட்டிக் கேட்கத் தயக்கம்.

உத்தம சோழரின் நிலையில் இருந்திருந்தால் தான் என்ன செய் திருப்போம் என்று நினைத்துப் பார்த்தார் பொன்னியின் செல்வர். "அரசர் போல எனக்குப் பக்தி அவ்வளவு இல்லைதான். ஆனால், அவர் தில்லை வாழ் அந்தணரிடம் பேசவே அல்லவா பயப் படுகிறார். அவர் இடத்தில் நானிருந்தேன் என்றால் நான் அவர் களிடம் பேசியாவது பார்த்திருப்பேன்" என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டார்.

அதுமட்டுமல்ல. அவர் மனதில் பல எண்ணங்கள் படை யெடுத்தன. அதுவும் அந்தப் பழுவூர்ப் பெண் பாதியில் நிறுத்தி விட்ட பாடலை முழுமையாகப் பாடி முடிக்க ஆசை கொண்டாள் என்பதுதான் அவர் ஆர்வத்தைக் கிளறிவிட்டது. 'அப்படி என்ன தான் இருக்கிறது அந்தத் தேவார ஓலைகளில்?' அதன் முழு விவரத்தையும் தெரிந்து கொள்ள அவர் அடங்காத ஆவலுடன் இருந்தார். இதையெல்லாம் பற்றிக் கேட்பதற்குச் சரியான நபர் நம்பியாண்டார் நம்பிகள்தாம் என்று முடிவெடுத்துத்தான் இங்கு வந்தார்.

நம்பியடிகளுக்கு அதிசயம். தன்னிடம் மிகவும் மரியாதையுடன் நடந்து கொள்ளும் பொன்னியின் செல்வர் என்றுமே தன்னை நாடிவந்து ஆன்மீகத்தில் ஐயம் நீர்த்துக் கொள்ளவோ, அல்லது சைவத்தை வளர்க்கும் வழிகள் பற்றிய யோசனைகள் கேட்கவோ வந்ததேயில்லை. இன்று என்ன ஆனது?

வந்து வணங்கிவிட்டு அடிகள் முன் அமர்ந்து பொன்னியின் செல்வரே தொடங்கினார். "நம்பியடிகளே, பாட்டி சொல்வதை யெல்லாம் என்னால் நம்ப முடியவில்லை. ஒரு அறைக்குள் அப்படிப்பட்ட பொக்கிஷம் இருக்குமென்று என் உள்ளம் சுலபத்தில் நம்பவில்லை. அப்படியே இருந்தாலும், ஐயா! அப்படி என்ன தான் இருக்கிறது அந்தத் தேவாரங்களில்? கையில் இருக்கும் பாடல்களைப் படிக்கவே எல்லாருக்கும் ஆயுள் போதாது!" என்றார் பொன்னியின் செல்வர்.



சோகமாக ஒரு சிரிப்பு நம்பியடிகளின் இதழ்களில் பரவியது. "பொன்னியின் செல்வா, உத்தமர் எவ்வளவு பெரிய தியாகம் செய்கிறார் என்று உமக்குத் தெரியவில்லை" என்று நேரடியாகச் சொன்னார்.

பின்பு தொடர்ந்தார். "அப்பர் பெருமானும், ஞானசம்பந்தரும், சுந்தரமூர்த்தியும் பாடிய பதிகங்களையெல்லாம் சேகரிக்க வேண்டும். அவர்களுடையப் பாதங்கள் பட்டுப் புனிதமாகி, அவர் களுடைய பாடல்களினால் தெய்வீகமடைந்த ஸ்தலங்கள் எவை யென அறிய வேண்டும். எந்தெந்தக் கோயில்களில் சைவக் குரவர் களின் பாதச்சுவடுகள் பட்டன என்றறிந்து அக்கோயில்களைத் திருப்பணி செய்ய வேண்டும். வானளாவிய விமானக் கோபுரங் களுடன் கற்றளிகளை எடுக்க வேண்டும். இவை போன்ற ஆசைகள்தாம் இன்று வாழும் ஒவ்வொரு சைவனுடைய மனோ ரதங்கள்!" என்றார்.

மேலும் தொடர்ந்தார்: "இளவரசே, சுவடிகளைக் கண்டு பிடிக்கும் மனிதனை தெய்வமாகவே மதிக்கும் இந்த நாடு. அதையும் தெரிந்தே, முயற்சி செய்ய மறுக்கிறார் அரசர் என்றால், அது எவ்வளவு பெரிய தியாகம்!" என்றார்.

பொன்னியின் செல்வருடைய முகத்தில் ஆச்சரியம். "இந்தச் செயலில் இவ்வளவு பெருமை இருக்கும்போது, மன்னர் ஏன் ஒப்புக்கொள்ளமாட்டேன் என்று சொல்கிறார்? தில்லை வாழ் அந்தணர்களுக்கு அவரே படியளக்கிறார். உத்தரவு போட்டால் போதாதா? உத்தமர் ஏன் இப்படித் தில்லை வாழ் அந்தணரைப் பார்த்துப் பயப்படுகிறார்?" என்று வினவினார்.

"இளவரசே! நான் உங்கள் சந்தேகத்தை நிவர்த்தி செய்கிறேன்" என்றார் நம்பியடிகள். "அவருடைய ஆட்சியில் சோழர் நாட்டில் சிவனுக்கு அடிமையானவர்கள் மதிக்கப்படுவார்கள். என் பின்னால் கோயிலுக்குள் அவர் நுழைந்ததை நீர் பார்க்க வில்லையா? அதனால் எந்த நிலையிலும் அவர் தில்லைவாழ் அந்தணரைப் பகைத்துக் கொள்ள விரும்பவில்லை என்பதே உண்மை" என்று விளக்கம் அளித்தார்.

மேலும், "தில்லை வாழ் அந்தணரைக் கண்ட சம்பந்தர் கைலாயத்தில் இருக்கும் பூத கணங்களாகவே அவர்களைப் பாவித் தார். மேலும் உமது குலத்துக்குப் பஞ்சாட்சரப் படியில் அபிஷேகம் செய்து ஆயிரங்கால் மண்டபத்தில் கிரீடம் சூட்டும் அதிகாரமும் அவர்களுக்கே உண்டு. ஆகவே அவர்களுடன் போராட மன்னர் நினைக்கவில்லை" என்றார்.

ஆனால், அரசரைப் பற்றிப் பெருமிதம் கொண்ட நம்பியடிகள் சந்தோஷம் கொள்ளவில்லை. "இதுவே நமக்குப் பெரும் தோல்வி தான்..." என்று மேலும் தொடர்ந்தார் அடிகள். "தேவாரத்தைத் தேடிச் சேகரிக்க வேண்டும். செப்பேடுகளில் பொறிக்க வேண்டும். தேவாரம் முழுமையாகக் கிடைத்தால் சைவ பக்தர்களுக்கு ஊக்கமளித்து உற்சாகப்படுத்தலாம். அப்பாடல்களை பக்தர்கள் இசையுடன் பாடி, நாடெங்கும் பரப்பி, முக்கண்ணனின் கருணை வெள்ளத்தை ஜீவகோடிகளுக்கு எடுத்துச் செல்வார்கள்" என்று கற்பனையில் கோட்டை கட்டிச் சென்றார் நம்பியடிகள்.

பேச்சை மாற்ற விரும்பிய பொன்னியின் செல்வர், "உங்களது யூகம் என்ன? எங்கு தானிருக்கின்றன தேவாரச் சுவடிகள்?" என்று கேட்டார்.

"இந்தக் கோயிலுக்குள்தான் அந்தத் தேவார ஓலைகள் இருக் கின்றன என்று தொன்று தொட்டு ஒரு பேச்சு இருந்து வருகிறது. சில கோயில்களில் மட்டும் கல்வெட்டில் பதித்து வைத்து விட்டனர். அவையெல்லாம் நமக்கு முழுமையாகக் கிடைத்திருக் கின்றன. ஆனால், மீதியெல்லாம் அரைகுறையாகச் செவி வழியாகத்தான் நமக்குக் கிட்டியுள்ளன. மனதில் பதிந்திருந்த ஓரிரு பதிகங்களைத் தவிர இப்போது மிச்சம் மீதி ஏதுமில்லை" என்றார்.

"இந்தத் தேவாரப் பதிகங்கள் இந்தக் கோயிலுக்குள் எப்படி வந்து மாட்டிக் கொண்டன?" என்றார், பிரச்சனையின் ஆணி வேரைத் தேட முற்பட்ட இளவரசர்.

அதற்குச் சரியான பதில் இல்லை அடிகளிடமிருந்து. "யாரால் நேர்ந்தது, எப்படி நேர்ந்தது என்று மட்டும் தெரியவில்லை. பலர் பலவாறு சொல்லுகிறார்கள். ஆனால், அவற்றை வைக்கச் சிறந்த இடம் இதையன்றி வேறு இல்லை என்பதே அந்தக் கூற்றைப் பரவ லாகப் பரவச் செய்தது. கடந்த இரு நூற்றாண்டுகளின் சரித் திரத்தை நினைத்துப் பாருங்கள், இளவரசே. சோழர் பேரரசாய் உருவாகி வரும்வரை எங்கும் போராட்டம். நிதானம் இல்லாத நிலை. சைவத்துக்கு எதிரிகள் வேறு சுற்றிக் கொண்டிருந்தனர். ஆகவே சைவத்தின் தலைநகரமான இங்கு அவற்றை வைப்பதே சிறந்ததென்று நினைத்திருக்கவேண்டும், அதைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றிருந்தவர்கள்" என்றார் பெருமூச்சுடன்.

"இருந்துவிட்டுப் போகட்டுமே. என்றாவது ஒரு நாள் அந்தணர்கள் மனம் இளகலாம். அல்லது, அவர்களை மிரட்டும் அளவுக்குப் பக்தி குன்றிய அரசன் எமது வம்சத்தில் வரலாம்" என்றார் சிரித்துக் கொண்டே இளவரசர்.



"அவை அதுவரை பத்திரமாய் இருந்தால் பரவாயில்லையே. மூடிய அறையில் அந்த ஓலைகளுக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டு விடும் என்றும் பயப்படுகிறேன். அவற்றை அந்த ஆபத்திலிருந்து மீட்டுக் கொண்டு வருவதற்கு என்னுடைய உள்ளம் துடிக்கிறது. ஆனால், இன்று அவை எங்கிருக்கும் என்று ஓரளவிற்குத் தெரிந்தா லும் அவற்றின் சரியான இருப்பிடத்தைச் சொல்ல மறுக்கிறார்கள் இந்தத் தில்லை வாழ் அந்தணர்கள்" என்று வருத்தப் பட்டார் அடிகள்.

பொன்னியின் செல்வருடைய மனம் அதிவேகத்தில் இயங் கியது. போருக்கு முன் போர்க்களத்தை நேரில் சென்றோ அல்லது ஒரு உயர்ந்த இடத்திலிருந்தோ பார்த்துப் பார்த்துப் பழக்கம் கொண்டவர். மலைக் குன்று இல்லாத இடத்தில் மரத்தின் மேலேறிக் கூடக் களத்தைப் பார்வையிட்டிருக்கிறார். எதிரியை அளவிடுவதை விடப் போர்க்களத்தைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டும் என்ற நோக்குடையவர் அவர்.

"நம்பியடிகளே! உங்களுடன் தில்லைக் கோயிலைச் சுற்றிப் பார்க்க விரும்புகிறேன்" என்றார் பொன்னியின் செல்வர்.

நம்பியடிகளின் முகத்தில் ஒரு புதிய நம்பிக்கை பிறந்தது. ஏதோ விஷயமாகத்தான் பொன்னியின் செல்வர் கூப்பிடுகிறார் என்று தோன்றியது அவருக்கு. மன்னனின் மனதை மாற்ற முடியும் என்றால், அது இவரால்தான் முடியும் என்று உடனே எழுந்தார். "மாலையில் கோயில் திறந்தவுடன் உள்ளே செல்லலாம். இப்போது வெளியில் சுற்றிப் பார்க்கலாம்" என்றார் நம்பியடிகள்.

வெகுகாலமாகவே தேவாரத்தையும் அது தரும் தேன் போன்ற சுவையையும் அனுபவிக்க ஆர்வம் கொண்டிருந்தவர்கள் நம்பி யைத்தான் நாடிவருவார்கள். அந்த ஆர்வத்தைக் காரியத்திலே காட்டுவதற்கு ஒரு தக்க சந்தர்ப்பத்தைத்தான் எதிர் நோக்கிக் கொண்டிருந்தார் அவர். பொன்னியின் செல்வர் காட்டிய ஆர்வம் அவருக்கு நம்பிக்கையைத் தந்தது.

இருவருமாகக் கோயிலைச் சுற்றி வந்தனர். ஆனால், வெகு தூரம் விரைவாகப் போய்விடவில்லை. ஆங்காங்கே இருந்த சிற்ப வேலைப்பாடுகளைக் கண்டவுடன் நின்று ரசித்தார் பொன்னியின் செல்வர். கோயிலைச் சுற்றி மலர்கள் பூத்துக் குலுங்கிய செடிகளும் மரங்களும் நிறைந்த உத்தியான வனம் இருந்தது. அதை ரசித்தார். ஆனால், அப்போது கூட ஓலைச் சுவடிகள் எங்கெல்லாம் இருக்க லாம் என்று எண்ணிக் கொண்டே சென்றார்.

சுற்றுமுற்றும் பார்த்து, எல்லா இடங்களையும் கவனித்த பின், அவருக்கு மலைப்புத்தான் அதிகரித்தது. அவருக்கு ஒரே வியப்பும் திகைப்பும்தான். கோயிலின் அமைப்பைக் கண்டும் பிரமிப்புக் கொண்டார். சிற்றம்பலத்தின் பிரம்மாண்டம் அவரைத் திக்குமுக் காடச் செய்தது .

கோயிலைச் சுற்றி இரண்டடுக்கு மெத்தையுள்ள அழகிய வேலைப்பாடுகள் அமைந்த மண்டபம் இருந்தது. கட்டடங்களின் வெளிப்புறச் சுவர்களில் பூசிய முத்துச் சுண்ணாம்பினால் மிகவும் பொலிவு பெற்று விளங்கியது. ''ஆகா, இவ்வளவு அறைகளா! குறைந்த பட்சம் ஆயிரம் அறைகள் இருக்குமே!'' என்றார்.

''தேவார ஓலைகள் இந்த மாபெரும் கோயிலில் எங்கோ இருக்கின்றனவென்றால், தில்லை வாழ் அந்தணர்களுடைய ஒப்புதலும் ஒத்துழைப்புமின்றி அவற்றைக் கண்டுப்பிடிப்பது என்பது அவ்வளவு சுலபமான காரியமில்லை!'' என்றார் பொன்னி யின் செல்வர்.

''ஆம்.. நம் வேலை சுலபம் இல்லைதான்!'' என்று ஒப்புக் கொண்டார் நம்பி.

''ஒரு பெரும் பிரயாணம் ஒரு காலடியில்தான் துவங்குகிறது, அடிகளே!'' என்று சொல்லிச் சிரித்தார் பொன்னியின் செல்வர். ''எங்கிருக்கிறது என்று கண்டறிந்தால் அரசரிடம் சென்று முறையிடலாம். அவ்வளவுதான் நாம் செய்யக் கூடியது'' என்றார்.

''ஆனால், ஒன்று. நீர் நினைத்தால் முடியும்'' என்று நம்பியடிகள் கூறினார். மேலும், ''இளவரசர் அருள்மொழிவர்மர் போகுமிடமெல்லாம் வெற்றிதான் என்று ஊரே பேசுகிறது. நீங்கள் முயற்சி செய்யுங்கள். நானும் உதவுகிறேன்'' என்று உறுதியளித்தார் சிவனடியார்.

''ஐயா! என்னை அதிகமாகப் புகழ்கிறீர். உம்முடைய நீட்டிய கரத்திலிருந்து ஐங்கரனே உணவு வாங்கி உண்ணவில்லையா? சரி, ஒன்று செய்யலாம். அவன் உதவியை நாடுங்கள். உமது விண்ணப் பத்தை ஏற்றுத் திருமுறை இருக்கும் இடத்தை அவர் காட்டுவாரோ என்னவோ?'' என்று சொல்லிச் சிரித்தார் பொன்னியின் செல்வர்.

ஆனால், ஆழமான சிந்தனையில் இருந்த நம்பியடிகள் சிரிக்க வில்லை. ''உண்மைதான். அவனை நம்பி உணவு கொடுத்தேன். அதை அவன் உண்டான். அதற்குப் பிறகும் ஐங்கரன் என்னைக் கைவிட்டு விடவில்லை. அதுவே சரியான வழி. ஆனால், இது சரியான தருணமா என்றுதான் தெரியவில்லை. அவன் எனக்கு ஏதேனும் செய்தியைச் சொன்னால் நன்றாய் இருக்கும். ஏதாவது



சகுனம் மூலம் இந்தத் தருணம் சரியா என்று சொன்னால் நன்றாய் இருக்கும்'' என்றார்.

இளவரசர் சட்டென்று பேச்சை நிறுத்திவிட்டு, ''உங்களுக்கு ஏதாவது பேச்சுக்குரல் காதில் விழுகிறதா?'' என்று கேட்டார். அவர் செவியில் ஒரு ஆணின் பேச்சுக் குரலும் பெண்ணின் சிரிப்பும் விழுந்தன. மாயமல்ல. தெளிவாகவே கேட்டன.

ஆனால் அவருக்கு ஒன்றும் கேட்கவில்லை என்று சொல்லும் வண்ணம் தலையை அசைத்தார் நம்பியடிகள்.

அவர்கள் சிவகங்கைக் குளத்தருகே வந்து சேர்ந்திருந்தார்கள். குளத்தருகே ஏதாவது அறையிருக்குமா என்று தேட வந்தார்கள். பிரதானக் கோயில் உள்ளே பூட்டப்பட்டிருந்தாலும் வெளிக் கதவுகள் திறந்தே இருந்தன. திறந்த பாகத்தில்தான் பிரதான தீர்த்தமான சிவகங்கை இருந்தது

அவ்விடத்திலேயே சற்று நிதானித்துவிட்டு, பின் ஓரிரு அடிகள் பின்னால் எடுத்து வைத்தார் பொன்னியின் செல்வர், பேச்சுக் குரல் வருமிடத்தை நோக்க. அவருடைய கண்கள் சுற்றிச் சுழன்றன. அப்போது அவருடைய பார்வை தற்செயலாக ஒரு மனித சஞ் சாரத்தின் மேல் விழுந்தது. இரண்டு பேர் இருப்பதாகத் தோன்றி யது. சற்றே தயங்கிவிட்டுப் பார்ப்பதில் பாவமொன்றுமில்லை என்று இன்னும் ஒரு காலடி பின் வைத்தார். அந்த இருவரும் உட் கார்ந்திருக்குமிடம் முன்னைவிட இப்போது நன்றாய்த் தெரிந்தது

சிவகங்கைக் குளம் அந்தரங்கமாகப் பேச அற்புதமான இடம். அந்தக் குளக்கரையில் இருவர் அமர்ந்தபடி பேசிகொண்டிருந் தார்கள். ஒரு பெண் சிரிக்கும் சப்தமும் எதிரொலித்தது. சிவகங்கைக் குளத்தின் பக்கங்களில் கல் திருப்பணி செய்யப் பட்டிருந்தது. நீர் கோடையில் ஆழத்திற்குப் போனவுடன் அவை அறைகள் போலிருக்கும். மாரிக் காலத்தில் நீருக்கு அடியில் அறைகள் சென்று விடும். அந்த அறையில் ஒரு இளம் ஜோடி அமர்ந்து காதல் பேச்சுப் பேசிக் கொண்டிருந்தனர்.

கொஞ்ச நாட்களாகவே காதலின் மீது பொன்னியின் செல்வ ருடைய எண்ணங்கள் லயித்துக் கொண்டிருந்தன. தாம் காதல் கொண்டிருந்த அந்த லோகாவை மிக அருகில் நேற்றுப் பார்த்தது, அவளும் இவரைப் பார்த்தது என்னவோ பொன்னியின் செல்வ ருடைய வயதை மிகவும் குறைத்திருந்தது. வாலிபம் வரும் போது ஒரு காதல் வருமே; அந்த நிலையில்தான் பொன்னியின் செல்வர் இன்று இருந்தார்.

நவ யௌவன வயதில் காதல் கொள்வதில் தவறில்லை. அது போலத்தான் இவர்களும் என்று நினைத்து மனதுக்குள் சிரித்துக் கொண்டார். எட்டிப் பார்ப்போம் என்று ஓரடி பின் வைத்தார்.

''ஆகா, அது இளம் சம்புவராயன் போலல்லவா இருகின்றது!'' அவனுடன் இருக்கும் பெண் யாரெனப் பார்க்க ஆர்வம் மேலிட, இன்னும் ஓரடி பின்னால் எடுத்து வைத்தார். அதற்குள் நம்பியடிகள் மட்டும் முன்னால் சென்று விட்டார்.

பொன்னியின் செல்வர் பார்வையில் சிவகங்கைக் குளத்தருகே இருவர் அமர்ந்து கொண்டிருந்தனர் என்று மட்டும் தெரிந்தது. அதில் ஒருவர் நிச்சயமாகச் சம்புவராயன் தான். அவனுடன் ஆனந்த பரிபாஷையில் காதல் மொழிகளைப் பரிமாறிக்கொண்டு இருந்த பெண்தான் யாரென்று தெரியவில்லை.

'யாராய் இருந்தால் என்ன? அவர்களைத் தொந்தரவு செய்யாமல் சென்று விடலாம்' என்று முதலில் எண்ணிய பொன்னியின் செல்வருக்குச் சட்டென மின்னல் போல ஒரு எண்ணம் வந்தது. குளத்தின் தடுப்புச் சுவரைப் பிடித்து எட்டிப் பார்த்தார். அந்த இடத்தில் இளம் சம்புவராயனும் பழுவூர் இளவரசி வோகாவும் ஆனந்தமாய்ச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தனர்.

அப்போது பொன்னியின் செல்வரை யாரேனும் பார்த்திருந்தால் ஊரில் அவரைப் பற்றிப் பரவியிருந்த செய்திகளை நம்பவே மாட்டார்கள். 'வெகு நிதானமாகச் செயல்படுபவர் என்று சொன்னார்களே. ஆனால் அவரா இப்படித் தத்தளிக்கிறார்?' என்று வியந்திருப்பார்கள்.

உண்மையில் பொன்னியின் செல்வருடைய மனதின் நிலையை விளக்க வார்த்தைகளேயில்லை. நாலாபுறமும் சூழ்ந்துவரும் எதிரிகளுக்கு மத்தியில் நின்று வாளைச் சக்ராயுதம் போலச் சுழற்றி எதிரிகளின் தலைகளை வெட்டி வீழ்த்திவிடுவார். ஆனால், இன்று விதி அமைத்த வியூகம் அவரை மூழ்கடித்தது. அவர் உள்ளம் செய்த தீர்மானத்தை உடனே நிறைவேற்றி வைக்க ஆயிரம் பேர். அவரது ஆசைகளை நிறைவேற்றிவைக்க லட்சம் பேர். இப்போது அவர் காதலை வாழவைக்க ஒருத்தி. ஆனால் அவளுடைய உள்ளமோ வேறொருவனிடம்! சதாசர்வ காலமும் அவளையே நினைத்திருந்த பொன்னியின் செல்வருக்குத் தாங்க முடியாத அதிர்ச்சி.

மின்னல் வேகத்தில் பல எண்ணங்கள் பொன்னியின் செல்வருடைய மனதில் பாய்ந்தோடின. 'விதியை நொந்து கொள்வதா? தஞ்சைப்புரியின் தங்கச் சிம்மாசனத்தில் அமர வேண்டும் என்ற ஆசைகூட எனக்கு வரவில்லையே. அப்படிப்பட்ட எனக்கு இப்படி



ஒரு பெண்ணின் மேல் ஆசை வந்ததே. அதாவது பரவாயில்லை. மாறனிடமே அந்தப் பெண்ணைப் பற்றிச் சொன்னோமே. அதுதான் விதி.'

அருள்மொழிவர்மர் தனக்கு அப்படிப்பட்ட ஒரு வசிகர சக்தி இருக்கிறது என்று எல்லாரும் சொல்லக் கேட்டிருந்தார். மனிதர்கள் மட்டுமல்லாமல் விலங்கினங்களையும் அவர் பார்வையால் கவர்ந்துவிடுவார். புன்னகையால் எதிர்த்தவரைப் புண்ணாக்கி விடுவார் என்று சொல்லக் கேட்டிருந்தார். ஆனால், அவர் யாரை வசீகரிக்க வேண்டும் என்று நினைத்தாரோ அவள் வேறு ஒருவரிடம் மயங்கி அன்பு செலுத்துகிறாள் என்பது அவருக்கு பெரும் ஏமாற்றம்தான்.

தன் உள்ளத்தைக் கவர்ந்தவளை இப்படி வேறொருவனுடன் பார்த்ததில் அவருடைய இதய வீணையின் ஜீவநரம்பு அறுந்து விழுந்துவிடுவது போல் பயமுறுத்தியது. தேகமெங்கும் ஓடிக் கொண்டிருந்த இரத்தம் காவிரி நதியின் வெள்ளப் பெருக்கைப் போலக் கொந்தளிக்கும்படி செய்திருந்தது. அலை அலையாகக் குமுறி மோதி அல்லோல கல்லோலம் செய்து கொண்டிருந்தது.

பகலிலும் இரவிலும், ஏன் கனவிலும் நனவிலும்கூட அவள் எண்ணமாகவே இருந்துவிட்டார். அவள் முகமே அவர் மனதை முழுக்க முழுக்க ஆட்கொண்டிருந்தது. ஆனால் இந்த ஒரு கண நேரத்திற்குள் அவருடைய மனம் கட்டிய கோட்டைகளெல்லாம் சுக்கு நூறாய் உடைந்தன.

கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்த பொன்னியின் செல்வர் திடீரென நிஜ உலகுக்கு வந்தார். வரவில்லை; இழுத்து வரப்பட்டார். தலையைப் பிளந்துவிடும் போலிருந்தது அந்த உணர்வு.

சட்டென முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டார்.

❖ ❖ ❖

அத்தியாயம் அறுபத்து எட்டு

## திருவேட்களத்தில் தீர்மானம்

கொடியேற்ற விழாவுக்கு அடுத்த ஒன்பது நாட்கள் தொடர்ந்து தில்லை நடராஜர் கோயிலில் திருவிழாக்கள் நடந்தன. உற்சவர்கள் ஒவ்வொரு நாளும் வெவ்வேறு வாகனங்களில் பவனி வந்து பக்த கோடிகளை மகிழ்வித்தனர்.

திருவிழாவின் நடுவில் ஒரு நாள், சோழர் ஆண்ட பிரமாண்ட மான பிரதேசங்களைப் பரிபாலித்து நடத்தி வந்த பிரதமர் அநிருத்தப் பிரம்மராயர் தில்லைக்கு விஜயம் செய்தார்.

முதலில் எல்லாருக்கும் வியப்பு. திருவிழாவுக்கும் இவருக்கும் என்ன சம்பந்தம் என்று. மந்திரி மண்டலத்தாரையும், படைத் தலைவர்களையும், கோட்டத் தலைவர்களையும் தஞ்சையில் விட்டுவிட்டு இவர் எப்படி வந்தார்? சதா எல்லாருக்கும் ஏதாவது வேலை கொடுத்து அவர்கள் பெற்ற ஊதியத்துக்கு முழு உழைப் பையும் பிழிந்துவிடுவார் அநிருத்தர் என்பது ஊரறிந்த விஷயம்.

தன் வேலையைத் தன் உயிரைப் போலப் பாவித்து வந்தவர் பிரதமர். இதற்கு முன்னால் ஆண்ட சக்கரவர்த்தி சுந்தரரும் பிரத மரும் இளம் பிராயத்தில் ஒரே ஆசிரியரிடம் பாடங் கற்றவர்கள். அப்போதெல்லாம் சுந்தர சோழர் சிம்மாசனம் ஏறப்போகிறார் என்று யாரும் கனவிலும் எண்ணியதில்லை. சுந்தர சோழர் சிம்மா சனம் ஏறியபோது இராஜ்ய நிர்வாகத்தில் அவருக்கு உதவுவதாக அப்போது அநிருத்தர் வாக்களித்தார். அந்த வாக்குறுதியை இன்றளவும் சுந்தர சோழரது குலத்துக்கு நிறைவேற்றி வருகிறார். இதற்குப் பிரதிபலனாகச் சோழர்கள் அவருக்குக் கொடுத்தது சில காணி நிலங்களே.

பிரதமர் தன் பரிவாரங்களுடன் தில்லையை அடுத்த திருவேட் களத்தில் தங்கிவிட்டார். தொந்தரவுகள் ஏதுமின்றித் தன் வேலை யைக் கவனிக்கலாம் என்று நினைத்தார் போலும். ஏன் என்றால், சிதம்பர நகரமே அல்லோல கல்லோலப் பட்டுக்கொண்டிருந்தது. மக்கள் வெள்ளத்தில் தத்தளித்துக் கொண்டிருந்தது.

அவர் வந்திறங்கிய முதல் நாளே ஒரு அரசியல் விவாதக் கூட்டத் துக்காக வந்தியத் தேவர், மாறனுடன் ஆழ்வார்க்கடியானையும் அழைத்தார் பிரதமர்.

சிதம்பரத்திலிருந்து கீழ்த் திசையில் உப்பனாற்றைக் கடந்து திருவேட்களத்துக்குச் சென்றனர் மூவரும். உப்பனாற்றில் வெள்ள



மில்லை. சகதியே இருந்தது. ஆடிப் பெருக்கின் போதுதான் இந்த ஆற்றில் நீர் ஓடும்.

தூரத்திலிருந்து பார்ப்பதற்குத் திருவேட்களம் மிகவும் அழகான கோயில். இந்தக் கோயிலில் அமர்ந்திருந்தால் அமைதியான நேரத்தில் சற்றுத் தூரத்திலிருந்த கடலின் அலைகள் எழுப்பும் ஓசைகூடக் கேட்குமாம். அதிக மனித நடமாட்டமில்லாத இடம். ஆனால், புராணத்தில் மிகவும் முக்கியமான இடம் பெற்றது.

கோயில் கோபுரம் அருகே அமர்ந்து விட்டனர் மூவரும். பிரதமர் தன் ஜாகையிலிருந்து வர நேரமாகும் என்று தோன்றியது. எப்படியடா பொழுதைப் போக்குவது என்ற வருத்தம் மாறனுக் கும் வந்தியத் தேவனுக்கும். அவர்கள் கவலைப் பட்டிருக்கத் தேவையே இல்லை.

அப்போது அங்கு ஒரு பக்தர் கூட்டம் வந்து சேர்ந்தது. தில்லை விழாவையொட்டிச் சுற்றியிருக்கும் சிவாலயங்களைத் தரிசித்துச் செல்லலாம் என்று வந்தவர்கள் போலும். அவர்களைப் பார்த்ததும் அடியான் முகம் மலர்ந்தது.

''நல்ல இடத்துக்குத்தான் வந்திருக்கிறீர்கள்'' என்றான் அவர் களைப் பார்த்து, வரவேற்கும் தோரணையில்.

ஒரு வைணவர் தங்களை எதிர் கொண்டழைப்பதைக் கண்டு ஆச்சரியம் கொண்டாலும், ''ஆமாம் ஐயா. இது முக்கியமான சிவன் கோயில் அல்லவா?'' என்றார் அந்தக் குழுவை வழிநடத்தி வந்த சிவனடியார்.

அடியான் தலையை அசைத்தபடி, ''முக்கியமான சிவன் கோயில்தான். ஆனால், இங்கு அந்தக் கூத்தாடிக் கடவுளை எங்கள் கிருஷ்ண பெருமானின் சிஷ்யன் ஒருவன் திருச்சாத்துச் சாத்தி விட்டான். உங்களுக்கு தெரியுமா? ஒரு மானிடனிடம் உமது சிவன் உதைபட்ட ஊரில் கோயில் கட்டி வழிபடும் முறை எனக்குச் சிரிப்பைத்தான் தருகிறது'' என்றான்.

வனவாசத்தில் அர்ஜுனன் பன்றியைக் கொன்று, அதன் மேல் உரிமை கொண்டாடிய இன்னும் ஒரு வேடனுடன் போரிட்டது அனைவருக்கும் தெரியும். அந்த நிகழ்ச்சி நடந்தது இங்கு தான். அந்த வேடனுடன் துவந்த யுத்தம் செய்து அவன் மண்டையில் ஒரு போடும் போட்டான் அர்ஜுனன். அப்போதுதான் அந்த வேடன் சிவபெருமான் என்று தெரிய வந்தது அர்ஜுனனுக்கு.

ஆனால், இந்தக் கதையை விமரிசித்த அடியானைக் கண்டு சிவனடியார்கள் கொந்தளித்தனர். அவன் அந்தக் கதையைத் திரித்துச் சொன்னதில் அவர்களுக்குக் கோபம்.

''வைணவரே! கௌரவரைக் கொன்று குவித்த அந்த அர்ஜுனனின் பாசுபத வில் சிவபெருமான் இங்கு கொடுத்தது தான். பக்தனைச் சோதிக்கவே அடி வாங்கினார். உம் கிருஷ்ணன் போல உரியிலிருந்து வெண்ணெய்த் திருடி, குளிக்கும் பெண்களிட மிருந்து புடவைத் திருடி அடி வாங்கவில்லை'' என்றார் ஒருவர்.

''வில்லாம் வில்! அந்த வில்லினால் எல்லாம் கௌரவரைக் கொல்லவில்லை, அர்ஜுனன். எங்கள் பார்த்தசாரதி தேரோட்டிய அழகில்தான் அவன் வென்றான். அவர் அவ்வப்போது சொன்ன அறிவுரைகளைக் கேட்டுத்தான் வெற்றி பெற்றான்!'' என்றான் மறுமொழியாக அடியான்.

வாக்குவாதம் முற்றிப் போனது. இனிக் கொஞ்ச நேரத்தில் கைகலப்பாய் மாறிவிடும் போலிருந்தது. அதற்கு அறிகுறியாக அடியானும் அவ்வப்போது தன் கைத்தடியைத் தலைக்கு மேல் உயர்த்தியே உரக்க உரக்கப் பேசினான்.

மாறனுக்கும் வந்தியத் தேவனுக்கும் வெட்கம் தாங்கவில்லை. இப்படிப் போகுமிடமெல்லாம் வீணாக வம்பை இழுக்கிறானே இந்த வைணவன் என்ற கோபம். ஆனால், எப்படித் தலையிடுவது என்று தெரியாமல் தவித்தனர்.

அப்போது ஒரு கோஷம் எல்லாருடைய கவனத்தையும் கவர்ந்தது. ''திரிபுவனச் சக்கரவர்த்தி, உத்தம சோழரின் மகாமான்ய முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மாதி ராஜர் வருகிறார்! பராக்! பராக்!''

வந்த இடத்தில் வம்பு எதற்கு என்று சிவனடியார்கள் அடி யானைப் பார்த்து முறைத்துவிட்டு, மனதுக்குள் சபித்துவிட்டுக் கோயிலுக்குள் சென்றனர்.

குருநாதர் வருகிறார் என்றறிந்தவுடன், கக்கத்தில் கைத்தடியை வைத்துக்கொண்டு பரம சாது போல் நின்றான் அடியான். அவன் முக பாவம் கூட யாதுமறியாக் குழந்தைபோல் மாறியிருந்தது.

வந்த பிரதமரை மூவரும் சிரம் தாழ்த்தி வணங்கினர். பிரதமர் இவர்கள் மூவரையும் வணங்கிவிட்டுச் சற்றுத் தூரம் நடந்தார். கோயிலுக்கும் குளத்துக்கும் நடுவே ஒரு அருமையான ஆலமரம் இருந்தது. அதனடியில் பிரதமர் அமர்ந்தார். மற்றவரையும் அமரச் சொன்னார்.

பிரதமருக்கு ஆழ்ந்த யோசனை. கூட்டத்துக்கு அழைக்கப்பட்ட வர்களில் பொன்னியின் செல்வரைத் தவிர மற்ற எல்லாரும் வந்து விட்டனர்.



பேச்சை ஆரம்பித்த பிரதமர், ''பொன்னியின் செல்வரும் கலந்து கொள்வார் என்று நினைத்தேன். ஏன் வரவில்லை?'' என்ற வினாவை எழுப்பினார். திடீரெனப் பொன்னியின் செல்வர் எவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் தில்லையை விட்டுப் பிரயாணித்து விட்டார் என்ற செய்தியை யாரோ சொல்ல, அது பலருக்கும் ஆச்சரியத்தைத் தந்தது.

''பொன்னியின் செல்வர் ஏன் திடீரெனக் கிளம்பினார்? அரசர் மேல் ஏதாவது கோபமோ?'' என்று கூட ஐயங்கொள்ள ஏதுக்கள் இருந்தன. போன வாரம் வரையில் நல்ல உற்சாகத்துடனிருந்தவர் திடீரெனக் கிளம்பக் காரணம்?

கோயில் முன் இருந்த ஆல மர நிழலில் ஆலோசனைக் கூட்டம் தொடங்கியது. காவலர்கள், ஏதும் காதிற்கு எட்டாத தூரத்தில் காவல் புரிந்து, யாரும் அண்டாமல் நின்றனர். பிரதமர் தொண் டையை ஒரு கனைப்பின் மூலம் சரி செய்து கொண்டு தொடங்கினார்.

''பாண்டிய நாட்டுப் பிரச்சனையைப் பற்றிப் பேசத்தான் அழைத்தேன். அங்கு அரசியல் ரீதியாகச் சில மாற்றங்களை ஏற்படுத்தினால் என்னவாகும் என்று உங்களிடம் கேட்கலாம் என்று நினைக்கிறேன்'' என்றார்.

இந்தத் தலைப்பைப் பற்றித் தான் இன்றைய ஆலோசனை என்று அவர்கள் மூவரும் முன்னமே யூகிக்கவில்லை என்பதை அவர்கள் காத்த மௌனம் காட்டிக் கொடுத்தது. பாண்டிய நாட் டைப் பற்றித் திடீரெனப் பேசியது அவர்களுக்கு ஆச்சரியத்தை உண்டு பண்ணியது.

''இப்போது அந்தப் பிரதேசம் அமைதியாகத்தான் இருக்கிறது. நம் ஆட்சியைப் பாண்டிய நாட்டு மக்கள் ஒப்புக் கொண்டது போலத்தான் இருக்கிறது. இப்போது நாமாக ஏன் குட்டையைக் குழப்ப வேண்டும்?'' என்றான் மாறன்

கேள்வி மிகவும் முதிர்ச்சியடைந்தவனுடையது போலிருந்தது. 'சமீப காலங்களில், அரசியலில் நன்கு தேர்ச்சி பெற்றவனைப் போல நடந்து கொள்கிறான் மாறன்' என்று நினைத்தார் பிரதமர்.

''இளம் சம்புவரயாரே, அமைதியைப் போல் ஒரு பிரமையை நாம்தான் ஏற்படுத்தியிருக்கிறோம். போன வாரம், மதுரையில் ஆயுதக் கிடங்கு கொள்ளையிடப்பட்டது. அருகிலிருந்த தானியக் கிடங்கு ஒன்று தீக்கிரையானது. அதற்கு முன் வாரம் திருப்பரங் குன்றம் பகுதியில் வரி வசூலித்துக் கொண்டு வந்த சோழ அதிகாரி களைத் தாக்கிவிட்டுச் செல்வத்தைச் சூறையாடிச் சென்று

விட்டனர் சிலர். நாலாயிரம் பொற்காசுகள் பறிபோயின'' என்றார் பிரதமர்.

இந்தச் செய்திகளைக் கேட்டவுடன் எல்லாருக்கும் ஆச்சரியம்- ''இதெல்லாம் செய்வது யார்?'' என்றான் மாறன். ''நாங்கள் ஒன்றுமே கேள்விப் படவில்லையே!''

''எல்லாம் பாண்டிய நாட்டுப் போராளிகள்தாம். கிடங்குகள் மின்னல் தாக்கி எரிந்தன என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம். வரிப்பணம் போனதை வெளியில் தெரியாமல் வைத்திருக் கிறோம்'' என்றார் பிரதமர். ''அமைதி மேல் மட்டத்தில் இருக் கிறது. கீழே ஒரு எரிமலை குமுறிக் கொண்டிருகிறது. ரவிதாசன் தூண்டிவிட்டால் என்றாவது அது பெரியதாக வெடிக்கும்'' என்றார் பிரதமர்.

''நம் கொடியில் திகழும் புலியைப் போலப் பாய்ந்து தாக்கித் தான் பாண்டிய சைன்யத்தை நிர்மூலம் செய்தோம். அவர்களின் விடுதலை முயற்சியை முறியடித்தோம். ஆனால், முழுமையான வெற்றி இன்னும் நமக்குக் கிட்டவில்லை. அது நம் கையில் கிடைத்து விட்டால் பாண்டியர்களின் பாடு என்னவென்று சொல்ல வேண்டுமோ? அதை அறிந்ததால்தான் ரவிதாசன் அவ்வப் போது தான் இருப்பதை நினைவூட்டுகிறான்'' என்றார் பிரதமர். அவர் குரலில் என்றுமில்லாத விரக்தியிருந்தது.

''இதற்கெல்லாம் முடிவு?'' என்றான் வந்தியத் தேவன்

''ஒரு காலத்தில் எல்லாரும், ஏன், பெரிய பழுவேட்டரையர் முதற் கொண்டு, பாண்டிய நாட்டைத் தென் சோழப் பிரதேசம் என்று அறிவிக்கும்படி அறிவுறுத்தினர். அதற்கு அருள்மொழி வர்மரை அரசராய் நியமிக்கவும் சொன்னார்கள். சோழ நாட்டு இளவரசன் ஒருவனைப் பாண்டிய அரியணையில் ஏற்றிவிட வேண்டும் என்பது நெடு நாள் ஆசை. பாண்டிய நாடு ஒரு வழியாகச் சோழ சாம்ராஜ்யத்துடன் சேர்த்து விட்டதாக ஏற்பட வேண்டுமானால், சோழச் சக்கரவர்த்தியே மதுரையிலும் முடி சூட்டிக் கொள்ள வேண்டும் என்று நினைத்தனர். ஆனால், பெயர்ப் பலகையை மாற்றி அமைப்பதனால் மட்டும் பிரச்சனை தீராது. அது இனிச் சாத்தியமும் இல்லை. அதுவும் பாண்டிய நாட்டில் ஆதித்யன் சைனியம் அன்று செய்த கொடுஞ்செயல்களை எண்ணி எண்ணி அவர்களுடைய உள்ளம் கொதித்துப்போய் உள்ளது. அப்பேர்ப்பட்ட கொடுங்கோல் மன்னன் சாவது தவறில்லை என்றே நினைத்தார்கள். அவன் வம்சத்தில் வரும்



யாரையும், அருள்மொழி வர்மர் போன்ற நல்லவரையும்கூட, அவர்கள் ஏற்றுக் கொள்ளத் தயங்குவார்கள்.''

கேட்டுக் கொண்டிருந்த மூவரும் பதிலொன்றும் சொல்ல வில்லை. ''விரோதிகளைப் பூண்டோடு அழித்து விட வேண்டும் என்று நாம் நினைத்தாலும் முடியாது. மக்கள் அபிமானம் இல்லாமல் சோழர்கள் மதுரையை வெகு நாள் ஆட்சி புரியவும் முடியாது. அதை நிறைவேற்ற முயன்றால் அது நிறைவேறு முன் நமது கஜானா காலியாகிவிடும். அப்படி மதுரையில் அரசு புரிவதில் புண்ணியமும் இல்லை என நான்தான் எடுத்துக் கூறினேன்'' என்று பிரதமர் சொல்லச் சொல்ல, அமைதியுடன் மூவரும் கேட்டுக் கொண்டிருந்தனர்.

''பாண்டியர்கள் போர்க்களத்தில் நம்மை எதிர்த்து நின்றார்கள். அதனால் அவர்களைத் தாக்கி முறியடித்தோம். பின்னர் மறைமுகப் போரில் ஈடுபட்டனர். பகைவர்களைக் கண்ணால் பார்த்தால் தானே அவர்களை வெல்லமுடியும். இப்போது மறைந்து நின்று போரிடுகிறார்கள். அது மட்டுமல்ல, நம்மில் ஊடுருவி நம் நண் பர்கள் போலவும் உறவினர்கள் போலவும்கூட நடமாடுகிறார்கள். அது இன்னும் பயங்கரமானது!'' என்றார் பிரதமர். ''சண்டையும் உயிர்ச் சேதமும் இல்லாமல் சாம பேத உபாயங்களினால், மதுரை ஆட்சியை மாற்றலாம் என்று எனக்குத் தோன்றுகிறது'' என்று பிரதமர் கூற, மூவருமே சிரித்து விட்டனர்.

''ஆகா, மாயாவியாகிவிட்டாரா நம் பிரதமர், அந்த ரவிதாசன் போல!'' என்று நினைத்தனர் மூவரும்.

அவர்கள் மனதைப் புரிந்து கொண்டாற்போல் பிரதமர், ''மாயமும் இல்லை மந்திரமும் இல்லை. பாண்டியர் போராட் டத்தை ஆணி வேரோடு களைந்தெறிய முடியாது, அவர்களில் ஒருவனுக்கு மதுரையில் மகுடம் சூட்டும்வரை!'' என்றார்.

மற்ற மூவருக்கும் பெரும் அதிர்ச்சி. பாண்டிய நாட்டைப் பிடிக்க உயிர்த் தியாகம் செய்த சோழர் படையினர்தான் எத்தனை பேர்! அத்தோடு திருப்புறம்புயத்தில் நள்ளிரவில் ஒரு சின்னஞ்சிறு பையனைப் பாண்டியச் சிங்காதனத்தில் ஏற்றி, மகுடம் சூட்டிய நாடகத்தைப் பற்றியும் எல்லாரும் நினைத்தார்கள்.

''அப்போது அது சோழப் பேரரசுக்குப் பெரும் தோல்வி யல்லவா?'' என்று அடியான் வினவினான்.

''திருமலை! அதெப்படித் தோல்வியாகும்? மணி மகுடத்தைப் பாண்டியன் தலையில் வைப்பது சோழ மன்னரல்லவா?'' என்றார் அநிருத்தர்.

பிரதமர் தன் திட்டத்தை விளக்கினார். ''பாண்டியர் மதுரையைப் பிடிக்கப் போராடுவானேன்? நாமே அந்தக் கைங்கர்யத்தைச் செய்து விடலாமே?'' என்றார். ''நாட்டின் அரசாட்சி பெயருக்கு அவர்கள் கையிலே இருந்தால் போதும் என்ற நிலையில், சோழர்களின் மேலதிகாரத்தை அவர்கள் ஒப்புக் கொள்ளச் செய்யலாம்'' என்றார் நம்பிக்கையுடன்.

அடியான், ''ஆம். ஆளுக்குக் கூட நாம் அதிகம் தேட வேண்டாம். கடைசிக் கணக்கின்படி மீன் கொடி பறக்கும் மதுரையை ஆள ஆசையும் பாத்தியதையும் கொண்டவர்கள் ஐவர் மட்டும் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அரசனாக நியமித்து விடலாமல்லவா?'' என்றான்.

''கொஞ்சம் பொறுங்கள். இன்னும் ஒரு விஷயம் பாக்கியிருக்கிறது. அந்த ஐவரில் ஒருவருக்குப் பலம் அதிகமாயிருக்க வேண்டும். அது ஆள் பலத்தினால் வராது. நியாயப்படி தர்மப்படி அவனே சிறந்தவன் என்று பாண்டிய மக்கள் நம்பும்படி இருக்க வேண்டும். அப்போதுதான் அந்த அமைப்பு நிரந்தரமாக இருக்கும்'' என்றார் பிரதமர்.

''சோழரின் அன்பு போதாதா?'' என்றான் வந்தியத் தேவன்.

''நீர் அவனுக்கு ஜன்ம எதிரி. உம் ஆதரவு அவனைப் பலப் படுத்தாது. பலவீனப் படுத்தும்'' என்றான் மாறன்.

''பின் எதை எதிர்பார்க்கிறீர்கள்? அப்படியென்ன அரிய வஸ்து இருக்கிறது, ஜன்ம சத்ருக்களை வசியம் செய்யும் அளவிற்கு? அவன் பங்காளிகளை விட அவனைப் பலப்படுத்தும் அப்பொருள் எது?'' என்றான் வந்தியத் தேவன்.

ஒரு நொடி மௌனம் காத்துவிட்டுப் பிரதமர் தொடங்கினார், அந்த ஒரு நொடியில், விஷயத்தைச் சபையில் போட்டுச் உடைத்து விடலாமா என்று கடைசியாக ஒரு முறை யோசித்தார் போலும். ''பாண்டிய மணி மகுடமும், இந்திரன் அவர்களுக்குக் கொடுத்த ரத்தின ஹாரமும்தான் அவை. பாண்டியப் பேரரசின் மணி மகுடமும், அரசர்கள் அணியும் ரத்தின ஹாரமும் இலங்கையில் இருக்கின்றன. அதை மீட்க வேண்டும். அந்த முடிசூட்டல் வைபவத்தின்போது பாண்டிய வம்சத்தின் புராதனக் கிரீடத்தையும், இரத்தின ஹாரத்தையும் அந்தப் பாண்டிய அரசன் அணிய வேண்டும். அதை அணிந்தவனையே பாண்டிய மக்கள் ஏற்றுக் கொள்ளுவார்கள்'' என்றார் பிரதமர்.

பிரதமர் சொல்லி முடித்தவுடன், ஒரு நிசப்தம் நிலவியது. அந்த நிசப்தத்தைக் கிழித்துக்கொண்டு, ''ஹா ஹா ஹா'' என்ற சிரிப்



பொலி அடுத்த நொடியில் எழுந்தது. எல்லாரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள்.

அவ்வளவு ஏளனமான நகைச்சுவையுடன் சிரித்தவன் வந்தியத் தேவன்தான். சிரிப்பைக் கேட்டதும் ஏற்பட்ட அதிர்ச்சியில், எல்லாரும் வந்தியத் தேவனை முறைத்துப் பார்த்தனர். பிரதமர் முன் இருந்தான் என்பதைக் கூட மறந்துவிட்டுச் சிரித்துவிட்டான். பிரதமரைப் பார்த்து, ''ஐயோ இப்படியும் ஒரு அசடு உண்டா?'' என்று சொல்லும் தோரணையில் சிரித்து விட்டான்.

முறைத்துக் கொண்டிருந்த மூவரையும் பார்த்து ''ஐயா நடப்பதைப் பற்றிப்பேசுங்கள்'' என்று தன் சிரிப்புக்கு விளக்கமும் கொடுத்தான்.

''ஏன் நடக்காது?'' என்றார் பிரதமர்

''அந்த பொக்கிஷத்தைப் பற்றிய பதில்களைவிடக் கேள்விகளே அதிகமுள்ளன. அது இலங்கையில் இருக்கிறதா அல்லது அதை உருக்கித் தங்கத்தையும் வைரத்தையும் பிரித்து எடுத்து விற்று விட்டார்களா? இல்லை, சோழர்கள் அதை ஏற்கெனவே கைப்பற்றித் தங்கள் பொக்கிஷ நிலவறையில் ரகசியமாக ஒளித்து வைத்திருக்கிறார்களா என்பது யாருக்கும் தெரியவில்லை'' என்றான்.

''ஐயா! நீர் சோழர் வீட்டு மாப்பிள்ளை. உமக்குத் தெரியாமல் அது பொக்கிஷ அறையில் எப்படி இருக்கும்?'' என்று அடியான் கேட்டான்.

''வைணவரே, உமக்குத் தெரியாதா? சோழர்களுக்கே பாதி விஷயம் தெரியாது. எல்லாம் பிரம்மராயரின் கையில்தான் என்று ஊரெங்கும் பேசுகிறார்கள்'' என்று கேலி செய்தான் வந்தியத் தேவன்.

மாறன், தன் ஆருயிர் நண்பனைத் திரும்பிப் பார்த்து, ''என்ன வல்லா, என்ன வார்த்தை கூறுகிறாய்? எதை எண்ணி இவ்வாறெல்லாம் பேசுகிறாய்?'' என்று வினவினான்.

மனச் சலனமின்றிப் பிரதமர் அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு என்றுமே 'ஆமாம் சாமி' போடும் மனிதர்களுடன் கூட்டம் நடத்தப் பிடிக்காது. அவருக்குத் தெரியும், அப்படிப்பட்ட கூட்டங்களில் ஒரு நல்ல தீர்வும் வராது என்று. தான் பேசும் முன்பே தலையசைத்து விடுவார்கள். யாரேனும் எதிர்த்துப் பேசும் போதுதான் பிரச்சினைக்குப் புதியதொரு கண்ணோட்டம் வரும் என்பது அவருக்குத் தெரியும்.

ஒரு சோகமான சிரிப்பைச் சிரித்துவிட்டுத் தொண்டையைச் சரி செய்து கொண்டு பிரதமர் கேட்டார். "சரி, வல்லத்து அரசர் சொல்லுவது போல, ஒரு பேச்சுக்கு நம்மிடம்தான் அது இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். நான் ஏன் அதை ஒளித்து வைக்க வேண்டும்? பகிரங்கமாகவே வெளியிடலாமே."

"வேண்டும் என்றபோது வெளியிடலாம். அரசியல் சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கு ஏற்றாற்போல் வெளியிடலாம். அன்று விடியற் காலையில்தான் அதைக் கண்டுபிடித்தோம் என்று நீர் சொன்னால் நம்பாமல் யாரும் இருப்பார்களா? உடனே கல்வெட்டில் பொறித்து, அரசன் மெய்க்கீர்த்தியில் சேர்த்துச் சரித்திரத்தை உருவாக்கி விடுவீர்கள்!" என்றான் வந்தியத் தேவன்.

அதுகூட மற்ற இருவருக்கும் சாத்தியமென்றுதான் தோன்றியது. உடனே முகத்தைத் திருப்பிப் பிரதமரைச் சந்தேகக் கண்ணுடன் பார்த்தனர். ஒரு வேளை ஒரு பெரிய நாடகத்தில் நம்மை வேஷம் கட்டச் சொல்கிறாரோ பிரதமர் என்ற சந்தேகமும் எழுந்தது.

பிரதமர், "நல்ல யூகம்தான். ஆனால், உண்மையில் அது நம்மிடம் இல்லை. அதைக் கைப்பற்ற இன்னுமொரு நல்ல முயற்சி செய்யலாம் என்று நினைக்கிறேன். பின் இவர் சொல்வது போல நிலவறையில் ஒளித்துவைத்துவிட்டுச் சந்தர்ப்பத்துக்கு ஏற்றாற் போல் வெளியிடலாம்" என்றார் சிரித்துக் கொண்டே.

"ஐயா, அவற்றை விடவே மாட்டீர்களா?" என்றான் வந்தியத் தேவன். "அந்தப் பொக்கிஷத்தின் இருப்பிடத்தைப் பற்றிப் பெரிய மர்மம் நீடிக்கிறது. ஒன்று மட்டும் கேட்கிறேன். எல்லாருக்கும் தெரிந்த விஷயம் எப்படி ரகசியமாக இருக்கும்? 'உன்னிடம் மட்டும் சொல்கிறேன், யாரிடமும் சொல்லாதே!' என்று எச்சரித்துச் சொல்வதே அடுத்த நாள் ஊரெங்கும் பரவிக் கிடக்கிறது. இரு வருக்குள் இருந்தால் தான் ரகசியம். ராஜ சிம்ஹன் என்ற அரசன் பாண்டிய நாட்டு மணி மகுடத்தை மேள தாளத்துடன் எடுத்துச் சென்று இலங்கையில் வைத்தான். இப்படி ஊர் அறிய இலங்கை யில் கொண்டு வைத்தால், அது சோழர்களுககு மட்டும் தெரியாம லிருக்கும் என்றா நினைத்திருப்பான்?"

தலையசைத்தான் மாறன். "சோழ சேர பாண்டிய சிங்கள ராஜ்யங்களில் எல்லாருக்கும் தெரிந்த அந்த "மர்மமான" விஷயம் இலங்கையில் அந்தக் கிரீடம் இருக்கிறது என்பதுதான். என்னைக் கேட்டால் நாடறிந்து செய்தது, நாடகம்தான்" என்றான்.

வந்தியத் தேவனும் தொடர்ந்தான்: "அப்படி என்ன திறந்த பெட்டியில் வைத்தா எடுத்துச் செல்வார்கள்? ஒரு பொருளை



மறைத்து வைப்பதென்றால் இருளில் செல்வார்கள். இப்படியா மேள தாளத்துடனா செல்வார்கள்? அதற்குப் பிறகு என்ன நடந்தது என்பது தெரியாது. அதற்குப் பின் கருத்திருமன் கூறியது தான் மீண்டும் இதில் ஒரு ஆர்வத்தைக் கிளப்பிவிட்டது."

வல்லவராயர் கேட்பதிலும் ஒரு விஷயம் இருக்கிறது என்று பிரதமருக்குத் தெரியும். பல ஆண்டுகளாக ஈழ நாட்டுக்குப் படை யெடுத்துச் சென்ற ஒவ்வொரு சோழத் தளபதியிடமும் அநிருத்தர் மேற்கூறிய மணிமகுடத்தையும், இரத்தின ஹாரத்தையும் கண்டு பிடித்துக் கொண்டு வரும்படி சொல்லி அனுப்பி வந்தார். இதுவரையில் ஒருவராவது அக்காரியத்தில் வெற்றி பெறவில்லை.

"தேடுகிறோம், தேடுகிறோம். ஆகவே, கூடிய சீக்கிரம் அதைக் கண்டு பிடித்து விடுவோம்!" என்றே சொன்னார்கள்.

சோழர்களுக்குக் காலம் காலமாகப் பாண்டிய நாட்டு அரச குல நகைகளின் மேல் ஒரு கண். பாண்டியர் கூட அதைப் பற்றி அவ்வளவு கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. எப்படியும் அதைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதைப் பற்றி ஓயாமல் சிந்தித்த வண்ணமாகவே இருந்தார்கள் சோழர்கள். ஆதாயம் இல் லாமல் இவ்வளவு வீரர்களின் வாழ்க்கையை அவர்கள் தியாகம் செய்யவில்லை. யாரிடம் அவை இருக்கின்றனவோ அவர் களிடமே மக்களின் அபிமானமும் இருக்கும் என்பது சோழர் களுக்குத் தெரியும்.

அது மட்டுமல்ல, இன்றைக்கு நிலவும் சூழ்நிலையில், அந்தக் கிரீடம் இல்லாமல் எந்த அரசனும் மதுரையில் நீடித்து அரசு செலுத்த முடியாது என்றும் பிரதமருக்குத் தெரியும்.

❖ ❖ ❖

## அத்தியாயம் அறுபத்தொன்பது

## "ஆருடக்காரனைப் போய்ப் பார்"

**பா**ண்டிய நாட்டுக் கிரீடத்தைத் தேடும் விஷயம் பற்றிப் பிரதமர் பேசியவுடன் வந்தியத் தேவனுக்கு திடீரெனச் சிரிப்புப் பீறிட்டுக் கொண்டு வந்தது. அதை வெளிப்படையாக நகைப்பில் காட்ட தைரியமும் அவனிடம் இருந்தது.

சிரிப்பு வராவிட்டாலும் மற்றவர் எண்ணங்கள் எல்லாம் ஏன் இப்படிப் பிரதமர் பாண்டிய நாட்டு விடுதலையைப் பற்றிப் பேசுகிறார் என்பதுதான். இதுவரை அந்தக் கிரீடத்தைச் சோழர்கள் தேடியதே, தங்களில் ஒருவருக்கு அதைச் சூட்டிப் பாண்டிய மக்களின் அங்கீகாரத்தை வாங்குவதற்காகத்தான். ஆனால், இப்போது அந்தக் கிரீடத்தை ஒரு பாண்டியனின் தலையில் சூட்டு வதைப் பற்றிச் சோழப் பிரதமரே பேசுகிறாரே என்ற ஆச்சரியம் தான்.

அக்காலகட்டத்தில் பாண்டியரைப் பற்றி அடிக்கடி நிந்தனை பேசி நிஷ்டூரம் சொல்வதைப் பெருமையாய்க் கருதினர் சோழ நாட்டு மக்கள். அவர்களைப் பற்றிப் பல நிந்தை மொழிகளைக் கேட்டாயிற்று. இப்போது இந்த நாட்டின் எல்லா முக்கியமான முடிவுகளையும் எடுக்கும் பிரதமர் வாயால் பாண்டிய நாட்டுக்கு விடுதலை உண்டு என்பதைக் கேட்பதா? அந்த வேலையைச் செய்து முடிக்கக் கூடிய சக்தியுள்ள பாண்டியர்களே இப்போது யாரும் இல்லை. இந்த நேரத்தில் நாமாகப் போய்ப் பாண்டிய நாட்டுக்கு விடுதலையைக் கொடுப்பதா? பிரதமர் இப்படி ஏன் பேசுகிறார் என எல்லாரும் வியந்தார்கள். எதற்காகச் சோழ நாடு இவ்வளவு நாட்கள் போராடியதோ, ஆயிரமாயிரம் உயிர்களைத் தியாகம் செய்ததோ, அதை ஏன் வீணாக்க வேண்டும்? அதுவும் முழுமையான வெற்றியின் வாயிலில் நின்று கொண்டு.

'இந்த அசட்டுச் சண்டையை வளர்த்துவதில் பிரயோஜன மில்லை என்று பிரதமர் தீர்மானித்து விட்டார் போலும்' என்று மற்றவர்கள் நினைத்தார்கள். கிரீடத்தைப் பற்றிப் பேசியவுடன், எதற்கும் மாற்று வழியில் சிந்திக்கும் திறன் கொண்ட வந்தியத் தேவன் மனதில் முதலில் தோன்றியது இந்தச் சிந்தனைதான். 'இதெல்லாம் வெட்டிப் பேச்சு. பாண்டிய நாட்டு விடுதலை பற்றிப் பிரதமர் உறுதியாய் இல்லை என அறிய இந்த ஒரு விஷயம் போதுமே. அந்தக் கிரீடம் என்று கிடைப்பது..? என்று பாண்டியர் குழுவைப் பிரிப்பது? என்று கயல் கொடியை வானில் பறக்க விடுவது...?' என்று நினைத்தான். அதனால்தான் அவன் சிரித்தது.

ஆனால், மற்றவர்கள் இருவருக்கும் அவன் நகைப்பின் உட் பொருள் விளங்கவில்லை. வாய் விட்டுச் சிரித்த வந்தியத் தேவனை எரித்து விடுகிறவனைப் போல் பார்த்தான் அடியான். முகத்தைக் கடுகடுவென்று வைத்துக் கொண்டிருந்தான்- இப்படிக் குதர்க்க மாகச் சிரிக்கிறானே என்று. வந்தியத் தேவனுக்கு இன்றைக்கு என்ன வந்து விட்டது என்று மாறன் கூட ஆச்சரியப்பட்டான்.



ஆனால், மாறனுக்கும் அடியானுக்கும் புரியவில்லை. திடீரென ஏன் இந்தப் பாண்டிய மணிமகுடம் பற்றிய பேச்சு என்று. அதனால் வந்தியத் தேவனை அதட்டவும் இல்லை. அவர்களுக்குத் தெரியாத ஏதோ ஒரு விஷயம் அவனுக்குப் புலப்பட்டிருக்க வேண்டும் என்று மௌனம் காத்தனர். எல்லாரும் மௌனம் காக்கவே, பிரதமர் ஆரம்பித்தார்.

"வந்தியத் தேவர் சற்று முன் ஏன் சிரித்தார் என்று எனக்குத் தெரிகிறது. அந்த மணி மகுடத்தையும், இரத்தின ஹாரத்தையும் தேடிக் கண்டுபிடிப்பதற்குப் பராந்தகச் சக்கரவர்த்தியின் காலத்தி லிருந்து முயன்றும் பலன் கிட்டவில்லை என்பதற்காகத்தான்'' என்று ஒப்புக் கொண்டார்.

'ஆமாம்' என்பது போலத் தலையசைத்த வந்தியத் தேவனும் ''அந்தப் பொக்கிஷங்களைக் காவல் காக்கும் சிங்களனிடம் மிரட் டிக் கேட்டோம். நட்பின் அடிப்படையில் கேட்டோம். வாளின் முனையில் கூடக் கேட்டோம். ஆனால் பதில் கிடைக்கவில்லை'' என்று சொன்னான்.

''உண்மைதான். ஆனால், எப்படிக் கொடுப்பான் சிங்களன்? இவ்வளவு நாள் பாண்டியனோடு சிநேகம் கொண்டாடிவிட்டு?'' என்று கேட்டான் மாறன் .

''அதற்கு இன்னும் ஒரு காரணமும் இருக்கலாம் அல்லவா?'' என்று வந்தியத் தேவன் கேட்டவுடன் எல்லாரும் ஆவலுடன் அவன் முகத்தைப் பார்த்தனர்

''என்ன?''

''சிங்களனிடம் அது நிஜமாகவே இல்லை என்றால்..?'' என்று வினவினான் வந்தியத் தேவன். ''இருந்தால் தானே கொடுப் பான்!'' என்றான்.

''சிங்களனுக்கு அது இருக்கும் இடம் தெரிய வில்லை என்று சொல்லுகிறீரா?''

''அப்படியும் இருக்கலாம். இன்னும் ஒரு அபிப்பிராயம் என்ன தெரியுமா?...'' என்று கேட்டு வந்தியத் தேவன் நிறுத்தினான்.

''என்ன? சொல்லுங்களேன்'' என்றார் பிரதமர்

''அவை இலங்கையில் இல்லை என்பதே என் வாதம்'' என்றான் வந்தியத்தேவன். ''நமக்குத் தெரிந்த செய்திகள் என்ன சொல்லு கின்றன? ராஜஸிம்ஹ பாண்டியன் காலத்தில், சோழ வேங்கையின் கண் அதன் மேல் பட்டது. அதனால் அவற்றின் பாதுகாப்புக் கருதி ஈழத்தில் ஒரு மலைப் பிரதேசத்தைக் கண்டுபிடித்து, அதற்குள்ளே,

யாரும் எளிதில் வர முடியாத இடத்தில் வைத்தனர் பாண்டியர்'' என்று. எத்தனை முறை பிரயத்தனப்பட்டு விட்டோம்? எத்தனை உயிர்களை பலி வாங்கி விட்டது அந்தக் கிரீடம்! நட்பின் முறையில் கேட்டோம். தரமாட்டேன் என்று சொல்லி விட்டார்கள். பரவாயில்லை. நாடே போன போது கூடத் தர மாட்டேன் என்கிறார்களே. நட்பின் ஆழம் அவ்வளவா? சிங்களனும் பாண்டியனும் சிநேகிதர்களாம். தலைமுறை தலைமுறையாக இரண்டு பேரும், ரொம்ப உறவு கொண்டாடினார்களாம். அரசியலில் காரியம் ஆக வேண்டியிருந்தால் சிநேகம் உறவு எல்லாம் கொண்டாடுவார்கள். காரியம் ஆகிவிட்டால் 'நீ யாரோ நான் யாரோ!' என்பதுதானே அரசியல் நடைமுறை? அப்படி இருக்கையில் இன்னும் சிங்களன் பாண்டியனுக்கு நன்றியுடன் இருக்கிறான் என்றால் என்ன விஷயம்?''

''ஈழத்தில் அவை இல்லையென்றால் பின் வேறெங்கு வைத்திருப்பார்கள்?'' என்று மாறன் கேட்டான்.

''அது எனக்கும் தெரியவில்லைதான். ஆனால், அதைக் கண்டு பிடிக்கும் நாளன்று நாம் எல்லாரும் அதன் இருப்பிடத்தைக் கண்டு சிரிக்கப் போகிறோம்!'' என்றான் வந்தியத் தேவன். மேலும், ''எனக்கென்னவோ அவ்வளவு நம்பிக்கை ஏற்படவில்லை. என் கருத்தின்படி அந்தக் கிரீடம் பரத கண்டத்தை விட்டு அப்பால் செல்லவேயில்லை. இலங்கையில் நடந்தது வெறும் நாடகம்தான். நூறாண்டாக நம்மால் நம்பப்படும் நாடகம். அந்தக் கிரீடத்தைத் தேடி ஈழத்துக்குத் திரும்பத் திரும்பப் படையெடுத்துச் சென்ற சோழர்களைக் கண்டு அதை ஒளித்து வைத்த பாண்டியரின் ஆவிகள் கைகொட்டிச் சிரித்திருக்கும்!'' என்றான்.

பெருமூச்சு விட்டார் பிரதமர். ''ஆகா, வந்தியத் தேவருக்குத் தோன்றிய விஷயம் எனக்கு தோன்றாமல் போய் விட்டதே. அப்படி இலங்கையைத் தவிர வேறெங்காவது அந்தக் கிரீடம் கிடைத்துவிட்டால் வல்லத்து அரசருக்கு இப்பிரதமர் பதவியைக் கொடுத்துவிட்டு நான் ஓய்வெடுக்கச் சென்று விடுவேன்!'' என்றார் பிரதமர்.

நன்றாய்ச் சொன்னாரா, அல்லது நையாண்டியாகச் சொன்னாரா என்பது தெரியவில்லை. பின்பு ''இளம் சம்புவராயர் என்ன நினைக்கிறார்?'' என்றார், பிரதமர். அவருக்கு இந்தக் கூட்டத்தில் ஒருமித்த கருத்து ஏற்படாது எனத் தோன்றியது.

ஒரு நொடி மௌனம் காத்தான் மாறன். பின்பு தான் நினைப்பதைப் போட்டு உடைப்பதே சரி என முடிவெடுத்து, ''பிரதமர்



பெருமானே! எனக்கும் இந்தக் காரியம் பிடிக்க வில்லை. ஆனால், என் ஆருயிர் நண்பன் சொல்லும் காரணத்துக்காக அல்ல. திரும்பத் திரும்ப அதைத் தேடுவதா? கையில் வாள் இருக்கிறது. வேல் இருக்கிறது. போராடி ஒரு தீர்வு காணலாம் அல்லவா? இப்படிப் பின் கதவு வழியாகவே செயல்படுவது என் உள்ளத்தை அரித்து வருகிறது'' என்றான்.

எல்லாரும் அவருக்கு நேர் எதிர் நிலையை எடுத்தபின், தன் விளக்கத்தைக் கொடுக்க முன்வந்தார் பிரதமர். ''சரித்திரத்தில் சில தீர்க்கமான முடிவுகள் போர்க் களங்களில் வந்துள்ளன. ஒப்புக் கொள்கிறேன். ஆனால், ராஜ தந்திரத்துக்குத் தோல்வி வந்தாலும் அது பெரும் சேதத்தை உண்டு பண்ணுவதில்லை. களத்துக்குச் சென்று போரிடும் வீரர்கள் நீங்கள் சொல்லும் வாதங்களை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால், அந்தப் பொக்கிஷத்தைத் தேடுவதால் இரு பக்கங்களிலும் பெரும் உயிர்ச் சேதம் தவிர்க்கப்படலாம் என்பது என் கருத்து. முன்பு சக்கரவர்த்தி எனக்குப் பத்து வேலி நிலம் மானியம் கொடுத்திருப்பது உமக்கெல்லாம் தெரியும். அதைச் செப்பேட்டிலும் எழுதிக் கொடுத்திருக்கிறார். போரில் நாம் தோற்றால், நான் அதில் விவசாயம் பார்க்கப் போவேன். வாழையையும் கரும்பையும் பயிரிடுவேன். ஆனால், வீரர்களின் நிலையென்ன? நமக்கே வெற்றியென்றாலும் உயிர் தப்பும் என்று உறுதியில்லையே'' என்றார்.

அவர் சொன்னதில் உண்மையிருந்தது. தொடர்ந்தார் பிரதமர். ''வட பாரதத்தில் போர் மேகங்கள் சூழ்ந்து கொண்டிருக்கின்றன. அவை விரைவில் வந்து நம் கதவையும் தட்டும். எனக்கு என்ன ஆசை தெரியுமா? அதற்குள் தமிழகத்தில் அமைதியை நிலை நாட்டி விட வேண்டும் என்பதே. ஒரே ராஜ்ஜியத்தைப் பரத கண்டமெங்கும் நிலை நாட்டக் கூடியச் சக்தி அன்று அசோகருக்கு இருந்தது. இன்று சோழரிடம் இருக்கிறது என்று மார் தட்டுகிறோம். சோழர் வேங்கையின் கர்ஜனை நாற்றிசையும் பரவி எதிரொலி செய்கிறது என ஏட்டில் எழுதுகிறோம். எனினும் நமது கொல்லைப் பக்கத்தில் பாண்டியர்களின் தொல்லை தாங்கவில்லை. பாண்டிய நாட்டுப் போராட்டத்தை வேரறுப்பதற்கு முயன்றுமுயன்று தோற்றுவிட்டோம். ஓர் இடத்தில் வேரை வெட்டினால் மற்றும் ஓர் இடத்தில் வேரில் துளிர் விடுகிறது. போரென்றால், ஆயிரமாயிரம் குற்றமற்ற ஜனங்கள் வீடு வாசல்களை இழந்து, சொல்ல முடியாத கஷ்டங்களுக்கு உள்ளாகும்படி நேரிடும். பாண்டிய மக்களும் தமிழர்கள்தானே. அத்தகைய கொடுமைகளுக்கு அவர்களை உள்ளாக்க நான் பிரியப்படவில்லை. நாமும் நம் வேலை

யைக் கவனிக்கலாம். வீட்டுக்கு ஒருவன் தெற்கே பாண்டியனோடு சண்டை போடுவதற்குப் போயிருக்கிறான் என்று சொல்லும் நாள் ஏற்படாது. இதை முறியடிக்க அந்த ஒரே வழிதான் இருக்கிறது.''

''சரி. கிரீடம் கிடைத்து விட்டால் என்ன செய்வீர்கள்?'' என்று மாறன் கேள்வியை எழுப்பினான்.

பிரதமர் அதற்குப் பதில் தயாராக வைத்திருந்தார் ''ரவிதாசன் பாண்டிய நாட்டின் சுதந்திரக் கொடியை உயர்த்த உத்தேசித்திருக்கிறான். பாண்டியன் ஒருவனை நாமே மதுரை சிம்ஹாசனத்தில் ஏற்றிவிட்டால் போதும். அப்புறம் ''இந்த அற்ப உயிருக்கு என்ன நேர்ந்தாலும் கவலைப்பட மாட்டேன்'' என்று சொல்லித் திரியும் ரவிதாசன் நிலை என்னவாகும்? அவன் விரும்பாத ஆளை நாம் சிங்காதனத்தில் ஏற்றி வைத்து விட்டால் என்ன செய்வான்? எதிர்த்தே திருவான். அப்போது அவன் மக்களிடமே, அவனுடைய கபட வேஷம் வெளிப்பட்டுவிடும்'' என்றார் பிரதமர்.

அவரது யோசனையின் உட்கருத்து இன்னதென்று விளங்கி விட்டது. 'ஆகா! எப்படிபட்ட புத்தி கூர்மை உள்ள மனிதர், இந்தப் பிரதமர்' என்று எல்லாரும் நினைத்தனர். ஒரே கல்லில் இரண்டு மாங்காய்! இல்லை, இல்லை. ஒரே கல்லில் ஒரு மாமரக் கிளையையே சாய்த்துவிடும் திட்டமிது. எனினும் அதில் ஏதாவது ஓட்டையைக் கண்டு பிடிக்கவேண்டும் என்று அந்த மூவரும் முயன்றனர்.

''அப்படியே அந்த மணிமகுடம் கிடைத்து விட்டாலும், மற்றப் பாண்டிய குழுவினர், சோழரின் ஆசை வார்த்தைகளில் மயங்கி விட வேண்டாம் என்று ரவிதாசனால் எச்சரிக்கப்பட்டிருப்பார்கள்'' என்றான் மாறன்.

''பாண்டியரைப் பொறுத்த வரையில் நம்முடன் சேர்வது நீசத்தனமான காரியம். நம் மீது உள்ள வஞ்சம் கொஞ்சம்கூட மிச்சம் இல்லாமல் போகுமா என்ன?'' என்று கேட்டான் அடியான்.

''இருக்கும்தான். ஆனால், அதை எளிதில் மறந்து விடுவார்கள்'' என்றார் பிரதமர்.

''இல்லை இல்லை. நம்முடன் கைகோர்ப்பதை விடக் கடும் விஷத்தையே குடிப்பார்கள்'' என்றான் வந்தியத் தேவன்.

''நம்மிடம் அந்தக் கிரீடம் இருந்தால் விஷமெல்லாம் குடிக்க மாட்டார்கள்'' என்றார் பிரதமர் பதிலுக்கு.



''தாங்கள் சொல்வதைப் பேசிப் பேசி அழகு பார்க்கலாம். ஆனால், எந்தப் பாண்டியனும் அதற்கு ஒப்புக் கொள்ள மாட்டான்'' என்றான் வந்தியத் தேவன்

''அதெல்லாம் அவர்கள் ஒற்றுமையாய் இருந்த காலத்தில். அப்போது எல்லாவற்றிலும் கொடிய துரோகம் சிநேகிதத் துரோகம் என்று பிதற்றிக் கொண்டிருப்பார்கள். ஆனால் இன்று அவரவருக்குக் கிட்டும் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளவே தயாராக இருக்கிறார்கள். எதிர்ப்பு இருக்கும். ஆனால், இந்தக் கிரீடத்தைக் காட்டினால் ஞாயிறின் முன் பனித்துளி போல எதிர்ப்பெல்லாம் காணாமல் போய்விடும்'' என்றார் பிரதமர். ''ரவிதாசன் மிக்க நெஞ்சழுத்தமுள்ளவனாக இருக்கிறான், அவனைத் தோற்கடிக்க இந்தக் கிரீடம் நமக்கு அவசியம் தேவை'' என்றார்.

''பேச்சுக்கு அந்தக் கிரீடம் நம்மிடம் கிடைத்து விட்டது என வைத்துக் கொள்வோம். அது ரவிதாசன் கோபத்திற்கு இன்னும் தூபம் போட்டது போலாகும் அல்லவா?'' என்றான் மாறன். ''அந்தச் செய்தி தெரிந்தால் அவனுக்கு காதிலே ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியது போல் நம் மேல் பாய்வான். போன முறையே அவன் கோபத்தின் விளைவு எந்த அளவுக்கு எதிரொலித்துவிட்டது என்பதை நாமெல்லாம் அறிவோம். அவனது கோபம் நம்மில் பலரை வெகுவாகப் பாதித்து விட்டது. பட்டத்து இளவரசன் கொலையுண்டு கிடந்தான். மறந்துவிட்டீரா? ஒருவர் மேல் ஒருவர் சந்தேகம் கொண்டு நம்மைத் திண்டாட விட்டு விட்டுச் சென்றானே!'' சொந்த அனுபவத்தில் பேசுகிறான் மாறன் என்று மற்றவர் புரிந்துகொண்டார்கள்.

தலையசைத்தார் பிரதமர் ''ஒரு முறை பரம முட்டாளாயிருந்துவிட்டோம். அந்தச் சமயத்தில் ஆதித்ய கரிகாலனை இழந்து விட்டோம். அதனால்தான் சொல்கிறேன். பாண்டியன் தோற்றான் என்று எப்போதுமே நினைக்க முடியாது. இந்த கிரீடம் கிடைத்தால்தான் இந்தப் பிரச்சனை முடியும்'' என்று தன் பக்கத்து வாதத்தை மீண்டும் வலியுறுத்தினார். ''அதுமட்டுமல்ல. அவற்றைக் கைப்பற்றும் வரையில் பாண்டிய வம்சத்தைச் சேர்ந்தவன் என்று யாராவது ஒருவன் முளைத்துக் கொண்டுதானிருப்பான்'' என்றார் பிரதமர்.

சரித்திரத்தில் ஒரு பொருளுக்கு ஏற்பட்டிருந்த சக்தியை நினைத்து மூவரும் ஆச்சரியப்பட்டனர். லட்சம் பேர் கொண்ட சேனை செய்ய முடியாததை ஒரு கிரீடமும் ஒரு ஹாரமும் செய்யுமோ என்று நினைத்தார்கள். மனதிலிருந்த கேள்விகளையெல்லாம் மூவரும் கேட்டு விட்டனர். எல்லாவற்றிற்கும் தகுந்த

பதில்களைக் கொடுத்தார் பிரதமர். பின் அவரே, ''வல்லத்து அரசரின் அபிப்பிராயம் தான் என்ன?'' என்றார்.

''என் வாயினால் சொல்லத்தான் வேண்டுமா? ஏன் வாயைக் கிளறுகிறீர்கள் ?'' என்றான் வந்தியத் தேவன். ''பின் என் ஆருயிர் நண்பன் மாறன் நான் அபசகுனமாகப் பேசுகிறேன் என்பான்'' என்று சொல்லி நழுவினான்.

பிரதமர் தனக்கு என்ன வேண்டும் என்பதைக் கடைசியாகச் சொன்னார். ''பொதுவாக அந்த மணிமகுடத்தைப் பற்றி உங்களிடமெல்லாம் பிரஸ்தாபிக்க வேண்டுமென்றுதான் அழைத்தேன். ஆனால், இன்று நடந்த விவாதம் எனக்குப் பல புது விஷயங்களைத் தெரிவித்திருக்கிறது. தயவு செய்து இலங்கைக்குச் சென்று அது அங்கு இருக்கிறதா இல்லையா என்று பார்த்து வர வேண்டும். நீங்கள் மூவரும் ஈழம் சென்று பார்த்து வந்தால் அது நமக்குப் பெரிய உதவியாக இருக்கும்!'' என்று கூறினார்.

பிரதமர் இவ்வளவு வற்புறுத்திச் சொல்வதில் ஏதோ விஷயம் இருக்க வேண்டும் என்று மூவரும் யூகித்தனர். ஒற்றர் படையில் பலருக்கு இவர் கையால் சன்மானம் அளித்தார். அதனால் இவருக்குத் தெரியாத விஷயமே இல்லையென்று ஆகிவிட்டது. அதனால் மூவரின் வாதமும் வெல்லவில்லை.

''அவை பார்க்க எப்படியிருக்கும்? '' என்றான் அடியான்.

''அற்புதமான தோற்றங் கொண்டிருக்கும் என்றுதான் தெரியும். அதைப் பார்த்தவர்கள் இன்று யாரும் நம்மிடையே இல்லை'' என்றார் பிரதமர்.

''ஐயனே! அப்போது ஒரு யோசனை'' என்றான் அடியான். ''நாமே பொற்கொல்லரை வைத்து ஒரு புதுக் கிரீடத்தைச் செய்து விட்டால் என்ன?'' என்றான். எல்லாரும் சிரித்து விட்டார்கள்.

''அதெல்லாம் நடக்காது, திருமலை. போய் உண்மையான கிரீடத்தைக் கண்டு பிடிக்க முயல வேண்டும்'' என்றார் பிரதமர்.

அடியான் மற்ற இருவரையும் பார்த்தான். அவர்களும் சம்மதம் என்பது போலத் தலையை அசைத்தனர். ''குருதேவா! உமது வாக்கைத் தெய்வத்தின் வாக்காக மதித்து நான் போற்றுகிறவன். ஆகையால் தங்களுடைய வார்த்தையைக் கேட்டு இலங்கைக்குச் செல்கிறேன்'' என்றார் அடியான்.

வந்தியத் தேவனும், ''அது இலங்கையில் இருக்கின்றது என்றால் நிச்சயம் கண்டுபிடித்து விடுவோம். பாண்டியர் அது யாருக்கும் கிடைக்கக் கூடாது என்று மறைத்து வைக்கவில்லை. தன் வம்சத்தில் ஒருவருக்குக் கிடைக்க வேண்டுமே, என்று நினைத்துத்தான்



ஒளித்து வைத்தனர் பாண்டியர். சரி, உம் விருப்பப்படியே ஈழம் செல்கிறோம். ஆனால், பாண்டிய ராஜ்யத்தின் புராதனமான மணி மகுடமும், தேவேந்திரன் அளித்ததாகக் கூறப்படும் இரத்தின ஹாரமும் இலங்கையில் எங்கே இருக்கின்றன என்று இதுவரை தெரியவில்லை. ஆகவே எங்கிருந்து தேடத் தொடங்குவது?'' என்றான் வந்தியத் தேவன்.

பிரதமர் ஏதோ விஷயத்தை சொல்வதற்கு யோசித்தார். பின் பேச வில்லை.

வந்தியத் தேவன், ''ஐயனே! ஈழத்தில் உள்ள வனப் பிரதேசத்தைப் பற்றி உமக்குத் தெரியாதா? அங்கு சென்று எங்கேயென்று தேடுவது?'' என அடுத்த கேள்வியை எழுப்பினான். ''இலங்கையே ஒரு பெரிய காடு. அந்தத் தீவில் தேடுவதற்கே நமக்கு ஒரு வாழ்நாள் போதாது.''

பிரதமர் தன் குரலைச் சரி செய்து கனைத்தார். ஏதோ முக்கியமான விஷயத்தைச் சொல்லப் போகிறார் என்று மூவரும் யூகித்தனர். ''அதன் சரியான இருப்பிடத்தைச் சொல்ல என்னால் முடியவில்லை. இன்னுமொருவர் இருக்கிறார். ஒரு ஆரூடக்காரர். அவரைத்தான் கேட்கவேண்டும்'' என்றார் பிரதமர். மூவரும் பேயறைந்தால் போல் பார்த்தனர்.

''திருமலை! திருமெய்யம் என்ற ஊரைப் பற்றிக் கேள்வி பட்டிருக்கிறாயா?''

''ஐயனே! எப்படிக் கேளாமல் இருக்க முடியும்? என் அப்பன் உறங்கும் இடமல்லவா?'' என்றான் வைணவன்.

''ஆம், திருமலை.எப்பேர்ப்பட்ட அப்பன்?''

''பொய்யே பேசாது, என்றும் மெய்யே பேசும் மெய்யப்பன், குருதேவா!''

''ஊருக்குள் பிரவேசிக்கும் போது, அங்கே இடதுபுறமாகத் திரும்பு. ஆங்கே ஒரு மண்டபம் இருக்கும். அதில் மெய்யே பேசும் இன்னும் ஒருவரும் இருக்கிறார். அந்தக் கோயிலையொட்டி இருக்கும் மண்டபத்தில் ஆரூடம் சொல்லும் ஆள் அவர்தான். அவரிடம் கேட்டால், எங்கே அந்தக் கிரீடமும் ஹாரமும் இருக்கின்றன என்று தெள்ளத் தெளிவாகத் தெரியும். அந்த ஆரூடம் சொல்பவரைக் கண்டால் உங்களுக்கு காரியம் ஜெயந்தான். சீக்கிரம் செல்லுங்கள்'' என்றார் பிரதமர்.

எப்போதுமே இவர் சொல்வதை வேதவாக்காய்க் கொள்ளும் அடியானுக்கே ஒரு சிறு கடுகத்தனை சந்தேகம் மனதில்

தோன்றியது. ''எப்போதிலிருந்து ஆரூடக்காரர் உபதேசம் கேட்டு அரசாங்கம் நடக்கிறது?'' என்று கேட்க வார்த்தைகள் நாவின் நுனிக்கு வந்து விட்டன. 'இவரென்ன பிரதமரா? அல்லது பூசாரியா?' என்று மனதுக்குள் தன் குருநாதரைப் பார்த்து மற்ற இருவரும் சிரிக்கின்றனர் என்று அவனுக்குத் தோன்றியது.

அடியான் குழம்பினான். 'அப்படித் தெய்வ சங்கல்பத்தை அறிந்து கொள்ள வேண்டுமென்றால் குடந்தை ஜோசியரிடம் கேட்கச் சொல்லியிருக்கலாமே? ஆகக், குடந்தை ஜோசியருக்கும் அப்பாற்பட்டது இந்த விஷயம் என்று பிரதமர் யூகித்திருக்க வேண்டும். அதென்ன திருமெய்யம்? திருமெய்யம் தனில் வாழும் ஆரூடக்காரர் ஜடா மகுடம் தரித்த சந்நியாசியின் உருவம் கொண்டிருப்பாரோ என்னவோ!' என்று எண்ணினான்.

'வேறு யாராவது இதைச் சொல்லியிருந்தால் நாம் கண்டபடி பரிகாசம் செய்து அவமானப் படுத்தியிருப்போமே. ஆனால், இதைச் சொல்வது பூவுலகில் அதி புத்திசாலிகளில் ஒருவர் என்று சொல்லப்படும் பிரம்மராயர் என்பதால், என்ன பதில் சொல்லுவது' என்று தெரியாமல் விழித்தனர் மூவரும்.

அப்போது காவலன் ஒருவன் ஓடி வந்து தண்டம் சமர்ப்பித்து விட்டு, ''பிரபு! மன்னர் பெருமான் உம்மை அழைத்து வரச் சொன்னார்கள்'' என்றான்

''அரசர் பெருமான் என்னை அழைத்து வரச் சொல்லியிருக்கிறார். பொன்னியின் செல்வர் திடீரென ஊருக்குச் சென்ற விஷயம் பற்றிக் கேட்கத்தான் இருக்கும். அதைப் பற்றி உமக்கு ஏதாவது தெரியுமா?'' என்று வந்தியத் தேவனைக் கேட்டார் பிரதமர்.

''இல்லை, ஐயா. ஆனால், கொள்ளையர் தீவில் இருந்து வந்ததிலிருந்தே அவர் மனநிலை அலை அடிப்பது போல ஏற்றத் தாழ்வுடன் தானிருக்கிறது'' என்றான் வந்தியத் தேவன்.

பிரதமர் பெருமூச்சு விட்டார்.

''சரி, நான் கிளம்புகிறேன். முக்கியமாக ஒன்று . நீங்கள் மறவாதீர்கள். போகும் வழியில் திருமெய்யம் வழியாய்ச் செல்லுங்கள்'' என்று சொல்லிவிட்டு, தன்னுடைய வயதுக்கு அப்பாற்பட்ட வேகத்துடன் வெளியேறினார், அநிருத்தப் பிரம்மராயர்.

❖ ❖ ❖



## அத்தியாயம் எழுபது
## 'யார் அந்த ஆரூடக்காரன்?'

**சோ**ழ நாட்டுப் பிரதமர் அநிருத்தருடன், பேச்சு வார்த்தையில் கலந்து கொண்டுவிட்டு வெளி வரும் போது எல்லாரும் பொதுவாக ஒரே வகையில்தான் நினைப்பார்கள்.

விவாதிக்கப்பட்டது எதிர்காலமென்றால், அது இப்படித்தான் நடக்கும் அல்லது இறந்த காலமென்றால், அது இப்படித்தான் நடந்திருக்க வேண்டும் என்று உறுதியாக நினைத்துக் கொண்டு வெளியேறுவது வழக்கம். அவர் யூகங்கள் அவ்வளவு சரியானவையாய் இருக்கும். ''இத்தனை நாளும் இது என் புத்திக்குப் புலப்படவில்லையே!'' என்று கூடப் பலருக்குத் தோன்றும்.

ஆனால், இம்முறை அவருடன் பேசிவிட்டுப் புறப்பட்டு வந்து ஒரு வார காலமாகத் தெற்கே பயணித்து வந்த அந்த மூவருக்கும் இதுவரை தெளிவாய் ஏதும் புலப்படவில்லை. அரசியல் சரித்திர முக்கியத்துவம் கொண்ட நோக்கத்துக்குச் செல்லும் போது திருமெய்யத்தில் இருந்த ஆரூடக்காரன் ஒருவனைச் சந்தித்துவிட்டுச் செல்லுங்கள் என்று பிரதமர் கட்டாயப்படுத்தியதே அதற்குக் காரணம்.

அதுமட்டுமல்ல. ''அவர் சொன்னபடி இவர்கள் செய்கிறார்களா என்று நம் இருவரையும் வேவு பார்க்கவே இந்த வைணவனை அனுப்பி வைத்தாரோ பிரதமர்!'' என்று கூடத் தோன்றியது வந்தியத் தேவனுக்கும் மாறனுக்கும்.

அடியானை உற்றுக் கவனித்து, ''நாம் செல்லும் மார்க்கத்தில் திருமெய்யம் இல்லை. அப்படியே திருமெய்யம் செல்லாமல் நேரே சென்றுவிட்டால் பிரயாண நேரம் மிச்சமாகும். பிரதமர் கண்டு பிடிக்க நம்மைத் தொடர்ந்து வேவு பார்க்க ஒற்றன் யாரையாவது அனுப்பியிருப்பாரா என்ன?'' என்றான் வந்தியத் தேவன்.

''ஆமாம், ஆரூடம் எல்லாம் வேண்டாம். கேட்கவே சகிக்கவில்லை. வேறு வழியாய்ச் சென்று விடுவோம்'' என்று ஒத்தூதினான் அவன் ஆருயிர் நண்பன் மாறன்.

கோபத்தில் அடியானின் குரல் உயர்ந்தது. ''குருத் துரோகம் என்னும் அப்பேர்ப்பட்ட பாதகச் செயலை நான் இந்த ஜன்மத்தில் செய்ய மாட்டேன்'' என்றான் அடியான். ''சோழர்களின் க்ஷேமத்தைத் தவிர வேறு கவனமே இல்லாமலிருக்கும் பிரதமர் சொல்லை நான் தட்ட முடியாது'' என்றும் சொன்னான். ''அவர் ஆரூடம்

பார்க்கச் சொன்னால் நான் பார்ப்பேன். கிளி ஜோசியம் பார்க்கச் சொன்னாலும் பார்ப்பேன். அவரது வார்த்தைகளை மேலோட்டமாகப் பார்க்கக்கூடாது என்பதை நான் என் நெடுநாள் அனுபவத்தில் அறிந்திருக்கிறேன்'' என்றான் அடியான்.

''எங்கள் ஊரில் ஆடு மாடு மேய்ச்சலுக்குச் சென்று திரும்பா விடில்தான் ஆருடம் பார்ப்பவரிடம் செல்வோம். அவரும் குளத்தருகே மாடு இருக்கும், ஆடு கோணல் மலைக்குப் பின்புறமிருக்கும் என்று சொல்லுவார்'' என்றான் வந்தியத் தேவன்.

இரண்டு பேரும் சிரித்து விட்டார்கள். இருவருக்கு எதிராக ஒருவர் என்ற கணக்கு அடியானுக்குப் பிடிக்கவில்லை. எனினும் சமரசமாய்ப் போய்விடுவது நல்லது என முடிவெடுத்தான். குரலைத் தாழ்த்தி, ''இப்படிச் சென்றால் பொக்கிஷத்தைத் தேடும் படலத்தில் ஓரிரு நாட்கள் அதிகமாகும். அவ்வளவுதான். பிரதமர் அதிபுத்திசாலி. பொய் என்ற வார்த்தையே சொல்லாதவர். அவர் சொன்னால் அதற்கு ஒரு காரணமிருக்கும். ஏன், நமக்கு அதிலொரு வழி கூட இருக்கும். உங்களுக்கு ஆயிரம் புண்ணியம் உண்டு. அவர் சொன்னதை நம்புங்கள்'' என்று மன்றாடாத குறையாகக் கெஞ்சினான்.

''வைணவரே! ஒற்றர்கள் வேணும் என்றால் தினம் தினம் ஆருடம் பார்க்கலாம். பிரசனம் போட்டுக்கூடப் பார்க்கலாம். பின் அதன் அடிப்படையில் முடிவுகள் எடுக்கலாம். நாங்கள் வீரர்கள். வாளின் முனையில்தான் எங்கள் முடிவுகளெல்லாம்'' என்றான் மாறன்.

''இந்தச் சோழ தேசமும் அதை ஆளும் சோழர் பரம்பரையும் அநிருத்தருடைய சாமர்த்தியத்தை மட்டும் நம்பியிருக்கவில்லை. ஆயிரமாயிரம் வீரர்களின் தோள்வலிமையையும் தான். அதைவிட நடராஜரின் திருவருளையுந்தான் நம்பிக் கொண்டிருக்கின்றனர்'' என்றான் வந்தியத் தேவன்.

ஒரே விவாதத்தில் சைவக் கடவுளை உயர்த்தியும் தன் குருவைத் தாழ்த்தியும் வம்புக்கு இழுக்கிறான் இந்த வல்லத்து அரசன் என்று யூகித்தான் வைணவன். அதற்கு ஏற்ற பதிலையும் தயாராக வைத்திருந்தான்.

''இதெல்லாம் அவர் முன் சொல்ல வேண்டியதுதானே, அப்பனே. அதற்கு உனக்குத் தைரியம் இல்லை. இங்கு வந்து இருவருமாய் என்னை மடக்கப் பார்க்கிறீர்கள். ஒன்று முடிவாய்ச் சொல்கிறேன். இப்போது நாம் திருமெய்யம் செல்லவில்லை என்றால் ஈழத்துக்கும் செல்லவில்லை. மீண்டும் நேரே தஞ்சைக்குச் செல்லுவோம். பிரதமர் அங்கு வந்திருப்பார். இந்தச் சண்டையைத் தீர்த்து வைப்பார். அதன் பின் ஈழம் செல்வோம்'' என்றான் வைணவன் முடிவாக.



அதற்கு இருவரும் ஒரு பதிலும் சொல்லவில்லை. சண்டை முடிவது போலிருந்ததால் மூவரும் அமைதி காப்பது என்ற முடிவுக்கு வந்தனர்.

மற்ற இருவரும் அடியானுடன் பேசுவதை நிறுத்திவிட்டுத் தங்களுக்குள் சிரித்துப் பேசி வந்தனர். ஒவ்வொரு முறை அவர்கள் சிரிப்புச் சப்தம் கேட்கும்போதும், அடியான், தன்னைப் பார்த்துத் தான் அந்த இரு நண்பர்களும் சிரிக்கிறார்களோ என்ற சந்தேகம் கொண்டு கோபம் அடைந்தான்.

ஆனால், நண்பர்களின் குதூகலத்துக்கு வேறு காரணம் இருந்தது. வந்தியத் தேவனுக்கு மீண்டும் கடல் கடந்து செல்கிறோம் என்ற பயமிருந்தாலும், மீண்டும் வேலையில் இறங்கியாயிற்று என்று சந்தோஷம். இது நாள்வரை ஒரே கோயிலும் குளமும், கும்பாபிஷேகமுமாய்ப் பொழுதைப் போக்கியாயிற்று. விழா நாட்களில் காலம் கழிந்து வந்ததற்குப் பின் உடனே இந்த வேலை வந்ததில் ஒரு திருப்திதான்.

அடுத்த குதிரையில் பயணித்த மாறனின் வாழ்க்கை ஆனந்தமாகவும் குதூகலமாகவும் சென்று கொண்டிருந்தது என்றே சொல்ல வேண்டும். பழுவேட்டரையர் மகளிடம் அவனுடைய நட்பு நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது. அவளருகில் கழித்த ஒவ்வொரு நாளும் ஓர் உற்சவ தினமாகவே தோன்றியது. அவள் கபடமற்ற உள்ளத்தில் தன்னுடைய உருவம் மெல்ல மெல்ல, ஆனால், ஆழ்ந்து பதிந்து கொண்டு வந்தது என யூகித்து விட்டான்.

அடிக்கடி அந்த விசேஷ தினத்தில் அவளுடன் நடத்திய சம்பாஷணையும் அவனுக்கு ஞாபகம் வந்து கொண்டிருந்தது. மனதில் திரும்பத் திரும்ப அந்த உரையாடலை நினைத்து ஆனந்தித்துக் கொண்டிருந்தான்.

கடம்பூர் நாட்டுக்கு உட்பட்ட சிதம்பரத்துக்கு வந்தவர்களுக்கு யாதொரு சௌகரியக் குறையும் இல்லாதபடி பார்த்துக் கொள்ளும்படி தந்தையின் ஆக்ஞை. அப்படியே நடந்தும் கொண்டிருந்தான் மாறன். கொடியேற்ற நாள் மதியம் விருந்தாளிகளெல்லாம் ஓய்வெடுக்கச் சென்ற போது, அவன் கோயிலைச் சுற்றி வந்து கொண்டிருந்தான்.

அப்போது ஒரு பெண்ணைப் பார்த்தான். லோகாவுக்குத் துணையாகவும், பணிவிடை புரிவதற்காகவும் இரண்டு தாதிப்

பெண்கள் அமர்த்தப்பட்டிருந்தார்கள். அதில் ஒருத்தியைத்தான் கோயில் பிரகாரத்தில் பார்த்தான்.

சதா ஓரக் கண்ணால் லோகாவையே தரிசித்துக் கொண்டிருந்தவனுக்கு அவளருகில் நிழலாய் எப்போதுமிருக்கும் சேவகிகளும் கண்ணில் பட்டிருப்பார்களல்லவா? அந்தப் பெண்ணைப் பார்த்தவுடன் அவனுக்கு ஒரு யோசனை. காதல் கொடுக்கும் அசாத்தியத் தைரியம் போர்க் காலத்தில் கூட ஒரு வீரனுக்கு வராது. அவளைப் பிடித்து லோகாவுக்கு ஒரு செய்தி அனுப்பினான். சிவகங்கைக் குளத்துக்கு லோகாவை வரச் சொல்லி.

என்ன ஆச்சரியம்! லோகாவும் அந்தக் குளத்தருகில் அவனுடைய அழைப்புக்கிணங்கி வந்தாள்.

''என்ன செய்தி, சம்புவராயரே?'' என்றாள்

''உட்கார்ந்து பேசுவோமே.''

''நான் அவசரத்தில் இருக்கிறேன். யாராவது பார்த்து விடுவார்கள்'' என்றாள் நங்கை.

''கோயில் பூட்டியாயிற்று. யாரும் வர மாட்டார்கள். மேலும் இது என் நாடு'' என்றான் இளவரசன்.

அவளும் நகைத்துவிட்டு, ''அதுதான் தெரிகிறதே. இதுவே பழுவூர் என்றால், 'வா' என்று கூப்பிட்ட வாயை வாழை நாரைக் கொண்டு தைத்திருப்பார்கள்'' என்றாள்.

அவனும் சளைத்தவனல்ல வாய்ப் பேச்சில். ''கடம்பூர் நாட்டு இளவரசனின் ஆக்ஞை என வந்தாயோ?''

''இல்லை, சிவகங்கைக் குளமென்று தாதிப் பெண் சொல்லியவுடன், நான் வராமலிருந்தால் உள்ளே குதித்து விடுவீர்களோ என்று நினைத்து பயந்தோடி வந்து விட்டேன்'' என்றாள் லோகா. சொல்லியவுடன் சிரித்தும் விட்டாள்.

காதல் பேச்சில் இப்படி முக்கியத்துவமில்லாத வார்த்தைகளை இருவரும் சற்று நேரம் பரிமாறிவிட்டு அவரவர் வழி சென்றனர். அந்த நேரத்தில் நம்பியாண்டார் நம்பியுடன் வந்த பொன்னியின் செல்வர் அவர்களைப் பார்த்ததை இருவரும் கவனிக்க வில்லை.

மனதில் லேசான வருத்தம்தான் மாறனுக்கு. திருவிழா முடியும் தறுவாயில் கிளம்பச் சொல்கிறாரே பிரதமர். வீரனுக்கு வேலை என்றால் வெல்லம் போலத்தான். எனினும் இன்னும் ஓரிரு நாட்கள் அந்த லோகாவைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் போலிருந்தது அவனுக்கு.



நவயௌவன நாரீமணியின் பொன் முகத்தைப் பார்த்துக் கொண்டே இருந்திருக்க வேண்டும். இந்தப் பைத்தியகாரத்தனமான வேலைகளில் ஈடு பட்டிருக்கக் கூடாது என்று ஒரு மனம் சொன்னாலும், அதற்காக இப்பேர்ப்பட்ட வேலையை உதறி விடவும் அவன் தயாராக இல்லை.

அவன் வாழ்க்கையில் தற்போது லோகாவின் நேசம் மட்டுமல்லாமல் வேறொரு நோக்கமும் இருந்தது. ஆனால், அதுவும் மறைமுகமாக அவளைச் சுற்றியே வந்தது. அரசியல் உலகில் அவன் விரைவாக ஏதாவது சாதிக்க வேண்டும் என்பதைப் பரிபூரணமாய் அவன் நம்பினான். எதையாவது சாதித்தால் தான் செம்பியன் மாதேவி சொன்னது போல சம அந்தஸ்தில் ஒரு குடும்பத்தில் எதிர்ப்பின்றிப் பெண் கொடுப்பார்கள்.

அந்தக் கிரீடம் மட்டும் தன் கையில் வந்துவிட்டால் தனக்கு லோகா கிடைக்காமலிருந்தால்தான் ஆச்சரியமே தவிர, அவள் கிடைப்பதில் ஆச்சரியம் ஒன்றும் இராது. இதையெல்லாம் நினைத்தபடி வந்தியத் தேவனின் சாகசப் பேச்சுகளை உள் வாங்கிக் கொள்ளாமல் தலையை மட்டும் அவ்வப்போது அசைத்துக் கொண்டு வந்தான்.

மூவரில் கோபமாகவே வந்தவன் அடியான் மட்டும்தான். மற்ற இருவருடனும் அவன் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அது எதனால் என்று அவனுக்கு மட்டுமே தெரியும். உண்மையில் அவன் கருத்தும் இந்த இருவீரர்களின் கருத்தை ஒட்டியேதான் இருந்தது. தன் குரு விசுவாசத்தினால் அந்தச் சந்தேகத்தை மனதின் பின்புறமாய்த் தள்ளிவிட்டு, அவர் சார்பாகப் பேசிவிட்டான் என்பது தான் உண்மை.

பயணத்தில் திடீரென மாறியது நிலப்பரப்பின் அமைப்பு. நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் பரவி நின்ற சிறு குன்றுகளும், பாறைகளும் கொடும்பாளூர்க் கோனாடு இது என்று சொல்லின. நாட்டின் வளமையை எடுத்துக் காட்டும் பசுமை அந்தக் குன்றுகளுக்கு இடையிடையே இடம் பெற்றிருந்தது.

''அதோ திருமெய்யம் மலையும் தெரிகிறது'' என்று வந்தியத் தேவன் கைநீட்டிச் சொன்னவுடன், அடியான் முகத்தில் அதுவரை இருந்த கோபக்குறி மறைந்தது.

நெடிதுயர்ந்த பனைமரங்கள் சுற்றியிருந்தன அந்தக் குன்றை. ஒரு வீரனின் பார்வையில் அதை நோட்டம் விட்ட இளம் சம்புவராயன் மாறன், ''கோட்டை கட்ட நல்ல இடம்'' என்றான்.

''போய்க் கொடும்பாளூர் அரசரிடம் சொல்'' என்றான் வந்தியத் தேவன்

''அவரிருக்கும் இடத்துக்குத்தான் செல்கிறோம். இலங்கையில் பார்த்துச் சொல்லி விடுவோம்'' என்று பதில் கொடுத்தான் மாறன்

அஸ்தமன வேளையின் மங்கிய வெளிச்சத்தில் ஊருக்குள் நுழைந்தனர். ஊருக்குள் நுழைந்தவுடன் பிரதமர் சொன்ன வழியைக் கடைபிடித்தனர்.

''வைணவரே! இவ்வளவு சிரமம் எடுத்து ஆருடக்காரனை பார்க்க வேண்டும் என்று பிரதமருக்கு எதனால் தோன்றிற்று?'' மாறன் கேட்டான். ''அவர் ஞான திருஷ்டியில் கண்டு, நம்மிடம் செல்ல வேண்டிய இடம் எதுவென்று சொல்லுவார். நாம் அங்கு சென்றால் அந்தக் கிரீடம் கிடைக்கும் என்றா? உமது குருநாதர் மிகவும் புத்திசாலி என்று நாடெங்கும் பேச்சு. இப்படித் தான் எல்லாவற்றிற்கும் ஆருடம் பார்த்துச் செயல்படுகிறாரோ என்னவோ'' என்றான் மாறன்.

மீண்டும் மீண்டும் வம்புக்கு இழுக்கிறான் இவன் என்று கோபப் பட்டான் அடியான்.

''இப்போதே இருட்டிவிட்டது. பிரதமர் சொன்ன ஆள் இருட்டில் ஜோசியம் பார்ப்பாரோ என்னவோ?'' என்றான் மாறன்

அப்போது வந்தியத் தேவன் தன் கருத்தைச் சொன்னான். ''எனக்கென்னவோ நாம் பார்க்கப் போகும் ஆள் ஜோசியரே இல்லை எனத் தோன்றுகிறது.''

வெடித்துவிட்டது அடியானின் சினம். ''நானும் அப்போதிருந்து பார்த்து வருகிறேன். அபசகுனமாகவும் விதண்டா வாதமாகவும் பேசிக் கொண்டே வருகிறீர்கள். நமது இலங்கைப் பயணம் அபஜய மாக முடிந்தால் அதன் முழுக் காரணமும் நீங்கள் இருவரும்தான்'' என்றான்.

''மனதில் தோன்றியதைச் சொல்கிறேன் அவ்வளவுதான். அவர் சொன்ன ஆள் அப்படித் தக்ஷணைக்கு ஆருடம் சொல்லும் ஆள்தா னென்றால் நான் இனிச் சோழர் சாம்ராஜ்யத்தின் தொண்டுக்குத் தகுதியில்லாதவன் என்று ஒப்புக்கொள்கிறேன்'' என்று சவால் விட்டான் வந்தியத் தேவன்.

''அது எப்படி?'' மாறன் வினவினான்.

''மாறா, பிரதமரின் சூட்சமம் உமக்குத் தெரியாதா? நாம் போகுமிடத்தில் விபூதி ருத்ராட்சமணிந்து கனிந்த சிவப்பழமாய்த் தோற்றமளிக்கும் ஒரு ஜோசியர் இருக்க மாட்டார். அந்த நபர் நம்



மூவருக்கோ, இல்லை, குறைந்த பட்சம் ஒருவருக்கோ ஏற்கெனவே தெரிந்தவராய் இருப்பார். அந்தப் பொக்கிஷங்கள் எங்கிருக் கின்றன என்று தெரிந்த ஆள் அவர்'' என்றான் வந்தியத் தேவன்.

பிரதமர் சொன்ன வழியில் சென்றவுடன் மலையின் அடிவாரத்தில் உள்ள மண்டபம் ஒன்றைக் கண்டனர். வழிப் போக்கர்கள் தங்குவதற்காக அத்தகைய மண்டபங்களை அந் நாளில் கட்டியிருந்தார்கள். வீடு, வாசல், வேலை வெட்டி ஒன்றும் இல்லாதவர்கள் தங்கக் கட்டப்பட்ட அந்த மண்டபம் மூன்று சுற்சுவர்களுடன் ஒரு பக்கம் மலையை அணைத்துக் கட்டப் பட்டிருந்தது. ஆனால், மண்டபம் இருக்கும் நிலையைப் பார்த்தால் கட்டி வெகு காலம் ஆனது போலத் தோன்றியது. அந்த மண்ட பத்தை இந்த ஆருடக்காரன் தனக்கென ஆக்கிரமித்துக் கொண்டு விட்டானோ? மண்டபம் பாழடைந்திருந்தது. முழுவதும் இருள் படிந்து கிடந்தது. உள்ளே செல்லும் வாயிலில் கதவேயில்லை. அதை வெட்டி விறகுக்கு யாரோ எடுத்துச் சென்று நாட்களாயின.

மண்டபத்தை அடைந்தபோது நன்றாக இருட்டிவிட்டது. அப்படியொன்றும் வாசலில் அலை மோதும் கூட்டமெல்லாம் இல்லை ஆருடம் பார்க்க. உண்மையில் அங்கு ஜன நடமாட்டமே இல்லை. இம்மாதிரி ஜன சஞ்சாரமில்லாத இடத்தில் ஆருடம் சொல்பவன் இருக்க முடியுமா என்ற சந்தேகம் வந்தது. எதிர் காலத்தை அறிந்து கொள்ளும் ஆர்வத்தில் மக்கள் கூட்டம் இது போன்ற இடங்களில் நிரம்பி வழியும் என்றல்லவா சொல்வார்கள்? முக்கியமாகத் தற்போது மட்டும்தான் இங்கு ஜன நடமாட்டம் இல்லை என்பதில்லை. சில நாட்களாகவே அது இருந்தற்கான அடையாளங்கள்கூட ஏதும் இல்லையே.

அப்போது மீண்டும் ஒரு முறை, ''இந்தப் பாழடைந்த மண்டபத் துக்குள் மறைந்து கிடக்கும் சக்தி என்ன? பிரதமர் ஏன் இங்கு நம்மை வரச் சொன்னார்?'' என்ற கேள்வி மூவரின் மனதையும் அரித்தது.

வாசற்படியில் சிறிது தயங்கி நின்று விட்டு உள்ளே சென்று தேடினர். மண்டபத்தில் யாரும் இல்லை என்றே தோன்றியது. இந்த மண்டபத்தில் மனித சஞ்சாரமே இல்லை. எங்கும் சிலந்திகள் வீடு கட்டிக் கிரஹப் பிரவேசம் செய்து விட்டன. இதில் பலரும் வந்து பார்க்கும் ஆருடக் காரர் எப்படியிருப்பார் என்று அவர்கள் மனம் எண்ணியது.

அடியானைப் பார்த்துச் சற்று கோபமான குரலில் மாறன் திட்டினான்: ''இலங்கைக்குக் குறுக்கு வழி பிடித்துச் சென்றிருக்

கலாம். இங்கே வந்து பாழும் மண்டபத்தில் இல்லாதவரை, இருக்கிறாரா என்று தேடும் பணியில் அகப்பட்டுக் கிடக்கிறோமே?'' என்றான்.

பிறகு அவன் வந்தியத் தேவனைப் பார்த்துச் சொல்வது போல, ''வெள்ளம் தலைக்கு மேல் போய்விட்டது. பிரதமர் சொன்னதை எல்லாம் அடியோடு மறந்துவிடு. நம் திட்டத்தின்படி இலங்கைக்குச் செல்வோம். இனி நாளைப்பொழுது விடிந்த பிறகு தான் நாம் கிளம்ப முடியும். நாளைக் காலை ''கொக்கரக்கோ, கொக்கரக்கோ'' என்று இரண்டாவது தடவை சேவல் கூவும்போது நாம் கிளம்ப வேண்டும்'' என்றான்.

''அதற்கு எனக்குப் பூரணச் சம்மதம்'' என்றான் வந்தியத் தேவன்

அடியான் முகக் குறியைப் பார்த்தால் இதற்கு அவன் மட்டும் ஒப்புக் கொள்ளவில்லை எனத் தெரிந்தது. பிரதமர் சொல்லுவதையெல்லாம் வார்த்தைவிடாமல் கேட்டுக்கொண்டு வந்துவிட்டு இப்போது ''மறந்து போய்விடு'' என்று சொன்னால் எப்படி மறக்க முடியும் ? அவர் சொன்னபடி செய்யாவிட்டால், ''என்றைக்கும் என் முகத்தில் விழிக்காதே!'' என்று சொல்லி விடுவார் என்று அடியானுக்குப் பயம்.

என்றுமில்லாத வண்ணம் அன்றைக்கு மாலைப் பொழுது அமைதியாயிருந்தது. இருளுடன் எப்போதும் கை கோர்த்து வருமே, அந்த அமைதி.

அப்போது ஒரு அதிசயம் நடந்தது. உள்ளே யாரும் இருக்க முடியாதென்று என்று ஆணித்தரமாக மூவரின் பகுத்தறிவும் சொன்னது. அப்படியிருக்கும்போது திடீரென்று மண்டபத்துக்குள்ளிருந்து இருமல் சப்தம் தொடர்ச்சியாக ஒலித்தது. வெகு சமீபத்தில் கேட்டது.

உடனே அதன் எதிரொலியும் கேட்டது. மௌனத்தைப் பிளந்து கொண்டு உள்ளிருந்து எழுந்து வந்த இருமல் சப்தத்தைக் கேட்டு மூவரும் திடுக்கிட்டனர்.

இருமலின் நடுவே அந்த நபர் தன் தந்தை தாயையெல்லாம் அழைத்தான். ''அம்மா, அப்பா!'' என்று. அடியான் ஒரு வெற்றிப் பார்வையை மற்ற இருவரிடமும் செலுத்திவிட்டு தன் வாயை மூடி அதன்மேல் விரலை வைத்துப் ''பேசாதே!'' என்று சமிக்ஞை காட்டிவிட்டு உள்ளே சென்றான்.

மண்டபத்துள் இருமுபவன் எவனோ என்று அறிந்து கொள்ள ஆவலுடன் துடிதுடித்து மற்றவரும் உள்ளே சென்றனர். இருளைத்



துளைத்துக் கொண்டு போர்முரசுக்கு ஈடாக அவர்கள் இருதயங்கள் அடித்துக்கொண்டன. எனினும் சந்தடியின்றி உள்ளே சென்றார்கள்.

மண்டபத்துக்குள் காரிருள் படர்ந்திருந்தது. உள்ளே என்ன இருந்தது என்றறிவது இலேசான காரியமில்லை. இருமல் வந்த திசையில் இன்னும் கொஞ்சம் நெருங்கிச் சென்றார்கள். வழி காட்டும் விதமாக அந்த மனிதனும் அவ்வப்போது இருமினான்.

இருளுக்குச் சவால் கொடுத்துக் கொண்டு மண்டபத்தின் ஓரத்தில் அகல் விளக்கு ஒன்று ''மினுக் மினுக்''கென்று எரிந்து கொண்டிருந்தது. காற்றில் அது அணைந்து விடாமல் இருக்க அதை ஒரு ஓரமாக யாரோ வைத்து விட்டுச் சென்றிருந்தார்கள்.

அதன் ஒளியில் அந்த ஆரூடக்காரனைக் கண்டனர். யாரைப் பார்க்க வந்தார்களோ அவன் நிலையைப் பார்த்ததும், அவர்கள் நெஞ்சம் திடுக்கிட்டது.

அவனது முகம் தாடியில் மறைந்திருந்தது. உரமிட்ட வயலில் முளைக்கும் களைபோலத் தோன்றி, அந்தத் தாடி அவன் முகத்தை விகாரப்படுத்தியது. அவன் வைக்கோல் மெத்தையில் படுத்திருந்தான். அங்கு ஓரே துர்நாற்றம் வீசியது. பல நாள் பிரக்ஞையேயில்லாமல் கிடந்திருக்க வேண்டும் அவன்.

வந்தியத் தேவன் உடனே, ''இவனா ஆரூடக்காரன்? இப்படி வைக்கோல் மெத்தையில் கிடந்து புழுவாய்ப் போராடுகிறானே? இவன் நிலைக்கே வேறொரு ஆரூடகாரரைப் போய்ப் பார்க்க வேண்டும் போலிருக்கிறதே?'' என்றான்.

வந்தியத்தேவன் முன்பே சொன்னது மற்ற இருவருக்கும் நினைவுக்கு வந்தது. படுத்திருப்பவன் தொழிலாய் ஆரூடம் பார்க்கும் ஆளில்லை என்றல்லவா சொன்னான். அது இப்போது ஊர்ஜிதமானது. பின் பிரதமர் சொன்ன விஷயம்?ஆணி அடித்தாற் போல் அழுத்தம் திருத்தமாய்த் திரும்பத் திரும்ப பிரதமர் சொன்னாரே. பின் இந்த இருவருடைய கேலிக்கும் நம்மை ஆளாக்கி விட்டாரே என்று தன் குரு நாதரின் மீது கோபம் வந்தது அடியானுக்கு.

நோய்வாய்ப்பட்டுப் படுத்திருந்தவன் மிகவும் நலிந்த நிலையில் தானிருந்தான். பல நாட்களாய் எது கனவு, எது நினைவு என்று அவனுக்குத் தெரியாமல், இரண்டுக்கும் நடுவே ஒரு பிரதேசத்தில் அவன் சதா சஞ்சரித்துக் கொண்டிருப்பானோ என்னவோ?

ஆனால், அவனுக்கு மண்டபத்தின் வாசலில் குதிரைகள் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. யாரோ பேசும் குரல் கேட்டது. குதிரை

களின் குளம்படியை எருமைகளின் குளம்பபடி என நினைத்துக் கொண்டான். பேசியவர்கள் யமதூதர்கள் தான், தனக்கென வந்து விட்டார்கள் என்று முதலில் தோன்றியது. பிறகு மிகவும் சிரமத் துடன் கண்களைத் திறந்து பார்த்தான். கலவரமடைந்த முகத்துடன் மூவரையும் பார்த்தான். பின் அவன் பார்வை வந்தியத் தேவனின் முகத்தின் மேல் விழுந்தது. மூவரில் வந்தியத் தேவனை மட்டும் தான் அவன் அடையாளம் கண்டு கொண்டான்.

மிகச் சிரமத்துடன் உள்ளே தேக்கி வைத்திருந்த சக்தியை யெல்லாம் ஒருங்கிணைத்துப் பேசினான். "என்னை அடையாளம் தெரியவில்லையா, வந்தியத் தேவா?" என்றான்.

அந்த மனிதன் தன்னை அடையாளம் கண்டு கொண்டதை அறிந்து அதிர்ச்சியில் வந்தியத் தேவன் கதி கலங்கித் தடுமாறினா லும் பதில் சொன்னான். ''இருளில் தாங்கள் யாரென்று தெரிய வில்லை ஐயா'' என்றான். ஆனால் இவனை எங்கோ பார்த்தது போலிருந்தது அவனுக்கு.

''இருள் என்பது நமக்குப் புதிதல்ல!'' எனச் சொல்லிச் சிரித்து விட்டு, மிகவும் அதிசயமான காரியம் ஒன்றைச் செய்தான் அந்த மனிதன். தன் சக்தியையெல்லாம் ஒன்று திரட்டி ஒரு புலியைப் போல் உறுமினான். உறுமிவிட்டுத் தளர்ந்து போய் மயக்கத்தில் விழுந்தான்.

அந்தச் சப்தத்தைக் கேட்டுவிட்டு இவன் யாரென்பதை வந்தியத் தேவன் மிகச் சொற்ப நேரந்தான் சிந்தித்திருப்பான். இருளும் புலியும் இருக்குமிடம் ஒன்றுதான். வந்தியத் தேவனுக்கு அது தெரியும். அதே இருளான சூழல். ஆனால், அது பாதாளச் சிறை. இது பாழடைந்த மண்டபம். 'மீண்டும் இவனைச் சந்தித்து விட்டோம்' என்று நினைத்தான் வந்தியத் தேவன்.

குற்றவாளிகளுக்கென்று ஏற்பட்ட கடுஞ்சிறையில், சோழரின் காராக்கிரகத்தில், மேலே புலிகள் காவல் காக்க, இரும்புக் கம்பி களுக்குப் பின்னால் இருவரும் ஒரு காலத்தில் அடைபட்டு இருந்தனர்.

வந்தியத் தேவனுக்கு இப்போது எல்லாம் விளங்கிற்று. இப்போது புரிந்தது பிரதமரின் புத்தி. வீணாக நம்மை அனுப்ப வில்லை பிரதமர் என்று உணர்ந்து கொண்டான். இங்கிருப்பவனும் ஒரு விதத்தில் ஆரூடம் சொல்பவன்தான்; பாண்டிய மணி மகுடமும் ரத்தின ஹாரமும் எங்கிருக்கிறன என்று சொல்ல வல்லமை கொண்ட ஆரூடக்காரன்!

❖ ❖ ❖



அத்தியாயம் எழுபத்தொன்று

## அநிருத்தருக்கே அடி சறுக்கியதா?

**சா**கக் கிடந்தவன் தன் சக்தியையெல்லாம் ஒன்று சேர்த்து வேங்கையை போல உறுமினான். முதலில் அவனைப் பைத்தியக் காரன் என்றுதான் மூவரும் எண்ணினார்கள்.

வந்தியத் தேவனுக்கும் அதுவரை அவன் குரல் ஒரு தெளிவில்லாத ஞாபகத்தைத் துளிர்க்கச் செய்தாலும், தெளிவாகப் புரியவில்லை. ஆளையும் அடையாளம் கண்டுகொள்ள முடிய வில்லை. முதலில் இவனை எங்கு பார்த்திருக்கிறோம் என்று நன்றாக யோசித்து ஞாபகப் படுத்திக் கொள்ள முயற்சித்தான். முடியவில்லை. ஆனால், அந்த வேங்கையின் உறுமல் குரலை வைத்துத்தான் இவன் யார் என்பதை ஒரு மாதிரி யூகித்தான்.

எப்படி மறக்க முடியும் ? அந்த இருளும் அந்த உறுமலும் ஒன்று கூடி அவனுக்குப் பதிலளித்தன. எப்போதும் இருளே சூழ்ந் திருக்கும் இடம் அது. கதவைத் திறக்கும் போது புலிகளின் உறுமல் ஒலி எப்போதும் மேலிருந்து கேட்கும். மற்ற நேரங்களிலெல்லாம் நான்கு புறத்திலும் இருந்து எழுந்த தீனமான, சோகமயமான மனிதக் குரல்கள், உள்ளம் பதறி உடல் நடுங்கச் செய்யும். அந்த சப்தத்தை அவனால் வாழ்நாள் முழுதும் மறக்க முடியாது.

சொல்லமுடியாத பயங்கரத்தையும் அருவருப்பையும் அடைய வைத்த அந்த இடம் சோழர்களின் பாதாளச் சிறைதான். யாருடைய பாதுகாவலனாகத் தான் இருந்தானோ, அவரையே கொன்றதாகக் குற்றம் சாட்டி அந்தச் சிறையில் வந்தியத் தேவனை ஒரு காலத்தில் அடைத்துவிட்டனர். அந்தச் சிறையின் அடுத்த அறையில் இருந்தவன் தான் இவன்.

அந்தக் கும்மிருட்டில கொஞ்சம் நெருங்கிப் பார்த்து அவனுக்குத் தெரிந்த அந்த மனிதனின் உருவந்தான் இது என்பதை உறுதி செய்து கொண்டான் வந்தியத் தேவன்.

கரிய திருமால் என்றழைக்கப்பட்ட கருத்திருமன் கோடிக் கரைக்குச் சிறிது வடக்கே கடற்கரை ஓரத்தில் உள்ள தோப்புத் துறை என்னும் ஊரைச் சேர்ந்தவன். அங்கிருந்து ஈழத் தீவுக்குப் படகு செலுத்திப் பிழைப்பு நடத்திக் கொண்டிருந்தான். பின்னர் தனக்குத் தெரிந்தும் தெரியாமலும் பல அரசியல் குழப்பங்களில் சிக்கி பாதாளச் சிறையில் பாதி வாழ்வைக் கழித்தான் அவன்.

''வல்லா! யாரிவன்? உன்னைப் பெயர் சொல்லி அழைக்கிறான்?'' என்றான் மாறன். அவன் ரகசியம் போல மெல்லக் கேட்டதே அந்த இருளில் உரக்கக் கத்துவது போலிருந்தது.

''மாறா! பிரதமர் வார்த்தைக்கு இவ்வளவு மதிப்புக் கொடுத்து, இவ்வளவு சிரத்தை எடுத்துக் கொண்டது சரிதான் என இப்போது என் புத்திக்குப்படுகிறது. இவன்தான் அந்த மணி மகுடம் இருக்குமிடத்தை அறிந்தவன்'' என்றான் வந்தியத் தேவன்.

இருவருக்கும், ''ஐயோ! வைணவனிடம் சண்டை பிடித்து இங்கு வராமல் போயிருந்தால் அது எவ்வளவு பெரிய இழப்பு ஆகியிருக்கும்? அந்தப் பொக்கிஷம் எங்கிருக்கிறது என்று அறிந்த ஒரே ஆள் இவன்தான். எங்கோ தொடங்கிய கோலம், புள்ளிகளைச் சுற்றிச், சுற்றி வந்து அழகாக ஆரம்பித்த இடத்தில் வந்து சேரும் போது ஏற்படும் நிறைவு அவர்களுக்கு ஏற்பட்டது.

மயக்கத்தில் படுத்துக்கிடந்தவன் நிலைமை மிகவும் மோசமாக இருந்தது. அந்தப் பாழடைந்த மண்டபத்தில் யாரோ ஒரு விளக்கை ஏற்றி வைத்துவிட்டுச் சென்றிருந்தனர், விஷ ஜந்துக்கள் ஏதும் வந்து அவனைத் தாக்கிவிடாமல் இருக்க- சாகும் ஜீவன் மேலிருந்த கருணையினால்.

வந்தியத் தேவனுக்கு அவன் நிலையைக் கண்டு அழுகை வந்தது. வாழ்வில் சிறிது காலம் மட்டுமே விடுதலைப் பறவையாய்க் கடலெங்கும் உலாவிக் கொண்டிருந்தான். பின் மிக்க மனச்சோர்வுடன் சிறிது காலம் பாதாளச் சிறையில் இருந்தான். அங்கிருந்து தப்பிச் சில நாட்கள் காட்டில் அகதியாய்த் திரிந்தான். இப்போது இந்தப் பாழடைந்த மண்டபத்தில் தனியாய் எமனை எதிர் நோக்கியபடி கிடக்கிறான். சிலரது தலையெழுத்து இப்படித்தான் இருக்குமோ? பிரம்மன் கோபத்தில் இருக்கும் போது இவன் போன்றோரின் ஜாதகத்தை குறித்து விடுவானோ?

அதற்குள் அடியானும் அந்த ஆளின் அடையாளத்தைக் கண்டு கொண்டான். ''பார்த்தாயா, என் குருநாதரின் புத்திசாலித் தனத்தை. சரியான இடத்துக்குத்தான் அனுப்பி வைத்தார் நம்மை'' என்று மார் தட்டினான்.

''இதில் என்ன புத்திசாலித்தனம் உள்ளது? தும்பை விட்டு விட்டு வாலைப் பிடிக்க நினைக்கிறார். முதலில் இந்தக் கருத் திருமனை ஏன் தப்பிக்க விட்டார்?'' என்றான் மாறன்.

''அதற்கு உபயம் செய்தது நம் நண்பர்தான்'' என்று வந்தியத் தேவனை முறைத்தான் அடியான்.



ஆம். வந்தியத் தேவனும் கருத்திருமனும் அதுவரையில் என்றுமே நடவாத காரியம் ஒன்றை ஒருங்கிணைந்து சாதித்தவர்கள். ஒரே நேரத்தில் தஞ்சைக் கோட்டை நிலவறையிலிருந்து தப்பித்தவர்கள்.

''இப்படி மயங்கிக் கிடக்கிறானே! இவனிடம் எப்படிப் பேசுவது?'' என்றான் மாறன்.

''நாம் இருவரும் கொஞ்சம் காற்றாட வெளியே இருப்போம். இவன் எழுந்தால் வைணவர் குரல் கொடுக்கட்டும்'' என்றான் வந்தியத் தேவன்.

வேண்டா வெறுப்பாக இருந்த அடியானை மட்டும் காவலுக்கு வைத்துவிட்டு மற்ற இருவரும் வெளியே வந்தார்கள். உள்ளே தளம் அவ்வளவு சுகமாக இல்லை. மண்டபத்தின் தரை குண்டும் குழியுமாக இருந்தது. துர்நாற்றம் வேறு. இதுதான் சாக்கு என்று இருவரும் வெளியே வந்து விட்டார்கள். மண்டபத்துக்குச் சற்று தூரத்தில் ஒரு சுற்சுவர் இருந்தது. அதன் மேல் ஏறி அமர்ந்தார்கள்.

அந்தப் பாழடைந்த மண்டபத்தின் துர்நாற்றத்துக்கு நேர் மாறாக இருந்தது வெளியே. மெல்லிய காற்று தவழ்ந்து வந்தது. அதில் ஆயிரமாயிரம் நல்ல வாசனைகள் கலந்து வந்தன. மெய்யப்பர் கோயிலைச் சேர்ந்த நந்தவனத்தின் வெளி மதிற் சுவர் ஓரமாக இருக்கிறோம் என்பதை அறிந்தனர். அடுத்த நாள் பெருமாள் கைங்கரியத்துக்கு என இரவில் மலரும் புஷ்பங்கள், அப்போதுதான் மடல் அவிழ்ந்து கொண்டிருந்தன. பன்னீர், பாரிஜாதம், மல்லிகை, முல்லை முதலிய மலர்களின் நறுமணத்தைச் சுமந்துகொண்டு வாடைக் காற்று அவர்கள் பக்கமாக வந்து வீசியது.

''இதைச் சுவாசித்தால்கூடத் தப்பு என்பார் வீர வைணவர். போகும்போது மெய்யப்பரின் முன்னிருக்கும் உண்டியலில் செப்புக் காசைப் போட்டுவிட்டுச் செல்ல வேண்டும்'' என்றான் வந்தியத் தேவன்.

சிரித்தான் மாறன். பின் இருவரும் அமைதியாக இருந்தனர். ''வல்லா! என்ன யோசிக்கிறாய்?'' என்று கேட்டான் மாறன்.

''அந்தக் கிரீடத்தைப் பார்த்தவன் இவன் ஒருவன்தான். என்னிடம் இவன் அன்பாய் இருக்கிறான் என்பது உண்மைதான். எனினும் சோழர் வேலையாய் வந்த எனக்கு எப்படி உதவுவான் என்றுதான் யோசிக்கிறேன்.''

''சரி, வல்லா, அங்கே இருப்பவனுக்கு அந்த நகைகள் இருக்குமிடம் தெரியும் என்று சொல்கிறாய். ஆனால், இவன் இருக்கும்

நிலையில் இப்போது இவனை அழைத்துக் கொண்டு இலங்கைக்குச் செல்வது முடியாத காரியம்.''

''மாறா! நான் அந்த அளவுக்கெல்லாம் ஆசைப் படவில்லை. அதெல்லாம் அப்புறம். முதலில் கருத்திருமன் அதைப் பற்றிப் பேசுகிறானா என்று பார்ப்போம். பிறகு யோசித்துப் பொக்கிஷத்தைத் தேடுவதற்கு வழி பார்க்கலாம்'' என்றான் வந்தியத் தேவன்.

அவனுக்கு நம்பிக்கை இல்லை. ''எனக்கென்னவோ நம்மை இந்தப் பாடுபடுத்தி வைக்கிற அந்தக் கிரீடம் பற்றிய விஷயத்தை இவன் சொல்ல மாட்டான் என்றுதான் தோன்றுகிறது. சோழர்கள் விஷயத்தில் அவனுடைய மனதை மாற்றிவிடலாம் என்பது முடியாது. சோழர்களின் பாதாளச் சிறையில் அவர்கள் விருந்தாளியாய்ப் பல நாட்களைக் கழித்துவிட்டான். கோபமாய்த் தானிருப்பான். நாம் என்னதான் பிரயத்தனம் செய்தாலுங்கூட அவன் மனத்தை மாற்ற முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை'' என்றான்.

மேலும், ''ஊரிலே மூக்காலே மூணு வீசம் பேர் அரசனை எதிர்க்க முற்பட மாட்டார்கள். சிறையில் அடைபட்டால் அது தான் விதி என்று அங்கேயே கம்பியை எண்ணிப் பொழுதைப் போக்கிக் கொள்வார்கள். இவன் அதை எதிர்த்துத் தப்பியவன்'' என்றான்.

''இதுவரை சோழர் கடுஞ்சிறையிலிருந்து தப்பியவர் இருவர் தான். அதில் ஒருவன் ஏற்கெனவே சோழர்களிடம் மீண்டும் வலுவாக அகப்பட்டு கொண்டான். இன்று அடுத்தவனும் மாட்டிக் கொண்டான்'' என்று சொல்லி உரக்கச் சிரித்தான் மாறன். அவன் குறிப்பிட்டது வந்தியத் தேவன் குந்தவையைத் திருமணம் புரிந்து கொண்டதை.

''மாறா! ஒரு மனிதனால் நாட்டின் சரித்திரத்தை எவ்வளவு மாற்ற முடிம்? இங்கே கேட்பாரற்று நாதியற்றுக் கிடக்கிறானே, இவன் அதைச் செய்து முடித்திருக்கிறான். அவன் சோழர்களின் எதிரியாக இருக்கலாம். தப்பிய கைதியாகவும் இருக்கலாம். ஆனால், அவனது சேவைகளை என்னவென்று புகழ்வது?''

''என்ன, சேவையா? சோழருக்கா?'' என்று வினவினான் மாறன்.

''ஆம், சேவைதான். மகத்தான சேவை. இன்று சோழர் சக்கரவர்த்தியை ஒரு சின்ன ஈ எறும்பு கடிப்பதற்குக் கூட இடங் கொடுக்க மாட்டோம் என்று வேளக்காரப் படை உறுதி பூண்டுள்ளது அல்லவா? அப்பேர்ப்பட்ட உத்தம சோழர் பிறந்தபோதே இறந்து போயிருக்க வேண்டும். அப்படி நேராமல் தடுத்தவன் இவன்'' என்றான் வந்தியத் தேவன்.



ஆச்சரியத்துடன் பார்த்த மாறனுக்கு விளக்கினான் வந்தியத் தேவன். ''உத்தம சோழர் இன்று உயிரோடிருப்பதற்கு இவன்தான் காரணம். செவிடும், ஊமையுமாகிய வாணியம்மை அந்தக் குழந்தை செத்துப் போய்விட்டதென்று எண்ணிப் புதைக்கப் பார்த்தாள். குழந்தை அழும் குரலைக் கேட்டு இவன் தான் அதை நல்ல நேரத்தில் காப்பாற்றினான். செயலிழந்து கிடந்த குழந்தை, தெய்வத்தின் அருளால் உயிர் பெற்றது. தெய்வத்தின் காரியங்களைச் செய்யப் பிழைத்தார் போலும். இல்லையென்றால் சைவத்துக்கு இவ்வளவு பெரிய ஏற்றம் இந்த நாட்டில் வந்திருக்குமா?'' என்று கேட்டு ஓரக் கண்ணால் மண்டபத்துக்குள் உட்கார்ந்திருந்த வைணவனைப் பார்த்தான் வந்தியத் தேவன்.

''அவன் சோழருக்குச் செய்த உதவிகளை அவர்கள் இந்தப் பிறவியில் மட்டுமல்ல, எத்தனை பிறவி எடுத்தாலும் மறக்கக் கூடாது. ஆனால், அவனைப் பைத்தியக்காரன் என்று பட்டம் கட்டிப் பாதாளச் சிறையில் அடைத்து வைத்தனர். அவன் பாதி வாழ்க்கை அப்படியே கழிந்தது'' என்றான் மாறன்.

''அவனுக்கு அதுவும் ஒரு சாதனைதான். சக்கரவர்த்தியின் திருச் சமூகத்தில் ஓரிரு நிமிடம் இருப்பதே பெருமை என நினைக்கும் இந்த நாளில் அவருடன் அடுத்தடுத்த அறையில் பல நாள் வாழ்ந்திருக்கிறான்'' என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டான் வந்தியத் தேவன். ''சரி, நடப்பதைப் பற்றிப் பேசுவோம்.''

''என்ன கவலை, வல்லா?'' என்றான் மாறன்

''அப்படியெல்லாம் கவலை ஒன்றுமில்லை!''

''பின் ஏன் உன் முகத்தில் தீவிர யோசனையின் அறிகுறி காணப்படுகிறது?''

''சோழ சாம்ராஜ்யத்தின் உன்னதத்தைப் பற்றி எவ்வளவோ கனவு கண்டோம். அவற்றை நிறைவேற்ற வேண்டுமென்றால் இந்தக் கிரீடம் வேண்டும். கருத்திருமன் சொல்ல மறுத்தால்?'' என்றான் வந்தியத் தேவன்.

''சாதுர்யத்தின் மீது நம்பிக்கை வைத்து, கொஞ்சம் கொஞ்சமாகக் கருத்திருமனைத் தூண்டிக் கேட்டு அவனது வாய் மூலம் அவன் அறிந்த எல்லா விவரங்களையும் நாமும் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். வேறு வழியில்லை'' என்றான் மாறன்.

ஆனால், கருத்திருமனின் உடம்பில் இருக்கும் உயிர், ஒரு மெல்லிய நூலின் முனையிலே தொங்கிக் கொண்டிருக்கிறது என்றறிந்தார்கள். எந்த நிமிஷத்திலே அது அறுபடுமோ தெரியவில்லை. அணு அணுவாய்ச் சாகும் மனிதனிடம் என்னவென்று கேட்பது என்று விழித்தார்கள். சமயம் பார்த்துப் பேசி விஷயத்தைக் கறந்து விடலாம் என்றால் அவனிடமே சமயம் மிகவும் குறைவாகத்தான் இருக்கிறது. இன்றைக்கோ நாளைக்கோ அவனை யமதூதர்கள் வேட்டையாடிப் பிடித்து விடலாம். அப்புறம் இந்த ஜன்மத்தில் யாரும் அந்தப் பொக்கிஷத்தைப் பார்க்கவே முடியாது என்ற பயம் தோன்றியது அவர்களுக்கு.

அவ்வப்போது பக்கத்திலிருந்த கிராமத்திலிருந்து பல்வேறு சப்தங்கள் கேட்டன. மாடு கத்தியது. பின் தன் குடிகாரக் கணவனைப் பார்த்து ஒரு பெண் சப்தம் போட்டாள். கெட்ட கனவில் அகப்பட்ட குழந்தைகள் மிரண்டு அழுதன. சாகும் ஒருவனைப் பற்றிய கவலையில்லாமல் வாழ்க்கை நடந்து கொண்டிருந்தது அங்கே. அவ்வப்போது மண்டபத்தின் வாயிலை நோக்கினான் வந்தியத் தேவன்.

"கருத்திருமன் சீக்கிரமாக எழுந்தாலும் நேரங் கழித்து எழுந்தாலும் வைணவன் கூப்பிட்டு விடுவான். கவலையை விடு, வல்லா, வா, சற்று நேரம் படுப்போம்" என்றான் மாறன்

சுவரிலிருந்து கீழே குதித்தார்கள். இரண்டு கைகளையும் இணைத்துத் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்துக் கொண்டனர் நண்பர்கள். இருவரும் நடு வானுக்கு உச்சியில் இருந்தபடி பளிச் சென்று அடிக்கும் நிலாவைப் பார்த்தனர். "சூரியனும் சந்திரனும் ஒரே சக்தியின் இரண்டு உருவெளித் தோற்றங்களா? ஒன்று வெப்பத்தையும் மற்றும் ஒன்று பனியையும் தெளிக்கின்றவே!" என்றான் மாறன் திடீரென.

சட்டென திரும்பி நண்பனைப் பார்த்தான் வந்தியத் தேவன். "என்ன சம்புவராயரே, பேச்சு ஒரு விதமாய் இருக்கிறது?"

"எவ்விதமாய் இருக்கிறது?" என்று மாறன் விளக்கம் கேட்டான்.

"இல்லை, போர்க்களமே கதியெனக் கிடக்கும் மனிதன் ஒருவன் நிலவையெல்லாம் பற்றிப் பேசினால் அவனுக்கு ஏதோ வந்துவிட்டது என்றுதான் அர்த்தம்" என்றான் வந்தியத் தேவன் குறும்பாக.

"என்ன வந்து விட்டது? பித்தா?"

"அதுவும் ஒருவகைப் பித்துத் தான்."



அதைக் கேட்டுவிட்டு, 'இது தக்க தருணம்தான். உண்மையை வந்தியத் தேவனிடம் சொல்லி விடலாம்' என்று எண்ணினான் மாறன். இவனது உதவியிருந்தால் லோகாவைக் கைப்பிடிப்பது சுலபமாய்ப் போய்விடும். சோழரின் மாப்பிள்ளையல்லவா இவன் என்று நினைத்துக் காதல் விவகாரத்தைச் சொல்ல வாயைத் திறந்தான்...

அப்போது பார்த்துப் பரபரப்புடன், "அவன் விழித்து விட்டான். ஓடி வாருங்கள்" என்ற அடியானின் குரல் இருளில் கேட்டது.

காதலாவது. கத்தரிக்காயாவது என்று அரக்கப் பரக்க இருவரும் மண்டபத்துக்குள் ஓடினார்கள். எழுந்தவன் மீண்டும் இருமத் தொடங்கினான். அருகிலிருந்த பானையிலிருந்து ஒரு குவளையில் தண்ணீர் எடுத்துக் கொடுத்தனர். அவனுடைய தலையிலும் முதுகிலும் மெல்லத் தடவிக் கொடுத்தார்கள்.

அவன் இருமல் நின்றதும், 'நல்ல வேளை பிழைத்தாய். உன்னைத்தான் நம்பியிருக்கிறேன்' என்று மனதுக்குள் நினைத்துக் கொண்டான் வந்தியத் தேவன்.

படுத்தபடியே மூவரையும் ஒரு முறை பார்த்தான் கருத்திருமன். உடல் மட்டும் தான் அவனுக்குப் பலவீனம். மனம் இன்னும் பலமுடன்தான் இருந்தது. இவர்கள் எதற்காக வந்திருக்கிறார்கள் என்று கண்டுபிடித்து விட்டான்.

கருத்திருமன் சமய சந்தர்ப்பம் சரியாகும்வரை சோழர்களிடம் அகப்படக் கூடாதென்று, தப்பித் தப்பித் தலைமறைவாய் இருந்தான். காராக்கிரஹத்திலிருந்து தப்பிய கைதி என்பது ஒரு பக்கம். அவர்கள் தீவிரமாகத் தேடிவந்த பொருளைப் பற்றித் தெரிந்தவன் இவன் என்பது இன்னுமொரு பக்கம். பாண்டியரின் மணி மகுடத்தைத் தேடச் சோழர்களுக்கும் அதிகச் சிரத்தை இருப்பது அவனுக்குத் தெரியும்.

யார் கண்ணிலும் படாமல் எத்தனை நாள் வேண்டுமானாலும் இருக்கலாம் என்றிருந்து விட்டான். ஆனால், அநிருத்தரின் கண்கள் கூர்மையானவை. இருளையும் கிழித்துக் கொண்டு பார்க்கக் கூடியவை என இப்போது புரிந்து கொண்டான். 'இத்தனை காலமாய் நான் சோழருக்குச் செய்திருக்கும் சேவையை முன்னிட்டு என்னை மன்னித்து ஒரு ஓரமாய் வாழ விட்டிருக்கின்றனர் போலிருக்கிறது. என்னை யாரும் கவனிக்கவில்லை என்று நினைத்தேனே. என்னவொரு மூடத்தனம்! சோழ வேங்கையின் கண்கள் சதா என்னையே நோட்டமிட்டு வந்துள்ளன' என்ற முடிவுக்கு வந்தான்.

அடுத்து என்ன செய்வது எனச் சட்டென ஒரு முடிவெடுத்தான். வாழ்க்கையில் பாதியைச் சோழர் சிறையில் கழித்ததால் தன் உள்ளத்தில் கொழுந்து விட்டெரிந்து வந்த குரோதத்தையெல்லாம் மூட்டை கட்டி வைத்துவிட்டான். சாகும் தறுவாயில் அதையெல்லாம் நினைப்பது தவறு என்ற முடிவுக்கும் வந்தான். சோழன், பாண்டிய நாட்டுப் பொக்கிஷத்தை கவர்ந்து விடுவானே என்ற அசூயையும் ஆத்திரமும் அவனிடம் இப்போது இல்லை.

உடம்பு வலி நரக வேதனையாயிருந்தது. இந்த வியாதியுடன் உயிர் வாழ்வது பெரும்பாரமாயிருந்தது அவனுக்கு. பாண்டியர் யாரிடமாவது தெரிந்ததைச் சொல்லி விடலாம் என்ற நம்பிக்கையினால்தான் உயிரைச் சுமந்து கொண்டிருந்தான். ரவிதாசனிடம் தனக்குத் தெரிந்ததை ஏற்கெனவே சொல்லியாயிற்று. மீண்டும் அதையே இவர்களிடமும் சொல்லிவிடலாம். தவறொன்றும் இல்லை என்று எண்ணினான்.

அந்தப் பொக்கிஷம் இன்று சோழர் கையில் கிடைத்தால் என்றாவது ஒரு நாள் பாண்டியருக்குக் கிடைக்க வாய்ப்புண்டு. இன்று காணாமலே போய்விட்டால் பின் யாருக்கும் உதவாமல் போய்விடும் என்ற எண்ணமே அவனுக்கு அந்த முடிவை ஏற்படுத்தியது.

மூவருமாக அவனைக் கைப்பிடியாகப் பிடித்து உட்கார வைத்தனர். அவன் பேச நினைக்கிறான் என்று உணர்ந்தவர்கள் புத்திசாலித் தனமாக வந்தியத் தேவனை முன்னிறுத்தி மற்ற இருவரும் இருளுக்குள் ஒரு அடி பின் வைத்தனர்.

வந்தியத் தேவனைப் பார்த்துப் பேசினான் கருத்திருமன். வார்த்தைகளுக்கு நடுநடுவே காற்று மட்டும் வந்தது. ''ஒரு காலத்தில் நான் சிறைப்பட்டபோது, சோழர்களை வெல்லும் வல்லமையுள்ளவர்கள் ஈரேழு பதினாலு உலகத்திலும் இல்லை என எனக்குப் புரிந்துவிட்டது. மீதி நாட்களெல்லாம் அந்த இருள் படிந்த சிறைதான் எனக்கு என்று முடிவுக்கு வந்தேன். விடுதலை வேண்டுமானால் நாற்சந்தி மூலையில் கழு மரத்தின் மேலேதான் விடுதலை என்று சொல்லிவிட்டனர். பின்னர் உன் உதவியோடு அவர்களிடமிருந்து தப்பினேன்'' என்றான் கருத்திருமன் வந்தியத் தேவனைப் பார்த்து. ''அதற்குப் பிறகு கிடைத்த ஐந்தாண்டு வாழ்க்கை உன்னால்தான் ஐயா. அதனால்தான் உன்னிடம் தெரிந்தவற்றையெல்லாம் சொல்லப் போகிறேன்'' என்றான்.

கட்டுக்கடங்காத ஆவலில் அவன் சொற்களில் கட்டுண்டு கிடந்தனர் மூவரும். ''என்னால் பேசக்கூட முடியவில்லை.



சோழரின் பாதாளச் சிறை அனுபவம் என்னைப் பலவீனப் படுத்தியது'' என்றவன் கண்ணில் ஒரு சிறு மின்னல்.

புன்னகையுடன், ''ஆனால் என் அடுத்த அறைகளில் இருந்தவர்களை மட்டும் பலப்படுத்தி விட்டது சிறைவாசம். என் அடுத்த அறையில் இருந்த ஒருவர் இன்று சோழப் பேரரசர். மற்றும் ஒருவர் அரச குலத்தின் மாப்பிள்ளை!'' என்று சொல்லிச் சிரிக்க யத்தனித்தவன், அதற்குப் பதிலாக இருமினான்.

தலையசைத்தான் வந்தியத் தேவன். ''வேடிக்கைப் பேச்சுக்கு இதுவா நேரம்? நகைகள் எங்கிருக்கின்றன என்று சொல்ல மாட்டேன் என்கிறானே!' என்று நினைத்தான். அப்போது, ''முதலில் உங்களைப் பார்த்துவிட்டு என்னைப் பார்க்க யமதூதர்கள்தான் வந்து விட்டார்களோ என்று நினைத்து விட்டேன். நீர்தான் என்றவுடன் ஆனந்தம். ஆனால், எதற்காக என்னைத் தொடர்கிறீர்கள் என்றும் எனக்குத் தெரியும்.'' அவன் குரலில் இருந்து அவன் தன்னை நன்றாகச் சுதாரித்துக் கொண்டு விட்டான் என்பது வந்தியத் தேவனுக்குத் தெரிந்தது.

''நோய் என்னைத் தினம் தினம் வதைத்து எடுத்து விடுகிறது. இன்றோ நாளையோ எனக்கு முடிவு வந்துவிடும் என்று இருந்தேன். பிராணன் போய்க் கொண்டிருந்த சமயத்தில் என் கையைப் பிடித்து ஆறுதல் சொல்லும் உனக்கு, எனக்கு தெரிந்தவற்றை எல்லாம் கூறிவிடுகிறேன்'' என்றான்.

திடீரென அவன் குரல் மாறியது. ''ஆனால், நீங்கள் எல்லாரும் நினைப்பது தவறு. ஐயா, தாங்கள் தேடும் பொக்கிஷத்தைப் பார்த்தவன் நான் அல்ல!'' என்று விம்மிக் கொண்டே கூறினான். ''உண்மையில் அதைக் கண்டவர் யாரும் உயிருடன் இல்லை'' என்றான்.

அவனுக்கு நாக் குழறியது. அந்தக் குழறிய குரல் மூவரின் தலையில் இடிபோல் விழுந்தது. அவன் கூறியதன் பொருள் இன்னதென்று மூவருக்கும் விளங்கச் சிறிது நேரம் பிடித்தது.

அநிருத்தருக்கே அடி சறுக்கி விட்டதா? புயலை எதிர்கொண்ட பாய்மரக் கப்பலைப் போல் அவர்கள் இதயம் ஆடத்தொடங்கியது.

❖ ❖ ❖

### அத்தியாயம் எழுபத்திரண்டு

## கருத்திருமன் மறைவு!

"நீங்கள் தேடும் அந்த மணிமகுடத்தை நான் பார்த்ததே இல்லை!" என்று கருத்திருமன் கூறியதுதான் தாமதம். அவன் அதைச் சொன்னதும் அவர்களின் மூச்சு தொண்டையில் அடைத்துக் கொண்டுவிட்டது. தலை சுழன்றது. பேசக்கூடச் சக்தி இல்லை.

சிறிது நேரம் திறந்த வாய் மூடாமல் அதிர்ச்சியுடன் படுத்திருந்தவனையே பார்த்துக் கொண்டு நின்றார்கள். தோல்வி உணர்ச்சி மேலிட 'ஆகா இவ்வளவு பிரயத்தனப்பட்டோமே. எல்லாம் வீணா?' என்ற எண்ணம் மேலோங்கியது.

அவன் இருந்த நிலையில் ஒருவாறு அவர்கள் வந்த நோக்கத்தைப் புரிந்து கொண்ட பின்னரும், நம்பிக்கைக்கு இடமே இல்லாமல் அவன் பேசியவுடன், இன்னது செய்வதென்று தெரியாமல் திகைத்தார்கள். பெரிய ஏமாற்றம். படையணி கொண்டு அதைக் கண்டுபிடிக்க இயலாது என்பதைச் சோழர்களின் அரை நூற்றாண்டு அனுபவம் தெளிவாக எடுத்துக் காட்டியது. இவன் கொடுக்கும் துப்பை வைத்தாவது அதைப் பிடித்து விடலாம் என்றால்...

வந்தியத் தேவன் கருத்திருமனின் கண்களை நேருக்கு நேரே பார்த்தான். அவனுக்குத் தலைக்கு வைத்துக் கொள்ள ஒரு கோணிப் பையில் வைக்கோல் அடைக்கப்பட்டுத் தலையணை போல் வைக்கப்பட்டிருந்தது. அதில் சிரம் வைத்து கசங்கிய துணியைப்போலச் சுருண்டு கிடக்கும் இந்த ஒரு மனிதன் சரித்திரத்தில் எவ்வளவு சாதித்திருக்கிறான்! முதலில் கடலில் மூழ்கவிருந்த ஊமைராணியைக் காப்பாற்றினான். பின் உத்தம சோழர் பிறந்த தினத்தன்றே அவரைக் காப்பாற்றினான். அமர புஜங்கனைக் கொண்டு சென்று அவன் இருக்க வேண்டிய இடமான பாண்டியர் குழுவில் சேர்த்தான். அவன் சாகும் தறுவாயில் இன்னும் ஒரு சரித்திர மாற்றத்தைச் செய்யப் போகிறானா என்ன என்று எதிர்பார்த்திருந்தபோது, இப்படி ஒரு செய்தியை அவன் சொன்னது அவர்களைத் திடுக்கிடவைத்தது.

'அவ்வளவு தான் எனக்குத் தெரிந்தது. என்னை நிம்மதியாய்ச் சாக விடுங்கள்' என்று சொல்லாமல் சொல்லிவிட்டானா இவன் என்று நினைத்தார்கள். ஆனால், அவன் பேசி முடித்தபாடாய்த் தோன்றவும் இல்லை. கருத்திருமனின் வார்த்தைகள் ஈன



ஸ்வரத்திலே வெளிவந்து கொண்டிருந்தன. அவ்வப்போது அவன் பேசும் வார்த்தைகள் அவனைப் பலவீனப் படுத்தின. பேசிய முயற்சியில் சக்தியிழந்து மறுபடியும் பின்புறமாகச் சாயும்படி நேர்ந்தது. வந்தியத் தேவன் இன்னும் கெட்டியாக அவனைப் பிடித்துத் தாங்கி முன் பக்கமாகக் கொண்டு வந்தான். ஒரு பெரு முயற்சி செய்து தன்னைச் சுதாரித்துக் கொண்டு, "கேள்வியைக் கேளுங்கள்" என்பது போல், ஒரு பார்வையை வீசினான் கருத்திருமன்.

இதற்காகவே காத்திருந்தாற்போல், மூவரும் ஒரே நேரத்தில் ஒரே கேள்வியைக் கேட்டனர்.

"பின் ஏன் பொய் சொன்னாய்?"

"நான் இளையவனாக இருந்த காலத்தில் ஊரெங்கும் பரவியிருந்த செய்தி என் செவிகளிலும் விழுந்தது. நான் கேள்வியுற்றதை எனக்கு நன்றாய்த் தெரிந்தது போலச் சொல்லி வந்தேன். போகப் போக நான் புளுகியதை நானே நம்பத் தொடங்கினேன்" என்றான் அவன்.

பின்பு வந்தியத் தேவனைப் பார்த்து, "தம்பி! நீதான் இருந்திருக்கிறாயே, அந்த நிலவறையில். அதில் இருந்தால் பைத்தியமே பிடித்து விடும் இல்லையா? சொல்லு இவர்களிடம்!" என்றான்.

தலையசைத்த வந்தியத் தேவனை நோக்கி, "அந்தப் பொய்யை எல்லாரும் நம்பினால்தான் எனக்கு விடுதலை என்னும் எண்ணம் வந்தது" என்றான்.

அவன் பேசப் பேச மூவருக்கும் பெரும் ஏமாற்றம்தான். ஒரு நூறாண்டுகளாகப் பாண்டியர் மணிமகுடம் எங்கிருக்கிறது என்பதைப் பற்றி வெறும் வாதப் பிரதிவாதம் மட்டும்தான் நடந்ததாகத் தோன்றியது. ஆனால், யாராவது கண்டு பிடித்தார்களா என்றால், எந்த முன்னேற்றமும் இல்லை. இவன் ஒருவனே அதைக் கண்டவன் என்று எண்ணி இங்கே வந்தால், இவனும் அதைப் பார்க்கவில்லை என்று சொல்கிறான்

ஆனால், ஒன்று. அவன் சொல்வதைப் முழுவதுமாக நம்பிவிடக் கூடாது. சாகும் தறுவாயில் நம்மைத் திசை திருப்பி விட்டாலும் விடுவான்.

"நான் பாதாளச் சிறையிலிருந்து தப்பியவன். மீண்டும் அகப்பட்டால் பூமியில் குழிவெட்டிப் புதைத்து யானையின் காலால் இடறச் செய்துவிடுவார்கள் சோழர்கள்!" என்று சொன்னான் கருத்திருமன்.

''அப்படியெல்லாம் செய்ய மாட்டார்கள்'' என்று ஆறுதல் சொன்னான் அடியான்.

சாகும் தறுவாயில் இருந்தவனுக்குச் சிரிப்பு. ''ஆம். சிறையிலிருந்து தப்பியவர் சிலருக்குப் பெண் கொடுத்து வாழ வைத்திருக்கின்றனர்'' என்றான் வந்தியத் தேவனைப் பார்த்து. அதே விஷயத்தை வைத்துப் பலமுறை நகைச்சுவை செய்ததால் யாருக்கும் சிரிப்பு வரவில்லை. சற்று நேரம்வரை அங்கு மௌனம் குடி கொண்டிருந்தது.

ஆனால், அவன் நகைச்சுவை உணர்வைப் பார்த்து மூவருக்கும் ஆச்சரியம் தான். சிறு வயதில் காலனைப் போர்க் களத்தில் நேருக்கு நேராய்ச் சந்திக்கும் வீரர்கள்கூட, வயதானதும் யமனைப் பார்த்ததும், கைகால் நடுங்கி வாய் குழறித் தடுமாறுவதைப் பார்த்திருந்தார்கள். ஆனால், இவன் இவ்வளவு திடமாக இருக்கிறானே என்ற வியப்பு மூவர் மனதிலும் ஏற்பட்டது.

இரக்கம் ததும்பிய குரலில், வந்தியத் தேவன், ''ஐயா! உடம்பை வருத்திக் கொள்ளாதீர்கள். உமக்கு ஒன்றும் ஆகாது. நீர் வெகு வேகமாய்க் குணமடைவீர்கள்'' என்றான்.

கஷ்டப்பட்டுச் சிரித்தான் கருத்திருமன். ''வல்லவராயா, நேரம் குறைவு. ஹாஸ்யப் பேச்சுக்கே இடமில்லை. சொல்வதைக் கேட்டுக்கொள்'' என்றான்.

வந்தியத் தேவன் எதற்காக இப்போது இவ்விடம் வந்தான் என்று தெரியும் அவனுக்கு. காரியம் இல்லாமல் அவன் வரவில்லை. பழைய சிறைச் சினேகத்துக்காகச் சாகும்போது கையை பிடித்து ஆறுதல் சொல்ல அவன் வர வில்லை. எனினும் கருத்திருமனும் தனக்குத் தெரிந்ததில் இன்னும் ஒன்றைச் சொல்லிவிட முடிவெடுத்தான்.

தட்டுத் தடுமாறிப் பேசத்தொடங்கினான்.''எல்லாம் விதியின் படி நடக்கும். எல்வாம் அந்த விதியை எழுதிய கோடிக்கரைக் குழகேசர் சித்தப்படிதான் நடக்கும். இந்த உலகத்தில் நான் செய்து முடிக்க வேண்டிய காரியம் இன்னும் ஒன்று பாக்கியிருக்கிறது'' என்று சொன்னவன் கண்களிலேயிருந்து கண்ணீர் அருவியாகப் பெருகிற்று.

''சோழ நாட்டுக்கு நன்மை செய்ய வேண்டும் என்ற எண்ணம் எனக்கு அணுவளவும் இருந்ததில்லை. ஆனால், என்னால்தான் உமக்குப் பல மகத்தான காரியங்கள் நடந்தேறின. வல்லவராயா! என்னால் சோழர்களுக்கு அவர்களுடைய ராஜா கிடைத்தான். நான் காப்பாற்றிய ஊமைப் பெண்ணுக்கு இன்று கோயில் கட்டிக்



கும்பிடுகிறீர்கள். என்னால்தான் பாண்டியர்களுக்கும் அவர்களுடைய ராஜா கிடைத்தான். சிக்கலை அவிழ்த்தவன் நான். இப்போது என் முடிவு நெருங்கும் போது அருகில் இருக்கும் பாக்கியத்தினால் உன்னிடம் சொல்ல வேண்டியிருக்கிறது. அன்பினால் பாசத்தினால் அல்ல. நான் செத்தால் பின் யாருக்கும் அது தெரியாமல் போகும் என்பதற்காகத்தான்.''

மூவரும் வியந்தனர். 'அதுதான் ஒன்றும் தெரியாது என்று முன்பே சொல்லிவிட்டானே. இப்போது என்ன சொல்லப் போகிறான்?'

''நான் கடலில் படகு வலித்துக் கொண்டிருக்கும் காலத்தில் ஒரு யௌவன புருஷன். அப்போது மனதிலும் உடலிலும் பலமிருந்தது. பாறைகளும், சுறா மீன்களும்கூட என்னை ஒன்றும் செய்ய வில்லை. நாட்டில் என்றைக்கு நான் கால் எடுத்து வைத்தேனோ, அன்றிலிருந்து என் கழுத்தை அறுக்க ஆயிரம் பேர்கள். அப்பப்பா! என் வாழ்க்கையில் நடந்த கொடுமை போல் இனி யாருக்கும் வரக்கூடாது'' என்றான். சற்று நிதானித்தவன் பிறகு சொன்னான். ''வல்லவராயா! உன்னுடைய மனம் எனக்குத் தெரியும். ஆனாலும் நீ கேட்டதை என்னால் சரிவரச் சொல்ல முடியவில்லை. ஆனால், ஒரு துப்புக் கொடுக்கிறேன்.''

மூவருக்கும் மீண்டும் ஒரு நம்பிக்கை பிறந்தது.

''மணிமகுடத்தைப் பார்த்ததில்லை யென்றுதானே சொன்னேன்!'' என்று சொல்லித் தன் கண்ணைச் சிமிட்டினான்.

''பின் உமக்கு அது இருக்குமிடம் தெரியுமா?'' ஆர்வத்துடன் வினவினான் வந்தியத் தேவன்.

கருத்திருமன் சிரிக்க முயன்றபோது, அவன் முகத்தின் சுருக்கங்கள் எல்லாம் அஷ்ட கோணலாக வளைந்தன. சைகை செய்து மாறனை அருகில் அழைத்தான்.

''இந்த மண்டபதின் தெற்குச் சுவரில் கீழிருந்து நான்காவது வரிசைக் கற்களில் இடப்புறத்திலிருந்து மூன்றாவது கல் அசையும் பார்! அதை அப்படியே கழற்றியெடுக்க முடியும். அதன் பின்னால் இருப்பதை எடுத்து வா'' என்றான்.

ஒருவேளை அந்தக் கிரீடத்தையும் ஹாரத்தையும் இங்குதான் வைத்திருக்கிறானோ என்று மூவருக்கும் மனதோரத்தில் ஒரு ஆசை. மாறனுக்கு ஆர்வம். மான் போலப் பாய்ந்து சென்று அந்த இருள் படிந்த குகையின் தெற்குச் சுவரைத் தடவினான்.

கீழிருந்து நான்காவது வரிசைக் கற்களை பிடித்தான். பின்னர் இடப் பக்கம் நகர்ந்தான். மூன்றவது கல்லை அசைத்துப் பார்த்தான். என்ன அதிசயம்! அது அசைந்தது.

மெல்ல ஆட்டினான் அந்தக் கல்லை. மெல்ல மெல்ல அது வெளிவருவது போலிருந்தது. அந்த இடத்துக்குள் கையை விட்டுத் துழாவினான். முதலில் ஒரு கிரீடம் வைக்க அதன் பின்னால் இடமில்லை என்றே தோன்றியது. ஏமாற்றத்துடன் மீண்டும் தேடினான். தேள் ஏதாவது இருக்குமோ என்ற பயத்துடன் விரல் நுனியை வைத்துத் தான் தேடினான். ஒரு ஓலையும் ஒரு கத்தியும் தென்பட்டன.

அவசரமாக ஓலையை எடுத்து மண்டபத்தின் மங்கிய வெளிச்சத்தில் பார்த்தான். ஒரு நான்கு வரிக் கிறுக்கல் அதன் மேல் இருந்தது. ஆனால், என்ன வார்த்தைகள் எழுதியிருந்தன என்று இருட்டில் தெளிவாகத் தெரியவில்லை. இரண்டையும் எடுத்துக் கொண்டு கருத்திருமன் அருகில் வந்தான்.

கருத்திருமன், ''அந்த நான்கு வரிக் கவிதையில் அந்தப் பொக்கிஷத்தை எப்படி அடைய வேண்டும் என்றிருக்கும். நான் படித்துப் பார்த்தேன். எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால், அது அரசர் ராஜ சிம்ஹன் தன் கைப்பட எழுதிய கவிதை'' என்றான்.

வெளியில் ஓடிச்சென்று வெளிச்சத்தில் அதைப் படிக்க மூவருக்கும் ஆவல். ஆனால், கருத்திருமன் சொல்லும் எல்லாவற்றையும் கேட்டு விடவேண்டும் என்பதற்காக யாரும் வெளியே செல்லவில்லை.

சாகக் கிடந்தவன் தொடர்ந்து பேசினான்: ''வீரபாண்டியனுக்கு ஆளில்லை. என்னையே பலகாலம் நம்பியிருந்தார். ஆனால், அவரும் அந்த நகைகளைப் பற்றிக் கவலைப் படவில்லை. வைத்துப் பாதுகாக்க முடியாது என்று நினைத்து விட்டார் போலும்'' என்றான். பின் ஒரு பெருமூச்சுடன், ''எனக்குப் பல நாள் ஆசை. நானே தப்பிச் சென்று, இலங்கைக்குப் படகை ஓட்டிச் சென்று அந்தப் பொக்கிஷத்தை கைப்பற்றவேண்டும் என்று. ஆனால், அதற்கு வேண்டிய மனோதைரியம் எனக்கு ஏற்படவில்லை'' என்று சொல்லிவிட்டுச் சிரித்தான். நோய்வாய்ப்பட்ட அவன் முகத்தில் அந்தச் சிரிப்பு அலங்கோலமாக இருந்தது.

''ஆனால், ஒன்று, அது உங்கள் கையில் எல்லாம் கிடைக்காது'' என்றான்.

இவன் என்ன சாபம் விடுகிறானா என்று மூவரும் முறைக்க, ''ஒரு சமண முனியிடம் சோழி போட்டுக் கேட்டோம். அது



நிச்சயம் கிடைக்குமாம். ஆனால், ஒரு பெண்ணின் கையில்தான் கிடைக்கும் என்று சொன்னார். நீங்களோ மூவரும் ஆண்மக்கள்'' என்றான்.

கருத்திருமன் இவ்வளவையும் சொன்னது அவர்களுக்குப் பெருவியப்பைத் தந்தது. ஏன் இவ்வளவு ஒத்துழைக்கிறான் என்ற கேள்வி அவர்கள் மனதில் எழுந்தது. அதை அவனே புரிந்து கொண்டவன் போலப் பேசினான்.

''ஓராயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர், பாண்டியர் என்றிருக்குமா? இல்லை சோழர் என்றுதான் இருக்குமா? தேசப்பற்று என்னும் மூடப்பிரமை காரணமாக உயிரை விட ஆயிரம் ஆயிரம் பேர் தயாராக இருக்கிறார்கள். சிந்தனா சக்தியில்லாத அந்தச் செயலை வாழ்த்தி மனித மந்தைகள் அவர்களுக்குப் பள்ளிப்படையெடுத்துப் போற்றுகின்றன. சாகும் தறுவாயில் இருக்கும் எனக்கு அது சிரிப்பைத்தான் தருகிறது. தம்பிகளா! நான் இன்னும் ஒரு நாளோ இரு நாளோ இருப்பேன். அந்தப் பொக்கிஷத்தை நீங்கள் கண்டு பிடித்தால் என்ன? பாண்டியர் கண்டுபிடித்தல் என்ன? எப்படியாவது அது வெளிச்சத்துக்கு வர வேண்டும். அவ்வளவு தான்'' என்றான்.

ஒரு மணி நேரம் பேசியதில் கருத்திருமனின் தேகநிலை முன்னை விட மோசமாகி விட்டது. பேசப் பேச அவனுடைய உடம்பு மேலும் நலிவடைந்தது. ஆனால், மனதிலிருந்த எல்லாவற்றையும் மூச்சு நிற்பதற்குள் வெளியே கொட்டிவிடவேண்டும் என்ற முடிவோடுதான் பேசினான். ஓரிரு வார்த்தை. பின் இருமல். பின் ஒரு வாக்கியம். பின் பாதி மூர்ச்சையெனப் பேசிக் கொண்டிருந்தான்.

பின் திடீரெனப் பின்னால் சாய்ந்தான். உயிர்தான் போய் விட்டதா என்று பயந்தனர் மூவரும். ஆனால், அவன் சிரமப்பட்டு மூச்சு விட்டுக் கொண்டிருந்தது தெரிந்தது. அவன் மூர்ச்சை தெளிந்து எழுந்த பின்தான் பேச முடியும். இதுதான் சாக்கு என மீண்டும் அடியானைக் காவலுக்கு விட்டு விட்டு வெளியேறினர் இருவரும்.

''நானும் வருகிறேன்'' என்று அடியான் கேட்க, ''இன்னும் என்ன சொல்லப் போகிறான் என்று தெரியாது. அவன் விழித்தால் கூப்பிடுங்கள்'' என்றார்கள்.

நிலா வெளிச்சத்தில் அந்தக் கவிதையைப் படித்தனர்.

'அசுரன் முன்னம் ஆண்டிருக்க
நீரும் இருளும் சூழ்ந்திருக்க

ஆதவன் சற்றே தாழ்ந்திருக்க
வேங்கையின் காலடியில் வேந்தன்முடி'

மிகவும் எளிமையான கவிதை. அவசரத்தில் எழுதப்பட்டிருந்தது. "அசுரன் என்றால் அரக்கன்தான். அது இராவணனாகத்தான் இருக்கும். அவன் ஆண்ட பிரதேசம் இலங்கைதான். நிச்சயமாக நீர் சூழ்ந்த தீவுதானது. ஆனால், இருள் சூழந்த இடமா? புரிய வில்லையே...!" என்று சொல்லி அடுத்த வரிக்குச் சென்றான் வந்தியத் தேவன்.

"ஆதவன் என்றால் சூரியன். அவன் ஏன் தாமதமாக எழுகிறான்? புரியவில்லையே!" என்றான் மாறன்.

"சரி அதை விட்டு அடுத்த வரியைப் படி. வேங்கையென்றால் சோழன். அவன் காலடியில் தவிக்கும் பிரதேசம்தான் இலங்கை. அப்படியென்றால் அந்தக் கிரீடம் இலங்கையில்தான் இருக்கிறது" என்றான் வந்தியத் தேவன்.

"இலங்கையைத்தான் குறிக்கின்றது. ஆனால், ஆதவன் ஏன் அங்கு தாமதமாய் உதிக்கின்றான்? பின் இருள் சூழ்ந்த பகுதியென்றால் என்ன? ஒரு அடர்ந்த காட்டைத் தான் குறிக்கிறார் பாண்டியர் என்று நினைக்கிறேன்" என்றான் மாறன்.

"பார்ப்பதற்கு எளிதாக இருக்கும் இந்தக் கவிதையில் ஒரு சூட்சுமம் மறைந்து இருக்கும் என்று நினைக்கிறேன்" என்றான் வந்தியத் தேவன்.

"ஏன்?"

"எதிரி என்றாலும், நாட்டுக்காக உயிரையே கொடுத்தவர்கள் பாண்டியர்கள். சோழர் முன் தலை குனியமாட்டேன் என்று தங்கள் தலையையே இழந்தவர்கள். பாண்டியன் எழுதிய கவிதையில் நான்காவது வரியைப் பார். வேங்கையின் காலடியில் அவன் கிரீடம் என்று எப்படி எழுதுவான்?" என வினா எழுப்பினான்.

ஒன்றும் புரியாமல் திகைத்தான் மாறன். 'ஆகா! இந்த ஒரு இரவுக்குள் எத்தனை விஷயங்கள் நடக்கின்றன! வந்தபோது பிரதமர் நம்மைச் சோழிக் கணக்கில் வல்லவன் ஒருவனைப் பார்க்கச் சொன்னார் என்று நினைத்தோம். கிரஹங்களின் சேர்க்கையைப் பற்றிச் சொல்பவனுக்குப் பதிலாக காராக்கிரகத்திலிருந்து தப்பிய கைதியை சந்தித்தோம். இந்த அகாலவேளையில் சரித்திரம் மாற்றப்படும் என்ற நம்பிக்கையில் உறங்காமல் கண் விழித்தால் இன்னும் குழப்பம்தான்' என்று நினைத்துக் கொண்டான்.



நம்பிக்கை ஒரு பக்கமும், வருத்தம் ஒரு பக்கமும் பிடுங்கித் தின்றன. மாறன் "பாண்டிய நாட்டில் வீரபாண்டியனைக் கொன்றோம். ஈழ நாட்டில் மகிந்தனைப் புறங்கண்டு புலிக் கொடியை உயர்த்தினோம். எல்லாம் சாதிக்க முடிந்தது. ஆனால், இவை எல்லாம் நிலைக்க வேண்டுமென்றால், வெற்றிபெற வேண்டும் இந்தக் கிரீட விஷயத்தில். சோழர்களுடைய மனோரதம் இது வரையில் நிறைவேறவில்லை. இவன் பேசுவதைப் பார்த்தால் இனியும் நிறைவேறாது.அவன் சொன்ன பிறகும் இலங்கைக்குச் செல்வது உசிதமென்று தோன்றவில்லை."

"ஏன் அப்படி ?" வந்தியத் தேவன் கேட்டான்.

பல நாள் தனிமையில் மனம் குரங்கு போலத் தாவும் என்பதை மாறன் நன்கு அறிவான். அதனால், "தனிமையில் உளறுகிறானோ என்னவோ...?" என்றான்

"பின் அந்த ஓலை?"

"அதை இவனே கிறுக்க எவ்வளவு நேரமாகியிருக்கும்?"

"ஆனால், உண்மையை அறிந்து கொள்ள என் மனம் துடிக்கிறது" என்றான் வந்தியத் தேவன்.

ஒப்புக் கொண்டு தலையசைத்தான் மாறன். "என்னுடைய எண்ணமும் அதுதான். அதனால் ஈழத்துக்குப் போய்த்தான் பார்ப்போமே" என்றான்.

"வல்லா! வைணவனைக் கூப்பிடு. கிளம்புவோம். இலங்கையை நோக்கி இப்போதே செல்லுவோம்" எனறான் மாறன்.

வந்தியத் தேவன் ஒப்புக் கொள்ளவில்லை. "இல்லை, மாறா. நேரமாகட்டும். உள்ளே படுத்திருக்கிறானே. எங்கேயாவது மனிதர்களுடைய கண் காணாத இடத்தில் மீதி வாழ்க்கையைக் கழிக்க அவன் சாபம் இடப்பட்டிருக்கிறான். அவன் நிலையைக் கண்டபோது எனக்கு மிக்க மனச் சோர்வு உண்டாயிற்று. வாழ்வில் தான் அப்படி ஆகிவிட்டது. நான் அவனைத் தனிமையில் சாக விடப் போவதில்லை."

"என்ன, அவன் கையைப் பிடித்து யம தூதர்கள் வந்தவுடன் ஒப்படைத்துவிட்டு வரப் போகிறாயா? வல்லா! உன் நல்ல மனதைப் பாராட்டுகிறேன். ஆனால், வீரனின் கடமையை மறந்து விடாதே. நம்மை நம்பிப் பிரதமர் கொடுத்த வேலையை நட்டாற்றிலே விட்டுவிட்டுத் தாமதாமாய்ப் போகலாமா? யோசித்துப் பார்!" என்றான் மாறன்.

வந்தியத் தேவன் ஒரே பிடிவாதமாக அங்கிருந்து கிளம்ப முடியாதென்று சொல்லி விட்டான். ''அறியாமையில் பிதற்று கிறாய்! எனக்கு ஒரு கடமை இருக்கிறது, மாறா'' என்றான்.

''இனி எவ்வளவு நாளாகுமோ? தெரியவில்லையே.''

''இல்லை, இல்லை. கருத்திருமனுடைய மனதின் பாரமெல் லாம் இறங்கிவிட்டது. இன்னும் ஒரு நாழிகையோ இரண்டோ தான் அவன் இருப்பான். இந்நிலையில் அவனை விட்டுச் செல்ல மனமில்லை. மேலும் நமக்குப் பேருதவி செய்திருக்கிறான். கொஞ்சம் பொறுமையாய் இரு'' என்று கெஞ்சாத குறையாக மாறனிடம் மன்றாடினான் வந்தியத் தேவன்.

''வல்லா, பாவம் பரிதாபம் பார்த்துக் கொண்டிருப்பதற்கு இது தருணமல்ல. இந்த அரும் பெரும் காரியத்தை நாம் செய்து முடிக்க வேண்டும். சோழ சாம்ராஜ்யத்தின் நலமே நமது நலம் என்று கருதி வாழ்கிறோம். அந்தப் பொக்கிஷத்தை நெருங்கிப் பகைவர்கள் சென்று கொண்டிருக்கலாம். அவர்களைத் தடுத்து நிறுத்தாமற் போனால் நீயும் நானும் சோழர்களின் நண்பர்கள் என்று சொல்லிக் கொள்வதில் என்ன பயன்? இங்கிருந்து உடனே புறப்பட்டுச் செல்வது நலம் என்று தோன்றுகிறது'' என்றான்.

வந்தியத் தேவன் சற்று நேரம் பூமியையும் சற்று நேரம் இருள் படிந்த பாழும் மண்டபத்தையும் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, "என்னை என்னதான் செய்யச் சொல்கிறாய், மாறா?" என்றான்.

''வல்லா! கேள். நாம் யாரென்று ஊர்ப் பெரியவரிடம் தெரிவிப் போம். அவர்கள் பார்த்து கொள்வார்கள்''என்று உறுதியளித்தான் மாறன்.

கடைசியாகப் பகல் வரை இருந்துவிட்டுச் செல்வது எனத் தீர்மானித்தனர். பின் ஊருக்குள் சென்று யாரையாவது வரச் சொல்லிவிட்டுக் கிளம்பலாம் என்று முடிவெடுத்தனர்.

முதலில் காவலிருந்தவன் வந்தியத் தேவன். பின் அவன் உறங்கச் செல்லவே, மாறன் காவலுக்கு அமர்த்தப்பட்டான். மண்டபத் துக்கு வெளிப்புறம் இருந்த திண்ணையில் படுத்திருந்தான் வந்தியத் தேவன்.

அன்றிரவு ஏறக்குறைய ஒன்றரை ஜாமம் ஆனபோது, திருமெய்யம் ஊரில் நிசப்தம் நிலவியது. வீதி முனைகளில் ஓரிரு தீப்பந்தங்கள் மட்டும் எரிந்து கொண்டிருந்தன. அதுவும் சற்று நேரத்துகெல்லாம் ஒவ்வொன்றாக மங்கி அணையத் தொடங்கின.

அடியானுக்கு உறக்கம் வரவில்லை. மண்டபத்தின் வாசலில் உட்கார்ந்து இருந்தான். அவ்வப்போது அந்தச் சாகும் மனிதனைப் பார்ப்பான். பின் வெளியே உரையாடிக் களைத்துப் போய்ப் படுத்திருந்த நண்பர்களைப் பார்ப்பான்.



திடீரென ஒரு சப்தம் கேட்கவே, தூக்கம் போலொரு மயக்கத் தில் அகப்பட்டுக் கிடந்த கருத்திருமனைப் பார்த்தான். அலைகடல் பூமியை மோதியதுபோல ஒலி ஒன்று அவன் அடித் தொண்டையி லிருந்து எழுந்தது..

படபடப்புக் கலந்த தழுதழுத்த குரலில்,''இளவரசே, இளவரசே! என்று கூவினான். அடியான் உள்ளிருந்து கத்தியதைக் கேட்டுவிட்டு மாறன், ''வல்லா! வல்லா! ஓடி வா'' என்றான் அவசரமாக.

இரண்டே பாய்ச்சலில் வீரர்கள் இருவரும் உள்ளே ஓடி வந்து, ''என்ன, என்ன?'' என்றார்கள். பின் கருத்திருமனைப் பார்த் தார்கள்.

ஏதோ பேச முற்பட்ட கருத்திருமனின் கரிய முகம் சிவந்தது. கண்கள் உருண்டன. உதடுகள் துடித்தன. கருத்திருமனின் கண்கள் அகலத் திறந்தன. உள்ளிருந்த கண்மணிகள் இங்கும் அங்குமாய் தேடின. மற்றவருக்குத் தெரியாதது ஏதோ அவனுக்குத் தென்பட் டிருக்க வேண்டும். கருத்திருமனின் முகத்தின் தசைகள் நூறு கோணலாக வளைந்தன. பின் அப்படியே நின்று விட்டன.

பின் திடீரென நிசப்தம். மழைக்கு முன் வருமே, அது போல. யாரோ ஒருவர் அறைக்குள் வருவது போல ஓரிரு வினாடிகள் மூவரும் உணர்ந்தனர். பின் திரும்பவும் அமைதி. வந்தது காலன் என்று புரிந்து கொண்டனர்.

தேசப் பிரஷ்டத் தண்டனைக்கு உள்ளாகி எப்போதுமே கஷ்டம் நிறைந்த வாழ்வுதான் கருத்திருமனின் தலையில் எழுதி யிருந்தது. அதனால் மரணம் தந்த வித்தியாசத்தைத் தவிர முகத்திலும் தோற்றத்திலும் யாதொரு வேற்றுமையும் இல்லை. வந்தியத் தேவன் அழுது வெகு நாட்களானது. தன்னைக் காதலித்த மணிமேகலை இறந்த அன்று அழுதவன், இப்போது மீண்டும் மாலை மாலையாய்க் கண்ணீர் சொரிந்தான்.

இவன் சிறை வாசமும் ஆரண்ய வாசமும் அவன் வாழ்க்கையில் பல நாட்களைக் குறைத்து விட்டன. சரித்திரத்தில் குற்றமற்ற ஜனங்களும் சிலநேரம் பாதிக்கப்படுவார்கள். அதில் இவனும் ஒருவன். ஆனாலும் சிறிதும் தளர்ச்சியடையாமல் மேற்படி தடங்கல்களையெல்லாம் தாண்டிப் போராடிப் பார்த்து விட்டான் கருத்திருமன் என்று நினைக்கும் போது ஒரு பிரமிப்பு வந்தது.

இப்படி அனாதையாகச் செத்துக் கிடப்பவன் சோழர் சரித்திரத்தையும் பாண்டியர் சரித்திரத்தையும் மாற்றியவன்.

ஊருக்குள் சென்ற மாறன் ஊர்த் தலைவனிடம் தான் யாரென்று அறிமுகப்படுத்திக் கொண்டு உதவி கேட்டான். ஊர் எல்லையிலிருந்த பைத்தியக்காரனுக்காகப் பரிந்து பேச அரச குலமே வந்து விட்டது என அறிந்து அதுவரை ஆதரவற்றுக் கிடந்த கருத்திருமனை தேடிப் பலரும் வந்தனர். அவனைத் தூக்கிச் சென்றார்கள். ஆளைச் சுமந்தபோதுதான் தெரிந்து கொண்டனர் அவன் பல நாட்களாய்ப் பட்டினி கிடந்திருக்கிறான் என்று.

விறகின் மீது அவனைப் படுக்க வைத்தனர். வந்தியத் தேவனுக்கு தலை சுழன்றது. சட்டென்று சமாளித்துக் கொண்டான். சிதைக்குத் தீ மூட்டியபின் மற்ற இருவர் இருந்ததை வந்தியத் தேவன் கவனித்ததாகவே தெரியவில்லை. அவன் இரு கரங்களையும் கூப்பி, எரியும் சிதைக்கு முன் வெகு நேரம் நின்றான்.

அக்கினிக்குத் தெரியுமா- பெரியவன் சிறியவன், வலியவன் மெலிந்தவனென்று? அதன் கோரப் பசிக்கு முன் எல்லாரும் சமம்தான். சரித்திரத்தின் பிரவாகத்துக்கு எதிராகப் போராடித் தோற்றவன், அக்கினியிடமும் தோற்றுப் போனான். தீ வானை நோக்கிப் பாய்ந்தது!

மாறனுக்கு மறுபடியும் தன் கோட்டை எரிந்தது நினைவுக்கு வந்தது; ஏனோ தெரியவில்லை, கோடிக்கரையின் தீபமும் ஞாபகத்திற்கு வந்தது!

❖ ❖ ❖

## அத்தியாயம் எழுபத்து மூன்று

## மீண்டும் மெய்யப்பன்!

இராமேஸ்வரத்தைப் பார்க்கும் போது, இதுவரை அவர்கள் மூவரும் பார்த்த ஊர்களிலிருந்து முற்றிலும் மாறுபட்ட காட்சியாய்த் தென்பட்டது. இராமேஸ்வரத்தைச் சுற்றி வெகுதூரம் மணற்பாங்காக இருந்தது. ஏதோ பாலைவனம் போல மணல் குன்றுகள் ஆங்காங்கு முளைத்துப் பின்னால் இருந்தவற்றையெல்லாம் கண்களுக்குத் தெரியாமல் மறைத்தன. அவ்வப்போது குன்றுகளுக்கு இடையே சிறுசிறு பாறைகளும் காணப்பட்டன.



நெடிதுயர்ந்த மரங்களோ, அடர்ந்த செடி கொடிகளோ அந்தப் மணல் பிரதேசத்தில் எங்குமே காணப்படவில்லை.

ஆனால், இராமேஸ்வரப் பிரதேசத்தில் கண்களைக் குளிர வைத்தது அந்தத் தீவை சுற்றிலும் விரிந்து பரந்து கிடந்த கடல். அக்கடலின் தோற்றமோ கண்கொள்ளாத அற்புதக் காட்சியாயிருந்தது. கடல் அலைகள் வெண்ணுரையுடன் வந்து வந்து இந்தத் தீவினை முத்தமிட்டுச் செல்லும். ஆனால், அவ்வப்போது சமுத்திர ராஜனுக்குக் கோபம் வந்தால் தீவையே மூழ்கடித்துவிடும் என்பதும் அவர்களுக்குத் தெரியும்.

கடல் மட்டுமல்லாமல், அதில் மிதந்த நாவாய்கள், படகுகள், ஓடங்கள், வள்ளங்கள், வத்தைகள், கட்டுமரங்கள் எல்லாம் காணும் கண்களுக்கு அழகுதான். முக்கியமாகப் பாய்மரங்களிலிருந்து படபடவென்று காற்றில் அடித்துக் கொண்டு பறந்த முக்கோண வடிவிலான வெண்ணிறப் பாய்கள் சுற்றியிருந்த கடலின் நீல நிறத்தை இன்னமும் அழகாக எடுத்துக் காட்டின.

இன்னும் அப்பால் கடலையும் வானத்தையும் இணைத்து விடும் என்று தோன்றும் அளவுக்கு, நூற்றுக் கணக்கான எண்ணிக்கையில் பெரிய பெரிய மரக்கலங்கள், நெடுகிலும் வரிசை வரிசையாகக் கண்ணுக்கெட்டிய தூரம்வரை காணப்பட்டன. அவற்றின் பாய்மரத்து உச்சிகளிலே வரிசை வரிசையாகப் புலிக் கொடிகள் காற்றிலே அசைந்தாடிக் கொண்டிருந்தன.

இராமேஸ்வரம் ஒரு காலத்தில் பாண்டியரின் துறைமுகமாயிருந்தது. இப்போது இது சோழர்களின் கைவசம் வந்துவிட்டது. இங்கிருந்து பெரிய கப்பல்களில் வியாபாரிகள் கிளம்பி தூர தூர தேசங்களுக்கெல்லாம் சென்று வாணிபம் செய்து பொன்னையும் மணியையும் கொண்டு வந்து, சோழ நாட்டை வளப்படுத்தினர். அவர்கள் செலுத்திய சுங்க வரியில் மன்னர்களின் பொக்கிஷத்தையும் நிரப்பி வந்தனர்.

இராமேஸ்வரத்தில் மக்கள் கடலைத்தான் ஆக்கிரமித்துள்ளனர் என்று நினைத்தபடி கடற்கரையிலிருந்து மூவரும் திரும்பிப் பார்த்தால், வானளாவிய பெரிய கட்டடங்களும் அவற்றின் இடையிடையே நெடிய தென்னை மரங்களும் காட்சியளித்தன. கடற்கரையை அடுத்துப் பண்டக சாலைகள், சுங்கம் வாங்கும் கட்டடங்கள் முதலியன இருந்தன. அவற்றுக்கு அப்பால் ஜனங்கள் வசிக்கும் வீடுகளும் கோயில்களும் இருந்தன.

சரி, ஆழ்வார்க்கடியானும், வந்தியத் தேவனும் மாறனும் இந்த தீவில் என்ன செய்கிறார்கள்? இங்கிருந்து எங்கே போகப் போகிறார்கள்?

திருமெய்யத்தில் மாண்டு போன கருத்திருமனுக்கு இறுதிச் சடங்குகளைச் செய்துவிட்டுத் தெற்கே வாயு வேகமாக பறந்தனர் மூவரும். இராமேஸ்வரத்துக்கு வந்த பின் இலங்கைக்குச் செல்ல வேண்டும் என்பதே நம் கதாபுருஷர்களின் நோக்கம். அதை எப்படி நிறைவேற்றுவது என்று விவாதித்துக் கொண்டிருந்தனர்.

''அரசாங்கக் கப்பலில் போக எனக்கு இஷ்டமில்லை. விளம்பரம் இல்லாமல் ஒரு வியாபாரக் கப்பலில் செல்வதுதான் நம் நோக்கத்துக்கு உகந்தது'' என்றான் மாறன்.

''ஆமாம். திருமெய்யத்திலிருந்தே நம்மை யாரோ கண்காணிப்பது போலவும் பின் தொடர்வதாகவும் எனக்குத் தோன்றுகிறது'' என்றான் அடியான். பாம்பின் காலைப் பாம்புதான் அறியும். ஒற்றனுக்குத் தெரியாதா யாராவது தன்னைப் பின் தொடர்கிறார்களா என்று. உடனே மீதி இருவரும் திரும்பிப் பார்த்தனர். ஆனால், சந்தேகம் வரும்படியாக ஏதும் இல்லை.

''எப்படியாவது தனியார் கப்பலொன்றைக் கண்டுபிடித்துப் போய்விட வேண்டும். இந்த ஊரில் அது அப்படியொன்றும் முடியாத காரியமாக இருக்காது'' என்றான் வந்தியத் தேவன்.

ஆனால், யாரை முதலில் அணுகுவது என்று யோசனை செய்தனர். அந்தக் கப்பல்கள் தூர தூர தேசங்களுக்குப் போய் வருகின்றன. அவர்களிடம் சென்று, ''இங்கிருந்து இலங்கைக்குப் போகிறீரா?'' என்று கேட்டால் தப்பாக நினைத்து விடுவார்களோ என்ற பயம்.

''ஆகா, பூங்குழலி அம்மையார் மட்டும் இங்கிருந்தால் நம்மைக் கொண்டுபோய் ஈழத்தில் சேர்த்திருப்பார்'' என்றான் வந்தியத் தேவன். ஆனால், அது நடக்குமா? முதல் முதலில் வந்தியத் தேவனை இலங்கைக்கு அழைத்துச் சென்ற ஓடக்காரி இன்று சோழர் பிரதேசங்களுக்கெல்லாம் சக்கரவர்த்தினி இல்லையா?

''அவர் கை இன்று செங்கோல் ஏந்துகிறது. துடுப்பைப் பிடிக்கச் சொல்ல முடியுமா? வீணாய்ப் பொழுதைக் கழிக்காமல் யாரை யாவது சென்று கேட்கலாம்'' என்றான் அடியான்

''அரசியை விடுங்கள். குறைந்த பட்சம் உமது ராமபிரான் சேதுவை, திடமாகக் கட்டியிருந்தாலாவது நாம் நடந்தே சென்றிருக்கலாம்'' என்றான் மாறன்.



அடியான் அதற்குப் பதில் தருமுன் வந்தியத் தேவன் முந்திக் கொண்டு, ''அது கட்டியவுடன் கரையத் தொடங்கிவிட்டது. அதனால்தான் ராமபிரான் திரும்பும் போது விபீடணனிடம் கடன் கேட்டுப் புஷ்பகவிமானத்தில் வந்துவிட்டார். அவருக்கே நம்பிக்கை இல்லை, திரும்பும் போது சேது இருக்குமென்று'' என்றான்.

அடியானின் வைணவ ரத்தம் கொதித்தது. ''ஆமாம். சேது கரைந்துவிட்டது. ஆனால், அது ராமபிரான் பொறுப்பல்லவே. அதை முதலில் கட்டிவிட்டு அதில் ஆட்டம் போட்டு கொண்டே சென்ற வானரங்கள்தான் சேதுவுக்குச் சேதம் ஏற்படுத்தின'' என்றான்.

''ஆகா, அப்படியா விஷயம்? அந்த வானரங்கள் என்ன ஆயின வைணவரே?'' என்று வினவினார்கள் இருவரும்.

''அந்தச் சேட்டை செய்யும் குரங்குகள் மீண்டும் கிஷ்கிந்தைக்குச் செல்ல வில்லை. இங்கேயே இருந்து சம்புவராயராயும், வல்லவரையராயும் உரு மாறியிருக்கின்றன!'' என்று ஒரு போடு போட்டான் அடியான். அவர்கள் இருவரும் தங்கள் குலபங்கத்தைக் கண்டு கோபப்படவில்லை. இப்படித் துடுக்காக வைணவன் பதில் சொல்லவில்லையென்றால் தான் வருத்தப்பட்டிருப்பார்கள்.

அதற்குள்ளாக நடந்து வந்த அவர்கள் ஒரு பெரிய மரக்கலம் கடல் ஓரமாகக் காத்திருந்ததைக் கண்டனர். அதன் பாயைக் கொண்டு இருபது யானைகளை மூடி மறைத்துவிடலாம். அவ்வளவு பெரிய மரக்கலம். அதன் மேல் கம்பீரமாகப் பறந்தது வேங்கைச் சின்னம் பொருந்திய கொடி.

கப்பலின் உச்சிக்கு மேல் பறந்த வேங்கைக் கொடியைக் கண்டு மாறனுக்கு அந்தக் கவிதை நினைவுக்கு வந்தது. 'இப்போது வேங்கையின் காலடியில் தான் கப்பல்கள் இருக்கின்றன. இப்படிப் புலிக் கொடி பறக்கும் நாடெல்லாம் தேடுவதென்றால் அந்தக் கிரீடம் கிடைத்தது போலத்தான்' என்று மனதுக்குள் நொந்து கொண்டான்.

கப்பலின் மேல் தளத்துக்கு ஒரு பாலம் அமைப்பது போல பலகைகளை அமைத்திருந்தனர். முதுகிலும் தலையின் மேலும் பண்டங்களைச் சுமந்தபடி பல வேலையாட்கள் கப்பலில் ஏறிக் கொண்டிருந்தனர். ஒரு கணக்கர் கப்பலில் ஏற்றிக்கொண்டிருந்த பொருட்களைச் சரி பார்த்துக் கொண்டிருந்தார்.

அவரிடம் சென்று, ''ஐயா! ஈழத்துக்குச் செல்ல எங்களுக்கு ஒரு கப்பல் வேண்டும்'' என்றான் அடியான்.

அந்தக் கணக்கன் அடியானை ஏற இறங்கப் பார்த்து, "விலைக்கு வேண்டுமா? அல்லது வாடகைக்கு வேண்டுமா?" என்று அலட்சிய மாகக் கேட்டான்.

அரசர்களை விடவும் செல்வந்தர்கள் இந்த வியாபாரிகள். அதற்கு ஏற்ற செருக்கிருக்கும் அவர்களுக்கும், அவர்கள் ஊழியர் களுக்கும் என்று அடியானுக்குத் தெரியும். அதற்காக, இவ்வளவா? ஆனால், வேலை நடக்க வேண்டுமே என்று நினைத்து, அடக்கத் துடன், "விலைக்கு வாங்கி நான் என்ன செய்வேன். ஐயா? பிரயாணிக்க வேண்டும்" என்றான் அடியான்.

வைணவனுக்குப் பின்னால் நின்ற இருவரையும் பார்த்து விட்டான் கணக்கன். அவர்கள் உயர்குடியைச் சேர்ந்தவர்கள் போலிருந்தது. அதனால் அதற்கு மேல் அவன் பேச்சில் நையாண்டி இல்லாமல், "பொதுவாக எங்கள் கப்பல்களில் பிரயாணிகளை ஏற்றுவதில்லை. அதுவும் இந்தக் கப்பல் இன்று கடாரம் செல்கிறது. முதலாளியைக் கேட்டுத்தான் சொல்ல வேண்டும்" என்று ஊழியன் சமத்காரமாய் மறுமொழி கூறினான்.

"ஐயா, உமது முதலாளி எங்கே?" என்றான் வந்தியத் தேவன்.

"அந்த அறையில் இருக்கிறார்" என்று சுட்டிக்காட்டினான். சற்றுத் தூரத்தில் ஒரு மாளிகை போல இருந்த ஒரு கட்டடத்தை மூவரும் கண்டனர்.

"சரி, என்னவென்றுதான் கேட்போமே. ஒன்றும் இல்லை யென்றால் புலி இலச்சினை பொருந்திய மோதிரத்தைக் காட்டி விடுவோம்" என்றான் மாறன். பரத கண்டத்தில் பாதி இடத்தில் பரிபூரண ஒத்துழைப்பைப் பெற்றுத் தரும் அந்த இலச்சினை பொருந்திய மோதிரம். இங்கு மட்டுமல்ல, கடல் கடந்த பிரதேசங் களிலும் கூடத்தான். அதைப் பிரதமர் அவர்களிடம் கொடுத் திருந்தார். தேவையில்லாமல் பிரயோகிக்க வேண்டாமென்று இருந்தார்கள். ஆனால், கணக்கனின் திமிர் முதலாளிக்கும் நிச்சயம் இருக்குமல்லவா?

மூவருமாய் உள்ளே சென்றார்கள். முதலாளி ஒரு பாயின் மீது அமர்ந்திருந்தார். கருத்த நிறத்தில் சற்றுப் பருமனாக இருந்தார். அவர் வட்ட வடிவத் தலையின் மேல் ரோமங்கள் குறைவாகவே இருந்தன.

அடியானும் மாறனும் முதலில் உள்ளே நுழைந்தனர். அவர்களை ஏற இறங்கப் பார்த்தார் அந்த வணிகர். அவருடைய கடுமையான முகத்தைப் பார்த்தவுடன், "ஆகா, புலி இலச்சினை



மட்டும்தான் இவரிடம் உதவும் போலிருக்கிறது" என்று மாறன் முடிவு கட்டினான்.

அந்த வணிகர் ஒன்றும் பேசவில்லை. உள்ளே வருபவர் எல்லாம் வரட்டும் என்று காத்திருந்தார் போலும். வந்தியத் தேவன் அடுத்த படியாக உள்ளே சென்றவுடன் முதலாளி அவனையும் பார்த்தார். பார்த்ததுதான் தாமதம். அவர் வட்டமான முகம் பிரகாசமானது.

"வந்தியத்தேவரே, வாரும் !" என்றார்.

அவர் வயதுக்கும் பருமனுக்கும் ஏற்றாற்போலில்லை அவர் அடுத்துச் செய்தது. யௌவன வயது போலவும் மெலிவான தேகம் உடையவர் போலவும் தாவி வந்து வந்தியத் தேவனைக் கட்டி அணைத்தார். மாறனுக்கும் அடியானுக்கும் ஆச்சரியம்.

முதலில் வந்தியத் தேவனுக்கு வணிகர் யாரென்று புரிய வில்லை.

பின் அந்த கொள்ளையர் தீவில் தன்னுடன் இருந்த மெய்யப்பர் தான் இவர் என்று புரிந்து கொண்டான். தீவிலிருந்தபோது உணவுப் பற்றாக் குறையில் ஒல்லியாக இருந்தார்போலும். இப்போது மனையாள் சமைத்த உணவை உண்டு சில மாதங் களிலேயே வட்டமான வடிவில் மாறிவிட்டார்.

வந்தியத் தேவன் மெய்யப்பரின் அணைப்பிலிருந்து விடுவித்துக் கொண்டு மற்ற இருவரையும் அறிமுகப்படுத்தினான். மூவரையும் அமரவைத்து விருந்துபசாரம் செய்தார் மெய்யப்பர். ஆனால், அவர் முகம் புன்னகைப்பதை நிறுத்தவேயில்லை.

"வந்தியத்தேவரே, நீர்தான் என்னை மறந்துவிட்டீர். நான் சமயம் வாய்க்கும் போதெல்லாம் நாம் கொள்ளையர் தீவில் நடத்திய வாழ்க்கையைப் பற்றி நினைப்பேன்." என்று சொல்லி விட்டு மெய்யப்பர், முகத்தை சுளித்துக்கொண்டே பெருமூச்சு விட்டார். "அதற்கு அப்புறம் இந்த வாழ்க்கை சுவையற்றுப் போனது" என்றார்.

"அதெல்லாம் இருக்கட்டும். இராமேஸ்வரத்தில் என்ன செய்கிறீர்? குடும்பம் எங்கே?" என்றான் வந்தியத் தேவன்.

"அப்பனே! எங்கள் குடும்பம் இருப்பது இந்தப் பக்கங்களில் தான். ஹனுமன் ராமபிரானிடம் 'கண்டேன் தேவியை' என்று சொன்னாரல்லவா? அதனருகே சிறிய கிராமம். தேவர்கோட்டை என்று அழைப்பர். நாங்கள் பாண்டிய நாட்டுக்கு வந்து பலவாண்டு களாயின. தொண்டியிலும் இராமேஸ்வரத்திலும் தான் தொழி லெல்லாம்" என்று விளக்கினார்.

பிறகு, ''நீங்கள் முதலில் களைப்பாறுங்கள். நாளை நான் ஆளை அனுப்புகிறேன். உமக்கு வழி காட்டுவார்கள். இந்தத் தீவில் உள்ள அறுபத்து நான்கு தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து கொள்ளுங்கள்'' என்றார். ''இராமரின் பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்கிய ஸ்தலம் அல்லவா இது?''

''மெய்யப்பரே! நாங்கள் க்ஷேத்ராடனம் வரவில்லை'' என்றான் வந்தியத் தேவன்.

''இவரைப் பார்த்தவுடன் அதற்குத்தான் வந்தீரோ என்று நினைத்தேன்'' என்றார் மெய்யப்பர் அடியானை ஏற இறங்கப் பார்த்துக்கொண்டே.

''நாங்கள் இலங்கைக்குச் செல்ல வேண்டும்'' என்றான் வந்தியத் தேவன். அதிர்ஷ்ட தேவதை மறுபடியும் தன் பக்கம் வந்திருப்பதாக எண்ணி உற்சாகம் அடைந்தான். எப்படியாவது ஒரு சிறிய கப்பலில் மூவரையும் ஓரிரு வாரங்களில் ஏற்றிவிடுவார் மெய்யப்பர். கொள்ளையர் தீவில் ஒதுங்கும் முன் கடலில் மிதந்தது அவன் மனதில் இன்னும் ஆழமாய் இருந்தது. அதனால் திடமான கப்பலில் தான் சேதுவைக் கடக்க வேண்டும் என்று தீர்மானித்திருந்தான்.

''ஆகா, அப்படியா? உமக்கு நான் என்ன செய்யவேண்டும்? சொல்லுங்கள்'' என்றார் மெய்யப்பர்.

''இலங்கைக்குச் செல்லும் கப்பல் ஏதேனும் உம்மிடம் இருந்தால் நாங்கள் அதில் சென்று விடுகிறோம்'' என்றான் வந்தியத் தேவன்.

''அப்படியா...?'' என்று யோசித்தார் மெய்யப்பர்.

மூவரும் மெய்யப்பரையே உற்றுப் பார்த்து, ''இதற்கு என்ன மறுமொழி சொல்லப்போகிறார் என்று ஆவலுடன் காத்திருந்தனர். வணிகர் சற்று ஆழ்ந்து யோசிப்பதாகத் தெரிந்தது.

''உடனேயென்றால் கொஞ்சம் கஷ்டம்!'' என்றார்

வந்தியத் தேவன், ''உமக்குச் சிரமம் கொடுக்க விரும்பவில்லை'' என்றான். ''எப்போது கிடைக்கும்?''

''எனக்குச் சிரமம் ஒன்றும் இல்லை, வந்தியத் தேவரே. இரண்டு நாழிகை நேரம் பொறுத்தால் தயார் செய்துவிடுகிறேன்'' என்றார் மெய்யப்பர்.

வந்தியத் தேவன் சிரித்தான், ''நாங்கள் ஓரிரு வாரங்கள் கூடக் காத்திருக்கத் தயார்.''



மெய்யப்பர் கணக்கனை அழைத்தார். ஏதோ சொன்னார் அவன் காதோரமாக. கணக்கன் சென்று பெரிய படகு ஒன்றுக்கு ஏற்பாடு செய்வான் என்று எதிர்பார்த்தனர் மூவரும்.

உடனே ஒன்றும் மறுமொழி பேசாமல் அவனும் வெளியே சென்றான். கதவருகே அமர்ந்திருந்த அடியான் ஓரக்கண்ணால் வெளியே நடப்பதை கவனித்தான். சற்று நேரத்துக்கு முன் ஒரு ராட்சத கப்பலில் பொருட்களை ஏற்றிய மாலுமிகள் இப்போது அவற்றையெல்லாம் கீழே இறக்கத் தொடங்கிவிட்டனர்.

''அரை நாழிகை நேரத்தில் நீர் புறப்படலாம், வந்தியத்தேவரே'' என்று சொன்ன மெய்யப்பர் குறும்புப் பார்வையுடன், ''உமக்கு கப்பல் கொடுக்கவில்லையென்றால் என் குலத்துக்கு மகத்தான பாவம் சம்பவிக்கும்'' என்றார்.

''ஏன் ஐயா அப்படி?'' என்று மாறன் வினவினான். அப்படி இவர் வந்தியத்தேவனிடம் என்ன கடன்பட்டிருக்கப் போகிறார் என்று அவனுக்கு அறிய ஆவல்.

''இவரை முதல் முறை பார்த்தபோது நான்....'' என்று ஆரம்பித்தார் மெய்யப்பர்.

அதற்குள்ளாக வந்தியத் தேவன் கையெடுத்து அவரை கும்பிட்டு, ''ஐயா, அதை மட்டும் சொல்லவேண்டாம். வேண்டுமென்றால் நான் நீந்தியே கடலைக் கடக்கிறேன்'' என்றான்.

ஆனால் மெய்யப்பரும் விடுவதாக இல்லை. ''தப்பாக ஒன்றும் கேட்கவில்லை. 'உமக்கு என்ன வந்தியத் தேவர் என்று நினைப்பா?' என்று இவரிடமே கேட்டு விட்டேன்'' என்று சொல்லி மெய்யப்பர் சிரித்தார். தன் வாழ்க்கையில் மிக ஆச்சரியமான அனுபவங்கள் நேர்ந்து கொண்டிருந்த சமயத்தில் இந்த வந்தியத்தேவர் அருகிலிருந்தார் என்பது அவர் மனதில் பதிந்திருந்து.

பின் பேச்சை மாற்றி ''வந்தியத் தேவரே! என்னிடம் சொல்லாமல் போருக்குப் புறப்படவில்லையே?'' என்றார்.

வந்தியத் தேவன் என்ன சொல்வதென்று தெரியாமல் விழித்தான். செல்வது எப்பேர்ப்பட்ட வேலையென்று அவனுக்கே தெரியவில்லை.

அவன் தயக்கத்தைக் கண்டு, ''ஆனால், ஒன்று மனதில் இருக்கட்டும் வந்தியத் தேவரே. பொன்னியின் செல்வர் செய்த சத்தியத்தை நீரும் மறந்து விடக்கூடாது. பொன்னியின் செல்வர் செய்து கொடுத்த சத்தியத்தை நீர் மீறினால் அதை நான் ஒரு

கணமும் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது!'' என்றார் சற்று ஆவேசத்துடன்.

வந்தியத் தேவனே ஏற்கெனவே அந்தச் சத்தியத்தை மறந்து விட்டான் ''அது என்ன சத்தியம்?'' என்றான்.

''அடுத்த போருக்கு என்னையும் அழைத்துச் செல்கிறேன் என்றாரே, மறந்து விட்டீரா?''

வந்தியத் தேவன் சிரித்து விட்டான்.

ஆயிரம் பேரை எதிர்த்து நின்று போர் வாளைப் பிடிக்கும் போது கை சிறிதும் நடுக்கமுறாமலும் தளராமலும் இருக்கும் வண்ணம் நெஞ்சுறுதியை வெளிக் காட்டியவர் இந்த மெய்யப்பர். ஆனால், விளையாட்டாய்ப் பொன்னியின் செல்வர் செய்த சத்தியத்தை இன்னும் நம்பி இருக்கிறாரா இவர்?

''அதெப்படி, மெய்யப்பரே! இந்த உடலை வைத்து கொண்டா?'' மெய்யப்பர் உடனே அடியானுடைய பருமனான உடலை சந்தேகக் கண்ணுடன் நோட்டம் விட்டார்.

உடனே வந்தியத் தேவன், ''இவர் போருக்கு வரவில்லை. சும்மா எங்களுடன் வந்து பெருமான் அழித்த இலங்கையை ஒரு முறை பார்க்க வேண்டும் என விருப்பப்படுகிறார்'' என்றான். அடியான் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன.

சற்று நேரத்துக்கெல்லாம் முக்கால் வாசி நிறைந்திருந்த கப்பல் காலி செய்யப் பட்டிருந்தது. மூவரையும் கப்பலில் ஏற்றிவிட்டு மெய்யப்பர், ''உமக்கு உதவியாய் ஒருவனையும் அனுப்புகிறேன். இறங்கியதும் உமக்கு உதவியாய் இருப்பான்.'' அவர் கை உயர்ந்ததும் ஒருவன் முன் வந்து தலை வணங்கினான்.

அனைவரும் கப்பலின் மேல் ஏறியவுடன் பாலம் போல் இருந்த பலகைகள் விலக்கப்பட்டன. ''ஐலேசா, ஐலேசா'' என்று கத்தி கொண்டு பாயை விரித்துக் கட்டினர் மாலுமிகள். கப்பலை ஏதோ ஒரு பிரம்மாண்டமான சக்தி உந்தித் தள்ளுவது போன்ற உணர்வு ஏற்பட்டது. கப்பல் கரையிலிருந்து நகர்ந்தது. மெய்யப்பர் கரையி லிருந்து கையசைத்தார்.

இவ்வளவு நேரம் நடந்தவையெல்லாம் ஒரு பிரமை போல இருந்தது மாறனுக்கு. கப்பல் நகர்ந்ததும் அதிலிருந்து விடுபட்டான். ''அதெல்லாம் இருக்கட்டும். இவ்வளவு பெரிய மரக்கலத்தில் நாம் மூவர் மட்டும்தான் பிரயாணிகள் என்ற செய்தி நாம் இறங்கும் மாதோட்டத்தில் ஒரு ஆச்சரியத்தை உருவாக்குமே'' என்றான்.



அரசாங்கக் கப்பலில் வரக் கூடாது என்று எண்ணியதே அஞ்சா நெஞ்சம் படைத்த வீரர்கள் இவர்களென்று பார்த்தவுடனே தெரிந்துவிடும் என்பதற்காகத்தான். பிறகு பகைவனுக்குச் செய்தி போய்விடும். பின் சிங்களவனும் சரி, தங்களைக் கண்காணித்து வந்த பாண்டியனும் சரி, தயார் நிலையில் இருப்பார்கள்.

அடியானுக்கு வேறு வகையில் கோபம். ''நாம் இலங்கைக்குச் செல்வது யாருக்கும் தெரியக் கூடாதென்று அமைதியாய் வந்தோம். இராமேஸ்வரத் தீவில் எங்கெங்கும் மொய்த்துக் கொண்டிருந்த வீர சைவ பட்டர்கள் எண்ணிக்கை எவ்வளவு தெரியுமா? என் வாழ்நாள் முழுவதும் ஆனந்தமாய் அவர்களுடன் சண்டையிட்டுக் கொண்டிருக்கலாம். பேசாமல் வந்தேன். ஏன்? காரியத்துக்குக் குந்தகம் வரக்கூடாதென்றுதான்'' என்றான் அடியான். வைணவ ஆர்வம் நிறைந்த மனதைக் கட்டுப்படுத்திக் கொண்டு சண்டைகளைத் தவிர்த்துவிட்டான் அவன். அடியானைப் பற்றித் தெரிந்தவர்களுக்குத் தெரியும், அது பெரிய தியாகம்தான் என்று.

''நான் என்ன செய்வது. நட்பினால் வரும் கஷ்டங்களை அனுபவித்துத்தான் ஆக வேண்டும். இப்போது உம்மையும் உமது சேஷ்டைகளையும் நாங்கள் பொறுத்துக்கொள்ளவில்லையா?'' முறைத்த அடியானை நோக்கி வந்தியத் தேவன் விளக்கினான்.

''மெய்யப்பர் பார்க்கத்தான் பருமனாக இருக்கிறார். அந்தக் கொள்ளையர் தீவில் அவர் வெளிக்காட்டிய போர்வீரம் இன்னும் அவரிடம் குறையவில்லை. பத்துக் கொள்ளையரைத் தன் கையா லேயே கொன்றிருக்கிறார்'' என்று பேச்சுக்குச் சொல்லி வைத்தான்.

அடியான் எச்சிலை விழுங்கினான். 'ஆகா அந்த சாந்த ஸ்வரூப மான வணிகன் அவ்வளவு பெரிய வீரனா?' என்று நினைத்து மௌனம் காத்தான்.

அலைகள் ஒன்றோடொன்று உராய்ந்து ''ஹம்ம்ம்ம்'' என்ற சத்தத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தன. அந்தச் சுருதிக்கிணங்கக் காற்றும் விரித்திருந்த பாயுடன் மோதி ''படக் படக்'' என்ற தாள சப்தத்தை உருவாக்கியது.

''பிரதமரது மனோரதந்தான் நிறைவேறப் போகிறதே. நாமும் இலங்கைக்குச் சென்று கிரீடத்தைக் கைப்பற்றப் போகிறோம்'' என்றான் மாறன்.

''அது அவ்வளவு சுலபம் இல்லை. கந்தமாறவேளே! நீர் இலங்கைக்குச் சென்றதில்லை என நினைகிறேன். உமது கடம்பூர்

நாட்டை விடப் பத்து மடங்கு பெரிது அது. அதுவும் எங்கும் அடர்த்தியான காடு'' என்று பயமுறுத்தினான் வந்தியத் தேவன்.

''இதில் அந்தக் கிரீடத்தைக் கண்டுபிடிப்பதென்பது கஷ்டத்திலும் கஷ்டம்!'' என்று ஒத்து ஊதினான் அடியான்.

''எது எப்படியிருந்தாலும், இது போல் அனுபவம் எனக்கு இதுவரை ஏற்பட்டதில்லை'' என்று உரக்கச் சொன்னான் மாறன்.

அனுபவங்களில் முதலானது இவ்வளவு பெரும் மரக்கலத்தில் மூவர் மட்டும் பிரயாணித்ததுதான். வந்தியத் தேவனிடம் எவ்வளவு ஆழ்ந்த அன்பிருந்தால் இப்படிச் செய்வார் மெய்யப்பர்? ஒரு நொடி மாறனுக்கு பொறாமையே வந்தது. தான் வந்தியத் தேவனிடமிருந்து ஒதுங்கிய காலங்களில் அவனுக்கு எவ்வளவு நண்பர்கள் வந்துவிட்டார்கள். இந்த ஆழ்வார்க்கடியான், மெய்யப்பர் போன்ற பொது மக்களில் தொடங்கி அரசர்க்கு அரசர்களான பொன்னியின் செல்வரும், உத்தம சோழரும் கூட அந்தப் பட்டியலில் இடம் பெற்றிருந்தார்கள்.

ஆனால், இன்று மீண்டும் அவன் வந்தியத் தேவனுடன் அரச சேவைக்குச் செல்லும் முதல் காரியம் இது. வெற்றி எனும் பெண்ணின் கையைப் பிடித்துப் பார்க்க வேண்டுமென்று அவனுடைய தேகத்தின் ஒவ்வொரு அணுவும் துடித்தது. நயவஞ்சகக்காரி அந்த வெற்றிப் பெண். ஆசை வார்த்தை காட்டி அழைத்துச் சென்று தோல்வியெனும் பாதாளத்தில் தள்ளிவிட்டாலும் தள்ளிவிடுவாள். ஆனால், இந்தப் பாழாய்ப் போன வீரனின் மனம் மீண்டும் மீண்டும் அவள் கைப்பிடிக்கவே தூண்டுகிறது.

மெய்யப்பரின் சிநேகம் இப்படிப் பேருதவியாயிருக்கும் என்று யாரும் நினைக்கவில்லை. இவ்வளவு பெரிய மரக்கலத்தை நம் மூவருக்காக மட்டும் விட்டு இருக்கிறாரே என்று மூவரும் நினைத்தபடி பயணித்தனர். அதே கப்பலில் உட்புறத்தில் மறைவில் நான்காவது மனிதன் ஒருவன் பதுங்கியிருந்தது மேலிருப்பவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை.

அவர்களுக்குத் தெரியாமல் ஒரு பிரயாணி அவர்களின் காலுக்கடியில் ஒளிந்திருந்தான். கப்பலிலிருந்து பொருட்களை அவசர அவசரமாக இறக்குவதை கவனித்தவன் ஒரு துணியை வைத்து முகத்தை நன்றாய் மூடிக் கொண்டு வேலையாள் போல கப்பலில் ஏறினான். யாரும் அவனைக் கவனிக்கவில்லை. கீழ்த்தளத்தில் மறைவான இடத்தில் சென்று ஒளிந்து கொண்டான்.



அவனது பார்வை இந்த மூவரின் மேல் தொடர்ந்து இருக்க வேண்டும் என்று முடிவு செய்து விட்டதால், ஈழத்துக்கு அவர்களுடைய நிழல் போலத் தொடர்ந்தான்.

❖ ❖ ❖

## அத்தியாயம் எழுபத்து நான்கு
## 'மரக்கலம் காத்திருக்கும்!'

கப்பல் இலங்கையை நோக்கிப் பறந்தது- கடலைக் கிழித்துக் கொண்டு. கப்பலில் மாலுமிகளைத் தவிர மூன்றே பேர்தான் பிரயாணித்தார்கள். அதாவது கீழ்த் தளத்தில் ஒளிந்து கொண்டிருப்பவனைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாவிடில்!

அலை மேல் அலை வந்து கப்பலின் மீது மோதியது. எப்போதும் கடலில் நுரையில்லாத அலைகள் எழுந்து விழுந்து கொண்டு தானிருந்தன. அவை கப்பலின் மேல் மோதினால்தான் வெண்ணிற நுரை தெரியும். அலைகளைப் பார்த்தபோது மூவருக்கும் வெவ்வேறு எண்ணங்கள் தோன்றின.

அடியானுக்குப் பாற்கடல் நடுவில் அறிதுயில் புரிந்து சகல புவனங்களையும் காக்கும் நீல நிறம் கொண்ட பெருமாளை நினைவு படுத்தியது.

வந்தியத் தேவனுக்கோ கப்பலில் கொள்ளையர் மோதிக் கடலில் கைகடுக்க மிதந்த நினைவுதான் வந்தது.

மாறனுக்குக் கேட்கவே வேண்டாம். காதலியின் கண்ணின் நீலத்தை நினைவு படுத்தியது.

மேலைக்காற்று விர்ரென்று வீச, சுகமாகவும் இருந்தது. அதுவே கப்பலையும் செலுத்தியது. என்ன ஒரு கண்டுபிடிப்பு இந்தப் பாய்மரம்! அது இல்லையென்றால் கடலில் கப்பல் அதே இடத்தில் தான் இருக்க வேண்டும். இல்லை, இவ்வளவு பெரிய படகைத் துடுப்புப் போட்டுத் தள்ள ஒரு நூறு பேராவது வேண்டும். ரோமானிய நாட்டிலும், யவன நாட்டிலும் அடிமைகளைக் கொண்டு அப்படிக் கப்பல்களைச் செலுத்துவார்களாம். ஆனால், இந்தப் பாயை விரித்தால் வாயுபகவானே அந்த நூறு அடிமைகளின் வேலையைத் தனியொருவனாகச் செய்வார்.

அமைதியான கடல் லேசாக மேலும் கீழுமாய்க் கப்பலைத் தாலாட்டியது. முதல் முறையாகக் கப்பல் பிரயாணம் மேற் கொண்ட கந்த மாறனுக்கு அந்த ஆட்டம் பிடித்திருந்தது. "ஆகா, எவ்வளவு இதமாக இருக்கிறது. அன்னை என்னைத் தொட்டிலி லிட்டுத் தாலாட்டுப் பாடியது கூட ஞாபகம் வருகிறது" என்றான்

"இன்னும் ஓரிரு மாதங்களுக்குப்பின் கப்பலில் ஏறுங்கள். அப்போது உம் அன்னையின் வயிற்றில் கருவாய் இருந்தது கூட ஞாபகம் வரும்" என்றான் அடியான்.

"ஏன் அப்படி?" மாறன் நம்பாமல் கேட்டான் "இதைக் காட்டிலும் கடல் அதிகம் கொந்தளிக்குமா என்ன?"

"ஐப்பசி, கார்த்திகையில் வாடைக் காற்று அடிக்கும் போது கடலைக் கடந்தால் தெரியும் உனக்கு. மாரிக் காலத்தின் தொடக் கத்தில் திடீர் திடீரென வானத்தை மேகங்கள் படையெடுக்கும். வட்டம் வட்டமாக வானத்தில் கரு நிறச் சக்கரம் போலச் சுற்றும். கப்பலைக், கடலுக்கும் வானுக்கும் இடையே பந்தாய்த் தூக்கிப் போட்டு விளையாடும் இந்த அலைகள். உம்மை அப்போது அழைத்து வந்திருக்க வேண்டும். பாதி நேரம்தான் நீரின் மேல் கப்பல் மிதக்கும். மீதி நேரமெல்லாம் புஷ்பக விமானத்தின் மேல் ஏறிச் செல்வது போலிருக்கும்" என்றான் அடியான். புஷ்பக விமானத்தைப் பற்றி இரண்டாவது நாளாகப் பேச்சு வந்திருந்தது.

"வைணவரே, ஒன்று பார்த்திரா? என்னவொரு ஒற்றுமை. புஷ்பக விமானம் இதே கடலைக்கானே கடந்தது. ராமபிரானைச் சுமந்து கொண்டு" என்றான் வந்தியத் தேவன்.

தலையசைத்தான் அடியான். "ஆமாம். முதல்முதலில் ராவணன் தான் அதை வைத்திருந்தான். அதை வைத்துதான் சீதா பிராட்டி யைக் கடத்தவும் செய்தான். ராவணனின் முடிவுக்குப் பின், அதை அவன் தம்பி விபீடணன்தான் ராமபிரானுக்குக் கொடுத்துப் பரத கண்டத்துக்குச் செல்லுங்கள்" என்றான்.

"புஷ்பக விமானமா? அது மட்டும் இருந்தால் நாம் உடனே சென்று இலங்கையில் இறங்கியிருக்கலாம்" என்ற மாறன், அக்கணமே சென்று இலங்கையில் இறங்கி மணி மகுடத்தைத் தேட எண்ணினான். பிரயாணத்தில் செலவிடும் நேரம் வீண் என்று நினைத்தான் எனத் தெரிந்தது. "இஷ்டம் போல் எல்லையற்ற வானத்தில் பறந்து செல்ல ஒரு புஷ்பக விமானம் இருந்தால்...." என்று கற்பனை செய்தான் மாறன். பின் அவனுக்கே சந்தேகங்கள் எழுந்தன. "மனிதனால் பறவை போலப், பறக்க முடியுமா என்ன?



அது எல்லாம் கட்டுக் கதையா? மனிதனால் பறக்கும் இயந்திரம் ஒன்றைக் கண்டுபிடிக்க முடியுமா?" என்று கேட்டான்.

வந்தியத் தேவன் உடனே, "ஏன் முடியாது? இயற்கையைத் தனக்குச் சாதுர்யமாகப் பயன்படுத்திக்கொள்ள மனிதனுக்குத் தெரியும். இப்போது இந்த கடல் பாரதத்தையும் இலங்கையையும் பிரிக்கிறது என்றுதானே நினைப்பாய். ஆனால், அது இப்போது இந்தக் கப்பலுக்குப் பாதையாய் அமைந்து இந்த இரண்டு நிலப் பரப்புகளையும் இணைக்கவில்லையா? அதுபோல என்றாவது வானத்தையும் அடிமையாக்குவான் மனிதன்!" என்றான்.

"வல்லா, அப்படிக் கண்டு பிடித்தால் முதலில் நமது போர் முறையே மாறிவிடும். கோட்டையை முற்றுகையிடாமல் மேலே சென்று தீப் பிழம்புகளைக் கீழே போடலாம். நமது வாளுக்கும் வேலுக்கும் உபயோகமே இல்லாமல் போய்விடும்" என்றான் மாறன்.

தூரத்திலே திட்டுத் திட்டாகத் தோன்றிய பல தீவுகளை யெல்லாம் கடந்து கப்பல் சென்றது. அவற்றில் பலவும் மனித சஞ்சாரமே இல்லாதவையாக இருந்தன. கால்களைக் கப்பலின் பக்கத்தில் சிறுபிள்ளைகள் போலத் தொங்கவிட்டு அவற்றை அடியானும் மாறனும் வேடிக்கை பார்த்தபடி சென்றனர். அடியானது முன் குடுமி கடல்மேல் அடிக்கும் காற்றில் பறந்து கொண்டிருந்தது.

வந்தியத் தேவன் மட்டும் சற்று அப்பால் நின்றுகொண்டு இருந்தான். ஏன் என்று கேட்டதற்கு, தான் சமீபத்தில் கடலில் விழுந்ததையும் நீந்தி நீந்திக் கை களைத்து மூழ்கினால் கூடப் பரவாயில்லை என்று நினைத்ததையும் சொன்னான். தேகம் முழுதும் தண்ணீர் சொட்டச் சொட்ட எலும்புகூடுகள் நிறைந்த கடற்கரையில் சென்று விழுந்ததையும் சொன்னான்.

"அங்கு நான் சந்தித்த மெய்யப்பரே இன்று இந்தக் கப்பலில் நமக்கு பிரயாண ஏற்பாடு செய்திருக்கிறார். சோழர் ராஜ வம்சத் தில் தோன்றிய பல மன்னர்கள் தங்கள் வீரதீர பராக்கிரமங் களினால் பெயர் பெற்றனர். ஆனால், சாம்ராஜ்யத்தின் புகழ் கடல்களுக்கு அப்பாலும் பரவியிருக்கிறதென்றால் அது இந்தப் பாய்மரக் கப்பல்களினால்தான். இவ்வளவு தூரம் கடல் கடந்து வாணிபம் செய்ய வணிகருக்கே துணிவிருந்தால், அவர்கள் நாட்டுச் சேனையின் வீரத்தைப் பற்றிக் கேட்கவே வேண்டாம் என்று அச்சம் கொள்வார்கள் வெளிநாட்டவர். சோழ அரசனின் மேல்

அவர்களுக்கு உள்ள மதிப்பு பன் மடங்கு அதிகரிக்கும்'' என்றான் வந்தியத் தேவன்.

''ஆமாம்'' என்று ஒப்புக்கொண்டான் மாறன். ''அதுவே பிற் காலத்தில் நமக்கு நட்புக்கரம் நீட்ட ஏதேனும் அரசன் அங்கிருந்து வருவான்.''

''ஹா ஹா'' என்று சிரித்துவிட்டு, ''அதற்குப் பின் அங்கு காலூன்றி நாம் ஆட்சியைப் பிடிப்போம்'' என்றான் வந்தியத் தேவன்.

பின் ஒரு நொடி யோசித்துவிட்டு, ''அப்படித்தானே நாமெல் லாம் நாட்டை இழந்தோம். நமது நாடுகளையும் சோழர் சாம்ராஜ் யத்தில் சேர்த்துக் கொண்டு பரிபாலிக்கும்படி சோழச் சக்கரவர்த்தி யிடம் விட்டு விட்டோம். சோழரின் கீழ்ச் சிற்றரசனாயிருக்கச் சம்மதிக்கும்படி செய்து விட்டது விதி. ஆனால், ஒன்று, குறுநில மன்னர்கள் மனத்தை விரக்தி மார்க்கத்தில் செலுத்தி வேடிக்கை பார்க்காமல் தங்கள் நாட்டிலேயே முக்கியமான வேலைகளைக் கொடுத்துக் கௌரவித்தனர் இந்தச் சோழர்கள்'' என்றான் வந்தியத் தேவன்.

''மாப்பிள்ளை பதவியைக் கூடத்தான் கொடுத்திருக்கிறார்கள்!'' என்று அடியான் சொல்ல, மூவரும் சிரித்தனர்.

அதற்குப் பிறகு அடியானும் மாறனும் மௌனமாக இருந் தார்கள். வந்தியத் தேவன் அன்று பொன்னியின் செல்வருடைய அந்தரங்கத்துக்குரிய தோழனாக இருந்தவன். இன்று தமக்கையின் கணவன் வேறு. அவன் பேசலாம். நாம் பேசினால் கொலை காரர்களையும், சதிகாரர்களையும் அடைக்கும் பாதாளச் சிறைக் குக் கொண்டு போய்விடுவர்கள் என்று அவர்களுக்குத் தெரியும்.

எனினும் வந்தியத் தேவனும் அப்படிப் பேசக் கூடாது என்று மாறன் நினைத்தான். ''வல்லா, நீ சோழர் விட்டு மாப்பிள்ளை என்பதால் இந்தப் பேச்சை நகைச்சுவையுடன் கேட்பவர் எடுத்துக் கொள்வார்கள். இல்லையேல் விபரீதமாகிவிடும். நீ இன்னும் மாறவில்லையா? கல்யாணம் ஆகியும்?'' என்றான்.

''ஒரு பெண்ணால் ஒரு ஆணின் குணாதிசயங்களை மாற்ற முடியும் என்று நினைக்கிறாயா, மாறா?'' இந்த முறை கேள்விக் கணையை தொடுத்தவன் வந்தியத் தேவன். அதைக் கேட்டுவிட்டு, ''அப்படி மாற்ற முடிந்தாலும் இந்த வைணவனுக்கு அந்த வாய்ப் பில்லை'' என்றான்.

அந்த நகைச்சுவைக்குச் சிரித்துவிட்டு என்ன சொல்வது என்று யோசித்தான் மாறன். அந்த லோகாவைப் பார்த்ததிலிருந்து



அவனுக்கு நல்ல விஷயங்களே நடந்து வருகின்றன. பெரிய ஆட் களுடன் தொடர்பு, பழைய நட்புகளைப் புதுப்பித்தல் போன்று. அது அந்தப் பெண் தன்னை மாற்றியதனால் ஏற்பட்டதா? இல்லை, நல்ல வேலை ஒன்று வந்தவுடன் காதலுடன் இதர விஷயங்களும் சேர்ந்து வருகின்றவா?

சற்று அதிகமாக யோசித்திருப்பான் போல. பதில் கிடைக்காத வந்தியத் தேவன், ''என்ன இளம் சம்புவுராயரே! உம் முகத்தைப் பார்த்தால் ஏதோ சிக்கலில் மாட்டியிருப்பது போல் தோன்று கிறதே!'' என்று கேலிசெய்தான்.

''அதெல்லாம் ஒன்றும் இல்லை'' என்று மாறன் அவசரமாகச் சமாளித்தான்.

''ஏதோ இருக்கிறது. ஆனால், அதை நீ நாம் செல்லும் வேலை வெற்றி பெற்றவுடன் என்னிடம் சொல்'' என்றான் வந்தியத் தேவன்.

அடியான் மௌனமாக இருந்தான். அவனுக்கு நன்றாய்ப் புரிந்தது மாறன், தன் வலிமையை நிரூபிக்கப் பல காரணங்களில் அந்தப் பழுவூர்ப் பெண்ணும் ஒன்றென்று.

மாறன் மறுமொழி ஒன்றும் சொல்லவில்லை. அவனது நினைவுகள் லோகாவிடம் சென்று விட்டன

பின் அடியானை நோக்கிக் கேலி செய்யத் தொடங்கினான், வந்தியத் தேவன். '' சொல்லுங்கள் வைணவரே. பெண்ணின் பாசத்தைக் காட்டிலும் இன்பம் வேறு உண்டா?'' என்றான். ''அதனால்தானே உமது மாயக்கண்ணனுக்கு மூன்றும், எனது சிவபெருமானுக்கு இரண்டும் உள்ளன?''

அடியான் முகம் சிவந்தது. அவனுக்குக் கோபம் ஏற்றவே வந்தியத்தேவன் அதைச் சொல்கிறான் என்றறிந்தான். தனக்கு வரப் போகும் கடுங் கோபத்தைக் கண்டு ஆனந்தம் அடையலாம் என்று பார்க்கிறான்

''வல்லவராயா, பெண்ணின் மீது ஆசை உள்ளத்தின் ஒரு மூலை யில் கிடந்தால் தப்பில்லை. அதுவே ஒரு சமயத்தில் பூதாகரமாகப் பெருகி இதயத்திலிருந்து வீரம், விவேகம், மற்றும் விவஸ்தை எல்லாவற்றையும் விரட்டி விட்டால்தான் தவறு.''

''நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லையே? ஸ்திரீ பிரேமைக்கும் வீரத்துக்கும் என்ன சம்பந்தம்?'' என்று வியப்புடன் கேட்டான் மாறன்.

''பெண்ணே கதியென்று வீட்டில் உட்கார்ந்து நாட்டை இழந்த அரசர்களைப் பற்றி நீர் கேள்விப் பட்டதில்லையா? மூன்று மனைவியர் வைத்திருக்கும் கண்ணன் கடவுள். நீரோ அற்பாயுள் படைத்த மனிதன். அவனுடன் போட்டி போட முடியுமா?'' என்றான்.

''சரி. அழகை மதிக்க வேண்டாமா?'' என்றான் வல்லவராயன்.

''புற அழகை யாரும் மதியாதீர் என்று நான் சொல்லவில்லை. அதுவே கதியெனக் கிடக்காதீர் என்றுதான் சொல்கிறேன்'' என்று விளக்கம் அளித்தான் அடியான்.

இந்த விவாதம் வெகு நேரம் நடந்தது. இரவு உணவருந்தும் போது கூட. பேசிக் கொண்டிருக்கும்போதே கண்ணிமைகள் மூடிக் கொண்டன. நீண்ட வழிப் பிரயாணத்தினால் களைப் படைந்திருந்தார்கள். கடலும் தாலாட்டியது. அதனால் நன்றகவே உறங்கிவிட்டார்கள்.

மூவரும் ஒரே நேரத்தில் எழுந்தார்கள். காரணம் கப்பலின் மாலுமிகள். அவர்கள் நிலத்தைப் பார்த்த பின் தங்களுடைய குதூகலத்தைப் பலவிதக் கோஷங்களினால் வெளியிட்டனர். கடலிலேயே வாழும் இவர்களுக்கு அது பழக்க தோஷம் போல .

அந்தச் சப்தத்தில் மூவரும் எழுந்து பார்த்தால் கீழ்த் திசையில் சிவந்த பந்து போலச் சூரியன் நீல நிறக் கடலில் பாதி முழுகியபடி மிதந்து கொண்டிருந்தான். எழுந்த மூவருக்கும் அந்த வெளிச்சத்தில் இலங்கைத் தீவு தன் திவ்ய தரிசனத்தைக் காட்டியது. நீல நிறக் கடலிலிருந்து திடீரெனப் பச்சை நிற மலைகள் எழுந்து நிற்கும் காட்சியைக் காண்பதற்கு ஆயிரம் கண்கள் வேண்டும்.

எல்லாரிலும் அதிகமாகத் திகைத்துப் போனது மாறன்தான். வைத்த கண்ணைச் சிமிட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான் மாறன். அந்தத் தீவின் தோற்றம் அவன் உள்ளத்தை அவ்வளவு வசீகரித்திருந்தது. ஏற்கெனவே இலங்கைக்குப் பிரயாணம் செய் திருந்த மற்ற இருவருமே கூடத் திகைத்துப் போய்த் தீவு தெரிந்த திசையை நோக்கினார்கள். தயார் நிலையில் தனது கைத்தடியைக் கக்கத்தில் வைத்துக் கொண்டு அடியானும், பார்த்தான். அவர்கள் மட்டுமல்ல, கப்பலின் கீழ்மட்டத்திலிருந்த ஒருவனும் கூடப் பலகைகளின் இடுக்கின்வழி தீவு கொஞ்சம் கொஞ்சமாகப் பெரியதாவதை பார்த்தான்.

இலங்கையைப் பார்த்தவர்களுக்கு ஒரு கடலுக்கு அப்பால் எவ்வளவு மாற்றம் என்ற வியப்பு வரும். உலகம் எவ்வளவோ விஸ்தாரமானது. அதில் ஒவ்வொரு இடமும் எவ்வளவு வித்தியாச



மானது என்றும் தெரியும்.அந்த அளவுக்கு இலங்கையை எத்தனை முறை பார்த்தாலும் அதிசயமாய்த்தானிருக்கும். அப்படி ''உலகில் உள்ள எல்லா வளமையும் ஒரு தீவிலா?'' என்று எண்ணும் வண்ணம் கடவுள் படைத்தான் இந்தத் தீவை.

கப்பல் கரையை நெருங்கியவுடன் மாலுமிகள் குரங்கு போல் கொடி மரத்தில் ஏறிப், பாயை அவிழ்த்து விட்டனர். வாயு பகவான் தன் ஆதரவை விலக்கிக் கொண்டவுடன் கப்பல் டீரென நின்றது. ஆனால், கரைக்கு வெகு அருகில் சென்றுதான் நின்றது. மாலுமிகள் பாய்ந்தோடி வந்து பிரயாணிகள் இறங்கப் பலகைகளைக் கொண்டு பாலம் போல் அமைத்தனர்.

பாலத்தின் மீதேறிக் கப்பலிலிருந்து இறங்கும் முன் மாலுமி களில் இருவர் தாவிக்குதித்துக் கீழே ஓடினார்கள். நீரில் விழுந்து நனைந்ததைப் பற்றிக் கூடக் கவலைப் படாமல் நிலத்தில் ஓடி மாதோட்ட நகரில் இருந்த கட்டங்களுக்குள் மறைந்தான் ஒருவன்.

மாறன் கேட்டான்: ''இவர்களுக்கு என்ன பித்தா? அப்படி யென்ன அவசரம். எப்படியும் கப்பல் அங்கு தானே செல்கிறது.''

ஆனால், வந்தியத் தேவன் புன்னகைத்தான். அவனுக்குத் தெரியும் அது மெய்யப்பரின் லீலை ஒன்றை நிறைவேற்றவே என்று.

மூவரும் இறங்க ஆயத்தமானார்கள். அப்போது வந்தியத் தேவன் அடியானைப் பார்த்து, ''வைணவரே! எதற்கும் ஒரு முறை முடிவெடுத்துக் கொள்ளுங்கள். வருகிறீரா இல்லையா?''

''நான் ஏன் வரக்கூடாது?'' என்று அடியான் வியப்புடன் வினவினான்.

''வைணவரே! நீர் கும்பிடும் பெருமான் இத்தீவை இராவணன் காலத்தில் அழித்து விட்டாராம். அதனால் அவர் சின்னமாகிய நாமம் போட்டிருக்கும் எல்லாரையும் திருச்சாத்துச் சாத்துவதென இந்த நாட்டு மக்கள் முடிவெடுத்துவிட்டனர் என்று கடைசித் தகவலின்படி கேள்விப் பட்டேன்'' என்றான்.

''இராவணன் சைவன். அவன் மாண்ட பின் அவனைச் சிவ பெருமான் காக்க வரவில்லை என இந்த நாட்டு மக்களெல்லாம் புத்த மதத்தைப் பின் பற்றுகின்றனர். இதில் யார் வந்து என்னைச் சாத்தப் போகிறவர்கள்?'' என்று திரும்பக் கேட்டான் அடியான்.

''வல்லா! வீண் பொழுது போக்காதே! கிளம்புவோம், வா!'' என்றான் சம்புவராயன். அவனுக்கு அவசரம். இந்த அழகான தீவைப் பார்க்கவேண்டுமென்று. அது கொடுக்க போகும் வெற்றியை அடையவேண்டுமென்று.

''ஆகா! சம்புவராயருக்குக்கூட ஆவல் உண்டாகி விட்டதல்லவா, மணி மகுடத்தின் இருப்பிடத்தைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு?'' என்று கூறிக்கொண்டே வல்லவராயன் கீழ் இறங்கினான்.

இவர்களுக்கு ஒரு மரப்பலகையிட்டுக் கால்கள் நனையாமல் கீழே இறங்கும் முன் மூன்று கம்பீரமான உயர்ந்த சாதிக் குதிரைகளை அழைத்து வந்தான், தாவிக் குதித்து ஓடியவர்களில் ஒருவன். மற்றும் ஒருவன் இவர்களுக்கு தங்க ஏற்பாடு செய்திருப்பான் இதற்குள், என்று வல்லவராயனுக்குத் தெரியும்.

''இது எப்படி? இது என்ன மாயம். இவன் ஏன் இப்படிச் செய்கிறான்?'' என்று வியந்தான் மாறன்.

''எல்லாம் மெய்யப்பரின் வேலை'' என்று பதிலளித்தான் வந்தியத் தேவன்.

குதிரையுடன் வந்தவன் இவர்கள் மூன் கடற்கரைமண்ணில் மண்டியிட்டு, ''முதலாளிமாரே, உமக்கு இங்கு தங்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. தயவு செய்து இந்தப் புரவிகளில் ஏறிக் கொள்ளுங்கள். நீர் தங்கும் இடத்துக்கு இட்டுச் செல்கிறேன்'' என்றான். ''இன்னும் ஏதாவது வேண்டுமென்றால் சொல்லுங்கள். எங்கள் முதலாளியின் அலுவலைக் கவனிக்க இங்கு பலர் இருக்கிறார்கள்.''

''கப்பலைத் திரும்ப அனுப்பி விடலாம் அல்லவா?'' என்றான் வந்தியத் தேவன்

''இல்லை, ஐயா. நீர் எங்காவது செல்லவேண்டும் என்று எண்ணினால் நீர் திரும்பி வரும்வரை மரக்கலம் காத்திருக்க வேண்டும் என்று உத்தரவு'' என்றான்.

''திரும்பப் போ'' என்று இவன் சொன்னால் கப்பல் மாலுமிகளுக்கெல்லாம் வேலை போய்விடும். அன்பின் தொல்லை. அதனால் ''சரி'' என்றான் வந்தியத் தேவன்.

''எதற்கு இந்த மெய்யப்பர் உமக்கு இதையெல்லாம் செய்கிறார்?'' என்று வினவினான் அடியான்.

கோடிக்கரையிலிருந்து வருபவர்கள் கடல் அலைகளின் இஷ்டத்துக்கு ஏற்றாற்போல் கடற்கரையில் எங்காவது இறங்கி விடுவார்கள். பின் உள்நாட்டுக்குச் செல்ல வழி ஒன்றுதான். ஈழத்துக் கடற்கரையோடு நடந்து சென்று பாலாவி நதிக் கரையில் இருந்த மாதோட்ட மாநகரை அடைய வேண்டும். ஆனால், மெய்யப்பரின் கப்பல் மாதோட்ட நகரின் துறைமுகத்தின் நேரே



சென்று அர்ஜுனன் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு போல நின்றிருக்கிறது.

துறைமுகத்தில் பெரிய பெரிய மரக்கலங்கள் முதல் சிறிய படகுகள் வரையில் நெருங்கி நின்றன. அவற்றிலிருந்து இறக்கப் பட்ட பண்டங்கள் மலை மலையாகக் குவிந்து கிடந்தன.

மெய்யப்பரின் கப்பலைக் கண்டவுடன் பலரும் ஓடோடி வந்தனர். பின் ஏமாற்றமடைந்தனர். கப்பலில் ஏதும் பொருட்கள் இல்லை. மூவர் மட்டும் இறங்கினார்கள். வந்தியத்தேவனுக்குக் கோபம் கோபமாய் வந்தது. மெய்யப்பர் தர்ம சங்கடமான நிலையில் அவனை வைத்து விட்டார். நட்பைக் கண்டு மெச்சினாலும் இரண்டு நாட்களுக்கு இதுதான் மாதோட்டத்தில் பேச்சாய் இருக்கும். ஆயிரம் பேர் சுமக்க வேண்டிய பாண்டங்களுடன் வந்த கப்பல் மூன்று பிரயாணிகளுடன் மட்டும் வந்ததென்று.

அவன் நினைத்தது போல, ''ஆகா! ''மூவர் தானா? பொருள் ஒன்றும் வரவில்லையா?'' என்ற குரல்கள் கூட்டத்தில் எழுந்தன. 'அப்படியென்றால் இவர்கள் மூவரும் அவ்வளவு முக்கியமானவர்களா?' என்று வந்தவர்களை திரும்பிப் பார்த்தனர்.

இவ்வளவு பெரிய மரக்கலத்தில் மூவர் மட்டும் வந்ததும் அந்த கப்பல் அவர்களுக்காகக் காத்திருந்து நங்கூரம் இட்டதும் கூடத் தான் வியப்பை உண்டாக்கியது. மக்கள் எல்லாரும் வெறுமையான கப்பலைப் பாராமல், வந்த மூவரையும் உற்றுக் கவனித்தார். ஆனால், பார்வையாளர்களைக் கண்டு கொள்ளாமல் அவர்கள் மூவரும் குதிரைகளில் ஏறி மாதோட்ட நகருக்குள் பிரவேசித்தார்கள்.

அப்போது மாலுமிகளில் ஒருவன், புதியதாய் யாரோ ஒருவன் கப்பலிலிருந்து இறங்குவதைக் கண்டான். முகத்தை முக்கால் வாசி மூடியிருந்தாலும் அவனது கண்கள் பளிச்சென்று காற்றை எதிர் கொண்டபோது கரித்துண்டில் ஒளிப் பிழம்பு பிரகாசிக்குமே, அது போல இருந்தது.

''கப்பலிலிருந்து பொருளை இறக்க அவசரமாய் ஏறியவனாயிருக்கும். இல்லை, அந்த மூவர் அழைத்து வந்தானரோ என்னவோ. நமக்கெதுக்கு பெரிய இடத்துப் பொல்லாப்பு?'' என்று விட்டு விட்டான்.

அந்த மனிதன் விரைந்து சென்று அந்த மூவரையும் பின் தொடர்ந்தான். ''புரவியொன்றை சம்பாதித்துக்கொண்டு அவர்களைப் பின் தொடரவேண்டுமே! திருமெய்யத்திலிருந்து

தொடர்ந்து வந்துவிட்டு இப்போது கண் பார்வையிலிருந்து மறைய விடக் கூடாது'' என்று நினைத்துக் கொண்டான்.

❖ ❖ ❖

## அத்தியாயம் எழுபத்தைந்து
## 'மச்சீஸ்வரம் எங்கே?'

கப்பலிலிருந்து கரையில் இறங்கிய பின் மணல் பரப்பைக் கடந்து மூவரும் சென்றனர். வந்தியத் தேவன் எதிர்பார்த்தது போல் அவர்களுக்கென அரேபிய நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட குதிரைகள் ஆயத்தமாக நின்றன. அரேபியப் புரவிகளுக்கு மட்டுமே உரித்தான உயரத்துக்கு அவை கம்பீரமாக நின்றன.

அருகில் சென்று தட்டிக் கொடுத்தனர். வீரர்களான மாறனுக்கும் வந்தியத் தேவனுக்கும் புரவிகளின் மீது இயற்கையான அன்புண்டு. அதுவும் இந்தப் புரவிகளின் அழகே அழகுதான். பளிங்கில் செதுக்கிய சிற்பங்கள் போல் அவை நின்றன. அவ்வப் போது உடலைச் சிலிர்த்துக் கொண்டதால்தான் அவற்றிற்கு உயிர் இருப்பதே தெரிந்தது.

அந்த ஐந்தறிவு ஜீவன்களுக்குத் திசையை மட்டும் சொன்னால் போதும். காற்றெனப் பறக்கும். ஆனால், எந்தத் திசையில் செல்வ தென்று ஆறறிவு ஜீவன்களுக்கே தெரியவில்லை. அதனால் அந்தப் புரவிகளும் அமைதியாய் நின்றன.

மூன்று உயர் ஜாதிப் புரவிகளைக் கொண்டு வந்து விட்டவன், அவர்கள் மூவரையும் அழைத்துச் சென்றான். வேறென்ன செய்வ தென்று தெரியாமல் அவர்களும் பின் தொடர்ந்தனர்.

ஏதோ தங்குமிடத்துக்குத்தான் இட்டுச் செல்கிறான் என்று நினைத்தனர். வழி நெடுகிலும் பசுமை, பசுமை, எங்கும் எதிலு மொரு பசுமை. அதிலும் மழையும் பனியும் நனைத்து அந்தப் பச்சை நிறத்தை மங்காமல் செய்திருந்தன. சம்பந்தரும் சுந்தர மூர்த்தியும் பரவசமாக வர்ணித்தபடியேதான் இன்றைக்கும் பாலாவி நதிக் கரையில் மாதோட்டம் இருந்தது.

''வண்டு பண்செயும் மாமலர்ப்
பொழின் மஞ்ஞை நடமிடுமாதோட்டம்



தொண்டர் நாடொறுந் துதிசெய
அருள்செய் கேதீச்சுர மதுதானே!''

இந்த ஊர், தேவாரத்தில் இரு முறை பாடல் பெற்றது என்பதற் காகச் சைவத்தலம் போலக் காட்சியளிக்கவில்லை. ஏனென்றால் போகும் வழியெல்லாம் புத்தர் சிலைகளுக்குப் பஞ்சம் இல்லை.

''இந்த நாடு முழுவதும் புத்த மதத்தைப் பின்பற்றுபவர்கள் தானா?'' என்றான் மாறன், அவற்றைப் பார்த்து வியந்து.

''ஓரளவுக்கு அப்படித்தான். முதலில் வைணவமும், சைவமும் தழைத்த நாடுதான். பின்னர் புண்ணிய புருஷர் மௌரிய வம்சத்து அசோகச் சக்கரவர்த்தியின் மகனும், மகளும் இந்த நாட்டில் புத்த மதம் பரவ வழி வகுத்தனர்'' என்று விளக்கினான், அடியான்.

மாறன் முகம் மலர்ந்தது. ''அந்த அசோகர் அஹிம்சாமூர்த்தியாய் உருமாறக் காரணமாயிருந்ததும் கலிங்கத்துப் போர்தானே. அதற்குப் பிறகுதான், எதிரி நாடுகளை எல்லாம் வென்று எதிரி களைக் கொன்று குவித்துக் கொண்டு போனால், யமலோக மல்லவா நிரம்பிப் போகும். பூலோகமே சூனியமாய்ப் போய் விடும் என்றறிந்தார்; போரை வெறுத்தார்'' என்றான்.

அடியானும் தொடர்ந்தான் ''அது போலவே இந்த மணிமகுடத் தைத் தேடுகிறோம். இது ஓராயிரம் ஆண்டுக்கான அமைதியைத் தரக் கூடியது. இந்த மணிமகுடம் மட்டும் நமக்குக் கிடைத்தால், அப்புறம் பாண்டியன் பாடு அதோ கதிதான்! தமிழகத்தில் போரே நிகழாது'' என்றான் .

''தனக்கு என்று ஒரு சாண் அகலமுள்ள இராஜ்யம் கூட இல்லாத நிலையில் எப்படிப் போராடுகிறான், பாண்டியன்! நாடு மட்டும் இருந்துவிட்டால்; இல்லை, இந்தக் கிரீடம் மட்டும் அவனிடமிருந்தால்...?'' என்றான், மாறன்

தமிழகத்தைக் கடைசியாய் ஆளும் மூவேந்தர் பாண்டியராகத் தான் இருக்கக்கூடுமென்று அநிருத்தர் ஒரு முறை தன்னிடம் சொன்னது நினைவுக்கு வந்தது. அடியானுக்கு. ஆனால், அவ னொன்றும் பதில் சொல்லவில்லை. சொன்னால் மனம் தளர்ந்து விடுவார்கள். அநிருத்தரின் கணிப்பே இவ்வளவு கடுமையானதா என்று.

குதிரைகளின் மேலிருந்தபடி பேசிக் கொண்டவர்கள், சாலை யின் ஓரத்தில் ஒரு பெரிய மாளிகை இருப்பதைக் கண்டனர். அது யாருடையதோ என்று நினைத்தபோது, குதிரைகள் அதன் பிரமாண்டமான வாயிலில் தாமாகத் திரும்பின.

மெய்யப்பருக்கு ஒரு பெரிய வீடு பாலாவிக் கரையில் இருந்தது. அவர் வீட்டைக் கடந்து சென்றால், சாலையில் அவ்வாற்றைக் கடக்கும் பாலமும் இருந்தது. கப்பலிலிருந்து குதித்து ஓடியவன் வாசலில் காத்திருந்தான். அவன் முன்வரவினால் வீட்டை அவர்கள் அடைவதற்குள் அரண்மனையில் கிடைக்கும் அனைத்துச் சௌகரியங்களும் அங்கே தயாராகி விட்டன.

தாகத்தைத் தணிக்க இளநீர் வெட்டி வைக்கப்பட்டிருந்தது. குளிக்க மிதமான சூட்டில் நீர் இருந்தது. உள்ளே உணவு தயாராகும் வாசனையும் வெளியே வந்து, மூக்கைத் துளைத்தது.

விருந்தை முடித்துக் கொண்டு மூவரும் மாளிகையின் தோட்டத்தில் நடந்தனர். தோட்டத்தின் மேற்கு எல்லையில் தரை பள்ளமாக இறங்கியது. அதனையடுத்தே பாலாவியாறு. மூவரும் எட்டிப் பார்த்தார்கள். பாலாவி அமைதியாய் ஓடினாலும் மணற் பரப்பின் முழுப் பிரதேசத்தையும் ஆக்கிரமித்தபடியே ஓடியது.

முதல் முறையாகப் பாலாவியைப் பார்த்த மாறனுக்கு, கடலில் சேருமுன், இவ்வளவு நீர்ப் பெருக்கா என்று வியப்பாக இருந்தது. தமிழகத்தில் கடலை அடையும் நதிகளில் காவிரி போன்றவை இருந்தாலும், கடம்பூர் நாட்டின் கெடிலம் நதியோ, பாண்டிய நாட்டின் வைகை நதியோ, கடலை எட்டும் முன்பே வற்றிவிடும் நிலைதான் இருந்தது.

வியப்புடன் நின்ற மாறனுக்கு அடியான் விளக்கினான்: "பாலாவியாற்றைப் பார்க்கும் போது உமக்குக் கடல் பொங்கி வந்து பூமிக்குள் புகுந்து விட்டதோ என்று தோன்றியதா? ஆடிப் பதினெட்டாம் பெருக்கன்று சோழ நாட்டு நதிகளிலெல்லாம் வெள்ளம் இரு கரையும் தொட்டுக் கொண்டு ஓடுமல்லவா? இங்கு ஆண்டு முழுக்க அப்படித்தான்" என்றான்.

வந்தியத் தேவனும் அவன் பங்குக்கு, "மாறா! அது மட்டுமல்ல. அலை கடல் போல் விரிந்துப் பரந்திருந்த வீர நாராயண ஏரியைப் பற்றிச் சதா பெருமையுடன் நினைத்திருப்பீர். அது போல இங்கு பத்து ஏரிகள் உள்ளன. இங்குள்ள அனைத்தும் அதை விட அகண்டதான நீர்ப் பிரதேசங்கள். பாய்ந்தோடும் காவிரியைக் கண்டிருப்பாய். அதை விடப் பத்து மடங்கு வேகமாய் ஓடி நீர் வீழ்ச்சியில் "தடால்" என்று விழும் ஆறுகள் இங்கிருக்கின்றன" என்றான்.

நம்பாமல் நண்பனைப் பார்த்தான், மாறன். மீண்டும் ஒரு முறை பாலாவியைப் பார்த்தான். உண்மையாகத்தான் இருக்க வேண்டும். அதன் கரையில் நாணல் புதர்கள் இல்லை. அதற்குப் பதிலாக வானைத் தொடும் அளவுக்கு மூங்கில் புதர்கள் இருந்தன.



அதை அடுத்தாற்போல் மரங்கள். அப்பப்பா! இவ்வளவு பெரிய மரங்களை மாறன் வாழ்நாளில் பார்த்ததே இல்லை. கையோடு கைகோர்த்தால் கூட மூவரால் கட்டி அணைக்க முடியாத மரம் ஒவ்வொன்றும்.

மாறன் இயற்கையின் அதிசயங்களை ரசிக்கிறான் என்று எண்ணினார்கள் இருவரும். ஆனால், அவன் எண்ணப் போக்கே வேறு வழியில் பயணித்தது.

மாறன் மனம் ஒடிந்து சொன்னான். "வரும் போது நான் ஏதேதோ ஆகாசக் கோட்டைகள் கட்டிக் கொண்டிருந்தேன். சோழர் சாம்ராஜ்யத்திற்காக நான் செய்த சேவைகளுக்கெல்லாம் இதுவரை பிரதிபலன் இல்லாமற் போனது. இந்த முறை அப்படியல்ல. நிச்சயம் வெற்றி என்றிருந்தேன். இந்தக் காட்டைப் பார்த்தவுடன் என் நம்பிக்கையெல்லாம் என்ன ஆயிற்று தெரியுமா? சூரியனைக் கண்ட பனிபோல் கரைந்து, மாயமாய் மறைந்து போய்விட்டது. முடியாத ஒன்றைச் செயல்படுத்தப் பிரதமர் ஆக்ஞாபித்திருக்கிறாரா என்று கூட ஐயம் எழுகிறது" என்று புலம்பினான்.

வந்தியத் தேவனும் அதை ஒப்புக் கொண்டான். "எனக்கும் அப்படித்தான். இந்தத் தீவைக் கண்ட பின் என் நம்பிக்கையின் அஸ்திவாரத்தையே தகர்த்தெறியப் பார்க்கிறது விதி. இந்தத் தீவில் ஒரு யானை மந்தையையே கண்டு பிடிக்க இயலாது. அப்படியிருக்க, நாம் எப்படி தலையில் பொருந்தும் ஒரு மணி மகுடத்தைக் கண்டு பிடிக்கப் போகிறோம்?"

"பிரதமர் சொல்கிறார், அதைக் கண்டுபிடித்து விட்டால் பாண்டியர் போராட்டம், சக்தியை இழந்து சுருண்டு விடுமென்று. உண்மைதான். ஆனால், எப்படி? ஒரு நூறாண்டுகளில் இயற்கை நமக்கு வேண்டிய தடயங்கள் அத்தனையையும் அழித்து விட்டிருக்கும்." மாறனுடைய பேச்சிலேயே சிறிது சிறிதாக ஆர்வமும் பரபரப்பும் குறைந்தன.

தடயங்களை அழிப்பதில் இயற்கைக்கு மிஞ்சியதும் இயற்கைதான். மாதோட்டத்தின் இயற்கை வளங்களைக் கண்டு களிப்புக் கொண்டவர்கள் அங்கேயே தங்கி விடலாம் என்றுகூட நினைத்து விடுவார்கள். ஆனால், அதுவே அவர்களுக்கு முதல் எதிரி என்று ஆகிவிடும். ஊருக்குப் போகும் வழியில் சென்ற பாதை, திரும்ப வரும்போது இருக்குமென்ற நிச்சயமில்லை. அதற்குள் அங்கு சிறிய மரமே முளைத்துவிடும். இல்லை, காட்டாறு அதைக் கரைத்து விடும். அவ்வளவு வேகம் கொண்டது இலங்கையின் இயற்கை.

நூறாண்டுகளில் நாட்டின் அமைப்பே மறைந்து போயிருக்கும். அப்படியிருக்கையில் நூறாண்டுக்கு முன் யாரோ ஒளித்து வைத்த பொருளைத் தேடுவதென்பது கஷ்டம்தான்.

''இயற்கையைச் சொல்லியும் குற்றமில்லை. வாயு பகவான் அசையாமலிருப்பாரா? இல்லை, சமுத்திர ராஜன்தான் என்றாவது ஸ்தம்பித்து நிற்பாரா? வன ராஜனும் அப்படித்தான். ஒரு நொடி கூட வளராமல் இருக்க மாட்டார்'' என்றான் அடியான்

மாறன், ''ஆம். எளிதாக இருக்க வாய்ப்பில்லைதான். போகும் வேலை எவ்வளவு மகத்தானது. ஒரு நாலு வரிக் கவிதையை வரைபடமாகக் கொண்டு எல்லார் தலையெழுத்தையும் மாற்றக்கூடியப் பொக்கிஷத்தைக் கண்டு பிடிக்க வேண்டும். அதுவும், பாண்டிய நாட்டு மணிமகுடத்துக்கும், இரத்தின ஹாரத்துக்கும் உரியவன் அவற்றை அடைந்து விடுவதற்கு முன் நாம் கண்டு பிடிக்க வேண்டும்'' என்றான்.

''அதுவும் இருக்குமிடத்தைக் கவிதையாய், ஒரு விடுகதையாய்ச் சொல்லியிருக்கிறார்கள். அதைப் பகிரங்கமாகச் சொல்ல நினைக்கவில்லை. ஒளித்து வைத்தவனின் தீர்க்க தரிசனம் ஒரு நூறாண்டுகளாக நம்மை அலைக்கழிக்கிறது.''

இருந்த ஒரே தடயத்தைப் பற்றிப் பேச்சு எழுந்தவுடன் அந்தக் கவிதையைச் சொன்ன கருத்திருமன் உண்மையைச் சொன்னானா, இல்லை, சாகும் தறுவாயில் உளறினானா என்ற சந்தேகமும் எழுந்தது. மூவருக்கும் தெரியவில்லை. ஒரு பைத்தியக்காரனின் பேச்சைக் கேட்டு இவ்வளவு தூரம் வந்து விட்டோமா என்ற பயம் வேறு. மாறனுக்கு எல்லாம் மூடத்தனமாய்த் தெரிந்தது. ஆரம்பிக்கும் முன்பே அவனுக்கு அலுத்துப் போய்விட்டது.

ஆனால், அடியான் மனம் தளரவில்லை. ''வந்த வேலையில் கஷ்டம் இருப்பதை ஒப்புக்கொள்கிறேன். கருத்திருமன் சொன்ன அதிசயமான செய்திகள் எவ்வளவு தூரம் உண்மை என்பதை நேரில் தெரிந்து கொள்ளத்தான் செல்கிறோம். சிறிது பிரயத்தனத்துடன் வேலையில் இறங்கினால் நிச்சயம் மணி மகுடத்தைக் கண்டு பிடித்து விடலாம். ஆரம்பிக்கும் முன்பே தோல்வியை ஏற்றுக் கொள்ளக் கூடாது. நாம் மலைப்பது நம் அறிவை மூடிவிடும். எப்படியாவது இந்த அடர்ந்த காட்டுப் பிரதேசத்தில் அந்தப் பொக்கிஷம் எங்கிருக்கிறதென்று தேடிக்கண்டு பிடிக்க வேண்டும்'' என்றான்.

திட்டமிடச் செயலாற்றல் தேவை. தெளிவான சிந்தனை தேவை என்று நம்பிக்கையூட்டியவனுக்கும் மனதுக்குள் மலைப்புத்தான்.



'காட்டிலே எங்கேயென்று தேடுவது? காட்டின் அமைப்பு ஒவ்வோராண்டும் மாறும் போது நூறாண்டுக் காலத்திற்கு முற்பட்டதை எப்படிக் கண்டுப்பிடிக்கப் போகிறோம்?'

அவர்களின் மலைப்பு ஈழத்துக் காடுகளைக் கண்டவருக்கே புரியும். இலங்கையில் பாதிக்கு மேலே காடும் மலையும்தான். காடு மட்டுமல்ல, காட்டு யானைகள் மந்தை மந்தையாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கும். புயற் காற்றில் காட்டு மரங்கள் பெயர்ந்து விழுந்து வழிகளை அடைக்கும். யானைகள் கூடக் கோபம் வந்தால் மரங்களைச் சாய்த்து விளையாடுமாம்.

பேச்சின் போக்கை மாற்றினான், அடியான். ''காட்டைப் பற்றியே பேசாமல் அந்த ஓலையை எடுங்கள். அதில் ஏதாவது சூட்சுமம் இருக்கிறதாவென்று பார்ப்போம். அந்தக் கவிதையை முழுவதுமாகப் புரிந்து கொண்டால்தானே அதற்கேற்ப நடவடிக்கைகளை எடுக்க முடியும்?'' என்றான்.

மூவரும் மாறி மாறி அந்த ஓலையைப் படித்தனர்.

வந்தியத் தேவன் முதலில் ஆரம்பித்தான். ''நம் கண்ணில் பொக்கிஷம் படக்கூடாது என்று மட்டும் பாண்டியர்கள் நினைத்திருந்தால் இப்படிப்பட்ட காட்டுப் பிரதேசங்களில் அவற்றை வைத்திருப்பார்கள். ஆனால், பாண்டியர்களும் அவற்றைக் கண்டு பிடிக்க வேண்டுமல்லவா?''

''ஆமாம்'' என்று ஒப்புக்கொண்டான் மாறன். ''அந்த விடுகதை நமக்கு மட்டும் வைக்கப்பட்ட போட்டியல்ல. பாண்டிய குலத்தினருக்கும் அது ஒரு கடினமான பரிட்சைதான். அதைக் கண்டு பிடிக்கும் அளவுக்குப் புத்திசாலியானவன் மீண்டும் சோழர்களைக் களத்தில் எதிர்கொள்ளலாம் என்று எழுதி வைத்தனர் போலும்.''

''கவிதை எளிமையானதுதான். மேலோட்டமாகப் பார்த்தால் ஈழத்தையே குறிக்கின்றது. ஆனால், அது மிகவும் சாதுர்யமாக எழுதப்பட்ட கவிதை. எதிரியை விடப் புத்திசாலியான பாண்டியன் ஒருவனுக்கு மட்டுமே அது புரியவேண்டும் என்று எழுதப் பட்டிருக்கவேண்டும்'' என்றான் வந்தியத் தேவன்.

''எடைக்கு எடை அந்த மணி மகுடத்தைப் போல நம்மிடம் லட்சம் மடங்குத் தங்கமும் வைரமும் இருக்கின்றன. அதுவும் நம் ஊரிலேயே, தஞ்சைப் பாதாள நிலவறையில் மலை மலையாய் குவிந்துக் கிடக்கிறது. எனினும் இப்படி நாயாயப் பேயாய் அலைகிறோமே, அதுவும் ஒரு நூறாண்டுகளாக!'' என்று சலித்துக் கொண்டான் கந்த மாறன்.

அடியான் அதற்கு, ''இளவரசே! பலவிடங்களில் ஒரு பொருளுடைய மதிப்பு அதில் உள்ளடங்கிய விஷயத்தை விடவும், கூடுதலாகத்தான் இருக்கும். தஞ்சையில் இருக்கும் சோழர் சிங்காசனம் என்ன? வெறும் தங்க நாற்காலி தானே? ஆனால், இந்தப் பரத கண்டத்திலும் அதற்கு அப்பால் வெகு தூரம் வரையிலும் பல கோடி மனிதர்களின் அன்றாட வாழ்க்கையை அது நிர்ணயிக்கவில்லையா?''

''அது சரி. அப்போது இந்தச் சிங்களத் தீவிலேயே மிக உயர்ந்த பொருள் இந்த மணிமகுடமாகத்தான் இருக்கும்''என்றான் மாறன்.

''இல்லை, இல்லை. அதைவிடப் பெரிய பொக்கிஷம் ஒன்று இங்கு உள்ளது'' என்று வந்தியத் தேவன் அதை மறுத்தான்.

''இதைவிட விலை மதிப்பாய் இருக்கக் கூடிய அந்தப் பொருள் என்ன? ரத்தினமா, தங்கமா இல்லை முத்து, பவளமா?'' என்று இளம் சம்புவராயன் வினவ, ''இல்லை, இல்லை. அதெல்லாம் இவர்கள் பொக்கிஷம் என்று கருதுவதற்கு முன் கால் தூசு பெறாது. அது வைரக்கல்லும் இல்லை மாணிக்கக் கல்லும் இல்லை. ஒரு மனிதனின் பல்!'' என்றான் வந்தியத் தேவன்

''என்ன, பல்லா?'' என்று நம்ப முடியாதவனாய் வினவினான் மாறன். அவர்கள் அவனை கேலி செய்கிறார்கள் என்ற கோபம் அவனுக்கு.

''இல்லை, இளவரசே. சிங்களர்கள் தினமும் வணங்கும் புத்தர் பெருமானின் பல்லையே இந்தச் சிங்கள மக்கள் பெரிய பொக்கிஷமாகக் கருதுகிறார்கள். அதையே அந்த மகானின் உருவாய் மதிக்கிறார்கள்'' என்று அவசரமாய் விளக்கினான் வைணவன்.

''அப்படியா? ஒரு பல்லுக்கு அவ்வளவு மதிப்பா?''

''அந்த ஒரு பல்லை வைத்தே இந்தத் தீவைப் புத்த மதத்துக்கு மாற்றிவிட்டனர். பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் புத்தர் மறைந்தார். குஷிநகரம் என்ற மல்லர் நாட்டில் பரிநிர்வாணம் அடைந்தார் அவர். அவரது சிதையிலிருந்த மிச்சம் மீதி எலும்புகளையும் அவர் உபயோகித்த பிச்சை எடுக்கும் ஓடு போன்ற பொருட்களையும் தங்களுக்கென வைத்துக் கொள்ள வேண்டுமென்று எண்ணினர் மல்லர் தேசத்து அரசர்கள். ஆனால், புத்தரின் சிதையில் தீ அடங்கியவுடன் எஞ்சியிருந்த அவரது உடலின் பாகங்களில் பங்கு கேட்டுப் பல தேசங்கள் படையெடுத்து வந்தன. தங்கள் பாகத்தைக் கோரி வந்த அந்த நாடுகளுக்கிடையே பெரும் போர் நிகழ இருந்தது'' என்று சொன்னான் அடியான்.



''அமைதியின் வடிவான புத்தருக்காகப் போரா?'' என்றான் மாறன்.

''ஆம். பின்பு ஒரு சமரசம் ஏற்பட்டு ராஜகிருஹ, வேசாகி, கபிலவஸ்து அல்லகப்பா, ராமகாமா, பெத்தடிபா, பவா, குஷிநகரா என்ற எட்டு தேசங்கள் ஆளுக்கொரு பங்கைக் கோரிப் பெற்றுக் கொண்டன.''

''ஆனால், அந்த நாடுகளில் ஈழம் ஒன்றில்லையே? பின் இங்கு எப்படி வந்தது அந்தப் பல்.?'' என்று வினவினான் மாறன்.

''இல்லை. எழுநூறு ஆண்டுகளுக்கு முன் கலிங்க நாட்டு மன்னன் தன் நாட்டில் பாதுகாப்பில்லையென்று எண்ணி, அந்தப் பல்லை ஈழத்துக்குப் பரிசாய்க் கொடுத்தான். இளவரசன் தந்தாவும், இளவரசி ஹேமமாலியும் அதை ரகசியமாய் இங்கு கொண்டு வந்தனர். இளவரசியின் கூந்தலில் அது மறைத்துக் கொண்டு வரப்பட்டது என்று கூடச் சொல்லுவார்கள்'' என்று விளக்கினான் அடியான்.

அவன் சொன்னது கற்பனைக் கதையா, இல்லை, உண்மையா எனக் கண்டறிய முடியவில்லை. அதை எவ்வளவு தூரம் நம்புவது என்றும் தீர்மானிக்க முடியவில்லை. எனினும் அரிய பொக்கிஷமான புத்தரின் பல்லை ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்கு எடுத்துச் செல்வது, அதுவும் நிரந்தரமாக எடுத்துச் செல்வதென்பது ஒரு சுவையான நிகழ்ச்சியாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்று யூகம் கொண்டான் மாறன்.

''கவலைப் படாதே, மாறா. நமது பாண்டியர் கிரீடம் இந்தத் தேசத்தில் விலை மதிப்பற்ற பொருட்களில் இரண்டாமிடத்தைப் பெற்றிருக்கிறது போல!'' என்றான் வந்தியத் தேவன்.

மாறனுக்கு மின்னலென ஒரு நினைப்புத் தோன்றியது. ''எனக்கு ஒரு யோசனை. அந்தப் புத்தர் பல்லுடன் கிரீடமும் இருக்குமா? பாதுகாப்பைக் கருதி இரண்டையும் ஒரே இடத்தில் சேர்த்து வைத்திருப்பார்களா?'' என்றான்

நம்பிக்கையில்லாமல் பார்த்த மற்ற இருவரையும் நோக்கி, ''பாண்டியரும் சிங்களரும் உயிருக்கு உயிராய்ப் பழகிக் கொண்டிருந்த காலங்களில் அது நடந்திருக்கலாம் அல்லவா?'' என்றான் மாறன்

''அதற்கு அதிக வாய்ப்பில்லை. நான் அதைப் பார்த்திருக்கிறேன்'' என்றான் வந்தியத் தேவன்.

'' புத்தர் பல்லையா?''

''இல்லை, அதை யாரும் பார்க்க முடியாது. அது இருக்கும் பெட்டியைப் பார்த்திருக்கிறேன். அதில் ஒரு மணி மகுடத்தை வைக்க இடமில்லை.''

''அதை எப்போது கண்டாய் வல்லா?'' என்று வினவினான் மாறன்.

''நான் மட்டுமல்ல. இந்த வைணவரும் கண்டுள்ளார். உமக்கு நினைவிருக்கிறதா?'' என்று வைணவனிடம் திரும்பிக் கேட்டான் வந்தியத்தேவன்

வைணவனும் தலையை அசைத்தான். ''ஐந்தாண்டுகளுக்கு முன். நன்றாய் நினைவிருக்கிறது. மறக்கக் கூடிய விசேஷமா அது? திருவாரூர்த் தேர் இழுக்கும் அன்று கூட அவ்வளவு கூட்டம் இராது. அன்று அநுராதபுரத்தின் வீதிகளிலும் ஜனக் கூட்டம் அளவில்லாமலிருந்தது. 'சாது! சாது!' என்ற கோஷம் வானை அளாவியது. நமக்குப் பொன்னியின் செல்வர் அதைப் பற்றி விளக்கினார்'' என்று நினைவு கூர்ந்தான் அடியான்.

வந்தியத் தேவனுக்கும் அந்த விழாவின் விவரங்கள் நினைவுக்கு வந்தன. ''இலங்கை நாட்டிலேயே மிகப்பெரிய உற்சவமாகிய 'பெரஹராத்' திருவிழாவிற்கு வந்திருந்தோம். முதலில் சுமார் முப்பது கரிய குன்றுகளை யொத்த யானைகள் அணிவகுத்து வந்தன. அவ்வளவும் தங்க முகபடாம்களினால் அலங்கரிக்கப் பட்ட யானைகள். அவற்றில் நடுநாயகமாக வந்த யானை எல்லா வற்றிலும் மிக கம்பீரமாக இருந்தது. அதன் முதுகில் அமர்ந்திருந்த புத்த பிக்ஷுவின் கையில் நவரத்தினங்கள் இழைத்த தங்கப் பெட்டி ஒன்று இருந்தது. அதன்மேல் ஒரு தங்கக் குடை கவிந்திருந்தது. அந்த யானையைச் சுற்றியிருந்த மற்ற யானைகளின் மீது புத்த பிக்ஷுக்கள் பலர் அமர்ந்து வெள்ளிப் பிடி போட்ட வெண் சாமரங்களை வீசிக்கொண்டிருந்தார்கள். அந்தப் பெட்டிக்குள் தான் அந்தப் பல் இருந்தது. ஆனால், அது சிறிய பெட்டிதான்'' என்றான்.

''அந்தப் பல்லுக்கு அவ்வளவு மதிப்பா?'' அவர்கள் சொன்ன விவரங்களிலிருந்து விழா எவ்வளவு சிறப்பாக இருந்திருக்கும் எனக் கற்பனை செய்து கொண்டான் மாறன்.

''அதை வைத்துத்தான் இந்தத் தீவில் புத்த மதம் தழைக்கிறது'' என்றான் அடியான்.

''வைணவரே! நீர் கூட தசாவதாரத்தின் ஒரு அவதாரத்திலாவது உமது பெருமாளின் பல்லை எடுத்து வைத்திருக்க வேண்டும்.



அப்போது உமது மதமும் சைவத்திலிருந்து போட்டியின்றி நம் நாட்டில் தழைத்திருக்கும்!'' என்று கேலி செய்தான் மாறன்.

''வேடிக்கைக்கு இது நேரமில்லை, கந்தமாறவேள். வந்த வேலையைக் கவனிப்போம்'' என்றான் முகம் வாடிய அடியான்.

''சரி, முதல் படியாக அதை ஒளித்து வைத்த பாண்டியன் என்ன நினைத்திருப்பான் என்று சிந்தித்தால் போதும்'' என்றான் மாறன். ''சரி, வைணவரே! நீர் தான் பாண்டியன் என்றால் என்ன செய்திருப்பீர்?''

ஓரிரு நொடி மட்டுமே சிந்தித்துவிட்டு, ''எதிரிகள் அதைக் கண்டு பிடிக்க முடியாமல் திணறவேண்டும். ஆனால், என் வழித் தோன்றல்களுக்கு அது கஷ்டமாக இருக்கக் கூடாது'' என்றான் வைணவன்.

''சரி, ஒளித்து வைத்த அரசன் யார்?''

'' ஒளித்து வைத்தவன் ராஜசிம்ஹன்.''

''அவன் சரித்திரத்தைச் சொல்லுங்களேன்'' என்றான் மாறன்

''சரித்திரம் என்று அவனுக்கு ஒன்றும் பெரியதாக இல்லை. ராஜ சிம்ஹன் வாழ்க்கையில் ஒரு சாதனையும் செய்யவில்லை, அந்தப் பாண்டியனின் வாழ்க்கையில் இரண்டே செயல்கள்தான் முக்கிய மானவை. கிரீடத்தை ஒளித்து வைத்தது ஒன்று. பின் ஏதோ சில சிவன் கோயில்களுக்குத் திருப்பணி செய்திருக்கிறார்'' என்றான் அடியான்.

''ஈழத்தில் ஏதாவது கோயிலைச் செப்பனிட்டிருக்கிறாரா?'' என்று மாறன் வினவ, அடியான் தன் அடிமனத்தின் ஞாபகத்தைக் கிளறினான்.

''ஆம், ஈழத்தின் கிழக்குக் கடலை ஒட்டிய திருகோண மலையில் திருப்பணி செய்திருக்கிறார்.''

ஒரு நொடி மௌனமாய் இருந்தார்கள் அனைவரும். அடி யானுக்கு மின்னல் கீற்றுப் போல இன்னுமோர் எண்ணம் வந்தது. ''திருகோணமலைக்கு மற்றுமொரு பேரும் உண்டு - மச்சீஸ்வரம்!'' என்றான்.

''என்ன?'' என்று வியந்தனர் மற்ற இருவரும்.

''மச்சீஸ்வரம்! அதிலென்ன அதிசயம்?''

''மச்சம் என்றால் மீன் அல்லவா? மீன் பாண்டியர்களின் சின்னமாயிற்றே !'' என்றான் மாறன்.

''சரி, திருகோணமலை இங்கிருந்து எவ்வளவு தூரம் இருக்கும்?'' என்று கேட்டான் மாறன்

வந்தியத் தேவனுக்கும் நம்பிக்கை வந்திருந்தது. ''ஐந்து, ஆறு நாள் பயணம். போய்ப் பார்த்து விடுவோமா?''

மாறன் மூவருக்காகவும் ஒரு முடிவெடுத்தான். ''நாம் செல்ல வேண்டிய இடம் அதுதான். நம் தேடுதல் வேட்டைக்கு அதுவே சிறந்த இடம். ஆண்டவன் அருளிருந்தால் அங்கேயே நம் தேடுதல் வேட்டை முடியவும் கூடும்'' என்றான் மாறன்.

❖ ❖ ❖

## அத்தியாயம் எழுபத்து ஆறு
## இலைப்பச்சை மீன்!

ஈழத்தீவில் காலை சூரியன் உதித்தவுடன் பணிவிடை செய்ய வந்த ஆட்களுக்கு அதிசயம். விருந்தாளிகள் மூவரும் கிளம்ப ஆயத்தமாயிருந்தார்கள். இப்படி திடீரெனக் கிளம்பவேண்டும் என்று மூன்று விருந்தாளிகளும் சொன்னவுடன் மெய்யப்பரின் ஆட்களுக்கு முகம் பேயறைந்தாற்போலானது.

''முதலாளிமாரே, நாங்கள் ஏதேனும் தவறு செய்திருந்தால் மன்னித்து அருளவேண்டும். எங்கள் பிழைகளைப் பொறுத்து தொடர்ந்து இங்கு தங்க வேண்டும்'' என்று மன்றாடினார்கள். அவர்களை சமாதானப்படுத்த வெகுநேரமானது. மற்ற இருவரும் வந்தியத்தேவனை முறைக்க, அவனோ ''ஐயோ! பாசத்தின் தொல்லைகளைத் தாங்கமுடியவில்லையே! அந்த மெய்யப்பரைக் கொள்ளையர் தீவிலேயே விட்டுவிட்டு வந்திருக்க வேண்டும்'' என்று முணுமுணுத்தான். ''ஐயா, நாங்கள் திரும்பி வரும்போது நிச்சயம் இங்கு தங்குகிறோம். உமது கவனிப்பில் ஒரு குறையும் இல்லை'' என்றான்.

மற்றவரென்றால் மெய்யப்பரின் மாளிகையை விட்டு வெளியே வந்திருக்கவேமாட்டார்கள். அதற்குள்தான் எத்தனை சுகபோகம்! சேவகர்கள் எப்போதும் பணிவிடை செய்யக் காத்துக் கிடந்தார்கள். புதியதொரு பிரதேசத்தில் தங்குவதற்கு இடம் தாராளமாய்க் கிடைத்தது. என்றோ வரும் மெய்யப்பர், போஜனத் துக்கு ஒரு நளனையே வேலைக்கு வைத்திருந்தார்போல. அவர் இப்போது வாட்டசாட்டமாக இருப்பதில் ஐயமொன்றும் இல்லை.



எனினும், மனத்தின் மூலையில் கூட ஒரு வருத்தமுமின்றி நம் கதாபுருஷர்கள் இவ்விடத்திற்கு நேர்மாறான ஈழத்தின் கீழ்த் திசைக் காட்டினுள் புகுந்தார்கள்.

பாலாவியாற்றைத் தாண்டியவுடன் பயணிக்க நல்லதொரு ராஜபாட்டை இருந்தது. செல்லுமிடமெல்லாம் சாலையின் பக்கங்களில் புலிக்கொடி பறந்து கொண்டிருந்தது. கொடிகளைப் பார்த்தவுடன் ''இதெல்லாம் சோழர்களுடைய ஆட்சிக்கு உட்பட்டதா?'' என்று வினவினான் மாறன்.

''நாடெல்லாம் நமது, காடெல்லாம் சிங்களருடையது'' என்றான் அடியான் புதிர் போடும் தோரணையில்.

'' ஓகோ, அப்படியென்றால் இந்தத் தீவில் நாலில் மூன்று பங்கு அவர்கள் வசம்தானோ?'' என்று கேலியாய் வினவினான் மாறன்.

''ஆமாம், ஆனால், ஒரு விஷயம் மனதில் கொள்ளவேண்டும். நமக்குக் காடு தேவையில்லை. ஆனால், அவர்களுக்கு நாடு தேவை. காட்டில் அரை நூற்றாண்டாக சிங்கள அரச குடும்பம் வாழ்க்கை நடத்துகிறது. நகருக்குள் வந்து சிங்களவர் இனி ஒரு போதும் வாலாட்டமுடியாது'' என்று மார்தட்டினான் அடியான்.

அவர்கள் கடந்து சென்ற ஊர்ப்பகுதிகளில் இப்போது பெரும் பாலும் வயோதிகர்களும், பெண்மணிகளும், சிறுவர், சிறுமி யருமே காணப்பட்டார்கள். வாலிபர்களெல்லாம் போருக்கோ, போருக்கு பயந்து வேறு ஊருக்கோ போய்விட்டனர் போலும். ஊர்களில் குரலை உயர்த்திக்கூட பேசாமல் இருந்தனர் மக்கள். கிராமங்களின் அமைதியைக் கலைக்க அவ்வப்போது காலத்தை அறிவிக்கும் ஆலாட்சி மணிகளின் ஓசை மட்டுமே கேட்டது. 'அடிமைப்பட்ட நாட்டில் எல்லாம் இப்படித்தான் இருக்கும் போல?' என்று நினைத்துக் கொண்டான் மாறன்.

ஊர்கள்தான் அமைதி காத்தன. ஆனால், அதற்கு நேர்மாறாக இராஜபாட்டையில் வருவோரும் போவோரும், வண்டிகளும் வாகனங்களுமாக ஒரே கலகலப்பாக இருந்தது. தமிழகத்து ராஜபாட்டைகளுக்கும் இவற்றுக்கும் வித்தியாசம் ஒன்றுதான். இங்கு, ராஜபாட்டையில் பலரும் யானைகளின் மீது சர்வ சாதாரணமாக ஏறி வந்து கொண்டிருந்தார்கள்.

சாலையோரங்களில் குன்றுகள் போன்ற பல ஸ்தூபங்கள் நின்றன. ''இந்தக் கட்டடங்கள் வித்தியாசமாக இருக்கின்றனவே. இதன் உருவம் ஏன் இப்படி? '' என்று கேட்டான் மாறன்

''அதுவா, உமக்கு எப்படி நாங்கள் கோயில் கட்ட வேண்டும் என்று புத்தரை ஒரு சிஷ்யன் கேட்டபோது, மௌன விரதமிருந்த

மஹான், 'தனக்கெதற்காக கோயில், தான் காலியான ஓட்டை ஏந்தும் பிச்சைக்காரன்' என்று சைகை காட்ட, ஓட்டை கவிழ்த்துத் தரையில் வைத்தாராம். அவரது பிக்ஷபாத்திரம் கவிழ்ந்ததை பார்த்த சீடன் அவர் சொல்ல வந்த உண்மையை மறந்து அதே உருவத்தில் இந்த ஸ்தூபங்கள் கட்டினானாம்'' என்று சொல்லிச் சிரித்தான் வந்தியத் தேவன்.

போகும் வழியில் சில இடங்களில் முருகன் கோயில்களும் இருந்தன. அவற்றில் விமரிசையாக பூஜைகள் நடந்து கொண்டிருந்தன. ''புத்தரை மட்டுமல்ல, ஈழத்தில் செந்தமிழ் நாட்டின் ஆதிதேவனான வேலனையும் வழிபடுவார்கள்'' என்றான் வந்தியத் தேவன். ''வேலன் இந்த நாட்டின் செல்லப் பிள்ளை. இங்குதான் வேலனுக்கு மாமனார் வீடு. வள்ளியை மணமுடித்தது இங்குதான்.''

''தன் வீட்டில் இல்லாத உபசரிப்பெல்லாம் மாமனார் வீட்டில் கிடைக்கும் அல்லவா? அதை வந்தியத் தேவன் நன்கறிவார்'' என்று மேலும் விளக்கம் கொடுத்து வந்தியத் தேவனை வம்புக்கு இழுத்தான் வைணவன்.

சோழர்களிடையே வீட்டோடு மாப்பிள்ளை போல தங்கி விட்ட வந்தியத் தேவனைக் குத்துகிறான் அடியான் என உணர்ந்த மாறன் அவசரமாய்ப் பேச்சை மாற்றினான். ''வேலனாவது போர்க் கடவுள். புத்தரெனும் அந்தக் கருணாமூர்த்தியை வழிபடும் நாட்டில்கூட ஹிம்சையையும் யுக்தக்கையும் அகற்றமுடியவில்லையே?'' என்றான் மாறன். ''கருணையும், தயாளமும் உருக்கொண்ட புத்தரைப் பின்பற்றும் நாட்டிலா இவ்வளவு வன்முறை?''

தலையசைத்தான் அடியான். ''சுத்தப் பிசகு! அஹிம்சையை விரும்பும் புத்த மதத்தினருக்கு இராஜ்ய உரிமை இருந்தால் உலகத்தில் சண்டையேயிராது என்று நினைக்காதீர். சிங்களர்கள் சரித்திரத்தைச் சொல்லும் மஹாவம்சத்தை படியுங்கள் தெரியும். அண்ணன் தம்பிகளை எப்படி விஷம் வைத்து கொன்றான் என்று; தம்பி அண்ணனை எப்படி கத்தியால் குத்தினான் என்று.''

தானும் அவர்களுடன் காட்டுக்குள் வருவேன் என்று முரண் பிடித்த மெய்யப்பரின் வேலையாள், அவர்கள் வேண்டாமென்றவுடன் மிகத் தெளிவாக அடையாளங்கள் சொல்லியிருந்தான். அந்த அடையாளங்கள் புலப்படுகின்றனவா என்று வெகு கவனமாய்ப் பார்த்துக் கொண்டு அவர்கள் பிராயாணம் செய்தபோது,



அடர்ந்த கானகம் சாலையின் இருபுறமும் தொடங்கியது. பாதையும் சற்று அகலம் குறைந்தது.

அடியான் விளக்கினான் ''சம்புவராயரே இனி வழியெல்லாம் ஒரே காடுதான். கோடிக்கரைக் காடு மாதிரி இருக்கும் என்று நினைக்காதீர். வானை எட்டும் மரங்கள் அடர்ந்த காடுகள். யானைக் கூட்டங்களும், வேறு துஷ்ட மிருகங்களும் கூட இங்கு உண்டு.''

அவன் சொன்னவுடனேயே சொல்லிவைத்தாற்போல் ஒரு பயங்கரமான பிளிறல் சத்தம் கேட்டது. அந்த வனப்பிரதேசம் முழுதிலும் அது எதிரொலித்தது. சப்தமும் அதன் எதிரொலிகளும் முதல் முறை கேட்பவருக்கு ஏதோ வேறு உலகைச் சேர்ந்த ஒலிகள் போலிருந்தன.

குதிரைகள் மூன்றும் மிரண்டன. மாறனும் மிரண்டுவிட்டான். குதிரைகளை அமைதிப்படுத்தித் தட்டிக் கொடுத்தனர். முதல் பிளிறலைத் தொடர்ந்து பல பிளிறல்கள் கேட்டன. அடியான் ஆறுதல் சொன்னான். ''பயமொன்றும் இல்லை. பல கஜேந்திரர்கள் ஒன்றாய்ச் செல்கிறார்கள். ஒன்றாய் வந்தால்தான் பிசகு!''

ஆனால், அந்த அடர்ந்த காட்டில் கஜேந்திர தரிசனம் அவர்களுக்கு கிட்டவில்லை. எனினும் சற்று பயத்துடனேயே சென்றார்கள். சாலையின் வளைவில் ஒரு யானைக் கூட்டத்தை பார்த்தால் என்னவாகும்? வழி விட்டு நிற்பதற்குக் கூட ஒதுங்கும் இடமில்லையே என மாறன் பயந்தான்.

இரண்டாம் நாள் பிரயாணத்தில் அவர்கள் சென்ற பாதை பெரியதாக இருந்தது. இதர ஊர்களிலிருந்து பல சாலைகளும் ராஜபாட்டையுடன் சேர்ந்துகொண்டன- சிறிய ஓடைகள் பெரிய ஆறு ஒன்றுடன் சங்கமிப்பது போலவே.

பயணிகள் பலரும் உடுத்தியிருந்த காவியாடையையும், செய்து வந்த பஜனைகளையும் கண்டதும், அவர்கள் திருகோணேஸ்வரரை தரிசிக்கவும், நேர்த்திக்கடனை செலுத்தவும் செல்கிறார்கள் என்று தெரிந்தது. திரள்திரளாக வந்து கொண்டிருந்த பக்தர் கூட்டம் வாய்விட்டுக் கேளாமலேயே திருகோணமலைக்கு வழியைக் காண்பித்தனர்.

சற்று நேரத்துக்கெல்லாம் வந்த கூட்டத்தில் பாதிப் பேர் இடது பக்கமாகத் திரும்பிய சாலையில் சென்றார்கள். விசாரித்ததில் அவ்வழி சென்றால் கன்னியாயி என்ற ஊர் இருந்தது என்றும், அந்த ஊரில் வெப்பத்தில் கொப்பளிக்கும் நீர் கொண்ட கிணறுகள்

உள்ளன என்றும் தெரியவந்தது. மாறனுக்குக் கோடிக்கரையின் சதுப்பு நிலத் தீப் பிழம்புகள் ஞாபகத்துக்கு வந்தன.

இராவணன் தன் தாய்க்கு இறுதி கிரியைகள் செய்ய வாளால் தரையில் துளையிட்டதால் உருவான கிணறுகள் அவையென்று பேசிக்கொண்டனர் எல்லோரும். அருகிலிருந்த மாரியம்மன் கோயிலின் கட்டுப்பாட்டில் அந்தக் கிணறுகள் இருந்தன என்றும் கேட்டதற்கு விவரித்தனர். அந்தச் சாலையில் திரும்பி நடந்து சென்ற பலரும் ஏதாவது ஊனம் அல்லது வியாதியுடன் தான் இருந்தார்கள். அதனால் அந்தச் சூடான நீருக்கு மருத்துவ குணங்கள் இருக்க வேண்டும் என யூகிக்க முடிந்தது.

திருகோணமலைக்கு சென்ற கூட்டத்தைப் பார்த்துவிட்டு ''இராவணன் இறந்த பின்னும் இந்த நாட்டில் இன்னமும் சிவனாரைக் கும்பிடுகிறார்கள் என்றால் அதிசயம் தான்'' என்றான் அடியான்.

மற்றவர்கள் தலையசைத்தனர். அதை எதிர்த்து ஏதேனும் சொல்ல முடியவில்லை. 'இராவணன் எப்பேற்பட்ட சிவபக்தன்!' ஒரு பொருளைப் பார்த்தால் தனக்கே வைத்து கொள்ளவேண்டும் என்ற ஆசை மனிதருக்கு வருவது இயற்கை. ஆனால், அவனுக்கோ கைலாய மலையையே தனக்கென எடுத்துக் கொள்ளவேண்டும் என்ற அளவுக்கு சிவ பக்தி.

ஆனால், ஒன்று. சிவபக்தி இராவணனுக்குப் பின்னும் ஈழத்தில் குறையவில்லை. தீவெங்கும் பல சிவன் கோயில்கள் இருக்கின்றன என்று போகும் வழியில் பக்தர்கள் சொல்லிக் கேள்வியுற்றனர். தீவின் நாலுபக்கமும் ஐந்து கோயில்கள் இருந்து தீவைப் பாதுகாக்கின்றன என்றும் சொன்னார்கள்.

''நகுலேஸ்வரம் வடக்கில், தொண்டீஸ்வரம் தெற்கில், கேதீஸ்வரமும் முன்னீஸ்வரமும் மேற்கில், கோணீஸ்வரம் கிழக்கில். பஞ்ச ஈஸ்வரம் கோயில்கள் இவை'' என அவர்களுடன் வந்த பக்தன் ஒருவன் சொன்னான்.

கோயிலைப் பற்றி தெரிய வேண்டியவையெல்லாம் தெரிந்த பின் மீண்டும் மூவரின் பேச்சும் அரசியலிலும் ஈழத்தின் நிலைமையைப் பற்றியும் இருந்தன. வந்த வேலையைப் பற்றியும் இருந்தது.

''வைணவரே, ஒரு நாலு வரிக் கவிதையை நம்பி இவ்வளவு தூரம் வந்துவிட்டோமே?'' என்றான் வந்தியத் தேவன்.

''இருவரிக் குறளைப் படித்து உலகம் வியக்கவில்லையா?'' என்று நம்பிக்கையூட்டினான் வைணவன். ''அதுபோல அவ்வளவு எளிமையானது அந்த கவிதை''



வந்தியத் தேவன் தலையை அசைத்தான் ''அது தான் எனக்கு பயமே. அந்த விடுகதையின் நோக்கமே, அந்தப் பொக்கிஷத்தின் உண்மையான உறைவிடத்தைவிட்டு அப்பால் நம்மைப் போகச் செய்வதுதான் என்று நினைக்கிறேன்'' என்றான். கிளம்பிய நாள் முதலாக அவனுக்கு நம்பிக்கையே இல்லை. அவன் பேச்சும் அதையே பிரதிபலித்தது.

எந்த நிலையில் அந்த பொக்கிஷங்கள் இந்த தீவுக்கு வந்தன என்று மாறன் வினவினான். அதற்கு பதிலாக அடியான் ''சோழருக்கும் பாண்டியருக்கும் என்றுமே ஒத்துவராது. ராஜசிம்ஹன் காலத்தில் இருவருக்கும் துவந்த யுத்தம் துவங்கியது. இறுதிப் போருக்கு முன் சற்று அமைதி நிலவியது. அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு பொக்கிஷங்களை பத்திரப்படுத்திக் கொண்டுவிட்டனர். இந்தப் பழம்பெரும் பதிக்கு திருப்பணி செய்த அரசன் ராஜசிம்ஹன்தான். அவன்தான் அந்த மணி மகுடத்தை ஒளித்தும்வைத்தான். அதனால் அந்த கிரீடம் இங்கு தானிருக்கவேண்டும்'' என்று நம்பிக்கையும் தெரிவித்தான்.

இவ்விதம் பேசிக்கொண்டு சென்ற மூவரின் பார்வையும் சிறிது தூரத்தில் இருந்த ஒரு பிரம்மாண்டமான மலையின் மீது விழுந்தது. காட்டின் நடுநாயகமாகத் தெரிந்த திருகோணமலையின் மேல் இருக்கும் கோணீஸ்வரர் கோயிலும் தென்பட்டது. ஆனால், அதிசயமாக சுவாசமும் உப்பு காற்றை உணர்ந்தது. மலை, பின்புறமிருந்த கடலை மறைத்தது போலும்!

மூன்று மலைகள் சூழும் இடத்தில் பெருமான் இருப்பதால் திருகோணமலை என்று பெயர் என்று அவர்களுக்கு ஏற்கனவே தெரியும். அடிவாரத்தில் சிறிய கிராமம் இருந்தது. முதலில், தங்குவதற்கு ஒரு மடத்தைக் கண்டுபிடித்தனர். குதிரைகளை அங்கேயே கட்டிக் களைப்பாறவிட்டுவிட்டு மூவரும் மலையில் ஏற முடிவெடுத்தனர்.

சற்றும் ஓய்வெடுக்க வேண்டுமென்று எண்ணவில்லை மூவரும். கண்ணைக் கட்டி காட்டில் விட்டாற் போலிருந்தது அவர்களுக்கு. அந்தக் கோயிலுக்கு அதி வேகத்தில் சென்று ஏதாவது துப்பு கிடைக்கிறதா என்று பார்க்கலாம் என்ற அவா.

மலைக்கோயிலுக்குச் செல்லப் படிகள் ஏற்படுத்தியிருந்தாலும் அவை வெயிலிலும் மழையிலும் பிளவுபட்டுக் கிடந்தன. படர்ந்து தழைத்திருந்த செடிகொடிகளை உராய்ந்து கொண்டு செல்ல வேண்டியதாயிருந்தது. ஆனால், அதைப் பற்றியெல்லாம் கவலைப்

படவில்லை யாரும். ஏறும்போதே மூவரின் கண்களும் ஏதாவது தடயங்கள் இருக்குமா என்று தேடின.

இலங்கை என்பது கடல் சூழ்ந்த பகுதிதான். அசுரன் ஆண்ட பகுதிதான். வேங்கையின் காலடியில் சிக்கித் தவிக்கும் பிரதேசம் தான். ஆனால், இருள் சூழந்த பகுதியென்றும் ஞாயிறே தாமதமாக எழும் பிரதேசம் என்றும் சொன்னால் என்ன அர்த்தம்? கோயிலுக்குச் சென்றால் ஏதாவது விடை கிடைக்குமா? இல்லை, வெறும் விபூதி பிரசாதம் தான் கிடைக்குமா?

ஏறும்வழியெல்லாம் சுற்றிலும் ஓங்கி வளர்ந்திருந்த மரங்கள் ஓரளவு நிழலை அளித்தன. இதைத்தான் இருண்ட பகுதி என்று சொன்னார்களோ? சற்று நேரத்துக்கெல்லாம் மலையின் உச்சியை அடைந்தார்கள். அதற்கு முன் கடலும் கண்ணுக்கு தெரிந்தது. நீல நிறப் புடவையை அணிந்த வண்ணம் கடல் அன்னை பவனி வந்தாள். ஒரு நொடி, கடலைக் கண்டு ரசித்தபின் மேலே ஏறினார்கள். கடலிலிருந்து புறப்பட்ட காற்று அவர்களை மலையிலிருந்தே தூக்கிச் சென்று விடும் போலிருந்தது.

மலையிலிருந்து, திரும்பிய பக்கங்களில் எல்லாம் அடர்ந்த காடுகள். கோணீசலரைச் சுற்றி இயற்கை இப்படித் தாண்டவ மாடுகிறதே? மலையுச்சிக் கோயிலில், காற்றுக்கும் வெயிலுக்கு கொஞ்சமும் குறைவில்லை. கோயிலுக்கு முன் மேற்கூரை யில்லாமல் வேலைப்பாடமைந்த கருங்கல் தூண்கள் மட்டும் நின்ற இடத்தை அவர்கள் அடைந்தார்கள்.

அங்கே பலரும் கோயிலைச் சுற்றியிருந்த மரங்களிலிருந்து பூஜைக்குரிய புஷ்பங்களைக் கொய்து கொண்டிருந்தார்கள். சிலர் மலர்களைத் தொடுத்து மாலையாக்குவதற்கு ஆயத்தமானார்கள்.

மூவரும் கோயிலுக்குள் சென்றனர். மிகவும் அழகான கோயில் ஈசனுடையது. ஆனால், கோயிலைப் பார்த்து மகிழ மூவராலும் முடியவில்லை. எங்காவது அந்த பொக்கிஷம் மறைந்திருக்கும் இடம் தெரியுமா என்ற எண்ணமே அவர்கள் மனதை ஆக்கிர மித்துக்கொண்டிருந்தது.

அவர்கள் பல போர்க்களங்களில் பழம் தின்று கொட்டையும் போட்டவர்கள்தான். ஆனால் அவர்களிடம் விடுகதையைக் கொடுத்து விடையைக் கண்டுபிடி என்றால் முடியுமா? அதற்கான பொறுமை அவர்களிடம் இல்லையே? எனினும் பிரதமர் கூறிய ஏவலைச் செய்வதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியில்லை. ஆனால், இந்தத் தேடுதல் வேட்டையில் ஒரு விசேஷம்; சிவன்



கோயிலின் கர்பக்கிரகம்வரை எட்டிப் பார்த்துவிட்டான் விரவைணவன்!

கோயிலின் முன் பாகத்தில் தேடிவிட்டு உள்ளே சென்றார்கள். கோயில் மிகவும் பெரிதென்று சொல்ல முடியாது. மலையுச்சியில் இருந்தபடியால், அத்தியாவசியமான பாகங்கள் மட்டும் இருந்தன. புண்ணிய தீர்த்தமொன்று 'பாவநாசம்' என்ற பெயரில் இருந்தது. கோயிலைப் பாண்டியர்தான் திருப்பணி செய்திருந்தார்கள் என்பதில் ஐயமில்லை. அதற்கேற்பக் கோயிலின் உட்கூரை முழுவதும் மீன்களின் சிற்பங்கள் காணப்பட்டன. எந்தக் குலத்தவர் திருப்பணி செய்தார்கள் என்று அறிவுறுத்த அப்படிச் செதுக்கு வார்கள் சிற்பிகள். சன்மானம் தரும் முதலாளிக்கு அவர்கள் செய்யும் நன்றிக்கடன் அது. காலம் உள்ளவரை அவர் குலத்தின் சேவைகளைப் பிரகடனப்படுத்தும் செயல் அது.

கோயிலுக்குள், அந்த மர்மக் கவிதைக்கு ஏற்றாற்போல் இடம் இருப்பதாகத் தெரியவில்லை. அது போலவே ஒரு மறைவான இடம் இருக்கின்றதாவென்று துருவித் துருவித் தேடியும் அவர்கள் கண்களுக்கு எதுவும் புலப்படவில்லை.

கோயிலின் பின்புறம் மதில் சுவரில் ஒரு ஜன்னல் இருந்தது. அது கற்களுக்கிடையே ஒரு துவாரமாய் இருந்தது. அந்த துவாரத்தின் வழியாகக் காற்று புயல்போல் கோயிலுக்குள் வந்தது. மலையுச்சிக் கோயில் என்பதால் அந்தத்துவாரம் வழியாகத் தங்கு தடையின்றி வாயு பகவான் கோயிலுக்குள் சஞ்சரித்து , கோணீஸ்வரரை தரிசித்தார்.

அந்த துவாரத்தின் நான்கு பக்கங்களிலும் மீன்களைச் சிற்பமாய் செதுக்கியிருந்தார்கள். நான்கு மீன்களும் அந்த துவாரம் வழியாகப் பார்ப்பது போல இருந்தது. நாமும் பார்த்தால் என்ன என்று மாறன் அதனுள் எட்டிப் பார்த்தான்.

புதிதாய் ஒன்றும் புலப்படவில்லை. மலையின் பின்புறம் ஒரு அடர்ந்த காடு தெரிந்தது. மரகத விரிப்பு ஒன்றை, கடவுள் அந்தப் பிரதேசத்தில் விரித்திருந்தான் என்றே தோன்றியது அந்த ஆரண்யத் தைப் பார்த்ததில். ஆனால், என்னவொரு அதிசயம்! ஆங்காங்கே வெவ்வேறு நிறங்களில் மரங்கள். அதில் பலவும் புஷ்ப அலங் காரத்துடன் காணப்பட்டன. தங்கத்தில் சரக்கொன்றை மலர்கள் கண்ணுக்குத் தென்பட்டன. காட்டில் தீப் போல சிவந்த பூக்களை கொண்ட மரங்கள். அதை அணைக்க வீசியெறியப்படும் நீர் போல நீல நிற மலர்கள்.

"ஆகா, என்ன அழகு!" என்று ரசித்தான் மாறன். முக்கால்வாசி வாழ்க்கையில் இயற்கையை ரசிக்காத மாறன் சமீப காலமாக அதிக ரசனை கொண்டிருந்தான். எனினும் அவன் மனதின் பின்னால் இருந்த ஐயம் மெல்ல வெளி வரத்தொடங்கியது "இந்த துவாரத்துக்கு இங்கு என்ன வேலை. அதைச் சுற்றி மீன்களைச் சிற்பமாய்ச் செதுக்க என்ன அவசியம்?" என்று கேட்டுகொண்டிருந்தது அவனது உள் மனம். பின்னர் திடீரென ஆரண்யத்தை உற்று கவனித்தான்.

கண்ணுக்கு எட்டியவரை பச்சை நிறம்தான். ஆனால், எத்தனை வகைப் பச்சைகள். அப்போது அவன் கண்கள் ஆங்காங்கே இருந்த ஒரு இளம் பச்சை நிறத்தை தொடர்ந்தன. அந்த இளம் பச்சையும் ஒரு கோர்வையாய் இருக்கவே, அவன் கண்களும் விடாமல் அதைப் பின் தொடர்ந்தன. அப்போது அவனது கண்களுக்கு ஒரு காட்சி தெரிந்தது. கண்டவுடன் அவன் உடல் ஒரு ஆட்டம் ஆடியது.

'கண்களே ஏமாற்றாதீர். அது என்ன பெரிய பசுமை நிற மீன் போலத் தோன்றுகிறதே! இது என்ன பிரமை. ஆகா! உண்மைதான். அது பிரம்மாண்ட மீனின் வரைபடம் தான்' என்று நினைத்தான் மாறன்.

பல நூறு காலடிகள் கடக்கும் அளவுக்கு ஒரு மீனின் உருவம் அந்தக் காட்டில் தெரிந்தது, பிரம்மாண்டமான வரைபடம்போல. ஆனால், இந்த ஆரண்யத்துக்குள் அது எப்படி வந்தது? இயற்கையாய் வர வாய்ப்பில்லையே?

பின்னர், அவனுக்கு யோசனை ஒன்று தோன்றியது. ஆம்! அப்படித்தான் இருக்கவேண்டும். இலையில்தான் எத்தனை நிறப் பச்சைகளுண்டு. அதில் இளம் பச்சை நிறம் கொண்ட இலைகளைக் கொண்ட பல்லாயிரம் மரங்களை யாரோ நட்டு ஒரு மீனின் உருவத்தை ஏற்படுத்தியிருந்தனர். அவன் பார்த்துக் கொண்டிருந்த காட்சி உருவாக சுமார் ஐம்பது ஆண்டுகளாவது ஆகியிருக்கும். ஓவியம்! காட்டில் அவ்வளவு பெரிய வேலையைச் செய்ய யாரால் முடியும்? அதுவும் இவ்வளவு சிரமப்பட்டுச் செய்வதால் யார், என்ன லாபம் பெறுவார்கள்? சரமாரியான கேள்விக் கணைகள் அவனைத் தாக்கின.

ஒருவர்பின் ஒருவராக மூவருமே அந்தக் காட்சியைப் பார்த்தனர். முதலில் அவர்கள் தங்கள் கண்களையே நம்பவில்லை. ஆனால், அதற்குப்பின் நம்பிக்கையில்லாமல் வந்த வந்தியத்தேவனுக்குக்கூட ஒரு உத்வேகம் வந்தது. என்ன ஒரு தடயம்! அந்த



ஓவியம் வானிலிருந்து மட்டும்தான் தெரியும். ராமர் போல புஷ்பக விமானம் ஒன்றைக் கண்டு பிடிக்க, மனிதனுக்கு ஒரு யுகமாகலாம். அதுவரை அந்த ரகசியம் காப்பாற்றப்படும். ஆனால், இந்தக் கோயிலின் பின் பக்கத்திலிருந்த துவாரம் வழியாகப் பார்த்தாலும் அது தெரியும்.

அந்த மீனின் வாயையொட்டிக் கொஞ்சம் திறந்தவெளி காணப்பட்டது. அந்தத் திறந்த வெளியை நோக்கி மீன் நீந்துவது போலிருந்தது, காற்றடிக்கும் போது.

இந்தக் காட்டில் எப்படி திறந்தவெளி? இருக்கும் இடத்தையெல்லாம் இயற்கையன்னைதான் ஆக்கிரமித்துக் கொண்டு விட்டாளே. ஒன்று இயற்கையான பாறையாக இருக்கவேண்டும்; அல்லது மனிதன் ஒருவனின் வேலையாக இருக்கவேண்டும்.

மீன் வடிவத்தில் நடப்பட்டு நீண்டு படர்ந்து ஓங்கித் தழைத்திருக்கும் அந்த விருக்ஷங்களின் காட்சி மலையிலிருந்து பார்க்கும் போது அற்புதமானது. ரகசியம் வெளிப்பட்டுவிட்டது! எத்தனையோ ஆண்டு காலமாக நெடிது வளர்ந்து நிற்கும் அந்த மரங்கள் ஒரு செய்தியைச் சொல்லுகின்றன.

திருகோணமலைக்குப் பின்னால் உள்ள பிராந்தியத்துக்குள்ளே மனிதர்கள் எளிதில் செல்லமுடியாது. ஆனால், மூவரும் செல்ல முடிவெடுத்தனர். கீழிறங்கி மலையைச் சுற்றி வந்தால் வானிலிருந்து தெரிந்த அடையாளம் கண்களுக்குத் தெரியாது. அந்த விருக்ஷ மீனைப் பார்த்துக் கொண்டே இறங்க வேண்டுமென்றால் மலையின் பின் புறமாகத்தான் இறங்க வேண்டும். படிகள் நிச்சயமாக இருக்காது. கஷ்டப்பட்டுத்தான் செல்லவேண்டும். மனித வாசமே எட்டமுடியாத அந்தரங்கமான இடத்தில் அந்தக் கிரீடத்தை ஒளித்து வைப்பது தானே நியாயம்?

❖ ❖ ❖

## அத்தியாயம் எழுபத்து ஏழு
## வனப்பிரவேசம்

அவசரம்அவசரமாக மீண்டும் ஒரு முறை கோணீஸ்வரரை தரிசித்துவிட்டுக் கோயிலுக்கு வெளிப்புறம் மூவருமாய் ஓடி வந்தனர். ஏமாற்றம் மட்டுமே திரை போல மூடியபோது ஒரு வழியைக் காட்டியது அவர்தான்.

கோயிலைவிட்டு வெளியேற நினைத்தபோது அடியான் மட்டும் ''ஒரு நிமிடம் இருங்கள்'' என்று சொல்லிவிட்டுக் கோயில் மடப்பள்ளிக்கு ஓடினான். வரும்போது கையில் கமகமக்கும் உணவுப் பொட்டலம் ஒன்றைக் கொணர்ந்தான்.

மதிலை ஒட்டியே கோயிலின் பின்புறமாய் மூவரும் வந்தனர். மலையின் முன்புறம் மட்டும்தான் படிக்கட்டுகள் இருந்தன. அதில் இறங்கினால் மலையைச் சுற்றியுள்ள காட்டையெல்லாம் கடக்க வேண்டும் என்று மலையின் பின்புறமாய்ச் செல்ல முடிவெடுத்தனர்.

கோயிலின் மதிலுக்கு வெளியில் ஒரு ஆள் நடக்க மட்டுமே இடம் இருந்தது. அந்த ஒற்றையடிப் பாதையையொட்டி மலையின் சரிவு தொடங்கிவிட்டது. அது வெகு நாளாய் மனிதர்களின் காலடி படாத பிரதேசமாக இருந்தது. ஆள்நடமாட்டம் இல்லாததால் சுற்றிலும் இன்னும் கொஞ்சம் காடுகள் மண்டிப் போயிருந்தன. கோயிலின் பின் பக்கத்தில் அந்த துவாரத்துக்கு நேரே ஒரு சிறிய பாதை கண்ணுக்குத் தென்பட்டது.

ஒரே ஆச்சரியம். இந்தக் காட்டின் மத்தியில் ஆங்காங்கு யாரும் குடிசை போட்டுக் கொண்டு வசிக்க வாய்ப்பில்லை. விலங்குகளைத் தேடிவரும் வேடுவர்கள் சிலரே அந்தப் பாதையை ஏற்படுத்தியிருக்கவேண்டும்.

ஆனால், அந்தப் பாதையில் கிடந்த முள்ளும் கல்லும் காலணிகளுக்கே சவாலாய் இருந்தன. அவற்றை மீறியும் தாக்கின. கால்களைப் பதம்பார்த்தன. அவ்வப்போது பாறையில் அமர்ந்தபடி ரணமாய் இருந்த தன் கால்களை ஆராய்ந்த மாறனுக்கு அலுப்புத் தட்டிவிட்டது.

செங்குத்தாய் வேறு இருந்தது மலையின் பின்புறம். அதனால் மிகவும் நிதானமாய்த்தான் நடந்தார்கள். நினைத்த அளவுக்கு வேகமாக நடக்க முடியவில்லை அவர்களால்..

''என்ன வல்லா, இப்போது நம்பிகை பிறக்கிறதா?'' மாறன் வினவினான்.

''இளம் சம்புவராயரே! இன்று காலை வரையில் தாங்கள் இந்த இலங்கைத் தீவில் வீணாக நேரத்தை செலவிடுகிறீர்கள் என்ற கருத்துடனேயே நான் இருந்தேன். அதுவரை அதைப் பற்றி உம்மிடம் நெடுநேரம் விவாதித்துக் கொண்டும் இருந்தேன். அந்தக் கிரீடம் இங்கிருக்கும் என்று நான் ஒப்புக்கொள்ளவில்லைதான். ஆனால், இன்று மாலையில், அதோ அந்தக் கோயிலில் இருக்கிறாரே கோணீசர். அவர் ஓர் செய்தி சொன்னார். அதைக்



கேட்டபின்தான் என் கருத்தை மாற்றிக் கொண்டேன்'' என்றான் வந்தியத் தேவன்.

மலையின் மேலிருந்து பார்ப்பதற்கு வெகு சமீபத்தில் இருப்பது போலிருந்தது மரங்களால் அமைக்கப்பட்ட அந்த மீனின் அமைப்பு. ஆனால், திருகோணமலையில் இருந்து கீழிறங்கும் முன்பே இருட்டிவிட்டது. சரியாக அடிவாரத்தை அடைந்தபோது ஒரே கும்மிருட்டு. ''இனி இந்தக் காட்டில் எதையும் தேட முடியாது. இருட்டில் சென்று என்னத்தை தேடுவது?'' என மூவரும் கலந்து யோசித்து, காலை உதயத்துக்கு முன்னால் புறப்பட்டுப் போவது என்று தீர்மானித்துக் கொண்டனர். முன்யோசனையுடன் கோயில் பண்டாரத்திடம் அடியான் வாங்கி வந்த பிரசாதத்தை உண்டுவிட்டு ஒரு மரத்தடியில் அமர்ந்தார்கள்.

'அங்கே மாளிகையில் இந்த நேரம் தாதிப் பெண்கள் அருகில் நின்று மயில் இறகுச் சாமரத்தினால் விசிறியபடி கானம்பாடி தூங்க வைத்திருப்பார்கள். இங்கே காட்டில், கட்டாந்தரையில் அமர்ந்து கோயில் பிரசாதத்தை உண்டுவிட்டு மனமகிழ்ந்து பேச முடிகிறதே இவர்களால்? இவர்களைப் பற்றி நன்கறியாதவர்கள், இருவரையும் இந்த நிலையில் கண்டால் இவர்களுக்கு பித்துப் பிடித்துப் போனது என்றுதான் சொல்லுவார்கள்' என்று நினைத்துக் கொண்டான் அடியான்.

பின் வெகு நேரம் இலங்கையின் அரசியல் நிலவரத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். இன்று இந்தத் தீவை இரண்டாகப் பிரித்துகொண்டுவிட்டனர் சோழரும் சிங்களவரும். 'நாடு சோழருக்கு. காடு சிங்களவருக்கு' என்று நேற்று அடியான் சொன்னது நினைவுக்கு வந்தது மாறனுக்கு.

''வைணவரே. இந்தக் காட்டில் மஹிந்தரின் சேனைகள் இருக்குமோ? நாம் மூவர்தானே?'' என்றான். கோடிக்கரையில் தன்னை விட அதிக ஆள் பலம் கொண்ட ரவிதாசனின் ஆட்களுக்கு பயந்து ஒளிந்த பின்பு மாறனுக்கு வீரத்துடன் ஆள்பலமும் இருக்கவேண்டும் என்று நன்றாகவே புரிந்திருந்தது.

''சோழர் வேங்கைக்கும் சிங்களவர் சிங்கத்துக்கும் பெரும் போர் நடந்துமுடிந்துவிட்டது. ஐந்து வருடமாக இலங்கையில் யுத்தமே நடைபெறவில்லை. இங்கு காடுகளுக்கா பஞ்சம்? காடே அவனுக்கு பிடித்த பிரதேசம் என்றால் அங்கேயே தங்கட்டும் என்று அவன் வெளிவரமுடியாமல் முக்கியமான இடங்களில் தாவடி போட்டுக் கொண்டு தங்கியிருந்தார்கள் சோழர்கள். மாயாவிகளாய் மறைந்த இலங்கை அரசன் மகிந்தனும்

அவனுடைய சேனா வீரர்களும் காடுகளிலே, மலைகளிலே எங்கே போய் ஒளிந்து கொண்டார்களோ, தெரியவில்லை. ஆனால், ரோஹண நாட்டில்தான் அவர்கள் நடமாட்டமெல்லாம். இந்த பகுதியில் இல்லை'' என்றான் அடியான்.

''நமக்கும் முழு வெற்றியில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். இப்படி வேலையில்லாமல் நம் நாட்டு படையின் பெரும் பகுதியை இங்கேயே கட்டிப்போட்டுவிட்டார்களே?'' என்றான் வந்தியத் தேவன்.

''கட்டிப்போட்டது என்னவோ உண்மை தான். ஆனால், வேலையில்லாமல் இல்லை. போரில்லாத காலங்களில் சோழ நாட்டு வீரர்கள் இலங்கையில் திருப்பணிகளெல்லாம் செய்கின்றனர். பழைய போர்களில் அநுராதபுர நகரமே நாசமாகிவிட்டது. அங்கிருந்த பழமையான புத்த விஹாரங்கள், கோயில்கள், தாது கர்ப்ப கோபுரங்கள் எல்லாம் இடிந்து பாழாய்க் கிடக்கின்றன. பொன்னியின் செல்வரின் கட்டளையின் பேரில் இப்போது நம்வீரர்கள் இடிந்த அக்கட்டடங்களை எல்லாம் புதுப்பித்துக் கொண்டிருக்கிறார்கள்'' என்று விளக்கம் கொடுத்தான் அடியான்

''எதிரி நாட்டை சீரமைப்பதா? அருள்மொழி வர்மருக்கு அவ்வளவு பெரிய மனமா?'' என வினவினான் மாறன்.

''ஒரு காலத்தில் இந்தப் பூமண்டலத்தை ஏக சக்ராதிபதியாக ஆளத்தகுந்தவர் ஒருவர் உண்டு என்றால் அவர் இளவரசர் அருள்மொழி வர்மர் தான். பிறவியிலேயே அத்தகைய தெய்வ கடாட்சத்துடன் சிலர் பிறக்கிறார்கள். அதில் அவரும் ஒருவர் என்று நினைத்தோம். ஆனால், நினைத்தது நடக்க வில்லை'' என்றான் வந்தியத் தேவன்.

மறுப்பின்றி ஒப்புகொண்டான் அடியானும். ''தோல்வியைச் சந்தித்துப் பதவி விலகிய அரசர்களைக் கண்டுள்ளேன். தாமாக ஒரு நிர்பந்தத்தில் வெளியேறியவர்களைக் கண்டுள்ளேன். எனது ராமபிரான் கூட அதில் ஒருவர். தந்தையின் சத்தியத்தைக் காக்க அரியணையைத் துறந்தார். ஆனால், அருள்மொழி வர்மர் தாமாகவே வெளியேறினார்'' என்றான்.

''ஆகா! உமது ராமனைவிடப் பொன்னியின் செல்வர் உயர்ந்தவர் என்று ஒப்புக்கொள்கிறீரா?'' என்று வம்புக்கு இழுத்தான் வந்தியத் தேவன்.

''கடவுளை ஒப்பிடுவது அவருக்கும் பிடிக்காது. ஆனால், ராம பிரானின் வாழ்க்கையைப் பார்த்தே தன் வாழ்க்கையை



நிர்ணயித்து கொண்டிருகிறார் என்று நினைக்கிறேன். ராமன் போல ஏகபத்தினி விரதனாய் இருப்பதும் அதனால்தான்'' என்றான் அடியான்.

மனதுக்குள் சிரித்துக் கொண்டான் மாறன்.

வந்தியத் தேவன் ''சோழர்களிடையே இருந்த ஒற்றுமை இங்கு இல்லை. இலங்கை ராஜகுலத்தின் சரித்திரத்தைக் கூறும் 'மகா வம்சம்' என்னும் கிரந்தத்தில், மகன் தந்தையைச் சிறையில் அடைத்தான்; தந்தை மகனை வெட்டிக் கொன்றான்; தாய் மகனுக்கு விஷமிட்டுக் கொன்றாள், என்ற கொடும் பாதகங்களை இலங்கை அரச குடும்பத்தினர் செய்தனர் என்று வரிசைப்படுத்துகிறது. ஆனால், ஒரு இடத்தில் கூட தாயாதிச் சண்டையில்லாமல் ஒரு அரசன் பதவியேற்றான் என்றோ, பதவியேற்ற அரசன் தன் சகோதரர்களிடமிருந்து தொல்லைகள் இல்லாமல் ஆட்சி புரிந்தான் என்றோ இல்லை.''

அடியான் அதற்கு ''அரச குழந்தைகளை வளர்க்கும் போதே 'என் கண்ணே! இந்தச் சிங்கள சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் நீ சக்கரவர்த்தியாக வீற்றிருக்கும் நாள் வரும்' என்று சொல்லித்தான் தாய்மார்கள் வளர்ப்பார்கள். அந்தக் குழந்தையின் மனதில் அது ஆழமாகப் பதிந்துவிடும். பின் அவர்கள் வளர்ந்த போது வரும் போட்டியில் அவர்களுக்கும் நாட்டுக்கும் பெரும் சேதம் ஏற்படும். இது சிங்கள நாட்டில் மட்டுமல்ல சோழர்தேசத்திலும் நடைபெற்றதுதானே?'' என்று சொல்லிவிட்டான்.

வந்தியத் தேவன் மௌனமானான். சோழ நாட்டில் நடந்த தாயாதிச் சண்டையில்தான் அவனும் மாறனும் எதிர் எதிரணியில் சேர்ந்து பல நாள் நட்பிலிருந்து பிரிந்தார்கள். 'அதை ஏன் இந்தப் பொல்லாத வைணவன் ஞாபகப்படுத்துகிறான்?' என்று மனதுக்குள் சபித்தான்.

ஆனால், மாறன் இதற்குள்ளாக அடியானின் வம்பு தும்புகளுக்கு அப்பாற்பட்டவனாக ஆகியிருந்தான். ''சம்புவராயர் குலத்தில் தனியொருவனாய்ப் பிறந்ததால் எனக்குப் பிரச்சனையில்லை'' என்றான் மாறன்.

வந்தியத் தேவனும் சேர்ந்து கொண்டான் ''வாணர் குலத்தில் பிறந்த என்னைப் போல நாடே இல்லையென்றாலும் பிரச்சனையேயில்லை'' என்றான்.

''என்னைப் போல அரச குடும்பத்தில் பிறக்காவிட்டாலும் பிரச்சனையே இல்லை தான்'' என்றான் அடியான். ''சண்டை

யடித்துக்கொண்டாலும் தந்தையின் நாமக்கட்டிக்கும், கைத்தடிக்கும் தான் சண்டை'' என்றான். மூவரும் சிரித்தார்கள்.

ஒரு நொடி சிந்தித்துவிட்டு ''இதில் பொன்னியின் செல்வர் போல சிங்காதனத்தைத் தியாகம் செய்ய யாரிருப்பார்?'' என்றான் மாறன். '' என்ன ஒரு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த சம்பவம் அது! அது நிகழ்ந்த நாட்களில் நாம் வாழ்கிறோம் என்பதே பெருமைதான்'' என்றான்.

''பொன்னியின் செல்வர், சோழர் சிம்மாசனத்தை மட்டும் தியாகம் செய்யவில்லை. ஒரு காலத்தில் இந்த ஈழத்துச் சிங்காதனத்தையும் தியாகம் செய்தார்'' என்றான் வந்தியத் தேவன்

''என்ன!'' மாறனுக்கு ஆச்சரியம். சிங்களச் சிங்காதனத்துக்கும் பொன்னியின் செல்வருக்கும் என்ன சம்பந்தம்?

''அவர் போரில் இடிந்துபோன விஹாரங்களைக் கட்டிய ஆர்வத்தைக் கண்டு புத்தர்களின் மகாசங்கம் அவருக்கு இந்தக் கிரீடத்தை கொடுத்தது. அவரோ வேண்டாமென்று சொல்லி விட்டார்.''

இப்படிப் பல விஷயங்களை இரவில் வெகு நேரம்வரை மூவரும் பேசிக் கொண்டிருந்தனர். பேசிக் கொண்டிருக்கை யிலேயே கண்கள் சொக்கின. இரு வார்த்தைகளுக்கு இடையில் இடைவெளி அதிகரித்தது.

மூவரும் ஒரே நேரத்தில் படுக்கமுடியாது என்று முடிவெடுத்தனர். முதலில் வந்தியத் தேவரும் ஆழ்வார்க்கடியானும் தூங்க வேண்டியதென்றும் கந்தமாறன் காவல் காக்க வேண்டியதென்றும் முடிவெடுத்தனர். இரவு நடுநிசியில் மாறன் உறங்கப் போகும் போது வந்தியத்தேவன் காவல் காக்கவேண்டும் என்று முடிவெடுத்தனர்.

முதலில் கொசுக்களையும் இதர துஷ்டஜீவன்களையும் விரட்டுவதற்காக சிறிய அளவு தீயை உண்டாக்கினார்கள். மாறன் விறகுத் துண்டுகளையும் காய்ந்த புல்லையும் எடுத்துவர, அடியான் தன் கையளவு இருந்த மரத்துண்டில் மாறனின் வாளின் முனையைக் கொண்டு ஒரு துவாரத்தை செய்துவிட்டான். அந்த துவாரத்துக்குள் செல்லும் அளவுக்கு ஒரு காய்ந்த கிளையை எடுத்து வைத்து, மோரைக் கடைவதுபோல இரு கைகளால் கடைந்தான். அவ்வப் போது அந்த துவாரத்தில் மணலையும் போட்டான். சற்று நேரம் கழித்துக் காய்ந்த புல்லை துவாரமும் குச்சியும் சந்திக்கும் இடத்தில் போட்டான். பின் திடீரென்று புல் தீப்பற்றிக் கொண்டது. அவன் கையைக் கொண்டு கடைந்ததில் ஏற்பட்ட வெப்பம் அந்தப்



புல்லைத் தாக்கியது. அந்தப் புல்லை எடுத்துத் தரையில் போட்டு அதன் மேல் எரியக்கூடிய இதர பொருட்களையும் போட்டான். மரத்துண்டுகளின் இடுக்குகளின் வழியாகத் தீயின் ஜுவாலைகள் எரியத் தொடங்கின. அந்த இருளில் மஞ்சள் நிறத்திலிருந்த அக்கினி பகவான் அவர்களுடைய விருந்தாளியாக வந்துவிட்டார்.

கால் நீட்டிப் படுத்த நொடியில் மற்ற இருவரும் தூங்கிவிட, மாறன் சற்று நேரம் அந்தக் காட்டின் அமைதியை ரசித்தான். முழுவதுமான ஒரு அமைதி என்று சொல்ல முடியவில்லை. அருகில் அடியானின் குறட்டை ஒலி கேட்டது. அது காதுகளுக்கு பழகிய உடன் இருளடர்ந்திருந்த அந்தக் காட்டில் பலவகை சப்தங்கள் வந்தன என்பதை அறிந்தான். நாலாபக்கமும் கூர்ந்து கவனிக்க லானான். காடு அமைதியாகத்தான் இருந்தது. இந்த இலங்கைத் தீவுக்கு வந்ததிலிருந்து காரியங்கள் எதிலும் வெற்றி பெறவில்லை யென்றாலும் தங்களை எவ்வித ஆபத்துக்கும் உட்படுத்திக் கொள்ளவில்லை. இலங்கையில் யுத்தம் நடக்கிறது என்று சொன்னால் யாராலும் நம்பக்கூட முடியாது.

பின் அவன் தனக்கு முன் இருந்த தீயை கவனித்தான். அதையே மாறன் கொஞ்சநேரம் கண்கொட்டா ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். எப்படியொரு கோரப்பசி இந்த அக்கினி பகவானுக்கு? மரத்தையும் புல்லையும் அல்லவா இப்படி ருசித்து சாப்பிடுகிறார். அதுபோலவே எதை போட்டாலும் உண்ணத் தயாராக இருந்தார் அக்கினி பகவான். அவனுடைய உள்ளத்தில் அலைக்கு அடுத்து அலையென எத்தனையோ எண்ணங்கள் தோன்றி மறைந்து கொண்டிருந்தன. அத்தனையும் இந்த தீயை மூட்டியது தான்.

வந்தியத் தேவனுக்கு மணமுடிக்க இருந்த தன் தங்கை மணிமேகலை மனமொடிந்து செத்தபோது அவளுக்கேற்றிய சிதை நினைவுக்கு வந்தது. அடுத்து அவன் மாளிகையை இதே தீ ருசித்து ருசித்துத் தனக்கு இரையாக்கிக் கொண்டது ஞாபகம் வந்தது. தங்கைக்கு தகனக்கிரியை நடந்தபோதும் சரி, தன் அரண்மனை எரிந்து சாம்பலானபோதும் சரி, இந்தத் தீதானே முன் நின்று காரியங்களைச் செய்தது?

பின் அந்த துயர நினைவுகளிலிருந்து விடுபட முயற்சி செய்தான். ஆனால், அவையும் அடியானின் குறட்டை சப்தமுமே அவனிடம் தூக்கத்தை நெருங்க முடியாதபடி செய்தன என யூகித்துக் கொண்டான். ஆனால், அதெல்லாம் எவ்வளவு நேரத்துக்கு? மெல்ல, மெல்ல மாறனின் கண்களும் சொக்கியது.

'இன்னும் சற்று நேரத்துக்குள் பொழுது விடிந்துவிடும். பாவம் வந்தியத் தேவன். அவனை ஏன் எழுப்ப வேண்டும். நாமே இரவு முழுவதும் காவல் காத்துவிடலாம். இரவெல்லாம் தூங்காமல் தவித்துத் தவித்து நமக்குப் பழகிப்போனது' என்று மாறன் நினைத் தான். ஆனால், அவன் பல நாள் இரவு உறங்காமல் இருந்தது, கொலை செய்யப்பட்ட ஆதித்த கரிகாலன் அடிக்கடி நினைவில் வந்து தொல்லையூட்டியதால்தான். கடம்பூர் எல்லையைக் கடந்த பின்தான் அந்த ஆவி அவனைத் தொல்லைப்படுத்தவில்லை.

கடந்த சில நாட்களில் உடல் நோகப் பிரயாணம் செய்ததும் பல நாட்கள் இரவு கண் விழித்ததும் சேர்ந்து கொண்டதால், கண்ணைச் சுழற்றிக் கொண்டு தூக்கம் வந்தது. அதனால் தன்னையறியாமல் மாறனின் தலையும் ஆடத் தொடங்கியது. மாறன் காவல் காக்கவேண்டிய காலத்தில் உறங்கிவிட்டான்.

எவ்வளவு நேரம் இப்படிக் கழிந்தது என்று அவனுக்குத் தெரியாது. ஆழ்ந்த நித்திரையில் இருப்பவருக்கு இடி இடித்தாலும் காது கேட்காது. என்ன ஒரு விந்தை? நித்திராதேவி வீசும் மோக வலையில் காது கேட்காது. கண் தெரியாது. வாய் பேசாது. ஒரு தற்காலிக மரணம் போலத்தான் நித்திரையும்.

அப்படிப்பட்ட நிலையில் நம் கதாபுருஷர்கள் இருக்கையில் அவர்களைச் சுற்றி பலவும் நடந்தன. ஆழ்ந்து உறங்கியதில் அவ்விடத்தில் ஏற்பட்ட அந்நியருடைய பிரவேசத்தை அவர்கள் கவனிக்கவில்லை.

மாறனின் கனவில் அவன் கோடிக்கரையில் இருப்பதாக எண்ணினான். புதைசேற்றில் விழுந்தான். பின்னர் மீண்டு கலங்கரை விளக்கை நோக்கி ஓடினான். அதன் மேலிருந்த தியாக விடங்கர் தீப் பிழம்புகள் கொண்ட கரித்துண்டுகளை அவனைப் பார்த்து விட்டெறிந்தார். அவன் நகர்ந்துகொள்ளவே, அவை யெல்லாம் ஆகாயத்தில் சென்று விண்மீன்களாயின. பின்னர் அந்த வானத்தில் இருந்த அமைதியான நகரில் சென்று சங்கமித்தன.

பின்னர் மாறன் மெல்ல நடந்தான், கடற்கரையோரமாக. தூரத்தே ஒரு மலை. ஆகா, திருகோணமலை எப்படிக் கோடிக் கரைக்கு வந்தது? கோடிக்கரையும் கோணமலையும் ஒன்றுதானா? இது என்ன மரங்கள் கடலாகின்றனவே. நிலத்தின் மீது சிறிய மீன்கள் லட்சம் லட்சமான எண்ணிக்கையில் வருகின்றனவே. வந்து அவனைக் கடிக்கின்றனவே!

அதில் ஒரு மீனின் பல் நீண்டு நீந்தி வருகிறது. இவன் கண்ணைக் கொத்த வருகிறதே! முன் ஜாக்கிரதையாகத் தலையை அசைத்தான்



மாறன். கண்ணுக்கு அது வைத்த குறி தப்பியது. ஆனால், கண்ணுக்கு கீழே அது கடித்துவிட்டது. மாறன் திடீரெனக் கண் விழித்து எழுந்தான்.

அவனை விழிப்புறச் செய்தது ஏதோ ஒன்று கூர்மையாகக் கண்ணுக்கு அடியில் குத்தியதுதான். எறும்புக்கடியை போலிருந் தது. மங்கிய ஒளியில் பார்த்தால் அது பளபளக்கும் ஒரு வாளின் முனை; இன்னுமொரு நகமளவு மேலே அதை நகர்த்தினால் கண்ணைப் பதம் பார்த்துவிடும் அதன் கூர்மை!

கத்தி லேசாகக் குத்திய பிறகே மாறன் துயிலெழுந்தான். விழித்துக் கொண்ட பிறகும் முதலில் அது கனவுதான் என்று நினைத்தான். ஒரு பயங்கர சொப்பனத்திலிருந்து விழித்து எழுந்த வன், இப்போது கண்டது கனவல்லவென்றும் உண்மையான பயங்கரம் என்றும் உணர்ந்தான்.

எப்போதும்போல உறக்கம் நீங்கிய பிறகும் சுயஉணர்வு வருவதற்குச் சிறிது நேரம் பிடித்தது. அந்தி சாயும் பொழுதில் எது காலை, எது மாலை, என மனம் குழம்பும். அது போல எது உண்மை, எது கனவு என்று எண்ணிப் பார்க்கமுயன்றவனுக்கு ஒரே குழப்பமாயிருந்தது.

இரவில் மூட்டிய தீயணைந்து போய் நூல் போல மெல்லிய புகைப்படலம் பரவியிருந்தது. அது மட்டும் ஓரக் கண்ணில் தெரிந்தது. மாறன் நிமிர்ந்து பார்க்கவில்லை. திரும்பிப் பார்க்க வில்லை. எனினும் மற்ற இருவரும் இதே நிலையில்தான் இருந்தார்கள் என்று உணர்ந்தான். இரவெல்லாம் கட்டையைப் போல் கிடந்து தூங்கிவிட்டுக் காலையில் எழுந்ததும் கண் முன் கத்தியை பார்த்தால் எப்படியிருக்கும்? சற்று நேரத்தில் மூவரும், முழுவதுமாய் விழித்துக் கொண்டார்கள். இது கெட்ட கனவல்ல; அதை விட மிக மோசமான நிஜம் என்று தெரிந்து கொண்டார்கள்.

❖ ❖ ❖

## அத்தியாயம் எழுபத்து எட்டு
## கட்டுக்கள் அவிழ்ந்தன!

**க**ன்னத்தில் எறும்புக்கடி போல தோன்றிய அந்த வாளின் ஸ்பரிசம் மூவரையும் ஏக காலத்தில் விழித்து எழச்செய்தது.

மாறன் அமர்ந்து கொண்டிருந்தான். மற்றவர் இருவரும் கால் நீட்டி உறங்கிவிட்டனர். எனினும் எதிரியின் செயல் மூவரையுமே ஒரே நிலையில் வைத்து வேடிக்கை பார்த்தது. ஆழ்ந்த தூக்கத்திலிருந்து கண்விழித்து எழுந்தபோது, முகத்துக்கு முன் பளபளவென வாள்கள் தெரிந்தன. அந்த வாள் முனையில் அவர்கள் வாழ்க்கை ஊசலாடியது.

ஆனால், வாரிச் சுருட்டிகொண்டு எழவேண்டும் என்று நினைத்தாலும் முடியவில்லை. அந்த விஷயத்தில் மூவருமே ஜாக்கிரதையாக இருந்தார்கள்.

சுற்றுமுற்றும் கண்களின் மணியை மட்டும் சுழற்றி எதிரிகளைக் கணக்கெடுத்தனர். எதிரிகள் ஐவர் இருந்தனர். அவர்கள் முகத்தில் பாதியை மறைத்து முகமூடியைக் கட்டிக் கொண்டிருந்தார்கள். ஐவரில் நடையிலும் பாவனையிலுமிருந்து இருவர் மிகவும் முதியவர்கள் என்று மட்டுமே தெரிந்தது. வேறு விவரங்கள் அம்பலமாகவில்லை.

முகத்தை முழுவதுமாக மூடாத துணிக்கு மேல் தெரிந்த கண்ணால் அவர்கள் மர்மமாகப் பார்க்கும் பார்வை மூவரையும் அச்சுறுத்தியது. இலங்கையில் பல நாட்கள் சிங்களவருடன் கொடூரமாகச் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர் சோழர். கைதிகளைப் பிடிப்பதில் இருவருக்குமே ஆர்வமில்லை. சாகும்வரை போரிடுவோம் என்னும் தீவிரம்தான் இருவருக்கும் இருந்தது. இவர்கள் அந்த போரில் தப்பிய சில சிங்களவராக இருக்குமோ?

நேற்று மூவரும் நடந்துவந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்தில் காட்டுப் புதர்களுக்கு மத்தியில் ஏதோ ஆள் நடமாட்டம் இருந்த ஞாபகம் வந்தது. 'ஆகா, நம் காலடியின் எதிரொலியென்று நினைத்துவிட்டோமே! இவர்கள் நம்மை நெடுந்தூரம் தொடர்ந்து வந்துள்ளார்கள்' என்று வந்தியத் தேவனுக்கு தோன்றியது.

வீரமாய் எழுந்தாலும் கையில் கத்தி எடுத்துப் போராடக் கூடிய நிலையில் அவர்கள் இல்லை. ஏன் என்றால் அவர்களுடைய கத்தியும் வைத்த இடத்தில் இல்லை. எதிரிகள் பிடித்திருந்த ஆயுதங்



களில் மாறன் வந்தியத் தேவன் இருவரின் வாள்களும் இருந்தன. அடியானின் கைத்தடி மட்டும் தரையில் கேட்பாரற்றுக் கிடந்தது.

ஆகா, மாறன் மட்டும் தூங்கவில்லையென்றால் அருகில் வருமளவுக்குக்கூட எதிரிகளிடம் ஆயுதபலமில்லை. எதிரி ஏந்திய ஆயுதங்களில், ஒரே ஒரு பட்டாக்கத்தி மட்டும்தான் அவர்களுடையது.

'தூங்கும்வரை காத்திருந்துவிட்டு நம் ஆயுதத்தையே எடுத்து நம்மை சிறைப்பிடித்துவிட்டனர். ஆனால், யாரிவர்கள்? எதற்காக நம்முடன் விரோதம் பாராட்டுகிறார்கள்?' என்று எவ்வளவு நேரம் மூளையைக் கசக்கினாலும் ஒன்றும் தோன்றவில்லை?

சிறைப்பிடிக்க வந்தவர்கள், படுத்திருந்த இருவரையும் கத்தி முனையிலேயே எழச்சொன்னார்கள். மூவரும் ஒருவருக்கு அடுத்து ஒருவராய் தரையில் அமர்ந்திருக்க அவர்களை சிறைப்பிடித்தவர்கள் அரைவட்டமாக சுற்றி நின்றனர்.

தங்களுக்குத் தீங்கு செய்யத் துணிவுள்ளவன் இந்த உலகில் இருக்கக்கூடாது என்று கருதும் வீரர்கள் இன்று பேச்சு மூச்சின்றி, அமைதியாய் அமர்ந்திருந்தனர். தப்பிக்க முயல்கிறோம் என்று எதிரி தப்பர்த்தம் செய்து கொள்ளும்படியாக நடந்துகொள்ளக் கூடாது. தப்பமுயன்றால் அந்த க்ஷணமே ஆளுக்கொரு வாள் முனையென அவர்கள் கண்கள் மீது ஏக காலத்தில் பாய்ந்து விடும்! பின் உலகமே இருண்டு போய்விடும்.

சாகத் துணிந்தவன்கூடக் குருடனாய் ஆக பயப்படுவான் என்று அறிந்தவன் எதிரி. அப்புறம் மீதி வாழ்க்கை முழுதும் கொத்தைக் கண்ணுடன் திரிய வேண்டியதுதான். உலகே வெறும் இருட்டு தான். குருடான வாழ்க்கையைப் பற்றி எண்ணிய உடனே யாருக்கும் கை கால்கள் வெடவெடத்துப் போய்விடுமல்லவா?

ஆனால், ஒன்று. மூவருக்கும் நன்றாய் மாட்டிக்கொண்டோம் என்று ஐயமறத் தெரிந்தது. மாறன் காவல் காத்த லட்சணத்தை நினைத்து நொந்து போனார்கள் மற்ற இருவரும். மாறனும் மனம் வெட்கினான். எதிர்ப்புக் காட்டவில்லையென்றாலும் மாறன் விழித்திருந்தால் குறைந்த பட்சம் ஒரு சப்தமாவது செய்திருப்பான். தூங்கிய இருவருடன் சேர்ந்து அவனும் தூங்கிவிட்டான் என்பதில் சந்தேகமே இல்லை. இல்லையென்றால் இப்படிக் கூண்டுக்குள் மாட்டித் தவிக்கும் எலிகளைப் போல அகப்பட்டுக் கொண்டு இருப்பார்களா?

உடனடியாகத் தப்பிக்க வழியேதும் அகப்படவில்லை என்று தெரிந்தவுடன் இதர விஷயங்களைப் பற்றி யோசித்தனர். பல

குழப்பங்களுக்கு இடையில் ஒன்று மட்டும் உறுதியாகத் தெரிந்தது. எதிரி அவர்களைக் கொல்வது என்று முடிவெடுத்திருந்தால் உறங்கும்போதே கொன்றிருப்பார்கள். இத்தனை நேரம் அவர்களும் யமலோகத்துக்கு நிச்சயமாக யாத்திரை மேற்கொண்டிருப்பார்கள்.

அடியானுக்குப் புரியவில்லை. வந்தவர்கள் துர்நோக்கத்துடன்தான் வந்திருக்கிறார்கள் என்று தெரியும்; ஆனால், யாரென்றுதான் தெரியவில்லை. யாரென்று தெரிந்தால் நோக்கத்தை யூகித்திருக்கலாம். இவர்கள் மனத்தில் என்ன வைத்துக் கொண்டு தங்களை பிடித்தார்களோ என்று எண்ணும்போதெல்லாம் அவன் உள்ளம் பதைபதைத்தது. சிறைப்பிடித்த அந்த வீரர்களின் நோக்கம் எவ்வளவு யோசித்தாலும் முதலில் மூவருக்கும் விளங்கவில்லை. 'யாரிவர்கள்? ஏன் நம்மை பிடித்தார்கள்? கொள்ளையர் என்றால் இருப்பதைப் பிடுங்கிக் கொண்டு சென்று விடுவார்களே?'

முதல் முறையாக வந்தவர்கள் பேசினார்கள். அதில் ஒருவன் தலைவன் என்று தெரிந்தது. அவனே வாய் திறந்தான். அவன் வாயின் மேல் மூடியிருந்த கறுப்புத் துணி மட்டும் அசைந்ததை வைத்து அவனை நோக்கினார்கள் மூவரும். ''பேசாமல் அமருங்கள். தப்பிக்க நினைக்காதீர்'' என்றான் அந்த முதியவன். அப்புறம் ''உன் உயிர் உன்னுடையது அல்ல!'' என்று எச்சரிக்கை வேறு செய்தான். விழிக்கு அருகில் வாள் முனையை வைத்திருந்த மூவருக்கும் அவனது பேச்சு வேப்பங்காயாக இருந்தது.

ஆனால், கோபப்படாமல் அவன் பேச்சை அலசினார்கள். எதிர்பார்த்தபடி சிங்களத்திலும் அவன் பேசவில்லை. தமிழில்தான் பேசினான் என்றாலும் சராசரியாகப் பேசும் மொழியில் பேசவில்லை. அதனால், அவர்கள் தமிழர்களென்றும், வெகு நாளாய் மற்றவர்களுடன் தொடர்பில் இல்லாதவர்கள் என்றும் புரிந்தது. ஏன் நம்மைத் தொட்டு இவ்வளவு சிரமம் மேற்கொள்கிறார்கள் என்று விளங்கவில்லை.ஆனாலும், அதில் ஏதோ ஒரு மறைமுக நோக்கம் இருக்கவேண்டும் என்று அவர்கள் கருதினார்கள். மாறனின் மனதுக்குள் பாண்டிநாட்டு மணிமகுடத்தை வம்சாவளியாக இந்த காட்டிலிருந்து காப்பவர்கள் இவர்கள் என்று தோன்றியது. பின் மனம் ஒரு துள்ளல் கொண்டது. 'ஆகா, இலக்குக்கு இவ்வளவு அருகில் வந்துவிட்டோமா?'

உடனே அந்த கூட்டத்திலிருந்து இருவர் மட்டும் முன்னால் வந்தனர். அமர்ந்திருந்த மூவருக்கும் பின்னே சென்றனர். ஒவ்வொருவரையும் இடுப்பளவில் இறுக்கமாகக் கையுடன் சேர்த்து



ஒரு கயிற்றால் பிணைத்தனர். அதன் பின், கால்களையும் கட்டிப்போட்டனர். முதலில் மாறனையும் வந்தியத் தேவனையும் கட்டினார்கள். அந்த சுத்த வீரர்களுக்கு ஒரு கையால் முன்னிருந்த கத்தியை தள்ளிவிட்டு மற்ற ஒரு கையால் பின் அமர்ந்தவனை தாக்குவதென்பது பெரும் விஷயம் இல்லை. ஆனால், அருகிலிருந்த இருவரின் கதி? அதனால் அந்த வெட்கக்கேட்டையும் பொருட்படுத்தாமல் பேசாமலிருந்தார்கள்.

கட்டிவிட்டவுடன் கண்முன் இருந்த வாள்கள் அகற்றப்பட்டன. இருவருமாய் அடியானை அந்த எதிரி கட்டிப்போடும் காட்சியைத் திரும்பி பார்க்க முடிந்தது.

ஆனால், என்ன விசித்திரம். கட்டிப்போடும்போது மூச்சை இழுத்துப் பிடித்து கொண்டான் அடியான். அவன் வட்டமான முகம் சிவந்தது. ஏதோ காற்றடித்த பந்து போலானது. ஏன் இப்படிச் செய்கிறன் இவன் என்று பீதி இருவரும் யோசித்தார்கள். ஏதாவது சுவாசம் விடமுடியாமல் தவிக்கிறானா என்றுகூட யோசித்தார்கள். உதவிக்கு எழக்கூட முடியவில்லையே என்று மாறன் நொந்து கொண்டான். ஆனால், ஒன்று. அடியானுக்கு மட்டும் ஏதேனும் ஆனால், எதிரிகளைக் கண்ட துண்டமாக வெட்டி போட்டு விடுவேன் என்று மனதுக்குள் சபதம் பூண்டான். ஆனால், முழுவதுமாய் கட்டி முடித்தவுடன்தான் மூச்சை வெளியே விட்டான் அடியான்.

மூவரையும் பாதுகாப்பாய்ப் பிணைத்துவிட்டோமா என்று வட்ட வடிவமாக நின்று எதிரிகள் வேடிக்கை பார்க்கலானார்கள். பின் ஏதோ பேசியவர்கள் இவர்கள் விஷயத்தில் ஒரு முடிவெடுத்திருப்பார்கள் போலும். ஏதேதோ செய்திகளை ரகசியமாகத் தங்களுக்குள் பரிமாறிகொண்டார்கள். ஒருவனை மட்டும் காவலுக்கு வைத்து விட்டுச் சென்றார்கள். பட்டாக் கத்தியை அவனிடம் கொடுத்துவிட்டு அவனுக்கு ஏதேதோ ரகசியமாகவும் சமிக்ஞையாகவும் பின்பற்ற வேண்டியவற்றை சொல்லிவிட்டுப் சென்றார்கள். போகும்போது வந்தியத் தேவன், மாறனின் வாள்களையும் எடுத்து சென்றனர்.

இப்போதுதான் ஒருவருக்கு ஒருவர் பேச முடிந்தது. முதலில் அடியான் பாய்ந்தது மாறனின் மேல்தான்! ''பாவி, நீ கும்பகர்ணனைப் போல் தூங்கியதால்தான், பொறிக்குள் எலியைப்போல அகப்பட்டுக் கொண்டோம்'' என்றான். ஆனால், அதை ஆமோதித்து வந்தியத் தேவன் தலையைக் கூட அசைக்கவில்லை.

அடியான் தொடர்ந்தான். "இப்போதெல்லாம் எவனையும் பூரணமாக நம்பமுடியாது போலிருக்கிறது. நான் பாட்டுக்கு க்ஷேத்ராடனம் மேற்கொண்டு...."

"சிவனே என்றிருப்பீரா?" என்றான் வந்தியத் தேவன்

"சீ, அந்த ஒட்டாண்டியின் பெயரை இப்போது சொல்லாதே!"

"யார் பேரை வேண்டுமானாலும் நான் சொல்வேன். ஆனால், நீர் மாறனைக் குறைசொல்வது தவறு" என்று வாதிட்டான் வந்தியத் தேவன்.

"நண்பனைக் குறை சொன்னால் என்ன கோபம் வருகிறது பாரேன்?" என்று நக்கலடித்தான் அடியான்.

காவலிருந்தவன் தூங்கியிருக்கக்கூடாது. அதைப் பற்றிக் வாதிப்பதில் பயனில்லை என்று தீர்மானித்து மாறனும் அமைதி காத்தான். போர்முனையில் இப்படியேற்பட்டிருந்தால் அதற்கு தண்டனை சவுக்கடி என்று அவனுக்கு நன்கு தெரியும்.

அடியான் விடுவதாயில்லை "உமக்கென்ன? என் நிலையை என் அன்னை கேள்விப்பட்டால் மனம் ஒடிந்துபோவாள்" என்றான் அடியான், முகத்தை பாவமாக வைத்துகொண்டு.

மாறனுக்கு ஒரு கூர்மையான கத்தியைக் மனதுக்குள்விட்டு திருப்பியது போலிருந்தது. தனது கவனக்குறைவால் இந்த அப்பாவி வைணவன் கூட மாட்டிகொண்டானே! அவன் சொல்வது போல அவனுடைய வயது முதிர்ந்த தாய்க்கு எவ்வளவு கஷ்டம்?

அவர்களது முகத்தை மாறனால் ஏறிட்டுப் பார்க்க முடிய வில்லை. மாறனின் முகம் மாறியதைக் கண்டு அடியான். "அது பரவாயில்லை. அவள் செத்துப்போய் இருபது ஆண்டு ஆகி விட்டது" என்றான். இந்த கஷ்டத்தில் கூட அடியான் தன்னுடைய நகைச்சுவை உணர்வை இழக்கவில்லை என்று நினைத்துச் சிரித்தான் மாறன்.

மாறனுக்கு இப்படி முக்கியமான அரசாங்க வேலையாக வந்துவிட்டுத் தூங்கிப்போய் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோமே என்று வேறு கவலையாயிருந்தது. அரசாங்க வேலை என்று நினைவுக்கு வந்தவுடன் "அவர்கள் நம்மிடம் என்ன கேட்டாலும் சொல்லக்கூடாது" என்று சொன்னான் மாறன்.

"சொல்லும்படி செய்வதற்கு வழிகள் பல இருக்கின்றன!"என்று பயம் கொடுத்தான் அடியான்.

"என்னிடம் அதெல்லாம் பலிக்காது!" என்று சவால் விட்ட மாறனிடம் "சீனதேசத்தில் கைதிகளை மூங்கில் புதரின் மேல் கட்டிப்போடுவார்கள். உலகிலேயே வெகுவேகமாக வளரும் செடி மூங்கில் தான். அது அவன் உடம்புக்குள் உட்புகுந்து வளரும். வலி உயிர் போகும். அப்போது எல்லா ரகசியத்தையும் கக்கி விடுவார்கள்" என்றான் அடியான்.



மற்ற இருவருக்கும் வயிற்றைக் கலக்கியது. உடனே தன்னை விடுவித்துக் கொள்ள முயற்சித்தான் வந்தியத் தேவன். அவனைச் சுற்றிய கயிறு அவன் வயிற்றையும் கைகளையும் அழுத்தியது. அதைக் கழற்ற முயன்று கொண்டிருந்தான். ஆனால், அந்த கயிறு அவன் தோலை வெட்டியதுதான் மிச்சம். என்ன நெளி நெளிந் தாலும் தப்பிப்பது கடினம். அதற்குப் பிரயத்தனப்பட்டால், கயிறு மேலும் அழுத்தியது.

பின் தப்பிப்பதுதான் எப்படி? ஒருவன் கையில் வாளுடன் சற்று தூரத்தில் காவல் காத்து கொண்டிருக்கிறான். தப்பித்து ஓட நினைத் தார்களென்றால் கொன்று விட எதிரிக் கூட்டத்தார் தீர்மானித் திருப்பார்கள். அடர்ந்த காடாக இருந்தபடியால் இங்கு வேறு யாரும் வருவதாயும் தெரியவில்லை.

உடனடியாகத் தப்பிக்க வழியேதும் அகப்படவில்லை என்று தெரிந்தவுடன் இதர விஷயங்களைப் பற்றி யோசித்தனர்.

"நடுச்சாலையில் நம்மைக் கட்டிப்போட்டுவிட்டார்களே" என்று புலம்பினான் வந்தியத் தேவன்.

"நாடென்றால் கைதிகளை காராக்கிரகத்தில் வைத்திருப் பார்கள்! ஆனால், நம்மைப் பற்றி ஒரு முடிவெடுக்கும்வரை நாம் இங்கு தானிருப்போம் என்று நினைக்கிறேன்" என்றான் அடியான்.

"இப்படி அசட்டுப் பிள்ளைகள் போல ஏமாந்து அகப்பட்டுக் கொண்டதுதான் மிச்சம்" என்றான் மாறன்.

"இப்போது ஒன்றும் பேசமுடியாது. ஒன்றும் செய்ய முடியாது. கோழைபோல நடந்து கொண்டோம். பாய்ந்திருக்க வேண்டும் ஆனால், கனவா நினைவா என்று ஒரு நொடி மயங்கிவிட்டேன்" என்றான் வந்தியத் தேவன்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் இன்னது செய்வதென்று தெரியாமல் மனம் குழம்பிற்று. ஒன்றும் செய்யாமல் இருந்தால் மூன்று பேரும் இங்கேயே மடிய வேண்டியதுதான் என்று மட்டும் தெளிவாய்த் தெரிந்தது.

அடியான் மட்டும் அவ்வளவு கவலை கொண்டதாகத் தெரிய வில்லை. தன்னை மீட்பது வீரர்கள் இருவரின் பொறுப்பு என சும்மா இருக்கிறானோ என்னவோ என்று மற்ற இருவரும் எண்ணி னார்கள்.

ஆனால், அமர்ந்த இடத்திலேயே ஒரு சிறிய நடனம் ஆடிக் கொண்டிருந்தான் அடியான். பார்ப்பதற்கு வேடிக்கையாய் இருந்தாலும் ஏதோ எறும்பு அவன் உடலில் ஏறிப் படுத்துகிறது என்று தோன்றியது. பாவம் தான்!

''என்ன வைணவரே இப்படி நெளிகிறீரே! உம் முதுகைச் சொறிந்து விடலாம் என்றால் கூட என்னால் முடியாது. என்னால் ஒரு கையைக் கூட அசைக்க முடியவில்லையே'' என்றான் வந்தியத் தேவன். ''ஆனால், அது சைவ எறும்பாய் இருக்கும் என்று நினைக் கிறேன். வைணவ தசையை ருசிக்கிறது'' என்று சொல்லிச் சிரித்தான்.

நெளிவதை நிறுத்திய அடியான் ''எறும்பும் இல்லை. கரும்பும் இல்லை. நான் என் வைணவக் கைகளை விடுவித்து கொண்டு விட்டேன்'' என்றான் . இன்னும் ஓரிரு நிமிடங்களில் என் வைணவக் கால்களை விடுவித்து கொண்டு நான் ஓடப் போகிறேன். உங்கள் சைவ வாழ்க்கைகள் தொடர நீங்களே ஏற்பாடு செய்து கொள்ளுங்கள்'' என்றான்.

''என்ன?'' என்று இருவரும் அதிசயித்தனர்.

''கவலைப்படாதீர்கள். நூறு போர்க்களம் கண்ட மாவீரர்களே. இன்னும் ஒரு நொடியில் உங்களையும் கட்டவிழ்த்துவிடுகிறேன்'' என்றான் அடியான்.

தங்களைப் பிணைத்த கயிறு ஒரு நூலளவு கூட அகலவில்லை. அதே இறுக்கத்துடன்தான் இருந்தது. அடியான் எப்படி அதிலிருந்து தப்பி வந்தான் என்பதை நினைக்கால் ஆச்சரியமாயிருந்தது. அவன் சாமர்த்தியசாலிதான்.

''எப்படி அய்யா சாதித்தீர்? என்ன, உமக்கு ரவிதாசன் போல மந்திரம் எல்லாம் தெரியுமா?'' என்று கேட்டான் மாறன்.

''நம்மைக் கயிற்றை வைத்துக் கட்டும்போது மூச்சை உள் வாங்கி கொள்ளவேண்டும். காற்று நம் உடலைப் பருமனாக்கிவிடும். நம்மைக் கட்டியபின் மூச்சை வெளியே விட்டால் சற்று மெலிந்து விடுவோம். அதனால் கட்டுகள் அவ்வளவு இறுக்கமாக இருக்காது. பிறகு எளிதாக அவிழ்த்துவிடலாம்'' என்று விளக்கினான் அடியான். கட்டும்போது அடியான் காற்றடைத்த பந்து போலிருந்தது மற்ற இருவருக்கும் ஞாபகம் வந்தது.

கண்ணிமைக்காது அவர்களையே உற்று பார்த்து கொண்டிருந் தான் அந்த எதிரி வீரன். அவனைப் பார்த்து அடியான் ''ஐயா, மரத்தை ஒட்டிக் கட்டினாலாவது நாங்கள் சாய்ந்து கொள்வோம்'' என்றான்.



''அதற்கெல்லாம் இப்போது நேரம் இல்லை'' என்றான் வீரன் கோபமாய். ''அவர்கள் எங்கள் தலைவரை அழைக்கச் சென்றிருக் கிறார்கள். வந்தவுடன் ஒரேயடியாக நீர் சாய்ந்தாலும் சாயலாம்'' என்று பயமுறுத்தினான்.

''சரி ஐயா! நாங்கள் ஒருவர்மேல் ஒருவர் சாய்ந்து கொள்ளு கிறோம். அதில் ஒன்றும் தப்பில்லையே. சம்புவராயரே என் மேல் நீர் சாய்ந்து கொள்ளுங்கள்'' என்றான் வைணவன்.

மாறனும் நகர்ந்து வந்து அடியானின் மேல் சாய்ந்து கொண் டான். வந்தியத் தேவன் மட்டும் சற்று அப்பாலிருந்தான்.

மாறன் தன் மீது சாய்ந்த போது மெல்ல மெல்ல அவனுடைய கட்டுகளை அவிழ்த்துவிட்டான் அடியான். கட்டை அவன் அவிழ்க்கும்போது மாறனுக்கு நெஞ்சம் ''திக்திக்'' என்று அடித்துக் கொண்டது. ஓரிரு நிமிடங்கள் யுகங்கள் போலத் தோன்றின. பின் ஆவலுடன் வந்தியத் தேவனிடம் காரியம் வெற்றி என்று கண்ணினால் சொன்னார்கள். அவனை இப்போதைக்கு விடுவிக்க முடியாது என்றும், அமைதி காக்கும் படியும் சமிஞை செய்தார்கள்.

கட்டை அவிழ்த்த பின்பு சந்தோஷத்தில் குதிக்க வேண்டும் போலிருந்தது மாறனுக்கு. ஆனால், கால்கட்டு இன்னமும் இருந்தது. அதை அவிழ்க்க நினைத்தால் காவலிருந்தவன் பார்த்து விடுவான். பின் அவன் கையிலிருந்த பட்டாக்கத்தியுடன் என்ன செய்வான் என்று சொல்ல முடியாது. அதனால் வேறு யுக்தியை உபயோகிக்க வேண்டுமே என்று மாறன் திகைத்தான்.

எப்போதும்போல அடியானுக்குதான் அந்த யோசனை வந்தது. காவலாளியைப் பார்த்து ''ஐயா என் வயிற்றில் எறும்பு கடிக்கிறது. அதை எடுத்து விடு. உனக்கு ஆயிரம் புண்ணியமாகப் போகும்.'' என்றான், முகத்தைப் பரம சாதுவைப்போல் வைத்துகொண்டு.

காவல் நின்ற எதிரி வீரனுக்கு கோபம். வயிற்றைச் சொறியச் சொல்கிறானே இந்த வைணவ குண்டன். தனக்கு இப்படிப்பட்ட வேலைகளா வந்து வாய்க்கவேண்டும்?... இதை நினைக்க நினைக்க அவன் உள்ளத்திலிருந்த ஒவ்வொரு பாகமும் கொழுந்து விட்டு எரிந்தது. அடியானை உற்றுப் பார்த்தான். இவன் ஏதோ துறவி போல தெரிகிறான். அவன் சாபம் நமக்கு வேண்டாம். அபூர்வமான சாந்தம் குடிகொண்ட முகம் அவன் முகம். அவன் தனக்கு ஒரு தீங்கும் செய்யமாட்டான். எப்படியிருந்தாலும் அவன் கைகள் கட்டப்பட்டு இருக்கின்றன என்ற தைரியத்தில் அருகில் வந்தான்.

''ஐயா! உம் தொல்லை தாங்கவில்லை'' என்று சொல்லிக் கொண்டு முன்னெச்சரிக்கையுடன், உருவிய வாளுடன் அந்த வீரன் முன்னேறினான். அருகில் வந்து, அடியான் முன் குனிந்தான். ''எங்கே நீர் சொல்லும் அந்த எறும்பு?''

அவன் குனியும்வரை காத்திருந்துவிட்டு திடீரென தலையைத் தூக்கி குனிந்தவன் வயிற்றில் ஒரு முட்டு முட்டினான் அடியான். கட்டிப்போடப்பட்டவன் எழுந்திருக்கிறானே என்ற வியப்பில் ஒரு கணம் வீரனின் கவனம் சிதறியது. அந்த ஒரு கண நேரமே அடியானுக்குப் போதுமானதாயிருந்தது.

நிலத்தில் விழுந்த மீனைப் போல அந்த ஆள் ஆகாயத்தில் வட்டமிட்டு கீழே விழுந்தான். எதிர்பார்த்தபடி அந்த ஆள் தடுமாறி விழுந்தபோது கையிலிருந்த வாளும் நழுவி விட்டது. மாறன் தன் கால்களைக் கட்டியிருந்த கயிற்றை உடனே அகற்றித் தூர எறிந்தான். உடனே தரையில் கிடந்த வாளைக் கண்டு எடுத்துக் கொண்டான்.

அடியானுக்கு இவ்வளவு நேரம் தன்னைக் கட்டிப்போட்டதில் கோபம். தன்னைக் கட்டிப்போட்டவனைச் சும்மா விடுவதில்லை என்ற நோக்கத்தில் அந்தச் சண்டாள தூர்த்தனை முட்டியே கொன்றிருப்பான் போல.

வயிற்றில் பூகம்பம் ஏற்பட்டது போலுணர்ந்து எழுந்தமர்ந்த வீரனுக்கு ஆச்சரியம். 'ஒரே நேரத்தில் எப்படி இருவரும் விடுவித்து கொண்டனர்?'

அடியான் மற்ற இருவரையும் நோக்கி ''என்னை அடிக்கடி முட்டாள் என்று கூறுவீர்களே. மூளையுள்ள தலை முட்டியிருந்தால், அவன் வயிறு என்னபாடு பட்டிருக்கும் என்று யோசித்துப் பார்!'' என்றான்.

''அவன் கதி அதோ கதியாகியிருக்கும்'' என்று சொல்லி மற்ற இருவரும் சிரித்தனர். இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டு புதர்களில் ஒளிந்திருந்த ஒருவனுக்குச் சிரிப்பு வந்தது. மூவரையும் கட்டிப்போடப்பட்டபோது அவன் அவர்கள் முன்தோன்றி விடுவித்துவிடலாம் என்று கூட நினைத்தான். ஆனால், அவர்களாகவே தங்களை விடுவித்து கொண்டது பற்றி அவனுக்கு மகிழ்ச்சிதான். தான் தேடும் பாண்டிநாட்டு மணிமகுடத்தை கண்டுபிடிக்க வல்லமையும் புத்திகூர்மையும் கொண்டவர்கள் இவர்கள்தான்.

தன்னை அதன் இருப்பிடத்துக்கு அழைத்துபோகப் போகிறவர்களும் இவர்கள்தான் என்று எண்ணி அவன் சந்தோஷப்பட்டான்.

❖ ❖ ❖



### அத்தியாயம் எழுபத்து ஒன்பது

## வாள்கள் மோதின!

**வா**ழ்க்கையே ஒரு சக்கரம்!

இதை இப்போது நன்றாய்ப் புரிந்து கொண்டிருந்தவன் அந்த எதிரி வீரன்.

எந்த நிலையில் சில நிமிடங்களுக்கு முன் அந்த மூன்று பேரும் இருந்தார்களோ, அதே நிலையில்தான் அவன் இப்போது இருந்தான். தங்களைக் கட்டிய கயிற்றை கொண்டே அவனைக் கட்டிப் போட்டுவிட்டார்கள்.

அந்த வீரனைக் கட்டிப்போடும் பொறுப்பை அடியானே ஏற்று கொண்டான். அவனை கட்டிப்போடும்போது கயிற்றால் முதல் சுற்றை சுற்றிவிட்டு சற்று நேரம் பொறுத்துத்தான் அடியான், அடுத்த சுற்றை சுற்றினான்.தாமதத்தை கண்டு கோபம் கொண்டனர் மற்ற இருவரும்.

''என்ன செய்கிறீர்? சீக்கிரம் கட்டிப்போட்டுவிட்டுச் செல்வோம். வாருங்கள்'' என்றான் வந்தியத் தேவன்.

''அவன் என்னைப்போல மூச்சை உள்வாங்கி கொள்ளாமல் பார்த்து கொள்கிறேன்'' என்றான் அடியான். மற்ற இருவருக்கும் சிரிப்பு வந்தது. எதிரிக்கு அடியான் எப்படி தப்பினான் என்று இப்போது புரிந்தது. வைணவனைக் கண்டு முறைத்தான்.

காவலுக்கு இருந்தவனைக் கட்டிப்போட்டுவிட்டு மூவருமாக அவனைச் சுற்றி அரைவட்டமாக நின்றனர். அவன் வாயடைத்து, தலைகுனிந்து அமர்ந்திருந்தான். தனக்குக் கொடுக்கப்பட்ட எளிமையான வேலையைக்கூட சரிவரச் செய்ய இயலாமைக்கு வெட்கினான். கட்டிப் போடப்பட்ட மூவரைக் காவல் காக்க முடியாதவன் ஒரு வீரனா என்று எல்லோரும் ஏசுவார்களே என்று நினைத்து நொந்து கொண்டான்.

வெட்கப்பட்டவன் அவன் மட்டுமல்ல. மாறனும் தான். முதலில் மாறனுக்கு, தாங்கள் தப்பித்ததில் சந்தோஷம்தான். ஆனால், மாறனின் முகபாவம் மறுபடியும் மாறி, அதில் இப்போது எள்ளும் கொள்ளும் வெடித்தன. கண்ணில் தீப்பொறி பறந்தது.

''வீராதி வீரனும் போர்க்களத்தில் எத்தனையோ வேல் வீச்சுக்களை இறுமாந்து தாங்கியவனுமாகிய என்னை இப்படிக் கட்டிப் போட்டு விட்டனரே'' என்ற கோபம் அவனுக்கு. அது கூட அவனுக்கு வெட்கமாயில்லை. தான் சதா கேலி செய்து கொண்

டிருந்த வைணவனின் புத்திசாலித்தனத்தினால் மட்டும் தானே தப்பிக்க முடிந்தது? இல்லையேல் தன் கதி?

ஆனால், வெட்கமெல்லாம் வந்தியத் தேவனுக்கு இல்லை. மழையில் செல்லும் காட்டெருமையையொத்தது அவனது தோல். அவன் மனதார அடியானின் புத்திசாலித்தனத்தை மெச்சினான்.

''வராஹ அவதாரம் போல் எழுந்தீர், முட்டினீர். நரசிம்ஹ அவதாரம் போல் கோபம் கொண்டீர். வைணவரே, தங்களைப் போன்ற சாமர்த்தியசாலியை நான் பார்த்ததேயில்லை'' என்று வந்தியத் தேவன் புகழ்ந்தான்.

இப்படிப்பட்ட வேலைக்கு தன்னை விட இந்த வைணவனே சிறந்தவன் என புரிந்து கொண்டான் மாறனும். போரில் சென்று வெட்டி வா என்றால் வெற்றி கொண்டு வருபவர்கள் இவர்கள். இந்த மாதிரி ஒரு பொக்கிஷத்தை தேடிக் கண்டுபிடித்து வரச் சொன்னால் அப்போது அவர்களுடைய சாமர்த்தியமெல்லாம் எங்கோ போய் விடுகிறது!

"இந்த மாதிரி காரியங்களில் நாம் ஏன் சிக்கிக் கொண்டோம்? போர்க்களத்தில் நேருக்கு நேர் பகைவனுடன் நின்று போர் புரிய வேண்டும்! அப்போது நம் வீரத்தையும், தீரத்தையும் வெளிக் காட்ட வேண்டும். இந்த ஒளிவு மறைவு நிறைந்த சூழ்ச்சிகளில் எதற்காக அகப்பட்டுக் கொண்டோம்?''என்று ஆவேசமாகப் பேசினான்.

''இவ்வேலையை பற்றி நீ குறைவாகப் பேசுவது எனக்குப் பிடிக்கவில்லை'' என்றான் அடியான். ''நாலா திசைகளிலும் திக்விஜயம் செய்ய வேண்டும் என்று நினைக்கும் சோழ அரசர் களுக்குப் பாண்டிய நாட்டின் எதிர்ப்பு தடையாய் இருக்கிறது. அவனை முடித்துவிட்டு மற்றவற்றை பார்க்கலாம் என்று நினைக் கிறார்கள் சோழர்கள். பாண்டியனை அடக்க நம்மிடம் இருக்கும் வேறு எந்த ஆயுதங்களாலும் முடியாது. இந்தப் பொக்கிஷம் தான் சிறந்த ஆயுதம்.

''நமக்கு இது கிடைத்தவுடன் பாண்டியன் வந்து சரணடைந்து விடுவான் என்று தப்பு கணக்கு போடுகிறீர்'' என்றான் மாறன்.

தலையசைத்தான் அடியான் ''இதைக் கண்டு பிடித்துவிட்டால் யுத்தம் முடிந்துவிடும் என்று நினைக்க வேண்டாம். பாண்டியனுட னான இறுதிப் போருக்கு அது வழி வகுக்கும். அப்போது வரும் வீர ரத்தமும், வயிர நெஞ்சமும் படைத்த வீரர்களுக்கு வேண்டிய வேலை கிடைக்கும். தத்தம் வீர பராக்கிரமங்களை நிலைநாட்டச் சந்தர்ப்பம் கிடைக்காமல் தவித்து கொண்டிருக்கும் வீரர்களுக்கு



ஒரு சந்தர்ப்பம் கிட்டும்.அப்போது தெரியும் உங்களுக்கு வாளேந்த தெரிகிறதாவென்று'' என்றான் வீரர்கள் இருவரையும் பார்த்து.

உட்கட்சிச் சண்டை வலுக்கப் போகிறது என்று யூகித்த வந்தியத் தேவன் பேச்சை மாற்ற முற்பட்டான். ''இரண்டு விஷயங்கள் தெரி கின்றன. ஒன்று காவலுக்காக நூறாண்டுகளுக்கு முன் அமர்த்தப் பட்ட குடும்பத்தின் சந்ததியர் இவர்கள். அப்படியென்றால் வெகு அருகில்தான் அந்த பொக்கிஷம் இருக்கவேண்டும்'' என்றான்.

விவாதம் தொடங்கியது. 'அதே இடத்தில் எதிரிக்கு காத்திருப் பதா? இல்லை புறப்படுவதா?' என்று.

''அவர்களை நினைக்க நினைக்க எனக்குப் பொறுக்க முடிய வில்லை. நிச்சயம் இங்கு வருவார்கள். அவர்களை இரண்டில் ஒன்று பார்த்துவிட்டுத்தான் இங்கிருந்து புறப்படவேண்டும்!'' என்று மாறன் சொன்னான்.

போர்க்களத்தில் மின்னிப் பாயும் வேல்களையும், வாள்களை யும் கண்டு பரவசப்படும் வீரர்கள் இவர்கள். இவர்களையே கட்டிப்போட்டு சிறை பிடித்துவிட்டவர்களை, அதுவும் தூங்கும் போது- அந்த நீசத்தனமான காரியத்தைச் செய்தவர்களை சும்மா விடுவதில்லை என்று தீர்மானித்தான் மாறன்.

அடியான் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. ''இல்லை அதில் நேரமாகும். நாம் பாட்டிற்கு வந்த வேலையை கவனிப்போம். அவர்களை என்ன செய்வது என்ற கேள்வி இப்போது இல்லை. அவர்களை எதிர்கொள்ளும்போது பார்த்துக் கொள்ளலாம். அதைப் பற்றி யோசித்து மனத்தைக் குழப்பிக்கொள்ள வேண்டியது மில்லை'' என்றான்.

''மேலும், எந்த நிமிஷத்திலும் வழியில் மற்றவர்களை சந்திக்க லாம். அப்போது பார்த்துக் கொள்ளலாம்'' என்றான்.

இருவருடைய வாள்களையும் மற்றவர்கள் எடுத்துச் சென்று விட்டனர். ஓரமாகக் கிடந்தது அந்த காவலாளியின் வாள், காளி கோயிலில் பலி கொடுக்கும் பட்டாக் கத்தி போலிருந்தது. வந்தியத் தேவன் அதைப் பார்க்கும் முன் அதை அவசரமாய் ஓடிச்சென்று எடுத்து கொண்டான் மாறன்.அடியான் அவன் தடியை எடுத்து கொண்டான். வந்தியத் தேவனுக்கு மட்டும் ஆயுதம் ஏதும் இல்லை.

அடியான் திட்டமிட்டான். ''முதலில் நாம் அந்த விருக்ஷ ரீனைக் கண்டுபிடிக்க வேண்டும்'' என்றான். ''பொக்கிஷத்துக்கும் சரி அந்த மர்ம மனிதர்களுக்கும் சரி. அதுவே வழி காட்டும்.''

மூவரும் வானைப் பார்ப்பது போலவே சென்றனர். கரும் பச்சை இலைகள் கொண்ட கானகத்தில் இளம் பச்சை நிற இலைகள் கொண்ட மரங்களை வைத்துத்தான் அந்த விருக்ஷ மீனை உண்டாக்கியிருந்தனர் பாண்டியர்.

இலைகளில் இளம் பச்சையாய்ப் பார்த்துச் சென்றனர். அதை கண்டு பிடித்தவுடன் அதற்கு அடுத்த மரத்தைப்பிடித்தனர். அதற்குள் அடியான் இளம் பச்சைத் தழைகள் கொண்ட மரங் களின் அடிபாகம் ஒரு வகை சொரசொரப்பாய் இருந்தது. இதர மரங்களிலிருந்து அது வேறுபட்டிருந்தது என கண்டுபிடித்து விட்டான். அதைப் பிடித்து கொண்டே சென்றார்கள். பார்வையி லிருந்து அந்த விருக்ஷ மீனை விட்டுவிடாமல் நடந்தார்கள்.

வந்தியத் தேவனுக்கு மட்டும் மரங்களில் கவனம் செல்ல வில்லை. எதிரியை எதிர்கொண்டே நடந்தான் அவனிடம் ஆயுதம் இல்லை என்பது அவனுக்கு அந்த கவன உணர்வை அதிகரித்ததோ என்னவோ? ''எல்லோரும் திரும்பி வந்தவுடம் நம்கதி யாதா குமோ?'' என்று அவனுக்கு கொஞ்சம் கவலையாகவும் இருந்தது.

எதிர்பார்த்தபடி எதிரிகள் வந்தனர். ஆனால், இவர்களை அங்கே எதிர்பார்த்து அவர்கள் வரவில்லை. கட்டிப்போடப்பட்ட கைதி களை எதிர் பார்த்து வந்த வீரர்களுக்கு மூவரும் விடுதலையாகி ஒருவனிடம் பட்டாக் கத்தியும் ஒருவனிடம் கைத்தடியும் இருந்ததை கவனித்து ஸ்தம்பித்தனர். இவர்களைப் பார்த்தவுடன் அவர்கள் திடுக்கிட்டார்கள். அவர்களுடைய முகத்தில் அச்சமயம் குடிகொண்டிருந்த ஆச்சரியத்தை வார்த்தைகளால் சொல்ல முடியாது.

நமது கதாபுருஷர்களும் சற்று நிதானித்து யோசித்தனர். எதிர் கொள்பவர்கள் நான்கு பேர்தான் என்றாலும் அவர்கள் எல்லோரும் வாளேந்திய வீரர்கள். அதில் இருவர் தங்களுடைய வாள்களை வைத்திருந்ததை கண்டு கோபம் அதிகரித்தது மாறனுக்கும் வந்தியத் தேவனுக்கும்.

ஆனால், எதிரியைக் கண்டவுடன் முற்றிலுமாக மாறியது மாறன் தான். திடீரென ஒரு மாற்றம் அவன் உடலிலும் முகத்திலும் ஏற்பட்டது. உடம்பு விறைத்தது. அவனுடைய முகத்தில் இப்போது வீர லக்ஷ்மி பிரவேசித்தாள். கம்பீர புருஷனாய் காட்சியளித்தான்.

அடியானுக்கு கைத்தடியை உபயோகிக்க சந்தர்ப்பமே எழ வில்லை. எதிரியைக் கண்டவுடன் மாறனுக்குப் புத்துயிர் வந்தது. அத்துடன் ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது. இரண்டு கையினாலும் தனக்கு கிடைத்த கத்தியின் அடியைப் பிடித்துச்



சுழற்றிக்கொண்டே அந்த மூவரிடமும் அணுகினான் மாறன். அந்தப் பட்டாக்கத்தியைப் பிடித்து சுழற்றும் போது மாறன் வீர கம்பீரத் தோற்றத்துடன் திகழ்ந்தான் . பலருக்கு எதிராக அவன் ஒருவன்தான் என்பதை மறந்தான். மனம் திடப்பட்டது. வீர வெறி யிருந்தது.

எதிரிக்கும் ஆச்சரியம்தான். அதற்காக அவனும் சும்மா இருப்பானா? அவனும் தன் கைவரிசையைக் காட்டினான். இரு கோஷ்டியினருக்கும் பிரமாதமான துவந்த யுத்தம் நடந்தது. வாளில்லாத வந்தியத் தேவன் வேடிக்கை மட்டுமே பார்த்தான்.

அந்தப் போராட்டத்தில் மாறனின் கூரான வாள் எதிரிகளிடம் இருந்த தன் வாளுடன் உராய்ந்தபோது தீப்பொறிகள் பறந்தன. நன்றாய் கூர் பிடிக்கப்பட்ட வாள்கள் ஒன்றையொன்று தாக்கி ஐ"வாலை வீசின. தன் வாளுடன் போரிடும் நிலை ஏற்பட்டதை நினைத்து மனம் நொந்தான் மாறன்.

கத்திகள் சுழலும் வேகத்தில் அவை ஒன்றின் மேல் ஒன்று மோதி 'டணார், டணார்' என்ற ஒலியை எழுப்பி தீப்பொறிவேறு பறக்க வைத்தது. ஆட்பலம் கொண்ட எதிரியைக் வீழ்த்துவது எப்படி என்ற ஓரே விஷயத்தில் தான் மாறன் கவனமெல்லாம் பதிந்திருந்தது. அதனால் ஒருவருக்கு எதிராய் நால்வர் தத்தளிக்கும் நிலைமை ஏற்பட்டது. கொஞ்சம் நேரத்துக்கெல்லாம் பெருங் கூச்சல், கை கலப்பு, கத்திகள் மோதும் சப்தம் -எனக் காடே கலகலப்பானது.

அடியானும் சிறிய உலக்கை போன்ற தடியை வைத்திருந்தான். அந்தக் கைத்தடி இருக்கும் வரையில் எந்த துஷ்டனாலும் வீர லவணவனை வைகுண்டத்துக்கு அனுப்பமுடியுமா என்பது சந்தேகம்தான். ஆனால், அதை உபயோகிக்கலாம் என்றால் அவனால் முடியவில்லை. சக்கரமாய் சுழன்ற மாறன் எல்லா இடங்களிலும் இருந்தான். தெரியாமல் தடியைக் கொண்டு மாறன் தலையில் போட்டுவிட்டால் என்ன செய்வது? அதனால் அவனும் வேடிக்கை பார்த்தான்.

வேடிக்கை பார்த்த வந்தியத் தேவன் நினைத்துக்கொண்டான் 'என்ன அற்புதமான வாட்போர்! இந்த மாதிரி மாறனை பார்த்து எத்தனையோ நாள் ஆயிற்று' என்று. இதுவே போர்க் கால மென்றால் ஓரே போரில் தன் வீரத்தை நிலை நாட்டிவிடுவான். அவ்வளவு ஆற்றல் அவனிடம் இருந்தது.

வந்தியத் தேவன் மாறனின் ஆவேசமான போரைப் பார்த்து பிரமித்தான். மாறனின் போர்த் திறன் வந்தியத் தேவனுக்கு நன்கு

தெரியும். அதை நேரில் கண்டவன், நன்கு புரிந்தவன். ஆனால், நெடு நாட்களானது அதைப் பார்த்து.

மாறன் போர்க்களத்திலே நிகழ்த்தும் வீரச் செயல்களைப் பார்க்கவேண்டும் என்றால் முடியாது. அமைதி என்னும் பனிப் படலம் மூடிவிட்டது சோழ தேசத்தை. பாய்ந்து சென்று அவனைக் கட்டித் தழுவவேண்டும் போலிருந்தது வந்தியத் தேவனுக்கு. ஆனால், மாறனுக்கு அப்போது இருந்த வெறியில் யார் நண்பன் யார் எதிரி என்று நிச்சயமாகத் தெரியாது.

சற்று நேரத்தில் பார்ப்போருக்கு புரிந்தது. நான்கு பேர், பார்க்க மட்டும் தான் முரடர்களாயிருந்தார்கள். சோழர் படையில் ஒரு கீழ்த்தர வீரன் செயல்படுவது போலவே போரிட்டார்கள். பயிற்சி போதவில்லை. அதைவிட அனுபவம் போதவில்லை. வந்தியத் தேவன் சில ஆண்டுகளாக புதிய வீரர்களுக்குப் பயிற்சி கொடுக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான். பயிற்சியின் முக்கியத்துவத்தை இப்போதுதான் முழுவதுமாய் உணர்ந்தான்.

அவன் அடிக்கடி சொல்வதுண்டு. ஒரு போரிலாவது திறமை ஒப்புக் கொள்ளப்பட்ட பிறகுதான் வித்தை பூர்த்தியானதாகக் கருதப்படும். மரக் கத்திகளைக்கொண்டு போராடி, மூங்கில் அம்புகளினால் குறி பார்த்துப் பழகியவர்கள், நேரடியாக போரில் கலந்து கொள்ளும் போது நிலைமையே வேறு.

சொல்ல முடியாத ஆத்திரத்துடன் இருந்தான் மாறன். ஆனால், போர் தொடங்கியவுடன் எல்லாவற்றையும் மறந்து விளையாடுவது போல பம்பரமாய்ச் சுற்றி சுற்றி வந்து கொண்டிருக்கிறான். அதனால் எதிரிகளுக்கு வெற்றியைப் பற்றிய சிந்தனை கூட எழவில்லை. மாறனைத் தடுப்பதற்கு எதிரி வீரர்கள் ஆனமட்டும் முயன்றும் அவர்கள் முயற்சி பலிக்கவில்லை.

பிரமாதமான கத்திச் சண்டைக் காட்சிகள் தென்படலாயின. சூறாவளியாய் சுழன்றது மாறனின் வாள். மாறனிடம் இருந்த கடுமையை அந்த ஆட்களால் எதிர்க்க முடியவில்லை. எதிரிகளில் ஒருவன் கையில் வந்தியத் தேவனின் வாள் இருந்தது. அதையே முறைத்து பார்த்து கொண்டிருந்தான் வந்தியத் தேவன். ''வல்லா வல்லா'' என திடீரெனக் கத்தினான் மாறன். அவனுக்குக் களைப்பு ஏற்பட்டுவிட்டதோ. நம்மை உதவிக்கு அழைக்கிறானோ என்று நினைத்த வந்தியத் தேவனிடம் ''உனக்கு ஒரு அன்பளிப்பு'' என்று சண்டைக்கு நடுவிலிருந்த மாறன் கத்தினான்.

மாறன் வந்தியத் தேவனின் வாளை வைத்திருந்தவனிடம் தனி கவனம் செலுத்தினான். அந்த வாளின் கீழ் பாகமாக அடித்த



அடியில் அது வானில் ஒரு வட்டமிட்டு நேரே வந்தியத் தேவனின் கைகளுக்குச் சென்றது. வந்தியத் தேவன் அதை பிடித்து கொண்டு போருக்குள் மாறனுக்கு ஆதரவாகப் புகலாம் என்று ஒரு முடிவெடுப்பதற்கு முன் போர் வெகு சீக்கிரத்தில் முடிந்தது. அதற்குள் மாறன் ஒருமுறை பம்பரம் போலச் சுழன்று தாக்கியதில் மற்ற மூவருடைய வாள்களும் காற்றில் ஒரே சமயத்தில் பறந்து அருகிலிருந்த புதர்களில் விழுந்தன. அடியின் அந்த வேகத்தில் நான்கு எதிரிகளும் தரையில் விழுந்தனர். வேர்வை சொட்டியபடி அவர்கள் முகங்களுக்கு நேரே பட்டாக் கத்தியை நீட்டி நின்றான் வெற்றி வாகை சூடிய இளம் சம்புவராயன்.

விழுந்தவர்களைப் பார்த்து ஆழ்வார்க்கடியான் இப்போது வெகு வெகு கோபமாயிருந்தான். வாளை இழந்தவர்களாக பார்த்துச் சென்று மண்டையில் புடைக்கும்படி தன் கைத்தடியால் ஒரு போடு போடலாம் என்று முன்னால் வந்தான் வைணவன். ஆனால், அவனைத் தடுத்தான் மாறன். ''வீழ்ந்த எதிரியைத் துன்புறுத்துவது தமிழர் பண்பாடில்லை'' என்றான்.

எல்லாம் முடிந்ததும் வெற்றி பெற்ற மூவரும் இளைப்பாற உட்காரக்கூட இல்லை. அடிபட்ட நால்வரையும் அமர வைத்து ஒரு வாளை நீட்டியபடி வந்தியத் தேவன் நின்றான்.

அந்த வீரர்களுக்குப் போர்ப் பயிற்சி அதிகம் இல்லை. ஆகையால் அதிசீக்கிரத்தில் போரில் வீழ்ந்துவிட்டனர். தலைகுனிந்து குலதர்மத்தைப் பாழாக்கிய அவமானத்தில் இருந்தனர். அந்தக் குலத்தவர் யாரையும் ஒரு நூறாண்டுகளாக இவ்வி த்தில் புகவும் வெளிவரவும் அனுமதித்தார் இல்லை. இன்று எல்லாம் போனது. பாண்டியன் வந்து அவன் சொத்தைப் பெற்று செல்வான். அதுவரை ஒரு யுகமானாலும் காத்திருங்கள் என்று இந்த குலத்தை அமர்த்திய அரசனின் ஆவி இவர்களை சபித்து கொண்டிருக்கும் என அவர்களுக்கு தெரியும்.

நால்வரையும் ஒன்றாய் ஒரு மரத்துடன் பிணைத்து விட்டனர். திரும்பிச் செல்லும்போது அவிழ்த்துவிடலாம் என்றும் முடிவு செய்தனர். தனிப்பட்ட கோபம் எதுவுமில்லை அவர்கள் மேல். ஆனால், தங்களின் தேடுதலுக்கு இடையூறாக இருக்கக்கூடாது என்று நினைத்தனர். பின்னர் மறுபடியும் இளம் பச்சை இலை கொண்ட மரங்களைத் தேடிக் கண்டுபிடிக்கும் வேட்டையைத் தொடர்ந்தனர்.

போகும் வழியில் துப்புக் கொடுத்த கவிதையைப் பற்றி பேசிக் கொண்டனர்.

'அசுரன் முன்னம் ஆண்டிருக்க
நாற்புறம் நீரும் சூழ்ந்திருக்க
ஆதவன் சற்றே தாழ்ந்திருக்க
வேங்கையின் காலடியில் வேந்தன்முடி'

இராவணன் எனும் அரக்கன் ஆண்ட பிரதேசம் இலங்கைதான், அதில் சந்தேகமில்லை. அதை நீர் சூழ்ந்து கொண்டிருக்கிறது என்பதிலும் சந்தேகம் இல்லை. வேங்கையாம் சோழனின் காலடியில் தவித்துகொண்டிருக்கிறது இந்த நாடு. நான்கில் மூன்று வரிகள் வந்துவிட்டன.

''இந்த காட்டைப்போல் அடர்ந்த நிலப்பரப்பை நான் பார்த்ததேயில்லை. அதனால் சூரியன் தாழ்ந்து தான் எழுகிறான் இங்கு. ஆகா என்ன ஒரு கவிதை. நேராக நம்மை இங்கு இட்டு வந்துவிட்டதே'' என்றான் மாறன்.

வந்தியத் தேவன் ஒன்றும் பதிலளிக்கவில்லை. அவனுக்கு இந்த நாலாவது வரியில் திருப்தியில்லையா? இல்லை கவிதை இப்படி நேரடியாக ஒரு இடத்தைக்குறிக்கும் என்று அவன் நம்ப வில்லையா?

சாலையோரத்தில் இருந்த மரங்கள் வழியை அடைத்தன. ஒருவர் பின் ஒருவராய்த்தான் செல்லவேண்டியிருந்தது. திடீரென்று காட்டில் ஒரு திறந்த வெளி. அந்த விருக்ஷ மீனின் வாய் நோக்கும் பகுதி இதுவாகத்தான் இருக்க வேண்டும். உற்றுப் பார்த்தபோது அவ்விடத்தின் எல்லையில் ஒருபாழடைந்த மண்ட பம் இருந்தது. அந்த இடிந்த கட்டடம் தான் தாங்கள் தேடுமிடம் என்று யூகித்தனர். ''அதோ ஒரு பாழும் மண்டபம் தெரிகிறதே'' என்று கூறிக்கொண்டு அதை நோக்கி மூச்சிரைக்க ஓடினார்கள்.

''ஆகா தேடுதல் வேட்டை முடியும் நேரம் வந்துவிட்டது. அது மட்டுமல்ல சரித்திரத்தை மாற்றிய மூவர் நாம்'' என்ற பூரிப்பு அவர்களுக்கு.

நன்றாய் ஆராய்ந்து பார்த்தால் ஒரு மண்டபம் இயற்கையான ஒரு குகைக்கு முன் கட்டப்பட்டிருந்தது. குகைக்குள் கதிரொளியே வராதே. பின் அந்த கவிதையில், ''தாமதமாய் வரும்'' என்று இருக்கிறதே எப்படி? என்ற சந்தேகம் மட்டும் இருந்தது.

மூவருக்கும் உள்ளே செல்ல ஆர்வம்தான். ஆனால், 'எதிரிகள் ஏதாவது விஷமம் செய்துவிட்டால், காட்டுக்குள் சென்று சகாக் களை அழைத்து வந்துவிட்டால், இல்லை, ஒரு பெரும் பாராங் கல்லை கொண்டு குகையை மூடிவிட்டால்?' என்று பலவாறு யோசித்தனர்.



''அடியானே, தாங்கள் இங்கேயே நிற்க வேண்டியதுதான் போலிருக்கிறது. நாங்கள் இருவரும் உள்ளே சென்று என்ன இருக்கிறது என்று பார்த்து வருகிறோம்'' என்றான் மாறன்.

அடியானுக்கு வெளியே தனியாய் நிற்பதில் கோபம். உள்ளே சரித்திரம் நிகழப்போகிறது. அப்போது அங்கே இல்லாமல் வெளியே காவல்காக்க வேண்டுமா?ஆனால், பதில் ஒன்றும் சொல்லவில்லை.

மாறன் மேலும் ''நாம் தேடி வந்தது அந்த குகைக்குள்ளேதான் இருக்கவேண்டும். நான் மெல்ல குகைக்குள்ளே நுழைந்து பார்க்கிறேன். யாராவது குகையை நெருங்கி வந்தால் நீ ஒரு குரல் கொடு!'' என்றான்.

'சோழர்களின் கழுகுக் கண்களிலிருந்து தப்பிக்கும் இடமாக இருக்கவேண்டுமென்று இதை தேர்ந்தெடுத்தானோ பாண்டியன்? அது இனி எங்கள் பிடியிலிருந்து தப்பாது' என்று நினைத்த மூவருக் குமே இதுவரையில் தாம் கண்டும் கேட்டுமிராத அனுபவம் அவர்களை நெருங்கிக் கொண்டிருப்பதாகத் தோன்றியது. மூவருக் குமே தாங்கள் வெற்றி வாகை சூடித் தஞ்சை திரும்பும் காட்சி கண்முன்னே தோன்றியது.

❖ ❖ ❖

## அத்தியாயம் எண்பது

## பெட்டியில் இருந்தது...?

இருவராக இருண்ட குகைக்குள் நுழைந்தது தெம்பைக் கொடுத்தது. அதுவும் அடியானை வெளியில் காவலுக்கு வைத்து விட்டு வந்தது இன்னமும் தைரியத்தைத் தந்தது. இந்த குகைக்குள் தனியொருவனாய் நுழைந்தால் பயப்பிராந்தியிலேயே செத்துப் போய்விடுவார்கள்;அவ்வளவு இருள்.

உள்ளே சென்றவுடன் அவர்கள் செய்த முதல் காரியம் ஆயிர மாயிரம் வௌவால்களின் தலைகீழ்த் தூக்கத்தை கெடுத்து விட்டது தான். அவ்வளவும் கோபத்தில் 'கிரீச் கிரீச்' என்று கத்திக் கொண்டு குகையைவிட்டு வெளியேறின. அந்த ஒலிஅலையில் அவர்களுடைய தேகமெல்லாம் பதறி நடுங்கியது. இவ்வளவு வௌவால்கள் இருந்ததால் அந்தக் காவலர்களும் இந்த குகைக்குள் அடிக்கடி வரமாட்டார்கள் என தெரிந்தது.

காவலர்கள் மட்டுமல்ல. எவரும் வந்து சென்ற சுவடுகள் கூட இல்லை இந்த இடத்தில். தங்கள் ஆருயிர்ப் பொக்கிஷத்தைக் காக்க பாண்டியர்கள் செய்த ஏற்பாடுகளுக்கு இவர்கள்தான் முதல் பலி கடாவா? ஒவ்வொரு வினாடியும் ஒரு யுகம் போலச் சென்றது.

குகைக்குள் சென்றவுடன் முதலில் இருட்டாயிருந்தது. பின் இருட்டாயிருந்த இடங்களில் கொஞ்சம் வெளிச்சம் தெரிய ஆரம்பித்தது. காடே இருட்டென்று இருந்தவர்களுக்கு இந்த குகையினுள் இருந்த வெளிச்சம் அதிசயமாக இருந்தது. எங்கிருந்தோ ஓர் வெளிச்சம் தோன்றிக் கரிய இருளைப் போக்கியது. கண்ணுக்கு எட்டிய இடங்களில் துவாரம் ஒன்றும் இல்லையே. ஆனால், மங்கலான வெளிச்சம் எங்கிருந்தோ வந்து கொண்டிருந்தது. குகைக்குள்ளே காற்றும், வெளிச்சமும் நுழைவதற்காகச் சில துவாரங்கள் செய்யப்பட்டிருந்தன போலும். ஆனால், அவை எங்கிருந்தன என்று தெரியவில்லை.

மாறனின் மனதில் ஓர் மின்னல் "வெளிச்சம் நுழைந்தவுடன் வரவில்லை. தாமதமாய் வந்துவிட்டது. இதைத்தான் தாமதமாய் வரும் ஞாயிறு என்று சொன்னார்களோ?"

ஒரு முடிச்சு மெல்ல மெல்ல அவிழ்வது போலத் தோன்றியது.

இருவரும் சிறிதுநேரம் திகைத்து நின்றார். பின்னர் குகைக்குள் நாலாபுறமும் பார்த்தனர். அவர்கள் எதிர்பார்த்தபடி குகையின் நடுவில் ஒரு பாறையின் மேல் அழகான வேலைப்பாடு நிறைந்த பெட்டி எதுவுமில்லை. வந்த காரியம் அவ்வளவு சுலபமாக இருக்கும் என்று நினைத்ததற்கு வெட்கம் கொண்டார்கள்.

அதன் பின் கடைசி முடிச்சும் அவிழும் நேரம் வந்தது. மர்மமாய் உள்ளே வந்த அந்த வெளிச்சத்தில் ஓர் அபூர்வமான காட்சியைக் கண்டான் மாறன். இருட்டில் திடீரென்று தோன்றிய அந்த மெல்லிய வெளிச்சத்தில் அவர்களுடைய பார்வை ஒரு சிற்பத்தின் மீது விழுந்தது.

குகையின் துவாரத்துக்கு நேர் எதிர் சுவரில் ஒரு அழகிய சிற்பம் இருந்தது. உண்மையில் மிக அழகான சிற்பம். ஒரு வாளேந்திய வீரனின் சிலை சுவரில் பதிந்திருந்தது. வெற்றி வாகை சூடிய வீரனின் கையில் வாளை தவிர ஒரு கேடயமும் இருந்தது. நன்றாய் உற்று பார்த்தால் அந்த கேடயத்தின் மீது ஒரு பாயும் புலி பொறிக்கப்பட்டிருந்தது. பின்னர் கவிதையின் நாலாவது வரி ஞாபகம் வரவே வீரனின் கால்களை உற்று நோக்கினர். அவன் காலடியில் எதையோ மிதித்திருப்பது போலிருந்தது. ஆர்வத்தில் அருகே சென்று பார்த்தனர். அவன் காலடியில் இருந்தது ஒரு சிறிய



மீன். வலியில் துடித்து கொண்டிருந்தது போல சிற்பி அதைச் செதுக்கியிருந்தான்.

இருவரும் இனி ஒரு நொடி கூட ஐயம் கொள்ளவில்லை. இதுதான் இடம். நிச்சயமாக இதற்குள்தான் பொக்கிஷம் இருக்கிறது. இருவருடைய இதயங்களும் பட பட வென்று முரசு போல அடித்தன. அந்தச் சிற்பத்தின் அர்த்தம் புரிந்தவுடன் இருவருக்கும் ஆனந்தம் தாங்கவில்லை. அந்த வீரன்தான் சோழன். அவன் காலடியில் மீன் என்றால் அது பாண்டிய நாட்டை குறிக்கும். வெங்கையின் காலடியில் வேந்தனின் முடி என்ற வரிக்கும் பதில் கிடைத்துவிட்டது.

ஆனால் 'எங்கிருக்கிறது பொக்கிஷம்? இவ்வளவு எளிமையான விடை கொண்ட புதிரை ஏன் நூறாண்டுக் காலமாக எவரும் கண்டுபிடிக்கவில்லை?' என்ற ஐயமும் எழுந்தது.

அந்தச் சிற்பத்தை நெருங்கியவுடன் கைகள் நடுங்கின. சேதம் சிறிதுமில்லாமல் கிடைக்குமா என்றே அச்சம். அதன் சரித்திரப் புகழையும் அரசியல் சக்தியையும் புரியாதவன் எவனாவது தங்கத்துக்கும் வயிரத்துக்கும் ஆசைப்பட்டு எடுத்திருந்தால்....?

இருக்காது. ஒரு நூறாண்டுக் காலமாக அவ்வனப் பிரதேசத்தில் ஒரு குடும்பம் இதை காத்துவந்திருக்கிறது. அதன் எதிர்ப்பை இப்போதுதானே சந்தித்தார்கள். ஏற்கனவே அந்தக் கிரீடத்தை யாராவது அடைந்திருந்தால் இவர்கள் வெட்டியே சாய்த்திருப்பார்கள். இல்லை இவர்களை அவன் வெட்டிச் சாய்த்த பின் தான் அதை அடைந்திருக்க முடியும். அதனால் சேதமின்றியே கிடைக்கும்.

சிற்பத்தை உற்றுப் பார்த்தான் வந்தியத் தேவன். மீனின் உடல் முழுவதும் சுவரில் பதிந்திருக்க அதன் வால் மட்டும் வளைந்து வெளியே நீட்டிகொண்டிருந்தது.

இருவரும் மீனுக்கு மிக அருகில் குனிந்துகொண்டு, அதையே கண்கொட்டாத ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அதன் வாலோ தலையோ எவ்விடத்தையாவது குறிக்கின்றதா என்று தேடினார்கள். உற்று உற்றுப் பார்த்துப் ஏதாவது ஒரு இடத்தில் ஒரு பொக்கிஷப் பெட்டி இருக்குமா என்று தேடினார்கள்.

மீன் நோக்கிய திக்கில் எந்தக் கதவும் தெரியவில்லை. சரி இதையாவது முயற்சி செய்வோம் என்று முன்னால் ஒரு அடி வைத்து அந்த மீனின் உருவத்தைத் தொடக் கையை நீட்டினான் வந்தியத் தேவன்.

வந்தியத் தேவனே முதலில் அந்த மீனைத் தொட்டான். உடனே மாறனுடைய கை அவனுடைய ஒரு புஜத்தைப் பற்றியது. இது ஏதாவது சூழ்ச்சியாய் இருந்தால்? மீனைத் தொட்டவுடன் மேலிருந்து ஒரு பாறை விழுந்தால்?

எனினும் வந்தியத் தேவன் நிதானிப்பது போலத் தோன்ற வில்லை. மீனின் வாலைப் பிடித்தான். என்ன அதிசயம்? மீனின் வால் நிஜ மீனின் வால் போல அவனது ஸ்பரிசத்தில் வளைந்து கொடுத்தது. உடனே இந்திரஜாலம், மகேந்திர ஜாலம் போல அவர் களுக்கு ஐந்தாறடி தூரத்தில் இரு தூண்களுக்கு இடையில் கதவு ஒன்று திறந்தது. மௌனமாகத் திறக்கவில்லை. பிடிபட்ட கிளியின் இறக்கையை வேடன் அறுக்கும்போது ஒரு சப்தம் செய்யுமே, அது போல அந்தக் 'கிரீச்' என்ற ஒலி குகைமுழுவதையும் நடுநடுங்கச் செய்தது.

சப்தம் கேட்டபின், குகைக்குள் ஏதோ ஆபத்து என்று நினைத்த அடியான் ''என்ன ஆனது?'' என்று வினவினான்.

''ஒன்றுமில்லை. நீர் அங்கேயே இரும்'' என்றார்கள்.

ஆனால், அடியான் கேட்பதாய் இல்லை. குகைக்குள் சரித்திரம் உருவாகிறது என யூகித்து விட்டான். இந்த வேளையில் அசடு போல வெளியில் யாராவது காவல் காப்பார்களா? இந்தக் குரல் களைக் கேட்டவுடன் அடியானும் காவலை விட்டுவிட்டு அங்கு விரைந்து வந்தான்.

உள்ளே ஓடோடி வந்தவனை அவர்கள் இருந்த பரபரப்பில் வெளியே போகச் சொல்லவில்லை.

அருகில் சென்று அந்த துவாரத்தை உற்று நோக்கினர். திறந்த அந்த துவாரத்தில் ஒரு அழகிய வேலைப்பாடு நிறைந்த பெட்டி இருந்தது. ஆனால், அதன் கதவு பூட்டப்பட்டிருந்தது. கண்ணுக்கு எட்டிய தூரத்தில் திறவுகோலில்லை. அதனால் வாளைத் திருப்பி கைப்பிடியினால் ஒரு போடுபோட்டான் மாறன். நூறு வயதான பூட்டு. ஒரு இளம் காளையின் கைவலிமைக்கு முன் நிற்கவில்லை.

''டணால்'' என்ற சப்தத்துடன் உடைந்து விழுந்தது பூட்டு. மாறன் அந்த பெட்டியின் கதவைத் திறந்தான்.

மூவருக்கும் உள்ளங்காலில் கூட வியர்த்துத்-தரை வழுக்கி விட்டுவிடுமோ என்ற பயம் வந்தது. ஆனால், அவர்களது கண்கள் கூரிய வேல்களாயின. மூவரின் பார்வையும் இருளைக் கிழித்துச் செல்லும் வலிமை பெற்றிருந்தன.



''ஆ'' என்று கத்திய மாறன் வேறொன்றும் பேசவில்லை. அவன் முகம் வெளுத்துப் போயிருந்ததைக் கண்டபின் விளைவு என்ன வென்று ஊகிக்கும்படியாயிருந்தது மற்ற இருவருக்கும்.

பெட்டி காலியாக இருக்கிறது என்பதையே அவனது அதிர்ச்சி தெரிவித்தது.

அந்த வெறுமையினால் ஏற்பட்ட வியப்பும் திகைப்பும் அவனைத் தாக்கவே, மாறன் அந்த பெட்டியிலிருந்து கையை எடுக்கக்கூடவில்லை. சுய நினைவு பெறும் ஏதோ பயங்கர சொப்பன உலகிலிருந்து அப்போதுதான் விழித்தெழுந்தவன் போல் காணப்பட்டான். அவனுடைய கண்கள் 'திருதிரு' வென்று விழித்தன. மற்ற இருவரும் விலகி நின்று ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டு நின்றார்கள். அந்தக் குகையில் பரிபூரண மௌனம் குடிகொண்டிருந்தது.

எல்லாருடைய உள்ளமும் ஒரு கணம் வெறுமையானது. எதற்கும் கலங்காமல் மலைபோல் நிற்கும் வழக்கமுடைய அடியானே ''நாசமாய்ப் போயிற்று!'' என்றான்

அந்த மாயவலையிலிருந்து முதலில் சுதாரித்துக் கொண்டவனும் மாறன்தான். குகையின் இதர பாகங்களை வெறிபிடித்தவன் போல தேடத் தொடங்கினான். தன் வாளை வைத்து குகையின் சுவர்களை ''டணார், டணார்'' என்று தட்டினான்.

அவன் செயலைச் சற்று நேரம் கவனித்த வந்தியத் தேவன் ''சம்பு வராயரே, கிளம்பலாம் வாருங்கள்'' என்றான்.

''எப்படிக் கிளம்புவது? நாம் வந்த காரியம் இன்னும் பூர்த்தி ஆகவில்லையே. பெட்டியைக் காலியாய் வைத்துவிட்டு வேறெங் காவது ஒளித்துவைத்திருக்கலாம் அல்லவா?'' என்று ஒரு நம்பிக்கை யற்ற குரலில் கூறினான் மாறன்.

அழுத்தமான குரலில் வந்தியத் தேவன் ''அது இங்கே இல்லை. இனி நாம் இங்கிருப்பதில் உபயோகமும் இல்லை. அபாயமும் உண்டு. இனிமேல் செய்ய வேண்டியதென்ன என்பதைப் பற்றி வெளியிலே போய் யோசித்துக் கொள்ளலாம்'' என்றான் .

''வல்லா, என்ன பிதற்றுகிறாய்?'' என்று மாறன் கோபமாய்க் கேட்டான். ''இந்த காவிக் குகையின் தரிசனம் செய்து புண்ணியம் கட்டிக்கொண்டு போவதற்காகக் கடல் கடந்து வந்தேனா?'' என்றான். அவன் முகத்தில் ஒரு கணநேரம் எல்லையற்ற துன்பத் தின் அறிகுறியான கவலை ரேகை இழையோடியது.

பதில் சொல்லாமல் யோசனையில் ஆழ்ந்திருந்தான் வந்தியத் தேவன். பின்னர் ''முதலில் அந்தப் பொக்கிஷங்கள் இங்கு வைக்கப்படவேயில்லை.'' என்றான்.

மாறனுக்கும் உண்மை விளங்கியது. ''என் கண்களில் காண்பதை நான் நம்புவதா, இல்லையா என்றே தெரியவில்லை. நான் காண்பது கனவா? அல்லது எல்லாம் வெறும் மாயையா?... கடைசியாக, ஒன்றும் இல்லாத இடத்துக்கா இவ்வளவு தூரம் வந்தோம்?''

கண்களில் கண்ணீர் ததும்பியது. சிறிது நேரம் நிசப்தம் நிலவியது. அடியானின் முகத்தில் பெரும் கலவரம் காணப்பட்டது. ''கபட நாடக சூத்திரதாரியாகப் பாண்டியன் இருக்கிறானே'' என்றான்.

''அவனைச் சொல்லியும் தவறில்லை. தவறான இடத்தில் தேடு கிறோம். அந்த மணி மகுடம் கடலைக் கடக்கவேயில்லை என நினைக்கிறேன்'' என்று வந்தியத் தேவன் கூறியது மற்ற இருவருக் கும் பெரும் வியப்பை அளித்தது.

மூவருமாய் வெளிவந்தனர். எதிரிகள் யாரும் இல்லை. ஆனால், மூவருக்கும் ஒரு பிரமை. புதருக்குப் பின் மறைந்து நின்று இவர் களை யாரோ கண்காணிப்பதாக ஓர் உணர்வு. ஆனால், வெறும் கையுடன் வெளி வந்த இவர்களை அவர்கள் ஒன்றும் செய்ய மாட்டார்கள் என்று தோன்றியது.

மூவரும் வந்த வழியே நடக்கத் தொடங்கினர். மாறன் மட்டும் அவ்வப்போது திரும்பித் திரும்பி ஏக்கம் நிறைந்த கண்களுடன் அந்த குகையைப் பார்த்துக் கொண்டே சென்றான். பின் அதனை மரங்கள் மறைத்தவுடன் வந்தியத் தேவனின் பேச்சுக்கு முழு கவனத்தையும் தந்தான்.

''நன்றாய் யோசித்திருந்தால் நாம் வந்தே இருக்கமாட்டோம். சிங்களரை எடுத்து கொள்ளுங்கள். அந்த பொக்கிஷத்துக்கு பதிலாக நட்பை பண்டமாற்றம் செய்து கொள்வதாக சோழர் சொன்னார்கள். செவிசாய்க்கவில்லையே. எவனாவது இன்னொரு நாட்டின் பொக்கிஷத்துக்காகத் தன் நாட்டைச் சுடு காடாய் மாற்ற முற்படுவானா? சிங்களவன் முற்பட்டான். அப்படியென்றால் அந்தப் பொக்கிஷம் மிகவும் பெரியதோர் விலைமதிப்பைக் கொண்டிருக்கவேண்டும். அல்லது பாண்டியனின் நட்பு அவனுக்கு அவ்வளவு உயர்ந்ததாய் இருக்கவேண்டும். அதை நம்மிடம் ஒப்படைத்துவிட்டு நமது நட்புரிமையை நாடியிருக்கலாம். ஏன் செய்யவில்லை? தங்கள் நாடே போனபோதும்கூட அதை



ஒப்படைக்கவில்லை. அவ்வளவென்ன? பாண்டியர்களுக்கு நண்பர்களா இந்தச் சிங்களவர்கள்? இல்லை. நான் முதலில் சொன்னது போல பண்ட மாற்றத்துக்கு உரிய பொருள் அவர் களிடம் இல்லை என்றும் இருக்கலாம்''

அடியான் தன் சந்தேகத்தை வெளியிட்டான். ''பாண்டியர் களின் குணவிசித்திரங்கள் எனக்கு புரியவில்லை. இல்லாத பொருளுக்கு இவ்வளவு காவலை ஏற்பாடு செய்திருக்கிறார்களே. இல்லை. இல்லை. இந்த இடத்தில்தான் அது இருக்கவேண்டும்.''

''வைணவரே, சோழர்களும் அதைக் கைப்பற்றப் பல ஆண்டு களாக எத்தனையோ ஆட்களை அனுப்பிப் பிரம்மப் பிரயத்தனம் செய்தார்கள். அவர்கள் வரிசையில் நாமும். நம்மை விடப் பெரிய மனிதர்கள் அதைத் தேடிவிட்டார்கள். பெரும் படையுடன் வந்தும் தேடிவிட்டனர். கிடைக்க வில்லையே. ஆனால், இந்தக் காவல் ஏற்பாடு தான் என்னை பிரமிக்க வைக்கிறது. இவர்கள் வம்சம் வம்சமாக குலப் பாதுகாப்புக்காக இங்கேயே காத்திருக்கிறார்கள். நம் வேளக்கார படை போல, பாண்டியரின் ஆபத்துதவிகள் போல.''

''இவ்வளவை யூகித்த உமக்கு அந்த பொக்கிஷம் எங்குதானிருக் கிறது என்பதும் தெரியும் போல?'' என்றான் அடியான்.

வந்தியத் தேவன் சிரித்தான் ''அது எங்கிருக்கிறது என எனக்குத் தெரியாது. ஆனால், எங்கு அது இல்லை என்று தெளிவாகத் தெரியும். அது இலங்கையில் இல்லை''

''அப்படியானால்,அந்தக் கவிதை தவறா?''

''இல்லை, கவிதை தவறில்லை அதன் பொருளை நாம் உணர்ந்த தில் தான் பிழை. உண்மைதான், இந்தக் கவிதை தெளிவாக இருப்பது போலத் தோன்றுகிறது. ஆனால், அதில் சூட்சுமம் இருந்தால் வியப்பொன்றும் இல்லை.''

வியப்புடன் விழித்தார்கள் இருவரும். அதுவே உண்மை என்றும் புலனானது

''வல்லவராயரே மிகவும் சரியான ஆய்வு செய்துவிட்டீர். ஆனால், எனக்கு ஒரே ஒரு சந்தேகம் தான்'' என்றான் அடியான்

பெருமை கொண்ட முகத்துடன் வந்தியத் தேவன் திரும்பி ''என்ன?'' என்றான்.

''இது ஏன் நாம் கப்பல் ஏறும் முன் உமக்குத் தோன்றவில்லை? நம்பாமல் இங்கு ஏன் வந்தீர் ?''

''நாய் வேஷம் போட்டால் குரைத்துத்தான் ஆகவேண்டும்''

''என்ன சொல்கிறீர் வந்தியத் தேவரே?'' என்றான் அடியான் திடுக்கிட்டவாறே.

''நான் உமது குருநாதரையும் அவரது உத்தரவையும் தான் சொன்னேன். ஆனால், ஒன்று வைணவரே. இனியும் மறைத்து வைப்பதில் பயனில்லை. உண்மையை நாம் ஒப்புகொண்டால் தான் அடுத்த நடவடிக்கையை கவனிக்க முடியும்'' என்றான் வந்தியத் தேவன்

''இல்லாத இடத்தில் இவ்வளவு நாள் தேடியிருக்கிறோம். என்ன அறிவீனம்?'' என்றான் மாறன்.

''நம்மைப் பிடித்தார்களே, அவர்களும் காலியான குகையை ஒரு நூறாண்டுகாலமாகக் காவல் காத்திருந்தார்கள். அவர்களின் அறிவை என்னவென்று சொல்லுவாய்?'' என்றான் வந்தியத் தேவன்

அதற்குள்ளாக எதிரிகளைக் கட்டிப்போட்ட இடத்துக்கு வந்து விட்டார்கள். அவர்களைக் கட்டவிழ்த்துவிடவேண்டும் என்ற எண்ணத்துடன். இந்தக் காட்டில் வீரர்களை கட்டிப்போடுவது தவறு.

ஒரு நூறாண்டுகளாகத் தாவடி போட்டுக் கொண்டு இப் பொக்கிஷத்தைக் காத்த வீரர்களைக் கட்டவிழ்த்துவிட்டு உண்மை யைச் சொல்லிச் சிரித்துவிட்டுச் செல்ல வேண்டும்.

ஆனால், அந்த வேலையையும் அவர்களுக்கு விட்டு வைக்க வில்லை எதிரிகள். தாங்களே கட்டவிழ்த்துக்கொண்டு தப்பி விட்டார்கள். அவர்களைக் கட்டிய கயிறு மட்டும் தரையில் கிடந்தது!

அனாதையாக கிடந்த கயிறைக் கண்டு ''நம் எல்லோரையும் முட்டாளாக்கிவிட்டான் பாண்டியன்'' என்றான் மாறன். ''பார்க்கப் போனால் பாண்டியர்கள் செய்த காரியம் மிகவும் புத்திசாலித்தனமானது. எனக்கென்னமோ ராஜசிம்ஹன் அந்த கிரீடத்தை பார்த்ததேயில்லை. அதற்கு முன்பாகவே அது மறைத்து வைக்கப்பட்டிருந்தது என்று தோன்றுகிறது'' என்றான் மாறன்

''ஆகா என் வழிக்கு வந்துவிட்டீர். பின் ஏன் இந்த நாடகம் என்றும் யூகித்திருப்பீரே?'' என்று கேட்டான் வந்தியத் தேவன்.

''இலங்கைக்கு இந்த பெட்டி தான் வந்தது. ஆனால், அப்போதும் அது காலியாக இருந்தது. பொக்கிஷம் மிகவும் அபாயகரமான இடத்தில் இருக்கும் என்று அறிந்த மன்னன் இந்த நாடகத்தை ஆடி



நம் பார்வையின் திசையைத் திருப்பப் பார்த்திருக்கிறான்'' என்றான் மாறன்.

வந்தியத் தேவனின் முகத்தில் எழுந்த புன்னகை, அவனும் அதே யூகத்தைக் கொண்டிருந்தான் எனக்கூறியது. ''அப்போது அந்தக் கிரீடம் நிஜமாக இருக்கும் இடம் இங்கிருந்து வெகு தொலைவு என்று தோன்றவில்லையா?'' என்றான்

''ஆம். ஆனால், அது கண்டுபிடிக்கப்பட்டால் நமக்கெல்லாம் மிகவும் ஆச்சரியம் தரும் இடத்தில்தான் இருக்கும். அந்தப் பொக் கிஷத்தை நாம் உண்மையிலேயே கண்டுபிடிக்கும் போது அது காவலின்றியேகூட இருக்கும். அதை விடு. இப்போது காவல் காத்து வந்த மக்களைப் பார்ப்போம். இத்தனை நாளைக்குப் பிறகும் இவர்கள் காவல் காத்து இருக்கிறார்களே? அவர்களிடமும் உண்மையை சொல்லிவிட்டால் வேறு பிழைப்பைத் தேடியாவது செல்ல மாட்டர்களா?'' என்றான் மாறன்.

''அகப்பட்டால் சொல்லிவிடலாம். ஆனால், மறைவிலிருந்து பார்த்து இப்போது தெரிந்து கொண்டிருப்பார்கள். அது கொஞ்சம் வியப்பான காரியந்தான். பாண்டியர் செய்த சூழ்ச்சி எவ்வளவு பெரியது தெரியுமா? அதைக் கண்டுபிடிப்பது உறுதி என்று பரிபூரண நம்பிக்கை கொண்டு வந்தவருக்குக் கடைசிவரை ஒரு வழியை அமைத்து அதில் இட்டுச் சென்று கடைசியில் ஏமாற்றத் தைத் கொடுத்து, மனமுடைந்து இனி எங்கும் தேடாது போல் செய்துவிட்டனர்.''

''முதலில் இங்கு வைக்கலாம் என்று ஏற்பாடுகளைச் செய் திருப்பார் பாண்டியர். பிறகு எதற்காகவோ பாண்டியரின் மனமே மாறிப் போயிருக்கவேண்டும். இல்லை அது இருக்குமிடத்திலிருந்து அதை மீட்க முடியாமல் போயிருக்கும். அதுமட்டுமல்ல. நாம் அந்த கவிதையைப் பொதுப்படையாகப் பார்த்தோம். அதனால் வந்தது தோல்வி. நன்றாக நினைத்துபார். ஒளித்து வைப்பவன் கவிதை எழுதுகிறான். சோழனுக்காக எழுதவில்லை. அவன் வம்சத்தினருக் குத் தான் எழுதுகிறான். எப்படிபட்ட பண்டியனுக்கு அது கிடைக்க வேண்டும் என்று அவன் நினைப்பான்? வீரமும் விவேக மும் உள்ளவனுக்கு தானே? அவனால் தான் அந்தக் கிரீடத்தைத் தக்க வைத்து கொள்ள முடியும். இல்லையென்றால் கண்டு பிடித்துச் சோழரிடம் ஒப்படைப்பதுபோல் ஆகாதா?''

அடியானுக்கு ஒரு நப்பாசை. ''வேறெங்காவது இத்தீவில் தேடலாமா?'' தலையசைத்தனர் மற்ற இருவரும்.திரும்புவதே உசிதமாகத் தோன்றியது.

காட்டிலிருந்து வெளியேறியதும் தோல்வியுணர்ச்சி எங்கோ காணாமல் போனது. சிரிப்பும் வேடிக்கைப் பேச்சும் அதிகமாயின. நம் கதாபுருஷர்கள் மூவரும் வெறுங்கையுடன் திரும்புகிறார்கள் என்று பார்ப்பவர்களால் சொல்ல முடியாது. 'இல்லாததை நாம் தேடி வெறும் கையுடன் திரும்பினால் அது தோல்வியாகாதல்லவா?' என்று மன ஆறுதல் செய்து கொண்டனர்.

''நாம் இங்கே வந்ததே தவறாகப் போயிற்று. நாம் ஒன்று நினைக்க, விதி வேறு ஒன்று நினைத்தது. அநிருத்தரின் ஆர்வம் என் புத்தியைக் குழப்பிவிட்டது'' என்று ஒப்புகொண்டான் அடியான்.

''நாம் திரும்பச் சென்று நம்மால் அதை இலங்கையில் கண்டு பிடிக்க முடியவில்லை என்று சொன்னால் அவர் ஆச்சரியப்பட மாட்டார் என்றே நினைக்கிறேன்'' என்றான் மாறன்.

''ஆ!'' என்று கூவி மற்றவர் முன் நடக்க அதே இடத்தில் சிலை போல நின்றான் அடியான்.

''இனி வீண் பொழுது போக்க வேண்டாம். புறப்படுங்கள்!'' என்று சொன்னார்கள்.

ஆச்சரியத்தில் அவன் அசையவில்லை. ''இந்த வீர வைணவரை வேண்டுமானால் இங்கேயே விட்டுவிட்டு செல்லலாமே. இங்கு கொஞ்சம் வைணவத்தை பரப்புவார்'' என்று சொல்லி மற்ற இருவரும் சிரித்தார்கள்.

அவர்கள் சிரிப்பொலியையும் அதன் எதிரொலியையும் புதர்களுக்கு நடுவில் மறைந்திருந்து கேட்டுக் கொண்டிருந்தவன், ஸ்தம்பித்து நின்றான். ''கிரீடத்தைத் தேடச் செல்லும் அந்த மூவரையும் தொடர்ந்து செல். கிரீடம் கிடைத்தால் சூழ்ச்சியால் அதைக் கைப்பற்ற முயற்சி செய். ஈழத்திலிருந்து தஞ்சை வரை உனக்கு அதற்குப் பல சந்தர்ப்பங்கள் கிடைக்கும்'' எனச் சொல்லி அனுப்பியிருந்தான் ரவிதாசன் அவனிடம்.

கிடைக்காமல் வெறும் கையுடன் திரும்பிய மூவரின் பேச்சை ஒட்டு கேட்டுக் கொண்டே திரும்பினான் சோமன் சாம்பவான். தோல்வியைக் கண்டு அநிருத்தர் அதிர்ச்சியுறமாட்டார். எதிர் பார்த்தேயிருப்பார் என அவர்கள் பேசிக்கொண்டது கேட்டது.

அது போல ரவிதாசனுக்கும் இதில் ஒரு ஆச்சரியமும் இருக்காது என்றே அவனுக்கும் தோன்றியது.

❖ ❖ ❖



### அத்தியாயம் எண்பத்தொன்று

## காதலைச் சொன்னான் மாறன்

மாதோட்டம் வந்து சேர்ந்த மூவரும், ஒரு நாள் முழுவதும் மெய்யப்பரின் மாளிகையில் தங்கினார்கள். முதலில் தோல்வியைப் பற்றிக் கவலைப் படாதவர்கள் போலச் சிரித்துப் பேசிக் காலம் கடத்தி வந்தார்கள். மெய்யப்பரின் வேலையாட்கள் செய்த உபசாரத்தில் ஓய்வெடுத்தனர். பாலாவியாற்றங்கரையில் நடை பழகினார்கள்.

ஆனால், அவற்றால் மனதுக்குள் குமுறிய கோபக் கனலைத் தணிக்க முடியவில்லை. அவர்களுக்கு ஏற்பட்ட தோல்வியென்பது அவ்வளவு எளிதில் அகலுமா என்ன? அவ்வப்போது அவர்கள் மன நிலையைப் பிரதிபலிக்க வந்த மௌனம் படையெடுத்தது.

வீர தீரச் செயல்கள் புரிந்து உலகத்தையே பிரமிக்க வைக்க வேண்டும் என்னும் ஆர்வம் கொண்டிருந்த வீரர்களுக்கு அப்படியொரு பழம்பெரும் விடுகதையை உடைத்துத் தமிழகச் சரித்திரத்தையே மாற்றி விடுவோமென்ற கனவு நிறைவேறாமல் போனதில் ஏமாற்றம் இருக்கத்தான் செய்தது.

வீரனுக்குச் சாதனை என்பது முக்கியம்; ஏன், அது உயிர் மூச்சுப் போன்றது! மாபெரும் செயல்களை நிறைவேற்றிவிட்டுப் போனவர்களை மட்டும்தான் சரித்திரம் நினைவில் கொள்ளும். பலருக்கும், நூறு வேலி நிலத்தைச் சேர்த்து வைத்த தன் பாட்டன் பெயரைக் கேட்டால் தெரியாது. ஆனால், பாட்டன் காலத்தில் வாழ்ந்த மாவீரனை அல்லது சரித்திர நாயகனை நன்றாய்த் தெரியும்.

எவ்வளவு பிரயத்தனம் செய்ய முடியுமோ, அவ்வளவும் செய்தாகிவிட்டது. ஆனாலும் பயன்படவில்லை. விதி வென்று விட்டது. இல்லை, செத்தொழிந்த பாண்டியனின் மதி வென்று விட்டது. இந்த முறையும் பாண்டியனுக்கே வெற்றி. நூறாண்டுகளுக்கு முன்னால் செத்துச் சுண்ணாம்பானவன் அவர்களை நிர்மூடர்களாக்கிவிட்டான் என்பதே கோபம்.

வீரர்கள் இருவரையும்விட நொந்து போயிருந்தது, அடியான் தான். கத்தியினால் மட்டும் வெல்ல முடியாததை, புத்தியால் மட்டுமே வெல்ல முடியும் என்று அவனையும் அனுப்பி வைத்தார், பிரதமர். ஆகையால், இந்தக் காரியத்தில் அவனுக்கே முழுத் தோல்வி. இனி ஊர் சென்று பிரதமர் முகத்தில் விழிப்பது

எங்ஙனம்? கிரீடத்துடன் மூவரும் திரும்புவார்கள் என்று எண்ணி அடுத்த வியூகத்தை அமைத்துக் காத்திருப்பாரோ, குருநாதர்?

இல்லை, ஊருக்குச் சென்று தோல்வி என்று சொன்னால் பிரதமரின் முகத்தில் ஒரு முறுவல் பூக்குமா? 'எனக்குத்தான் ஏற்கெனவே தெரியுமே' என்று சொல்லாமல் சொல்லும் முறுவல். தெரியவில்லை!

அடியான் கண்டும், கேட்டும், அனுபவித்தும் அறிந்த எந்தச் சூழ்ச்சியும் இவ்வளவு ஆழமானதல்ல. ஒரு நூற்றாண்டுக் காலமாக எதிரி வந்தாலும் வராவிட்டாலும் காவல் காக்கும் ஊழியர்! அந்த ஊழியருக்கே தெரியாமல் வேறிடத்தில் ஒளித்துவைக்கப்பட்ட குலப் பொக்கிஷம்!

இனி அந்தப் புதிய இடத்தைத் தேடிப் பிடித்தால் அங்கு என்னவெல்லாம் சூழ்ச்சியிருக்குமோ? வந்தியத் தேவன் சொன்னதுபோல, இவ்வளவு தூரம் வந்து கிரீடம் கிடைக்காமல் போனவன் நிச்சயமாக வேறொரு இடத்தில் தேடமாட்டான். இனி ஒரு தடவை அத்தகைய முயற்சியைத் தன்னால் செய்ய முடியாது என்றே மனம் ஒடிந்து போய்விடவேண்டும் என்று செய்த சூழ்ச்சி இது.

ஆனால், ஒருவிதத்தில் அடியான் தன்னைவிட மாறனின் நிலைக்கே அதிகமாகப் பரிதாபப்பட்டான். அவனை நினைத்தால் தான் அடியானுக்குக் கஷ்டமாய் இருந்தது. அவன் தன்னை என்னதான் கேலி செய்தாலும் அவன் மீது ஒரு பரிவும் பாசமும் வந்து விட்டது வீர வைணவனுக்கு. ஒரு காலத்தில் வந்தியத் தேவனின் மீது எவ்வளவு பிரியம் கொண்டிருந்தானோ, அவ்வளவு பிரியம் இப்போது இந்த இளம் சம்புவராயனின் மேலும் வைத் திருந்தான் வைணவன். வைணவனின் அனுதாபத்துக்கு உட்பட்ட மாறன் தன் கஷ்டத்தை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. ஆனால், மனதுக்குள் அச்சமயம் மிக்க மனச்சோர்வு அடைந்திருந் தான் என யூகித்துவிட்டான். எளிதில் உணர்ச்சிவயப்படாமல் இருக்கவேண்டும் வீரன் என்று அடியானுக்குத் தெரியும். போர்க் களத்தில் என்ன வேண்டுமானாலும் நடக்கலாம். ஆயிரம் அம்புகள் துளைத்தால் உடல் சல்லடைக் கண்களைப் போலாகிவிடும். அது நமக்கும் நடக்கலாம். அடுத்திருப்பவனுக்கும் நடக்கலாம்.

ஆகா! வரும்போது வெற்றியைப்பற்றி அவனுடைய மனத்தில் என்னவெல்லாம் எண்ணங்கள் குமுறி அலைமோதிக் கொண்டு பாய்ந்தன. அவை எதற்காகப் பாய்ந்தன? வெற்றியெனும் பெண்ணின் கையை அவன் ஏன் தீவிரமாக நாடினான்? அடியானுக்கு மட்டுமே தெரியும். எல்லாம் அந்தப் பழுவூர்ப் பெண்ணுக்காகத்தான்.



கப்பல் ஏறி நாடு திரும்பும் நேரம் வந்தபோது மாதோட்டத் துறைமுகத்தில் மெய்யப்பரின் கப்பல் மூவருக்காக இன்னமும் காத்திருந்தது. கப்பல் கிளம்பப்போகிறது என்றறிந்தவுடன் பலரும் அதைச் சுற்றிக் குழுமியிருந்தார்கள். சிலர் பொருட்களை ஏற்றவும், சிலர் பயணிக்கவும் இடமிருக்குமா என்று விசாரித்தனர்.

ஆனால், இந்த முறையும் கப்பல் எவ்வித வர்த்தகத்தையும் ஆதரிக்கவில்லை. வரும்போது கூடவந்த பாண்டிய ஆபத்துதவி இந்த முறை கப்பலில் ஏறக்கூட முயற்சிக்கவில்லை. தூரத்தி லிருந்தே பாயை விரித்துக் கட்டப்படுவதையும் உடனடியாகக் கப்பலை, காற்று பரதகண்டத்தை நோக்கித் தள்ளுவதையும் ஓரமாய் நின்று கவனித்தான். அவனது திட்டம் தாறுமாறாய்ப் போனது பற்றிய கோபமிருந்தாலும், பாண்டியரின் புண்ணியப் பொக்கிஷத்தின் மீது அந்தக் கொலைவெறிபிடித்தச் சோழர்களின் கை பட்டு அசுத்தமாகவில்லை என்று ஒரு சந்தோஷம் அவன் மனதின் ஓரத்தில் இருக்கத்தான் செய்தது.

அமைதியான நீலக் கடலைக் கிழித்துக்கொண்டு வெண்ணிறப் பாய் விரித்த கப்பல் பரத கண்டத்தை நோக்கிப் பறந்தது. போகும் வழியில் சிறிய கப்பல்களும் மீன்பிடி படகுகளும் ஈழத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தன. கப்பலின் ஓரத்தில் வந்தியத் தேவனும் மாறனும், ஆடைகள் காற்றில் படபடக்க நின்றபடி, அவற்றை வேடிக்கை பார்த்தபடியே சென்றனர்.

சேதுவை பாதி கடந்தவுடன் மீண்டும் சோகமானான் மாறன். வழக்கமில்லாத படபடப்பு மாறனிடம் ஏற்பட்டிருந்தது என்று வந்தியத் தேவன் முதலில் அறிந்தான். நாட்டை நோக்கிப் பயணிக்கும் கப்பல், தன் கையில் தேடிவந்த மணிமகுடம் இல்லை என்பதை நினைவூட்டியது போல. எதிர்காலமே இல்லாத நாட்டுக்குத் திரும்புகிறோம் என்று கலங்கினானோ என்னவோ?

"இது தோல்வியே அல்ல. முதலில் பாண்டியர் பொக்கிஷத் தையே இங்கு வைக்கவில்லையென்றால் அதைக் கண்டுபிடிக்காத நமக்கு எப்படித் தோல்வியாகும்?" என்று வீரமாய் வந்தியத் தேவன் பேசினான்.

மாறனும் தலையசைத்தான். உண்மை. மணிமகுடத்தைப் பொறுத்தவரை தோல்வியில்லைதான். ஆனால், அது கிடைக்கும். அதனால் தன் வாழ்வில் பல வழிகள் உருவாகும் என்று

நினைத்ததில் மாறனுக்குத் தோல்விதான். இந்த மணிமகுடத்தையும் லோகாவுடன் காதல் நிறைவேறுவதையும் ஒன்றோடு ஒன்று பிணைத்து ஏமாந்துவிட்டான் மாறன்.

அவனது கஷ்டத்தின் காரணத்தை அறியவில்லை வந்தியத் தேவன். எனினும் இன்னதென்று சொல்ல முடியாத சோர்வு ஒன்று அவனைப் பதம்பார்த்தது என அறிந்தான். மாறனின் தோள் மீது ஆறுதலாய்க் கையை வைத்தான் வந்தியத் தேவன்.

திரும்பிப் போவதென்றால் ஒரு விதத்தில் வந்தியத் தேவனுக்கே பயமாகத்தான் இருந்தது. தோல்வியைச் சுமந்து செல்வோரிடம் நாடு எப்படி நடந்து கொள்ளும் என்று சொல்வதற்கில்லை. வந்தியத் தேவனுக்குத் தெரியும் சென்றடைந்தவுடன் சேதுக்கரையில் மகிழ்ச்சி ஆரவாரம் செய்ய மக்கள் இருக்க மாட்டார்கள் என்று. மாலைகளுடன் ஜனங்கள் கூடியிருக்க மாட்டார்கள். வந்த வேலையில் வெற்றி பெற்றிருந்தால் அந்தச் செய்தி முன்கூட்டியே நாட்டுக்கு சென்றிருக்கும். அப்போது வரவேற்பே வேறு. கொள்ளையரைத் தோற்கடித்து நாகைக்குத் திரும்பிய போது ஏற்பட்டதல்லவா? அது போல.

ஆனால், வெற்றியென்றாலும் தோல்வியென்றாலும் வந்தியத் தேவனுக்கு வீட்டில் ஆசை மனைவி குந்தவை காத்திருப்பாள். சென்ற வேலையின் முடிவைப்பற்றிக் கவலையில்லாமல் கணவன் திரும்பும் ஒவ்வொரு நாளையும் வெற்றியாய்க் கருதுவாள். வாசலில் நிற்கவைத்து ஆரத்தியெடுப்பாள். மலர்மாலை சூட்டுவாள். சென்ற வேலை படு தோல்வியென்றாலும் மறந்து போகும் நிலைவரும். உலகெங்கும் சமர் புரிந்து வரும் சந்தோஷம் தாம்பத்தியத்தில் வரும் சந்தோஷத்தில் கால் பங்குகூட வராது என்று உணர்ந்தவன் வந்தியத் தேவன்.

ஆனால், மாறனுக்கு அப்படியாரும் இல்லை. அப்போது வந்தியத் தேவன் ஒரு முடிவுக்கு வந்தான். மாறனின் மனதில் இருந்த வெற்றிடத்தை நிரப்பச் சிறந்த வழியொன்றைக் கண்டு பிடித்துவிட்டான் .

"நாடு திரும்பியதும் என்ன செய்யப்போகிறாய் மாறா? கடம்பூர் செல்லும் உத்தேசம் இருந்தால் சொல். நானும் வருகிறேன். உன் தாய் தந்தையைத் தில்லையில் பார்த்தபோது கூட அதிகம் பேச முடியவில்லை'' என்றான்.

"ஊருக்கு சென்றால் சொல்கிறேன், வல்லா'' என்றான் மாறன்.

''அது மட்டுமல்ல மாறா. முக்கியமாக அவர்களிடம் உன் திருமணத்தைப் பற்றிப் பேசவேண்டும். இதிலெல்லாம் காலம்



தாழ்த்தக்கூடாது. நீ உரிய பருவத்தில் இல்வாழ்க்கையை மேற்கொண்டு இல்லற சுகங்களில் காலம் கழிக்கப் பெற்றோர்கள் ஆசைப்படுவார்கள் அல்லவா? இன்னமும் எவ்வளவு நாள் தான் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்கப்போகிறாய்?'' என்றான் வந்தியத் தேவன்.

நானே கல்யாணப் பேச்சை எடுக்கலாம் என்றிருந்தபோது திடீரென வயதாகியும் தன் நண்பன் மணமுடிக்காமல் இருக்கிறானே என்ற ஆதங்கத்தைத் தெரிவித்தான் வந்தியத் தேவன். அதில் ஒரு வியப்பும் இல்லை மாறனுக்கு.

அந்த ஐந்து ஆண்டுகளுக்குள் இருவருடைய வாழ்க்கையிலும் எத்தனை எத்தனையோ முக்கியமான சம்பவங்கள் நிகழ்ந்திருந்தன. அவற்றில் முக்கால் வாசியானவை அவர்களுக்கு இடையே யிருந்த தூரத்தை அதிகரித்தன. அந்த இளம் பிராயத் தோழர்களுக்குள் ஏற்பட்ட பிணைப்பு இடையில் முளைத்த சண்டை சச்சரவுகளால் குறையாதது என யாவரும் உணர்ந்திருந்தார்கள். அதனால் தன் மனதில் இருந்ததை வெளியிட, சரியான நபர் வந்தியத் தேவன்தான் என்று முடிவெடுத்தான் மாறன். முக்கியமாகச் சொல்லவேண்டிய தருணமும் இதுதான் என்று முடிவெடுத்தான். முதலில், வந்தியத் தேவனிடம் சொல்வதா இல்லையா? பின்னர் எதைச் சொல்வது எதை மறைப்பது என்று நிர்ணயிக்க முடியாமல் தவித்தான் மாறன். பின் எதேச்சையாக வந்தியத் தேவன் கேட்ட கேள்விக்குத் தன் மனதை முழுவதுமாகத் திறக்கலாம் என்று முடிவெடுத்தான்.

''வல்லா, நானே உன்னிடம் சொல்லலாமென்றிருந்தேன். எனக்கு... எனக்கு, ஒரு பெண்ணின் மேல் காதல் வந்துள்ளது'' என்று மனதிலிருந்ததைப் போட்டு உடைத்தான் மாறன்.

வந்தியத் தேவன் முகத்தில் ஒரு பெரிய புன்னகை. ''ஆகா! நினைத்தேன். சில நாட்களாகவே உன் நடவடிக்கையில் ஒரு மாற்றம் இருக்கின்றதென்று'' என்று சொல்லிவிட்டு நண்பனைக் கட்டித் தழுவினான். அவன் மனதில் நிறைவு. ஒவ்வொரு தோல்வியும் மாறனுடைய மனத்தில் அம்பைப் போல் தைத்தது இயல்பு தானே. ஒரு பெண் தான் இவனுக்கு வாழ்க்கையில் நல்ல பிடிப்பைக் கொடுப்பாள். ''சந்தோஷம் நண்பா. காதல் என்பது தொடும் பாம்பு. அது உன்னையும் தீண்டிவிட்டதா?'' என்றான்.

அதிர்ச்சியுடன் பார்த்த மாறனிடம், ''இல்லை, இல்லை விளையாட்டாய்ச் சொன்னேன். வாழ்வில் நிறைவுதேடி இருப்பவனுக்குப் பெண்ணே சிறந்த மருந்து. மேலே சொல்'' என்றான்.

கடல் அலைகளின் இரைச்சலுக்கிடையில் தெளிவாக மாறனின் குரல் கேட்டது. "வல்லா, இதற்கு முன்னர் எத்தனை எத்தனையோ ஜன்ம ஜன்மாந்திரங்களிலும் அவளுடன் தொடர்பிருந்ததாகத் தோன்றுகிறது. அவள் கிடைக்கவில்லை என்றால் என் வாழ்க்கை என்றென்றைக்கும் சோகமயமாகவே இருக்கும் என்று தோன்று கிறது. அவள் மட்டும் என் பக்கத்தில் இருந்தால் என் வாழ்க்கை செழிப்பாகும். என் வாழ்க்கையில் இதுவரை நான் தோற்றவை யெல்லாம் மீண்டும் எனக்குத் திரும்பக் கிட்டும்" என்றான் படபடப்புடன்.

சற்று நேரம் மௌனம் காத்த மாறன் முகத்தில் அசடு வழிய "மிகவும் உளறுகிறேன் என்று நினைக்கிறாயா நண்பா?" என்றான். "அவளைப் பற்றி நினைக்கையிலேயே எனக்கு மனதுக்குள் கவிதை மழை பொழிவது போலிருக்கிறது" என்றான்.

வல்லவராயன் ஆறுதலாய் "நானும் காதல் கொண்டிருந்தேன் என்பதனால் உன் வார்த்தைகள் எனக்கு முழுவதுமாய் புரிகின்றன மாறா. ஆனால், இதுவரை காதலே கொள்ளாத ஜடங்களும் உண்டு" என்றுச் சொல்லித் தூங்கிக் கொண்டிருந்த அடியானைப் பார்த்தான். அவர்களுக்கெல்லாம் உன் வார்த்தைகள் உளறலாக இருக்கலாம்" என்றான்.

காதலைப் பற்றிப் புரியாதது பலவும் ஆதிகாலந்தொட்டு இருந்து தான் வருகின்றன. அது எப்போது வருகிறது. எவரிடம் வருகிறது. எவர் மேல் வருகிறது? அது உடல் சம்பந்தப்பட்டதா. இல்லை, மனம் சம்பந்தப்பட்டதா? இந்தக் குழப்பங்களுக்கு இடையில் காதலென்பது ஒரு சாராருக்கு தெய்வீகமாகவும் மற்றுமொரு சாராருக்குப் பைத்தியக்காரத்தனமாகவும் இருந்துதான் வருகிறது.

ஆனால், அதே பாதையில் முன்பொரு காலத்தில் பயணித்த வந்தியத் தேவனுக்கு மாறனின் மனப்போக்கு முற்றிலுமாகப் புரிந்தது. வீரன் காதலிக்கும்போது வெட்கம் கொள்கிறான். ஆனால், காதலுக்கும் வீரத்துக்கும் சம்பந்தமில்லாமல் இல்லை. காமனுக்கும் வில்லுண்டு. அம்பும் உண்டு. ஆனால் வீரனிடம் இருப்பது போலல்ல. மலரம்புகளை, கரும்பு வில்லால் ஏவுவான். காதலினால் வீரம் அழிந்துவிடும் என்று பயப்பட வேண்டிய தில்லை. அப்படி உயிரைக் கொடுத்துக் காதலித்துவிட்டு, திருமணத் துக்கு அப்புறம் மாளிகையில் சுகபோகத்துடன் வாழ்ந்தவர் களுக்குப் போருக்குப் புறப்பட்டு வர இஷ்டமிராது என்று சொல்ல முடியாது. மனம் சௌகரியத்துக்குப் பழகிப் போய்விடும் என்று நினைக்க முடியாது. வந்தியத் தேவன் குந்தவையை விட்டுக் கடல் கொள்ளையரை அடக்கச் செல்லவில்லையா? இல்லை வானதி



யைக் காதலித்த பொன்னியின் செல்வர்தான் சமர் செய்யச் செல்லவில்லையா?

"சரி. யார் அந்தப் பெண் என்று எனக்குச் சொல்வாயா?" என்று கேட்டான் வந்தியத் தேவன்.

வெட்கத்துடன் லோகாவின் பெயரையும் அவள் குலத்தையும் கூறினான் மாறன்.

"ஆகா! பழுவேட்டரையர் மகளையா காதலிக்கிறாய்?" என்றான் வந்தியத் தேவன். "மிகவும் பொருத்தம் தான். அப்பாவைக் கண்டால் கோபம் கொப்பளித்துக்கொண்டு வருகிறது. மகளைக் கண்டால் காதல் கசிந்து வருகிறதாக்கும்" என்றான்.

"கேலி செய்யாதே வல்லா" என்றான் மாறன்.

"கேலி செய்யவில்லை. இதை எப்படி ஒரு நல்ல முடிவுக்குக் கொண்டு வரப்போகிறாய் என்று தான் தெரியவில்லை. அவர் உன்னை வீட்டுக்குள்ளேயே விடமாட்டார். நீயோ அவர் வீட்டு மாப்பிள்ளையாகப் பார்க்கிறாய். ஆனாலும்...." என்று கூறி இடையில் நிறுத்தி விட்டு வந்தியத் தேவன் ஏதோ யோசனையில் ஆழ்ந்தான்.

"இன்றோ எட்டமுடியாத உயர்த்திலுள்ள விவகாரம் போலத் தோன்றுகிறது. ஒரு காலத்தில் நான் நினைத்திருந்தால் உடனே நடக்கும் விவாகம் இது" என்றான் மாறன்.

வந்தியத் தேவன் "யார் கண்டது? உன்னுடைய விருப்பம் எளிதில் நிறைவேறினாலும் நிறைவேறலாம்! அந்தஸ்தில் நீ ஒன்றும் குறைந்தவன் இல்லையே. சம்புவராயர் குலமும் பழுவேட்டரையர் குலமும் ஏக அந்தஸ்தில் உள்ளவைதான்" என்றான்.

ஆனால், அந்தஸ்தெல்லாம் காதலுக்கு முன் ஒரு அற்பமான விஷயம் என்று அவனுக்குத் தெரியும். நூறாண்டுக்காலமாக நைந்து நலிந்து நொந்தும்போன வாணர் குலத்தைச் சேர்ந்த நாடோடியான அவன் சக்கரவர்த்தியின் மகளை மணக்கவில்லையா?

"என்னுடைய கடம்பூர் நாட்டை முழுவதையும் எடுத்துக் கொண்டு அதற்கு மாற்றாக அந்தப் பெண்ணைக் கொடுத்தால் கூடப் பரவாயில்லை"என்றான் மாறன்

வந்தியத் தேவன் உரக்கச் சிரித்தான். பெண்ணின் ஒரு கடைக் கண் நோக்குக்காக ஏங்கும்போது எல்லா ஆண்களும் இப்படித் தான். பெண்ணை உயர்த்தித் தன்னைத் தாழ்த்தியே காதலைக் கொள்வார்கள் ஆண்கள். சூரியனிடம் காதல் கொள்ளத் துணிந்த பனித்துளியாகத் தங்களை ஒப்பிட்டுக் கொள்வார்கள். வானும்

வில்லும் வீரனுக்கு மறந்துவிட "பெண்ணே! உன் பவழ வாயை வில் போல் வளைத்து ஒரு புன்னகை புரியமாட்டாயா?" என்று கெஞ்சுவான். அந்த நகை ஒன்று உலகில் இருக்கும் நகைகளையெல்லாம் விட அதிக மதிப்புப் பெற்றதல்லவா? அதுவும், பெண்கள் தங்கள் கனிவாயைத் திறந்து கனிவாய் பேசினால் கேட்கவே வேண்டாம். வந்தியத் தேவனும் அதே வழியில் பிராயணித்தவன்தானே.

"இது என்ன வியாபாரமா? அந்தப் பெண் உன்னை விரும்பினால் உன்னைத் தவிர வேறு யார் அவளை நெருங்க முடியும்" என்று ஆறுதல் சொன்னான்.

"வாழ்க்கையில் ஆசாபாசங்கள் எல்லாம் நிச்சயம் நிறைவேறாது என்ற காலம் வருமல்லவா? அத்தகைய காலத்தில் நான் வாழ்கிறேன். இது நடக்குமா வல்லா?"

"கவலைப் படாதே மாறா. நிச்சயம் நடக்கும். ஆனால், உனக்குப் போட்டி குறைவு"

"என்ன சொல்கிறாய்?"

"பழுவேட்டரையர் கோபத்தை நினைத்துவிட்டு அவர் பெண்ணை, மனதின் ஓரமாகக்கூட யாரும் நினைக்க மாட்டார்கள்" என்றான் சிரித்தபடி.

மனதில் இருந்ததையெல்லாம் மாறன் கூறியதைக் கேட்டு விட்டு வந்தியத் தேவன் ஒரு முடிவுக்கு வந்தான். 'பழுவூர் இளவரசியின் மீது அளவில்லாப் பரிவோ பாசமோ இல்லையென்றால் மாறன் இப்படி உருகமாட்டான். அவன் நல்வாழ்வுக்குத் துணைச் செய்யக் குந்தவையின் உதவியை நாடலாம். அவளை விட்டுப் பெண் கேட்கச் சொல்லலாம், பழுவூர் அரசர் நிச்சயமாக ஒத்துக் கொள்வார்' என்று முடிவு கட்டினான்.

"கவலையை விடு மாறா. இந்த சுப நிகழ்ச்சியை உனக்காக நான் நிறைவேற்றி வைக்கிறேன். வீடு திரும்பியதும் குந்தவையிடம் சொல்லி உனக்காகச் சென்று பெண் கேட்கச் சொல்லுகிறேன்" என்று உறுதி அளித்தான்.

வந்தியத் தேவனின் அந்த வாக்குறுதியைக் கேட்டவுடன் மாறனுக்குத் தன்னுடைய துன்பங்களெல்லாம் காற்றில் அகப்பட்ட புகை போலத் தீர்த்துவிட்டதாகத் தோன்றியது. நன்றியில் நண்பனின் கையைப் பிடித்துக் கொண்டான் மாறன்.

வந்தியத் தேவனுக்கும் இந்த வேளையில் அளவிலா ஆவல் உண்டாயிற்று. 'பொக்கிஷத்தைத் தேடி வந்ததற்கு ஒரு வெகுமதி



யாவது கிடைத்ததே. ஈழத்துக்கு வந்தது பாகற்காயாய் கசந்தது. பகற்கனவாக முடிந்தது என்று நினைத்தோமே. இப்படி நல்லதொரு காரியத்துக்கும் வித்திட்டதே' என்ற சந்தோஷம்.

ஆனால், ஒன்று. மாறனுக்கு இதில் அனுபவம் போதாது. பெண்ணின் நெஞ்சம் ஆழமானது. அதற்கு அளவுகோலே இல்லை. அந்தப் பெண் என்ன நினைத்திருக்கிறாளோ? சிரிக்கிறாளே பெண் என்று சிருங்கார ரஸத்தில் இறங்கிவிடக் கூடாது. பெண்களின் குண விசித்திரங்கள் தெரிந்து நடந்து கொள்வதென்றால் அது பெரும் போராட்டம். அதிலேயே மீதி வாழ்க்கை போய்விடும்.

வந்தியத் தேவன் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தான். "மாறன் சந்தோஷமாயிருப்பதற்கு என்ன வழி என்றுதான் இனி மேல் பார்க்க வேண்டும். எல்லாவற்றிலும் தோல்வியென்பதால் நமக்கு காதலிலும் தோல்வி தானா என்று அவன் பயப்படுவது நியாயம் தானே. அப்படியொரு பெண்ணின் உதவியில்லாமல் இவனால் வாழ்வில் தெளிவு காணமுடியுமாவென்பது உறுதியில்லை. ஏற்கனவே அவனுடைய மனோராஜ்யத்தில் ராணியாகப் பொறுப் பேற்றுவிட்டாள் அவள். இனிக் கடம்பூர் அரசியாக்கவேண்டியது தான் பாக்கி. பழுவேட்டரையரின் உடம்பு நாளுக்கு நாள் நலிந்துதான் வருகிறது. எப்படியாவது சீக்கிரம் அவர் சம்பந்தம் பேச நினைப்பார். இதுவரை அவர் கோபத்துக்குப் பயந்து யாரும் பெண் கேட்க வரவில்லை போல."

மாறனின் முகம் மலர்ந்திருந்தது. இருக்காதா பின்னே. வந்தியத் தேவனது ஆதரவு இருந்தால் இதில் முழு வெற்றி தான். அதுவும் இளையபிராட்டி குந்தவைதேவியே தனக்கு ஒத்தாசை செய்வார் என்று தெரிந்தது ஆனந்தத்தைக் கொடுத்தது.

இப்படி அந்த வணிகரின் கப்பல் மெல்ல மெல்ல நகர்ந்து செல்கிறதே. இதற்குப் பதிலாக ஒரு புஷ்பக விமானம் இருந்தால் உடனே பறந்துபோய்த் தஞ்சையை அடைந்துவிடலாமே என்று ஆசைகொண்டான் மாறன்.

கடைசியாக வந்தியத் தேவன் ஒரு எச்சரிக்கை மட்டும் செய்தான். "மாறா, ஒரு விஷயம். தூங்குகிறானே அந்த வைணவன், அவனுக்கு இது ஏதும் தெரியவேண்டாம். தாம்பத்தியமும் காதலும் அற்பத்திலும் அற்பமான விஷயம் என்று நினைக்கும் பிரமச்சாரி அவன் என்பதற்காக அல்ல. அவனுக்குத் தெரிந்தால் எல்லாம் பிரதமருக்குத் தெரிந்துவிடும். அது நமக்குச் சாதகமாக இருக்குமா என்று சொல்லமுடியாது. இப்போதுகூடத் தூங்குவது

போல் நடிக்கிறானோ என்னவோ?'' என்று சந்தேகத்துடன் அடியானை வல்லவராயன் திரும்பிப் பார்த்தான்.

ஆனால், அடியான் விட்ட குறட்டை, கடல் அலைகளின் ஓசைக்கே சவாலாய் இருந்தது. ''இல்லை வல்லா! அவன் குறட்டையைக் கேட்டாயல்லவா?'' என்றான் மாறன்.

தூங்குவது போல் நடிப்பதில் மட்டுமல்ல. அடியான் குறட்டை விடுவது போல நடிப்பதிலும் வல்லவன் என்று மாறனுக்குத் தெரியாது. அவர்கள் பேச்சையெல்லாம் கவனியாததுபோல் கவனித்தவனாய் அடியான் தூங்குவது போலப் பாசாங்கு செய்தான். அவர்கள் பேச்சைக் கேட்டுவிட்டு அவனுக்கு ஏற்பட்ட முகபாவ மாறுதல்களை அவன் முகம் வேறு புறம் திரும்பியிருந்ததால் மற்ற இருவருக்கும் தெரியவில்லை.

தூங்கிக் கொண்டிருந்தது போல நடித்த அடியான் நினைத்துக் கொண்டான். 'ஸ்திரீ பிரேமை பல சமயங்களில் புத்திசாலி ஆண்களை அசடுகளாக்கும். ஆனால், சில சமயம் அசடுகளையும் ஆளாக்கும். அது இரண்டு பக்கமும் தீட்டிய வாள். எப்படி வெட்டும் என்றே சொல்ல முடியாது.

மாறன் கதி எப்படியோ?'

❖ ❖ ❖

## அத்தியாயம் எண்பத்து இரண்டு
## கல்யாணப்பேச்சு

அந்த மனோகரமான முன் இரவு நேரத்தில் முழு நிலவின் ஒளியில் இரவையே யாரும் உணரவில்லை. கீழ்வானம் வெளுக்கும் வரை துணையிருந்த நிலவினால் காலமே நெடும்பகலான பொழுதாய்த் தஞ்சையில் தெரிந்தது. அதனால் தானோ என்னவோ சோழரின் அரண்மனையில் பலரும் உறங்கவில்லை.

கட்டடப் பிரதேசத்துக்கு நடுவே ஒரு பசுமையான தீவு போலக் காணப்பட்டது அந்த தடாகமும் அதைச் சுற்றியிருந்த தாவரங்களும். குந்தவையும் அவள் தம்பி மனைவி வானதியும் அவர்களுக்குப் பிடித்த இடமான அல்லிமலர் நிறைந்த தடாகத்தின் அருகே அமர்ந்திருந்தனர். கணவன்மார்கள் போர்க்களம் சென்றால் தினம்தினம் இங்குதான் அவர்கள் அமர்வது வழக்கம்.



இன்றோ வந்தியத் தேவர் மட்டும் இலங்கை சென்றிருந்தார், பாண்டியரின் மணிமகுடத்தைத் தேடி. பொன்னியின் செல்வர் அரண்மனையில் தானிருந்தார். எனினும் அவர் மனைவி வானதி அல்லிமலர் தடாகத்துக்கருகில் வந்துவிட்டாள்.

தடாகக் கரையில் தங்க நிறத் தாழம்பூக்கள் பூத்துக் குலுங்கி, நறுமணத்தை வாரியிறைத்தன. மல்லிகை மலர்களும் தம் பங்குக்கு இதழ் விரித்து மணத்தை எங்கும் வீசிக் கொண்டிருந்தன. அவர்களைச் சுற்றியும் பல பூங்கொடிகள் தங்கள் இளந்தளிர்க்கரத்தை நீட்டித் தென்றலில் நடனமிட்டன. இதையெல்லாம் கண்டு ரசிக்கவே ஒரு காலத்தில் இங்கு வரத் தொடங்கினர் இந்த மாதரசிகள். அதற்குப்பின் பழக்கத் தோஷமாக வருவதை நிறுத்தவில்லை.

இரவு வந்ததும் பட்சி ஜாலங்கள் பாடுவதை நிறுத்தின. அந்த மௌனத்தில் இருவரும் பேசாமலிருந்தார்கள். அவ்வப்போது நீரின் மேலிருந்து பார்வையை விலக்கி இருவருள் ஒருவர் திரும்பி பார்ப்பார். உடனே மற்றவரும் அதையே செய்வார். கவலை படிந்த கண்களுடன் திரும்பத் திரும்பத் திரும்பிப் பார்த்தனர்.

அங்கிருந்து பார்த்தால் அரண்மனையின் முதல்மாடம் தெரியும். அதன்முன் அந்தப்புரத்தின் உள்ளிருந்து மட்டுமே வழிகொண்ட மேல் மச்சுப் பலகணியிருந்தது. அங்கே இப்படியும் அப்படியுமாய் ஒரு மனிதன் நடைபழகிக் கொண்டிருந்தான். அவன் நடையின் வேகம் அவனுள் இருந்த ஏதோ ஒரு வெறியை வெளிக்கொணரச் செய்யும் முயற்சி போலிருந்தது. இது இன்று மட்டும் நடப்பதன்று. தினம் தினம் தவறாமல் நடக்கும் விஷயம்தான். கடந்த ஆறுமாத காலமாக நடக்கும் விஷயம்தான். அதுவும் கொள்ளையரை முறியடித்து வந்த பின்புதான் பொன்னியின் செல்வர் இப்படி நடந்துக் கொண்டிருந்தார்.

வெளி உலகு பார்க்கும்போது அவர் சௌக்கியமாகத்தான் இருக்கிறார் என்றும் கவலைக்கு ஒரு காரணமும் இல்லை என்றும் நினைக்கத் தோன்றும். ஆனால் வீட்டுக்குள் வந்தால் ஊமை போல ஆகிவிடுகிறார். குழந்தைகளைச் சரியாகக் கொஞ்சவில்லை. மனைவியுடன் சரியாகப் பேசுவதில்லை. அரசாங்க வேலைகளில் மும்முரமாகச் செயல்படுவதில்லை. வெளிப் பிரதேசங்களில் வேலைகள் வந்தால் செல்ல ஒப்புக்கொள்வதில்லை. தில்லைக்குச் சென்றபோதுகூடப் பாதியில் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் தஞ்சை திரும்பிவிட்டார். மொத்தத்தில் முன்பிருந்த பொன்னியின் செல்வர் இவரில்லை.

தடாகத்தின் அருகிருந்த இரு பெண்களும் கவலை தோய்ந்த கண்களுடன் அந்தக் காட்சியைக் கண்டனர். ''அக்கா அவருக்கு ஏதோ மனக்கஷ்டம் போலிருக்கிறது'' என்றாள் வானதி. தன் மனதைத் திறக்க அவளுக்குக் குந்தவையைத் தவிர யாரும் இல்லை. தந்தையில்லாத பெண். வாழ்வில் சந்தோஷத்தை அனுபவித்ததே தஞ்சை அரண்மனையில் வாழ்க்கைப்பட்டதற்குப் பிறகுதான்.

குந்தவையும் பொன்னியின் செல்வனுடைய போக்கைக் கவனித்துத்தான் வந்தாள். அதனால் அவளும் குழம்பி இருந்தாள். வந்தியத் தேவர் ஊரில் இருந்தாலாவது என்ன விஷயம், ஏது விஷயம் என்று கேட்டறியலாம். அவரும் இலங்கை சென்று விட்டார். சோழரின் வீரப்படைகள் எட்டுத் திசையும் சென்று திக் விஜயம் செய்து கொண்டிருக்கும்போது, பொன்னியின் செல்வர் எங்கும் செல்லாமல் அந்தபுரத்திலேயே இருக்கிறார். இலங்கைக்கு வந்தியத் தேவர் வலிய அழைத்தபோது கூடச் செல்லவில்லை. அண்ட பகிரண்டங்கள் அலறும்படியான போர்களை நடத்தியவர், இப்படி நான்கு சுவர்களுக்குள் கிடப்பதா? குந்தவைக்கு அழுகையே வந்தது.

கொள்ளையர் போரில் தோல்வி அடைந்திருந்தாலாவது இந்த நிலைக்கு ஏதாவது நியாயம் கற்பிக்கலாம். போரில் தோல்வியுற்று விட்டிலேயே அதைப் பற்றிப் புலம்பிப் புலம்பி உயிர்விட்ட மன்னர்கள் எல்லா அரசகுலத்திலும் இருப்பார்கள். ஆனால், அதுகூடச் சாத்தியமில்லை. இவன் பெற்ற மாபெரும் வெற்றியைப் பற்றிப் பிரதேசமெங்கும் கூத்துகள் என்ன, ஆடல் பாடல்கள் என்ன? இவனால் வாணிபம் மீண்டும் உயிர்பெற்றது என்று இவனுக்குக் கோயில் கட்டச்சொன்னால் கூட வணிகர்கள் கட்டி விடுவார்கள். பின் ஏன் இப்படி முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு இருக்கிறான்? ''அக்கா அவரது நடவடிக்கையை எப்படிச் சொல்வது? ஒரு மௌனமான கோபமா, அல்லது ஒரு அணை கட்டப்பட்ட சீற்றமா என்று சொல்ல இயலவில்லை. ஆனால், அவர் உள்ளே ஒரு எரிமலை வெடிக்கக் காத்திருக்கிறது. சீக்கிரம் ஏதாவது செய்தாக வேண்டும். அவரது கோபத்துக்கு நான் தான் காரணமா என்று எனக்கு பயமாய் இருக்கிறது'' என்று அஞ்சினாள் வானதி.

''போடி பைத்தியக்காரி'' என்றாள் குந்தவை. ஆனால், வானதியின் பயத்திலும் நியாயம் இருந்தது. ஒரு காலத்தில் சோழர் அரியணையின் மேல் ஏறமாட்டேன் என்று சபதம் செய்தாள் வானதி. பூங்குழலி அவளைப் பதவியாசை பிடித்தவள் என்று குற்றம்சாட்டியபோது! அதனால் பொன்னியின் செல்வரை மணக்க



முடியாது என்றும் சொல்லிவிட்டாள். அரியணையை அவன் துறந்ததற்குத் தானும் ஒரு காரணம் என்று நினைத்து பயந்தாள் வானதி. மோகம் முப்பது நாள் தானே? கலியாணம் முடிந்தவுடன் அரியணை பறிபோனதே என்று வருத்தப்படுகிறாரோ என்னவோ?

தேடிவந்த இராஜ்யலக்ஷ்மியை வேண்டாம் என்று தள்ளி விட்டோம் என்று வருந்துகிறானோ? சோழ அரியணையை விட்டுவிட்டோம் என்று கலங்குகிறானோ என்ற சந்தேகம்தான் குந்தவைக்கு முதலில் வந்தது. அப்படி வருந்தும் நாள் வந்து விடுமோ என்று பலநாள் அவள் பயந்திருக்கிறாள். முன்பொரு காலம் உத்தம சோழருக்கே தன்னைவிட அந்த அரியணையில் ஏறும் உரிமை அதிகம் என்று சொல்லி சந்தர்ப்பத்தை உதறிய தியாகச் செம்மல் பொன்னியின் செல்வர். பலரும் அன்று அவனை அயோத்தியின் சிம்மாசனத்தை விட்டுக்கொடுத்த ராமபிரானுடன் ஒப்பிட்டுப் பேசியதைக் காதுகுளிரக் கேட்டிருக்கிறாள். ஆனால், தியாகம் செய்துவிட்டவனுக்குப் பின்னாளில் வருத்தம் வந்தால் அதில் பொருளும் இருக்காது. அந்த தியாகத்தினால் வந்த ஆனந்த சுகமும் கரைந்துவிடும் என்ற வருத்தம் குந்தவைக்கு.

ஆனால், தான் வளர்த்த பொன்னியின் செல்வர் அப்படிப் பொருளாசை அல்லது பதவியாசைக்கு மயங்காதவர் என்று அவளுக்கு நன்கு தெரியும். 'அவன் நீ வளர்த்த பிள்ளை. இதையெல்லாம் பார்த்துக் கொண்டு ஏன் சும்மாயிருந்தாய்? அவனது உன்னத வீரத்தின் சரிவை நீ ஏன் தடுத்து நிறுத்தவில்லை?' என்று அவள் மனம் கேட்டது. விதியின் சூழ்ச்சியை முறியடிக்க என்ன செய்வதென்று அறியாமல் தவித்தாள்.

தம்பியின் மனோநிலை கண்ணாடியில் பார்ப்பதுபோல் அவளுடைய மனதுக்குப் புரிந்தது. 'ஏதோ ஒன்று அவன் உள்ளக் கனலைப் பன்மடங்கு வளர்த்து விட்டிருந்தது. யாரையும் கோபித்துக் கொண்டுவிடக்கூடாது என்று பல்லைக் கடித்துக் கொண்டிருந்தான்' என்று தோன்றியது.

முதலில் அவன் மீது பகைவர் யாரேனும் சூனியம் அல்லது மந்திரம் ஏதாவது செய்திருப்பார்களோ என்றுகூட யோசித்தாள். பாண்டியர்களுக்கு அது கைவந்த கலையாயிற்றே.

ஒரு வேளை கடல் கடந்து சென்ற அனுபவங்களினால் கஷ்டப் படுகிறானோ? அப்படித்தான் இருக்கும். ஏன் என்றால் அங்கிருந்து வந்த பின்தான் இப்படி தினமும் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு இருக்கிறான். கொள்ளையர் தீவில் தங்கியிருந்த அனுபவமா? கொள்ளையர்களால் கடலெங்கும் நேர்ந்துள்ள

சேதங்களைப் பற்றிக் கவலைப்பட்டு அதற்கு தக்க ஏற்பாடு செய்துவந்த பின்பே அவனுக்கு மனச்சோர்வு. அங்கு அனுபவித்த கஷ்டமா என்று நினைத்தாள். இல்லை இருக்காது. அவனுடன் இருந்த வந்தியத் தேவர் சந்தோஷமாகத் தான் இருக்கிறார். இப்போது ஈழம் வேறு சென்று விட்டார்.

இல்லை, இல்லை. அவன் வருத்தத்துக்கு வேறேதும் காரணம் இருக்கும் என்று மனதைத் தேற்றிக்கொண்டாள். வந்தியத் தேவர் வலிய அழைத்தும் ஈழம் செல்ல மறுத்துவிட்டான். இப்படியொரு சுத்த வீரன் கொஞ்சம் கொஞ்சமாக அழிவதைப் பார்க்கச் சகிக்க வில்லை. எதாவது செய்தே ஆகவேண்டும். எதைக் கண்டோ அவன் மனம் உடைந்திருக்கிறான். அவன் மனதுக்கு ஆறுதலாக ஒரு மாற்றத்தை ஏற்படுத்தினால் அவன் மீண்டும் பழைய நிலைக்குத் திரும்புவான் என்று யோசித்த குந்தவை ஒரு முடிவுக்கு வந்தாள்.

வானதியை நோக்கினாள். சற்றுத் தயங்கிவிட்டுப் பின்னர் மெலிதான குரலில் ''வானதி நான் சொல்வதைத் தவறாக நினைக்காதே. இப்போது அவன் மனதில் ஒரு மாற்றம் தேவை. அதனால்...'' என்று சொல்லி மீதியை எப்படிச் சொல்வது என்றுத் தெரியாமல் திண்டாடினாள்.

''பழுவூர் அரண்மனை சென்று பெண்கேட்போமா, அக்கா'' என்றாள் வானதி.

குந்தவை விழிகளில் கண்ணீர் பெருக்கெடுத்தது. தன் வாழ் நாளில், ஏன் தன் ஏழு பிறவிகளிலும் கிடைக்கக்கூடிய பிரமாதமான பொக்கிஷத்தை இன்னொரு பெண்ணுடன் பகிர்ந்து கொள்ளத் தயங்காத ஒரு பெண்ணைத் தன் முன்னே கண்டதும் அவள் கண்கள் கலங்கின.

வானதியோ குந்தவையின் முகத்தைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுக்கும் இதில் இஷ்டம். ஆனால், வெளியில் சொல்வது தான் கஷ்டம் என்றிருந்தாள்.

''உன் மனதை நோகடிக்க வேண்டுமே என்று கஷ்டமாய்த் தானிருக்கிறது வானதி'' என்று சமாதானம் சொன்னாள் குந்தவை. பேச்சுக்குத்தான். ஏன் என்றால் அந்த முடிவை எடுத்ததில் வானதி கொஞ்சமும் அயரவில்லை என்று தெளிவாகத் தெரிந்தது.

''அக்கா எனக்கு இதில் வருத்தம் கொஞ்சமும் இல்லை. சூரியன் என்னுடையது இல்லை, நிலவு எனதுமட்டும் தான் என்று யாரும் சொந்தம் கொண்டாட முடியுமா என்ன? அது போலத்தான் இவரும்.''



அக்காலத் தமிழகத்தில் பேரரசர்களும் குறுநில மன்னர்களும் பல மனைவியரை மணப்பது என்பது சகஜமாயிருந்தது. ஓயாமல் போர்கள் நடந்த வண்ணமாயிருந்தன. அரசிளங் குமாரர்களோ போர் முனையில் எப்போதும் முன்னணியில் இருந்தார்கள். ஆகையால் குலம் நசிக்காமல் பாதுகாப்பதற்காக அரச குலத்தவர் பெண்கள் பலரை மணப்பது வழக்கமாயிருந்தது. அதில் மூத்தவளே பட்ட மகிஷியாய் இருப்பாள். குழந்தைகளைப் பொருத்த வரை ரில் முதலில் பிறப்பவனே பட்டத்து இளவரசனாவான். பட்ட மகிஷியாயிருப்பவள் மற்ற ராணிகளிடம் அசூயை கொள்ளாமல் அணைத்து ஆதரிப்பது ஒரு சிறந்த நற்குணமாகக் கருதப்பட்டது. அதே போல் புதிதாய் வந்த ராணிகள் பட்டமகிஷியை ஒரு படி மேலாகப் பாவித்து மரியாதைச் செலுத்துவார்கள்.

ஆனால், பல அந்தப்புரங்கள் போர்க்களங்களைவிட மோசமா யிருக்கும். வரும்போது அரசிகள் எல்லாரும் நல்லவர்களாய்த் தான் வருவார்கள். ஆனால், அவற்றுள் சிலர் பொல்லாத தீவியாயும், ஏன் பெண்பிசாசுகளாகவும் கூட இருப்பார்கள். பின் அரச குடும்பத்தில் நிம்மதியே சீர் குலைந்துவிடும். அடுத்த தலைமுறையிலும் போட்டி யும் பொறாமையும் நிலவும். ஏன் ராமாயணக் கதையில் கைகேயி செய்த அட்டூழியங்களைப் பற்றி அறியாதவர் உண்டோ? அதனால் பல அரசகுல மணைவிமார்கள் தாங்களே தங்கள் சக்களத்திகளைத் தேர்ந்தெடுப்பார்கள்.

வானதியும் அந்த முடிவுக்கு வந்துவிட்டாள். சிறிது நயக்கத் துடன் அவள் குந்தவையிடம் ''நானும் அவருக்கு மற்றுமொரு மனைவியைப் பார்க்க எண்ணியிருக்கிறேன்'' என்றாள். ''ஏதோ ஒன்று அவர் உள்ளத்தில் பதிந்து அவருடைய உற்சாகத்தை யெல்லாம் போக்கடித்துவிட்டது. பொன்னியின் செல்வருக்கு ஒன்றும் நேராமலிருக்க வேண்டுமே என்ற கவலை எனக்கு உண்டாயிற்று. ஊமைராணி தான் கருணை புரிய வேண்டும்'' என்றாள். ''ஊமைராணி இன்று இருந்திருந்தால் அவரே சென்று ஊமை பாஷையில் பழுவூர் அரசரைப் பெண்கேட்டிருப்பார் அல்லவா? நமக்கு எந்த கஷ்டமும் இல்லை'' என்று சொல்லிச் சிரித்தாள்.

வாயடைத்துபோன குந்தவை பார்த்திருக்க வானதி தொடர்ந் தாள். ''அந்தப் பெண் லோகாவை நினைத்தால் என் மனம் ஏனோ உருகுகிறது. பழுவூர்க் குலமும் இனி தலை நிமிர்ந்து நிற்க இதுவே நல்ல சந்தர்ப்பத்தை உருவாக்கும்''

''ஆகா! வானதி உன்னை நான் என்னவோ என்று நினைத்து விட்டேன். உன் நிலையில் நானிருந்தால் கத்தியெடுத்து அந்த

அடுத்த பெண்ணைக் கொன்றிருப்பேன். எனக்கே வெட்கமாய் இருக்கிறது. எனக்கென்று செய்ய விருப்பமில்லாததை மற்றொருவருக்கு நான் எப்படிச் செய்ய அறிவுறுத்தலாம் என்று'' என்றாள் குந்தவை.

''அக்கா அப்போது என் வார்த்தைக்கு ஒப்புக்கொள்கிறீரா?''

''பரிபூரணமாக ஒப்புக் கொள்கிறேன். ஆனால், நான் நம்பி என்ன பயன்? அவன் ஒப்புக்கொள்ளவேண்டுமே''

''ஒப்புக்கொள்ள வைக்க வேண்டும். நான் கொண்டிருக்கும் காதலில் பொறாமைக்கு சற்றும் இடம் என்பதே கிடையாது. அவர் என் மீது வைத்திருந்த காதலுக்கு யாதொரு பங்கமும் நேரவில்லை என்று அவர் உணரும் வகையில் நானே சென்று பெண் கேட்பது தான் முறை'' என்றாள் வானதி.

குந்தவை பெருமூச்சுவிட்டாள். ''முடியாது என்று நீ பிடிவாதம் பிடிக்கும் பட்சத்தில் என்ன செய்வது என்று யோசித்தே வந்தேன். இதில் உனக்குப் பிரியம் இல்லை என்று நீ சொன்னால் அதில் தவறேயில்லை.''

''என்ன அக்கா, என்னைப் பற்றி இன்னமும் முழுவதுமாக புரிந்து கொள்ளாமல் இருக்கிறீர்'' என்றாள் புன்னகைத் தவழும் முகத்துடன் கொடும்பாளூர் இளவரசி.

''ஆனால், நாம் இருவரும் ஒரே பெண்ணைத் தேர்ந்தெடுத்தது தான் அதிசயம்'' என்றாள் குந்தவை. அவர்கள் இருவர் மட்டுமல்ல. பொன்னியின் செல்வனும் அந்தப் பெண்ணையே தேர்ந்தெடுத்து விட்டுச் சொல்லமுடியாமல் தவித்துக் கொண்டிருந்தார் என்று இவர்களுக்குத் தெரியாது.

''இல்லை அக்கா. என் மகன் ராஜேந்திரனைப் பார்த்தீர் அல்லவா. பழுவூர் மாளிகைக்கு நாம் சென்றபோது அவளைச் சென்று ''அம்மா'' என்று அணைத்துக்கொண்டான். குழந்தைகளுக்கு எதிர் காலம் தெரியுமோ என்னவோ? எனக்கு ஏதேனும் பிற்காலத்தில் ஆனால், அவனை நன்றாய்ப் பார்த்துக்கொள்வாள் இந்த லோகா.''

''போடி பைத்தியக்காரி. போய் வாயைக் கழுவிவிட்டு வா'' என்று திட்டினாள் குந்தவை ''உனக்கு ஒன்றும் ஆகாது''

''இல்லை அக்கா. ஒரு பேச்சுக்காகச் சொன்னேன்'' என்று சமாளித்தாள் வானதி.

''போதும் போதும். இந்தப் பேச்சை இத்துடன் நிறுத்துவோம்'' என்றாள் குந்தவை.



பொன்னியின் செல்வருக்கு மறுமணம் செய்ய இரு பெண்களும் பட்ட அவசரத்திலிருந்து அவர்கள் எவ்வளவு தூரம் பொன்னியின் செல்வருடைய தற்போதைய நிலைமையைக் கண்டு பயந்திருந்தார்கள் என்று தெரிய வந்தது. சிங்களவர் சொப்பனத்தில் கண்டு அஞ்சும் சிங்கம், கடற்கொள்ளையரின் குலநாசினி என அனைவரும் அவனைப் பற்றிப் பேசிய காலங்கள் போய்விடுமா? அத்தகைய வீராதி வீரனை மீண்டும் தன் முழு வீரியத்தில் காண வேண்டுமென்ற ஆவலுடன் நடந்த பேச்சிது. ''சோழம் சோழம்'' என்ற இவன் போர் முழக்கம் இடி முழக்கக் குரலில் எட்டுத் திசையும் எதிரொலி செய்யும்படி செய்யவேண்டும் என்ற வெறியில் எடுக்கப்பட்ட முடிவுகள் இவை. அவரை மீண்டும் மாவீரராய்ப் பார்க்க வேண்டும் என்ற அபரிமிதமான ஆசை அவர்களுடைய இருதயத்தின் அந்தரங்கத்திலிருந்து பொங்கி எழுந்து அவர்களுடைய உடம்பின் ஒவ்வோர் அணுவிலும் துடித்தது.

''நாளை காலை சென்று பெண் கேட்போமா அக்கா?'' என்றாள் வானதி.

''வானதி! அவ்வளவு அவசரப்பட வேண்டாம். வந்தியத் தேவர் ஊரில் இல்லை. நாளை இரவு எல்லாரும் இங்கு வந்துவிடுவார்கள் என்ற செய்தி வந்திருக்கிறது. அவர் வந்த பின்பே முடிவெடுப்போம். நம்மை விட அவருக்குத்தான் பொன்னியின் செல்வர் மேல் அக்கரை அதிகம். அவரும் நம் போல பொன்னியின் செல்வருடைய நலனில் பெரும் ஆர்வம் கொண்டவர். அதனால் அவரிடமும் ஒரு வார்த்தை சொல்லிவிடலாம்'' என்றாள் குந்தவை.

வந்தியத் தேவனும் வந்து சேர்ந்தான். சென்ற வேலையில் தோல்விதான் ஏற்பட்டது. வெறும் கையுடன் வந்தாலும் முகம் மலர்ச்சியுடன் இருந்தது. அரண்மனையில் சக்கரவர்த்தியிடம் வழக்கமான மரியாதைகளைச் செலுத்திவிட்டுத் தன் அரண்மனைக்கு வந்தான் வந்தியத் தேவன்.

வந்தியத் தேவன் வந்து சேர்ந்தவுடன் அரண்மனை வாசலில் ஆராத்தி எடுக்கப்பட்டது. அரண்மனையில் இருந்த பலரும் வந்திருந்தனர். முக்கியமாக வராதவர் பொன்னியின் செல்வர் மட்டும்தான். வந்தியத் தேவர் வருகிறார் என்று தெரிந்தும் அவர் வெளியேவரவில்லை.

வரும்போது வந்தியத் தேவர் முகமலர்ச்சியுடன் வந்தார். அரண்மனையில் இவ்வளவு இராஜோபசாரங்கள் நடப்பது பற்றிக் கவலையில்லாமல் எப்படிப் போர்க்களத்தில் ஆண்களுக்கு களிப்பு உண்டாகியிருந்தது என்பது குந்தவைக்குப் புரியவில்லை.

குந்தவைக்கு வந்தியத் தேவரைப் பார்த்தவுடன் குதூகலம். சென்ற காரியம் என்னவானது என்று கூட அவள் விசாரிக்கவில்லை. பாண்டியர் மணிமகுடம் கிடைத்ததா என்று கூடக் கவலைப்படவில்லை.

''உங்களிடம் முக்கியமான செய்தி ஒன்று சொல்ல வேண்டும்'' என்றாள்.

''நானும் உன்னிடம் ஒரு சந்தோஷமான செய்தியை சொல்ல வேண்டும். அது நிறைவேற உனது உதவியும் எனக்குத் தேவை. அது என் ஆருயிர் நண்பன் இளம் சம்புவராயனைப் பற்றியது. அவனுக்கு காதல் வந்திருக்கிறதாம். ...'' என்று அவன் சொல்லி முடிப்பதற்குள், குந்தவை குறுக்கிட்டு. ''நீரும் உமது நண்பரும். அவருக்கு யாரைப் பிடித்திருக்கிறதோ அவளையே முடித்து வைப்போம். நான் சொல்லும் செய்தியை நீர் முதலில் கேளும்'' என்றாள். ''இது நம் குடும்பத்தைப் பொருத்தது. இதுவும் நற்செய்தி தான்'' என்றாள்.

'சரி, பெண்களே முதலில் பேசட்டும்' என்று விட்டுக் கொடுத்தான் வந்தியத் தேவன். ஆனால், அவள் சொல்லச் சொல்ல வல்லவராயனுக்குப் படபடப்பு. இருதயம் அடித்த வேகத்தில் மார்பை விட்டு வெளியே குதித்துவிடும் போலிருந்தது. 'கடவுளே இதெல்லாம் உன் விளையாட்டா? ஒரே நேரத்தில் இந்த இரண்டு செய்திகளையும் நான் கேட்கவேண்டும் என்பது என் தலையெழுத்தா?' என்று நொந்துகொண்டான்.

வல்லவராயன் வெகுவாகக் குழம்பினான். உள்ளம் துடித்துக் கொந்தளித்துக் கொண்டிருந்தது. தன்னால் இதைச் சாதிக்க முடியுமா? தனியாக மட்டுமல்ல. தன் மனைவியை எதிர்த்து. அவனுடைய முயற்சிக்குத் தடங்கல் செய்யத் தொடங்குவார்கள். அதிலும் நினைத்ததை முடிப்பதில் கைதேர்ந்தவள் குந்தவை.

ஆனால், முக்கியமாக ஒன்று. தன் நண்பன் இளம் சம்புவராயன் தன்னைத் த' 'றாக நினைத்துவிடக்கூடாது. அவனுக்கு எதிராகச் சதி செய்கிறான் வல்லவராயன் என்று நினைத்துவிடக்கூடாது. இப்போதுதான் வெகுநாள் பகைக்குப் பின் அவர்கள் சமரசமாகியிருந்தார்கள்.

வந்தியத் தேவன் மறுமொழி சொல்லவும் இல்லை. மனைவியை நேரே பார்க்கவும் இல்லை. ஆனால், அவன் நெஞ்சில் குடிகொண்டிருந்த வெறுப்பை அவன் முக மண்டலம் காட்டியது.

ஆம். இப்போது அவன் முகம் மாறிப்போயிருந்தது. கர்ண கொடூரமாக!

❖ ❖ ❖



### அத்தியாயம் எண்பத்து மூன்று

## லோகாவைக் காணோம்!

தன் அருமை நண்பனின் மனோரதம் நிறைவேறப் போகிறது என்று நினைத்து வந்தால், குந்தவையின் வார்த்தைகள் அவன் அவன் வந்தியத் தேவனின் செவிகளில் நாராசம் போல் விழுந்துகொண்டிருந்தன. வந்தியத் தேவனின் முகம் அச்சமயம் எவ்வளவு பயங்கரமாக மாறியது என்பதைக் குந்தவை கவனிக்கவில்லை. அதை அவள் பார்த்துவிடக்கூடாது என்று அவன் சில விநாடி நேரம் வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்து விட்டுத் திரும்பினான்.

''என்ன சொன்னாய்?'' என்று ஆச்சரியத்தையெல்லாம் அடக்கிக்கொண்டு மீண்டும் கேட்டான்.

வந்தியத் தேவன் தன் மைத்துனனுக்கு ஒரு நல்ல விஷயம் என்றால் கூரைவரை குதிப்பான் என்று எதிர்பார்த்த குந்தவைக்கு ஆச்சரியம். ''என்ன ஆனது உங்களுக்கு? இன்று ஒருமுறை சொன்னால் புரியமாட்டேன் என்கிறதே. எல்லாம் ஈழத்து விஜயத்தினால் வந்த மந்தமா?'' என்று கூறி மீண்டும் தன் திட்டத்தை விவரித்தாள்.

''பழுவூர் அரசனின் பெண் இருக்கிறாள். அவள் பெயர் லோகா. அவள் மீது அருள்மொழிக்கும் ஒரு அபிப்பிராயம் இருக்கும் என்று நினைக்கிறேன். அவனுக்கு இருக்கிறதோ இல்லையோ; எனக்கு இருக்கிறது. இருவருக்கும் மணமுடித்து வைத்துவிடலாம் என்று உத்தேசித்துள்ளேன். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்றாள் மிக உற்சாகமாக.

வந்தியத் தேவனுக்கு மூச்சுத் திணறியது. சற்று யோசிக்க நேரம் கிடைத்தால் பரவாயில்லை என்றுகூடத் தோன்றியது. நான்கு நாட்களுக்கு முன்னால்தான் மாறனுடன் நடத்திய பேச்சு வார்த்தை இன்னமும் காதில் ஒலித்துக்கொண்டிருந்தது. அந்த விளையாடலுக்கும் இப்போது குந்தவை பேசியதற்கும் ஒரு தொடர்பிருந்தது.

இருவரும் ஈழத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தனர். நல்ல இனிய வேளை. கடல் காற்று இதமாக வந்தது. இருவரும் கப்பலின் ஓரமாய் நின்றபடி பேசிக்கொண்டிருந்தனர். சற்று அருகில் ஆழ்வார்க்கடியான் முகத்தைக் கடுவன் குரங்கைப் போல வைத்துக் கொண்டு பாய்மர நிழலில் உறங்கிக்கொண்டிருந்தான்.

வந்தியத் தேவன் தான் முதலில் ஆரம்பித்தான். ''மாறா! உனக்கோ பிராயம் இருபத்தி நாலாகிவிட்டது. உன் வயதில் அவரவருக்குத் திருமணம் முடிந்து தாம்பத்தியத்தில் மூழ்கிவிட்டனர். நீயோ இன்னமும் கட்டைப் பிரம்மச்சாரியாய் இருக்கிறாய். இல்லை, அவர்போல ஆகப்போகிறாயா என்ன?'' என்று அருகில் உறங்கிக் கொண்டிருந்த அடியானைப் பார்த்தான்.

அதற்கு முதலில் தயங்கிய மாறன், பின் விளக்கமாக தன் காதல் விவரத்தைப் பற்றிக் கூறவே மிகவும் சந்தோஷப்பட்டான் வந்தியத் தேவன்.

அந்த பெண் லோகாவை முதலில் பழுவூர் அரண்மனையில் பார்த்ததும், பின் அவள் அவனைத் தேடி சம்புவராயரின் விருந்தினர் மாளிகைக்கு வந்ததும், தன் தமக்கைக்காகக் கெஞ்சியதையும் மாறன் விவரித்தான். பின் தற்செயலாகப் பாண்டியர் தப்பிக்க, அது இவனது கருணையினால்தான் என்று தவறாய்ப் புரிந்து கொண்டதையும் சொல்லிவிட்டான். ''அவள் மட்டும் கிடைத்துவிட்டால், வல்லா! என் பழைய தோல்விகளெல்லாம் மறைந்துபோகும். நான் இந்த வாழ்க்கையை எடுத்த பிறவிப்பயனை அடைந்துவிடுவேன்'' என்றான்.

வந்தியத் தேவனோ தன் பங்குக்கு ''இதில் என் முழு ஒத்துழைப்பும் உனக்கு இருக்கும்'' என்று உறுதியளித்தான். ''இந்த மாதிரி வேலைகளெல்லாம் ஆண்பிள்ளைகள் நாமாக முடிவெடுக்கக் கூடாது. என் மனைவியின் ஆதரவையும் நாடுவோம்'' என்று உறுதியளித்தான். அதைப் பற்றி வீட்டுக்கு வந்து மனைவியிடம் சொல்லிப் பழுவூர் மாளிகைக்கு சென்று சம்பந்தம் பேசச் சொல்ல வேண்டும் என்ற நினைப்போடு தான் வந்தான் வந்தியத் தேவன்.

வந்த இடத்தில் இப்படியொரு அதிர்ச்சி. குந்தவை சொன்ன வார்த்தைகள் அவன் உடம்பில் ஏக காலத்தில் பல்லாயிரம் தேள்கள் கொட்டியது போன்ற உணர்ச்சியை உண்டாக்கியதாகத் தோன்றியது.

''நல்லதொரு பெண்ணும் உயர்குடியில் சம்பந்தமும் கிடைத்தால் மாறனது எதிர்காலம் பிரகாசமாகும் என்று எண்ணிக் கொண்டிருந்தோமே? ஆனால், இருவரது மனநிலையும் எப்படி ஒரே நேரத்தில் ஒத்திருக்க முடியும்? அதுதான் விதி. முழங்காலையும் தலைமுடியையும் முடிச்சுப்போட்டு வேடிக்கை பார்க்கிறது அது.'' தம் அருமைத் தோழர்கள் இருவரில் ஒருவர் ஏமாற்றம் அடையப்போவதை நினைத்து கஷ்டப்பட்டான் வந்தியத் தேவன்.



அந்தப் பெண்ணைப் பொருத்தவரை ஆசையையும் நிராசையையும் அடுத்தடுத்து சந்திக்கப்போகும் மாறன், மனம் உடைந்து போவது உறுதி. ஐயகோ, போர்க்களத்தில் தாமரை இலை மேல் தண்ணீர் போல் வாழக் கற்றுக்கொண்ட வீரர்கள் காதலில் தோல்வியை மரணத்துக்கு சமமாகக் கருதுவது ஏன்? ''முன்னாலிருக்கும் வீரன் மடிந்தால் கவலைப்படாதே. அவன் உடலைத் தாண்டிச் செல், பகைவரைத் தாக்க'' என்று சொல்லி வளர்க்கப்பட்ட வீரர்கள் இல்லறத்தில் அடிக்கடி மனம் நோவது ஏன்? புரியவில்லை வந்தியத் தேவனுக்கு.

''இரு நண்பர்களுக்கிடையே என்னவென்று முடிவெடுப்பது? ஆனால், நான் முடிவெடுத்து என்ன பயன்? பொன்னியின் செல்வருக்குத்தான் அவளென்று குந்தவை முடிவெடுத்துவிட்டாள். பாவம், மாறனால் எதிர்த்து நிற்க முடியுமா? தான் நினைத்ததைச் சாதித்தே பழகிப்போனவள் குந்தவை.'' இதுவரை எல்லாம் நன்மைக்காகவே அவள் பிடிவாதம் பிடித்துவந்தாள் என்று பல சமயம் சந்தோஷம் கொண்டிருந்தான் வந்தியத் தேவன். ஆனால், இப்போதுதான் அந்தக் குணம் மாறுபாடாகக் காட்சியளித்தது.

பல முறை சொல்லிக் கேட்டது போல ''அந்தப்புரப் பெண்களின் சதிவேலைகளுக்கு முன் ஆண்களெல்லாம் நிர்மூடர்கள் தானா?'' என்றுகூடத் தோன்றியது.

இதில் பாவம் மாறன்தான். அந்த வீரன் உள்ளத்தில் அப்பெண்ணுக்காகக் கொண்டிருந்த பரிசுத்தமான அன்பிற்கு மதிப்பில்லையா? திரும்பிய திக்கில் எல்லாம் தோல்வியைச் சந்தித்த நண்பன் அந்தப் பெண்ணின் சமூகத்தில் வெற்றியைக் காண்பானென்று வந்தால் இப்படியானதே!

சந்தர்ப்பத்துக்குச் சரியான வார்த்தைகளுக்குத் தேடிக் கண்டுபிடித்த வந்தியத் தேவன் மனக்குழப்பத்துடன் மனைவியைப் பார்த்து ''யோசிப்போம், இதில் மற்றவரும் சம்பந்தப்பட்டிருக்கலாம் அல்லவா?'' என்றான்.

அதற்கும் பதிலைத் தயாராக வைத்திருந்தாள் குந்தவை. ''யார் வானதியைச் சொல்கிறீரா? அவளிடம் ஒரு மாதிரி சம்மதம் வாங்கிவிட்டேன்'' என்றாள்.

''நான் கொஞ்சம் பேசலாமா?'' என்றான் வந்தியத் தேவன்.

''சொல்லுங்கள்'' என்றாள் குந்தவை அவனை அதிசயத்துடன் பார்த்தபடி.

குந்தவையின் பேச்சுக்கு மறுபேச்சே வந்தியத் தேவனிடம் எக்காலத்திலும் கிடையாது. பொன்னியின் செல்வர் கூடக் கேலிச்

செய்வார் "வந்தியத் தேவரே! அக்காள் பேசி முடிக்கட்டும். அதற்குள் தலையாட்டிவிட்டீரே" என்று.

ஒரு காலத்தில் மன்னாதி மன்னர்களையும் வீராதி வீரர்களையும் நிராகரித்த அவள், வழிப்போக்கனாக வந்த வந்தியத் தேவனிடம் சிரத்தை கொண்டாள். அன்றிலிருந்து இருவருக்கும் பெரிய சண்டை சச்சரவே வந்ததில்லை. ஆனால், இப்போது அவன் பேசப்போவது அவளுக்குப் பிடிக்காது என்று அவனுக்குத் தெரியும்.

"குந்தவை. சற்றுப் பொறுக்கலாம் அல்லவா?"

"அழகாயிருக்கிறது! பொறுத்தால் என்னவாகும்? இருவருக்கும் வயதுதான் அதிகரிக்கும். நாட்டு நிலைமையில் பழுவூர்ப் பாட்டன் மீண்டும் நம் மீது ஏதாவது குற்றம்குறை சொல்லிச் சண்டையிழுத்தால் இது மீண்டும் நடக்காமல் போகுமல்லவா? எவ்வளவு நல்ல பெண் தெரியுமா, அந்த லோகா? அவளுடைய அன்பான பராமரிப்பினால்தான் பழுவேட்டரையர் உயிர் பிழைத்து எழுந்தார்" என்று லோகாவைப் புகழ்ந்தாள்.

ஒரு நொடி சிந்தித்துவிட்டு "அது சரி. அந்தப்புரத்து விஷயங்களில் நீர் எப்போதிலிருந்து தலையீடுகிறீர்கள்?" என்றாள் குந்தவை. "பெண் பிள்ளைகளாகப் பேசி முடிக்க வேண்டிய விஷயம் தானே இது?" என்றாள்.

வந்தியத் தேவன் ஒரு ஈனசுவரத்தில் ஆரம்பித்தான் "என் நண்பன் இருக்கிறானே, கந்த மாறன்....."

"இருக்கிறான். இளம் சம்புவராயன். அவனுக்கென்ன இப்போது?" என்றாள் குந்தவை.

"குந்தவை, நான் சொல்லவந்ததைச் சொல்லவிடு. அவனுக்கு... அவனுக்கும்.. பழுவூர் இளவரசி லோகமாதேவியின் மீது ஒரு அபிப்பிராயம் இருக்கிறது." என்று ஒரே மூச்சில் சொல்லி முடித்தான்.

குந்தவைக்கோ வந்தியத் தேவன் வந்தவுடன் எதிர்பார்ப்புக்கு மாறாகக் கதை மாறுகிறதே. தன் நண்பன் பொன்னியின் செல்வனுடைய இரண்டாம் திருமணத்துக்கு ஆதரவு அளிப்பான் என்று பார்த்தால் இப்படித் தடையைப் போடுகிறானே, என்று ஆச்சரியம். ஆனால், அவள் விடுவதாக இல்லை. "ஆனால், அவளுக்கு அவன் மீது காதலிருக்கிறதா என்ன?" என்றாள்.

வந்தியத் தேவன் விழித்தான்.



உடனே குந்தவை "நீர் இந்த விஷயத்தை அதிகப்படுத்திக் கூறுகிறீர் என்று நினைக்கிறேன். ஒரு பெண் அழகாய் இருந்தால் பலருடைய மனத்தைக் கவரத்தான் செய்வாள்" என்றாள். ஆனால். இந்த விஷயத்தைக் கேட்டவுடன் அவளுக்கும் சற்று மனக் கலக்கம் தான்.

"லோகா அருள்மொழிக்கென்று பிறந்தவள். சோழன் இன்று நமக்கு விரோதியாகி விட்டானே என்று பழுவூரார் விட்டு விட்டார்கள். இல்லை, இது தாமாகவே நடந்திருக்க வேண்டிய விவாகம். தாமதமாக நடக்கிறது" என்றாள் குந்தவை.

வந்தியத் தேவனுக்குப் பேசவே வாய்ப்புத் தராமல் "சின்னப் பிள்ளைகளின் பேச்சைக் கேட்டு விவாகம் முடிப்பது, அதுவும் அரசகுலத்தில் எப்படிநடக்கும்?" என்றாள்.

'ஆக நண்பனுக்கு நிமித்தம் ஒன்றும் சரியாக இல்லை' என்று நினைத்தான் வந்தியத் தேவன். மௌனம் காத்தான்

இந்த இடைவெளியை உபயோகித்துக்கொண்ட குந்தவை "இப்படித்தான் இளைஞர்கள் கண்ணால் கண்டதைக் கொண்டு மீதியைக் கற்பனையால் தீட்டி ஆசைப்படுவார்கள். அதற்கெல்லாம் நாம் முக்கியத்துவம் கொடுக்கக்கூடாது" என்று சாதித்தாள்.

"அது சரியல்ல. அந்த பெண்ணை அவளாகவேதான் தேர்ந்தெடுக்க விட்டு விடவேண்டும். அவள் நெஞ்சத்தில் என்ன இருக்கிறது என்று தெரிந்து கொள்ளவேண்டும்" என்று ஆட்சேபித்தான் வந்தியத் தேவன். "இது சரியான போட்டியில்லையே. அரச குடும்பத்தினர் போய்ப் பெண் கேட்டால் யார்தான் மறுப்பார்கள்?" வந்தியத் தேவனுக்குத் தெரியும். பொன்னியின் செல்வர் மாப்பிள்ளையாக வர ஒற்றைக்காலில் ஒரு யுகம் தவம் கிடப்பார் பழுவூர் அரசர் என்று.

பிறந்ததிலிருந்து தான் நினைத்ததையே சாதித்த குந்தவைக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. "ஆமாம், நான் என்ன சுயம்வரமா நடத்துகிறேன்? இல்லை ஊரில் இருக்கும் பெண்களையெல்லாம் என் தம்பிக்காக பெண் கேட்டுக் கொண்டிருக்கிறேனாக்கும். பழுவூர்க் குடும்பத்துக்கும் எங்கள் குடும்பத்துக்கும் இருக்கும் தொடர்பைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்?" என்றாள்.

வந்தியத் தேவனுக்குத் தெரியும். இரு குலங்களும் ஒருவர் கழுத்தை ஒருவர் பிடித்துக்கொண்டு நடுச் சாலையில் அடித்துக் கொண்டதெல்லாம் தெரியும். ஆனால், குந்தவை சண்டைக்கு இழுக்கப் பார்க்கிறாள். இப்போது எரியும் நெருப்பில்

எண்ணெய்யை ஊற்றக்கூடாது என்று முடிவெடுத்தான். குந்தவையின் பேச்சு அவனுடைய இருதயத்தில் கூரிய வேல் ஒன்றை நுழைத்து ஒரு திருப்புத் திருப்பியது போலிருந்தது. எனினும் மௌனம் சாதித்தான்.

''இதோ பாருங்கள் அத்தான்! நான் பழுவூர் மாளிகைக்குச் செல்கிறேன். சம்புவராயன் மீது லோகாவுக்கு ஏதாவது பிரியம் இருக்கிறதா என்று பார்க்கிறேன். நேரடியாகக் கேட்க மாட்டேன். கவலைப்படாதீர். அப்படி நீர் சொல்வது உண்மையாய் இருந்தால் அந்தக் காதலை மதித்து நான் வந்துவிடுகிறேன். அப்படியில்லையென்றால் அவ்விடமே என் தம்பிக்கு அவளைப் பெண் கேட்டுவிட்டுத்தான் வருவேன்'' என்றாள் குந்தவை தீர்மானமாக.

குந்தவையின் இந்த செயலினால் புண்பட்டிருந்த வந்தியத்தேவன் ஏதோ முணுமுணுப்புடன் கறுவிக்கொண்டே உள்ளே போய்விட்டான்.

வாழ்நாளெல்லாம் தன் இஷ்டத்துக்கு மற்றவரைச் செயல்பட வைத்ததில் திறமைசாலி குந்தவை. ''விதியின் போக்கில் விட்டுவிட்டால் என்னவாகும். நாம்தான் அதை நம் வசம் திருப்பிவிட வேண்டும்'' என்று நினைப்பவள்.

இதுவரை தம்பதியருக்குள் சண்டைகள் ஏதும் வந்ததில்லை. ஆனால், இன்று குந்தவை தன் உண்மை சொரூபத்தை வெளிப்படுத்திவிட்டாளோ என்று மனதுக்குள் சந்தேகம் அவனுக்கு வந்தது. அவள் பழுவூர் மாளிகைக்குக் கிளம்பும் போதுக் கூட அவன் வெளியேவரவில்லை.

அந்தப் பழுவூர்ப் பெண்ணின் நோக்கத்தை மாறன் நன்கு அறிந்து வைத்திருந்தால் அவளை எதிர்த்து நிற்கலாம். ஆனால், அவளும் தீர்மானம் செய்யாமல் அரைகுறை மனதுடன் இருந்தால், குந்தவை நிச்சயமாக அவள் மனதை மாற்றிவிடுவாள்.

'மாறன் வாழ்க்கையில் மீண்டும் ஏதாவது ஏடாகூடமாக நடக்கக் கூடாது அல்லவா?' என்ற பயம் தான் அவன் மனதில் நிறைந்தது.

ஏதோ நகர்வலம் வந்தது என்று எண்ணித் தஞ்சை மக்களெல்லாம் தத்தம் வேலைகளை விட்டுவிட்டு வெளிவந்தனர். பூக்கூடைகளும் பழத்தட்டுகளும் சுமந்தபடி ஊர்வலத்தில் தாதிப் பெண்கள் நடந்தனர். புலிக்கொடியேந்திய வீரர்கள் முன்னும் பின்னும் வர, பல்லக்குகளில் வானதியும் குந்தவையும் வந்தனர். அரசிளங்குமாரிகள் சிவிகையில் போகும்போது மக்கள் இருபுறமும் நின்று வேடிக்கை பார்த்தனர். ஆனால், அந்தக் காட்சியெல்லாம்



குந்தவையின் மனதில் பதியக்கூடவில்லை. வந்தியத் தேவரைப் பற்றியே நினைத்து வந்தாள். அவரது ஆட்சேபணைகளை அவள் சிறிதும் பொருட்படுத்தவில்லை. தான் நினைத்ததை முடிக்க வேண்டும் என்று அசைக்க முடியாத ஓர் உறுதி அவள் மனத்தில் ஏற்பட்டிருந்தது.

குந்தவைக்கும் வந்தியத் தேவர் வெளிநாடு சென்று வந்ததும் அவரோடு வாதம் செய்ய ஆசையில்லை. பொன்னியின் செல்வனுடைய நல்வாழ்வுக்காகப் போட்டி போடவேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. அவன் இந்த நாட்டுக்காகக் கண்ட கனவுகளையெல்லாம் காரியத்தில் நிறைவேற்றும் நேரம் வந்தபோது இப்படி அந்தப்புரத்தில் பெண்போலப் பதுங்கும் தம்பியின் வாழ்க்கையே முக்கியம் என்று முடிவெடுத்தாள். பழுவூர் மாளிகைக்குச் சென்று வந்து வந்தியத் தேவரிடம் எடுத்துச் சொன்னால் அவர் ஒப்புக் கொள்வார் என்று நினைத்துக்கொண்டாள்.

''என்ன அக்கா சற்று யோசனையாய் வருகிறீர்கள். போகும் வேலையில் வெற்றி வராமல் போகுமோ என்ற பயமா?'' என்றாள் வானதி.

''போடி பைத்தியக்காரி. பெண்கள் நினைத்துவிட்டால் தோல்வியே கிடையாது'' என்று சொல்லிச் சிரித்தாள் குந்தவை. ஆனால், அவள் மனதில் 'லோகாவும் பெண்தானே. அவள் வேறுபடி நினைத்திருந்தால்?' என்ற எண்ணமும் வந்தது.

இந்த முறை குழந்தைகள் இருவரையும் விட்டுவிட்டு வர வேண்டும் என்று முடிவெடுத்தனர். ராஜேந்திரனைப் பார்த்தால் லோகா சந்தோஷப்படுவாள். ஆனால், பழுவூர் அரசர் தன் பேரனுக்கு இவன் பிற்காலத்தில் போட்டி என்று நினைத்தால்?

முதலில் வானதியே வேண்டாமென்று நினைத்துக் குந்தவை பின்னர் அவள் வரவேண்டுமென்று முடிவெடுத்தாள். வானதி வருவதனால் அவளுக்கு இந்த விவாகத்தில் முழு இஷ்டம் என்று தெரியப்படுத்தும்படி இருக்கும். கொடும்பாளூருக்கும் பழுவூருக்கும் பரம்பரையாக ஆகாது. அந்த சண்டை அந்தப்புரம் வரைத் தொடரலாம் என்று பழுவேட்டரையர் நினைத்துவிட்டால்? அதனால் பெண் தர மறுத்துவிட்டால்?

சற்று நேரத்துக்கெல்லாம் பழுவூர் அரண்மனையின் சமீபத்துக்கு வந்தது ஊர்வலம். போனமுறை இதே வாசலில் ஒருவரிடம் ஒருவர் பிரியா விடைபெற்றுக் 'கொண்டக் காட்சியை நினைத்துப் பார்த்தாள்.

போன முறை பழுவூர் அரண்மனைக்கு விஜயம் செய்த நாளை நினைவுபடுத்திக்கொண்டாள் குந்தவை. 'எவ்வளவு ஒரு இனிமையான அனுபவம். ஆனால், அன்றிலிருந்துதான் பொன்னி யின் செல்வருக்கு ஏதோ ஆகிவிட்டது. ஆனால், அந்த கேள்வி முடிச்சை அவிழ்க்க இதே பழுவூர் மாளிகையில்தான் பதில் இருக்கிறது. என் தம்பிக்கு சரியான பெண் இவள்தான் என்று முடிவெடுத்த இடம் அந்த வரவேற்பு மண்டபம்தான்.'

'அந்த விஸ்தாரமான மண்டபத்தில் அன்று பழுவூர் மன்னரின் மனதைமாற்றியது, இன்று உறவு நாடி செல்வது வரை வந்துள்ளது. விதியெனும் ஏதோ ஒரு ஆறு நம்மையெல்லாம் இட்டுச் செல்கிறது. அது ஏற்படுத்தும் தொடர்பில் நாமெல்லாம் வாழ்க்கையை அமைத்துக் கொள்கிறோம்' என்று நினைத்தாள். ஆனாலும் ஏதோ நீல நிறவானில் ஒரே ஒரு கருமேகம்போல வந்தியத் தேவரின் நடவடிக்கை இருந்தது. அவன் நண்பனுக்குக் கல்யாணம் பேச நேரம் வந்தது என்று அளவில்லாத குதூகலமுண்டாயிற்றுப் போலும். அது முடியாதென்றவுடன் அவனுக்கு இந்த விவாகத்தில் இஷ்டமில்லை.

தட்டுகளில் பலவகைப் பழங்கள், தங்க நகைகள், பட்டுப் புடவைகள் போன்ற ஏராளமான பொருட்களை எடுத்துச் சென்றாள் குந்தவை. அதை அவ்வப்போது திரும்பிப் பார்த்தபோது பெருமை கொண்டாள். இவ்வாறு பெருமிதம் பொங்கப் பழுவூர் அரண்மனைக்குள் பிரவேசித்தார்கள்.

ஆனால், இன்று இவர்கள் வந்த செய்தி அறிந்து வாசலில் பழுவூர் அரசர் வந்து நிற்கவில்லை. உண்மையைச் சொல்ல போனால் முதலில் இவர்கள் வந்ததைக்கூட யாரும் கவனிக்கவே யில்லை. குந்தவையின் சிரிப்பு அந்த க்ஷணமே நின்றுவிட்டது. அளவில்லாத பிரமிப்பை அந்த விஸ்தாரமான மண்டபத்தின் வெறுமை புலப்படுத்தியது. தாம் கண் முன்னால் பார்ப்பது உண்மைதானா என்று சந்தேகிப்பவர்போல் கண்களைக் கையினால் கசக்கிப் பார்த்தாள் குந்தவை.

பின்னர், 'முன்னறிவிப்பின்றித் தானே வந்தோம். அதனால் வரவேற்க யாருமில்லை' என்று முடிவெடுத்தாள். வேண்டு மென்றேதான் குந்தவை ஏதும் சொல்லிவிடாமல் திடீரெனப் பழுவூர் மாளிகைக்கு வந்தாள். திடீரெனச் சென்றால் பலராலும் ஒரு முடிவெடுக்க முடியாமல் திணறுவார்கள். அதைப் பயன் படுத்திச் சாதுர்யமாகப் பேசத் தெரிந்தவர்கள் காரியங்களைச் சாதித்துவிடலாம் என்றே வந்தாள்.



தெருவில் அவர்கள் திரும்பி வாசலின் சமீபத்தில் வந்தவுடன் பொதுவாகச் செய்தி சென்றுவிடும் பழுவூர் அரசருக்கு. அவர்கள் அந்த செய்தி கேட்டு பழுவூர் அரசரும் அரண்மனைப் பெண்டிரும் ஊழியர்களும் தாதியர்களும் காத்திருந்து வரவேற்பார்கள் என்று நினைத்தாள். ஆனால், அவளுடைய கண்கள் சுற்றிச் சுழன்று பார்த்தும் யாரையும் காணவில்லை. முதலில் தம்மை அலட்சியம் செய்கிறார்களோ என்ற ஐயமும் கோபமும் எழுந்தன. ஆனால், அரண்மனையே ஒரே அல்லோலகல்லோலப் பட்டுக் கொண்டிருந் தது. வாசலில் தாதிப் பெண்கள் காவலர்கள் ஆகியோர் கூடிக்கூடி அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

''நீ இரு'' என்று வானதியிடம் சொல்லியபடி பழுவூர் அரண் மனை வாசல் வழியாக உள்ளே குந்தவை மட்டும் சென்றாள். ஓரிரு நொடிகளில் அவள் வெளியேறிய போது அவளுடைய பயமறைந்த முகத்தைப் பார்த்த வானதிக்குப் புரிந்தது, நல்ல விஷயம் அல்லவென்று. 'முடியாது என்று சொல்லி அனுப்பி விட்டாரோ பழுவேட்டரையர்?'

''என்ன அக்கா என்னவானது?'' என்றாள் வானதி. மனதில் இருந்ததை வார்த்தைகளாய் மாற்றக் குந்தவைக்கு அளவுக்கு அதிகமான நேரம் ஆனது.

குந்தவையைக் கண்டும் அங்கு பெரும் பரபரப்பு இல்லை. ஏற்கனவே பரபரப்புடன் இருந்தது இடம்; எல்லாரும் அங்கும் இங்குமாய் ஓடிக்கொண்டிருந்தனர். ஒரு தாதிப்பெண்ணைச் ஜாடை காட்டித் தன்னிடம் வரும்படி சொல்லிவிட்டு சிவிகையின் அருகில் சென்று நின்றாள். அந்த பெண் குந்தவை தேவி வந்திருக் கிறார் என்று தெரிந்தும்கூட பெரிதாக அலட்டிக் கொள்ளவில்லை. வேறு ஏதோ கஷ்டம் அவளை ஆட்கொண்டிருந்தது, பழுவூர் மாளிகையில் மற்றவரைப் போல.

விசாரித்ததில், பழுவேட்டரையர் மயக்கத்தில் இருப்பதாகத் தெரிய வந்தது. அதற்குக் காரணம் என்னவென்று குந்தவை கேட்ட போது ''இளவரசி லோகாவைக் காணவில்லை'' என்றாள் அந்த தாதிப்பெண்.

வெண்ணெய் திரண்டு வரும்போதுத் தாழியை உடைத்தது போலானது குந்தவைக்கு. மிகுந்த வியப்போடு சிலை போல நின்றாள் குந்தவை.

''என்ன?'' என்று மறுபடியும் கேட்டாள்.

''லோகா இளவரசியை இரண்டு நாட்களாகக் காணவில்லை''

தரையில் சரிந்து விழுவது போல ஒரு உணர்வு ஏற்பட்டது குந்தவைக்கு.

❖ ❖ ❖

### அத்தியாயம் எண்பத்து நான்கு

## ஈழக் காட்டில் ஒரு திட்டம்

அடர்ந்த காட்டின் நடுவே ஒரு மரத்தினடியில் இருவர் அமர்ந்திருந்தனர். "ரவிதாசரே நம்மால் முடியுமா? இது நம் வாழ்நாளில் சாத்தியமா?" கேள்வியை கேட்டவன் பரமேசுவரன்.

பரமேசுவரன் பல நாளாய் ஆபத்துதவிகளின் கூட்டாளி. சில ஆண்டுகள் தஞ்சையிலும், ஏன், பழுவூர் அரண்மனையிலும்கூடச் சேவகம் செய்து தேவையான விஷயங்களைச் சேகரித்துக் கொடுத்தவன். பின்னர் பெரிய பழுவேட்டரையரால் அரசாங்க உத்தியோகத்திலிருந்து விலக்கப்பட்டவன். அருமையாக வேலனாட்டம் ஆடுபவன். ஆட்டத்தின் நடுவே குறியும் சொல்லுபவன். கடம்பூரில் சதியாலோசனை நடந்த நாளன்று இவன் ஆடியது நாடெங்கும் பிரசித்தி பெற்றது. சொன்ன குறியும் பலித்துவிட்டது.

ரவிதாசன் கோடிக்கரையிலிருந்து ஒரு பாய்மரத்தில் ஏறி இலங்கைக்கு வந்திருந்தான். இரண்டு நாட்கள் அடர்ந்த காடுகளின் வழியாகப் பிரயாணம் செய்து இன்று பாண்டியர் தங்கியிருந்த பகுதிக்கு வந்தான். இரு மாதங்களுக்கு முன்னால் அவர்கள் எல்லாரையும் இங்கு கொண்டு வந்துசேர்த்து விட்டுப் பின் தாயகம் திரும்பியவன் இன்றுதான் மீண்டும் தன் முகத்தைக் காட்டுகிறான்.

'இவனால் எப்படி முடிகிறது இவ்வளவு வேலைகளையும் செய்ய?' என்று எல்லாரும் அதிசயிக்கும்படி இருந்தான் ரவிதாசன். 'இப்படி பாரதவர்ஷத்துக்கும் இலங்கைத் தீவுக்கும், ஏதோ அடுத்தடுத்த வீட்டுக்குச் செல்வதுபோல அடிக்கடி சென்று வருகிறானே. அவனுக்குச் சலிப்பே தட்டாதா? இல்லை களைப்பே ஏற்படாதா?' என்று அனைவரும் யோசித்தனர். பாண்டிய நாட்டின் நலனின் மேலுள்ள ஆசையானது அச்சமயம் அவனுக்கு ஒரு யானையின் பலத்தை அளித்திருக்கவேண்டும் என்றும் சொல்லிக்கொண்டனர்.



பரமேசுவரன் ரவிதாசனின் செயல்பாட்டை இரண்டொரு தடவை அருகிலிருந்து பார்த்ததுண்டு. அவன் மந்திர வித்தைகளில் தேர்ந்தவன் என்று பலரும் வியப்பதில் அதிசயமேயில்லை. அவனது மதிக்கு எட்டாததே இல்லை எனச் சொல்லலாம். எவ்வளவு திட்டங்கள் தீட்டினான்! ஒவ்வொன்றும் தங்கம். நினைத்தபடி நடந்திருந்தால் மதுரையில் தற்சமயம் கயல்கொடி பறந்துகொண்டிருக்கும். ஆனால், இவனைப்போல அதிர்ஷ்டம் கெட்டவன் யாருமில்லை. பாண்டியரின் சனி இவனையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டது போலும். ஏதாவது ஒன்று இவன் திட்டத்தைத் தோற்கடிக்கும் வண்ணம் தடையாய் வரும்.

ரவிதாசன் சோகமாகப் புன்னகைத்தான். சுற்றிப் பார்த்தான். இவன் வந்ததும் வாழ்த்திவிட்டு அவரவர் இருந்த இடத்துக்கே சென்று விட்டனர். எல்லாரும் வேலை வெட்டியின்றி ஒய்யாரமாகப் மரத்தடியில் சாய்ந்து படுத்திருந்தனர். "இவர்களை வைத்து மதுரையை மீட்கப்போகிறாயா என்று கேட்காமல் கேட்கிறாய் பரமேசுவரா? அப்படித் தானே?" என்றான் ரவிதாசன்.

கேள்வி கேட்டவன் ஆமென்று தலையசைத்தான். அவனுக்கு என்ன பதில் சொல்வது என்று ஓரிரு வினாடிகள் யோசித்தான் ரவிதாசன். போராட்டத்தில் இவ்வளவு நாட்கள் கூட இருந்தவர்களுக்கே சந்தேகம் ஏற்பட்டால் பின்னர் புதியவரை எப்படி இதில் சேர்ப்பது?

இப்படித் தொடராகத் தோல்வி அடைந்தால் யாருக்கும் உலகத்தில் விரக்தி ஏற்பட்டுவிடும். அவரவர் போகும் வழிக்கு புண்ணியம் தேடலாமென்று யோசித்திருப்பார்கள். அப்படி இதுவரை செய்யாமல் இருக்க முக்கியக் காரணம் ரவிதாசன்தான். எல்லோரையும் உற்சாகமூட்டி, இல்லை, மந்திர தந்திரத்தால் பயமுறுத்திச் செயல் இழக்காமல் வைத்துக் கொண்டிருந்தான்.

ரவிதாசனுக்கு நன்கு தெரியும், இந்த நிலையில் பாண்டிய நாட்டு மக்களின் வீரத்தைப் வளர்க்க முயல்வது கஷ்டமென்று. போராளிகளுக்கு வெற்றி வாய்ப்பு அதிகமானது என நிரூபித்தால் மட்டுமே அது முடியும். இல்லையென்றால், பாண்டிய நாடென்று ஒன்றிருந்ததே மறந்து போகும். பாண்டியர் என்ற பெயரே சரித்திரத்திலிருந்து மறைந்தும் போகும்.

இலங்கையிலும் சரி. பரத கண்டத்திலும் சரி. காடுகள் அடர்த்தியானவை. அங்கு பாதியாய் இங்கு பாதியாய் சரியான சந்தர்ப்பம் ஒன்றுக்காகக் காத்துக் கிடந்தனர் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகள். காத்துக்கிடப்பதற்குப் பொறுமை வேண்டும். அதிலும் ஆள்

பலம் குறைந்த குழு ஒன்று உலகின் இப்பகுதியில் யானை பலம் கொண்ட பேரரசுடன் மோதச் சரியான காலநேரம் பார்த்துக் கொண்டிருந்தது.

எல்லாக் காலமும் அரண்மனைச் சுகபோகங்களில் ஆழ்ந்து காலம் கழித்திருக்கும் அரசனுக்கு வீரமும் குறைந்துவிடும், விவேகமும் குறைந்துவிடும்; அதுதான் இயற்கையின் நியதி.

உலகாண்ட அரசகுலங்கள் மண்ணோடு மண்ணாகப் போனது இதனால்தான். ஒன்றன்பின் ஒன்றாக அரச குலத்தில் தோன்றும் மனிதர்களில் ஒருவனாவது அப்படியிருந்தால் போதும். முன்னோர்கள் சேர்த்துவைத்த அனைத்தையும் தன் ஒருவனின் வாழ்நாளில் இழந்துவிடுவான். அப்படிப்பட்ட அரசனுக்காகத் தான் எதிரிகள் மூச்சைப் பிடித்துக் கொண்டு காத்திருப்பார்கள். ஆனால், அது போன்ற காலம் சோழர்களிடம் இப்போது சமீபத்தில் வருவதாகத் தோன்றவில்லை.

ஆட்சிப் பொறுப்பை அநிருத்தரும் உத்தமரும் கவனிக்க, போர் விஷயங்களையெல்லாம் பொன்னியின் செல்வர் கவனித்தார். அதனால் தகர்க்கப்படமுடியாத கோட்டைச்சுவர் போல ஓங்கி நின்று எதிரியின் மனதில் மலைப்பை ஏற்படுத்தியது சோழர்குலம்.

ஆனால், முகத்தில் ஒரு சிரிப்பை வரவழைத்துக் கொண்டு "என்ன பரமேசுவரா, சந்தேகம் வரவைத்துவிட்டனவா ஈழத்துக் காடுகள்?" என்றான் ரவிதாசன்.

பின் தன் கைகளைத் தட்டி "எல்லாரும் இங்கு வாருங்கள். நமது விடுதலைப்போரில் அடுத்தகட்டத் திட்டத்தை விவரிக்கப் போகிறேன்" என்றான்.

இந்தப் பேச்சுவார்த்தை நடப்பதற்கு முன்தினம் ரவிதாசன் இலங்கைக்குக் கடல்கடந்து வந்து கொண்டிருந்தான். ஒரே ஒரு ஆள் மட்டும் துடுப்புக் கொண்டு வலித்துக் கொண்டிருந்தான். அப்போது மரகதத் தீவு போல அவன் கண்ணுக்கு இலங்கை பெரிதாகிக்கொண்டே இருந்தது. பூமியில் சொர்க்கம் என்பார்கள் அதைப் பார்த்தவர்கள். ஆனால், பூமியில் சொர்க்கம் என்றால் அது மதுராநகர் தான் என்று உமையவளே அங்கு வந்து பிறந்தாள். ஆனால் அந்த சொர்க்கத்தை நரகமாக்குவதற்குச் சோழர்கள் முடிவெடுத்துவிட்டனர் என்ற கவலை அவன் மனதை உறுத்தியது.

கடல் நடுவே சதா கேட்டுக்கொண்டிருக்கும் ஓங்காரச் சத்தம் அவன் மனதில் ஒரு அமைதியை உருவாக்கியது. அவனது படகு இலங்கைத் தீவை நெருங்கிய போதே அவனுக்கு ஒரு யோசனை



வந்தது. மின்னல் வெளிச்சத்தில், இருள் அகன்று பொருள் தெரியுமே. அது போல ஒரு யோசனை வந்தது.

பாண்டியப் போராளிகளிடம் ரவிதாசன் தன் மனதில் இருந்ததை வெளிப்படுத்தினான். அவன் தரையில் கிடந்த ஒரு மரத்தின் மீது அமர்ந்து பேச, சுற்றியிருந்தவர்கள் அனைவருமே கேட்டுக் கொண்டிருந்தார்கள். பேருக்காக அந்தக் குழுவின் தலைவனான அமர புஜங்கனும் அதில் இருந்தான்.

"மதுரை மக்களுக்குப் போரென்றால் என்னவென்றே மறந்து போய் விட்டது. நம்மால் தனியாக இந்தச் சோழரை வீழ்த்த முடியாது என்று எனக்கு எப்போதோ தெள்ளத் தெளிவாகத் தெரிந்துவிட்டது." அதைக் கேட்ட எல்லாரும் புரிந்ததுபோலத் தலை ஆட்டினார்கள், முகங்களை இறுக்கமாக வைத்துக் கொண்டு.

மேலும் அதற்காகத் தானெடுத்த மற்ற நடவடிக்கைகளைப் பற்றி விளக்கினான். குழந்தைகளை மடியில் போட்டுத் தாலாட்டிக் கொண்டிருந்த புஜங்கனின் மனைவியைப் பார்த்துவிட்டுச் சொன்னான். "மகள் நம்முடன் வந்ததால் பழுவூரின் ஆதரவு நமக்கு முழுமையாக வந்துவிடும் போலிருந்தது. சோழர் அரச குடும்பத்தின் மீதும், முக்கியமாக குந்தவையின் அட்டூழியங்களின் மீதும் கிழவருக்குக் கோபம் வரும் என்று எண்ணினேன். ஆனால், சோழர்கள் அதிகமாகவே பழுவூருக்கு உப்பிட்டு இருக்கிறார்கள் போலும். கிழவர் மசியவில்லை."

"அதனால், இன்னும் ஒரு குறுநிலக் குலத்துக்குத் தூண்டில் போட்டேன். ஆனால், அந்தச் சம்புவராயன் அதற்கு மாட்டவில்லை. என் முயற்சியைத் தெரிந்து கொண்டு உடனே ஆள் அனுப்பி அரவணைத்துக் கொண்டுவிட்டார்கள் சோழர்கள். இதில் எனக்குத் தெரிந்தது ஒன்று. நம்முடன் யாரேனும் சேர்கிறார்களா என்று பார்ப்பதற்குக் கண்ணில் விளக்கெண்ணையை விட்டுக் கொண்டு அந்த கிழப் பிராமணன் காத்திருக்கிறான்."

"நம்மில் ஒற்றர் யாரேனும் இருப்பானோ?" என்று ஒருவன் சந்தேகம் எழுப்பினான்.

"இல்லை, இருக்காது. அவனுக்கு இங்கு என்ன வேலை? நாம் யாருடைய உதவியை நாடுவோம் என்று எல்லோருக்கும் தெரியுமே. ஆனால், இப்போது நாம் மீண்டும் ஒரு குறுநில மன்னரை அணுகவேண்டும் என்ற நிலமை எழுந்துள்ளது" என்றான் ரவிதாசன்.

"நாமும் வெகுகாலமாகப் பிரயத்தனப்பட்டு ஒரு குறுநில மன்னரை நம் வசம் இழுக்க முயலுகிறோம். ஆனால், மனித உருக்

கொண்ட அசுரர்கள் போல் நாடெங்கும் நம்மை சித்தரித்திருக்கிறார்கள். அதனால் ஒரு பயல் கூட நம்முடன் பேசத்துணிவதில்லை!''

இந்த முறை யாரைத் தேர்ந்தெடுப்பானிவன் என்று யோசித்த பரமேசுவரன் கேட்டுவிட்டான். ''இப்போது எந்தக் குலம்?''

''மீண்டும் பழுவூர்க் குலம்தான்'' என்றான் ரவிதாசன்.

''என்ன...?'' என்று பலரும் ஒரே நேரத்தில் அதிசயித்தனர்.

''ஆம். இந்த முறை அந்த பிரதமர் மற்ற எல்லாக் குலங்களையும் கவனித்துக் கொண்டிருப்பான். அதனால் ஏற்கனவே நம் நேசக் கரத்தை நிராகரித்த குலத்தை நாம் மீண்டும் அணுகவேண்டும்.''

''நடக்குமா?'' என பலரும் கேட்டனர்

''அநிருத்தன் உன்னையும் என்னையும் விடப் புத்திசாலியாக இருக்கலாம். ஆனால், அவன் கூலிக்கு மாரடிப்பவன். நாமோ தேசத்துக்குச் சேவை செய்கிறவர்கள். நாமே இந்த நிலையில் ஜெயிப்போம்'' என்று உறுதியளித்தான் ரவிதாசன்.

''ஆனால், பழுவூர் அரசரை மசியவைக்க முடியாதே? பழுவூர் இளவரசி ஒருத்தி நம்மிடம் இருந்தபோதே நம்முடைய முயற்சி பலிக்கவில்லையே. இப்போது தான் அதைச் சொன்னீர்களே'' என்றான் ஒருவன்.

''போனமுறை மகள் எதிரியுடன் ஓடியபோது, ஏன் பழுவூர் அரசரும் அவள் பக்கம் வரவில்லை? இன்னொரு மகள் இருந்ததால் தானே...'' என்று சொல்லிப் பாதியில் நிறுத்தினான் ரவிதாசன். அவரவர் சொந்த யூகங்களைச் செய்து கொள்ளட்டுமென்று.

ரவிதாசன் காட்டில் வாழ்ந்தாலும் நாட்டில் நடப்பது எல்லாம் அவனுக்கு அத்துபடி. எல்லாரும் நினைப்பதுப்போல அவன் ஒன்றும் மந்திரவாதியல்ல. பாதி விஷயங்கள் அவனுக்கு ஒற்றர்கள் மூலம் தெரியும். மீதி விஷயங்கள் அவனுக்கு யூகத்தில் தோன்றின. ஆனால், மனித இயல்புகளை ஏடுபோலப் படிக்கத் தெரிந்தவன் ரவிதாசன். அதனால், அவனது யூகங்கள் என்றுமே தவறுவதில்லை. அவன் ''இன்று எனக்கு மட்டும் தெரியும் விஷயம், நாளை நாடறிந்த விஷயங்கள் ஆகின்றன'' என்று தம்பட்டம் அடித்துக் கொள்ளும் சமயங்களும் உண்டு.

சிறிது காலமாகச் சோழர்களுடன் பழுவூரின் உறவு வளர்ந்து கொண்டிருக்கிறது என்பது அவன் செவிகளை எப்படியோ எட்டியது. அடுத்து என்ன நடக்கும் என்று அவன் யூகித்தது போலவே குந்தவையும் பழுவூர் அரண்மனைக்கு அடிக்கடி வருவதும்



போவதுமாய் இருந்தாள். பழுவூர் தேசத்தின் இளைய அரசிளங்குமாரி லோகாவும் சோழர் அரண்மனைக்கு அடிக்கடி சென்று வருகிறாள் என்று செய்தி வந்தது. அடுத்துக் கலியாணப் பேச்சுதான் நடக்கும் என்று யூகித்துவிட்டான் ரவிதாசன். பெற்றத் தந்தைக்கே தெரியவில்லை. ஆனால், அந்தச் செய்தி ரவிதாசனுக்கு விஷயம் எட்டிவிட்டது. அதற்கு முன்தான் தன் திட்டத்தைச் செயல்படுத்த வேண்டும் என்று முடிவெடுத்தான்.

பின் அவனது திட்டத்தை விரிவாக விளக்கினான். ''அரசிகுமாரியின் தங்கை அங்கிருக்கிறாள். அவளுக்குப் பொன்னியின் செல்வனுடன் கலியாண ஏற்பாடுகள் நடக்கப் போகிறது. அதற்குள்ளாக அவளை இங்கு அழைத்து வந்துவிடவேண்டும்.''

பலருக்கு சந்தேகங்கள் எழுந்தன. ''அவளை இங்கு கொண்டு வந்தால், என்ன லாபம்? அவள் யாரையோ கட்டிக்கொண்டு போகிறாள். நமக்கென்ன? நமக்கு ஏற்கனவே கவலைகள் ஏராளம். அவர்கள் அவளைத் தேடத் தொடங்கினால் நாம் எல்லாரும் இல்லையா அகப்படுவோம்?'' புஜங்கனின் மனைவியே கேட்டாள்.

''இல்லை மஹாராணி! இருவரும் நம்முடன் இருந்தால் உமது தந்தையான பழுவூர் அரசரை நம் இஷ்டம்போல் ஆட்டிப்படைக்கலாம். நாம் நினைத்ததைச் செயல் படுத்திவிடலாம்'' என்றான் ரவிதாசன்.

இப்போது எல்லோருக்கும் புரிந்தது. விஷயத்தைத் தீர ஆராய்ந்து அதில் வெற்றி என்று உறுதிசெய்துவிட்டுச் செயலில் இறங்கும் வழக்கமுள்ளவன் ரவிதாசன். உடனே அவர்களுடன் வந்து பழுவூரும் அதன் பரிவாரங்களும் ஒட்டிக்கொள்ளாவிடிலும் தற்போதைக்குப் பழுவூர் வேறெந்த அரச குடும்பத்துடனும் ஒட்டிக்கொள்ளாமல் பார்த்துக்கொள்ளவே இந்த திட்டம்.

''அவளை அழைத்துக் கொண்டு காட்டிற்கு அல்லது இலங்கைக்காவது சென்றுவிட வேண்டும். அங்கு அவளை வைத்துக் கொண்டு கிழவன் மனதை மாற்றியமைக்கலாம். ஓரிரு வாரங்கள் பழுவேட்டரையரைத் தவியாய்த் தவிக்க விட்டு, அவரைக் காயப்போட்ட பின், பின் பழுவூரசரிடம் நானே செல்வேன். 'ஐயா! நான் ஒன்று சொல்கிறேன் அதை ஒப்புக் கொள்வீரா?' என்று கேட்பேன். 'நீரும் நானும் ஓர் உடன்படிக்கை செய்து கொள்ளலாம். நீர் எனக்கு உதவி செய்ய வேண்டியது. நான் உமக்கு உதவி செய்ய வேண்டியது; என்ன சொல்கிறீர்?' என்பேன். 'உமக்கு இரண்டு மகள்களும் கிடைப்பார்கள். இலவசமாக இரண்டு பேரக் குழந்தைகள் வேறு' என்று பேரம் பேசுவேன். 'இந்தச் சோழர்

களால் உமக்கென்ன நன்மை?' என்று தூண்டிவிட்டாலும் தப்பில்லை'' என்றான்.

எல்லாரும் திரும்பி புஜங்கனின் மனைவியைப் பார்த்தார்கள். இந்த திட்டம் நிறைவேறச் சாத்தியக்கூறுகள் உள்ளனவா என்று நிர்ணயிக்கக்கூடிய ஒரே நபர் அவள் தான். தந்தையைப் பற்றி நன்கு அறிந்தவள் அவள் தான்.

அவளோ தலையை அசைத்தாள். பின் லோகாவின் தமக்கை சொன்னாள். ''இல்லை. முதலில் நான் கூப்பிட்டால் நிச்சயம் என் தங்கை லோகா வரமாட்டாள்.''

''நான் அவளை விரும்பி வரச்சொல்லவில்லையே'' என்றான் ரவிதாசன். ''அவளைக் கடத்தி வருவோம்.''

''அதெல்லாம் சரி. ஆனால், தஞ்சைக்குள் சென்று அவளைக் கடத்திவருவது எப்படி? அவர்கள் நம்மை அங்கு கண்டால் நம் தலை தப்புவது அதிசயம் தான்'' என்றான் புஜங்கன்.

''பாசமெனும் கயிறு நம்மிடம் இருக்கிறது அல்லவா. அதை இங்கிருந்தே விட்டெறிவோம். நிச்சயமாக அதில் அவள் சிக்கி இங்கு வந்துவிடுவாள்''என்றான் ரவிதாசன்.

''பாசத்துக்காக அவள் வருவாள் என்று நான் நம்பவில்லை! என்னிடம் அவள் வருவதாக இருந்தால் முன்னமே வந்திருக்க மாட்டாளா? குறைந்த பட்சம் எனக்கும் என் குழந்தைகளுக்கும் என்ன ஆனது என்றாவது பார்த்திருக்க மாட்டாளா?'' என்று வினவினாள் புஜங்கனின் மனைவி. அதில் நியாயம் இருப்பதாகவே அனைவருக்கும் பட்டது.

ரவிதாசன் சிரித்தான். பலரும் சிந்திப்பது அவனுக்குப் பிடித்திருந்தது போல. ''மஹாராணி, பாசம் வேறு. பரிவு வேறு. பரிவென்பது நீர் கஷ்டத்தில் இருக்கிறீர் என்று நினைத்தால் வரும். அப்படியே ஒரு செய்தியை அனுப்புவோம்'' என்றான்.

''நான்தான் சதா கஷ்டத்திலேயே இருக்கிறேனே. இதைவிட என்ன?'' என்று அவள் விரக்தியாய்க் கேட்டாள்.

''என் வார்த்தைகளை மன்னிக்க வேண்டும் மஹாராணி. தீயென்றால் சுட்டுவிடாது. உம்மை சர்ப்பம் தீண்டி நீர் மரணத்தின் விளிம்பில் இருப்பதாகவும், உமது குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பை அவளிடம் கொடுக்க விரும்புவதாகவும் செய்தி அனுப்புவோம்'' என்றான்.

திடுக்கிட்டாள் அவள். ஆனால், இது நடக்கும் எனத் தோன்றியது. பரமேசுவரனுக்கோ இந்த திட்டம் மிகவும் பிடித்துவிட்டது.



அவன் வேலனாட்டம் ஆடும் போது உற்சாகத்தையும் ஆதரவையும் காட்டுவதற்காகப் பார்க்கும் ஜனங்கள் ஜயகோஷம் செய்வது போல் ''நாவலோ நாவல்!'' என்று சப்தமிடத்தோன்றியது.

ஆனால், எல்லோருக்கும் இந்தக் கடத்தல் திட்டம் பிடிக்க வில்லை. ''வீரமான போரெல்லாம் புரியவேண்டும் என்றுதான் நான் இந்தக் கூட்டத்தில் சேர்ந்தேன். இப்படிப் பெண் பிள்ளைகளைக் கடத்துவதெல்லாம் எனக்குப் பிடிக்கவில்லை'' என்றான் ஒருவன்

ரவிதாசன் சுற்றியிருந்தப் போராளிகளின் நிலையைப் பார்த்துச் சோகமாய் நகைத்தான் ''சோழருடன் போர் செய்யும் நிலைமையிலா நாம் இருக்கிறோம்? போர் என்பது மாபெரும் விஷயம். அது நம் அனைவரின் தலையெழுத்தையும் மாற்றிவிடும். யுத்தம் என்று வரும் போது மனிதர்கள் மிருகங்களாகி விடுவார்கள். அப்போது வீரர்களின் எண்ணிக்கையும் வைத்திருக்கும் ஆயுதங்களுமே முக்கியம். நியாயம் யார்பக்கம் இருக்கிறது? யார் ஆக்கிரமிப்பு நடத்துபவன், யார் விடுதலைக்காகப் போராடுபவன் என்பதெல்லாம் முக்கியமல்ல'' என்றான்.

கூட்டத்தில் மௌனம் குடிகொண்டது. ரவிதாசனே தொடர்ந்தான் ''போரென்றால் நாமும் நஷ்டமடைய நேரிடும். யோசித்துப் பார். சோழர் படையில் லட்சம் பேர். நம்மால் திரட்டக் கூடியது ஓராயிரமோ இல்லை ஈராயிரமோ. அவனுக்கு உதவ இருபது குறுநில மன்னர்கள். சோழனிடம் தங்கள் விசுவாசத்தைக் காட்டக் கொண்டு வருவார்கள். நமக்கென யார் வருவார்கள்? பிராயம் ஆகாத இளம் வயதில் பறவைகள் கூட்டிலிருந்து பறக்க நினைக்க லாமா? அதுபோலத்தான் நாம். சிறகு முளைக்கும் காலத்துக்கு முன்பு பறக்க நினைக்கக்கூடாது.''

''ரவிதாசரே! நான் அதைச் சொல்லவில்லை. சம்பந்தமே இல்லாத பெண் பிள்ளைகளையெல்லாம் இந்த சதியில் இழுத்தால் தேவையில்லாத பாவ மூட்டையை நாம் பிற்காலத்தில் சுமக்க வேண்டுமே என்று சொன்னேன்'' என்றான் ஆட்சேபித்தவன்.

''பெண்களிடம் காட்டவேண்டிய ஜீவகாருண்யத்தின் சிறப்பைப் பற்றித் தர்மோபதேசம் செய்கிறாய். ஆனால், நினைத்துப் பார். சோழரின் தர்மராஜ்யத்தைப் பற்றி மதுரை எங்கும் கல்வெட்டுகள் உருவாக்குகிறார்கள். ஆனால், சோழ சக்கரவர்த்தியின் வீரர்கள் பாண்டிய நாட்டிலும் ஈழத்திலும் செய்த அக்கிரமங்களைப் பற்றித் எதிர் காலத்தில் தெரியாது. நீ பார்த்திருக்கக் கூடியவைகளை விடப் பன்மடங்கு அக்கிரமங்களை நான்

பார்த்திருக்கிறேன். இப்படிப்பட்ட சதித் திட்டங்களில் குற்றமற்ற ஜனங்களும் அகப்பட்டுக்கொள்வார்கள் என்றால் கவலைப்படாமல் முடியாது. இன்று மதுரை மாநகரில் வீடின்றித் தவிக்கும் மக்கள் எவ்வளவு பேர்? அபலை ஸ்திரீகளும் எத்தனை பேர்? அனாதைக் குழந்தைகள் எத்தனை பேர்?'' என்றான் ஆவேசமாக.

புஜங்கன் கேட்டான் ''இப்போதுதான் கடல் கடந்து வந்தோம். அதற்குள் மீண்டும் அங்கு செல்லவேண்டுமா? பெண்டிர் மற்றும் குழந்தைகளுடன் மீண்டும் கடலைக் கடப்பது கடினம். நாம் அங்கேயே இருந்திருக்கலாம் அல்லவா?'' என்றான்.

''அன்று தேவை வேறுவிதமாக இருந்தது'' என்று பதிலளித்தான் ரவிதாசன், சற்றுக் கடுமையாக. பெயரளவில்தான் புஜங்கன் குழுவுக்குத் தலைவன். செயல்பாட்டில் ரவிதாசன்தான் எல்லா முடிவுகளும் எடுப்பான். ''கடக்கவேண்டியது என்ன பெரிய சமுத்திரமா? சேது, வெறும் பெரிய ஆற்றைப் போலத்தான். நாளைக்கே நம்மில் பாதிப்பேர் புறப்பட ஏற்பாடுகளைச் செய்வோம்'' என்றான்.

அது போலவே கூட்டத்தில் பாதிப்பேர் மட்டும் கடல் கடக்க ஆயத்தமானார்கள். அதில் புஜங்கனும் அவன் மனைவியும் குழந்தையும் உட்பட. பிரயாணம் தொடங்கி இரண்டு நாள் வடக்கே சென்று படகேறினார்கள். ஒரு நாளுக்குப் பின் கோடியில் இறங்கியவுடன் தென் மேற்குத் திசையில் சென்று கொடும்பாளூரை அடைந்தனர்.

ரவிதாசன் விளக்கினான் ''கொடும்பாளூர்க் கோனாடு என்பது இதுதான். சோழர் கொடும்பாளூர் அரச குடும்பங்கள் ஒட்டி உறவாடியதில் எங்கே சோழ நாட்டின் எல்லை என்பதே மக்களுக்கு மறந்துபோனது. ஆனால், இயற்கை அதை வரையறுத்துக் காட்டியது. சோழநாடு வளமை கொண்டது. கொடும்பாளூர் சற்றுப் பாலை நாடு. நாட்டுக்குள் செல்லச்செல்லப் பாறைகளும் குன்றுகளும் பூமியைப் பிளந்து கொண்டு வெளிவரும் காட்சியைப் பார்க்கலாம்.''

அங்கு விஜயாலய சோழீசரம் என்ற இடத்தில் அவர்கள் தங்க ஏற்பாடுகள் நடந்தன. குகைகளும் குளங்களும், இருந்த மலைப் பிரதேசம் அது.

பரமேசுவரனுக்கு ஒரு சந்தேகம்: ''யார் மூலம் சொல்லி அனுப்பப் போகிறீர்கள்?''

''அந்த ராக்கம்மாவுக்குச் செய்தி அனுப்பு'' என்றான் ரவிதாசன்.



ராக்கம்மாள் ரேவதாஸக் கிராமவித்தனுடைய மகள்தான். அவள் படகோட்டி முருகையனுடைய மனைவியும்கூட. கோடிக்கரைக் கலங்கரை விளக்கத்தை மேற்பார்வையிடும் தியாக விடங்கரின் மருமகள். ஆனால், அவளுடைய தேச பக்தியெல்லாமே பாண்டியர்களுடன்தான். பாண்டியருக்காகப் பல நாள் ஒற்றர் வேலை பார்த்தவள். இலங்கைக்கும் கோடிக்கரைக்கும் பயணிக்கும் போராளிகளுக்குப் பெரும் உதவி செய்தவள். அவள் குட்டு வெளியான உடன் நாட்டு நடப்புக்களிலிருந்து மறைந்து போய்விட்டாள்.

பரமேசுவரன் சிரித்தான். ''இப்படிப்பட்ட வேலைகளில் கைதேர்ந்தவள் ராக்கம்மாள்'' என்றான். போன முறை புஜங்கனின் மனைவியையும் சோழ நாட்டிலிருந்து வெற்றிகரமாக அழைத்துவந்தவள் அவள்தான். ''இந்த முறையும் சரியாக வேலையைச் செய்வாளா?''

ரவிதாசன் முகத்தில் புன்னகை. ''ஆம் செய்துதான் ஆக வேண்டும். இன்று பாண்டிய நாட்டின் எதிர்காலமே அந்த ராக்கம்மாளின் கையில்!'' என்றான்.

❖ ❖ ❖

## அத்தியாயம் எண்பத்து ஐந்து
## பாம்பு தீண்டியதா?

பழுவூர் அரண்மனையில் இளவரசி லோகமாதேவி பெரும் ஆனந்தத்தில் இருந்தாள். குந்தவைதேவி அவளுக்கென்று பல பரிசுப் பொருட்களை அனுப்பியிருந்தாள்.

காஞ்சிபுரத்தில் நெய்த பட்டுச் சேலை ஒன்றுடன், கொற்கைக் கடலில் மூழ்கியெடுத்த முத்துக்கள் சரமாய் கோர்த்த மாலையொன்றும் வந்திருந்தது. சரத்தின் நடுவே செக்கசெவேலென்று, ஈழத்திலிருந்து வந்திருந்த ரத்தினங்கள் இரண்டு! எல்லாவற்றையும் அழகிய வேலைப்பாடுகளுடன் இருந்த ஒரு சிறிய சந்தன மரப் பெட்டியில் வைத்து தூதர்கள் மூலம் அனுப்பியிருந்தாள். இதற்கு முன் பல முறை இப்படி நடந்தது தான். காரணமேயில்லாமல் பரிசுப்பொருட்களை அனுப்புவாள் குந்தவை. காரணம் புரியாமல் லோகாவும் தன் மேல் பரிவு காட்ட ஒரு ஜீவனிருக்கிறதே என்று சந்தோஷப்படுவாள்.

ஆனால், இம்முறை இதைக் காரணமாக வைத்து நன்றி சொல்ல அரண்மனைக்குச் செல்லலாம்; ராஜேந்திரனுடன் விளையாட லாம். அதுமட்டுமல்ல இலங்கைக்குச் சென்ற இளம் சம்புவரா யனைப் பற்றிய செய்தியும் கிடைக்கும் அல்லவா? அவருடன் வந்தியத் தேவரும் சென்றிருக்கிறார் என்பதனால் குந்தவைக்கு அடிக்கடி ஈழத்திலிருந்து செய்திகள் வந்துக்கொண்டிருக்கும், என்று நினைத்தாள்.

அப்போது தாதிப் பெண்ணொருத்தி உள்ளே வந்து தலை வணங்கினாள்.

''இளவரசி உம்மைப் பார்க்க ஒரு பெண் வந்திருக்கிறாள். கிராமத்துப் பெண் போல இருக்கிறாள். இதற்கு முன் அவளை நான் இங்கு பார்த்ததில்லை'' என்றாள்

லோகாவுக்கு அதிசயம். ''என்னை யார் பார்க்க வரப் போகிறார்கள்? என்னவென்று சொல்கிறாள்'' என்றாள் லோகா. அந்த தாதிப் பெண் வந்தவள் சொன்னதை அப்படியே ஒப்பித்தாள். ''அக்கம்மா என்று யாரோ அனுப்பினாளாம். உம்மைப் பார்க்கச் சொல்லி அனுப்பினாளாம். அப்புறம் வா என்று போகச் சொல்லட்டுமா?''

லோகாவுக்குத் தூக்கிவாரிப்போட்டது. அக்கம்மாவென்ற அந்த பெயர் தனக்கு மட்டும்தான் தெரியும். குழந்தைகள் பேசக் கற்றுக் கொள்ளும் போது புதுப்புது வார்த்தைகளை உருவாக்குகிறார்கள். அதில் இதுவும் ஒன்று. தன் தமக்கையைக் குறிக்கத் தானே மழலை யில் உருவாக்கியது. தாயில்லாப் பெண்ணான லோகாவை வளர்த்ததில் பெரும்பங்கு அத்தைக்கும் அக்காவுக்கும்தான். அதனால் லோகா அக்காவுக்கு வைத்து அழைத்த பெயர் அக்கம்மா.

பழைய ஞாபகங்கள் எல்லாம் வந்து லோகாவின்மேல் முட்டின. அவை அவள் எண்ணப்போக்கைத் திக்குமுக்காடச் செய்தன. தலைசுற்றுவது போலிருந்தது.

ஆனால், அக்காவை நினைத்தால் நல்லதே நினைவுக்கு வராது. கஷ்ட காலம் தான் மனதில் முந்திக்கொண்டு வரும். பழுவூர் அரச குலத்தைப் பார்த்து நாடே கைகொட்டிச் சிரித்த காலமது. அது வரை அக்காதான் அவளுக்கு எல்லாம். தாயில்லாக் குழந்தைகளை அத்தை வளர்க்க, ஒருவருக்கு ஒருவர் ஆதராவாய் இருந்தார்கள். பின் சோழர் குடும்பத்தில் அக்காவுக்குக் கலியாணம் ஆனது. சந்தோஷத்தின் உச்சக் கட்டத்தில் இருந்தது பழுவூர்க் குலம். திடீரென்று நாட்டில் குழப்பம். பிறகு ஒரு நாள் அக்காள் கணவர்



திரும்பாமல் போனார். பின் சிறிது காலம் கழித்து அக்காளும் கணவரைப் பின் தொடர்ந்தாள்.

தந்தையார் உள்ளத்தை வெட்கி மருகச் செய்த, அவர் உடலைக் குன்றச் செய்த, அந்தக் காரியத்தைச் செய்தாள் அக்கா. உப்பிட்ட சோழர்களின் ஜன்மப் பகையான பாண்டியருடன் சேர்ந்து ஓடி விட்டாள். அவர்களைத் துரத்திச் சென்ற தந்தையாரைப் பாதிப் பிணமாய்க் கொண்டு வந்து போட்டார்கள். தன் மகள் தன்னை நிராகரித்துச் சென்றதுதான் அவருக்குத் தளர்ச்சியையும், துன்பத் தையும் உண்டாக்கி விட்டது. உயிர் தப்பினாலும் மீண்டும் சரிவர அவரால் எதையும் செய்ய முடியவில்லை. அன்றிலிருந்து இன்று வரை அக்காளிடமிருந்து தகவலே இல்லை. இன்று திடீரெனத் தனக்கு என்ன சொல்லி அனுப்பியிருப்பாள் அக்கா என்ற ஆர்வம் லோகாவுக்கு.

''ஆகா! அக்காவிடமிருந்து செய்தியா? அவள் காட்டுக்குச் சென்ற ஐந்தாண்டுகளில் ஒருமுறை கூட செய்தி அனுப்ப வில்லையே'' என்று லோகாவுக்கு ஆச்சரியம்.

''அவளை மாளிகையின் பின் கதவுக்கு அருகே கூட்டிவா. அப்பாவின் பார்வையில் படாமல் ஜாக்கிரதையாக அழைத்து வா'' என்று லோகா தாதியை எச்சரித்தாள். அந்தப்புரத்திலிருந்து தோட்டத்துக்குச் செல்லத் தனிக் கதவும் இருந்தது. சற்று நேரம் பொறுக்க முடியாமல் தவித்துவிட்டு லோகா வெளியே வந்தாள்.

மரத்தடியில் களைப்பைப் போக்கிக் கொண்டிருந்தாள் ராக்கம் மாள். அங்கு அமர்ந்த படியே பழுவூர் மாளிகையை அளவிட் டாள். அரண்மனையின் ஆடம்பரத்தைக் கண்டு ராக்கம்மாள் பொறாமை கொள்ளவில்லை. அழகாய் அலங்கரிக்கபட்ட மாட மாளிகைகளைக் கண்டு ஏக்கம் கொள்ளவில்லை. அவளைப் பொறாமைகொள்ளச் செய்தது ஒன்றுதான். அந்தக் கட்டடத்தின் கூரை தான். அது வெயிலிலும் மழையிலும் அழகான குடை போன்றது. நமக்கு அப்படித் தலைக்கு மேல் நிரந்தரமாய் கூரையில்லையே என்று எண்ணி தான் பொறாமைப்பட்டாள்.

அரண்மனையைக் கண்டு ஆதங்கப்பட்டுக் கொண்டிருந்த ராக்கம்மாள் வெளியில் வந்த பழுவூர் இளவரசியைக் கண்டாள். ராக்கம்மாளுக்கே பழைய ஞாபகம். ''இப்படித்தான் பொன்னி யின் செல்வர் பட்டம் சூடும் நாளன்றும் இங்கு வந்தோம். அன்று அக்காளை அழைத்துச் சென்றோம். இன்று தங்கையை.''

ராக்கம்மாளுடைய தலை ரோமம் நார்நாராய், சடைசடையாய் இருந்தது. முழுவதுமாய்த் தும்பைப் பூவைப் போல் வெளுத்துப்

போயிருந்தது. மாநிற முகத்தில் வெண்ணிற முடியென வித்தியாசமாக இருந்தது. கண்களைச் சுற்றிக் கறுத்துப் போயிருந்தன. வயதாலும் வறுமையாலும் கன்னங்களில் குழி விழுந்திருந்தன. முகத்திலே சுருக்கங்கள் காணப்பட்டன.

அந்தப் பெண்ணின் அவலட்சணத்தைப் பார்த்த லோகாவுக்கு அருவருப்பு. ஆனால், அவள் காட்டில் வாழ்க்கை நடத்துகிறவள் என்பதை நினைவில் கொண்டாள்.

அவள் அருகில் வந்தவுடன் ராக்கம்மாள் கேட்டாள்."நீ தானே லோகா?"

"ஆமாம்" என தலையசைத்தாள் பழுவூர் இளவரசி.

"உனக்கு ஒரு செய்தி வெகுதொலைவிலிருந்து கொண்டு வந்துள்ளேன். கிட்டே வா, சொல்கிறேன். ரொம்ப ரொம்ப அந்தரங்கமான விஷயம். யார் காதிலேயும்கூட விழக் கூடாது" என்றாள் ராக்கம்மாள்.

"எனக்கு யார் செய்தி அனுப்பப் போகிறார்கள்?" லோகாவின் குரலில் சந்தேகம் தென்பட்டது. எனினும் சற்று சமீபத்துக்கு வந்தாள் லோகா. அருகில் வந்தவுடன் அந்தப் பெண்ணின் மீது ஒரு வாடை. செடி கொடிகள், ஏன் பழைய மீன் மக்கினால் வருமே, அது போல.

"அம்மா தாயே, எனது விஷயத்தில் உனக்குச் சிறிதும் சந்தேகம் வேண்டியதில்லை. நான் கூறவந்த செய்தியைக் கூறிவிட்டு என் வழியே போகிறேன். அப்புறம் உன் இஷ்டம். என்னிடம் வாய் மொழியாகச் செய்தி அனுப்பியிருப்பது உமது தமக்கை"

"அது என்ன?" என்று கேட்டாள் லோகா. அக்கா என்றவுடன் அவள் முகத்தில் உற்சாகம் பொங்கிற்று என்பதை ராக்கம்மாள் கவனிக்கத் தவறவில்லை.

அதனால் மீண்டும் ஒரு முறை "நான் உன் தமக்கையிடமிருந்து சேதி கொண்டு வந்துள்ளேன். காட்டுப் பாதையில் கல்லையும் முள்ளையும் பொருட்படுத்தாமல் வந்தேன்" என்றாள்.

"அக்கா எப்படியிருக்கிறாள்?"

ராக்கம்மாள் முகம் மாறியது. "அதைத்தான் எப்படிச் சொல்வதென்று தெரியவில்லை..." என்று இழுத்தாள்.

லோகாவின் மனது பதறியது. சட்டென்று ஒரு துள்ளலில் அருகில் வந்து நின்று "என்ன ஆச்சு?" என்றாள்.



அவள் முகத்தைக் கண்ட ராக்கம்மாளுக்குப் புரியவந்தது. அக்காவையும் அவள் ஊமைக் குழந்தையையும் இன்னும் இவள் நினைவு வைத்துக் கொண்டுதானிருக்கிறாள் என்று.

"உன் தமக்கை சர்ப்பம் தீண்டி மரணப்படுக்கையில் இருக்கிறாள். அவள் இரு குழந்தைகளும் தாயின்றித் தவிக்கும் நிலைமையில் அவற்றை உன்னிடம் நேரடியாக ஒப்படைக்க விரும்புகிறாள்" என்றாள் ராக்கம்மாள். "சாகும் போதாவது உன்னைப் பார்க்கவேண்டும் என்று சொல்கிறாள்."

லோகாவுக்கு மனதுக்குள் ஒரு குற்ற உணர்வு. ஒரு காலத்தில் அக்காவைப் பற்றி நினையாத நாட்களில்லை. சோழ இளவரசியுடன் தொடர்பேற்பட்டவுடன் இரு மாதம் அவள் நினைப்பு இலாமல் இருந்திருந்தது. ஆனால், இப்போது அக்காளைப் பாராத ஒவ்வொரு கணமும் அவளுக்கு ஒவ்வொரு யுகமாக இருந்தது. சாகும் ஒரு ஜீவனுக்குக் கடைசி ஆசையை நிறைவேற்ற அவள் உடம்பு படபடத்தது. உதடுகள் துடிக்க, நாத்தழுதழுக்கக் கேட்டாள் "உயிர் பிழைப்பாளா?"

முகத்தை முடிந்தவரை சோகமாக வைத்துக் கொண்டு ராக்கம்மாள் சொன்னாள். "பிழைத்தால் புனர்ஜன்மம்தான்"

"இப்போது நான் என்ன செய்ய?" என்றாள் லோகா

"சாகும் முன் குழந்தைகளை உன்னிடம் ஒப்படைக்க விரும்புகிறாள் போலும். அவை காட்டில் அனாதைகளாக வாழ முடியாது அல்லவா? அவர்களையும் பாண்டியர்கள் பலி கொடுத்துவிடுவார்கள். அம்மணி, என்னுடைய வார்த்தைகளைக் கேள்" என்றாள் ராக்கம்மாள். அவள் என்ன சொன்னாலும் லோகா கேட்கும் நிலைக்கு அவளைத் தள்ளியாயிற்று என்று புரிந்தது.

"இரவுக்கிரவே காட்டிலிருந்து திரும்பலாம். வெகு அருகில் தான் அக்கா இருக்கிறாள். அவளைப் பார்க்க என்னுடன் வருகிறாயா?"

"நான் எப்படி உம்முடன் வருவது? ஏன் அவ்வளவு தள்ளியிருக்கிறாள் அக்கா. அக்காவை நீயே இங்கு ஆள் வைத்துத் தூக்கி வந்திருக்கலாம் அல்லவா?"

"கிட்டே வந்தால் உன் அப்பா விடுவாரா? சர்ப்பத்தின் விஷம் வேலை செய்யும் முன்பே அவளைக் கொன்றுவிடுவார்" என்றாள் ராக்கம்மாள்.

"ஆம். அதுவும் உண்மைதான்" என்று ஒப்புக்கொண்டு தலை அசைத்தாள் லோகா. தாயில்லாத தன்னை வளர்த்தவள் அக்கா

தான். எனினும் பழுவூர்க் குலத்துக்குப் பிடித்த சனியென்று அவளை அப்பா அடிக்கடி வர்ணிப்பார்.

''அவளுக்கு இந்த நிலைமை வருமென்று என்று நான் கனவிலும் கருதவில்லை'' என்றாள் லோகா.

''உன் அக்கா அடிக்கடி என்னிடம் சொல்லுவாள். எனக்கு ஏதாவது அபாயம் நேரிட்டால், உதவிக்கு என் தங்கை லோகா இருக்கவே இருக்கிறாள்...'' என்று இன்னமும் தூபம் போட்டாள் ராக்கம்மாள்.

அழகாக நடித்தாள் ராக்கம்மாள். அதன் பிரதிபலனாக லோகாவுடைய மனம் எங்கெல்லாமோ சஞ்சரித்துக் கொண்டிருந்தது. ''என்னுடன் வந்தால் பொழுது சாய்வதற்குள் திரும்பலாம். ஒரு முறை, ஒரே தடவை பார்த்துவிட்டு வரலாம்'' என்று மெல்லிய குரலில் வற்புறுத்தினாள்.

அக்காவைப் பாக்கவேண்டுமென்ற லோகாவுடைய இந்த நினைப்பு விடுவிடுவென்று வளர்வதைக் கண்டுத் திருப்தியடைந்தாள் ராக்கம்மாள். அக்காவின் உடல்நலக் கஷ்டங்களைப் பற்றி ராக்கம்மாள் அடுக்கிக் கொண்டே போனாள். அக்காவின் ஊமைக் குழந்தைகளைப் பற்றி வர்ணித்தவுடன் லோகாவால் தாங்க முடியவில்லை.

உடனே லோகா மிகப் பரபரப்புடன் சில முடிவுகளை எடுத்தாள். எங்கோ பிறந்த ராஜேந்திரனைக் கண்டால் பாசம் நமக்குப் பொங்குகிறதே. இந்த குழந்தைகள் என் ரத்தம். ''அம்மா நீ நன்றாயிருக்கவேண்டும். என்னை என் தமக்கையிடம் அழைத்துக்கொண்டு போங்கள்'' என்றாள் லோகா

உடனே ராக்கம்மாள் சில நிபந்தனைகள் போட்டாள்.

''நீ என்னுடன் வரும் விஷயம் வேறு யாருக்கும் தெரியக் கூடாது. அவளைப் பார்த்துவிட்டு உன்னை நான் பொழுது சாய்வதற்குள்ளே கொண்டு வந்து விடுகிறேன். அதுவரை யாருக்கும் தெரிந்தால் என்னைப் பிடித்து உதைப்பார்கள். இந்த வயதில் என்னால் அடி உதையெல்லாம் தாங்க முடியாதம்மா. ஏதோ சாகக் கிடக்கும் உன் அக்கா கெஞ்சினாள், அதற்காகத்தான் வந்தேன்'' என்றாள் ராக்கம்மாள் சாதுர்யமாக. லோகாவுக்கே அருவருப்பாய் இருந்தது. 'ச்சீ! அப்பாவென்றால் எவ்வளவு பேருக்கு பயம்!'

ஒரு நாள் போய் வந்தால் யாருக்கும் தெரியாது என்று முடிவெடுத்துவிட்டாள் லோகா. ராக்கம்மாளை மரத்தடியில் அமரச் சொல்லி வாசல் வரை சென்றாள். ஒரு தாதிப் பெண்ணைக் கூப்பிட்டு ''நான் மாலைவரை வெளியே சென்று வருகிறேன்.



அப்பாவுக்குத் தெரியவேண்டாம்'' என்றாள். அந்தப் பெண்ணின் கண்கள் வியப்பில் பன் மடங்கு பெரியதாயின. ''இளவரசி, நான் வேண்டுமானாலும் உம்முடன் துணைக்கு வருகிறேன்'' என்றாள், ராக்காமாளை அருவருப்பாகத் திரும்பிப் பார்த்து விட்டு.

ராக்கம்மாளுக்கு ஏக சந்தோஷம். ''இந்தப் பேதைப் பெண் தன்னுடன் கிளம்பி வர ஒப்புக்கொண்டதிலிருந்து அவளுக்குத் தன் அக்கா மேல் இன்னும் அபிமானம் இருக்கிறது என்பது ஸ்பஷ்டமாய்த் தெரிந்தது. ''இந்தக் கதையை என்னை நம்பச் சொல்றாயா?'' என்று ஒரு முறை கூட அவளைக் கேட்கவில்லையே.

ராக்கம்மாள் சதி வேலைகளில் ஈடுபட்டு வெகு நாட்களானது. அதனால் அவளுக்கு பயம். 'போனமுறை போல வெற்றி கிட்டுமா?' என்று சந்தேகித்தாள். 'தன்னைப் பிடித்து மரத்தில் கட்டிவிட்டால்....' என்று நினைத்தாள். ஆனால், ரவிதாசனின் கணக்கு தப்பாது என்று இப்போது உறுதி கொண்டாள். ரவிதாசனின் யூகமே யூகம் தான். அவன் சொல்வது போல ''ராஜதந்திரத்துக்குத் தோல்வியே இல்லை''

லோகாவை முகத்தை மறைக்கும் வண்ணம் முக்காடு போட்டுக் கொள்ளச் சொன்னாள் ராக்கம்மாள், யாரும் அடையாளம் தெரிந்து கொள்ளாமல். அதற்குக்கூட எதிர்ப்புச் சொல்லாமல் ஒப்புக்கொண்டாள் லோகா. அதற்கு முக்கியமாக அந்த பெண் சொன்ன செய்தி தான் காரணம். ''உன் தந்தைக்குத் தெரிந்தால் என் தோலை உரித்துவிடுவார்'' என்றாளே. பாவம் தூது வந்த இவளை அப்பா ஒன்றும் செய்து விடக்கூடாது என்கிற நல்லெண்ணத்தில் அவள் சொன்னதையெல்லாம் கேட்டாள் அந்தப் பேதைப் பெண்.

ராக்கம்மாள் சொன்னது போலப் புடவை முந்தானையை முக்காடு போலப் போட்டுக் கொண்டு இருவருமாகக் கிளம்பினார்கள். உச்சி வெயில் காலம் ஆதலால் தெருவில் அதிகமாக ஆளில்லை. கோட்டை வாசலைக் கடந்தபோது கூட யாரும் அவளைப் பார்த்ததாகவோ அடையாளம் கண்டு கொண்டதாகவோ தெரியவில்லை.

ஆனால், ராக்கம்மாள் தஞ்சைக் கோட்டையை ஒட்டிய ராஜபாட்டையை அடைந்தவுடன்தான் நிம்மதிப் பெரு மூச்சு விட்டாள். முதலில் ராஜபாட்டையில் சென்றார்கள். பின் கிராமப்புறப்பாதை. பிற்பகலில் சாலையை விட்டுக் கிழிறங்கிக் காட்டுப் பகுதிக்குள் சென்றார்கள்.

மனித சஞ்சாரம் உருவாக்கிய காட்டுப் பாதை அது. மனிதர்கள் நடக்கும் இடத்தில் புல்கூட முளைக்கவில்லை. மீதி இடங்களில் மீண்டும் மரங்கள் செழித்து வளர்ந்து வானோங்கி நின்றன. அதனால் மதிய வேளையில் கூட இருட்டையொத்த நிழலிருந்தது. லோகா சுற்றுமுற்றும் பார்த்தாள். யாரையும் காணவில்லை. 'திக் திக்' என்று மனம்அடித்துக் கொண்டது. மாலைச் சூரியனின் வெளிச்சம் நேரமாகிவிட்டதை லோகாவுக்கு நினைவூட்டியது.

காட்டுக்குள் நுழைகையிலே லோகாவுக்குப் படபடப்பு ஏற்பட்டது. கானகத்தைக் கண்டால் நகரத்தில் வளர்ந்த லோகாவுக்கு அச்சம் உண்டு. காட்டில் அவ்வப்போது நிசப்தம் நிலவியது. பின் பலவகை ஒலிகள் மாறிமாறிக்கேட்டன. லோகாவுக்கு பயம்; "ஏதோ காலடிச் சத்தம் போல் கேட்கவில்லையா?" என்று கேட்டாள்.

"நம்முடைய காலடிச் சத்தம் எதிரொலியாய்க் கேட்கத்தான் செய்யும்" என்றாள் ராக்கம்மாள். வீணாக மிரண்டு விடாதே என்பது போல் அவள் கைகளைப் பிடித்துக்கொண்டாள் ராக்கம்மாள். சொர சொரவென்று இருந்தது அவள் பிடி. அவளது பிடியின் உறுதியை அனுபவித்த பின் தான் லோகாவுக்கு முதல் முதலாகச் சந்தேகம் வந்தது. "ஆறுதலுக்காகப் பிடித்தது போலில்லையே. நம்மை வலுகட்டாயமாக இழுப்பது போலல்லவா இருக்கிறது இவள் பிடி?" என்று.

மேலும் "இப்படி ஒரு கணம் கூடச் சிந்தியாமல் அந்தப் பெண்ணின் பின்னால் நடையைக் கட்டிவிட்டோமே?அவள் கூற்றை நம்பியது தவறோ?" என்று முதல் முறையாகக் காட்டுப் பாதையில் நடந்து கொண்டே யோசித்தாள்.

அலைமேல் அலையாக எண்ணங்கள் வந்தன. "இப்போதே சூரியன் அஸ்தமனத்துக்கு ஆயத்தமாகிவிட்டான். வானில் விட்டெறிந்த பந்து ஒன்று புவியின் மீது வருவதைப் போல கீழே விழுந்து கொண்டிருந்தான். நாம் நடந்து வந்த தூரம் திரும்பியும் நடக்கவேண்டுமல்லவா? பின் இந்தப் பெண் சொன்னது எப்படிச் சாத்தியமாகும்? இரவுக்குள் எப்படித் திரும்ப முடியும்? நம் பாசம் கண்ணை மூடிவிட்டதா?அப்பாவிடம் கூடச் சொல்லாமல் இப்படிச் சம்பந்தமில்லாத யாரோ ஒருத்தியின் பின்னால் செல்வது எவ்விதத்தில் சரி?" என்று நினைத்தாள். அவளுக்கு நிமிஷத்துக்கு நிமிஷம் பயம் வளர்ந்து வந்தது.

அக்காவின் அன்பைப் பற்றிய தன்னுடைய சொந்த ஊகத்தினால் அவள் கிளம்பி வந்துவிட்டாள். ஏதோ துர்நோக்கத்



...வேதான் இவள் வந்திருப்பாள் என்று இதுவரை தோன்ற வில்லை. அப்பாவிடம் இல்லாவிட்டாலும் யாரிடமாவது சொல்லி விட்டு வந்திருக்கலாம். முழுவதுமாய் இந்த பெண்ணை நம்பி மோசம் போய் விட்டோமோ?... இவளுடன் ஜாக்கிரதையாகவே இருந்துக்கொள்ளவேண்டும் என்று நமக்கு முன்பே தெரியவில்லையே" என்று மனம் பதறியது.

லோகா வீட்டில் தனியாய் இருக்கும் தந்தையை நினைவு கூர்ந்தாள். தந்தையைத் தனியாய் விட்டு வந்ததற்குத் தன்னையே நொந்து கொண்டாள். தாதிப் பெண் யாரையும் கூட அழைத்து வரவில்லை. அது அடுத்த தவறு. அப்படியே இது தவறென்றாலும் இந்த ராக்கம்மாளைவிட்டு ஓடிச் சென்றால் விபரீதமாகிவிடும் என்றும் அஞ்சினாள். எந்த திசையில் ஓடுவது என்று கூடத் தெரியாது.

பாதை காட்டுக்குள் முடிவில்லாது நீண்டு போய்க் கொண்டே யிருந்தது. அன்று பகற்பொழுதில் தைரியமாய் இருந்த மனம் இப்போது இரவு வர வர சஞ்சலப்பட்டுக் கொண்டுதானிருந்தது. "இரவுக்குள் வீட்டுக்குச் சென்று விடலாம் என்றாயே? எப்படி அது சாத்தியம்?" என்றாள் ராக்கம்மாளைப் பார்த்து.

அந்தக் கேள்விகளையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளாதவளாய்க் ராக்கம்மாள் முன்னால் சென்றாள். லோகா மீண்டும் "இவ்வளவு தூரம் ஏன் செல்கிறோம்? பொழுது சாய்வதற்குள் வீடு திரும்பிவிடலாம் என்றாயே? எங்கே செல்கிறோம்?" என்று ஏதேதோ கேட்டுவிட்டு ஒரு இடத்தில் நின்றுவிட்டாள் லோகா. அப்போது தான் முதல் முதலில் பதிலளித்தாள் ராக்கம்மாள்.

"உன் அக்காளைக் கூடிய சீக்கிரத்தில் நீ பார்க்கலாம். அவள் அதுவரை உயிரைப் பிடித்துக் கொண்டிருக்கவேண்டும். நீ தாமதப்படுத்தினால் அவள் சடலத்தைத் தான் பார்க்கவேண்டும்" என்று கூறி விட்டு மேலே நடந்தாள்.

பின் லோகாவுக்கு ஒரு குற்ற உணர்வு. அக்கா செத்துக் கொண்டிருக்கிறாள். அவளைக் காணச் செல்லும்போது இதையெல்லாம் நினைக்கலாமா? பயத்தைப் போக்கிக்கொள்ள அக்காவைப் பற்றி நினைத்தாள்.

சற்றுத் தொலைவு போனதும் அந்தக் காட்டு வழியில் ஆள் நடமாட்டமிருப்பது போலத் தோன்றியது. மறைந்திருந்தபடி பல கண்கள் இருவரையும் வேவு பார்த்துக்கொண்டிருப்பது போலுமிருந்தது லோகாவுக்கு.

யாரோ நம்மைத் தொடர்கிறார்கள் என்று லோகா நினைக்கையில் அடர்த்தியாய் இருந்த மரங்களுக்கு உள்ளேயிருந்து மங்கை ஒருத்தி வெளிவந்தாள். கையிலே குழந்தை சகிதம் வந்துக் கொண்டிருந்தது அக்கா தான் என்று லோகாவுக்குத் தெரிந்தது.

காட்டுக்குள் வர எண்ணியபோது 'சாகும் தறுவாயில் உள்ளம் பூரித்து அக்கா பேசுவாள். அவளை வாரி எடுத்துத் தன் மடியில் போட்டுக்கொண்டு கதறுவோம்' என்றெல்லாம் கற்பனைச் செய்து வந்தாள்.ஆனால், இது எப்படிச் சாத்தியம்?

இருவரும் அப்படியே பார்த்தது பார்த்தபடி பிரமித்து நின்றார்கள்.

''வா லோகா! இப்போதாவது என்னைப் பார்க்கவேண்டும் என்ற ஆர்வம் உனக்கு வந்ததே'' என்றாள் அக்கா.

அக்காவைப் பார்த்ததில் சந்தோஷம் என்றாலும், அவளைப் பார்த்தால் சுக ஜீவனத்தில் இல்லை என்று பார்க்கும் போதே தெரிந்தாலும், உடல் நலனுக்கு ஒரு குறைச்சலும் இல்லை என்பதுத் தெள்ளத் தெளிவாக தெரிந்தது. அதிலும், நிச்சயமாகப் பாம்பு எதுவும் அவளைத் தீண்டியதாகத் தெரியவில்லை.

புதை சேற்றில் காலை வைத்து அது மெல்ல மெல்ல உள்ளே தன்னை இழுப்பது போல இருந்தது லோகாவுக்கு .

❖ ❖ ❖

## அத்தியாயம் எண்பத்தாறு

## நயவஞ்சக வலை

தமக்கை மரணப்படுக்கையில் இருக்கிறாள் என்று கேள்விப் பட்டவுடன் லோகாவுக்கு மன வேதனை ஏற்பட்டது. ஆனால், இப்போது நலமுடனேயேயிருந்த தன் தமக்கையை இப்படி நின்ற கோலத்தில் பார்த்ததில் அவளுக்கு இரத்தம் உறைந்தது.

''உன்னை நெடுநாளுக்குப் பின் கண்டதில் அகமகிழ்கிறேன்'' என்று அவள் கையைப் பிடித்தாள் அக்கா.

லோகா முதலில் ஏற்பட்ட தடுமாற்றத்தை ஓரம் தள்ளிவிட்டுச் சொன்னாள்: ''அக்கா இது என்ன கோலம்? நன்றாய்தானே இருக்கிறாய்.'' அக்காவைப் பார்த்த உற்சாகமே தெரியாமல்



லோகாவுக்கு அக்கா ஏன் பொய் சொன்னாள் என்று மட்டுமே எண்ணத் தோன்றியது. 'என்னைப் பார்க்க அப்படியென்ன திடீர் அன்பு?' என்று யோசித்தவளுக்குச் சிறிது அச்ச உணர்ச்சியும் ஏற்பட்டது.

சர்ப்பம் தீண்டியதாய் ஏன் பொய் சொன்னார்கள் என்று தெரிந்துகொள்ள வேண்டுமென்ற எண்ணம் தோன்றியது லோகாவுக்கு. அந்த விடையில்தான் தனது நிலையென்னவாகும் என்று அவளுக்குத் தெரியவரும் என்றும் யூகித்தாள். ஆனால், ஏதாவது விஷயம் இருக்கும். நிச்சயம் இருக்கும். பிறகு கேட்டுக் கொள்ளலாம் என்று விட்டுவிட்டாள். உண்மையில், அக்காவுக்குத் தன்னைக் கண்டதில் சந்தோஷமாய் இருந்தது போலத்தான் லோகாவுக்குத் தோன்றியது.

லோகாவின் கரங்களைப் பற்றியபடி அக்கா கூறினாள். ''இது நாள் வரையில் உன்னைத் தொடர்புகொள்ள நான் முயன்றதும் இல்லை; விரும்பியதும் இல்லை. ஆனால், உன்னைப் பார்க்க வேண்டும் என்று என்னவோ தோன்றியது. பொய் சொல்லாவிடில் அப்பா உன்னை விடுவாரா? இல்லை நீ தான் வருவாயா?'' என்றாள்.

காட்டிலேயே வாழ்க்கை நடத்திப் பல கஷ்டகாரியங்களில் ஈடுபட்டதனால், அக்காவின் தேகம் வறண்டு கெட்டிப்பட்டுக் கடினமாகியிருந்தது. அவள் பிடியிலிருந்து லோகாவினால் எளிதில் மீளமுடியவில்லை. அக்கா கையை எடுத்தபின், அவள் பிடித்த இடம் கன்றிச் சிவப்பாயிருந்தது.

பொய் சொல்லித் தங்கையை அழைத்துவந்ததை எண்ணி அவளே நொந்துகொள்கிறாள் போலும். 'நம்மோடு திரும்பி வர ஏற்பாடுகள் செய்யவேண்டும் என்ற எண்ணம் அவளுக்கு உதித்திருக்கும் போலிருக்கிறது' என்று நினைத்துக் கொண்டாள் லோகா. அது அக்காவின் சலிப்பில் வந்த சுரத்தேயில்லாத வார்த்தைகளில் தெளிவாகத் தெரிந்தது.

அக்கா கானக வாழ்வில் மிகவும் விரக்தி அடைந்திருந்தாள் என்பதில் சந்தேகமில்லை. என்னவெல்லாம் பற்பல இன்பக் கனவுகள் கண்டாள்! வாழ்வெல்லாம் தான் அரண்மனையில் வாழ்வதற்குரிய அரசகுமாரி என்று எண்ணிப் பெருமித ஆனந்தம் அடைந்திருந்தாள். ஆனால், அந்தப் பெருமிதமெல்லாம் ஒரு நொடியில், ஒரு உண்மை வெளிப்பட்டதில், தகர்ந்து போய் விட்டது. 'வாழ்க்கை வாழ்வதற்கு என்று நினைக்காமல் இப்படி வருமா வராதோ என்றிருந்த சுதந்திரத்தை எண்ணியே கஷ்டப்

படுகின்றனர் இந்தக் கூட்டத்தினர். அவர்களுடன் தான் நடத்திய வாழ்க்கை அக்காவுக்கு சலிப்புத் தட்டியிருக்கவேண்டும்' என்று லோகா நினைத்துக்கொண்டாள்.

நினைவுலகத்திலிருந்து வெளியே வந்து அவர்களைச் சூழ்ந்து வந்து அரவணைத்துக்கொண்டிருந்த இருட்டைப் பார்த்தாள் லோகா. ''அக்கா நான் நினைத்ததைவிட நேரம் அதிகமாகி விட்டது. நான் உடனே திரும்பவேண்டும்'' என்றாள்.

அக்காத் தயாராக பதிலை வைத்திருந்தாள். ''வந்ததுதான் வந்தாய். என் மக்களையும் பார்த்துவிட்டுப் போ. இன்னும் கொஞ்சம் தூரத்தில்தான் இருக்கிறார்கள்'' என்றாள். ''எப்படி யிருந்தாலும் இருட்டிவிட்டது. இரவு என்னோடு இருந்துவிட்டு பழையதையெல்லாம் பேசிவிட்டுக் காலையில் விடிவதற்குமுன் நீ கிளம்பலாம். அப்பா கண்டு பிடிப்பதற்குள் தஞ்சை சென்று விடலாம்'' என்று நம்பிக்கையும் கொடுத்தாள்.

இந்தக் கானகத்தில் தங்குவதற்கு லோகாவுக்கு அச்சமாகத்தான் இருந்தது. எனினும் அக்காள் குழந்தைகளைப் பார்க்கவேண்டும் என்ற ஆர்வமும், உடனடியாகக் காட்டுப் பாதையில் இருளில் பிரயாணிக்கவேண்டாமே என்ற நிம்மதியும் அவளைத் தலையாட்ட வைத்தது.

நிலவொளி ஏதோ புள்ளிக் கோலம்போலத் தரையெங்கும் வெள்ளையாய் விரிந்து கிடந்தது. அந்த பாதையில் அக்காவைக் காட்டுக்குள் தொடர்ந்தபோது லோகா அவளை நன்கு கவனித் தாள். அக்கா தேக ஆரோக்கியத்துடன்தான் இருக்கிறாள் என்று சந்தோஷித்தாலும், அக்காவின் நிலையைக் கண்டவுடன் அவள் பிரமித்துப் போனாள். காட்டு வாழ்க்கை ஒருவரை இப்படி மாற்ற முடியுமா என்ன?

அக்கா நகரத்தின் நாகரிகத்தில் மூழ்கியவள். அவளுக்கு கிராமத்தில்கூட வாழ்ந்து பழக்கமில்லை. கடந்த காலங்களில், தஞ்சையிலிருந்து பழூருக்குச் செல்லக்கூடப் பிரியப்பட மாட்டாள். அவ்வளவு சுகவாசி. அதனால் அவள் வாழ்க்கை முறையில் பெரும் மாற்றத்தைச் சந்தித்து இப்படி மாறி விட்டாளோ? வருடக்கணக்காக சாம்பிராணி போட்டுப் பூமுடித்த கூந்தலை இன்று இழுத்து முடிச்சுப் போட்டுக் கொண்டிருந்தாள். அக்கா தஞ்சையில் இருக்கும்போது எப்படியெல்லாம் அலங்கரித்துக் கொள்வாள்! பூச்சூடிக் கொள்வாள்! பொன்னிறப் புடவை அணிந்துக்கொள்வாள்! தன் மேனியை அலங்கரித்து அழகு படுத்தி வைத்துக் கொள்வதில் பெரும் பிரியம் அவளுக்கு. அவளை



இன்று இந்த கிழிந்த சேலையில் பார்க்கவே கஷ்டமாக இருந்தது. வாழ்க்கையிலே எல்லாம் இருந்தும் அவள் அதைச் சூனியமாக மாற்றிக்கொண்டு கஷ்டப்படுவதைக் காணச் சகிக்கவில்லை.

ஆனால், காட்டிலும் எப்படியோ சமாளித்துக்கொண்டாள் அக்கா என்பதில் ஐயமில்லை. காட்டு வாழ்க்கையில் என்றும் ஓட்டம்தான். இனி ஜன்மத்துக்கும் ஒளிவு மறைவின்றி வாழ முடியாது. பாதையில் எந்தத் திருப்பத்தில் என்ன நேருமோ என்ற பயமானது இனி நிரந்தரம்.

''அக்கா உன்னைத் திரும்ப அழைத்துச் செல்ல ஆசையாய் இருக்கிறது. வந்துவிடு அக்கா. இந்த ஆரண்யச் சிறையில் யார் இருப்பார்கள்?'' என்று ஒரு யோசனையை முன் வைத்தாள் லோகா.

''பல வருஷமாக இந்த இடத்தில் இருந்து விட்டேன். பாக்கி இருக்கும் சில நாளும் இங்கேயே இருந்து விடுகிறேன்'' என்றாள் அவள்.

சற்றுத் தூரம் இன்னும் காட்டுக்குள் புகுந்தபின் வேறுபலரும் அங்கே காட்சியளித்தார்கள். எல்லாரும் விந்தையாக இவளைப் பார்த்தார்கள். எதிர்ப்பட்ட பாண்டிய வீரர்கள் கிட்டத்தட்ட இருபதுபேர்தான் என்றாலும், லோகாவின் கண்களுக்குப் பல நூறு பேராக அவர்கள் தெரிந்தார்கள்.

இருளில் அந்த மனிதர்களின் முகங்கள் பார்க்க பயங்கரமாக இருந்தன. இருந்தவர்களில் முக்கால்வாசிப் பேர் ஒல்லியாயும் உயரமாயும் இருந்தார்கள். பருமனாயிருக்கும் யாரையும் பார்க்க முடியவில்லை. முகத்தில் முடிக்கு குறைச்சலில்லை- தலையில் குறைச்சலிருந்தாலும். மேலும், கூட்டத்தில் நாலைந்து பெண்களும் இருந்தார்கள்.

இந்தக் காட்டில் வாழவும், அதுவும் தேச விரோதச் செயல்களைச் செய்வோராய் வாழவும் கற்றுக்கொண்டு திறமையும் பெற்றிருந்தார்கள். அந்தத் திறமையில்லாவிடில் ஒரு நாள்கூட இந்தக் கானகத்தில் கழிப்பதே கஷ்டம். ஆனால், ஒன்று மட்டும் லோகாவுக்குத் தோன்றியது. தனது வரவுக்கு ஆவலாக வழி மேல் விழி வைத்து எல்லாரும் காத்திருந்தது போல ஒரு உணர்வு அவளுக்கு ஏற்பட்டது.

''வா லோகா'' என்றார் ஒருவர். லோகாவும், தன் பெயர் அவருக்கு எப்படித் தெரிந்தது என்று வியக்கையில், அது அவளுடைய அத்தான் என்று தெரிந்தது. பழைய மதுராந்தகர் இப்போது 'புஜங்கன்' என்ற பெயர் மாற்றம் பெற்றிருந்தார்.

பெயர் மட்டுமல்ல. ஆளும் தான். அவருடைய முகத் தோற்ற மானது அச்சத்தை உண்டாக்கியது. 'அத்தான் எப்படி மாறி விட்டார்? முகத்தில் திருநீறு கூட இல்லையே? எப்படியொரு சிவப்பழமாக இருப்பார் தஞ்சையிலே?'

குழந்தையின் அழுகைச் சப்தம் கேட்டுத் திரும்பினாள் லோகா.கஷ்டப்பட்டுத் தூங்காமல் இருந்த இரு குழந்தைகளைக் கண்டாள். அவர்களை அடையாளம் தெரிந்து கொண்டதும் வந்ததிலிருந்து முதல் முறையாக குதூகலம் உண்டானது அவளுக்கு.

ஆனால், இந்தக் குழந்தைகள் அக்காவைவிட மோசமா யிருந்தன. வாழையடி வாழையாகச் சங்ககாலத்திலிருந்து வந்த வீரபாண்டியர் குலத்தின் வாரிசுகள் இவர்கள் என்று சொல்ல முடியாது. தஞ்சைத் தெருக்களில் திரியும் பிச்சைக்காரக் குழந்தை களைப் போல இருந்தன.

அருகில் வந்து குழந்தையின் முகத்தைப் பார்த்து விட்டு, ''அக்கா! உன்னை அப்படியே உரித்து வைத்திருக்கிறது'' என்றாள் லோகா.

பெரியவனைத் தஞ்சையில் லோகா பார்த்திருந்தாள். ஆனால், இளையவன் காட்டில் பிறந்திருந்தான். பாவம் ஆயிரம் தாதிகள் பிரசவம் பார்க்க அரசகுலமெல்லாம் ஆவலுடன் வெளியே நிற்க, அக்கா குழந்தை பெற்றிருக்க வேண்டும். ஆனால், நாதியின்றிக் காட்டில் பெற்றெடுத்தாள் இவனை.

லோகா வந்ததைப் பார்த்துவிட்டு அனைவரும் கலைந்தனர். தத்தம் வேலைகளைச் செய்யச் சென்றுவிட்டனர். அப்போது அக்காவின் குழந்தைகளிடம் சென்றாள் லோகா. பெரியவன் அவளைப் பார்த்து வெட்கத்துடன் சிரித்தான். அவனை வாரி அணைத்து உச்சி முகர்ந்தாள்.

''சித்தி என்று கூப்பிடு'' என்றாள் லோகா.

அந்த சிறுவன் பேசாமல் நின்றான்.

''அவன் ஊமையடி'' என்றாள் அக்கா

கண்களில் நீர் பெருக்கெடுத்தது லோகாவுக்கு. ''ஊமை ராணியின் வாரிசல்லவா. அவள் அம்சம் அவனுக்கு அப்படியே வந்துவிட்டது அக்கா. இவனை தெய்வமாக நின்று நிச்சயம் அவள் காப்பாற்றுவாள்.''

அக்காவுக்கு கோபம் பொத்துக்கொண்டு வந்தது ''போடி பைத்தியக்காரி. ஊமையாம் ராணியாம். அவள் வாழ்ந்ததும் சோழருக்கே, இறந்ததும் சோழருக்கே!''



ஊமை ராணியை இகழ்ந்த அக்காவை வெறுப்புடன் பார்த்தாள் லோகா. அவளுடைய எண்ணங்களைப் பற்றிக் கவலையில்லாமல் அக்கா தொடர்ந்தாள். ''சோழரின் நன்றியைப்பற்றி சொல்லவா வேண்டும்? கேள். என் கணவரின் தாயால்தான் தாங்கள் வாழ் கிறோம் என்று ஊரறிய ஒப்புக்கொண்டு, அவளுக்குக் கோயில் கட்டி வழிபடும் அவர்கள், அவளுடையக் குழந்தைகள் இருவரை யும் காட்டில் காட்டுமிராண்டிகள் போல வாழ விட்டனர்'' என்றாள்.

அவள் தன் கண்களில் தீப்பொறி பறக்க ''சோழர் மட்டுமல்ல, பார்த்தாயா, உன் தகப்பன் சாமர்த்தியத்தை? மகளை ஓட ஓட விரட்ட எப்படித்தான் மனம் வந்ததோ?'' என்றாள். ''நன்றிகெட்ட சோழர்கள் வேண்டாமென்றாலும் அப்பா அங்கேயே ஒட்டிக் கொள்ள நினைக்கிறார். நம் குலத்தை ஒன்றுமில்லாமல் செய்தவரிடம் நமக்கென்ன வேலை?''

வெள்ளமெனப் பொங்கி வந்தக் கோபத்தை அடக்கிக் கொண்டு பொறுமையோடு பேசினாள் லோகா. ''அக்கா! அரசியல் என்பது அவரவர் சொந்த விஷயம். அதில் நீ தலையிடல் ஆகாது. உனக்குப் பிடிக்கவில்லையா. நீ ஒதுங்கியிரு''

''ஒதுங்கித்தானடி இருக்கிறேன். எனக்கு வாழ்வெல்லாம் நரகம் எனும் கொடுந்தண்டனையைக் கொடுத்துவிட்டாரே அப்பா.''

''அக்கா! இது அடுக்கவே அடுக்காது. நீயாக விரும்பி வந்தாய். உன் மனதை மாற்ற முயற்சி செய்து, பின்தொடர்ந்த தந்தை யாரைக் கொல்லாத குறையாகத் திரும்பி அனுப்பினார்கள். சிறிது யோசித்துப் பார். அக்கா, அப்பாவின் பேரில் குற்றம் இல்லை. தனது மனசாட்சி அப்படி செய்யச் சொன்னால் அவர் என்ன செய்வார்?''

''மனசாட்சியும் ஆச்சு. நம் குலம் நாசமாய்ப் போனதும் ஆச்சு!'' என்றாள் அக்கா.

''பாண்டியர் அவ்வளவு வைராக்கியப் புருஷராயிருந்தால், போர் செய்ய வேண்டியதுதானே? நாட்டை ஸ்தாபிக்க இங்கே தானா இடம் அகப்பட்டது?'' என்றாள் லோகா.

''ராக்காமா! இவன் வாய்த்துடுக்கைப் பார்த்தாயா? நான் பார்க்க வளர்ந்தவள் இன்று என்னையே எதிர்த்துப் பேசுகிறாள்'' என்று கோபப்பட்டாள் அக்கா.

அக்காவின் போக்கைப் பார்த்து, லோகாவுக்கு மனதே சரி யில்லை. தந்தையின் சொல்லுக்கு அடங்காமல் பொல்லாங்கு

தேடிக்கொண்டாள். இப்படிக் காட்டிலிருந்தாலும் ஆணவமும் அகம்பாவம் தணியாத பெண்ணாய் விளங்குகிறாளே! அவள் அவர்கள் வாழ்க்கையிலிருந்து வெளியேறியிருக்கலாம். ஆனால், அவள் பழுவூர் அரசுக்கு இழைத்த தீங்கு இன்னமும் நிலைத்திருக்கிறது. சோழர்களின் பக்கபலம் என்றிருந்தவர் அப்பா. இன்று ஓரங்கட்டப்பட்டார். இவள் காட்டுக்கு ஓடிச் சென்றச் சம்பவம் இல்லாதிருப்பின் இந்த நிலை வந்திராது. இவ்வளவு துன்பமும் அவளுக்கு ஏற்பட்டிராது. ஆனால், இதையெல்லாம் எப்படி அவளுக்குப் புரியவைப்பது?

"சரியக்கா! நான் சண்டை போட வரவில்லை" என்று பின் வாங்கினாள் லோகா. அதற்கு மேல் சண்டையை வளர்க்க வேண்டாம் என்ற எண்ணத்தில் உறங்கச் சென்றார்கள். அதற்கு முன், அவளுக்குக் கொடுக்கப்பட்ட எளிய உணவை நிராகரித்து விட்டாள் லோகா. தாகத்துக்கு மட்டும் தண்ணீரைக் குடித்து விட்டு உறங்கச் சென்றாள்.

அதிகாலையில் எல்லோருக்கும் முன் லோகா எழுந்து விட்டாள். காட்டில் எழுந்த பலவகைச் சப்தங்கள் அவளைத் தூங்கவிடவில்லை. படுத்தபடியே சிந்தித்தாள். முதலில் லோகாவுக்கு அக்காளைச் சுகமாகப் பார்த்தது பேரானந்தம். உள் ஓடும் ரத்தம் ஒன்றல்லவா? அக்கா தன்னுடன் தஞ்சைக்குத் திரும்புவாள் என்கிற கனவு கூட முதலில் லோகாவுக்கு இருந்தது. ஆனால், அது இப்போது நடக்காது என்று தோன்றியது. மனதில் பற்பல கேள்விகள் எழுந்தன. நன்றாய் இருந்தவளை ஏன் மரணப் படுக்கையில் இருப்பவள் என்று பொய் சொன்னார்கள்? கடும் நோய்வாய்ப்பட்டு 'இன்றைக்கோ நாளைக்கோ" என்றிருந்தாள் என்று சொன்னவுடன் யோசிக்காமல் வந்தோமே. வஞ்சம் நிறைந்தவருடன் சேர்ந்த தமக்கையும் இப்படி மாறிவிட்டாளே?

பின் திடீரென வீட்டுக்குப் போகவேண்டுமென்று அவளுக்கு விருப்பம் உண்டாயிற்று . "இனி இவளுடன் ஒரு கணமும் இருக்கக் கூடாது" என்று முடிவெடுத்தாள். அக்காவைத் தட்டி எழுப்பினாள் "அக்கா நீ நலமாய் இருப்பதில் சந்தோஷம். ராக்கம்மாளைக் கூப்பிடு. நான் திரும்ப ஏற்பாடுகள் செய். அப்பா தேடுவார்"என்றாள்.

"வந்தது தான் வந்தாய். இன்னமும் ஓரிரு நாள் இருந்துவிட்டு போயேன்" என்றாள் அக்கா.

"என்ன அக்கா இது? காலையில் நான் திரும்ப ஏற்பாடு செய்கிறேன் என்று சொன்னாயே?" என்று லோகா பதறினாள்.



"தங்காய்! என்னிடம் உனக்கு இன்னும் நம்பிக்கை வரவில்லையா?" என்று அக்கா பரிவு ததும்பிய குரலில் கேட்டாள்.

"அக்கா! இதோ பார்! உனக்கு உடம்பு சரியில்லை என்றுதான் உன்னைப் பார்க்க இங்கே வந்தேன். ராக்கம்மாள் வராவிட்டாலும் பரவாயில்லை. நான் திரும்பச் செல்கிறேன். யார் தடுத்தாலும் இனிமேல் கேட்கமாட்டேன்" என்று எழுந்தாள் லோகா.

அக்காவின் முகம் மாறுகிறது என லோகா அறிந்தாள். கோபப்படுவாள் என்று நினைத்தாள். ஆனால், அக்கா சிரித்தே விட்டாள். "போடி பைத்தியக்காரி. உன்னை உடனே திரும்ப அனுப்பவா இவ்வளவு கஷ்டப்பட்டு அழைத்து வந்தோம்?" என்றாள்.

லோகாவுக்குத் தலையில் இடி விழுந்தது போலாகி விட்டது.

அக்கா தொடர்ந்தாள். "செஞ்சோற்றுக் கடன் என நினைத்துத் தவறான இடத்தில் இருக்கிறார் அப்பா. மகள்களின் வாழ்கையை விட மகத்தானது சோழர்களிடம் அடிமைத்தனம் என எண்ணுறார். மற்றவர்களைப் பற்றிய எண்ணமே அவருடைய நெஞ்சில்லாது. அவ்வளவு சுயநலம் பிடித்தவர் அப்பா. அவருக்கு தனிமை என்றால் என்னவென்று புரியவைக்க வேண்டும் என்றுதான் உன்னை அழைத்து வந்தேன்" என்றாள் அக்கா.

முதலில் காட்டுக்குள் வந்தபோது அக்காவால் தீங்குவராது என்று நினைத்து தைரியமுற்றாள் லோகா. அக்காவைச் சென்று பார்த்து, அவளும் நாட்டுக்குத் திரும்பிவர அவளுடைய ஆதரவைப் பெறலாம் என்று எண்ணிய தன்னுடைய பிசகை நினைக்க லோகாவுக்கு இப்போது பயமாயிருந்தது. தானும் அல்லவா மாட்டிக்கொண்டோம். ஒரே ஒரு கணம் பொறுமையாய்ச் சிந்தித்திருந்தோமென்றால் இந்த நிலை நமக்கு ஏற்பட்டிருக்காதே என்று லோகா தன் அவசரப் புத்தியைக் குறித்துச் சிறிது வெட்கம் அடைந்தாள். பயமும் கொண்டாள். ஒரு நொடிப் பாசம் கண்ணை மறைத்ததில் இனி என்னவெல்லாம் இழப்புகள் வருமோ என்று அடித்தொண்டையில் சோகம் அழுத்தியது.

அக்கா மனம் இளகுவாள் என்றால் அப்படி இல்லையே. கானகத்து வாழ்க்கை அவள் மனதைக் கல்லாக்கி விட்டது. அக்கா தன்னைப் போலப் பாசவலையில் அகப்பட்டுக் கொள்ளவில்லை. ஒரு வேளை முரண்டு பிடிப்பது போல அக்காவுக்குத் தோன்றாமல் மீண்டும் தஞ்சைக்கு அழைத்துப் போவார்கள் என்று எண்ணி, "அக்கா பாவம் அப்பா! அந்த முதியவர் மீது ஏன் பழியைப் போடுகிறீர்கள்? அவர் என்ன செய்வார்?" என்று இரக்கம் ததும்பிய

குரலில் கூறினாள் லோகா. "என் கண்களைக் கட்டி என்னை மீண்டும் கூட்டிச் சென்று விடுங்கள். நான் ஓடிப் போய் விடு கிறேன்" என்று கெஞ்சினாள். அவளது வார்த்தைகள் வாயிலிருந்து வெளிவந்ததுதான் தாமதம்.

"அந்த கிழவனுக்கா பரிந்து பேசுகிறாய்? அழகுதான். நம் பழுவூர் அரசை வேரோடு சாய்க்க இந்த சோழர்கள் முடிவு செய்து விட்டனர். அப்பா மீண்டும் மீண்டும் அவர்களின் காலடியில் சென்று விழுகிறார். அதை நாமிருவரும்தான் தடுக்க வேண்டும்" என்றாள் அக்கா. காட்டுவாழ்க்கையில் அவளது உடம்பும் உள்ள மும் வெகுவாக நொந்திருந்தன என்பதைத் தெரிந்து கொண்டாள் லோகா. அவள் பேச்சுக்கெல்லாம் விரக்தியே காரணமாயிருக்கும்.

"பழுவூர் நாட்டுக்கு அப்படிப்பட்ட ஆபத்து நேரிடுவதா யிருந்தால், அதைத் தந்தையார்தான் பார்த்துத் தடுக்க வேண்டுமே தவிர, இந்த அபலையினால் என்ன செய்ய முடியும்? என்னைப் பொறுத்தவரை சோழர்கள் நமக்கு செய்த நல்லதையும் ஒரு நாளும் நான் மறக்க மாட்டேன். அதற்கு விரோதமான காரியம் எதுவும் நான் செய்ய மாட்டேன்!" என்றாள் லோகா.

அவள் பேச்சு அக்காவின் செவிகளில் விழுந்ததாகவே தெரிய வில்லை. "நீயும் வந்துவிட்டபடியால் அப்பாவும் எங்களுடன் சேர்ந்து தான் ஆகவேண்டும். தனியாய் என்ன செய்வார்? பின் அவருடைய செல்வாக்கை வைத்து இந்தச் சோழர்களுக்கு நல்லதொரு பாடம் கற்பிக்கலாம். நம் குலம் வளர இது தான் ஒரே வழி" என்றாள் அக்கா.

அக்கா சொன்ன வார்த்தைகளால் லோகாவுக்கு விவரிக்க முடியாத அருவருப்பு உண்டானது. இன்றைய தினம் அவளுடைய உள்ளத்திலே அன்பைக் காட்டிலும் அசுரத்தனமே மேலிட்டுப் போயிருந்தது.

"எத்தனை நாள் நம் குடியைக் கெடுக்க நீ நினைத்தாய்?" என்னும் வினா லோகாவின் நாவிலே வெளிவரத் துடித்துக் கொண்டிருந்தது. ஆனால்,வெளிவரவில்லை.

அதற்கு பதிலாக லோகா "அக்கா நினைத்துப்பார். நீ சென்ற அந்த நாளிலே அப்பா என்ன பாடுபட்டார்; மனம் வெதும்பினார். பழுவூர்க் குடும்பச் சண்டைகள் அம்பலத்திற்கு ஏறிய அந்த நாளிலே வீட்டுக்குள் சென்று கதவடைத்தவர்தான்" என்றாள். "அப்பாவை மீண்டும் சோழர்கள் ஏற்றுக்கொள்ளும் அறிகுறிகள் பன்முறை உண்டாகியும், நீ காட்டிலிருந்துகொண்டு வேறேதாவது அசிங்கத்தை நிறைவேற்றி திரும்பவும் சபையில் அவருக்கு கஷ்டம்



ஏற்படுமோ என்று பயந்தே அதை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை" என்று விளக்கினாள்.

"நீ என்ன பேசினாலும் நான் ஒப்புக் கொள்ளப் போவதில்லை" என்றாள் அக்கா.

"என் மேல் உனக்குக் கடுகளவும் பிரியமில்லை. பின் எதற்காக என்னை அழைத்து வந்தாய்?" என்று வினவினாள் லோகா.

"உனக்கு அவசியம் தெரியத்தான் வேண்டுமா? உனக்குக் கலியாணம் ஏற்பாடு செய்திருக்கிறேன்"

"என்ன?" என்று லோகா அதிர்ந்தாள்.

" ஆம்! என் கணவரை நீ மணக்க வேண்டும்."

லோகா தன் செவிகளைப் பொத்திக் கொண்டு "அக்கா இது என்ன பேச்சு?" என்று கேட்டுவிட்டு அக்காவின் தோள்களைப் பற்றி ஆத்திரத்தில் குலுக்கினாள்."அக்கா! அந்த வார்த்தையை மட்டும் சொல்லாதே!"

அக்கா அதற்கெல்லாம் மசியவில்லை. "நான் சொல்வதை ஒப்புக்கொள். எப்படியிருந்தாலும் மீண்டும் நீ தஞ்சைக்குள் புகுவதற்கு வாய்ப்பில்லை" என்று மிரட்டினாள்.

அந்தச் சில நிமிட நேரத்தில் தன்னுடன் பிறந்து வளர்ந்த அக்கா இவளல்ல. தன் வீட்டில் பன்னெடுங்காலம் வாழ்க்கையை நடத் தினாளே அக்கா; அது இவள் அல்ல. இவள் காட்டில் வாழும் பேய், பிசாசு இனத்தைச் சேர்ந்தவள். இவளிடம் பேசிப் பிரயோஜனம் இல்லை எனத் தெரிந்தது.

தரையில் அமர்ந்து குலுங்கிக் குலுங்கி அழுதாள் லோகா.

❖ ❖ ❖

## அத்தியாயம் எண்பத்தேழு
## 'எங்கே போனாள் லோகா?'

குந்தவை வந்து செல்லும் வரை விஷயத்தை வெளியே விடாமல் இருந்தார்கள் பழுவூர் அரச குடும்பத்தினர். வயதுப் பெண்ணைக் காணவில்லை என்று விளம்பரப் படுத்திக் கொள்ளவா முடியும்? ஊரே சிரிக்கும்; அவள் அக்கா சென்றதற்கே அப்படிக் கைகொட்டிச் சிரித்தது.

நாட்டின் நடப்புகள் எல்லாமும் பொது ஜனங்களின் விமரிசனத்துக்கு உட்பட்டவை. அதை மக்கள் புகழ்ந்திருக்கலாம். இகழ்ந்தும் இருக்கலாம். ஆனால், பேச உரிமையுண்டு. வீதியில் பேசத் தடை விதித்தால், அதைப் பற்றி தத்தம் இல்லங்களிலே நாலு சுவர்களுக்கு இடையே பேசிப் பரவச் செய்துவிடுவார்கள்.

பெண் கேட்க வந்த குந்தவை பெண்ணையே காணவில்லை என்று அறிந்தவுடன் நேரே பிரதமர் அலுவலகத்துக்குச் சென்றாள். பிரதமர் உடனே மாறனையும் அடியானையும் அழைத்துக் கொண்டு பழுவூர் அரண்மனைக்கு வந்து சேர்ந்தார். உள்ளே பழுவேட்டரையரின் நலம் விசாரிக்கச் சென்ற பிரதமர் மற்ற இருவரையும் அரண்மனையைச் சுற்றிப் பேச்சுக் கொடுத்துத் தடயங்களைச் சேகரிக்கச் சொன்னார்.

பழுவூர் அரசரிடம் அவருடைய பணியாட்கள். ''எல்லா இடங்களிலும் தேடியாயிற்று. இன்னமும் கண்டுபிடிக்க முடியவில்லை'' என்று தெரிவித்தனர்.

அவள் அக்காவின் நடவடிக்கையிலேயே இடிந்துபோன பழுவூர் அரசருக்கு இப்போது லோகாவின் செயலில் மனசே ஆறவில்லை. அவருக்குத் தன் எதிர்காலத்தின் மீதிருந்த ஒரே நம்பிக்கையும் தகர்ந்து போனது. இனியும் மறைத்து வைப்பதில் பயனில்லை. உடல் இருந்த நிலையில், தானாகத் தேட முடியாது என்று முடிவெடுத்தார் பழுவேட்டரையர். சரியாக அந்த நேரம் பார்த்துப் பிரதமரின் விஜயமும் இருந்தது.

''உண்மையை விசாரித்து உணரும் பொருட்டு எல்லோரையும் மாலையில் தன் அலுவலகத்துக்கு வரும்படி சொல்லியிருக்கிறேன்'' என்ற பிரதமர், பழுவூர் அரசரும் பொழுது சாயும்போது வர வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். தனது சொல்லைத் தட்டக் கூடியநிலையில் அவரில்லை என்று தெரிந்தும், தானாகத் தேடுகிறேன் பேர்வழியென்று அவர் தலையிட்டு ஏதேனும் குளறுபடி செய்யாமல் இருக்க வேண்டுமென்பது பிரதமரின் கவலை.

வெளியில் வந்த பிரதமர் தமது சீடனுடன் மாறனும் நிற்கக் கண்டார். ஒரு வார்த்தையும் பேசவில்லை. ஆனால், கண்களில் பரிமாறிக்கொண்ட செய்தி 'கண்டுபிடித்துவிட்டோம்' என்பது தான்.

பிரதமரை உள்ளே செல்லச் சொல்லிவிட்டுப் பழுவூர் அரண்மனைத் தோட்டத்தில் நுழைந்த மாறனும் அடியானும் பேசிக் கொண்டனர். ''அப்படி இப்படி வெளியே சென்று விடமுடியாது



அரசகுலம். இந்த தஞ்சைக்குள்ளேயே கூடப் பாதி அரசகுலப் பெண்களுக்கு வழி கண்டுபிடிக்க முடியாது'' என்றான் அடியான்.

''ஆமாம், இந்தக் கடத்தல் நெடு நாட்களாகத் திட்டமிட்டது போலிருக்கிறது. இல்லாவிட்டால் இப்படித் தடயம் ஏதுமில்லாமல் எப்படிக் கடத்திச் செல்லமுடியும்?'' என்றான் மாறன்.

முடிச்சை அவிழ்க்க எங்கே தொடங்குவது என்று இருவரும் யோசித்திருக்கையில் மாறன் பேசினான் ''யாரேனும் ஏதாவது செய்தி கொண்டு வந்திருக்கவேண்டும். யாரேனும் இளவரசியைக் காண வந்திருந்தால் தாதிப் பெண்களுக்கு நிச்சயம் தெரிந்திருக்கும். இளவரசியை யாரும் கடத்திச் செல்லவில்லை; அவள் தானாகவே தான் சென்றிருக்கிறாள்'' என்று சொன்னான் மாறன்.

அதை அடியான் நம்பியதாகத் தெரியவில்லை. ''அப்படித் தன் தந்தையையும் வீட்டையும் விட்டுச் செல்லக் காரணம் என்னவாயிருக்கும்?'' என்று கேட்டான் அடியான்.

''அடியானே! நீரெல்லாம் என்ன ஒற்றன்? நன்றாய் யோசியுங்கள். கடத்தல் என்றால் என்ன? அவளைச் சில மனிதர்கள் பலவந்தமாக அழைத்துச் சென்றிருக்க வேண்டும். ஆனால், பழுவூர் அரண்மனையில் அப்படி நடக்கும் வாய்ப்பு அதிகமில்லை. அதனால் அவள் நிச்சயமாக விரும்பித்தான் சென்றிருக்க வேண்டும். அவளை பலவந்தமாகக் கைப்பற்றிக் கொண்டுச் சென்றிருக்கிறார்கள் என்று தோன்றவில்லை. குதிரைமீது பறந்து வந்து அவளைக் கடத்திச் சென்றிருந்தால் பலரும் அதைத் தடுக்க முற்பட்டிருப்பார்கள். பழுவூர் மாளிகையும் அப்படி ஒன்றும் காவலற்றுப் போகவில்லையே '' என்று விளக்கினான்.

அடியானுக்குப் புரிந்தது. ''அவள் சென்றிருந்தால் மந்திரத்தினால் அவளை மயக்கிச் கூட்டிச் சென்றிருக்கவேண்டும். இல்லை யாரோ தெரிந்தவர் வந்து கூப்பிட்டதால்தான் சென்றிருக்கிறாள். இல்லையென்றால் அவளுக்கு நெருக்கமானவரின் விருப்பம் என்று சொல்லி எதிரிகள் கூப்பிட்டுச் சென்றிருக்க வேண்டும்'' என்று சொல்லிய வைணவன் கொஞ்சம் மூச்சுவிட நிறுத்தினான்.

அவன் கடைசியில் சொன்ன வார்த்தைகளிலிருந்து, நொடியிலே அனைத்தையும் ஊகித்தறிந்த மாறன் ''ஆகா. நெருக்கமானது யார்? அவள் அக்கா தான். ஆம், ஒரு முறை தன் தமக்கையின் உயிருக்காகக் கெஞ்சிக்கொண்டு வந்தாள் அல்லவா? அந்தத் தமக்கை வந்து கூப்பிட்டு இருக்கவேண்டும். அப்போது பாண்டியருக்கு இதில் ஏதேனும் சம்பந்தம் இருக்குமா? அதையும் தெரிந்து கொள்ளத் தான் வேண்டும்'' என்று முடிவெடுத்தான்.

பழுவூர் அதிகாரி ஒருவர் வருத்தமான முகத்துடன் அவர்களைப் பின் தொடர்ந்து கொண்டிருந்தார். அவரிடம் சொல்லி லோகா வுக்குப் பணிவிடை செய்யும் தாதிப் பெண்களையெல்லாம் ஓரிடத்துக்கு அழைத்தனர்.

தாதிப் பெண்கள் ஒன்று சேர்ந்து விட்டனர்.

''இளவரசி காணாமல் போகும் முன் யாரேனும் இளவரசியைச் சந்திக்க வந்தார்களா?'' என்று கேட்டான் அடியான் .

எல்லோரும் ஒன்றும் அறியாமல் விழித்தனர். ஒரு பெண் மட்டும் 'சொல்லலாமா வேண்டாமா' என்று தவித்தது அவள் உடல் நடுக்கத்தில் தெரிந்தது. அவள் நெற்றியில் முத்து முத்துக் களாய் வேர்வைத் துளிகள் அரும்பின. பொறுப்பின்றிச் செயல் பட்டதற்காக அந்தத் தாதிப் பெண்ணைக் கண்களால் சுட்டெரித் திருப்பான் மாறன். அடியானும் அந்த பெண்ணைப் பார்த்து விட்டான்.

அவளைத் தீர விசாரிக்க முடிவெடுத்தனர். மற்றவரையெல்லாம் அனுப்பிவிட்டு அப்பெண்ணிடம் மாறன் கேள்விகளை ஒன்றன் மேல் ஒன்றாய் அடுக்கிக் கொண்டிருந்தான்.

பதிலளித்த அந்த பெண்ணின் குரல் நடுங்கியது.

''ஒரு கிழவி வந்தாள்'' என்றாள்.

''ஆகா! நிச்சயமாகத் தமக்கை வரவில்லை. அப்போது நம் யூகத்தில் தவறு இருக்குமோ?'' என்ற சந்தேகம் வந்தது மாறனுக்கு.

வந்த பெண்ணின் அடையாளம் சொன்னாள் அந்த தாதிப் பெண்.

உடனே அடியான் முகம் மலர்ந்தது. ''எனக்கு அவ்வை அடையாளம் காண முடிகிறது. அது ராக்கம்மாள். படக்கோட்டி முருகையனின் மனைவி'' என்றான்.

''ஆகா! பாண்டியரின் வாசம் அடிக்கிறதே'' என்று உரக்கச் சொன்னான் மாறன்.

அக்காவுக்குக் கஷ்டம் என்று ஏதாவது பொய்ச் செய்தி கொண்டு வந்திருப்பாள். போராளிகள் இப்படி ஏதாவது ஓர் உபாயத்தைக் கடைப்பிடித்துத் தானே தங்கள் வேலையைச் செய்யவேண்டும்?'' என்றான் அடியான். பேச பேசப் பாண்டியர்தான் லோகாவைக் கடத்தியிருக்க வேண்டும் என்று ஊர்ஜிதப்படுத்திக் கொண்டனர்.

மாலையில் அநிருத்தர் தலைமையில் சபை கூடியது. லோகாவின் கடத்தலை யாரும் எதிர்பார்க்கவில்லை. திடும் பிரவேசமாக



உள்ளே புகுந்த இந்தப் பிரச்சனையை எப்படிச் சமாளிப்பது என்று மந்திராலோசனை நடந்துகொண்டிருந்தது.

பிரதமரைப் போன்ற முதிர்ந்த அறிவாளி இந்த நாட்டில் இல்லை. விவேகமுடையவர். தொலைநோக்குப் பார்வையுடன் இன்றையக் கஷ்ட நஷ்டங்களுக்கு ஈடுச் செய்யும் யோசனைகளை உருவாக்கும் திறன் கொண்டவர். சிற்சில இடங்களில் தோல்வியைத் தழுவினாலும், பெரும்பாலும் அவரது யூகங்கள் சோழருக்கு வெற்றிப் பாதையையே வகுத்துக் கொடுத்திருந்தன.

பிரதமரின் அரண்மனை மேல்மாடத்துக் கதவுகள் திறந் திருந்தன. அதில் இரண்டு வீரர்கள் காவல் நின்றனர். அதை யொட்டிய அறையில் அவசரக் கூட்டம் கூட்டியிருந்தார் பிரதமர். பழுவேட்டரையர் இன்னமும் வந்து சேரவில்லை. வேண்டு மென்றே அவர் வர வேண்டிய நேரத்தைச் சற்று மாற்றிச் சொல்லி யிருந்தார் பிரதமர். பழுவூர் அரசர் வருமுன் சில விஷயங்களைப் பேசி முடிக்க எண்ணியிருந்தார்.

மாலையில், பழுவூர் அரசர் வரும் முன்பே கூட்டம் தொடங்கி விட்டது. மாறன், வந்தியத் தேவன், ஆழ்வார்க்கடியான் ஆகியோர் மட்டுமே வந்திருந்தார்கள். முக்கியமாகப் பொன்னியின் செல்வர் வரவில்லை.

ஒரு பெண்ணின் கடத்தலுக்கு பிரதமர் இவ்வளவு முக்கியத் துவம் கொடுத்திருந்தார் என்றால் பலருக்கும் அதிசயம்தான். பேச்சுக்கு வேண்டுமென்றால் மூவுலகையும் ஒரு குடையின் கீழ் ஆளும் சோழ மன்னர் எனலாம். ஆனால், உண்மையில் திரிகோண மலையிலிருந்து விந்திய மலை வரையில் தான் சோழர்களின் ஆதிக்கம் இருந்தது. ஆனால், அதுவே பெரிய சாம்ராஜ்யம். உலகின் இந்த பாகத்தின் பெரிய பரப்பளவை ஆண்டவர்கள் சோழர்கள். அவர்களின் சார்பில் முடிவுகளை எடுத்தவர் பிரதமர்.

முதலில் பிரதமர் பேசினார். ''திருமலை உனது யூகம் என்ன? அவளுக்கு ஏதேனும் காதல் இருக்கும் என்று வதந்தி உண்டா? தந்தையார் கடுமையானவர் என்று அவள் ஓடிச் சென்று காந்தர்வத் திருமணம் செய்திருக்கலாம் அல்லவா?'' என்றார்.

''ஏதாவது காதல் விவகாரமாயிருக்குமா?'' என்று கேட்டு அர்த்த புஷ்டியுடன் மாறனை ஒரு பார்வைப் பார்த்தார். அந்த நொடியில் மாறனுக்கு எழுந்து சென்று அந்தப் பிரதமரின் கழுத்தை நெரிக்க லாம் என்று கூடத் தோன்றியது. என்னென்னமோ அனாவசிய மான கேள்வியெல்லாம் கேட்டுவிட்டுத் தன்னை உற்றுப் பார்த்து விட்டு அவர் பேசியது அவனுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

ஆனால், அடியான் புரிந்து கொண்டான். லோகா காணாமல் போனதற்கும் இந்த கேள்விக்கும் சம்பந்தம் இல்லை. இந்த கேள்வி பின் என்றாவது,எதற்காவது உபயோகமாகும் என்றுதான் பிரதமர் கேட்கிறார் என்று.

''குருநாதரே! அப்படியில்லை. இதில் ரவிதாசனின் கை வண்ணம் அப்பட்டமாகத் தெரிகிறது'' என்றான் அடியான்.

''ஆமாம், ஆமாம்'' என்று ஒப்புக்கொண்டார் பிரதமர். ''ஆனால், இந்த விஷயத்தைப் பழுவேட்டரையர் வரும் முன்பே கேட்டுத் தெளிவுபடுத்திக் கொள்ள விரும்பினேன். அவள் விருப்பத்துடன் சென்றாள் என்று அவர் முன்னால் நான் சொன்னால் பழுவூர் அரசர் எனது நாவைத் துண்டித்துவிடுவார். அவரவர் வீட்டுப் பெண்களைப் பற்றிக் களங்கம் வருவதை யார் தான் கேட்டுக்கொண்டிருப்பார்கள், பொறுமையாக?'' என்றார்.

ஆழ்வார்க்கடியானைப் பார்த்துப் பிரதமர், ''திருமலை, நீ என்ன நினைக்கிறாய் என்று தெளிவாய்ச் சொல். நிச்சயமாக நாட்டின் அரசியலுக்கும் இதற்கும் சம்பந்தமில்லாமல் இருக்காது'' என்றார் பிரதமர்.

''அய்யனே. ஒரு தரம் தவறினால் மூன்றுதரம் தவறுமாமே. முதலில் நந்தினி சென்றாள். பின் மதுராந்தகனின் மனைவி. மறுபடியும் ஏதாவது பாண்டியரின் தொடர்பு ஏற்படுகிறதோ என நினைக்கத் தோன்றுகிறது. பழுவூர்ப் பெண்களுக்குப் பாண்டியருடன் அடிக்கடி தொடர்பு ஏற்படும் என்று அக்குலத்தின் தலையெழுத்தா?'' என்றான் வைணவன்.

வந்தியத் தேவன் ''நாம் உடனே முடிவெடுக்க வேண்டும் ஐயா. ஆனால், எவ்வளவு நாள் தான் அவன் தொல்லைகளைப் பொருட் படுத்தாமல் இருக்க முடியும்? இதற்கு முடிவு கட்ட வேண்டாமா? ஆயுதமேந்திக் காலாட்படையைக் காட்டுக்குள் அனுப்புவோம், ரவிதாசனை உடனே சிறைப் பிடிப்பதற்குத் தடை என்ன?'' என்றான்.

ஒரு நொடி பிரதமர் பேசவில்லை. 'தன் சிஷ்யர்கள் சொல்வது போல அவனைக் கொன்று விட்டால் தான் வெற்றியா' எனப் பிரதமர் யோசித்தார்.

பிரதமர் ''இதிகாசங்களில், தேவர்களும் அசுரர்களும் போரிடு வார்கள். ஒரு பக்கத்தில் அக்னியாஸ்திரங்களை, ஏவுகையில் இன்னும் ஒரு குழு வருணாஸ்திரத்தைப் பிரயோகித்து அடக்க முயலுவார்கள். நெருப்புக் கக்கிக் கொண்டு வரும் அஸ்திரத்தை, நீர் தெளிக்கும் அஸ்திரத்தைக் கொண்டு அணைப்பார்கள். அது



போல ஆகிவிட்டது இந்த ரவிதாசன் லீலைகள். அவனது செயல் களைக் கட்டுப்படுத்தவே நமக்கு நேரம் சரியாக இருக்கிறது'' என்றார்.

உரக்கச் சிரிக்கவேண்டும் போலிருந்தது. ''தங்களை விடப் பலம் வாய்ந்தவர்களைக் கண்டுப் பயம் கொள்ளாமல், அவர்களையே மிரட்டத் துணிந்தவன் எதிரி. பாண்டியர்கள் சோழர்களின் மெய்யான பலத்தைப் புரியாதவர்களா? இல்லை நமக்குத் தெரியாத பலவீனம் ஏதேனும் அவனுக்குத் தெரிந்துவிட்டதா?'' என்ற கவலையும் அவருக்கு இருந்தது.

''இல்லை, இல்லை. காணாமல் போனது ஒரு வயதுவந்த பெண். அதுவும் ஒரு உயர்குலத்துப் பெண். இதனால் சமூகத்தில் பல விரஸமான வதந்திகள் வந்துவிடும். துலாக்கோல் பிடித்தது போலத் துல்லியமாக நியாயம் சொல்லும் அரசகுலம் ஒன்றுக்கு நான் சேவகம் செய்கிறேன். பழுவூர் இளவரசிக்குக் கொஞ்சம் அபாயம் இருந்தால்கூட அப்படி நான் முடிவெடுக்க முடியாது. ரவிதாசனைச் சிறைப் பிடிக்க முயன்றால் இளவரசியின் உயிருக்கு அபாயம் வரலாமென்று பயப்படுகிறேன். மேலும் சோழநாட்டில் குழப்பம் என்று வெளிக்காட்டவே ரவிதாசன் இதைச் செய் கிறான். நாம் அவன் வலையில் விழக்கூடாது'' என்றார் பிரதமர்.

ஒரு நொடி மாறனைப் பிரதமர் திரும்பப் பார்த்தார் ''இது லெருக்குத் தனிபட்ட பிரச்சனையாய் இருந்தாலும், இதை நாட்டுப் பிரச்சனையாகத்தான் பார்க்கவேண்டும்'' என்றார். ''சோழ நாட்டிலேயே ஒரு குழப்பம் ஏற்படுவது தம்முடை ய நோக்கத்துக்கு மிக உகந்தது என்று பாண்டியர்கள் நினைக் கிறார்கள். ஆனால், அதற்கு ஒரு பேதைப் பெண்ணையா கடத்த வேண்டும்? இதற்கு வேறு காரணம் உண்டு'' என்றார்.

அடியான் உடனே ''பழுவூர் திரும்பவும் சோழர்களுடன் நெருங்குவதை அவர்கள் விரும்பவில்லை. ஒரு பெண் இருக்கிறாள் என்று தெம்பாய் இருந்தவர், அவளும் சென்ற பின் என்ன செய்வார் என்று தெரியாது'' என்றான்.

காலையில் பழுவேட்டரையருடன் பேசியதை ஒரு நொடி நினைவு கூர்ந்தார் பிரதமர். தன்னைத் தவிர தன் குடும்பத்தில் எல்லாரும் சென்றுவிட்டார்கள் என்பது பழுவேட்டரையர் மனதைக் கலங்கச் செய்திருந்தது.

''சரியாய்ச் சொன்னாய் திருமலை. அவர் மகள்களைப் பார்க்கச் செல்லவேண்டும் எல்று நினைத்தால் எதிரிகளுடன் நட்பு ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். அவர் தனிமை நாட்டுப்பற்றை

வென்றுவிடும். அதுவும் வயதான காலத்தில்'' என்று ஒப்புக் கொண்டார் அநிருத்தர்.

''பழுவேட்டரையர் இன்று தனிமரம். மகளை மீட்பதே அவர் குல நல்வாழ்வின் மீட்சியாகும்.'' இதைச் சொல்லிவிட்டு எல்லோரையும் பார்த்தார் பிரதமர். எல்லாரும் ஆமோதித்துத் தலையசைத்தனர். மாறன் முகம் பேயறைந்தாற்போலிருந்தது. இந்த மாறனுக்கு அந்தப் பெண்ணின் மீது ஆசை என்று ஒரு வதந்தி பரவிப் பிரதமர் காதையெட்டியிருந்தது. உண்மை இல்லாமல் ஒரு வதந்தி பிறக்காது. சற்று ஆராய்ந்து பார்த்தால் 'கேள்விப்பட்டது முழுவதும் பொய்யல்ல' என்று சொல்லுவதே வதந்தி என அநிருத்தருக்குத் தெரியும்.

பிரதமர் அவனையே விஷமமாக உற்றுப் பார்ப்பதைக் கவனித்து, முகத்தைச் சாந்தமாக வைத்துக் கொள்ள முயற்சித்தான் மாறன். விஷயம் தெரிந்ததிலிருந்து அவனுக்கு மனக்கஷ்டம். ''விரும்பியவள் விதியின் வசத்தால் விலகிச் சென்றுவிட்டாளே. தன்னுடைய துர்அதிர்ஷ்டம் அவளையும் பிடித்துவிட்டதோ?'' என்று நினைத்தான் மாறன்

''இம்முறை ரவிதாசனின் செயல் முன்னைவிட அதிக வலுவுடையதாயிருந்தது. அவர்களைத் தடுத்து நிறுத்த வேண்டும். அந்தப் பெண்ணைக் காப்பாற்றுவதற்கு ஏதாவது நாம் முயற்சி செய்தாக வேண்டும்!'' என்றான் அடியான்.

பிரதமர் அதற்கு ''எனக்கும் குற்ற உணர்வு குத்துகிறது. போன முறை பழுவேட்டரையர் கேட்டுக்கொண்டதன் பேரில் மூத்த மகளைக் கொன்றுவிட்டு வந்திருந்தீர்களென்றால் இப்போது இந்தப் பிரச்சனையே வந்திராது'' என்றார்.

அடியான் உடனே ''துச்சமென நினைத்து உயிர்ப் பிச்சை கொடுத்தோம். அவன் தன் புத்தியைக் காட்டிவிட்டான். நமது கூட்டாளிகளை நம்மிடமிருந்து பிரிப்பதில் தான் அவன் நோக்கம். பழுவூருடன் நட்புரிமை நாடப் புதியதொரு வழியைக் கண்டு பிடித்துவிட்டான். அதை முறியடிக்க வேண்டும்'' என்றான்.

அநிருத்தர் சிறிது மனக்கவலை கொண்டார். இளவரசிக்கு ஏதேனும் நேர்ந்துவிட்டால் தனக்குப் பெரும் பழி ஏற்படும் என்பதை உணர்ந்தார். 'போன முறையே அந்தப் பாண்டிய ஆபத்துதவிகளைத் தீர்த்துக்கட்ட வாய்ப்பிருந்தும் அதை விட்டு விட்டோமே. பழுவூர் அரசர் நம்மைக் கடித்தே குதறிவிடுவார்' என்று நினைத்தார்.



அடியான் சொன்னான் ''ஐயனே! அப்படி எங்கு தான் அழைத்துச் சென்றிருப்பார்கள் இளவரசியை? இலங்கைக்கு அழைத்துச் சென்றுவிட்டால்தான் தேடுவது கஷ்டம்''

மாறன் குறுக்கிட்டு ''அவ்வளவு தூரம் சென்றிருக்க மாட்டார்கள். எனது யூகம் அவர்கள் கொடும்பாளூரில் தானிருப்பார்கள்'' என்றான்.

பிரதமர் அசந்து போனார். ''எப்படிச் சொல்கிறீர்கள் இளம் சம்புவரையரே?'' பிரதமருக்குத் தெரியும், கொடும்பாளூரில்தான் தஞ்சைக்கு அருகில் காடுகள் இருந்தன. கோடிக்கரையெல்லாம் ஒரு விருப்பமில்லாத பெண்ணை அழைத்துச் செல்ல மிகவும் தொலைவு என்றும் தெரியும்.

ஆனால், மாறனின் கணிப்பு வேறு விதமாக இருந்தது. ''பழுவூர் அரசருடன் பேரம் நடத்தும்வரை ஓரிரு நாள் பிரயாணிக்கும் தூரத்தில்தான் அவர்கள் இருப்பார்கள்'' என்றான் மாறன். ''அதுவும் பழுவூர் அரண்மனையைச் சுற்றி நமது ஆட்களை மறைந்திருக்கச் செய்வது அவசியம். பேரம் பேச வருபவனை ஓரிரு நாட்களில் எதிர் பார்க்கலாம்'' என்றான்.

மாறனின் யூகம் மிகவும் சரியாக இருக்குமென்று முடிவெடுத்தார் பிரதமர். ஆனால், தனக்கே அது எட்டவில்லையே என்று ஒரு சிறு வருத்தம் அவருக்கு இருக்கத்தான் செய்தது.

மாறன் இந்த விஷயத்தைப் பற்றி அலசியதைக் கண்டு தமக்குத் தாமே புன்னகை செய்து கொண்டார் பிரதமர். இவனை இப்படியே விட்டால் விரைவில் தன் வேலைக்கே உலை வைத்து விடுவான் போல இருக்கிறதே என்றும் ஒரு கணம் எண்ணினார். உடனே '' பழுவூர் அரசர் நம் விசுவாசி தான். எதற்கும் அவர் மீதும் ஒரு கண் வைத்துக்கொள்ளுங்கள். சந்தேகிக்கும்படி அவர் வீட்டைச் சுற்றி யாரேனும் வந்தால் பின்தொடருங்கள்'' என்று ஆக்ஞாபித்தார்.

பேசவேண்டியதெல்லாம் பேசி முடித்தாயிற்று. இனி பழுவூர் அரசர் வரும்வரை எல்லாரும் காத்திருக்க வேண்டும். அந்த மௌனத்தில் அநிருத்தருக்குக் குழப்பம். 'திடீரென ரவிதாசன் இதையேன் செய்தான்? நம் அந்தரங்கச் செய்திகளையெல்லாம் அவனுக்குக் கொண்டு போய் சேர்க்க ஆள் வைத்திருந்தான் போல.'

'இல்லை, இல்லை. அவன் நல்ல மதியூகி. அவன் யூகத்திலேயே நம் ரகசியங்களெல்லாம் அம்பலமாகியது. அந்த பெண் சம்பந்தப்பட்ட செய்தி ஏதோ ஒன்று தான் அவனைத் தூண்டியிருக்க

வேண்டும். அது என்ன வாயிருக்கும்?' குந்தவை அடிக்கடி அந்தப் பெண்ணைச் சந்திப்பது அவருக்கும் சமீபத்தில் தெரியவந்தது.

உடனே நடந்தவையெல்லாம் அவர் மனக்கண்ணின் முன்னால் தோன்றியது. "ஆகா அது தான் விஷயமா?" உடனே அவரது பார்வை அவரையும் அறியாமல் மாறனைத் நோக்கிச் சென்றது. 'பாவம் இவன்! எப்பேற்பட்ட சக்தியுடன் அவன் மோதுகிறான் என்று தெரியாமல் இருக்கிறானே' என்று ஆதங்கப்பட்டார்.

அச்சமயம் அரசியலுக்கு அப்பாற்பட்டு சில முடிவுகளும் எடுத்தார். 'அரசியல் வேறு. காதல் வேறு. மாறனுக்கும் இப்போட்டியில் சரி சமமாக வாய்ப்புக் கொடுக்கவேண்டும். அந்த பெண்ணைத் தேடும் பொறுப்பை அவனிடமே ஒப்படைக்க வேண்டும்' என்று முடிவெடுத்தார். நிச்சயம் வெற்றி பெறுவான். அவன் பேசிய ஒவ்வொரு சொல்லுக்குப் பின்னாலும் நல்ல ஆராய்ச்சி இருந்தது. அதைச் செயல்படுத்தும் திறனும் அவனிடம் இருந்தது எனப் புரிந்துக் கொண்டார் பிரதமர்.

அச்சமயம், பழுவேட்டரையர் அறையின் முகப்பை நெருங்கி விட்டார் என்று ஓரக்கண்ணால் பார்த்த அடியான், தொண்டை யைக் கனைத்தான்.

❖ ❖ ❖

அத்தியாயம் எண்பத்து எட்டு

## மாறனின் முதல் கடமை!

அரசர் வசிக்கும் மாளிகையிலிருந்து சூரியாஸ்தமன பேரிகை முழக்கம் கேட்டது. அதுவரை விவாதம் செய்து கொண்டிருந்த நால்வரும் பரபரப்படைந்தார்கள். பழுவூர் அரசரை அஸ்தமன நேரத்துக்கு வரச் சொல்லி மற்றவரை முன்பே வரச்சொல்லி யிருந்தார் பிரதமர். எல்லோருடனும் விவாதம் நடத்தியபின்பு பழுவூர் அரசர் வந்தால் சௌகரியமாய் இருக்கும் என்று எண்ணினார் அவர்.

பிரதமரின் அறைக்குள் பழுவூர் அரசர் வந்தார். ஏற்கனவே நடந்து முடிந்த நிகழ்வுகளினால் பழுவூர் அரசரின் உள்ளமும் உடலும் பெரிதும் நலிந்து போயிருந்தன. மகள் லோகா காணாமல் போனதிலிருந்து இரவு அவர் தூங்கவே இல்லையென்று அவர் கண்களைச் சுற்றியிருந்த கரிய வளையங்கள் காட்டிக்கொடுத்தன.



வயது அதிகம் ஆகிவிட்டபடியால் தற்சமயம் அவர் போர்க்களங் களுக்கு செல்வதில்லை. சோழ சாம்ராஜ்யத்தில் மிக உன்னதமான பதவியெனக் கருதப்பட்ட வேளக்காரப் படையின் தலைவர் பதவியை ஒரு காலத்தில் வகித்து வந்தவர் இந்த கிழவர் என்றால் இன்று நம்பமுடியாது. அதுமட்டுமா. முன்னொரு காலத்தில் பழுவூர் அரசர்களின் அதிகாரத்தில்தான் சோழ சாம்ராஜ்யத்தின் தனபண்டாரமும் தான்ய பண்டாரமும் இருந்தன. இன்று அந்த அதிகாரங்கள் எல்லாம் மற்ற சிற்றரசர்களிடம் போய் விட்டன.

இன்றோ அவரது வாரிசுகளான இரு பெண்களையுமே எதிரிகள் கடத்திச் சென்றுவிட்டனர். அதில் ஒருத்தியையாவது மீட்க மற்றவர்களின் உதவியை அவர் நாடவேண்டியிருந்தது. இருவரும் சந்தேகத்துக்கிடமான முறையிலேயே காணாமல் போனார்கள் என்பது அவருக்கு அவமானத்தைக் மேலும் கூட்டியது. இவ்விதம் தமது உள்ளத்தில் தோன்றிய புகையும் எரிமலையுடன் பழுவூர் அரசர் பிரதமர் வீட்டுக்கு வந்தார்.

அரசர் வந்தவுடன் எல்லாரும் எழுந்து நின்றனர். அவரைக் கைத்தாங்கலாக அழைத்து வந்தவன் தலை வணங்கியபடியே வெளியேறினான், சம்பிரதாயமான மரியாதைப் பேச்சை மறந்து விட்டு அவர் சீறினார்.

"என்னைக் கண்டு ஏன் எழுந்து நிற்கிறீர்? சோழ மகாராஜ் யத்தில் சர்வசக்தி வாய்ந்தப் பிரதமரே! நீர் நினைத்ததை நினைத்த படி சாதிக்கக்கூடியவர். நானோ ஒருவிதச் செல்வாக்கும் இல்லாத சுண்டைக்காய் அளவில் உள்ள பழுவூர் நாட்டுக்கு அரசன். இன்று எனக்கு நேர்ந்தக் கஷ்டத்துக்கு உம்மிடம் நிவாரணம் பெறக் கையேந்தி வந்திருக்கிறேன். என்னைப் பார்த்து ஏன் எழுந்து நிற்கிறீர்?" என்றார்.

கடுமையான குரலில் பேசினார் பழுவேட்டரையர். அவர் இருந்த நிலைமைக்கு, அது நியாயம்தான் என்று நினைத்த மற்றவர் தவறாக எடுத்துக்கொள்ளவில்லை. அவர் குலத்தின் எதிர்காலமே இப்போது ஊசலாடிக்கொண்டிருக்கிறது என்று அனைவருக்கும் தெரிந்தது.

பிரதமர் பல விஷயங்களில் வல்லவராயிருந்தார். ஆட்களைச் சாந்தப்படுத்தி, தன் பக்க நியாயத்தைப் பார்க்கும்படி செய்யும் திறனும் அதிலொன்று .

"ஐயனே! உமது உடல் இருக்கும் நிலையில் நீங்கள் இவ்வளவு உணர்ச்சிவசப்படக்கூடாது. நீங்கள் சென்று மாளிகையில்

ஒய்வெடுங்கள். நாங்கள் தேடும் ஏற்பாடுகளைக் கவனிக்கிறோம்'' என்றார் பிரதமர்.

பழுவேட்டரையரின் முகம் சிவந்தது. மீசை துடித்தது. அப்போது 'நறநற' வென்று பழுவூர் அரசர் பல்லைக் கடிக்கும் சத்தம் எல்லோருக்கும் கேட்டது.

''என்னைப் பற்றி எனக்கு ஒரு கவலையுமில்லை. என் உடல் நிலையைப் பற்றிச் சொல்லிக் காண்பிக்கிறீர். நான் நலனுடன் இருந்தால் உம்மிடம் ஏன் வருகிறேன்? அப்படியிருந்தால் என் கையிலுள்ள வாளினாலேயே எதிரியைப் பழி வாங்குவேன். தங்களுக்குச் சிரமம் தரமாட்டேன்!'' என்றார் பழுவேட்டரையர்.

பிரதமர் ''என் தவறு தான். உம்மைச் சென்று ஓய்வெடுங்கள் என்று சொல்ல நான் யார்? இல்லை, பழுவூர்க் குலம் ஓய்வெடுத் திருந்தால்தான் சோழர்களால் சாம்ராஜ்யத்தை இப்படி விஸ்தரித் திருக்க முடியுமா?'' என்றார். அதை கேட்ட பழுவூர் அரசர் சற்று சாந்தமடைந்ததாகத் தெரிந்தது. எல்லாரும் பெரு மூச்சு விட்டனர்.

மனித இயல்புகளின் நெளிவு சுளிவு அறிந்தவர் அநிருத்தர். கோபமாய் வந்த பழுவூர் அரசரைச் சாந்தப்படுத்திவிட்டார். பழுவூர் அரசருக்கோ மனக்குழப்பம் இன்று அதிகமாயிருந்தது. ஆனால், சாந்தமாய்ப் பேசும் பிரதமரைத் தொடர்ந்து கடிந்து கொள்ள இஷ்டப்படவில்லை.

எனினும் கேட்க வெண்டியதைக் கேட்காமல் செல்ல அவருக்கு விருப்பமில்லை. ''சோழ நாட்டில் திருட்டுப் புரட்டே கிடையாது என்று எல்லைகளுக்கு அப்பால்கூடப் பேச்சு உண்டு. இப்படிப் பட்டப்பகலில் ஆள் கடத்தல் நடந்திருக்கிறது. அது எப்படிப் பிரதமரே?'' என்று கேட்டார். ''சோழ நாட்டில் ஒற்றர் படை அவ்வளவு திறமையாகவா வேலை செய்கிறது? துஷ்டர்கள் வந்து ஒரு இளவரசியைக் கடத்தியது எப்படி?'' பழுவூர் அரசரின் விழிகளில் கலந்திருந்த சோகமானது கோபக்கனலாய் மாறியது.

கோபத்தில் பழுவேட்டரையரின் வார்த்தைகள் அவருடைய வாயிலிருந்து குழறலாக வெளிவந்தன. இதைக்கேட்ட மற்றவர்கள் மௌனமாய் இருந்தார்கள். இன்னது செய்வது என்று தெரியாமல் திகைத்து நின்றார்கள். எது பேசினாலும் தவறாய் புரிந்து கொள்ளப்படும் என்ற நிலையில் ஏன் வாயைத் திறக்க வேண்டும் என்றிருந்தனர்.

''இது ஆள் கடத்தல் என்று நான் நினைக்கவில்லை'' என்ற குரல் கேட்கவும் எல்லாரும் அத்திசையில் திரும்பினார்கள். பழு வேட்டரையரின் கேள்விக்குப் பதில் சொல்ல மாறன் எழுந்தான்.



''அவளை பலாத்காரமாக யாரும் அழைத்துச் செல்லவில்லை. விருப்பத்துடன் தான் சென்றிருக்கிறாள் என நினைக்கிறேன்'' என்றான் மாறன்.

பழுவூர் அரசருக்கு எரிமலையின் உட்பிரதேசத்தைப் போலக் கொதித்தது இதயம். புயல்காற்றுச் சுழலின் நடுப் பிரதேசம் போலக் குழம்பியது அவர் மனம். மாறன் தொடர்ந்து பேசுவதற்குள் பழுவேட்டரையர் சீறினார் ''ஏன் இப்படித் தலைக்குத் தலை உளறுகிறீர்கள்? மூடத்தனமாக இருக்கிறது. என்னைப் பெற்ற தாய் போல இது நாள் வரை பார்த்து வந்த என் மகள் விருப்பத்துடன் ஏன் வெளியேறவேண்டும்? அவளுக்குப் பைத்தியமா? இல்லை, உளறுகிறானே இந்த மூடனுக்குப் பைத்தியமா?'' என்று கத்தினார்.

'ஒருவர் மேல் ஒருவருக்குப் பைத்தியம்' என்று சொல்ல நினைத்தான் வந்தியத் தேவன். ஆனால், பேசவில்லை.

மாறன் அந்தக் கூச்சலுக்கு பயப்படவில்லை. ''பழுவூர் அரசர் வரும் வரை நாங்கள் பேசியதை உம்மிடம் சொல்லிவிடுகிறோம். பின்பு முடிவெடுக்க வேண்டியது உமது பொறுப்பு'' என்றான். பழுவூர் அரசரின் கோபத்துக்கு முன் சலனமடையாமல் நின்ற மாறனைக் கண்டு எல்லாரும் அசந்தே போனார்கள்.

''சம்புவராயரே! சொல்லுங்கள்'' என்றார் பிரதமர்.

பழுவேட்டரையரை நோக்கினான் மாறன் ''மேலே ஆகாசம் கீழே பூமி என்று வாழ்வு நடத்தும் பாண்டியநாட்டு ஆபத்துதவி களால் அவளை அப்படி முரட்டுத்தனமாகக் கடத்தியிருக்க முடியாது. நான் சொல்ல வந்தது அவள் விருப்பப்பட்டுப் போயிருக்கலாம். ஆனால், தனக்கு என்ன நடக்கப்போகிறது என்று தெரியாமல் போயிருக்கலாம் அல்லவா?''

''எங்கு போயிருப்பாள். யாருடன் போயிருப்பாள்?'' பழு வேட்டரையருக்கு சந்தேகம் வந்தது.

''பாண்டியர்களுடன்தான். உங்கள் பெரிய மகளே வந்து கூப்பிட்டிருந்தால் என்ன செய்வாள்?'' என்று கேட்டான் மாறன்.

பழுவூர் அரசருக்குச் சட்டென அந்த யூகம் சரியாக இருக்கக் கூடும் என்று தோன்றியது. தமக்கையின் மேல் அபாரப் பிரியம் யோகாவுக்கு. தான் சாந்தமாயிருக்கும் நேரமெல்லாம் அக்காவுக் காகத்தான் அவள் மன்றாடுவாள்.

மாறன் மேலும் தொடர்ந்தான் ''நாங்கள் இன்று காலை முதல் விசாரித்ததில் அவளை ராக்கம்மாள் என்ற படகோட்டிப் பெண்

வந்து அழைத்துச் சென்றதாகத் தெரியவந்தது. பாண்டியர் குழு வுடன் உமது மகள் இஷ்டமின்றித்தான் இருக்கிறாள்'' என்றான்.

''அவளால் என்ன ஆகப்போகிறது...?''

''பழுவூரின் நட்பு பாண்டியருக்குக் கிடைக்கலாம் அல்லவா?''

வியப்புடன் விழித்தார் பழுவேட்டரையர். மாறன் சொன்னதில் உண்மை தெரிந்தது. மீண்டும் ஒரு சதியில் சிக்கப்போகிறோம் என்ற மிக பயங்கரமான ஓர் எண்ணம் அவர் மனத்தில் தோன்றிச் சொல்ல முடியாத வேதனையை உண்டாக்கியது. கோபக்கனலை எழுப்பியது.

அவன் அடுக்கிக் கொண்டு போகப்போக, பழுவூர் அரசருக்குப் புரிந்தது. இது தன்னையும் தனது படைபலத்தையும் அரசியல் சாதுர்யத்தையும் குறிக்கோளாகக் கொண்டு நடத்தப்படும் சதி என்று. இன்று வேண்டுமென்றால் வேலைக்காரரின் உதவியோடு காலம் கழித்துவிடலாம். நாலைந்து ஆண்டுகளுக்கு பின் பேரன் பேத்தியைப் பார்க்க ஆசைவராதா? சொந்த பந்தங்களையெல்லாம் காட்டில் விட்டுவிட்டு நாட்டில் ஏன் இருக்கவேண்டும் என்ற நினைப்பு வராதா?

தலையசைத்தார் பழுவூர் அரசர். ''அவளைப் பாண்டியர்தான் கடத்தியிருக்கவேண்டும். இந்த கடத்தலின் உள்ளர்த்தம் இன்ன தென்பதையே நான் இதுவரை தெரிந்து கொண்ட பாடில்லை! நான் தனிமைப் படுத்தப்படவெண்டும். என் ரத்தமெல்லாம் எதிர் அணியில் இருக்கவேண்டும். பின் நான் ஏன் தஞ்சையில் இருக்க வேண்டும் என யோசிக்க வேண்டும். அது தான் நோக்கம். ஆகா, செத்தாலும் சாவேன், என் மகள்களைப் பலி கொடுத்தாலும் கொடுப்பேன். ஆனால், பாண்டியருடன் ஒரு நாளும் சேர மாட்டேன்'' என்று கர்ஜித்தார்.

''அதை நாங்கள் நன்கு அறிவோம் அரசே'' என்றார் பிரதமர்.

அதைக் கேட்டுவிட்டு சாந்தமாய் தெரிந்த பழுவூர் அரசர் பின்னர் திடீரெனச் சீறினார். அதற்குமுன் அவர் முதலில் முறைத்தது அடியானையும் மாறனையும் பார்த்துத்தான்.

''அறிந்து என்ன பயன்? எனக்கு எப்போதும் தீங்கு இழைத்துக்கொண்டே இருக்கிறீர்களே'' என்று பாய்ந்தார். சற்று மூச்சு வாங்குவதற்காக நிறுத்திவிட்டுத் திரும்பவும் பேசினார் பழுவேட்டரையர்

''என் மூத்த மகளால் பெரிய தீங்கு எதுவும் நேர்ந்து விடாது என்று மேம்போக்காக இருந்துவிட்டேன். இன்று என்னை எல்லா ரும் கேட்கிறார்கள், விழிப்போடு இருந்திருக்க வேண்டாமா



என்று. என்னை சொல்லிக் குற்றமில்லை. இங்கு கூடியுள்ள மூவர் தான் அந்த முன்னெச்சரிக்கைக்குக் கேடு விளைவித்தனர்.'' அவர் குறிப்பிட்டது அடியான், மாறன் மற்றும் பிரதமரைத்தான் என்று மூவரும் அறிந்தனர்.

கோபத்தினால் அவர் குரல் குழறிச் சொற்கள் தடுமாறின. ''அந்தத் தேசப் பிரஷ்டனை, பாண்டிய நாட்டு துரோகியைக் கொன்றுவிடுங்கள் என்று மன்றாடினேனே. உம்மால் முடியாத காரியமா அது? அவனைக் கண்ட இடத்திலே நட்டுவாக்கலியை அடித்துக் கொல்வது போல் இரக்கமின்றிக் கொன்றுவிட வேண்டும் என்று உம்மிடம் கூறினேனே. கைவிட்டுவிட்டீரே'' என்று பிரதமரைப் பார்த்துக் குமுறினார்.

''இன்று என் குலத்தையே நடுத் தெருவில் நிற்கவைத்து வேடிக்கை பார்க்கிறீரே. மீண்டும் எனக்கு இதையேதான் செய்வீர், அநிருத்தா, இப்படி உம்மோடு வீண் பொழுது போக்க நான் விரும்பவில்லை. நான் சக்கரவர்த்தியிடம் போகிறேன். நியாயம் கேட்கிறேன். பழையதை மனதில் வைத்துக்கொண்டு என்னைப் பழி தீர்க்கிறீர் என்று சொல்கிறேன். அவரிடம் சொல்லி ஒரு படையைத் திரட்டி நாடெங்கும் அவளைத் தேடச் சொல்கிறேன்'' என்றார்.

பழுவேட்டரையரைப் பார்த்து வந்தியத் தேவன் ''அமைதி. அரசே அமைதி! நீர் கேட்டால் உத்தம சோழர் சாரை சாரையாக போர் வீரர்களையும், குதிரை வீரர்களையும் அனுப்புவார். சந்தேக மில்லை. ஆனால், இது காதும் காதுமாய் வைத்து முடிக்க வேண்டிய வேலை. வேறொரு நாளாக, வேறொரு சந்தர்ப்பமாக இருந்தால், நீர் சொல்லும்படி செய்திருக்கலாம். ஆனால், இவளோ யௌவனப் பெண் என்பதால் பார்த்து நிதானமாகத்தான் செயல்படவேண்டும். அரசே! முரசங்கள் முழங்க நாம் சென்றால் ஓட்டம் பிடிப்பான் பாண்டியன். பின் ஈழத்துக் காடுகளில் சென்று தேட மிகவும் கஷ்டமாகிவிடும்'' என்று அறிவுறுத்தினான்.

பழுவூர் அரசரால் குற்றம் சாட்டப்பட்ட மூவரும் பேசாமல் வந்தியத் தேவன் பேசியது நிலைமையைச் சற்றுச் சீர் செய்தது. சண்டையை மேலும் வளர விடாமல் தடுத்தது. ஆனால், பழுவேட்டரையருக்கு வந்தியத் தேவரையும் பிடிக்காது. வந்தியத் தேவன் ஐந்தாண்டுகளுக்கு முன் தஞ்சையில் முதன்முறையாகக் காலடி எடுத்து வைத்தான். அன்றிலிருந்து வாழ்க்கையில் அவனுக்கு ஏற்றம்தான். இன்று அவன் சோழரின் மருமகப் பிள்ளை. ஆனால், அவன் வந்த நாள் பழுவூர்க் குலம் அழிய ஊதப் பட்ட சங்கொலி என்று பிற்காலத்தில் எல்லாரும் அறிந்தனர்.

''விதி எங்களை முந்திக் கொண்டு விட்டது. அதனால் இத்தகைய இளம் சிறுவர்களுக்குக்கூட அல்லவா ஏச்சாகப் போய் விட்டது?'' என்று முனகினார் பழுவேட்டரையர்.

மாறன் பேசலானான். ''நன்றாய் யோசியுங்கள் அரசே! அவளை அருகில் ஏதாவது காட்டில்தான் பாண்டியர்கள் மறைத்து வைத்திருக்க வேண்டும். சேனா சமுத்திரத்தைக் கானகத்தில் நீர் திரட்டினால் அவளைப்பற்றி ஊரில் ஏதேதோ வதந்தி பரவி விடும்''

எல்லோருமாய் ஒன்றும் செய்யாமல் பேசிக் கொண்டிருப்பது பழுவேட்டரையருக்குப் பிடிக்கவில்லை. புயல் வருவதற்கு முன்னால் உண்டாகும் பயங்கர இரைச்சலைப் போல் இருந்தது அவரது உறுமல். எல்லாரும் அவர் பக்கம் திரும்பினார்கள்.

''இனி உம்முடன் பேசிப் பயனில்லை. உம்மால் நான் பட்ட துன்பமெல்லாம் போதும். இனி நானே என் குலத்தைத் தாழ்த்த நினைக்கும் துஷ்டர்களைக் கொன்று குவிக்கிறேன்'' என்று கர்ஜித்தார். அவருக்கு நன்றாய்த் தெரியும், யார் கடத்தியதென்று. ஆனால், அவரே அதை எடுத்துச் சொல்லிப் பாண்டியர்களுடன் தனக்கு இருக்கும் ரத்த சம்பந்தத்தை வெளிக் காட்ட நினைக்கவில்லை.

கடைசியாக அநிருத்தர் பேசினார். ''நான் கூறும் யோசனை யைக் கேட்டு அதன் பின் உமது முடிவை எடுங்கள் அரசே.'' மற்றவர் எல்லாரும் மௌனம் சாதித்தனர். பேசாதிருந்த சபை யோரின் முழு கவனத்தையும் தானே பெற்றிருந்ததைப் பிரதமர் அறிந்தார். இவர் என்ன முடிவெடுக்கப்போகிறார் என்ற எண்ணம் எல்லோர் மனதிலும் எழுந்தது. எல்லாருடைய பார்வைகளும் அநிருத்தரின் மீதே பதிந்திருந்தன.

அதில் கோபப் பார்வைகள் இருந்தன. பழுவேட்டரைய ருடையவை அவை! இவர் என்ன தான் செய்யப் போகிறார் என்ற ஆர்வப்பார்வைகளும் இருந்தன. எதைப் பற்றியும் கவலைப் படாமல் ஒரு சலனமுமற்ற பார்வையும் இருந்தது. அது அடியாளுடையது.

அவர் சொற்களில் கட்டுண்டுக் கிடந்த எல்லாரும் கவனிக்க லானார்கள். ''இது பாண்டியர்களின் மீது எடுக்கும் படையெடுப்பு அல்ல. படையுடன் சென்றால் ஓட்டம் பிடிப்பான் எதிரி. ஒற்றர் அளவில் முடிக்க வேண்டிய வேலை. வந்தியதேவரும் எனது ஒற்றர் தேவசேனரும் பழுவூருக்குத் தூது வரப்போகும் பாண்டியரைப்



பிடிக்க ஆயத்தமாய் இருப்பார்கள். மாறனும் ஆழ்வார்க்கடி யானும் கொடும்பாளூர்க் கோநாட்டுக்குச் செல்வார்கள்'' என்றார்

பழுவேட்டரையர் முகத்தில் வியப்புக் குறி காட்டி, ''இவர்களா? மீண்டுமா?'' என்றார். எல்லோருமாகச் சேர்ந்து அவருக்கு எதிராக மீண்டும் சதி செய்கிறார்கள் என்று அவருக்கு தோன்றியது.

அநிருத்தர் ''அரசே! நாம் பேசப் பேச அவள் தொலைவில் சென்று கொண்டிருப்பாள். உமது மகளை மீட்க எண்ணற்ற வழிகள் இருக்கின்றன. ஆனால், இதுவே எனக்கும் சிறந்ததாகத் தெரிகின்றது'' என்றார்.

பழுவேட்டரையர் தம்முடைய தாடியைத் தடவிக் கொண்டே இந்தப் பேச்சைக் கேட்டார். ''சரி நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால், அந்த இருவருடன் நானும் செல்வேன்'' என்றார்.

பொறுமையை இழந்தார் பிரதமர். ''ஐயனே! உம் பெண்ணை உம்மிடம் பத்திரமாகக் கொண்டு வந்து சேர்க்க நான் உத்திர வாதம். கவலையை விடுங்கள். இவை உம் துயரைத் துடைக்கச் சொல்லும் வெறும் வார்த்தைகள் இல்லை. நீரும் சென்றால் அது முடியாத காரியமாகிவிடும். உமது மகள் என்னுடைய மகள் போன்றவள். அதனால் அவளுடைய சுகத்தைப் பற்றி எல்லாரும் மிக்கக் கவலை அடைந்திருக்கிறோம்! அரசே! வீணாகப் பேசிக் கொண்டிருக்க வேண்டாம். பின்னர் இவர்களைத் தடுத்துத் தாமதப் படுத்தியதற்காகத் தாங்களே வருத்தப் படுவீர்கள். இந்த முறை தோல்வியோ கிடையாது. ஆசி கூறி அனுப்புவோம். நிச்சயம் நம் கணிப்பு சரியாய் இருக்கும். இவர்கள் வெற்றிவாகை சூடி வருவார்கள். நான் சொன்ன சொல் தவறப் போவதில்லை''என்று உறுதியளித்தார்அநிருத்தர்.

வந்தியத் தேவனும் பேசினான் ''ஐயனே! உமது கஷ்டத்தை எமது கஷ்டமாக ஏற்று உதவ முன் வந்திருக்கிறோம். நம்புங்கள். செவி சாயுங்கள். எது நேர்ந்தாலும், என்ன நடந்தாலும், அந்தப் பெண் பத்திரமாக இங்கு வரவேண்டும். அது தான் நமது இலக்கு'' என்றான்.

இந்த வழிமுறையை அவர்கள் ஏற்கனவே விவாதித்து முடி வெடுத்துவிட்டனர் என்று புரிந்துகொண்ட பழுவூர் அரசர் மேற் கொண்டு ஒன்றும் பேசவில்லை. அதனால் ஒப்புக்கொண்டு விட்டார் என்று நினைத்தார்கள்.

புறப்படுவதற்கு எழுந்தார் பழுவூர் அரசர். இருக்கையை விட்டு எழுந்திருக்கவே அவருக்கு உதவி தேவைப்பட்டது. ஒரு காலத்தில்

வஜ்ராயுதம் போன்ற அவர் கை முஷ்டியினால் யாரையாவது பிடித்துக் கொண்டால் அவன் விடுபட்டுத் தப்பிப்பது கஷ்டம். பிடியில் ரத்த ஓட்டமே கைக்குள் நின்றுவிடும் என்று ஊரெங்கும் பயம். "நம்முடைய அரசுக்கு இவனையொத்தவர்களின் உதவியிருந்தால், எதைப்பற்றியும் நாம் கவலைப்பட வேண்டியதில்லை என்றிருந்த காலம் போய் நானே எல்லோரிடமும் கையேந்தும் காலம் வந்துவிட்டதே" என்று புலம்பினார் பழுவூர் அரசர்.

வந்தியதேவனுக்கு, இந்த தேடுதலுக்குத் தான் செல்லவில்லை என்பதில் ஒரு வகையில் சந்தோஷம். மாறன் தானாகவே இந்த பெண்ணைக் கண்டுபிடித்து விடவேண்டும் என்று உள்ளூர ஆசை. பொன்னியின் செல்வரும் தனக்கு நெருங்கியவர் தான். ஆனால், இன்றைய தேவை மாறன் மீண்டும் எழுந்து நிற்பது தான்.

பழுவூர் அரசரைப் பார்த்தார் பிரதமர். "உங்கள் பங்குக்கு நீங்களும் ஒரு வேலைசெய்யவேண்டும் என்றார். இவர்களை ஆசீர்வதித்துவிட்டு உமது மாளிகைக்குச் சென்று ஓய்வெடுங்கள்" என்றார். பழுவேட்டரையர் தலையசைத்தார். மௌனத்தில் 'பூரண சம்மதத்தையும் அநுமதியையும் கொடுக்கிறேன்' என்று சொல்லாமல் சொன்னார்.

லோகாவைத் தேட மாறனும் அடியானும் செல்வது உறுதியாயிற்று. பிரதமர் அவர்களை நோக்கினார். "உமது முதல் கடமை லோகமாதேவியை இங்கு அழைத்துவருவது தான்" என்றார். மாறனுக்குச் சொல்லித் தெரியவேண்டாம். லோகா உலகின் மூலையில் எங்கு இருந்தாலும் அவளைத் தேடிச் செல்ல அவன் தயாராயிருந்தான்.

பிரதமர் மாறனை மீண்டும் நோக்கினார் "இளம் சம்புவராயரே! ரவிதாசன் சோழர் குலத்தை வேரோடு கருவறுக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பவன். சோழருடைய நெடு நாள் நண்பர்களையும் பழிவாங்க முயலுபவன். அதனால் அலட்சியம் வேண்டாம். சர்வ ஜாக்கிரதையுடன் இருக்கவும். சிறைப்பட்ட பழுவூர்நாட்டுப் பெண்ணை விடுதலை செய்யக் காட்டுக்குப் போய் இரவு பகலாய்ச் சுற்றியலைந்து அவளைக் கண்டு பிடியுங்கள்" என்றார்.

கடைசியாக "சம்புவராயரே அவளுடன் திரும்ப வாருங்கள். அப்போது தான் மனத் திருப்தியுடன் உமக்கு எல்லாம் செய்வார் பழுவூர் அரசர்" என்றார் பிரதமர். மாறனின் முகம் நாணத்தில் சிவந்தது.



'இந்தப் பாவிக்கிழவன் கண்களில் படாதது ஏதுமில்லையா?' என்று நினைத்தான்.

❖ ❖ ❖

## அத்தியாயம் எண்பத்தொன்பது
## லோகாவைத் தேடி...!

இருவரும் கிளம்பும் முன் அநிருத்தர் அவர்களிடம் ஒரு பட்டுப் பையில் நிறையப் பொற்காசுகள் கொடுத்தார். பின் அடியானிடம் ஒரு தங்க மோதிரத்தைக் கொடுத்தார். அதில் வேங்கையொன்று பாய்வது போலப் பொறிக்கப்பட்டிருந்தது.

வேங்கை இலச்சினை பொறித்த அந்தத் தங்க மோதிரத்தை எடுத்துச் சரி பார்த்தான் அடியான். இருபது நாள் அரசாங்க வேலையாய் வெகு தூரம் செல்பவன் எவ்வளவு உடைமைகளையும், ஆள்பலத்தையும் குதிரைகளையும் எடுத்துச் செல்லவேண்டுமோ, அவை அனைத்தும் இந்தச் சிறிய மோதிரத்தில் அடங்கிவிடும். இதைக் காண்பித்தால் இந்தப் பரந்த சோழப் பிரதேசத்தில் எல்லாக் கதவுகளும் திறக்கும். எல்லா வழிகளும் தெரியும். எல்லாரும் கைகட்டிச் சேவகம் செய்யக் காத்திருப்பார்கள். எல்லாரும் பணிவிடை செய்து விருந்து வைக்கத் தவம் கிடப்பார்கள். அவ்வளவு சக்தி வாய்ந்தது இந்த வேங்கை இலச்சினை பொறித்த மோதிரம். ஆனால், காட்டில் இதற்கு என்ன உபயோகம் வருமென்றுதான் தெரியவில்லை.

வழி அனுப்ப வந்தியத் தேவனும் காத்திருந்தான். "நீயும் வந்தால் நன்றாயிருக்கும், வல்லா!" என்றான் மாறன்.

"மூவராய் ஏன் போகவேண்டும்?" என்றான் வந்தியத் தேவன்.

"குதிரைகளைச் சேர்த்தால் ஆறுபேர்" என்றான் அடியான்.

எல்லாரும் சிரித்தனர். அந்த சிரிப்பு அங்கு குடிகொண்டிருந்த பதற்றத்தைக் குறைத்தது.

வந்தியத் தேவன் மாறனைத் தனியே அழைத்து உண்மையான காரணத்தை விளக்கினான். "அப்படித்தான் நினைத்தேன் நானும். ஆனால், பிரதமர் எனக்கு இங்கு ஏதோ வேலையிருக்கிறது என்று சொல்லிவிட்டார். எது எப்படியிருந்தாலும் நீ வெற்றியுடன் தான் திரும்ப வேண்டும். அந்தப் பழுவூர் இளவரசியை நீ திரும்ப

அழைத்துவந்தால்தான் பொருத்தமாக இருக்கும்'' என்றான். இருவருக்கும் பிரதமர் ஆலோசனையின் போது மாறனை நோக்கி ''அந்தப் பெண்ணை அழைத்து வா. பழுவேட்டரையர் உன் மனதுக்கு உவந்தது போல நடந்து கொள்வார்'' என்று சொன்னது இருவருக்கும் நினைவுக்கு வந்தது.

அவருக்கு எப்படி இது தெரிந்தது என இருவரும் யோசித் திருக்கையில், வந்தியதேவனுக்கு மட்டும் இன்னும் ஒரு சந்தேகம். 'இதைத் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கும் பிரதமருக்குப் பொன்னியின் செல்வரை அந்தப் பழுவூர் இளவரசிக்கு மண முடிக்க நினைக்கும் குந்தவையின் எண்ணம் தெரியாதா, என்ன? தெரிந்திருந்தால் எப்படி மாறனிடம் இந்த ஊக்கமளிக்கும் வார்த்தைகளைக் கூறுகிறார்?' என மனம் குழம்பியது.

பிரதமரின் அரண்மனை வாசலிலிருந்து இரு குதிரைகளும் நாலுகால் பாய்ச்சலில் புறப்பட்டன. கோட்டைக்கு வெளியே வந்த பின்பு கொடும்பாளூர் செல்லும் வழியிலே திரும்பிச் செல்லத் தொடங்கினார்கள்.

மாறனும் அடியானும் குதிரைகளின் மேல் தென் கிழக்குத் திசையில் சென்று கொண்டிருந்தனர். சோழ வள நாட்டிற் குள்ளேயே கானக வளம் மிகுந்த பிரதேசத்தின் வழியாக அந்த ராஜபாட்டை போய்க் கொண்டிருந்தது. எங்கே பார்த்தாலும் அடர்ந்த ஆரண்ய மயமாயிருந்தது. ஆனால், திடீரெனக் கோடிட்ட மாதிரி தாவர வகைகள் மாறின. உடனே அவ்வளவு ஒரு மாற்றம் சுற்றுப்புரத்தில். இயற்கை வளமெல்லாம் கொடும் பாளூரில் கிடையாது. மலைகள் அதிகம். குன்றுகள் அதிகம். பாறைகளில் வளரக்கூடிய முட்செடிகளே அதிகம். வழிநெடுகிலும் வறண்டு போன பல நதிகளைக் கடக்கவேண்டியிருந்தது.

மாணிக்கவாசகப் பெருமானைத் தடுத்தாட் கொண்டது திருபெருந்துறையெனும் திருஆவுடையார் கோயில். அந்த க்ஷேத்திரத்திற்குச் செல்லும் பாதை அது.

ஒரு காலத்தில் கொடும்பாளூர் முழுவதும் காடாய் இருந்ததாம். அங்கு ஓடிய முக்கிய நதியொன்றின் கதி மாறியதால் ஏற்பட்ட இந்த வறட்சியில் முள்காடுகள் மட்டுமே மிஞ்சின என்று சொல் வார்கள். சோழ நாட்டை வளப்படுத்தியது காவிரியெனும் இனிய நீர்ப் பெருக்கு. ஒரு நதியால் இவ்வளவு மாற்றத்தை ஏற்படுத்த முடியுமா என்று ஐயம் கொள்பவர்கள் சோழ நாட்டிலிருந்து கொடும்பாளூருக்குள் பிரவேசிக்கவேண்டும். அழகான இயற்கை



ஓவியம் ஒன்றை தீட்டும் கலைஞனுக்கு வர்ணம் பாதியில் தீர்ந்தது போல் ஒரு உணர்வு ஏற்படும்.

அது வரை சாலையின் இரு பக்கங்களிலும் நெடுந் தூரத்துக்குக் காடு மண்டிக் கிடந்தது. ஆனால், இப்போது சாலையின் பக்கங்கள் வெகுதூரம் கண்களுக்குப் புலப்பட்டன. எது எப்படியிருந்தாலும் இதற்கு மேல் எங்களுக்கு வேண்டாமென்று சோழர்கள் அலட்சியப் படுத்தியது போல நாட்டின் எல்லையும் வந்தது.

வெறும் பொட்டல் காட்டுப் பிராந்தியம் எனக் கருதப்படும் கொடும்பாளூரில் ஒளிந்து கொள்வதென்றால் முள்ளுக்காடுகளும் குகைகளும் ஏராளம். முள்ளுக் காட்டைப் பார்த்தவுடன் கலங் கினான் மாறன். பயத்தினால் அல்ல. இதில் எப்படி லோகாவைத் தேடி பிடிப்பது? அவள் கதியைப் பற்றி அறிந்துகொள்ள அவன் உள்ளம் துடி துடித்தது. 'ஏதோ ஒரு யூகத்தில் இங்கு வந்துவிட்டோம். அது தவறாய் இருந்தால் ? அப்போது லோகாவின் நிலையென்னவாகும்? இங்கு இல்லாமல் அவள் இலங்கையில் இருக்கிறாளோ, இல்லை மதுரையில்தான் இருக்கிறாளோ?'

அடியானும் மாறனும் பேசிக்கொண்டே சென்றார்கள். மாறனுக்குப் பாண்டியர்களின் மீது கோபம் அதிகமாயிருந்தது. ''நம்மை நிம்மதியாகவே இருக்க விட மாட்டானா இந்த ரவிதாசன்?'' என்றான்

அடியான் தலையை அசைத்தான், 'இல்லை'யென்பது போல. ''பெயரளவுக்குப் பெரிய போராட்டம் போலிருக்கும் பாண்டி யரின் முயற்சி. அது ரவிதாசன் செய்யும் பெரிய செயல்களினால். நம் கவனத்தைக் கவரும் மாபெரும் அதிர்ச்சியூட்டும் செயல் களைச் செய்வதனால் அவனிடம் பெரும் படையிருக்கிறது என்ற நினைப்பு வரும். நமக்கு மட்டுமல்ல. நம்முடன் ஒத்து வாழ எண்ணும் பாண்டிய மக்களுக்கும் அது வியப்பளிக்கவேண்டும். நன்றாயப் பார். ஒரு சோழ நாட்டுப் போர்வீரனைக் கூட அவன் கொன்றதில்லை. நேரடியாகப் பட்டத்து இளவரசனை கொலை செய்தான்'' என்று ரவிதாசனின் வியூகங்களைப் பற்றி விளக்கினான்.

''ஆம்'' என்றான் மாறன். அதுவும் அந்தக் கொலை நடந்தது தன் மாளிகையில். அங்கு வைத்து இங்கு வைத்து அப்போதும் தன் தலைக்கு மேலேயே கையை வைத்துவிட்டனர். அது முதல் சங்கடம். இப்போது தன் உயிருக்கு உயிரான காதலியைக் கடத்தி விட்டான். ''ஒரு நாளைக்கு அந்தச் ரவிதாசனைக் கையும் மெய்யு மாகப் பிடித்து அவன் கழுத்தை நெரிப்பேன்'' என்றான் மாறன்

"தூது அனுப்பி, போர்க் களத்தை நிர்ணயித்து, போர் முரசு கொட்டி, குதிரைகள் கனைக்க, யானைகள் பிளிற, வாள்கள் மோதும் போது தீப்பொறி பறக்க நடக்கும் போருக்குப் பாண்டியர் தயாரில்லை. ராஜதந்திரத்தை நம்பியே வாழ்கிறார்கள்" என்றான் அடியான்.

"இந்தக் கடத்தல் வேலைகளெல்லாம் அவனுடைய இயலாமையினால் வருபவை. கத்தியினால் ஒரு கை பார்க்கமுடியாது. ஆனால், யுக்தியினால் ஒரு கை பார்க்கலாம் என்று முடிவு செய்துவிட்டான் ரவிதாசன். சராசரியாகப் போர் நடக்கும் போது பொதுமக்கள்தான் அபாயத்தை அதிகம் எதிர்கொள்வார்கள். ஆனால், இதில் நம்மைப் போல அரசாங்க சேவையில் ஈடுபட்டவர்களுக்கு மட்டுமே அபாயம் அதிகம்" என்றான் மாறன்.

"என்னதான் சொல்லுங்கள் இளவரசே! அரசகுலப் பணியைவிடச் சிறந்தது ஏதும் இல்லை. அதுவே மனிதனை உயர்த்தும். நாடிழந்து நூறாண்டுகளானது வந்தியதேவனுக்கு. மீண்டும் மாபெரும் பதவிக்கு உயரவில்லையா அவன்? அப்படிக்கும் ஆதித்தனின் தூதனாகத்தான் தஞ்சைக்கு முதலில் வந்தான்."

"அது அவரவர் ராசியைப் பொருத்தது. தனக்கு விதிக்கப்பட்ட முதல் வேலையிலேயே வெற்றி பெற்றான் அவன். இப்போது பாருங்கள் நான்காவது முறையாய் நம்மை அனுப்புகிறார்கள். முதலில் மரம் ஏறித் தோல்வியடைந்தோம். அடுத்த முறை செல்வதற்கு முன்பே காரியம் முடிந்தது. இலங்கைக்கு நாம் சென்றிருக்கவே தேவையில்லை. அடுத்தது இந்த வேலை எப்படி முடியுமோ?" என்று சொன்னான் மாறன்.

"ஆமாம். பழுவேட்டரையருக்குக் கூட நம்மை அனுப்புவதில் இஷ்டம் இல்லை. 'இவர்களா?' என்று எவ்வளவு கேவலமாய்க் கேட்டார் பார்த்திரா?"

பிரதமர் வீட்டில் நடந்த சந்திப்பை நினைத்து வெட்கம் கொண்டான் மாறன். "எனக்கு உலகே வெறுத்துவிட்டது. நானும் உம்மைப் போல ஆண்டவன் சேவையில் இறங்கலாமா என்று யோசிக்கிறேன்" என்றான்.

"தம்பி, காதலில் தோற்றால் உலகத்தைத் துறந்து காவித் துணி புனைந்துவிடலாம் என்று தோன்றும். ஆனால், அதெல்லாம் அடுத்த பெண்ணைப் பார்க்கும் வரைதான்" என்றான் அடியான்.

திரும்பி முறைத்தான் மாறன் "என்ன சொல்லுகிறீர் ?"

அடியான் பின்வாங்கினான். "காதல் என்று உதாரணத்துக்குச் சொன்னேன். அது போலத் தோல்வியைச் சந்தித்த எல்லாரும் சன்னியாசியானார்கள் என்றால் யாருக்கும் காவித்துணியே கிடைக்காது என்று சொல்ல வந்தேன். உலகளந்த பெருமானுடைய பாதார விந்தங்களை தரிசிப்பதற்குத் அலைவது எளிது என்று எண்ணாதே. அதிலும் பல கஷ்டங்கள் உண்டு" என்றான் அடியான்.



ஆனால், மாறனுக்கு நன்கு தெரியும். அடியான் சொன்னது காதலைப் பற்றித் தான் என்று. எல்லாவற்றையும் புரிந்து கொள்ளும் திறன் கொண்ட இந்த வைணவன் பொல்லாதவன் தான். முறைத்தான் அந்த வைணவனைப் பார்த்து.

இருவரும் பேசாமல் குதிரையைச் செலுத்திச் சென்றனர். கொடும்பாளூரில் சமதளமான பாதைகளே கிடையாது. நிலத்தின் மேடு பள்ளங்களுக்கு ஏற்றாற்போல் சாலைகளும் மேலும் கீழுமாய்ச் சென்றன. அதனால் மேட்டில் இருக்கும்போது வெகு தூரம் வரை கண்ணுக்குப் புலப்படும். அப்படி ஒரு மேட்டில் இருக்கும் போது தூரத்தில் குதிரையில் அவர்களை நோக்கி ஒருவன் வெகு வேகமாக வந்து கொண்டிருந்தது தெரிந்தது. குதிரையின் கால்கள் தரையில் பட்டனவா என்றே சந்தேகம். ஆனால், பட்டிருக்க வேண்டும். குதிரை ஒவ்வொரு பாய்ச்சலிலும் புழுதிப்படலத்தைக் கிளப்பிக்கொண்டு வந்தது. தூரத்திலிருந்து வந்தவன் மேல் நோக்கிப் பார்த்திருந்தால் மட்டுமே இவர்கள் அவனுக்குத் தென்பட்டிருப்பார்கள்.

"ஆகா! நம் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். அவனை நிறுத்தி இந்த பிரதேசத்தில் சந்தேகத்துக்கு இடம் கொடுப்பது போல யாரேனும் நடமாடுகிறார்களா என்று கேட்கலாம்" என்றான் மாறன்.

"இல்லை இளவரசே, பாதையை விட்டு இறங்கி நிற்போம். இவன் நம் நோக்கத்துக்கு ஏதுவாக இருக்கமாட்டான் என்று நினைக்கிறேன்" என்றான் அடியான். அவனுக்கு ஏதோ உள்ளுணர்வில் அப்படித் தோன்றியிருக்க வேண்டும். அவன் எதிரியாயிருந்தால் அவன் கண்களில் அகப்பட்டுக் கொள்வதில் அபாயம் அதிகம் இருக்கிறது. அடியான் அக்காட்டுப் பாதையின் மீது குதிரையை நிறுத்திச் சுற்று முற்றும் பார்த்தான். குதிரைகளைப் பாதையிலிருந்து இறக்கிக் கொஞ்சதூரத்தில் காணப்பட்ட ஒரு சிறு பாறைக்குப் பின்புறத்தில் இருவருமாய்ச் சென்று குதிரைகளை ஒரு மரத்தில் கட்டிவிட்டனர். மீண்டும் பாதையோரமாக வந்து ஒளிந்து கொண்டனர்.

குதிரையில் வந்தவன் மேட்டில் ஏறி வந்ததால் வேகம் குறைவாகவே இருந்தது. குதிரையும் களைத்துப்போயிருந்தது. அதனால்

மெல்ல வந்தது. சந்தேகத்துக்கு அப்பாற்பட்டவனாய் இருந்தால், சென்று ஏதாவது விவரம் கேட்கலாம் என்று முடிவெடுத்தனர். ஆனால், அவனைப் பார்த்தவுடன் அடியான் சந்தேகித்தது போல அது எதிரிதான் என்று அறிந்தனர்.

வந்தவன் மத்தகஜத்தின் சக்திகொண்டவன். பாண்டியர் விடு தலை வேட்கையில் முழுமையாக ஈடுபட்டுள்ளவன். அவனுக்கு மந்திரம் வேறு தெரியுமாம். ஆனாலும் ரவிதாசன், ஓரத்தில் நின்று தன்னையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த இருவரையும் சற்றும் பொருட்படுத்தாதவனாய் அவர்களைக் கடந்து தஞ்சையை நோக்கிச் சென்றான். இந்த முறையும் அவன் குதிரையை நிறுத்திச் சிரிப்பான் என்று நினைத்தனர். ஆனால், அவ்வாறு அவன் செய்ய வில்லை. கோடிக்கரையில் குருட்டு அதிர்ஷ்டத்தில் இவர்களை நோட்டம் விட்டிருக்கவேண்டும். அதனால் அவன் மாயாவி அல்ல.

ரவிதாசனின் குதிரை அவர்களைக் கடந்தது. இருவருக்கும் ரவிதாசன் 'தஞ்சைக்கு ஏன் செல்கிறான்? வேறு யாரையாவது கடத்தவா?' என்று முதலில் தோன்றியது.

''இல்லை, இல்லை, பழுவூர் அரசரைக் கண்டு பேசச் செல் கிறான். அப்படியென்றால் நாம் செல்லும் திசை சரியானதுதான். இங்கு சமீபத்தில் தான் இளவரசியை மறைத்து வைத்திருக்க வெண்டும்'' என்றான் மாறன்.

''இப்போது அங்கே ரவிதாசன் இல்லாதது இன்னமும் சுலபமாக்கும் நம் வேலையை'' என்றான் அடியான்.

மாறனுக்கு ஒரு நிம்மதி. வெகு சமீபத்தில்தான் இருந்தாள் லோகா. எப்படியாவது கண்டுப்பிடித்துவிடவேண்டும். மறுபடியும் ரவிதாசனைச் சந்திக்காமல் லோகாவுடன் தப்பித்துக் கொண்டு போய்விட்டால் மிகவும் நல்லது.

எதிரியின் குதிரை கண்ணுக்கெட்டிய தூரம் கடந்தவுடன் இருவரும் பாறைக்குப் பின்னாலிருந்து வெளியேறினார்கள். பயணத்தைத் தொடர்ந்தார்கள். ஒரு மலைத்தொடரைக் கடந்த பின் பாதை குறுகியது. மேடும் பள்ளமுமாய் வேறு இருந்தது. குதிரையின் தலைக்கயிற்றைப் பிடித்து நடத்திக் கொண்டு சென்றனர். அதற்கு மேல் அவர்களைப் பாரமாய்ச் சுமந்து வந்த குதிரைகள் இனிமேல் அவர்களுக்குப் பாரமாகும். வேகமாய் அழைத்து வந்தவை இனி வேகத்தைக் குறைக்கும் என்றறிந்தனர்.

ஒரு கிராமத்தில் ஊர் தலைவனைக் கூப்பிட்டு அவனிடம் இலச் சினை மோதிரத்தைக் காட்டிக் குதிரைகளை ஒப்படைத்தனர்.



குனிந்து இலச்சினையை உற்றுப் பார்த்த கிராமத் தலைவன் மறுபடி நிமிர்ந்து அரசாங்க வேலையாய் வந்தவர்களிடம் வந்தனம் கூறினான். இலச்சினையைப் பார்த்தபின் ஊர்த் தலைவர் இனி அந்த புரவிகளை தன் புதல்வர்களைவிட அதிக நேசத்துடன் கவனிப்பார் என்று அவர்களுக்குத் தெரியும்.

பின் உடனே அவர்களுக்கு உணவு தயார் செய்யப்பட்டது. உண்ட களைப்பில் இருவரும் சற்றுத் தலையைச் சாய்ந்தனர். படுத்திருந்த போது லோகாவின் முகம் அவன் நினைவில் வந்து மாறனின் மனதில் நிழலாடியது. ''வா, வந்து என்னைக் காப்பாற்று'' என்பது போல அவள் பேசியதாய் ஒரு பிரமை. திடுக்கிட்டு எழுந்தான்.

''வாருங்கள் புறப்படலாம்!'' என்றான் மாறன் அடியானையும் எழுப்பி.

''என்ன அவசரம்?'' என்றான் அடியான்

ஆனால், பதில் சொல்லாமல் நடக்கத் தொடங்கிய மாறன் ஒரு இருபது காலடிகள் முன்னால் சென்றுவிட்டான். வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து அடியானும் பின் தொடர்ந்தான்.

''சீக்கிரம் வாரும். நீர் நகர்ந்து உருண்டு வருவதால் போகும் இடத்துக்கு செல்ல நேரம் அதிகமாக ஆகிறது. எதிரி தயாராவதற்கு அதுவே அவகாசம் தருகிறது '' என்றான் மாறன்.

சற்று தூரம் நடந்த பின் நிலபரப்பில் ஒரு அதிசயம் நடந்தது. அமைதியாயிருந்த சூழலில் இப்போது பேரிரைச்சல் கேட்டது. நதிப் பிரவாகத்தின் 'ஹோ' என்ற ஓசை காதினைச் செவிடாக்கி விடும் போலிருந்தது. ஆகா, கொடும்பாளூரில் இப்படிப் பட்ட நதியா? பின் ஏன் இந்த வறட்சி. பின்தான் புரிந்தது. இது காட்டாறு. அவ்வப்போது வெள்ளம் பெருக்கெடுத்தாலும் ஆண்டு முழுவதும் காய்ந்த நிலமாய்த் தானிருக்குமென்று.

நதி ஓரத்தில் ஆலம் விழுதுகளில் கட்டிப் போட்டிருந்த தோணிகளும் தெப்பங்களும் இருந்தன. தண்ணீர்ப் பிரவாகம் அடித்துக் கொண்டு போவதற்கு எவ்வளவோ வீராவேசத்துடன் முயன்றது. ஆனால், அவை இறுக்கிக் கட்டப்பட்டிருந்தன.

அக்காலத்தில் தோணிகள் பல ஆற்றைக் கடப்பதற்கு ஆயத்த மாக இருக்கும். எடுத்துச் செல்பவர் எதிர்க் கரையில் அதைக் கயிற்றைக்கொண்டு மரத்தில் கட்டிவிட்டுச் செல்லவேண்டும். பல தோணிகளைக் கிராமத்தலைவன் தன் கட்டுப்பாட்டில் வைத் திருப்பான். தோணிகளை வாங்கவும் பழுது பார்க்கவும் அரசனின் மானியமுண்டு.

அதில் ஒரு தோணியைத் தேர்ந்தெடுத்தான் அடியான். இருவருமாய் ஏறியவுடன் கயிறைக் கட்டவிழ்த்துவிட்டான். பிரவாகத்தைக் கடக்கும் அந்த பிரயாணம் பயங்கரமாக இருந்தது. அக்கரை சென்றவுடன் தான் இருவருக்கும் நிம்மதியாய் இருந்தது.

மறுகரையில் தோணியை மீண்டும் கட்டிவிட்டு நடக்கலானார்கள். பல மணி நேரம் காட்டுப் பாதையில் நடந்தனர். மீண்டும் நிலப்பரப்பு மாறியது. ஒரு குன்றின் மீது கோயிலொன்று பாழடைந்திருந்தது. ''இது தான் விஜயாலய சோழீச்சரம் என்பது'' என்றான்அடியான்.

சரித்திரத்தில் இரண்டாம் முறை சோழர்களை எழுந்து நிற்க வைத்தவன் விஜயாலயன் தான். ஆனால், இந்தக் கோயிலை அவன் கட்டவில்லை. அவனுக்கு முன் தஞ்சையை ஆண்ட முத்தரையரிடமிருந்து இந்த கோயில்களைக் கவர்ந்து கொண்டவன், தன்னுடைய பெயரை மட்டும் இதற்குச் சூட்டிவிட்டான்.

''கொடும்பாளூர் என்றால் பாலைவனத்தில் பாதி என்பதைக் கண்டு வந்தோமே. ஆனால், இந்த இடம் ஒரு சோலையாக இருக்கிறதே'' என்று நினைத்தார்கள்.

திடீரென எதிர்காற்றில் நீரின் வாடை அடித்தது. உற்றுக் கேட்டால் நீரின் சப்தமும் கேட்டது. மீண்டும் ஒரு காட்டாற்றைக் கடக்கவேண்டுமா என்று பயந்தனர். ஆனால், இது சிறியதொரு குளமோ குட்டையோ என்று தோன்றியது.

காட்டாற்றுப் பிரவாகத்தைக் கடந்தபோதுதான் கடைசியாக நீர் அருந்தியிருந்தார்கள். இப்போது தொண்டை வறண்டு போயிருந்தது. குளத்தில் இறங்கி முகம் கழுவி ஒரு வாய் நீரைப் பருகிக்கொள்ளலாம் என்று நினைத்தான் மாறன். ஆனால், அங்கு ஏதோ சப்தங்கள் கேட்டன. அவை காட்டின் இயற்கையான சப்தங்கள் அல்ல. சிறிது யோசனை செய்துவிட்டுச் செயல்படலாம் என்று மாறன் எண்ணினான். அப்படியே அசையாமல் நின்றார்கள் இருவரும்.

ஏதாவது காட்டு விலங்கு நீர்பருகும் போது அந்த சப்தத்தைச் செய்கின்றதா என்ன என்று யோசித்த சமயத்தில் சத்தமும் பேச்சு வார்த்தையும் சமீபத்தில் கேட்கவே அவர்கள் மறைந்து கொண்டார்கள்.

மாறன் காது கொடுத்துக் கவனமாகக் கேட்டான். 'ஆகா! தண்ணீரைக் கையால் அடிக்கும் ஓசை!...' அங்கிருப்பவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதை அவன் கேட்க



முயன்றான். ஆனால், அவர்களுடைய பேச்சு ஒன்றும் தெளிவாக அவன் காதில் விழவில்லை.

ஆனால், ஒன்று நிச்சயம். ஆண்களின் குரலே கேட்கவில்லை. பெண்கள் ஸ்நானத்துக்கு வந்துள்ளனர் மாலை வேளையில். ஆனால், காட்டில் இவர்கள் யாராயிருக்கும்?

காட்டில் மரங்கள் அடர்த்தியாய் இருந்தன. அவை அமைத்த விருக்ஷச் சுவற்றில் ஒரு பெரியத் துவாரம் தெரிந்தது. அடங்காத ஆவலுடன் மாறன் அந்தத் துவாரத்துக்கு அருகில் முகத்தை நீட்டி எட்டிப் பார்த்தான்.

''சீக்கிரம் குளித்துவிட்டு வா'' என்று அந்தக் கரையிலிருந்த பெண் கூற நீரில் இருந்தவளோ ''முடியாது'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

கானகத்தில் காரிருள்சூழ ஆரம்பித்திருந்தது. விழிகளைக் கூர்மையாக்கிப் பார்க்கவேண்டியிருந்தது. மேலும் கண் விழிகள் பிதுங்கும்படி உற்றுப் பார்த்து அந்த உருவங்களில் ஒன்று யாருடையது என்பதை ஒருவாறு தெரிந்து கொண்டான் மாறன்.

குளத்தின் நடுவில் ஒரு பெண்ணின் முகம் தெரிந்தது. அது ஓர் அழகிய இளம் பெண்ணின் முகம். ஆனால், அந்தப் பெண்ணும் அவனைப் பார்த்துவிட்டாள் என்று தெரிந்தது. அந்த முகத்திலிருந்த பெரிய கண்கள் இரண்டும் இப்போது இன்னும் அகலமாக விரிந்து, சொல்ல முடியாத வியப்பைக் காட்டின. வியப்புடன் சிறிது ஆனந்தமும் அப்பார்வையில் பிரதிபலித்தது. அவன் தனக்காக வந்துள்ளான் என்பதை எண்ணிப் பூரிப்படைந்தாள் தடாகத்தின் நடுவே இருந்த அந்த அழகு தேவதை.

மாறனுக்கு அவளைக் கண்டுப்பிடிப்பதில் அவ்வளவாகச் சிரமம் இல்லை. ஆனால், அவளை வெளியே கொண்டுவருவது தான் கஷ்டம் என நினைத்தான்.

அதுவும் இப்படி எதிர்பராமல் காட்டில் அவளைப் பார்த்ததில் ஒருவிதமான மயக்க நிலையே உண்டாகியிருந்தது என்பதை இப்போது உணர்ந்தான். அவளைப் பார்த்துக் கொண்டிருந்தபோது அவன் அறிவு அவனை விட்டு அகன்றது.

''இப்போது தான் மூளைக்கு வேலை கொடுக்கவேண்டும். இப்போது பார்த்து மூளை வேலை செய்ய மறுக்கிறதே!'' என மனம் நொந்தான்.

❖ ❖ ❖

## அத்தியாயம் தொண்ணூறு
## பாண்டியருக்கு விரித்த வலை

**கா**ட்டிற்கு வந்தவுடன் அக்காவுக்கும் தங்கைக்கும் சண்டை ஆரம்பித்தது. அக்கா கடைசியாகக் கூறிய வார்த்தைகளைக் கேட்டு, லோகா கதறிக் கதறி அழுதாள். மூர்ச்சையடைந்து விழாத குறை! மூர்ச்சையென்ன? செத்தே போயிருக்கலாம் என்ற எண்ணம் கூட வந்தது அவளுக்கு.

''நீயும் என் கணவரைத் திருமணம் செய்துகொண்டு எங்களுடன் விடுதலைப் போராட்டத்தில் கலந்துகொள்'' என்று சொல்லிவிட்டாள் அவள் தமக்கை. ''என்னுடைய வார்த்தையை உதாசீனம் செய்து தப்பிக்கலாம் என்று எண்ணாதே. என் பேச்சைக் கேட்காத தங்கை இருந்தால் என்ன,அவள் இறந்தால் எனக்கு என்ன?'' என்றும் மிரட்டினாள்.

காட்டுக்குப் போய் இரவு பகலாய்ச் சுற்றியலைந்து திரிபவருக்கு இன்னும் ஒருவர் பாரம் எதற்கு? அதில் ஏதோ அந்தரங்கம் இருக்க வேண்டுமென்று முதலில் சந்தேகித்தாள் லோகா. அந்தச் சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று அக்காவின் பேச்சைக் கேட்டபின்.

மதுராந்தகன் வீரமற்றவன் என்றும், போர்க்களத்தையே பார்த்து அறியாதவன் என்றும், தஞ்சையில் இருந்தவரை உடம்பெல்லாம் விபூதி பூசி ருத்திராட்சம் அணிந்து சாமியார் ஆகப் போவதாகச் சொல்லி வந்தவன் என்றும் லோகாவுக்குத் தெரியும். வீரமான ஆண்கள் வலம் வந்த பழுவூர்ப் பரம்பரையில் அப்படிப் பட்ட ஆளுக்கு அதிகம் மதிப்பு இராதுதான். ஆனால், இன்று அவன் உடலமைப்பே மாறியிருந்தது. அக்காவின் மாற்றத்தைக் கண்டே திகைத்தவள், அவள் கணவனைக் கண்டு அதிர்ந்தே போனாள். ஒரு மனிதனிடம் இவ்வளவு மாற்றமா?

அவர்தான் அடுத்த பாண்டிய நாட்டுச் சக்கரவர்த்தியாகப் போகிறார் என்று அக்கா சொன்னாள். அதற்கு பழுவூர் கொடுக்கும் ஆதரவு வேண்டும் என்றுதான் லோகாவையும் அழைத்து வந்தார்கள் என்றும் சொன்னாள். லோகாவின் அருவருப்பு அதிகமாயிற்று. ''ச்சீ! இப்படிப் பயந்துப் பயந்து காட்டில் வாழ்ந்து வருகிறவனையா நான் மணக்கவேண்டும்? ஒருநாளும் முடியாது!''

லோகா மன உறுதியடைந்தாள். 'கொன்று போட்டாலும் சரி. அக்காள் புருஷனை மணந்து கொள்ள முடியாது' என்று மனதில் முடிவு செய்து கொண்டாள். 'அந்தத் தேசப் பிரஷ்டனை



மறைப்பதா? அவன் மனைவிக்கு வயிற்றிலே ஒன்பதுமாதம் வரை குழந்தையை சுமந்து கொண்டே காட்டில் திரியும் நிலை. சோழ நாட்டுத் தெருக்களில் அப்படி ஏழைகளிலும் ஏழைக்குக் கூட அந்த நிலை வராது. காட்டில் ஒவ்வொரு முறையும் புதுப் பாதையைத் தேர்ந்தெடுத்தாலும் எப்போதும் உயிருக்கு ஆபத்து என்ற வாழ்க்கை. நாளைக் காலை எழும்போது கைதியாவோமா இல்லை காலனுக்கு இரையாவோமா என்ற கேள்வி. இப்படியொரு நிலை எனக்குமா?"

லோகாவுக்கு அழுகை நின்றவுடன் அக்காவிடம் மன்றாடிப் பார்த்தாள். அக்காவின் இந்தப் பேச்சு அவளுக்கு ஒன்றும் பிடிக்க வில்லை. தன் தலைமேல் மண்ணைவாரிப் போட்டுக்கொண்டவள் லோகாவுக்கும் அதே கதியைச் செய்யத் துடிக்கிறாள். லோகாவின் தாய் அவள் குழந்தைப் பருவத்திலேயே கண்ணை மூடிவிட்டாள். ''இவளே என்னை வளர்த்தாள். ஆனால், இன்று என்னைப் பாதாளத்துக்குத் தள்ளப் பார்க்கிறாளே'' என்ற வெறுப்பு லோகாவுக்கு.

''பழுவூர்க் குலத்தில் பிறக்கும் பாக்கியத்துக்காக எல்லாரும் தவம் கிடப்பார்கள் அக்கா!'' என்று சொல்லிப் பார்த்தாள்.

அக்கா அதற்கு ''பழுவூர் மேல் நான் போர் செய்யவில்லையே! தாய் வீட்டின் மீது எனக்குக் குரோதம் இல்லையே! அவர்கள் சேவகம் செய்யும் நன்றிகெட்ட சோழர் குலம்தான் எனக்கு முதல் எதிரி'' என்றாள்.

தூரத்தில் நின்று அனைவரும் அவள் பேசும் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்தனர். கண்ணில் தீப்பொறிப் பறக்க அக்காளை ஒரு தடவை விழித்துப் பார்த்து லோகா சீறினாள். ''நீதான் நம் குலத்துக்கு அழியாத பழியைத்தேடித் தந்துவிட்டாய். எத்தனை தீர்த்தங்களில் மூழ்கி எழுந்தாலும் உனது பாவத்தைத் தீர்த்துக் கொள்ளுவது கடினம். அக்கா மீண்டும் வா. அப்பாவுக்குச் சேவை செய்து பாவத்தைப் போக்கிக் கொள்ளப் பார்'' என்றாள்.

அவள் மசிவதாகத் தெரியவில்லை. உடனே லோகா ''அக்கா, பெண்ணைக் கடத்தும் அளவுக்கு கீழ்த்தரமானதாகப் போனதா பாண்டியர் போராட்டம்? இதற்கு அவர் சக்கரவர்த்தி. நீ ராணியா?''என்று கேட்டாள்

அக்கா அந்த கேள்வியை எதிர்பார்த்தவளாய் ''இல்லையடி! இது ராஜதந்திரம்'' என்றாள்

லோகா மன்றாடினாள் ''அக்கா, தந்தையின் நிலையை அலட்சியம் செய்யாதே. அப்பா மிகவும் சோர்ந்து போயிருப்பார். நான்

உடனே ஊரைப் பார்க்கப் போனால்தான் பயனுண்டு. அக்கா என்னைப் போகவிடு. அது எனக்குப் பேருதவியாக இருக்கும். நீ சென்ற போதே அப்பாவை பற்றி ஊரே பரிகாசமாகவும், நிந்தனையாகவும் பேசிக் கொண்டது. இப்போது அதைவிடக் கேவலமாய்ப் போய்விடும். சோழ குலத்தின் விரோதிகளாய் வாழ்வதைவிட நம் குலம் அழிந்தாலும் பரவாயில்லை, அக்கா.''

''நீயே கஷ்டப்படுகிறாய். பின்னே என்னையும் அந்த தண்டனைக்கு ஏன் உள்ளாக்க விரும்புகிறாய்?'' என்று அக்காவிடம் எடுத்து கூறியும் பலனில்லை. அக்கா கோபமடைந்தாள். ''இந்தப் பிடிவாதம் உனக்கு ஆகாது. நீ ஒப்புக்கொள்ளவில்லையென்றால் உன்னை உயிரற்ற சவமாய்த்தான் தஞ்சைக்கு இவர்கள் அனுப்புவார்கள்'' என்று மிரட்டினாள்.

அப்போதுதான் லோகா, நிலைமை இன்னதென்பதை உணர்ந்தாள். தான் ஒரு பெரிய சதியில் அகப்பட்டுக்கொண்டு விட்டோம் என்று தெரியவந்தது.

''உன்னை, அந்த சம்புவராயனை வைத்து கொல்லச் சொல்லியிருக்க வேண்டும். எனக்காகத்தான் அவன் உன்னை உயிருடன் விட்டான்'' என்று முணுமுணுத்தாள். சம்புவராயனை நினைத்த பின் அவன் நினைவுகள் அவளைச் சூழ்ந்தன. அவள் உள்ளத்தில் அவனது செயல் பதிந்து விட்டது. அவனுடைய முகம் அவளுடைய ஞாபகத்தில் நிலைத்துவிட்டது. மாறனின் கரிசனத்தைக் கண்டு அவள் மனம் அவனிடம் ஈடுபட்டிருந்தது. பலமிருந்தும் பாவ புண்ணியம் பார்ப்பவன் அவன். அவன் முன் இவர்களெல்லாம் கோழைகளே. மாறனின் முகம் நினைவுக்கு வந்தபோது அவளுடைய மன உறுதி இன்னமும் வலுவடைந்தது.

இப்படியே சண்டை சச்சரவுடன் காட்டில் நாட்கள் நகர்ந்தன. லோகாவுக்குச் சலிப்புத் தட்டியது. அக்காவைப் பார்க்க வந்து ஐந்து நாட்களாகிவிட்டன. ஒவ்வொரு உதயத்தையும் எண்ணி வைத்திருந்தாள்.

'இங்கே என்ன நமக்கு வேலை? எதற்காக இங்கு வந்தோம்? - என்ன அறிவீனம்? உடனே தப்பிப் போய்விட வேண்டியதுதான்' என்று அடிக்கடி தோன்றியது. ஆனால், இன்னமும் எந்த வழியும் புலப்படவில்லை. லோகாவுக்கு மற்றுமொரு பயம். இனி தன்னைத் தேடி யாரும் வருவார்கள் என்றும் அவள் நம்பவில்லை.

லோகாவுக்குச் சிறிதளவும் நம்பிக்கையில்லை. தம்மை நாட்டில் மறந்து போய்விட்டார்கள் என்பதில் சந்தேகம் சிறிதுமில்லை. குற்றம் தன்பேரில் தான் உண்டோ என்று பல சமயம் தோன்றும்.



சொல்லாமல் வந்திருக்கக்கூடாது. யாரிடமாவது, யாரைத் தேடி செல்கிறோம் என்றாவது சொல்லிவிட்டு வந்திருக்கவேண்டும்.

''செய்தியை உன்னிடம் மாத்திரந்தான் சொல்ல வேண்டும், அந்தரங்கமான விஷயம்'' என்று சொல்லி அருகில் யாரையும் ஒட்டுக் கேட்கக் கூடவிடவில்லையே இந்த ராக்கம்மாள். பின் நான் எங்கு சென்றிருக்கிறேன் என்று எப்படி யூகிப்பார்கள்? எப்படி என்னைத் தேட ஆள் அனுப்புவார்கள்?'' என்ற கேள்விகள் அவள் மனதை அரித்தன. அப்போது அவ்வளவு எளிதாய் நமக்கு விமோசனம் கிட்டாதே என்று ஒரு பயம் உண்டானது.

பிணைக் கைதியாய் வைத்திருந்தால் கூடப் பரவாயில்லை. ஆனால், இந்த திருமணப் பேச்சல்லாம் கேட்கவே சகிக்கவில்லை. ஒரு வினாடி கூடத் தாமதியாமல் நாம் தப்பிக்கும் வழியைப் பார்க்கவேண்டும் என்று நினைத்தாள் லோகா. ஆனால், கானகத்தில் எந்த திசையில் எப்படித் தப்பிப்பது?

லோகா மனம் நொந்து போனாள். ''இப்படி வஞ்சக வலையில் விழுந்துவிட்டோமே? இனி தந்தையைப் பார்க்கவே முடியாதா?'' அக்காவிடம் தினந்தினம் கெஞ்சிப் பார்த்தாள். ''அப்பா இந்த வயதான காலத்தில் தனியாக என்ன செய்வார்? நான் அங்கு போகவேண்டும்.''

''தொலைந்து போ! என் கண் முன்னால் நிற்காதே!' என்று என்னை விரட்டியவர், கஷ்டப்படட்டுமே'' என்று அக்கா திட்டினாள். ''இப்படித் தன்னந்தனியாக அந்த கிழவர் தவித்தால் தான், என் அருமை அவருக்குத் தெரியும்'' என்றாள். பழையதையெல்லாம் மாற்றிப் பேசுகிறாள் அக்கா. அவளைத் தந்தையார் விரட்டவில்லை என்பதுதான் உண்மை. இதைச் சுட்டிக்காட்டி மீண்டும் சண்டையை வளர்க்கவேண்டாம் என்று முடிவெடுத்தாள் லோகா.

திருமணப் பேச்சுக்கு அவளது அருவருப்பை அறிந்த பாண்டியர்கள் அதைப் பற்றி மீண்டும் அவளிடம் பேச்செடுக்க வேண்டாம் என்று முடிவெடுத்தனர். அவர்கள் அந்த பேச்சை மீண்டும் எடுக்காததால் அவளுடைய அருவருப்பு வெகுவாகத் தணிந்து போயிருந்தது. ஆனால், அமைதியைக் காப்பதனால் தன்னைச் சாந்தப்படுத்தித் திசை மாற்றிவிடப் பார்க்கிறார்களோ என்ற சந்தேகமும் வந்தது.

''உனக்குக் கலியாணம் இஷ்டமில்லையென்றால் விட்டுவிடுகிறோம். ஆனால், அப்பா மனதை மாற்ற உன் உதவியெனக்குத் தேவை. சில நாட்கள் இங்கிரு. பிறகு நானே உன்னை அழைத்துச்

சென்று வீட்டில் விட்டு விடுகிறேன்'' என்று அக்கா கடைசியாய்ச் சொல்லியிருந்தாள்.

'ஆனால், அவளுடைய விஷந்தோய்ந்த வார்த்தைகளை நம்பி விடக்கூடாது. புஜங்கனுக்கு அவளை மணம் செய்து கொடுக்கும் எண்ணத்தை அக்கா கைவிடமாட்டாள். இத்தகைய பாக்யத்தை தான் பெறக் கொடுத்து வைத்திருக்கவேண்டும் என்று வேறு அக்கா சொல்கிறாளே. அவளுக்குக் காட்டில் அலைந்து பித்துப் பிடித்து விட்டது போலிருக்கிறது' என்று லோகா நினைத்துக்கொண்டாள்.

எந்த நேரத்தில் என்ன நேருமோ என்ற பீதி நிறைந்த வாழ்க்கை அவளுக்குப் பிடிக்கவில்லை. அந்தத் துன்பத்தில் அவ்விரு குழந்தைகளும் தான் ஒரு பிடிப்பை ஏற்படுத்தினார்கள்.

லோகாவுக்கு தினந்தோறும் இரவில் தூக்கம் வரவில்லை. கானகத்தில் இருளுடன் சேர்ந்து ஏதேதோ சப்தங்கள் கண்களை மூடவிடவில்லை. தரையும் கரடு முரடாக இருந்தது. ஆனால், பக்கத்தில் பார்த்தால், பட்டு மெத்தையைத் தவிர தரையில் கூட படுக்கும் வழக்கமே அறியாத சகோதரி தலையணைக்கு பதிலாக தன் கையை மடித்து வைத்துக் கொண்டுப் படுத்த உடனேயே தூங்கிவிட்டாள். எப்படி என்றுதான் புரியவில்லை.

லோகாவைத் தூங்கவிடாமல் செய்தது உருவமற்ற ஒரு பயம். என்னவென்று தெரியாத ஒரு இனம் புரியாத ஆதங்கம். தனக்கும் தன் குடும்பத்துக்கும் மட்டுமே இதெல்லாம் ஏன் ஏற்படவேண்டும் என்ற கோபம். எப்போதடா விடியும் என்று புரண்டு புரண்டு படுப்பாள்

தினமும் காலையில் போராளிகள் தத்தம் வேலையைக் கவனிக்கப் புறப்பட்டார்கள். சிலருக்குக் காட்டிலேயே வேலை. சிலருக்கு நாட்டிலிருந்து செய்தி கொண்டு வரும் மனிதர்களை சந்திப்பது தான் வேலை. சிலருக்கு உணவு சேகரிப்பது. வேட்டையாடுவது. பலரும் போகிற போக்கில் லோகாவைப் பார்த்து முறைத்துவிட்டு சென்றனர். அவளை வேற்றாளாக எல்லாரும் எண்ணியதாக அவர்களுடைய முகக் குறியிலிருந்து தெரிந்தது.

பழுவூர்ப் பெண் தங்களுடன் இருந்ததில் போராளிகளுக்கும் அவ்வளவாக சந்தோஷம் இல்லைதான். அன்னியர்கள் யாரைக் கண்டாலும் இயற்கையான அருவருப்பு ஏற்பட்டது. இப்போது இத்தகைய அருவருப்பு ஏற்பட அதிகக் காரணம் இருந்தது. இதுவரை தங்களைச் சும்மா விட்டிருந்த சோழர்படை இந்தப் பெண்ணுக்காகத் தங்களை துரத்தலாம். ஆள்பலம் இல்லாதபோது இத்தகைய வேலையைச் செய்திருக்கக் கூடாது என்று பெரும்



பான்மையானோர் நினைத்தார்கள். ஆனால், யார் சென்று ரவிதாசனிடம் சொன்னாலும் அவர்களை ஆடு அல்லது மாடு என மாற்றிவிடுவானோ அந்த மந்திரவதி என்ற பயம்.

லோகாவுக்கும் அவர்களைக் கண்டால் பயம்தான். முதலில் அவர்கள் தோற்றத்தினாலும், சராசரிக் காரியங்களையே முரட்டுத்தனமாக செய்யும் விதத்தினாலும் கொஞ்சம் அச்சுறுத்தினார்கள். அதுவும் ரவிதாசனைக் கண்டால் அத்தான் கூட பயபக்தியுடன் தான் பேசினார்.

ரவிதாசன் பெரும்பான்மையான நேரத்துக்கு பேசாமல் தானிருந்தான். யாரையும் மிரட்டவில்லை. அதட்டவில்லை. ஆனால், அவனைக் காண்பதே ஒருவகை அச்சந்தரும் காட்சி யாகும். ஏன் என்று லோகாவுக்குத் தெரியவில்லை.

ஆனால், லோகாவுக்கு மிகவும் அச்சத்தைத் தந்தது தன் அக்காளின் போக்குத் தான். அக்காவின் தோற்றம் இப்போது அடியோடு மாறிப்போயிருந்தது. அதைவிட மாற்றம் அதிகமாய்க் கொண்டது அவளது குணம்தான். அவளது தமக்கை அங்கிருந்தது லோகாவின் பயத்தைக் குறைக்கவில்லை; மாறாக அதிகப் படுத்தியது.

ஆனால், மனதின் ஓரத்தில் லோகாவுக்கு ஒரு நம்பிக்கை இருக்கத்தான் செய்தது. இவ்வளவு நாள் பழுவூர்க் குலம் கும்பிட்ட தெய்வங்களும் கைவிடமாட்டார்கள் என்ற நம்பிக்கை! சரியான சந்தர்ப்பம் கிடைக்கும்வரை லோகா வெளித் தோற்றத்துக்கு அமைதியான முகத்துடன் இருக்க முடிவு செய்தாள். காலையி லிருந்து மாலை வரை குழந்தைகளுடனேயே விளையாடுவாள். குழந்தைகள் அருகிலிருந்தபோது சிறிது உற்சாகம் உண்டாயிற்று.

யாருடனாவது மனதைத் திறந்து பேசாவிட்டால் இருதயம் வெடித்து விடும் போலிருந்தது. அப்படிப் பேசக் கூடியவர்கள் இங்கு யார் இருக்கிறார்கள்? அந்த குழந்தைகளிடம் தான் பேச முடியும். லோகா அப்படியே பேசுவாள். ஒன்றும் புரியாது அந்தப் பிஞ்சுகளுக்கு. ஆனால், வருத்தப்படுகிறாள் சித்தி என்று மட்டும் தெரியும். தன் மனதை மாற்றும் முயற்சியில் இடைவிடாமல் பேசிக்கொண்டிருக்கும் அக்காவின் சமூகத்தை தவிர்ப்பதற்கு ஒரே வழி குழந்தைகளுடன் விளையாடுவதுதான். அதில் அவள் சந்தோஷமாக இருக்கிறாள் என்று தெரிந்து தொந்தரவு செய்யாமல் விட்டுவிட்டார்கள். காட்டில் குழந்தைகள் விளையாடி மகிழ ஏற்பட்டவையிருந்தன. நூற்றுக்கணக்கில் பட்டுப் பூச்சிகள் சிறகுகளை அடித்தவண்ணம் காட்டில் அங்கும் இங்குமாய்ப்

பறந்தன. அவை அரண்மனைத் தோட்டத்தில் இருக்கும் பூச்சிகள் போலில்லை. விரித்த உள்ளங்கை அளவுக்கு இருந்தன. அதைப் பிடிக்க அந்தச் சிறுவர்கள் ஓடினார்கள். பின்னால் ஓடிச்சென்று அவர்களைப் பிடித்தாள் லோகா. மரக்கிளைகளில் ஊஞ்சல் கட்டி விளையாடினார்கள். அவர்களுடன் லோகாவும் ஊஞ்சலாடினாள்.

ஆனால் குழந்தைகளைப் பார்த்தும் அவள் மனதில் சோகம் தான் பொங்கியது. இராஜ குலத்தில் பிறந்ததினால் என்ன? தஞ்சையின் வெளிப்புரத்தில் தங்கியிருக்கும் ஏழை எளிய மக்களின் குழந்தைகளுக்கு கூட இதை விட சிறந்த வாழ்க்கை இருந்தது. எப்படி அரண்மனையில் பாராட்டிச் சீராட்டி வளர வேண்டியவை. கேட்காதவர் பேச்சைக் கேட்டு இப்படி அவர்களையும் அவதிக்கு உள்ளாகியிருக்கின்றனர்.

அந்தக் குழந்தைகளுடன் விளையாடும்போது ராஜேந்திரன் அவள் மனக் கண்ணின் முன்னால் அடிக்கடி தோன்றி இன்பமளித்தான். ஆனால் அவ்வப்போது அவன் ஞாபகம் வந்தவுடன் அழுவாள். அவள் அழும்போதெல்லாம் தமது பிஞ்சு விரலினால் அந்த குழந்தைகள் அவள் கண்ணீரைத் துடைப்பார்கள்.உடனே அவர்களை இறுக அணைத்துக் கொள்வாள் லோகா. ஓடுவது ஒரே ரத்தம் அல்லவா?

பின் அக்கா மட்டும் ஏன் பைத்தியம் பிடித்தவள் போலிருக்கிறாள்? இந்தப் பொல்லாத பாண்டியரின் போதனையில் அக்கா சுய உணர்வு இழந்து விட்டாள் என்பதை அறிந்து கொண்டாள். அக்காவின் மனம் இந்தக் கானகத்து வாழ்க்கைக்கு ஏற்ற பரிபக்குவம் அடைந்திருந்தது. அதனால் அவள் இளகமாட்டாள் என்று நன்கு தெரிந்தது. அக்காவுக்கு முன் வைத்த காலைப் பின் வைக்க மனம் இல்லை. ''இதைச் செய்ய உனக்கு எப்படியக்கா மனம் வந்தது?'' என்று அவள் தோள்களைப் பிடித்துக் கதற வேண்டும் போலிருந்தது லோகாவுக்கு. அவள் தான் கஷ்டப் பட்டாலும், தங்கை நன்றாயிருக்கட்டும் என்று நினைக்க வேண்டாமா?

பாண்டியர்களும் ஆலோசனையில் இறங்கினார்கள். லோகாவின் அக்கா ரவிதாசனிடம் சென்று முறையிட்டாள். ''நாம் நினைத்தது போல அவள் திருமணத்துக்கு ஒப்புக்கொள்ள மாட்டேன் என்கிறாள்''



''சில நாள் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுமையாக இருக்க வேண்டியதுதான். வீணாகப் பகைத்துக்கொள்ளாதீர். நடைபெற முடியாத காரியமாகிவிடும்'' என்று அவனும் எச்சரித்தான்.

''அவளை நம்முடன் அந்தரங்கமாகப் பழகும்வரை விடக் கூடாது. உமது குழந்தைகள் அவளைக் கட்டுக்குள் வைத்திருக்க உதவியாயிருப்பார்கள். அவர்களிடம் பிரியமாக இருக்கிறாள். ஆனால், இதை மேலும் இழுக்கக்கூடாது. நம் காட்டு வாழ்க்கையின் கஷ்டங்களைப் பார்த்தால் அமர புஜங்கனை மணம் செய்து கொள்ள அவளுக்கு இன்னமும் சங்கடமாகிவிடும்'' என்றான்.

ரவிதாசனுக்கு, லோகா எளிதில் புஜங்கனை மணம் புரிந்து கொள்ளச் சம்மதிக்கமாட்டாள் என்று தெரியும். அவள் என்றாவது வழிக்கு வருவாள் என்று மேலும் புண்படுத்த விரும்பவில்லை. ''நான் தஞ்சை சென்று வருகிறேன்'' என்று கிளம்பிவிட்டான். ''அவ்வளவு எளிதாகக் காட்டுக்குள் யாரும் பிரவேசிக்க முடியாது. எனினும் ஜாக்கிரதையாக இருங்கள்'' என்றும் எச்சரித்தான். அவன் போனபோது பரமேசுவரனே குழுவின் தலைவனானான்.

பரமேசுவரனிடம் ''ஒன்று மட்டும் நல்லதாய்த் தோன்றுகிறது. தஞ்சையில் நாம் நினைத்து பயந்தவாறு படை திரட்டவில்லையாம். நானே சென்று மாறுவேடத்தில் பழுவேட்டரையரைச் சந்தித்துப் புத்தி புகட்டப்போகிறேன்'' என்றான் ரவிதாசன் கிளம்புவதற்கு முன். அதன் பின் தஞ்சையை நோக்கிப் பயணம் மேற்கொண்டான்.

முதலில் பழுவூர் இளைய இளவரசி லோகா கானகத்துக்கு விருந்தாளியாக வரப்போகும் திட்டம் ரவிதாசனுக்கு பெரும் மகிழ்ச்சியைக் கொடுத்திருந்தது. ''பழுவூரின் பார்வை நம் மீது பட்டால் போதும். சோழர்களுக்கு ராசியே பழுவூரின் நட்புத்தான். அந்தப் பேறு பெறுவதற்காகத் தவம் கிடக்கிறார்கள்.''

பின் திட்டம் நிறைவேறியவுடன் சந்தோஷப்பட்டான். ''ராக்கம்மாள் என்றால் ராக்கம்மாள் தான். சொன்ன வேலையைச் சட்டென முடிக்க நீ இருக்கும்வரை பாண்டியர் போராட்டத்துக்கு என்ன தீங்கு ஏற்பட முடியும்?'' என்று இளவரசியைக் கொண்டு வந்த ராக்கம்மாளை வாழ்த்தினான்.

ராக்கம்மாள் எனும் பெண்மூலம் காரியம் எளிதிலே நடந்து விட்டது. போன முறை ராக்கம்மாள் பழுவூர் பெரிய இளவரசியான புஜங்கனின் மனைவியை அழைத்துவந்தபோது கூடப் போராட்டத்துக்குப் பெரும் ஆதாயம் கிட்டவில்லை. இந்தத் தடவை ராக்கம்மாள் அதிர்ஷ்ட தேவதையை அழைத்து வந்திருக்

கிறாள். முதலில் லோகா வரமாட்டாள் என்று பாண்டியர்கள் நினைத்தார்கள். ஆனால், அழைப்பை வெகு சுலபமாய் ஏற்றுக் கொண்டுவிட்டாள். அது போலவே திட்டத்தின் மீதியும் நடந்து விட்டால்....

இவற்றையெல்லாம் தஞ்சைக்கு செல்லும் வழியில் எண்ணி பார்த்து ஒருவாறு உற்சாகம் கொண்டான் ரவிதாசன். அவனுக்கு அது குதூகலத்தை அளித்தது.

ரவிதாசன் தஞ்சைக்குள் பிரவேசித்தான். எப்படியாவது பழுவூர் அரசரைச் சந்திக்க உள்ளே செல்லவேண்டும். அதற்கு ஏதேனும் உபாயமுண்டா என்று பனைக்கொடி பறந்த மாளிகையைச் சுற்றிச் சுற்றி வந்தான். ஆனால், பழுவூர் அரண்மனையைச் சுற்றி ஒரு பரபரப்பும் இல்லை. நாலைந்து முறை இந்த திசையிலும் அந்த திசையிலும் அரண்மனையைச் சுற்றி நடந்தான்.

'என்ன இது ஒரு பரபரப்பும் இல்லையே' என்று ஆதங்கப் பட்டான். 'இவ்வளவு பெரிய இழப்பைத் தந்திருக்கிறோம். இன்னேரம் ஒப்பாரி வைத்துக் கொண்டிருப்பார்கள் என்று எண்ணினோமே? ஒன்றும் நடக்கவில்லையே. நாம் நினைத்தது நடக்கவேண்டுமென்றால் பழுவூர் அரசர் பரிதவித்துக் கொண்டிருந்தால் தானே முடியும்' என்று குழம்பினான்.

'இல்லை, அவள் காணாமல் போன செய்தி இன்னமும் சோழர் அரண்மனைக்கு எட்டவில்லையா? அதை ரகசியமாகவே வைத்திருக்கிறாரா பழுவேட்டரையர்? வயதுப் பெண் என்று அப்படி செய்கிறாரோ என்னவோ? அதுவும் நம் லட்சியத்துக்கு நல்லதே' என்று நினைத்தான். அப்போது தான் அந்த ஆளை அவன் பார்த்தான்.

பழுவூர் அரண்மனைக்கு எதிரே ஒருமரத்தின் மறைவில் நின்று பழுவூர் அரண்மனைக்குள் வருபவரைக் கவனித்துக் கொண்டிருந்தான் அந்த ஆள். ரவிதாசனின் பழகிய கண்கள் அடுத்த ஆளையும் கண்டுபிடித்தன. பின் அது போல ஏழெட்டுப் பேருக்கு மேல் பழுவூர் அரண்மனையை நோட்டம் விட்டுக் கொண்டிருந்தனர் என்பதும் தெரிந்தது.

“ஆகா! நாம் பழுவூருக்கு வலைவிரித்தால் அநிருத்தன் அதைக் கொண்டே பாண்டியருக்கு வலை விரிக்கிறானே. இது தக்க தருணம் இல்லை. போய்விட்டு மீண்டும் வரவேண்டியது தான். முக்கியமாகக் காட்டில் இருக்கும் அனைவரையும் எச்சரிக்க வேண்டும்” என்று நினைத்தான் ரவிதாசன்.

❖ ❖ ❖



### அத்தியாயம் தொண்ணூற்று ஒன்று

## குளத்தில் விழுந்தாள்!

தன்னுடன் கூடப்பிறந்த அக்காவே தன்னை வஞ்சித்துவிட்டதாக எண்ணிய லோகா அப்போது தனிமையை விரும்பினாள்.

தன்னைத் தேடி இதுவரை யாரும் வரவில்லை என்பது இன்னமும் அவள் கோபத்தை அதிகரித்தது. 'நம்மைக் காப்பாற்ற யாரும் வரவில்லையென்றால் நம் கதி என்னாவது? நம் மனம் மாறவேண்டும் என்றுதான் ஒரு அளவுக்கு கட்டுக் காவலைத் தளர்த்தியிருக்கிறார்கள். அக்கா கூட அன்பாகப் பேச முயல்கிறாள். ஆனால், எல்லாம் நடிப்பு' என்று நினைத்துக்கொண்டாள்.

அக்காவைத் தன் கெஞ்சலின் மூலம் இளகச் செய்து, வீடு திரும்பலாம் என்பது நடக்காதது. அந்தக் கல் நெஞ்சக்காரியுடன் பேச மனமில்லாமல் தன்னுடைய கற்பனை உலகிலேயே சஞ்சரித்தாள் லோகா.

அக்காவுடன் அவள் மீண்டும் சரளமாகப் பேசிப் பழக எண்ணினாலும் முடியவில்லை. குழந்தைகளுடன் பேசி விளையாடுவாள். ஆனால், அதுகூட இப்போது அவள் மனதில் குடிகொண்டிருந்த வருத்தத்தைக் குறைக்கவில்லை. பயமும் துக்கமும் கொண்டு தவிதவித்தாள். கண்கலங்கிப் பலமுறை அழுதே விட்டாள்.

நம்பிக்கை அதிகம் இல்லாவிடினும், எப்படியோ நம்மைத் தேடி யாரேனும் வராமல் இருக்கமாட்டார்கள் என அமைதி கொள்ள விரும்பினாள். 'இதெல்லாம் அப்பா அரசாங்கத்துக்குத் தன் கடமையைச் செய்ததற்காக வரும் தண்டனைகள். அதனால் சோழர்கள் நிச்சயம் உதவுவார்கள்' என்று நம்பிக்கை கொண்டாள்.

லோகாவுக்கு அந்தக் கானகத்தில் அமைதியை அளிக்கும் ஒரே இடம் அந்தக் குளம் தான். அது பளிங்கு போன்ற ஒரு பொய்கை. தினமும் பலமணி நேரம் தனிமையில் அங்கு இருப்பாள். முழுவதுமாகத் தனிமையில்லை. தனியாகக் குளத்தங்கரையில் இருக்கலாம் என்றால், தான் தப்பிவிடாமலிருக்கப் பாண்டியர்கள் அந்த ராக்கம்மாளையும் காவலுக்கெனக் கூடவே அனுப்புவார்கள்.

ஒரு வாரம் காட்டில் இருந்தது ஒரு யுகம் போலல்லவா இருக்கிறது என்று நினைத்தபடி குளத்தங்கரையில் அமர்ந்து கூழாங்கற்களைக் குளத்தினுள் விட்டெறிந்து காலத்தைக் கழிப்பாள்.

அமைதியான அந்தக் குளத்தில் 'தொப்' எனக் கல் விழுந்ததும், நீரின் அலைகள் வளையம் வளையமாக வருவதை அவள் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் விட்டெறிந்த கற்கள் குளத்தின் கீழே செல்லும்முன் நீர்க்குமிழிகள் பலவற்றை மேலே அனுப்பிவிட்டுச் சென்றன. 'குளத்துக்கு மத்தியில் என்ன ஆழமிருக்கும். அந்த கற்களுக்குப் பதிலாகத் தான் சென்று விழுந்தால் என்ன?' என்று கூட அவ்வப்போது தோன்றியது அவளுக்கு.

குளத்தங்கரையைச் சுற்றிலும் பார்த்தாள் லோகா. முன்பு காளாமுகர்கள் இருந்த இடம் அது. அதற்கு அத்தாட்சியாக பைரவி கோயில் ஒன்றும் இருந்தது. கோயில் ஊரணி ஒன்றும், அதன் நடுவில் மையமண்டபமும் இருந்தன; எல்லாம் பாழடைந்த நிலையில்! மண்டபத்தின் ஓரங்களில் யாளி முகங்கள் இருளில் பயங்கரமாகத் தெரிந்தன. ஆனால் பயமே கொள்ளாமல் வெண் நாரைகள் இடிந்து கிடந்த விமானத்தின் மீது வந்து நின்றன.

மக்கள் யாரும் பொதுவாக இந்தப் பக்கம் வருவதில்லை. பழைய ஞாபகம் தடுத்தது போல. 'ஒரு காலத்தில் இந்த பக்கம் வந்தவர்கள் எல்லோரும் பிடிபட்டால் பலிதான். தானும் அது போல பலியாகிவிட்டோமா?' என்று யோசித்தாள்.

காலையில் சூர்யோதயத்துக்கு முன்பே அந்த ரவிதாசன் எங்கோ கிளம்பினான். போவதற்கு முன் படுத்திருந்தவளருகில் நின்றபடி எல்லோருக்கும் கேட்கும்படியாக "அரசருடன் கலியாணத்துக்கு அவள் ஒப்புக்கொள்ளவில்லையென்றால் கொன்றுவிடுங்கள்" என்றான். லோகா பயம் கொள்ளவே அப்படிச் சொன்னான். நிஜமாக அவன் சொல்லவில்லை. அவளை எதுவும் செய்யமுடியாது. தங்க முட்டையிடும் பறவை அவள்.

ஆனால், இதையெல்லாம் கண்ணை மூடிக் கொண்டிருந்தபடி கேட்டுக் கொண்டிருந்த லோகாவுக்கு மெய் நடுங்கியது. உடம் பெல்லாம் வியர்த்தது. இந்தக் காட்டிலிருந்து உயிரோடு தப்பித்துப் போகப் போகிறோமா என்றே அவளுக்குச் சந்தேகம் உண்டாகி விட்டது.

பாண்டியர் போராளிக் கூட்டத்தில் பெண்களெல்லாம் இரவில் தான் குளிப்பார்கள். ஆனால், லோகா வந்தவுடன் அவள் இருளுக்குப் பயப்படுவாள் என்று மாலையிலேயே குளத்தைப் பெண்களுக்கென்று ஒதுக்கி விட்டார்கள். ஆண்களெல்லாம் அந்த இடத்துக்கு அருகே கூட வருவதில்லை.

அன்று மாலை லோகா குளிக்க வந்திருக்கையில், ராக்கம்மாளும் காவலுக்குக் குளத்தங்கரையில் வந்து அமர்ந்தாள். அவளுக்கு



வெறுப்பாய் இருந்தது. "இப்படி இந்தக் குட்டிப் பிசாசு தண்ணீரில் கல்லை விட்டெறிந்து விளையாடிக் கொண்டிருக்கிறதே? நம் குளத்தையும் அல்லவா கெடுக்கின்றது?" என்று நினைத்தாள்.

"சீக்கிரம் குளி. திரும்ப வேண்டும்" என்று கரகரத்த குரலில் விரட்டினாள்.

இவள் சொல்லி நாம் என்னக் கேட்பது என்று நினைத்த லோகா "குளத்தில் இப்போது நான் இறங்க வில்லை. சற்று நேரமாகும்" என்றாள் .

"இப்போதே இருட்டிக் கொண்டு வருகிறது. அப்புறம் நாகப் பாம்பு கடித்து விட்டால் அதன் விஷம் ரொம்பப் பொல்லாதது. இல்லாவிடில் நாளை குளித்துக் கொள்ளலாம் வா" என்றாள் ராக்கம்மாள்.

"தாயே! இந்த அருமையான யோசனையைச் சொன்னதற்காக மிகவும் வந்தனம். என் அக்காவைத் தீண்டிய பாம்பு என்னையும் தீண்டினால் ஒன்றும் ஆகாது. நான் மெல்ல ஆர அமரக் குளித்துவிட்டு வருகிறேன். உன்னையெல்லாம் போல் குளிக்கா மல் இருக்க நான் என்ன காட்டுவாசியா?" என்றாள் லோகா.

பல்லைக் கடித்துக் கொண்டாள் ராக்கம்மாள். சண்டைக்கு இழுக்கப் பார்க்கிறாள். ஆனால், இவள் ஏதாவது ஏடாக்கூடமாகச் செய்துவிட்டால் பின் தன் தலையில் தான் பழி விழும் என்று சும்மா இருந்தாள்.

ராக்கம்மாளுக்குத் தக்க பாடம் கற்பித்தாயிற்று என்று அறிந்த பின் லோகா குளிக்க நினைத்தாள். மரத்தின் மறைவில் சென்று உள்ளாடையை மார்போடு கட்டிக்கொண்டு இப்போது குளத்தில் இறங்கினாள் லோகா. இடுப்பு வரை கூட நீர் வந்திராது. அதற்குள் நீர் சுட்டது. பாறையின் வெப்பம் அது தேக்கி வைத்த நீருக்கும் பரவியதில் ஆச்சரியம் இல்லை. இன்னும் சற்று ஆழமான பகுதிக்குச் சென்றாள். குளிராக இருந்தது. மென் மலர் போன்ற அவளின் உடல் இப்போது ஒரு நடுக்கம் கொண்டது.

நீரிலிருந்து தன் கையை அடித்து அடித்து விளையாடினாள். அலை வளையங்கள் பலவும் கரையின் மீது சென்று மோதின. பின் அவளது நினைவுகள் ஏனோ இளம் சம்புவராயனிடம் சென்று சஞ்சரித்தன. 'அவனை அன்றே அக்காவைக் கொன்றிருக்கச் சொல்லியிருக்க வேண்டும். நாம் மன்றாடியதால்தான் விட்டு விட்டான். அதிலும் ஒரு நல்லது நடந்தது. இல்லாவிட்டால் அவன் இவ்வளவு நல்லவன் என்று எனக்குத் தெரிந்திருக்காது அல்லவா?

சம்புவராயன் நாம் சொன்னதைக் கேட்டானே. பரிவும் கனிவும் கொண்டவன் அவன்' என நினைத்தாள்.

அப்பொழுதுதான் அவனுடன் லோகாவுக்கு ஓர் உள்ளப் பிணைப்பு ஏற்பட்டது. பெண்ணைப் பாதுகாத்துப் பரிவுகாட்டிச் செயல்படும் ஆண்கள் கொஞ்சம்தான். அப்படிப் பட்டவர்களின் முகங்கள் மனதிலிருந்து அகலாமல் இருக்குமல்லவா? இளம் சம்புவராயனின் முகம் அப்படிப் பட்டது.

அவனை நினைத்தபடியே மரங்களுக்கு இடையில் திரும்பிப் பார்த்தாள். இந்த நிலைமையில் அவள் சற்றும் எதிர்பாராத இன்னொரு சம்பவம் நிகழ்ந்தது. மரத்தின் நடுவே ஒரு களை பொருந்திய அழகான முகம் ஒன்று தோன்றியது. அந்தத் தீப்பொறி போன்ற கண்களின் பளிச்சிடும் பார்வை இவளையே நோக்கியது. தான் நீராடும்போது யாரோ ஒருவன் பார்க்கிறான் என்ற அச்ச உணர்ச்சி முதலில் ஏற்பட்டது.

அந்த அதிர்ச்சியே மறுகணம் ஆனந்தமாக மாறி அவள் உள்ளத்தில் கொந்தளித்தது. லோகாவின் துன்பம்தோய்ந்த முகம் மாறியது. அவளுடைய முகத்தில் சிறிது பயம், வியப்பு, ஆர்வம் முதலிய உணர்ச்சிகளை ஒன்றாய்க் கலந்த அதிசயக் கலவை பிரதிபலித்தது. அதே சமயத்தில் அவள் செவ்விதழ்களில் ஒரு புன்னகை துளிர் விட்டது.

''வந்துவிட்டாயா என்னைக் காப்பாற்ற?'' என்று கூவ நினைத்தவள் ராக்கம்மாளை நினைத்து மௌனம் காத்தாள்.

ராக்கம்மாள் அவள் முகத்தை அந்த இருட்டிலும் கவனித்து இருக்க வேண்டும். அவள் நோக்கிய திசையைத் திரும்பிப் பார்த்தாள். பல நாள் காட்டில் வாழ்ந்தவளுக்கு இங்கு அபாயங்கள் ஏராளம் என்று தெரியும். பயத்தில் லோகாவும் அவ்விடம் நோக்கினாள். சற்றுமுன் அந்த புதர்களின் நடுவே ஏறிட்டு பார்த்தப் போது அங்கு மாறன் முகம் தான் தெரிந்தது. ஆனால், இப்போது நல்ல வேளை இல்லை.

திடீரென மாறனின் முகம் மறைந்தவுடன் லோகா சிந்தனையில் ஆழ்ந்தாள். இவ்வளவு நேரம் நடந்தது கற்பனை என முடிவு செய்தாள். 'இந்த மனம்தான் என்ன விசித்திரமானது! இப்போது பார்த்து மாறனின் முகத்தைக் காட்டி நம்மை வெறுப்பேற்று கிறதே?' என்று நினைத்தாள்.

தான் கண்ட தோற்றத்தைப் பற்றி அவள் சிந்தனையில் ஆழ்ந்தாள். ஒரே மனக் குழப்பமாயிருந்தது. அவள் பார்த்தது அவனையா, அல்லது அவனுடைய உருவெளித் தோற்றமா என்று



தெரியவில்லை. 'இந்த ஆரண்யத்தில் எப்படி அந்தச் சம்புவராயன் முகம் தெரிகிறது? என் இதயத்தில் அவன் இடம்பெற்றிருந்தானோ? அதனால் தான் கவி மேதைகளெல்லாம் கூறுவதுபோல அவன் முகம் எல்லாவிடங்களிலும் தெரிகின்றதோ?' என்று கூட நினைத்தாள்

'இல்லை, இல்லை. உண்மையில் அவன் தான் அது. வெறும் பிம்பம் இல்லை. லோகாவின் மனதில் ஒரு பூரிப்பு. அவளுக்காகத் தன் உடல் பொருள் ஆவியையும் விடக்கூட சித்தமாயிருக்கின்றானா? அதற்குத்தான் இந்த அடர்ந்த ஆரண்யத்தில் எதிரிகளின் இடத்துக்கே தைரியமாக வந்தானோ? தன்னைக் காக்கவே அவன் வந்திருக்கிறான் என்று ஒருவாறு தெரிந்து கொண்டாள். தன்னை வெளி உலகமே மறந்தபோது இவன் ஒருவன் தன் உயிரைப் பணயம் வைத்து வந்தானே! அவளை விடுதலை செய்து, அவள் தந்தையிடம் ஒப்புவிக்க வந்து விட்டானே! அக்காவெனும் அந்தப் பாதகியின் கட்டுப்பாட்டிலிருந்து காப்பாற்ற வந்து விட்டானே! அவனிடம் தாவிச் சென்று தழுவிக்கொள்ளலாமா என்று கூடத் தோன்றியது. அந்த எண்ணம் வந்ததற்கு வெட்கம் கொண்டாள்.

ராக்கம்மாள் திரும்பி லோகாவைப் பார்த்தாள். 'புதர்களுக்கு இடையில் அது என்ன வியப்பான விஷயம்?' என்று அவளுடைய புருவங்களின் நெரிப்பு கேட்பது போலத் தோன்றியது.

ராக்கம்மாள் அவள் மனத்தில் உதித்த எண்ணங்களை அக்கணமே தெரிந்துக்கொண்டு திரும்பிப் பார்த்துப் பின் கூச்சலிடுவாள் என்று நினைத்து பயந்தாள் லோகா.

சிறிது நேரம் அதே இடத்தை உற்றுப் பார்த்தாள் லோகா. யாரும் அங்கு இல்லை என்றவுடன் பெரும் ஏமாற்றம். அவனை நினைக்க நினைக்க அவன் முகம் தோன்றியது போலும் என்று நினைத்தாள்.

''என் கண்களின் கோளாறுதான். அபூர்வமாக அவன் முகம் இந்தக் காட்டில் எப்படித் தெரியும்?'' என்று நினைத்தவள் மீண்டும் அவ்விடத்தைப் பார்க்கையில் 'இப்போது வேறு ஒரு முகமும் தெரிகிறதே. முதல் முதலில் என் வீட்டுக்கு வந்தபோது ஒரு வைணவனைக் கூட்டி வந்தானே அவனும் அல்லவா இருக்கிறான். வைணவனின் முகமும் தெரிவதனால் இது உண்மைதான். அந்த முன் குடுமி வைணவனும் இருந்ததனால், இது பிரமையல்ல.'

வைணவன் விலகிக்கொள்ளவே மாறன் மீண்டும் எட்டிப் பார்த்தான். அவனைப் பார்த்துப் பரவசமடைந்தாள் லோகா. இருவரின் கண்களும் சந்தித்தன. பின் இயல்பாக லோகா வேறு

ஒரு பக்கம் திரும்பினாள். நாணத்தால் அல்ல. கண் ஜாடையால் காவலுக்கு ராக்கம்மாள் அமர்ந்திருக்கிறாள் என்று சொன்னாள்.

அவளுடைய பார்வை திரும்பிய பக்கம் அவன் முகத்தைத் திருப்பினான். 'ஆகா நமது வேலை சுலபமானது அல்ல. அந்த பெண் ஒருத்தி காவல் இருக்கிறாளே. பெண் மட்டும்தானே என்று நினைக்க முடியாது. அவள் ஒரு கூக்குரல் எழுப்பினால் என்னவாகும்?' என்று பின்விளைவுகளைப் பற்றியும் ஒரு நொடியில் கணக்கிட்டான்.

"நாம் இருவர் தான். காத்திருப்பதா இல்லை நேரே தஞ்சைக்கு போய் ஆள்பலத்துடன் வருவதா, வேண்டாமா?" என்பது பற்றி அந்த நண்பர்களுக்குள் விவாதம் நடத்தக்கூட முடியவில்லை. அமைதிக் காக்க வேண்டிய நிலை. அதில் உள்ள சாதக பாதகங்களைப் பற்றி விவாதிக்க முடியவில்லை.

நயன பாஷை மூலமாக அவளைப் பேசாமலிருக்கச் சொன்னான் மாறன். மறுமொழி சொல்வதற்காக லோகாவின் உதடுகள் அசையத் தொடங்கின. ஆனால், தலையை மட்டும் சரியென்று ஆட்டினாள். லோகா சும்மாயிருக்க வேண்டும் என்று மாறன் குறிப்பினால் சொல்வதனால் பெரும் படையுடன் அவன் வரவில்லை என்பது அவளுக்கு ஊர்ஜிதமாயிற்று. ஆனால், அவனால் என்ன செய்ய முடியும்? பாவம் தனக்காக அவனும் பாண்டியரிடம் மாட்டிக்கொள்வான்.

மாறன் ஏதும் செய்யாமல் சிலைபோல் நின்றான். காரியத்தைக் தவறாகச் செய்துவிடுவோமோ என்று பயந்து மனமின்றி தயக்கத்துடன் நின்றான். அடுத்து என்ன செய்யப் போகிறோம் என்று அவனுக்கே தெரியவில்லை. நல்ல யோசனைக்குத் திணற வேண்டியிருந்தது.

திடீரென நிகழ்ந்த இந்தப் பேரதிர்ஷ்டத்தால் மாறனின் மனம் சிந்தனா சக்தியை அடியோடு இழந்திருந்தது. ஆனால், சீக்கிரம் ஏதாவது செய்ய வேண்டும் என்று மட்டும் நினைவில் இருந்தது. அவளை மீட்க நல்லதொரு திட்டம் தீட்ட வேண்டும். நம்மால் முடியாவிட்டால் ஓடோடிப் போய் வீரர்களைத் திரட்டி வரவேண்டும். போய்வர எப்படியும் மூன்று நாட்களாவது ஆகும். அதற்குள் இவர்கள் நகராமல் இருக்க வேண்டுமே. அந்தப் பெண்ணிடம் ஜாடையினால் தனது நோக்கத்தைத் தெரிவித்து விட்டு தன் மூளையை அவசரமாகச் செயல்படும்படி கெஞ்சினான். ஆனால், மேலே என்ன செய்வது என ஒரு பொறியும் தட்டவில்லை.



லோகா இருந்த பரபரப்பில் உடல் நடுங்கிற்று. அதனால் இன்னமும் அவளைச்சுற்றி அதிகமாக நீர் வளையங்கள் உருவாயின. எப்படியும் தன்னை மாறன் காப்பாற்றிவிடுவான் என்ற நம்பிக்கையிருந்தது. இருண்ட வானத்தில் நிலவொளி போல ஒரு நம்பிக்கை பிறந்தது. தப்பிச் செல்ல இப்போது ஒரு சந்தர்ப்பம் நேர்ந்திருக்கிறது. அடுத்து என்ன செய்வது என்று அவனையே உற்றுப் பார்த்தாள்.

நயன சம்பாஷணை மூலம் மாறன் அவளை வெளியே வா என்றான். என்ன செய்வதென்றாலும் அவள் தயாராக இருக்க வேண்டுமல்லவா?அவள் புரிந்து கொண்டாள். அதனால் மெல்லக் குளத்தின் வெளியே வந்தாள். மரத்தின் மறைவுக்குச் சென்றாள். சென்று உடை மாற்றித் தயாராக இருப்பாள் ஓட்டம் பிடிக்க என்று மாறனுக்குத் தெரியும். 'ஆனால், காவலிருக்கும் அந்த ராக்கம்மாள் கூச்சலிடுவாளே! பின் தொடர ஆட்கள் வருவார்களே; பாண்டியர் எத்தனை பேர் என்று தெரியவில்லையே!' என்று குழம்பினான்.

"என்ன இவ்வளவு சீக்கிரம்?" என்று கேட்க எண்ணிய ராக்கம்மாள் வாயடைத்தாள். கேட்டால் திரும்ப நீருக்குள் சென்று விடும் இந்த பிசாசு. பின்னர் இன்று சிவ ராத்திரி தான்.

"நான் ஆடை மாற்றி வருகிறேன்" என்று உரக்கச் சொல்லி விட்டு மரத்தின் மறைவுக்குச் சென்றாள் லோகா. அக்கா கொடுத்த நெறிந்து போன மாற்றுப் புடைவையைத் தன் தோள்மேல் போட்டுக்கொண்டாள். குளத்திலிருந்து கிளம்பினாள். மரத்தின் பின்னால் சென்றவள் சற்றுநேரம் கழித்து உடை மாற்றிக்கொண்டு திரும்பினாள்.

அவள் நடவடிக்கையைக் கவனித்த வண்ணம் கற்சிலைபோல் அசைவற்று நின்றனர் அடியானும் மாறனும்.

லோகா புடைவையைக் கட்டிக்கொண்டு வெளியே வந்தாள். ராக்கம்மாளிடம் சென்று அமர்ந்தாள். "சற்று நேரம் கழித்துச் செல்லலாம்" என்று சொன்னாள்.

அடுத்து என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தான் மாறன். எவ்வளவு நேரம்தான் லோகாவும் சாக்குப் போக்குச் சொல்லிக் கொண்டு கரையில் அமர்ந்திருக்க முடியும்.

அப்போது வாய் மீது விரல் வைத்து "பேசாதே!" என்று மாறனிடம் அடியான் சமிக்ஞை செய்துவிடவே, அவனும் மௌனம் காத்தான். மீண்டும் உதடுகளை வளைத்து, வாய்க்குள் விரலைவிட்டுக் கூவினான் அடியான். வெளியே ஒரு பயங்கர மான சப்தம் வந்தது.

அந்தக் குரலுக்கு உரியவன் வைணவன் என்று தெரிந்த லோகா வுக்குச் சிரிப்பு வந்தது. ஆனால், அதே சமயத்தில் அடியானுக்கு முதுகை காட்டிக்கொண்டிருந்த ராக்கம்மாளுக்கு அந்த சப்தம் பீதியைக் கிளப்பியது. ராக்கம்மாள் திடீரென்று நிமிர்ந்து உட்கார்ந் தாள். ராக்கம்மாளின் சிணுங்கிய முகத்திலிருந்து அவளுடைய மனப்பாங்கை லோகா அறிந்து கொள்ள முடிந்தது. ராக்கம்மாளை திடீரென்று திகில் பற்றிக் கொண்டது. அந்தத் திகிலோடு தரையி லிருந்து எழுந்தாள். இங்கும் அங்குமாய்த் திரும்பிப்பார்த்தாள்.

ராக்கம்மாள் காட்டில் பலநாள் இருந்திருந்தாள். வீண்பிராந்திக்கு உள்ளாகாதவள் அவள். ஆனால் அவள் இருந்த சூழ்நிலை அவளைப் பயமுறுத்தியது. அருகிலிருந்த கோயிலில் பலி கொடுக்கப்பட்டவர்கள் ஏராளம் என்று அவளுக்குத் தெரியும். அவர்களுடைய ஆவிகள் இங்கேயே உலாவிக் கொண்டு தானிருக் கும் என்றெல்லாம் கதைகளைக் கேட்டிருந்தாள். அவளுடைய நெஞ்சப் படபடப்பு அடங்கச் சிறிது நேரம் ஆயிற்று.

ராக்கம்மாள் காதுகளுக்கு எட்டும் அளவுக்கு மட்டும் சப்தம் செய்தான் அடியான். கேட்டாலும் ஒன்றும் கேட்காதவள் போலிருந்த லோகாவைப் பார்த்து இன்னமும் பயந்தாள் ராக்கம் மாள். அவள் பயந்து ஓடிவிடுவாள்; பின் இளவரசியைக் கூட்டிச் செல்லலாம் என்று நினைத்தான் அடியான். ஆனால், என்னதான் பயந்தாலும் இருந்த இடத்தைவிட்டு ராக்கம்மாள் அகலவில்லை.

'அந்த சப்தம் ராக்கம்மாளின் மனதுக்குப் பயமாய் எட்ட வில்லை போலும். இல்லை காட்டிலே வாழ்ந்து பழகிய அவளுக்கு இந்த சலசலப்புகள் ஒரு பயத்தையும் கொடுப்பதில்லை போலும். அதைக் கேட்டு அவள் தலை தெறிக்க ஓடுவாள், நாம் இளவரசி யைக் காப்பாற்றிவிடலாம் என்று எண்ணியது பிசகு' என்றுணர்ந் தான் அடியான்.

இந்த யுக்தி பலிக்கவில்லை என்றறிந்த மாறனுக்கு சப்தமின்றி லோகாவைக் காட்டைவிட்டு வெளிக்கொணர்வது எப்படி என்று தெரியவில்லை. அவன் யோசித்திருக்கையில் அடியான் உடல் அருகில் விரைந்தது தெரிந்தது. உடனே திரும்பினான் மாறன். அடியானைப் பார்த்த க்ஷணமே அவனது வைண்வ மூளைக்கு ஏதோ தோன்றிவிட்டது என அறிந்தான். 'அய்யோ யோசிக்க கூட நேரம் இல்லையே! ஏதாவது விபரீதமாய் முடிந்தால்...' என்று பதறினான்.

நீரின் அருகே ராக்கமாளைப் பார்த்த அடியானுக்கு உடனே ஒரு யோசனை தோன்றியது. குருடன் கையை நீட்டுவது போல



அடியான் நின்றான். என்ன செய்யப் போகிறான் இவன் என்று மாறன் யோசிப்பதற்குள், சப்தமில்லாமல் கைகளை எதிரே நீட்டியபடி ராக்கம்மாளை நோக்கி ஓடினான்.

குளத்தையே கவனித்துவந்த ராக்கம்மாளுக்கு கடைசி நிமிடத் தில்தான் ஏதோ தன் பின்னால் ஓடி வருவது தெரிந்தது. அவள் திரும்பும் முன் அந்தக் கைகள் அவள் முதுகில் பாய்ந்தன. கடைசி நிமிடத்தில் ஏதோ தகாதது நடக்கிறது என்று தெரிந்து கொண்டு ராக்கம்மாள் திரும்பினாள். ஆனாலும் அடியானின் பாதையி லிருந்து அகன்று விட அவளுக்கு நேரமில்லை.

மாறனுக்குக் கூட முதலில் புரியவில்லை. 'வைணவனுக்கு என்ன பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன? ஏன் ஓடுகிறான்?' என நினைத்தான். பின் தான் புரிந்தது அவனுக்கு; இந்த சிக்கலைத் தீர்க்க ஒரு வழியை அடியான் கண்டுபிடித்துவிட்டான் என்று. எனினும் அவன் செயலைக் கண்ட மாறனுக்குச் சிரிப்பே வந்து விட்டது. அடியான் ஓடிய வேகத்தைப் பார்த்து அவனே குளத்துக் குள் விழுந்துவிடுவானோ என்றுகூட மாறனுக்குத் தோன்றியது. ஆனால் அப்படி நிகழவில்லை. ஆனால் வைணவனின் முழுத் தாக்குதலுக்கும் உட்பட்ட ராக்கம்மாள் ஆகாயமார்க்கமாகப் பறந்து சென்று குளத்தின் நடுவில் விழுந்தாள்.

அடியானுக்கு ராக்கம்மாளை குளத்தில் தள்ளி விடவேண்டும் என்ற யோசனை வந்தவுடன் அது நல்லதொரு தீர்வைக் கொடுக் கும் என்று அறிந்தான். வருபவர்கள் முதலில் ராக்கம்மளைக் காப்பாற்றவே முயல்வார்கள். அவள் மூழ்கினாலும் தப்பில்லை. வெளி வந்தால் குடித்த குளத்து நீரையெல்லாம் கக்கிவிட்டுத்தான் இந்த விஷயத்தைச் சொல்லமுடியும். அதற்கு முன் நாம் பறந்து விடலாம்.

ராக்கம்மாளின் ஆகாயப் பயணத்தையும் குளத்துக்குள் பிரவேசித்ததையும் பிரமித்து போய்ப் பார்த்துக்கொண்டிருந்த லோகாவின் கையை யாரோ பிடித்தார்கள். ஒரு பயத்துடன் திரும்பிப் பார்த்தாள். அது மாறன்தான்! ''வா போகலாம்'' என்றான். மாறன் லோகாவின் கையைப் பிடித்து வந்த வழியில் திரும்பிச் சென்றான்; காட்டை விட்டு சீக்கிரமாய் வெளியேற வேண்டுமென்ற முடிவுடன்.

ஓடியவர்களை ஓரக் கண்ணால் பார்த்துவிட்டு அடியான் குளக்கரையிலேயே நின்று விட்டான். ராக்கம்மாள் தண்ணீரில் மூழ்கித் தடுமாறிக் கத்த நினைக்கும் போது அவள் குடித்த குளத்து நீர் வெளிவருவதைப் பார்க்க மிகவும் வேடிக்கையாக இருந்தது.

அடியான் குளத்தின் அருகில் நின்று தான் தள்ளிவிட்ட பெண்ணின் நிலையைக் மகிழ்ச்சியோடு கவனித்தான்.

வாய்விட்டுச் சிரித்தான். கைகொட்டிச் சிரித்தான்.

❖ ❖ ❖

## அத்தியாயம் தொண்ணூற்று இரண்டு

## கத்தி பாய்ந்தது!

அந்தப் பருமனான வைணவன் மோதியதில் ராக்கம்மாள் சுழற்காற்றை சந்தித்த வாழைமரம் போலக் காற்றில் பறந்து சென்று குளத்தின் நடுவில் விழுந்தாள். திடீரெனத்தான் முதுகில் தாக்கித் தள்ளப்படுவதை அவள் எதிர்பார்க்கவில்லை. அவள் உடலிலிருந்து எந்த எதிர்ப்பும் வராத நிலையில் ராக்கம்மாள் தண்ணீருக்குள் விழும்முன் காற்றில் பறவையைப் போலப் பறந்தாள். அவளது சேலை முந்தானை பட்சிகளின் சிறகைப் போலத்தான் காற்றில் அடித்தது.

உடனே நீரில் பெரிய பெரிய நீர் வட்டங்கள் உருவெடுத்தன. குளத்து நீர் கணிசமான அளவில் வெளியே தெறித்தது. அலைகள் வந்து கரையை முட்டின. இதுவரை வாழ்வில் சந்தித்திராத அனுபவம் இதுவென்பதால் ராக்கம்மாளுக்கு அது ஏகாவது பேய் பிசாசின் வேலையாயிருக்கும் என்றுதான் நினைக்கத் தோன்றியது. சற்று நேரமுன்னர் கேட்ட அதிசய சப்தங்களைச் செய்த துஷ்ட ஜீவன்தான் தன்னைக் குளத்திலும் தள்ளிவிட்டிருக்க வேண்டும் என்கிற முடிவுக்கு வந்தாள்.

ஆனால் பயத்திலும் மௌனமாக இருக்கவில்லை ராக்கம்மாள். அவள் காற்றிலிருக்கும் போதே கடைசியாகக் கத்திய "ஐயோ" ஒலி காடெங்கும் எதிரொலித்தது. வாயைத் திறந்தபடி தண்ணீருக்குள் சென்றபடியால் நீரும் பாசியுமாய் உள்ளே சென்றது.

ராக்கமாள் நீரிலிருந்து எழுந்திருக்க முயன்றாள். மீண்டும் மீண்டும் குளத்தின் தரை வழுக்கி விட்டது. பெரும் முயற்சியுடன் எழுந்தவுடன் இடுப்புவரை தான் நீரிருந்தது.

நனைந்துபோன அவளுடைய கூந்தல் நார் நாராய் முகத்தை மறைத்தது. திடீரென விழுந்ததால் நிறைய நீரை வேறு குடித்து



விட்டாள். புரை ஏறியது. அவள் இருமி இருமி நீரை வெளியேற்றி விட்டு குளத்தின் கரையைப் பார்த்தாள்.

அதற்கு பின்னர் 'தன் மீது பலத்தைப் பிரயோகித்து, தன்னை நீருக்குள் தள்ளிவிட்டது ஒரு பேயோ பிசாசோ இல்லை; இந்த வைணவன் தான்.' என்று முதலில் அவன் மேல் கோபம் வந்தது. பின் அவளுடைய கண்கள் இங்கும் அங்குமாய்த் தேடின. தான் காவல் காத்து வந்த லோகாவை இப்போது காணோம். பதறிப் போனாள். அவளுக்கு அந்தச் சதி புரிந்தது. உடனே ரவிதாசனின் கோபம் அவளுக்கு நினைவுக்கு வந்தது

லோகாவைக் காணோம். ஆனால், குளக் கரையில் அந்தப் பொல்லாத வைணவன் நின்றிருந்தான். அவளுடைய பாவப்பட்ட நிலையைக் கண்டு நகையாடிக்கொண்டிருந்தான். ஒரு நொடியில் ராக்கம்மாளுக்கு எல்லாம் புரிந்தன. வைணவனை நோக்கி முடிந்த அளவுக்கு உயர்த்திய குரலில் திட்டினாள். "நாசமாய்ப் போன வைணவனே!" என்று கத்தினாள்.

இருமி இருமிக் கடைசியில் சாபம் கொடுத்த ராக்கம்மாளைக் கண்டபின் தன் நிலையை புரிந்து கொண்ட வைணவன் காட்டுக்குள் புகுந்தான். அந்த நேரத்திலும் மாறனும் லோகாவும் சென்றிருப்பார்கள் என்று எண்ணிய திசைக்கு நேரெதிர் திசையாகத் தேர்ந்தெடுத்து ஓடினான். வேண்டும் என்றே தான் ஓடும் திசையை மாற்றித் தெரியப்படுத்தி விட்டு ஓடினான்.

நீரில் விழுந்த ராக்கம்மாள் முதலில் வாயடைத்துப் போனாள். பின் அடியானும் அந்த இடத்தை காலி செய்யவே, உடனே "ஐயோ, ஐயோ, காப்பாற்றுங்கள்" என்று கத்தினாள். ராக்கம்மாளின் அபயக்குரல் கேட்டுப் பாண்டியர் குழுவிலிருந்து ஆட்கள் ஓடி வந்தனர்.

பலர் குளத்தருகே வந்து சேர்ந்து, "என்ன? என்ன?" என்று கூச்சலிட்டார்கள்.

ராக்கம்மாள் கைகாட்டிய திசையை நோக்கி எல்லோரும் உடனே திரும்பிப்பார்த்தனர். அடியானின் பருமனான பின்பக்கம் காட்டில் மறைவதை மட்டும் தான் பார்க்கமுடிந்தது.

உடனே பலவிதமாகக் குரல்களை எழுப்பியபடி அவனைப் பின் தொடர்ந்தனர் பாண்டியர். நிகழ்ந்த குழப்பத்தில் யாரும் ராக்கம்மாளிடம் நடந்ததைப் பற்றி விவரிக்கச் சொல்லவில்லை. ஒரு நொடி அதற்குச் செலவழித்திருந்தால் முழு பலத்தையும் பயன் படுத்திப் பாண்டியர் தங்கள் பிணைக்கைதியான லோகாவை மீண்டும் பிடிப்பதில் வெற்றிபெற்றிருக்கலாம்.

அடியானைத் தொடர்ந்து சில பாண்டியர்களும் அவர்களைத் தொடர்ந்து பலரும் செல்ல, மாறனையும் லோகாவையும் யாரும் பின் தொடர்ந்ததாகத் தெரியவில்லை. பாண்டியர்கள் எழுப்பிய குரல்கள் மாறனுக்கும் காதில் எட்டின. 'எல்லோரும் வைண வனைத்தான் தொடருவார்கள். பின்னர் தவறைத் தெரிந்து துரத்தி வருவதற்கு முன்னே நாம் தஞ்சையை நோக்கி வெகு தூரம் சென்றுவிடவேண்டும்' என்று முடிவு செய்தான் மாறன்.

"காட்டில் நடப்பதற்கு நீ அஞ்சமாட்டாயல்லவா?" என்றான் லோகாவைப் பார்த்து.

"இந்த இடத்திலிருந்து தப்பிப்பது என்றால் என்னவும் செய்வேன்" என்றாள் லோகா. 'இவனுக்கும் எனக்கும் ஏதோ ஜன்மாந்தரத் தொடர்பு இருக்குமென்று தோன்றுகிறது' என்று நினைத்தவள் உவகையோடு உற்சாகமாய்ப் புறப்பட்டாள். அந்த பிஞ்சுகளிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு செல்ல முடிய வில்லைதான். ஆனால், அதெல்லாம் இப்போது சாத்தியமில்லை.

பருமனான வைணவனைப் பிடித்துவிடலாம் என்று நம்பிக்கை யுடன் கானகத்தில் அவனைப் பின் தொடர்ந்த பலரும் வெறும் கையோடு குளத்தங்கரைக்குத் திரும்பினர். சிலர் விடா முயற்சி யாக அவன் பின்னே சென்று கொண்டிருந்தார்கள். ஒரே அல்லோ லகல்லோலப் பட்டுக்கொண்டிருந்தது காடு. இந்தக் கத்தல் களையும் கூச்சல்களையும் பரமேசுவரன் அவ்வளவாக விரும்ப வில்லை.

ரவிதாசன் தஞ்சை சென்றிருந்தனால் இப்போது பாண்டியப் போராளிகளின் பாதுகாப்பின் பொறுப்பு முழுவதும் பரமேசுவர னிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. "விழிப்போடு இரு. பழுவூர்ப் புத்தி மகத்தானது" என்று சொல்லிவிட்டுச் சென்றிருந்தான் ரவிதாசன். கூட்டத்தின் காவலுக்கு அவனை நியமனம் செய்திருந் தான்.

அவனும் இப்போது விரைந்து வந்து குளத்தருகில் நின்றான். பரமேசுவரன் முகத்தில் கோபக் கனல் ஜ்வாலை பரவியது! சிலர் குளத்தில் இறங்கி ராக்கம்மாளை மீட்டனர். சுற்றி பார்த்தான். பழுவூர் இளவரசியைக் காணவில்லை.

ஏதோ தன்னைத் தாக்கியது பற்றி விவரம் கூறத் தொடங் கினாள் ராக்கம்மாள். இதையெல்லாம் கேட்கப் பரமேசுவரன் தயாராயில்லை.

"பழுவூர் அரசிளங்குமாரி எங்கே?" என்றான். ஆனால், அவ னுக்கு பதில் தெரிந்துதான் கேட்டான். விழித்த ராக்கம்மாளைக்



கண்டவுடன் அந்த பதில் ஊர்ஜிதமானது. அடர்ந்த காட்டுக்குள் புகுந்து மறைந்தாள் லோகா என்றவுடன் பரமேசுவரனுக்குக் கோபம் கோபமாய் வந்தது. காடு தனக்கு மட்டும் மறைவைத் தராது. பாரபட்சமின்றி எதிரிக்கும் அதே மறைவையும் பாது காப்பையும் தரும் அல்லவா? அதுவும் இது பழகிப்போன கோடிக் கரைக் காடல்ல; கொடும்பாளூர்க் காடு.

பரமேசுவரன் சுற்றும் முற்றும் பார்த்தான். ரவிதாசன் தஞ்சைக் குக் கிளம்பிப் போனவுடனா இதெல்லாம் நடக்க வேண்டும்? ரவிதாசன் இருந்திருந்தால் அவன் செயல்பாடே வேறு விதமாக இருந்திருக்கும் என்று பரமேசுவரனுக்குத் தெரியும். ஏதாவது செய்து தப்பி ஓடியவர்களைப் பிடித்திருப்பான்.

மாறனும் லோகாவும் தஞ்சை இருக்கும் என்று எண்ணிய திசையில் நடந்தனர். மரங்களின் பழைய இலைகள் எல்லாம் உதிர்ந்து புதிதாய்த் துளிர்விட்டிருந்த காலம். ஆனால், பழைய இலைகளெல்லாம் பாதையின் மேலும் விழுந்திருந்தபடியால் போகும் வழி சரிவரத் தெரியவில்லை. கண்ணுக்கெட்டிய தூரம் காவா மயமாய்த் தோன்றிய அந்தக் காட்டின் மத்தியில் வழி கண்டு பிடித்துச் செல்வது எப்படி? காற்றின் அசைவில் மரக்கிளைகள் மெல்ல விலகிப் படர்ந்த நிலாக் கதிரின் துணை கொண்டு தரையில் ஒரு தாண்டவம் ஆடியது நிழல்.

அன்றிரவு முழுவதும் காட்டில் அலைந்து திரியும்படி நேருமோ? காட்டுப் பிரதேசத்துக்குள்ளே ஒற்றையடிப் பாதை ஒன்று போவது தெரிந்தது. அடர்ந்த காட்டுக்கிடையே சென்ற ஒற்றையடிப் பாதையின் வழியாக இருவரும் விடுவிடுவென்று நடந்து செல்ல, வழியை மறைத்த மரங்களின் மீது மோதிக் கொள்ளாமல், அந்த இருளில் நடந்து செல்லுவது கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனால், யாரும் பின் தொடரவில்லை என்றுத் தெரிந்தவுடன் சந்தோஷ மாய் இருந்தது. அடியான் செய்தக் கூத்தில் எல்லோரும் அவனையே பின் தொடர்ந்திருப்பார்கள்.

இதெல்லாம் கனவா நினைவா என்றே லோகாவுக்குப் புரியவில்லை. மின்னல் வேகத்தில் காரியங்கள் நடைபெறுகின்றன. மாறனைப் பார்த்து வியப்பும் திகைப்பும் அடைந்த லோகா "நீர் நிச்சயம் என்னைத் தேடி வருவீர் என்று எனக்குத் தெரியும்" என்றாள், அவன் கையை இறுக்கமாகப் பிடித்துக்கொண்டு. நல்ல நேரத்தில் வந்து தன்னைக் காப்பாற்றிய மாறனிடம் லோகாவுக்கு நன்றி உணர்ச்சி உண்டாயிற்று.

"உங்களை நெடுநாளைக்குப் பிறகுப் பார்ப்பதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி. எப்படியிருக்கிறீர் ?" என்று நலம் விசாரித்தான் மாறன்.

"இந்த மட்டும் க்ஷேமம். நான் நினைத்ததுபோலத்தான் நீர்வந்து விட்டீரே" என்று சொல்லிச் சிரித்தாள்.

காட்டுக்குள் ஏன் வந்தாய் என்று அவன் கேட்டதற்கு "அக்காளைப் பார்க்க வந்தேன், வந்த இடத்தில் இந்த ஆபத்து நேர்ந்தது. நல்ல சமயத்தில் நீங்கள் வந்து உதவி செய்தீர்கள்" என்று சொல்லியிருக்கலாம். ஆனால், அவளோ குறும்புப் புன்னகையுடன், "கடம்பூரிலிருந்து கிளம்பி வந்து வேலையில்லாமல் அவதிப்படுகிறீர் என்று கேள்விப்பட்டேன். உமக்கு ஏதாவது வேலை தரவேண்டும் என்பதற்காகவே வந்தேன்" என்றாள்.

"நாங்கள் என்ன வேலையில்லாமலா உட்கார்ந்திருக்கிறோம்?" என்றான் அவன். "இனிமேலாவது வெளியே கிளம்பினால் சொல்லிவிட்டுச் செல்லுங்கள்.அங்கே எல்லோரும் பதறிப் போய் விட்டார்கள்" என்றான்.

"ஓகோ அதில் நீர் மட்டும் அதிகமாகப் பதறிவிட்டீர் போலும்" என்றாள், நிலவொளியில் அவன் முகத்தைத் திரும்பிப் பார்த்து.

"ஏன் அப்படிக் கேட்கிறீர்?" என்றான்.

"வேறு யாரும் என்னைத் தேடி வந்ததாகத் தெரியவில்லையே?" என்றாள் குறும்பாக. இந்த நிலையிலும் அந்தப் பெண்ணின் நகைச்சுவை உணர்வு மாறனுக்கு வியப்பை உண்டாக்கியது.

இந்த சல்லாபப் பேச்செல்லாம் அங்கு நிலவிய உண்மை நிலவரத்தை எடுத்துக் காட்டுவதாக இல்லை. லோகா ஒரு இடத்தில் மூச்சுவாங்க நின்றாள். "சற்று நேரம் அமர்ந்துவிட்டுச் செல்லுவோம். என் நாக்கு வரண்டு போய்விட்டது" என்றாள்.

பின்னால் ஒரு முறை திரும்பிப் பார்த்துவிட்டு ஒப்புக் கொண்டான் மாறன். இவள் மயக்கம் போட்டுவிட்டால் இன்னமும் கஷ்டமாகிவிடும் என்று அவனுக்குத் தெரியும்.

இருவரும் ஆளுக்கு ஒரு பாறையைத் தேர்ந்தெடுத்து அமர்ந்தனர். லோகாவைக் கண்களால் விழுங்கி விடுவதுபோல் பார்த்துக் கொண்டு இருந்தான் மாறன்.

தன்னை அவன் ரசிக்கிறான் என்பதில் லோகாவுக்குப் பெருமை. ஆனால், நாணமும் அத்துடன் ஒட்டிக்கொள்ளப் பேச்சை வேறு திசைக்கு மாற்றினாள்.



பாறையில் அமர்ந்தவன் "அந்த வைணவனின் நிலையைப் பற்றிக் கவலைப்படாமல் செல்கிறோம். நமக்கு உதவ உயிரைப் பணயம் வைத்து வந்தவன் இல்லையா?"

"ஆம்" என்று ஒப்புக்கொண்டான் மாறன். அடியான் ஏற்படுத்திய நெருக்கடியை உபயோகித்தே இருவரும் அவ்விடத்தை விட்டுத்தப்பி வந்து விட்டனர். ஆனால், அந்த வீரவைணவன் பாண்டியர் கையில் சிக்கியிருந்தால்?

"அந்த வைணவனின் அறிவுக் கூர்மை அபாரம்! சந்தேகமில்லை, அதனால் எல்லோரும் அவனைத்தான் பின்தொடர்வார்கள். உண்மையில், அவனுக்கு வீரமும் அதிகம்" என்று ஒப்புக்கொண்டான் மாறன்.

"தியாக உணர்வும் அதிகம்தான்" என்றாள் கலங்கிய குரலில். "அந்த வைணவனை யார் வந்து மீட்கப்போகிறார்கள்?"

"ஒருவரும் வர வேண்டாம்" என்றான் மாறன்.

"ஏன்? அப்படிப் பட்ட வீரரா அவர்?" வியப்பில் லோகா கேட்டாள்.

"இல்லை, அவனுக்குச் சோறு போட்டுப் பாண்டியர்களுக்குக் கட்டாது. விரட்டிவிடுவார்கள்" என்றான். ஆனால், அவனுக்குத் தெரியும் பிடித்தாலும் அடியானின் மீது பாண்டியர் விரல் கூட வைக்கமாட்டார்கள்; நந்தினியின் அண்ணன் அல்லவா இவன்?

"பாவம் அந்த வைணவன். மாட்டிக்கொண்டால் தோலை உரித்துவிடுவார்கள்" என்றாள் லோகா.

"வைணவன் ஓடி நீ பார்த்ததில்லை. சீக்கிரத்தில் சமாளித்துக் கொண்டு வந்து சேருவான். மாட்டிக்கொண்டாலும், அடிக்கடி கதை அளப்பான் அல்லவா, எந்தக் கயிறும் என்னைக் கட்டுப் படுத்தாது என்று. வந்து சேரட்டும்" என்றான் மாறன்.

இனி "வைணவனைக் கண்டுபிடிப்பதற்கு ஒத்தாசை செய்கிறாயா என்று உம்மைப் பிரதமர் கேட்பாரென்று நினைக்கிறேன்" என்றாள் லோகா.

வீரமாய்ப் பேசினாலும் மாறனுக்கும் சந்தேகம்தான். 'அவன் கதி என்ன ஆயிற்று? காவலிருந்த பெண்ணை அகற்றப்பார்த்துத் தடாகத்தில் தள்ளிய அடியான் பிறகு என்ன செய்திருப்பான்? தப்பி ஓடியிருப்பானா? இல்லை பிடிபட்டிருப்பானா?'

பதில் கிட்டவில்லை அவனுக்கு. "கிளம்புவோமா?" என்றான் மாறன்

"சற்று நேரம் இருந்துவிட்டுப் போகலாமே" என்றாள் லோகா. இந்த ரம்யமான இடத்தில் மனித சஞ்சாரமே இல்லாத இடத்தில் மாறனுடன் இருப்பது அவளுக்குப் பிடித்திருந்தது.

அவனுக்கும்தான். ஆனால் அதில் உள்ள அபாயமும் அவனுக்குத் தெரிந்தது. "தாங்கள் அவசியம் இந்தத் கானகத்திலிருந்து கிளம்பிவிட வேண்டும். இங்கே தங்களைப் பெரிய அபாயம் சூழ்ந்திருக்கிறது!" என்றான்.

"ஆம்" என்று ஒப்புக்கொண்டு வேண்டா வெறுப்பாக எழுந்தாள்.

"காட்டில் வாழும் கணக்கற்ற ஜீவராசிகள் கொடியவை. அவற்றையெல்லாம் விட ஒரு கொடிய மிருகம் தங்களைத் துரத்தினால் என்ன செய்வது.?" என்றான்.

லோகா ரவிதாசனை நினைத்தவுடன் மேலே விரைவாக நடந்தாள்.

அவ்வப்போது தலைக்கு மேல் வானம் தெரிந்தது. மாறன் வானத்தில் சுடர்விட்ட நட்சத்திரங்களைப் பார்த்துத் திசையறியக் கற்றவன். அந்த விண்மீன்களே அவனுக்குத் தஞ்சைக்கு வழி சொல்லும். ஆனால், மாறனுக்கு ஒரே ஒரு சந்தேகம். விடிவதற்குள் தஞ்சையை அடைந்தாலும் எப்படிக் கோட்டைக்கு உள்ளே செல்வது? அதுவும் போகும் வழியில் அபாயங்கள் இருக்கலாம். தாங்கள் செல்லும் இடத்திலேயே ரவிதாசனும் இருக்கிறான் என்று நினைக்கும்போது ஓர்அச்ச உணர்வு ஏற்பட்டது.

"இந்தக் காட்டு வழியைக் கடந்து தஞ்சாவூர்ச் சாலையை அடைந்ததும் நாம் மிகவும் விழிப்பாய் இருக்கவேண்டும்" என்றான் மாறன்.

"ஏன்?" என்றாள் லோகா.

"நான் வரும் வழியில் ரவிதாசன் போல ஒரு உருவத்தைக் கண்டேன்" என்றான் மாறன்.

"உண்மைதான். அவன் நேற்றே காட்டிலிருந்து கிளம்பி விட்டான். அவனைத்தான் நீர் பார்த்திருக்க வேண்டும்" என்று லோகா ஒப்புக்கொண்டாள்.

இருவருமாக நடந்தனர். பாதையில் கற்களும் முட்களும் காலைப் பதம் பார்த்தன. ஆனால், இருவரும் அதைப்பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. இருட்டில் மனித மனதில் ஏற்பட்டிருக்கும் மாறுதலை எப்படி வர்ணிப்பது? ஒரு வார்த்தை பேசுமிடத்தில் இரு வார்த்தைகள் வரும். ஒருவரை மற்றவர்



தொடாமல் நடந்த இருவரின் கைகளும் இப்போது ஒட்டிக் கொண்டன; விரல்கள் பின்னிக் கொண்டன.

இருவரும் நடந்து செல்லும் வழியில் அமராவதி ஆறு குறுக்கிட்டது. அந்த படகுத் துறையைப் பார்த்தவுடன் மாறனுக்கு இரட்டிப்பு சந்தோஷம். அவன் இருளிலும் தேர்ந்தெடுத்துப் பயணித்த பாதைச் சரியானது தான். அதைவிட ஒரே இரவில் இரு முறை இதைக் கடக்கும்படி நேர்ந்த அதிர்ஷ்டத்தையும் எண்ணினான் மாறன்.

கரையில் இருந்தது ஒரே ஒரு படகு தான். அதுவும் அவனும் அடியானும் கொண்டு வந்தது தான். தோணியில் ஏறிக்கொண்டுப் படகை வலிக்க ஆரம்பித்தான். அது எதிர்க் கரையை நோக்கிப் புறப்பட்டது. மாறன் கழியைப் பிடித்து ஆற்றின் அடியில் இருந்தத் தரையின் மீது அதை ஊன்றிப் படகைச் செலுத்தினான்.

ரம்யமான பொழுது. ஆற்றில் படகு செலுத்தும் சப்தம் மட்டுமே கேட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் அந்த சப்தத்துக்கு ஒரு எதிரொலியும் கேட்டது. நீரில் சலசலப்பு சப்தமும் கேட்டது. மங்கலான வெளிச்சத்தில் முதலில் ஏதும் தெரியவில்லை. பின்னர் உற்றுப் பார்த்தான் மாறன். எதிர்ப் பக்கம் ஒரு தோணி வந்தது. ஒருவன் தனியாக அதைத் தள்ளிக்கொண்டுவந்தான்.

எதிர்ப் படகு ஓட்டுபவன் கழியைத் தண்ணீரில் 'தொப் தொப்' என்று போட்டுத் தோணியைத் தள்ளிய சப்தம் செவியில் இப்போது தெளிவாக விழுந்தது. ஆனால், இப்படிப் பலரும் ஆற்றைக் கடப்பது சகஜம் தான் என்று நினைத்தாலும் மாறனுக்குக் கவலை குறையவில்லை. இளவரசி அதைப் பற்றியெல்லாம் கவலைப் பட்டதாகவே தெரியவில்லை.

யார் இந்த இருட்டில் ஆற்றைக் கடக்கிறார்கள் என்று திரும்பிப் பார்த்துச் சந்தேகம் தீர்த்துகொள்ளவேண்டுமென்ற ஆவல் அளவில்லாமல் எழுந்தது மாறனுக்கு. எனினும் தலையைக் குனிந்தே வந்தான். தான் யாரென்று வெளிப்பட்டால் அபாயம்.

ஓடங்கள் இரண்டும் நெருங்கின.

எதிர்த் தோணியில் வருபவனும் அதைப் போன்ற உணர்வைக் கொண்டான். தோணி மூலம் அமராவதியை யார் இந்த நேரத்தில் கடக்கிறார்கள்? அதுவும் அவர்கள் காட்டிலிருந்துதான் வந்திருக்க வேண்டும். ஒரு வேளை சோழரின் ஒற்றர்களாக இருக்கும். நம்மை உற்றுக் கவனிப்பார்கள் என்று எண்ணியவன் தலையைக் குனிந்தபடி சென்றான்.

கடைசி நொடியில் இரு தோணிகளும் ஒன்றன் அருகே ஒன்றிருக்கும் போது என்ன தோன்றியதோ, ஓரக்கண்ணால் பார்த்தான் அவன். என்ன ஆச்சரியம்? அவர்களும் தலையைக் குனிந்தவாறே சென்றனர். அவர்கள் இருவர். அதில் ஒருத்தி பெண்.

இரண்டு படகுகளும் ஒன்றை ஒன்று கடக்கும்வரை தலையைக் குனிந்திருந்தான் ரவிதாசன். ஆனால், சட்டென எழுந்த மின்னல் போல, அந்த எதிர்ப் படகில் இருப்பவர் இன்னார்தாம் என்பதை அவனுடைய உள்ளுணர்வு அவனுக்கு உணர்த்தியது. சேவூர்ப் போருக்கு முன்னர் பாண்டியர் படையும் சோழர் படையும் எதிரெதிரே நின்றன. அப்போது திடீரெனச் சோழர்கள் முன்னேறினார்கள். அப்போது அவசரமாக அபாய முரசு ''டண் டண் டண்'' என்று அடித்த சப்தத்தை மறக்கவே மாட்டான் ரவிதாசன். அது இப்போதும் அவன் செவிகளில் கேட்பது போலிருந்தது.

'இது எப்படிச் சாத்தியம். கண்களே பொய் சொல்லாதீர். கட்டுக் காவலுடன் நாம் காட்டில் விட்டு விட்டு வந்தப் பெண் இப்படித் தஞ்சையை நோக்கிச் செல்கிறாளே எப்படி?' என்று நினைத்தான்.

'பழுவூர்ப் பெண்ணைக் கடத்தியதின் முக்கியத்துவம் எத்தகையது என்பதை வலியுறுத்தி விட்டு வந்தோமே. கோட்டை விட்டு விட்டார்களே!' என்ற ஆதங்கம். ரவிதாசன் கோபம் கொண்டான். பற்றி எரிந்தது அடிவயிறு. 'சோழர்களின் சக்தி ஆயிரம் வருஷம் ஆனாலும் அழியாதது என்று சொன்னதெல்லாம் உண்மைதானா?' சோழர்களோடு போராடவில்லை. ஏதோ ஒரு மாபெரும் சக்தி கொண்ட உருவமற்ற ஒன்றுடன் மோதுவது போலிருந்தது. தன் வேலை ஒவ்வொன்றுக்கும் இப்படி எதிர்ப்பா? ரவிதாசனே மலைத்துப் போனான்.

ஓடம் காட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. அந்த பழுவூர்ப் பெண் நாட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள். இடையே இருந்த தூரம் அதிகரித்தது. ரவிதாசன் சட்டென முடிவெடுத்தான். தன் இடுப்பில் சொருகி வைத்திருந்த கத்தியை எடுத்தான். அந்த இருவரின் மீது விட்டெறிந்தான்.

மாறனும் தலையை நிமிர்த்தாமல் எதிர்த் தோணியைக் கடந்தவுடன் பெரு மூச்சு விட்டான். அப்போதுத் திடீரெனக் கையில் ஒரு வலி. தன்னை நோக்கி ஏதோ பறந்து வருகிறது என உணர்ந்தான். நட்சத்திரங்களின் ஒளியில் அது மின்னல் போலிருந்தது.

ஆனால் அது என்னவென்று அவன் அறிந்து கொள்ளும் முன்பே அது அவன் கையைத் தாக்கியது. அவன் தலைச் சுழன்றது. நினைவு



சுழல்வது போலத் தோன்றியது. அறிவு மங்கியது. மயக்கம் ஆட்கொண்டது. தடுமாறி வெள்ளத்தில் விழுந்தான்.

ஆற்றின் நீர் அவனைத் தன்னுடைய பாதையில் இட்டுச் சென்றது.

❖ ❖ ❖

## அத்தியாயம் தொண்ணூற்று மூன்று

## கரையில் ஒதுங்கினான்!

ஆற்று வெள்ளத்தை அறிஞர்கள் மானிட வாழ்க்கையோடு ஒப்பிடுவதில் தவறேதுமில்லை. பிரவாகம்போல ஏதோ ஒரு சக்தி மனிதராய் பிறந்த அனைவரையும் இட்டுச் செல்கிறது என்று தொன்று தொட்டு நம்பப்பட்டுவருகிறது.

ஆனால், வெள்ளம் ஒன்றுதானென்றாலும், அதன் பிரவாகம் பிரவேசிக்கும் திசை ஒன்றுதானென்றாலும், அதில் சிக்கியவருக்கும் அனுபவங்கள் பலவிதமாயிருக்கும் என்று பார்ப்பவர்கள் வியந்ததுண்டு. அது போல அந்த நள்ளிரவில் காட்டில் இருந்த மூவருக்கும் வெவ்வேறு அனுபவங்கள். அதுவும் அவை ஏற்பட்டது ஒரு நிஜப் பிரவாகத்தினால்.

வெள்ளம் மாறனை அடித்துச் சென்றது. மேக மண்டலத்தின் குளிர்ச்சியைக் கொணர்ந்த வெள்ள நீரில் விழுந்த அதிர்ச்சியால் மேலே கத்தக்கூட நாவெழாமல் முதலில் திகைத்தான் அவன். தன்னைக் கத்தி தாக்கியதால் வேறு தளர்ச்சியடைந்திருந்தான். அதனால் பிரவாகத்தை எதிர்த்துப் போராடமுடியாமல் அவனும் அதனுடன் நகர்ந்தான்.

ரவிதாசனோ தன்மடியில் செருகியிருந்த கத்தியை எடுத்து விட்டெறிந்தபின் அந்த கத்தி ஏற்படுத்திய விளைவுதான் என்ன என்று பார்க்கும் ஆசையில் தன் ஓடத்தில் திரும்பி நின்றிருந்தான். வேறொரு ஆர்வத்தில் அவனது படகு கரையில் சென்று முட்டப் போகிறது என்று தெரியாமலிருந்தான். அதனால் அவன் தலைகுப்புற எதிர்க்கரையில் விழ நேர்ந்தது. விழுந்தவன் கண்ணில் பட்ட சேற்றை துடைத்துத் திரும்பிப் பார்க்கும்முன் அவனது படகையும் ஆற்றின் பிரவாகம் அடித்துச் சென்றுவிட்டது. படகின்றி வெள்ளத்தின் மறுபக்கம் மாட்டிக்கொண்டான் ரவிதாசன்.

இதில் லோகா மட்டும் திடமாகச் செயல்பட்டாள். பெண் என்றால் மட்டும் பழுவூர் இரத்தத்தில் வீரமும், விவேகமும் குறைந்தா இருக்கும்? உற்றுப் பார்த்தபோது வெகுதூரத்தில் வெள்ளம் மாறனை இட்டுச்சென்று கொண்டிருந்தது தெரிந்தது. அவளும் பிரவாகத்தில் குதிக்கலாமா என்று முதலில் எண்ணினாள். பின் தனக்கு நீச்சல் தெரியாதென்ற உண்மை புலனானது.

படகு கரையை அடையும் முன்பே, கரையில் தாவிக் குதித்தாள் லோகா. மான்போலத் துள்ளித் துள்ளி பிரவாகம் சென்ற வழியில் அதன் கரையில் ஓடினாள். ஓடும் முன் ஓரக்கண்ணால் பார்த்த போது படகின்றி ரவிதாசன் எதிர்க்கரையில் மாட்டிக் கொண்டதில் அவளுக்கு மகிழ்ச்சியென்றாலும் மாறனுக்கு என்ன நேர்ந்தது என நினைத்தே பயந்தபடி ஓடினாள்.

எதிர்க் கரையில் ரவிதாசன் விரக்தியின் உச்சகட்டத்திலிருந்தான். அவ்வப்போது தரையில் தன் கையால் ஓங்கி அடித்தான். அவசர உணர்வுகள் எப்படி மனிதனைத் தோல்வியுறச் செய்கின்றன என்று இப்போது நன்கு அறிந்திருந்தான். கத்தியை விட்டெறிந்த ரவிதாசன் திரும்பி இருளுக்குள் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்; தனது கத்தி சென்று எதிரியைத் தாக்கியதாவென்று. தாக்கியது! அதில் ரவிதாசனுக்குப் பேரானந்தம். இரு படகுகளும் வெவ்வேறு திசையில் பயணிக்க, கும்மிருட்டில் தான் விட்டெறிந்த கத்தி போய்ச்சேரவேண்டிய இடத்தில் சேர்ந்து விட்டது. தன் திட்டத்தைக் கெடுக்க வந்தவன் நீரில் விழுந்து விட்டான். ஆனந்தம் கொண்டான் ரவிதாசன்.

'இனிப் படகைத் திருப்பிச் சென்று அந்த பெண்ணையும் சிறைப்பிடிக்கவேண்டும். நாளையே கூட்டத்தின் மறைவிடத்தை வேறு இடத்துக்கு மாற்றவேண்டும்' என்று தீவிரமாக யோசனை செய்துகொண்டிருந்த போதுதான் சமயம் பார்த்து ரவிதாசனின் படகு சென்ற வேகத்தில் கரையில் மோதி முட்டியது. ரவிதாசன் ஆற்றங்கரையில் தூக்கியெறியப்பட்டான். விழுந்து வாரிக் கொண்டு அவன் எழும்முன் படகையும் பிரவாகம் இழுத்துச் சென்றுவிட்டது. ரவிதாசனின் கரையில் வெறெந்தப் படகும் இல்லை. இந்தப் பிரவாகத்தை நீந்திக் கடக்க முடியுமா என்பது சந்தேகம்தான். அவன் தஞ்சைக்குச் சென்று வந்த பிறகு பிரவாகம் திடீரென்று பெருகியிருந்தது. நேற்று மலைத்தொடரில் அடித்த புயலும், மழையும் வேறு இப்போது இங்கு இந்த காட்டாற்றில் பெருவெள்ளமாய்க் குமுறிக் கொண்டிருந்தது.

'ஆகா, இந்த சோழர்களின் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்தான். இயற்கை கூட அவர்களுக்கு உதவுகிறது. பாண்டியர் போராட்டத்தை வெள்ளமெனும் வேலியைக் கொண்டு வழிமறிக்கிறது' என்றெண்ணினான்.



சோழர்களின் அதிர்ஷ்டத்தைப் பற்றி நினைவு வந்தவுடன் வேறு ஒன்றும் ரவிதாசனின் நினைவுக்கு வந்தது. தஞ்சைக்குக் கிளம்பும்முன் பரமேசுவரன் ரவிதாசனைப் பார்த்து ஒரு கேள்வி கேட்டான். ''ரவிதாசரே! உமக்கு ஓய்வே கிடையாதா? ஏதோ சொந்தப் பகைபோல சோழரை சதா வம்புக்கு இழுத்துக் கொண்டே இருக்கிறீர்?'' என்று.

அதற்கு ரவிதாசன் ''பரமேசுவரா, மாமரத்தின் மீது கல்லை விட்டெறிந்து கொண்டே இருப்போம். என்றாவது ஒரு நாள் மாம்பழம் விழுமல்லவா?'' என்றான்.

பரமேசுவரன், ''எனக்கு ஒரு சந்தேகம். அன்றொரு நாள் சோழரின் சிங்காதனத்துக்கு சம்பந்தம் கொண்ட மூன்று பேரையும் ஒரே தினத்தில் கொண்டு போவதற்காக யமதர்மனை வெற்றிலை பாக்கு வைத்து அழைத்தோம். ஆனால், வந்தவன் மூவரையும் கைக் கொள்ளாமல் அதில் இருவரை விட்டுவிட்டுச் சென்றானே. நாம் கொல்ல நினைத்த மற்ற இருவரும் தப்பி விட்டார்களே? அப்போது சோழர்களையும், அவர்களுடைய நண்பர்களையும் ஏதோ மனித சக்திக்கு அப்பாற்பட்டது காக்கின்றதோ?'' என்று கேட்டான் .

அது இப்போது நினைவுக்கு வந்தது ரவிதாசனுக்கு. 'பன்னிரண்டாம் பிராயத்தில் போர்க்களம் புகுந்த வீராதி வீரர், வீரபாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரி, இரட்டை மண்டலத்தார் தொண்டை மண்டலாதிபதி, வடதிசை மாதண்ட நாயகர் என்றழைக்கப்பட்ட ஆதித்தனைக் கொன்றனர் ஆபத்துதவிகள். அதுவே மாபெரும் செயலென்றும் சரித்திரத்தின் திருப்புமுனையென்றும் பேசி வந்தனர். ஆனால், அதுவும் தற்செயலாக நடந்த ஒன்று தானோ? மூவரில் ஆதித்தனுக்கு மட்டுமே அற்பாயுள் இருந்திருக்குமோ? அப்படி நமது செயல்களுக்கு மேற்பட்டது விதியென்றால், நாம் சும்மாயிருந்திருந்தால்கூட அவன் மாண்டிருப்பானோ? பாம்பு தீண்டியோ, தேரின் சக்கரத்தில் சிக்கியோகூட இறந்திருப்பானோ? பின் போராளிகள் ஆகிய நமக்கு என்ன வேலை? எல்லோரும் விதியே என இருக்கலாம் அல்லவா? பின் எதற்காக இவ்வளவு தியாகங்கள், மோதல்கள்? நாம் கைக் கொண்ட விரதம் நிறைவேறும் சமயம் நெருங்கிவிட்டது என்றிருந்தபோது இப்படி விதி விளையாடியது ஏன்?' என்று ஆதங்கப்பட்டான்.

விரல்விட்டு எண்ணக் கூடிய சம்பவங்களே சரித்திரத்தை மாற்றி இருக்கின்றன. 'ஆதித்தனின் கொலையுடன் சேர்ந்து சுந்தர சோழனையும் பொன்னியின் செல்வனையும் கொன்றிருந்தால்...?' என்ற ஏக்கம் வீரபாண்டியனின் ஆபத்துதவிகளுக்குச் சாகும் வரை நிச்சயமாக இருக்கும்.

அப்பேற்பட்ட சம்பவமது! அதற்குக் காரண கர்த்தாவாக இருந்தவன் ரவிதாசன். அதனால்தான் அந்தத் தோல்வியில் அவனுக்கு வலி அதிகம். ஆனால், ஐந்தாண்டுகளுக்கு முன் நடந்த அந்த நிகழ்ச்சிக்கும் இப்போது நடந்து முடிந்த நிகழ்வுகளுக்கும் ஒரு தொடர்பிருப்பது போலிருக்கிறதே என்று அவனுக்கு யோசிக்கத் தோன்றியது. அன்றுபோலவே இன்றும் ஒரு மறைமுக சக்தி ரவிதாசனை வழி மறித்தது. உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்ய மாட்டேன் என்று செத்தொழிந்த பாண்டிய வம்சத்துக்கு நன்றி யுடன் இருக்கும் பாண்டிய ஆபத்துதவிகளுக்குச் சோதனை மேல் சோதனை.

இருளில், எதிர்க்கரையில் லோகா ஓட்டம் பிடித்தாள். ரவிதாச னிடமோ ஆற்றைக் கடக்க ஓடம் இல்லை. பழுவூர்ப் பெண்ணைத் தடுத்து நிறுத்தச் செய்த பிரயத்தனம் பலிக்கவில்லை. விதியெனும் அரக்கன் தன்னையும் மிஞ்சிவிட்டான் என்பதை ஒப்புக் கொண்டான் ரவிதாசன்.

"இல்லை, இல்லை. அப்படியே விட்டுவிடக்கூடாது."

ரவிதாசன் முன் வைத்தக் காலைப் பின் வைக்கிறவன் அல்லன். விதியென்ன, மதியென்ன ? யார் தடுத்தாலும் கேட்க மாட்டான்.

குதித்து எழுந்தான். அவன் மூளை அதிவேகமாக செயல்பட்டுக் கொண்டிருந்தது. தரையில் கிடந்த தன் வாளை எடுத்தான். அருகிலிருந்த மரத்திலிருந்து நீண்ட கிளைகளாகப் பார்த்து வெட்டினான். காட்டில் படர்ந்திருந்த கொடிகளை வெறிவந்தவன் போல பலம் உபயோகித்துப் பிய்த்தான். பின் கிளைகளை அவற்றால் கட்டினான்.

'கடாரத்துக்குச் செல்லக் கப்பலா கட்ட வேண்டும்? இல்லையே. ஒருவன் ஒருமுறை ஆற்றைக் கடக்கும் அளவுக்கு ஒரு ஓடம் செய்தால் போதுமே. ஆனால், ஒன்று. இனி, பிணைக்கைதி என்ற பேச்சுக்கே இடமில்லை. இன்று இரவு அவர்களைக் கண்டால் சிறிதும் தயங்காமல் உயிரை வாங்கிவிட்டுத்தான் மறு காரியம் பார்க்கவேண்டும்' என்று உறுதி பூண்டான் ரவிதாசன்.

திடமான கரையில் இருக்கும் ஒருவரின் செயல்பாடு ஒரு வகை யில், அதாவது மதியின் கட்டுப்பாடுக்கு உட்பட்டே இருக்கும்.



ஆனால், ஆற்றில் விழுந்த ஒருவனால் என்ன செய்யமுடியும்? நீருக்குள் மாறன் விழுந்ததுதான் தாமதம். மேலும் மேலும் பெருகிய வெள்ளம் மதம் பிடித்தது போல அவனைச் சுற்றிக் கொண்டு தன் வழியில் இட்டுச் சென்றது. மாறனைப் போன்ற ஒரு வீரன் மற்ற நேரத்தில் ஆற்று வெள்ளத்தில் விழுந்திருந்தால், நீந்திக் கரைசேர்வது பெரிய விஷயமன்று. ஆனால், அவனால் இப்போது ஒரு கையைத் தூக்கவே முடியவில்லை.

நீரில் விழுந்த மாறன், 'இந்தப் பெருவெள்ளத்தில் நான் மூழ்கி இறப்பதற்காகவா இவ்வளவு தூரம் வந்தேன்? தப்பிவிடலாம் என்று யத்தனித்த தருணத்தில் நெஞ்சைப் பிளக்கும் இந்த சம்பவம் நடந்து விட்டதே? என் நாட்டில் இருக்கும் மாகடல் போன்ற வீரநாராயண ஏரிக்கு அருகே வீரநாராயணப் பெருமாள் அல்லும் பகலும் தூங்காமல், கண் மூடாமல், காத்து அருள் புரிந்து வருகிறார். அவர்கூட என்னைக் கைவிட்டுவிட்டாரே? வெற்றியின் விளிம்பில் இப்படி நீரில் விழுந்தோமே?' என்று நினைத்துக்கொண்டான்.

நதியில், வழக்கத்தைவிட அதிகமாகவே வெள்ளம் போய்க் கொண்டிருந்தது. இதனால் மற்ற ஒலிகளெல்லாம் அமுங்கிப் போகும்படியான ஒரு பெரும் ஆரவாரம் எழுந்தது. அங்கு எழுந்த பலவகைச் சப்தங்கள் நதியின் வேகத்தையும், அதனுடைய அபார சக்தியையும் நன்கு எடுத்துக்காட்டுவனவாய் இருந்தன. 'ஓடத்தின் மீது இருந்தபோது கேட்காத சப்தங்களெல்லாம் இப்போது கேட் கின்றனவே. படகின் மீதிருக்கும் போது இவ்வளவு ஆரவாரம் இல்லையே' என்று நினைத்துக் கொண்டான்.

அந்தப் பிரவாகத்தினாலும் தோளில் ஏற்பட்ட வலியினாலும் அறிவு நொடிக்கு நொடி சிதறிப்போய் வருவதை உணர்ந்தான். சீக்கிரம் ஏதேனும் செய்யவேண்டும். அதனால் கரையை எட்டி விடவேண்டும் என்பதே முதல் வேலை என முடிவெடுத்தான்.

நீரில் மிதந்த மாறன் தன் உடலை நிமிர்த்தித் தரை காலில் படு கிறதா என்று ஆராய்ந்தான். ஆற்றின் கீழிருந்து கல்லும் மண்ணும் கால்களில் அவ்வப்போது தென்பட்டன. ஆனால், திடமான தரையைப் போலத் தெரியவில்லை. வெள்ளம் ஆழமில்லை, ஆனால், வேகம் அதிகம் என்றறிந்து கொண்டான். அதனால் வெள்ளத்தின் போக்கில் செல்லாமல் சற்றுக் கரையை நோக்கி உடலைத் திருப்பிக்கொண்டான். வெள்ளம் அவனை மீண்டும் திருப்ப நினைத்தபோது மூச்சை பிடித்து உறுதியாய் இருந்தான். சில நேரத்துக்கெல்லாம், மாறனின் கால்கள் திடமான தரையைத் தொட்டன.

அந்தக் காட்டு நதியில் இரு கரையையும் தொட்டுக் கொண்டு தண்ணீர்ப் பிரவாகம் போய்க் கொண்டிருந்தது. ஆறு பெருக் கெடுத்துக் கரையையும் ஆக்கிரமித்திருந்தது. நதிக்கரை மரங்க ளெல்லாம் தண்ணீர்ப் பிரவாகத்தில் அகப்பட்டு நின்றிருந்தன. அடித்துவரப்பட்ட மாறன் அவற்றை நோட்டம் விட்டான். அவை திடமான மரங்கள். பிரவாகத்தை எதிர்த்து நின்று அவனைக் காப்பாற்றும் என்ற நம்பிக்கை பிறந்தது.

அவற்றுள் விசாலமாய்ப் படர்ந்திருந்த ஆலமரங்கள் நீர்வரை விழுதுகள் விட்டுக் கொண்டிருந்தன. குழந்தைப் பருவத்தில் இது போன்ற விழுதுகளில் ஊஞ்சல் ஆடியும், அதைப் பிடித்து ஆழமான பகுதியில் நீரில் குதித்தும் வானர வேலைகள் செய்திருந்தவன்தான் மாறன். இப்போது அவை அவன் உயிரைக் காக்குமா?

ஓரிரு முறை அவன் கைப்பிடியில் அந்த விழுதுகள் பட்டாலும், வழுக்கிக் கொண்டு போய் விட்டன. சற்றுதூரத்தில் இன்னமும் ஒரு ஆல மரம் வருகின்றது என்பதை பார்த்துவிட்டான் மாறன். அது அருகில் வந்தவுடன் பிரவாகத்தின் மேலே திடீரெனப் பாய்ந்து அந்த விழுதுகளைக் கெட்டியாகப் பிடித்து மார்புடன் அணைத்துக்கொண்டான்.

பிரவாகம் அவனை ஒரு குலுக்குக் குலுக்கியது. ஒரே இடத்தில் அவனை வட்டமடிக்கச் செய்தது. ''உன்னை அடித்துக்கொண்டு வந்தது நான். இன்னமும் என்னுடன் வா'' என்றது வெள்ளம். முதலில் சற்றுத் திகைத்த மாறன் விரைவில் சமாளித்துக் கொண்டு, இன்னமும் இறுக்கமாக அந்த ஆலம் விழுதுகளைப் பிடித்துக் கொண்டான்.

பின் மெல்ல மெல்ல அடுத்தடுத்த விழுதுகளின் உதவியுடன் கரையை அடைந்தான். நீரின் அளவுக்குச் சற்றுத் தள்ளிச் சென்ற பின்னே தரையில் விழுந்தான். அவன் செய்த முயற்சியில் அடி பட்ட கையில் வலி ஏற்பட்டது. அதனால் பிராணனே போய்விடும் போலிருந்தது.

கந்தமாறனுடைய கரிய முகம் வலியில் மேலும் கருஞ்சிவப்பாய் மாறியது. கண்கள் தடாகம் போலாயின. உதடுகள் துடி துடித்தன. உதட்டைக் கடித்துக் கொண்டு, வலியையும் பொறுத்துக்கொண்டு, அடுத்து என்ன செய்வது என்று யோசித்தான். அதற்கு முன் ரவி தாசன் அடுத்து என்ன செய்வான்? என்றும் சிந்தித்தான். தன்னைப் பற்றி அவனுக்குக் கவலையிராது. லோகாவைக் கைப்பற்ற மட்டுமே நினைப்பான். தான்வேறு இல்லாததால் அந்தத் தீவிர வாதிக்குக் காரியம் எளிதாய்ப்போகும். இந்த நினைப்பு வந்த



வுடன் மாறனுக்கு வந்த ஆத்திரத்துக்கும், துயரத்திற்கும் அளவே யில்லை. 'அவளை மீட்கவேண்டும். அப்புறம் எனக்கு என்ன ஆனாலும் கவலை இல்லை' என்று நினைத்துக் கொண்டான்.

அவன் கையிலிருந்து கொட்டும் உதிரத்தின் வாசனைக்கு முதலைகள் வந்தாலும் வரும். ஆற்றின் வெள்ளம் அதிகரித்தால் மீண்டும் அது நம்மை அடித்துச் செல்லும் என்று எல்லா அபாயங் களையும் கணக்கிட்டது அவன் மனம். ஆகவே அங்கிருக்கக் கூடாது, எழுந்து சென்றுவிடவேண்டும் என்று எண்ணியவனுக்கு ஏதோ தலைசுற்றியது போலிருந்தது. கரையின் மேல் சமாளித்து நிற்கலாம் என்று நினைத்தான் மாறன். ஆனால், அந்த வலியானது அவனைத் தடுமாறச்செய்தது. அப்படியேச் சுருண்டு கீழே விழுந்தான். மயக்கம் அவனை ஆட்கொண்டது. தரையில் கிடந்தான். 'மீண்டும் எழும்போது பனித்திரளைப் போக்கிக் கொண்டு பொற் கிரணங்களைப் பரப்பிக் கொண்டும் தேஜோ மயமாக உதித்த சூரியனைப் பார்க்க இருப்போமோ இல்லையோ?' என்ற எண்ணம் மட்டும், மயக்கம் வரும் முன் கடைசியாக வந்தது.

சற்று நேரத்துக்கெல்லாம் வேறு ஒரு உலகில் இருப்பது போலொரு எண்ணம் மாறனுக்கு. 'ஆகா அதற்குள்ளாக சொர்க் கத்தை எட்டிவிட்டோமா?' தன்னை மடியில் கிடத்திக் கவனிக்க ஒரு தேவதை வேறு வந்துவிட்டாள். நிச்சயம் தேவதைதான். அவளைச் சுற்றி மல்லிகை வாசம் வேறு. ஆகா கடவுளுக்குத்தான் எவ்வளவுக் கரிசனம். அந்த தேவதைக்கு கூட லோகாவின் முகத்தைக் கொடுத்திருக்கிறான்'' என்று நினைத்துக்கொண்டான்.

ஓடத்திலிருந்து சரியான நேரத்துக்குக் குதித்த லோகா முதலில் ரவிதாசன் என்ன செய்கிறான் என்று திரும்பிப் பார்த்தாள். அவனது நிலை அவளுக்குச் சிரிப்பைக் கொடுத்தது. ஓடமின்றித் தவிக்கிறான். அதனால், உடனடியாக அவனால் தன்னைப் பின்தொடர முடியாது. அவன் வேறு உபாயம் கண்டு பிடிப்ப தற்குள்ளாக மாறனை நாம் கண்டுபிடித்துவிடவேண்டும் என்ற ஆர்வம் அவளுக்கு. பிரவாகத்தின் வழியில் ஓடினாள். முதலில் பயமாய் இருந்தது. இருளும், பயம் கொடுக்கும் சுற்றுச்சூழலும் அவளை நடுங்கவைத்தன. காலால் மிதிப்பதில் எது மரக்கட்டை எது முதலை என்றுகூடத் தெரியாது என்ற கிலி.

ஆனால், மாறனின் நிலையை நினைத்ததும் அது அவளுக்கு ஒரு பெருந் தெம்பைக் கொடுத்தது. அவன் பிரவாகத்துக்கு இரையாகி யிருக்கக்கூடாது. 'அடாடா! நம்மை காக்க வந்தானே. அவனுக்கு இந்தக் கதியா நேரவேண்டும்?...' கரையில் ஓடிக்கொண்டிருந்த

லோகாவுக்கு ஒரு திடமான திட்டமில்லை. ஏதோ ஒரு நம்பிக்கையில் ஓடினாள். எப்படியோ மாறன் தப்பிக் கரையேறியிருந்தால் நல்லது என்று எண்ணினாள்.

ஒரு இடத்தில் ஓடிவந்தவள் மூச்சுவாங்க நின்றாள். அப்போது வெகு அருகில் ஒரு முனகல் சப்தம் கேட்டது. அதே இடத்தில் நின்றாள் லோகா. தான் கும்பிட்ட கடவுள் தன்னை கைவிடவில்லை எனத் தெரிந்தது அவளுக்கு.

ஒரு மெல்லிய காற்று, நீரின் மீது தவழ்ந்து கரையின் மீதும் வந்தது. அதில் சுற்றியிருந்த காட்டு மரங்கள் எல்லாம் சிலிர்த்து நடுநடுங்கின. சட்டென மயக்கத்திலிருந்து எழுந்தான் மாறன். லோகாவின் மடியில் நிஜமாகவே படுத்திருப்பதை உணர்ந்தான். 'இல்லை இல்லை' என்றது அவன் பகுத்தறிவு. ரவிதாசன் தன் மீது கத்தியை எறிந்துவிட்டுப் பின் தொடர்ந்து வந்து லோகாவை அழைத்துச் சென்றிருக்க வேண்டும். எல்லாம் தோற்றது. இது கனவு தான்'' என்று நினைத்தான்.

பின் தன்னை மடியில் தாங்கியிருந்த அந்த தேவதையைப் பார்த்தான். அவளுடைய முகத்திலோ எல்லையற்ற ஆனந்தம் ததும்பிக் கொண்டிருந்தது. ஆனால், உதட்டில் மட்டும்தான் சிரிப்பு. அவளுடைய கண்களும் மூக்கும் மட்டும் ஒரு தினுசாக வீங்கிப் போயிருந்தன. மனத்துடிப்புத் தாங்காமல் அவள் நெஞ்சுக் குழியில் விம்மல் இன்னும் அடங்கவில்லை என்பதைத் தெளிவாக உணரமுடிந்தது.

''எனக்காக வந்தீரே. இப்படி துன்பப்படுகிறீரே?'' என்றாள் அழுதபடி.

''உன்னைத் தவிக்க விட்டுவிட்டு நான் செய்ய வேறு வேலை ஏதும் இந்த ஈரேழு பதினாலு உலகத்திலும் கிடையாது'' என்று சொல்ல நினைத்தான். வார்த்தைகளுக்குப் பதிலாகக் காற்றுதான் வெளி வந்தது

அவன் அடிபட்டுக் கிடந்தது அவளுக்கு வேதனையூட்டிற்று. அவள் அழுகை அவனுக்குத் துயரூட்டிற்று. பிரிந்தபோது, வாராமல் மீண்டும் ஒன்று சேர்ந்தபோது அவளுடைய க்ண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று. கண்ணீர்ப் பிரவாகம் ஏராளமாய்ப் பெருகித் தண்ணீர்ப் பிரவாகத்துடன் போட்டியிட்டது. அவன் கையிலிருந்த காயத்தை, மெல்ல விரலினால் வருடினாள். அவளுடைய மெல்லிய ஸ்பரிசம் ஒரு நொடி மயில் தோகையைப் போல இருந்தது அவனுக்கு. பின் சுட்டுவிடும் நெருப்பைப்போலவும் இருந்தது.



லோகா அவனுடைய காயத்தை ஆராய்ந்தபோது, காயம் ஒன்றும் ஆழமில்லையென்றும் பறந்து வந்த கத்தி அவன் தசையை மட்டும் அறுத்துச் சென்றிருந்தது என்று கண்டுபிடித்தாள். குத்துக் காயம் போலவும் இல்லை. எலும்பையும் முறிக்கவில்லை. இரத்தம் வெளிச் சென்றிருந்தனால் மயக்கம் வந்திருந்தது. உடனே மேலும் ரத்த வெளியேற்றத்தைத் தடுக்கத் தன் ஆடையிலிருந்து துணியைக் கிழித்துக் காயத்தின் மீது கட்டினாள். அதைக் கண்ட அந்த வாலிபனின் உள்ளம் உருகிவிட்டது.

மாறன் தட்டுத் தடுமாறி எழுந்ததைக் கண்ட லோகாவுக்கு 'எனக்காக இவன் இவ்வளவு கஷ்டப்படுகிறானே. தனக்கும் அடிபட்டு வலியில் துடிக்கிறானே. அவன் வலியை தன்னால் வாங்கிக் கொள்ள முடியவில்லையே' என்று தோன்றியது.

அவனுக்குப் பணிவிடை செய்ய நினைத்தாள் லோகா. ஆனால், அதற்கெல்லாம் முன்பாக ஒரு ஆர்வம் மனதில் விஸ்வரூபமெடுத்தது. அந்தக் காயத்தின் மீது தன் முகத்தைப் பதித்து வைத்துக்கொண்டு தன் செவ்விதழ்களினால் முத்தமிடத் தோன்றியது. பின் அந்த உணர்வே அவள் உடலெங்கும் ஒரு சிலிர்ப்பை உண்டாக்கியது. 'ச்சீ இந்த எண்ணம் ஏன் வந்தது?' என்று பதறினாள். பின் வெட்கிக் கண்ணை மூடிக்கொண்டு அந்த எண்ணத்தை அடித்து விரட்டினாள்.

பால் வண்ண அல்லி மலர் போலிருந்த லோகாவின் முகம் நாணத்தில் செந்தாமரை மலர் போன்ற உருவத்தைப் பெற்றது. அதை மாறன் கவனிக்காமல் இருளில் தன் முகம் தெரியாமல் திரும்பிக்கொண்டாள்.

❖ ❖ ❖

## அத்தியாயம் தொண்ணூற்று நான்கு
## கோட்டைக்கு வெளியே!

தட்டுத்தடுமாறி எழுந்தான் மாறன். அந்தச் செயலில் அவன் கானகத்தைவிட்டுக் கிளம்ப ஆயத்தமாகிவிட்டான் என்று தெரிந்தது லோகாவுக்கு. பதறிப்போனாள்.

''சம்புவராயரே! இந்தப் பேதைப் பெண்ணின் நிலைமையைக் கண்டு மனமிரங்கி, இவ்வளவு சிரத்தை எடுத்துக் கொண்டதன் பொருட்டு மிக்க வந்தனம். ஆனால், இப்போது தங்களுடைய

திட்டத்தின் கருத்து என்னவென்று எனக்குப் புரியவில்லையே?'' என்றாள்.

''இளவரசி. எனக்கும் உடம்பு செம்மையாக இல்லை. ஆகையால், சீக்கிரத்தில் காட்டைவிட்டுச் செல்லவேண்டும், உடனே புறப்பட வேண்டும்'' என்றான் அவன்.

''என்ன பிதற்றுகிறீர்கள். உடம்பு சரியில்லையென்றால் தாமதித்தல்லவா போகவேண்டும். இந்தப் பகுதியில் எங்கே பார்த்தாலும் கானகமாகவேயிருக்கிறது. இந்த அடிப்பட்ட நிலையில் நீர் எப்படி வெளியேறுவீர்? ஏதோ உமது தாய் தந்தை செய்த பூஜா பலத்தினால்தான் உயிர் தப்பினீர். அதனால் தான் அந்த பாழாய்ப் போனவன் எறிந்த கத்தி ஆழமாய் வெட்டவில்லை. அப்பப்பா. இனிமேலும் நாம் எந்த அபாயகரமான வேலையையும் செய்யக் கூடாது. ரவிதாசன் ஆற்றின் மறுகரையில் இருக்கிறான். அதனால் இவ்விடம் கானகத்தில் அமைதியாய் அரவணைப்பாய் இருக்கிறது. இங்கேயே இருந்து விடுவோமே'' என்றாள் லோகா.

ரவிதாசன் ஓடமின்றி எதிர்க்கரையில் இருந்ததை விவரித்தாள் லோகா. சற்றுச் சந்தோஷமாய் இருந்தாலும், மாறனுக்கு ரவிதாசனின் ஆற்றல் முழுவதுமாய் தெரியுமென்பதால் அவ்வளவாக அது நம்பிக்கைத் தரவில்லை. கானகம் ரவிதாசனின் சொந்த வீடு போன்றது. இந்த நதி எங்கே ஆழம் குறைவு என்றுகூட அவனுக்குத் தெரியும். நடந்தே கடந்துவந்துவிடுவான். ஆனால், நிச்சயமாக அவனைவிட இவர்களுக்குச் சாதகமாக இருந்தது தற்போதைய நிலைமை என்று ஒப்புக்கொண்டான். அதனால் நிலைமை சாதகமாய் இருக்கும் போதே இடத்தைவிட்டு வெளியேறவேண்டும் என்ற உறுதி ஏற்பட்டது.

''இல்லை, இல்லை. விரைவாகச் செல்ல வேண்டும். இங்கே அவனுடன் இன்னும் சிலரும் வரப் போகிறார்கள் என்பது நிச்சயம்'' என்று அவன் எச்சரித்தான்.

மாறனுக்குக் கத்திக்குத்துக் கூட வருத்தம் அளிக்கவில்லை. 'அதை எய்தவன் என்ன சும்மாவா இருப்பான். பின் தொடர மாட்டானா? வழியெங்கும் துளித் துளியாய் சிந்திய உதிரம் அவனை நேரே தங்களிடம் அழைத்து வந்துவிடும். அடிபட்டவன் போகும் வழி இப்படித்தான் இருக்கும் என்று பாண்டியருக்குத் தெரியும். எங்கு ஒளிந்தாலும் தனது இருப்பிடம் அவனுக்கு நிச்சயமாகத் தெரிந்துவிடும். பின் தொடர்வதில் அவனுக்குக் கஷ்டமிராது. எதிரியைப் போல யோசிக்கத் தெரிந்தவன் ரவிதாசன்.



தான் எண்ணியதை இதற்குள் யூகித்திருப்பான்' என்று மாறன் நினைத்துக்கொண்டான்.

மாறனுக்குத் தான் இதற்கு முன் நடந்துகொண்ட விதம் தவறோ என்று யோசனையில் ஆராய்ந்தான். லோகா இருக்கும் இடத்தை கண்டுபிடித்தாயிற்று. ''உன்னை நான் அழைத்துச் சென்றால் அபாயமுண்டு. அதனால் நான் சென்று உதவி கொண்டு வரும்வரை நீ இவ்விடத்திலேயே இரு'' என்று நம்பிக்கையூட்டிவிட்டுத் தஞ்சைக்குச் சென்றிருக்க வேண்டும். அதுவே சிறந்த வழியென இப்போது தோன்றியது. ஆனால், ரவிதாசன் இல்லாத நேரத்தில் காரியத்தைச் செயல்படுத்துவது சுலபம் என்றும் எண்ணிவிட்டான்.

மாறனுக்கு இப்போது என்ன செய்யவேண்டும் என்று தெளிவாய்த் தெரிந்தது. அவன் உள்ளத்தில் எச்சரிக்கை கிளம்பியது. ''நான் மீண்டும் மயக்கமடைந்துவிட்டால் இந்த நடுக்காட்டில் யார் உன்னை என்ன செய்வது? எனக்கோ ரத்தம் போய்க் கொண்டேயிருக்கிறது. எந்த நேரமும் நான் மீண்டும் மயக்கம் அடையலாம். பின்னர் உனது கதி என்னஆகும் ?'' என்றான்.

''ஐயோ இப்போது என்ன செய்வது?'' என்றாள் லோகா பயத்துடன்.

''இளவரசி நான் மயக்கமுற்றால் என்னைக் கைவிட்டு விடுங்கள்! தாங்கள் எப்படியாவது தப்பிப் பிழையுங்கள்'' என்றான்.

தன்னுடைய இடுப்புத் துணியின் மடியை அவிழ்த்து உதறினான். தனது ஆடையில் முடிச்சுப்போட்டுவைத்திருந்த இலச்சினை மோதிரம் இருக்கிறதா என்று தேடிப் பார்த்தான். அச்சமயம் அத்தனை காலமாக எத்தனையோ நெருக்கடியான நிகழ்ச்சிகளில் தன்னைக் காப்பாற்றி வந்த விதி கைவிரித்துவிடவில்லை என்று நினைக்கத்தூண்டியது. அவன் பத்திரப்படுத்தி வைத்திருந்த இலச்சினை, வெள்ளத்தில் போய்விடவில்லை. ஆடையிலிருந்து வெளியே உருண்டது. நல்ல வேளை. தன் வாளைப்போல அது ஆற்றுடன் செல்லவில்லை.

அதை அவளிடம் ஒப்படைத்தான். ''இந்த இலச்சினை மோதிரத்தை இப்போதே எடுத்துக் கொள்ளுங்கள். நான் மயக்கமுற்றால், அருகில் உள்ள கிராமத்துக்குச் சென்று, இதைக்காட்டி ஏதாவது உதவி கேட்டுத் தஞ்சைக்குச் சென்றுவிடுங்கள். ஜாக்கிரதை! நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கட்டும். மீண்டும் ஒரு முறை என்னால் திரும்பவும் விளக்க முடியாமல் போகலாம்'' என்றான்.

விதி தன்னுடன் ஆடு புலி ஆட்டம் விளையாடுவது போல ஒரு எண்ணம் லோகாவுக்கு. பகைவர் கூட்டத்துக்கு மத்தியில் தன்னந் தனியாக நின்று அஸகாய சூரத்தனங்கள் செய்துவிட்டு பெயர் பெறும், வீரர்களுள் இவனும் ஒருவன். இவனே நம்மைத் தேடி வந்தபோது அடிபட்டு வலியில் துடிக்கிறான். நம் துர்அதிர்ஷ்டமே துர்அதிர்ஷ்டம்'' என்று நினைத்துக்கொண்டாள். அவனை விட்டு விட்டுத் தான் தன்னந்தனியாகச் சென்று தஞ்சையில் சேரமுடியும் என்று அவள் நம்பவில்லை.

பொங்கிவரும் மனக் குமுறலை அவளால் அடக்க முடிய வில்லை. அவள் வருத்தத்தை சில விம்மல்கள் மூலம் வெளி யேற்றினாள். கடவுளிடந்தான் நம்பிக்கை குறைந்து போனது. ''இப்படி என்னை நடுக்காட்டில் தவிக்க விட்டு விட்டாளே, அந்த துர்கா பரமேஸ்வரிக்கு எவ்வளவு முறை மாவிளக்கு ஏற்றி யிருப்பேன்'' என்றாள்

அவன் சொன்ன அறிவுரையைக் கேட்டபின் மிகவும் பயந்த வளைக் கண்டு ஆறுதலாய் மாறன் ''அப்படி உன்னைத் தவிக்க விட்டுவிடுவேனா என்ன?'' என்றான். அவளுக்குத் தைரியம் ஊட்டவேண்டிய நிலை எற்பட்டது மாறனுக்கு. விரலால் அவள் கன்னத்திலிருந்த கண்ணீரைத் தொட்டு பின் வானத்தை நோக்கிச் சுண்டினான். ஒரு சொட்டு மழைநீர் போல வட்டமடித்துத் தரையில் விழுந்தது. விழுந்த நொடியில் மறைந்தது.

''கவலைப்படாதே. இது போல உன் கண்ணீரெல்லாம் காணாமல் போகும்'' என்றான். ஒரு நொடிக்குத்தான் அவன் விரல் அவள் கன்னத்தின் மேல் இருந்தாலும், அவனது ஸ்பரிசம் அவள் கன்னத்தைக் கிழித்துவிடும் போலிருந்தது லோகாவுக்கு.

ஒருகணம் மாறனின் வீர உள்ளம் சலனம் அடைந்து விட்டது. ஆனால், அவனுடைய உள்ளத்தின் அந்தரங்கத்திலே ஒரு குரல், ''இவளைக் கொண்டு போய்த் தஞ்சையில் இந்நிலையில் சேர்ப்பது எப்பேற்பட்டப் பகீரதப் பிரயத்தனம். ஆனால், செய்துதான் ஆகவேண்டும்'' என்று தன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு எழுந்தான். தான் மயக்கமடைந்துவிட்டால் லோகாவுக்கும் கஷ்டம் என்று தெரியும். அதனால் தன் மனதைக் கட்டுப்பாட்டில் வைத்தால் மயக்கம் வராது. வலியும் தெரியாது என்ற முடிவுக்கு வந்தான்.

அவளுக்குத் தன் நோக்கத்தை விளக்கினான். ''இப்போது என் முதல் எண்ணம் என்ன தெரியுமா? ரவிதாசன் மனிதனேயல்ல, மனித உருவத்திலுள்ள அரக்கன். அவனை அழித்தால் அதுவே என்



தேசத்துக்கு நான் செய்யும் பெருந்தொண்டு. அவனைக் கண்ட துண்டமாய் வெட்டி அழிக்கவேண்டும் என்று ஏங்குகிறேன். எனினும். அவனைப் பழிவாங்கும் சந்தர்ப்பத்தையும் இழக்கத் தயாராக இருக்கிறேன். ஏன் தெரியுமா? உம்மைத் தப்புவிக்கும்படி எனக்கு அரசனின் ஆக்ஞை. உம்மை எப்படியும் கொண்டு போய் வீட்டில் சேர்த்துவிடுகிறேன். எந்தக் காரணத்தை முன்னிட்டும் இந்த வேலையில் நான் தோல்வியடைய உடன்பட மாட்டேன்!'' என்றான்.

ரவிதாசனின் நினைவு வந்தவுடன் மாறனின் முகம் கருத்தது. அவனுடையக் குரலில் சிறிது பரபரப்பு தொனித்தது. முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. காயப்படுத்தியவனைப் பழி வாங்கவேண்டும் என்ற தொன்றுதொட்டு வரும் வீரர்களின் ஆசையைக்கூட நிராகரித்துவிட்டுக் கடமையை கவனிக்க வேண்டி இருந்தது. அதனால் மனதைத் திடப்படுத்திக்கொண்டான்.

இந்த இளம் பெண் ''இப்படி பயந்து சாகும் பராக்கிரமசாலியை நான் பார்த்ததேயில்லை என்று சொன்னாலும் பரவாயில்லை. பாண்டியர்களிடம் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பி ஓடுவதைத் தவிர வேறு வழியில்லை. வீரத்துக்கு நேரமுண்டு. விவேகத்துக்கும் ஒரு நேரம் உண்டு. ஒன்றின் நேரத்தில் மற்றும் ஒன்றை வெளி காட்டினால் தோல்விதான் ஏற்படும். அதுமட்டுமல்ல வெறுப்பு இப்போது நம்முடைய வேகத்தையே குறைக்கும்'' என்று பலவாறு தனக்குத் தானே அறிவுறுத்திக்கொண்டான்.

தஞ்சையை நோக்கிச் சிறகுமுளைத்தது போல் பறக்கவேண்டும் என்ற எண்ணத்தில் இருவருமாகக் காட்டைவிட்டு வெளியேறித் தப்பிக்கும் வழியைப் பார்க்கலானார்கள். அடிபட்டிருந்தாலும் தன் துரிதப் பிரயாணத்தைச் செய்து கொண்டு போனான் மாறன். கடமை உணர்ச்சி அவனை இட்டுச் சென்றது. அதை விடக் காதல் உணர்ச்சி அவனுக்குத் தெம்பு கொடுத்தது.

''இரவு இன்னமும் இளமையாய்த்தானிருக்கிறது. முயற்சித்தால் விடிவதற்குள் தஞ்சையை அடைந்துவிடலாம்'' என்றான் மாறன்.

''நீர் இருக்கும் நிலையில் எப்படி நடந்தே சென்று தஞ்சையை அடையப் போகிறோமோ தெரியவில்லை?'' என்றாள் லோகா.

''பெண்ணே அதைரியப்படாதே! உன்னை உன் வீட்டில் சேர்க் காமல் நான் விட்டுவிடமாட்டேன்'' என்று சொல்லும் பாங்கில் அவள் கையை இறுக்கிப் பிடித்தான். ''நான் தஞ்சையிலிருந்து வரும்போது கொண்டுவந்த குதிரையை வழியில் வெகு சமீபத்தில்

தான் விட்டுவந்தேன். அங்கு சென்று கேட்கவேண்டும். பின் விரைவாகப் பயணத்தை மேற்கொள்ளலாம்'' என்றான்.

இருவருமாக நடந்தனர். காட்டில் பாதையெனத் தனியாக ஏதும் இல்லை. மரங்களுக்கிடையில் இருந்த இடைவெளியைக் கண்டுபிடித்து சென்றனர். பூமியின் சத்தை உண்டு, மரம் வெட்டியின் கோடாலியைக் கண்ணால் கூட பாராமல் கொழு கொழுவென்று செழித்து ஓங்கியிருந்தன காட்டுத் தாவரங்கள். புன்னை, அசோகம், அரசு, ஆல், பலா, வேம்பு முதலிய மரங்கள் அடர்ந்து தழைத்திருந்ததன. மேலே பார்த்தால் காற்றிலாடும் கிளைகளும் இலைகளும் அவ்வப்போது நட்சதிரங்களுடன் கண்ணாமூச்சி விளையாடின. மிகவும் ரம்யமான சந்தர்ப்பம். இதுவே வேறு சந்தர்ப்பம் என்றால் இயற்கை கண்ணுக்கு இனிமையையும் மனத்துக்கு உற்சாகத்தையும் அளித்திருக்கும்.

விர்ரென்று அடித்துக் கொண்டிருந்த வாடைக்காற்று அவர்களைச் சற்று வேகமாக நடக்கச் செய்தது. தஞ்சையின் அரவணைப்பை அடைந்துவிடவேண்டும் என்ற துடிப்பை அதிகரித்தது. இன்று இரவு ரவிதாசனைச் சந்திக்காமல் சென்று விடவேண்டுமென்ற உணர்வும் வேகத்தை அதிகரித்தது.

ஜன சஞ்சாரமில்லாத அடர்ந்த காடுகளின் வழியாக நடையைக் கட்டினார்கள். அடர்ந்த மரங்களும் புதர்களும் நிறைந்த காடாகத் தோன்றியது அது. குத்துச் செடிகள் அடர்ந்த அந்தப் பாதை கால்களைப் பதம் பார்த்தது. 'காடு அதிக அடர்த்தியாயிருந்காலும் பாதகமில்லை, காடும் மேடும் முள்ளும் கல்லும் நமக்கு என்ன இலட்சியம்? இந்த பெண்ணைக் கொண்டுபோய் பத்திரமாக சேர்த்துவிடவேண்டும்' என்று நினைத்தபடி நடந்தான் மாறன். சிறிது நேரம் காட்டு வழியில் மௌனமாக நடந்து சென்றார்கள். அவ்வப்போது லோகா ஒரு நெடு மூச்சு விட்டு, அந்த மௌனத்தைக் கலைப்பாள்.

''இரவு இரண்டாம் ஜாமம் ஆரம்பமாகி விட்டது. அதோ சந்திரனும் வந்து விட்டது. இரவு நாலாம் ஜாமத்தில் கிழக்கு வெளுக்கும். அதற்குள் தஞ்சையை அடைந்துவிடலாம்'' என்று நம்பிக்கை கொண்டான் மாறன்.

இருவரும் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக்கொண்டே நடந்தனர். ஒருநாள் இரவு அநுபவத்தில் இருவரும் அவ்வளவு அன்னியோன்னியமாக ஆகியிருந்தனர். லோகா இதுவரை பெரும்பாலும் அரண்மனைக்குள்ளேயே பொழுதைக் கழித்தவள். எந்த



சந்தர்ப்பத்திலும் அவள் உறவினர் அல்லாத மற்ற ஆண்களிடம் கலந்து பழகியதில்லை.

'மிக அபூர்வமாக இவனையே திரும்பத் திரும்பச் சந்திக்கிறோமே. இதில் ஏதாவது விட்டகுறை தொட்டகுறை இருக்குமோ? இது என்ன? முன்னம் எப்போதும் இல்லாமல் அடிக்கடி இது போன்ற சந்திப்புகள் வருகின்றன. குழந்தை ராஜேந்திரன் கூட அப்படித்தான்' என்று நினைத்துக்கொண்டாள்.

அடர்ந்த காட்டைக் கடந்ததும் திறந்த வெளியான மேட்டுப் பாங்கான பூமி வந்தது. அங்கே நின்று நாலா பக்கமும் பார்த்தான் மாறன். அவர்கள் குதிரையை விட்டுவந்த கிராமம் நிலவொளியில் தெரிந்தது.

காட்டிலிருந்து வெளியே வந்து சேர்வதற்குள் இளைத்துக் களைத்துச் சோர்வுற்றுப் போயிருந்தார்கள். எனினும் மனிதக் குடியிருப்பைக் கண்டவுடன் பிறந்த ஆர்வத்தில் ஓட்டமும் நடையுமாகப் போய்க் கிராமத்தின் எல்லையை அடைந்தார்கள்.

கிராமம் அமைதியாய் இருந்தது. ஆனால், இருளில் முற்றிலும் வெறுபட்டிருந்தது அதன் தோற்றம். வீடுகளின் கூரைகளைச் பரங்கிக் கொடிகள் ஆக்கிரமித்திருந்தன. கூரையின் மேல் பரங்கிக் காய்கள் இருட்டில் அகோரமாகக் காட்சி தந்தன. இரவில் அதிசீக்கிரமாகப் படுத்துறங்கும் குடியிருப்புப் போல தோன்றியது அது. ஒரு சப்தமும் இல்லை.

தஞ்சைக்குப் போவதா, வேண்டாமா என்பது பற்றி மாறன் மனதுக்குள் விவாதம் நடந்தது. அதில் உள்ள சாதக பாதகங்களைப் பற்றி அவன் அனுபவம் எடுத்துச் சொன்னது. ஒருவேளை இந்த கிராமத்தில் உதவி கேட்கலாமா என்று ஒருகணம் யோசித்தான். பிறகு, ஏதோ ஒன்று மனதில் தடை செய்தது. முதலில் கிராமாந்தரப் பகுதிகளில் உதவிக்கு வரக்கூடிய வீரர்கள், அதுவும் ஆபத்துகளை எதிர்க்கக்கூடிய வீரர்கள் இருக்கமாட்டார்கள். இரண்டாவது, தஞ்சையிலிருந்து அதிக தூரம் செல்லச் செல்ல யார் நண்பன் யார் எதிரி என்றே தெரியாது. அதனால் இவர்களிடம் உதவி கேட்பதிலும் பயனில்லை. நேரே தஞ்சையை நோக்கிச் செல்வதுதான் வழி. அதன் கோட்டைச் சுவர்களே நமக்கு முழுமையான பாதுகாப்பைத் தரும் என்ற முடிவுக்கு வந்தான்.

''காலையில் குதிரைகளை அந்த மண்டபத்தில் விட்டு புலி இலச்சினையைக் காட்டிச் சென்றோம். இப்போது மீண்டும் இலச்சினையைக் காட்டிக் குதிரையைப் பெற்றுச் செல்வோம்'' என்றான் மாறன்.

ஆனால், இலச்சினை மோதிரத்தைக் காட்டவும் அவசியம் ஏற்படவில்லை. ஊர்த் தலைவனின் வீட்டுக்கு சென்றனர். கதவு உள்ளிருந்து பூட்டப்பட்டிருந்தது. காவலுக்கு யாருமில்லாமல், லாயத்தில் இரண்டு குதிரைகள் இருந்தன. காலையில் அவன் பயணித்த குதிரையின் அருகில் சென்று அதன் முகத்தைத் தடவிக் கொடுத்தான் மாறன். அதனால் மகிழ்ச்சி அடைந்ததைப்போல் குதிரை உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு சற்று இலேசாகக் கனைத்தது.

"உனக்குக் குதிரை சவாரி செய்யத்தெரியுமா?" என்று அலட் சியமாய்க் கேட்டபோதிலும் மனதுக்குள் மாறனுக்கு இருவகை எண்ணங்கள் தோன்றின. குதிரையோட்ட அவளுக்குத் தெரிந்தால் தஞ்சைக்கு விரைவாகச் செல்லலாம். தெரியவில்லையென்றால் ஒரே குதிரையில் இருவரும் செல்லலாம். அது என்றும் கிட்டாத ஆனந்த அனுபவமாக இருக்கும்.

"இல்லையே" என்று அவள் சொன்னவுடன் துள்ளியது மனம் "அப்பாடா" என்று அவசரத்தில் உளறியது அவன் வாய்.

"அதிலென்ன உமக்கு அவ்வளவுத் திருப்தி?" என்றாள் மங்கை.

மாறன் மழுப்பினான். "தெரியவில்லையென்றால் வைண வனுக்கு என்று ஒரு குதிரையை விட்டுச் செல்லலாம்" என்று சொன்னான் மாறன்.

"பழுவூர்க் குலத்தில் இதுகூட சொல்லித் தரவில்லையா? என்னுடன் ஒரே குதிரையில் வருவதில் மனசுக்கு உமக்கு நெருடல் இல்லை என்றால் சரி" என்று சொல்லிவிட்டு குதிரையைக் கட்டவிழ்த்தான். அவன் சொல்லும் வரை அதைப் பற்றி அவள் நினைக்கக்கூட இல்லை.

"ஒரு குதிரையை விட்டு செல்வது தான் நியாயம். ஒரு வேளை விதாசனுக்கு முன்னால் வைணவன் வந்தால் நம்மை சபிப்பான்" என்றாள் லோகா.

"ஆமாம். அவன் கும்பிடும் விஷ்ணு, பக்தர்களைத் தவிக்க விட்டுப் பட்டப் பகலில் தூங்கிக் கொண்டிருப்பவர் அல்ல என்று நிரூபிக்கட்டும். வைணவன் பத்திரமாக வந்து இந்த புரவியை உபயோகிக்கட்டும்" என்றான் மாறன்.

அந்த இரவின் ஆழ்ந்த அமைதியைக் கலைத்துக் கொண்டு குதிரைக் குளம்படியின் சத்தம் கேட்டது. ஊரைத் தாண்டியதும் இரவைக் கிழித்துக்கொண்டு குதிரை காற்றிலும் கடிய வேகத் துடன் பறக்கத் தொடங்கியது. அதன் கால்குளம்புகள் புழுதியின்



மேல் பட்டனவா என்றே பார்ப்பவருக்குத் தெரியாது. காலையி லிருந்து கட்டிப் போட்டிருந்ததில் அதற்கு கோபம்போல.

சற்று நேரத்துக்கெல்லாம் இருவரும் ராஜபாட்டையை அடைந் தார்கள். குதிரையும் அநாயாசமாகச் பறந்துச் சென்றது. வட மேற்குத் திசையில் இருந்த தஞ்சையை நோக்கி அதிவேகமாய் சென்றது. நாலு கால் பாய்ச்சலில்.

கம்பீரமான குதிரையது. அதன் மேல் ஆஜானுபாகுவான வீரன் ஒருவனும், அவன் முன் அழகான சுந்தரி ஒருத்தியும் இருப்பதால் அதற்கு ஒரு கஷ்டமும் தெரியவில்லை போலும்.

சொர்க்கமும் நரகமும் ஒன்று சேர்ந்து அனுபவித்தவர் இவ்வுலகில் இதுவரை இல்லை. ஆனால், தற்போது மாறன் அந்த நிலையில் தானிருந்தான். குதிரையின் பாய்ச்சலில் லோகாவின் மல்லிகையைப் போன்ற மெல்லியத் தேகம் அவனுடன் அடிக்கடி மோதியது. ஆகா! சொர்க்கத்தின் மென்மை. அதே சமயத்தில் குதிரையின் அசைவுகளால் கையிலிருந்த வலியும் பிராணனை வாங்கியது. அது நரகத்தின் கொடுமை.

நிலா இல்லாத முன்னிரவில் கிளம்பினார்கள். இப்போது நிலவு வெளியே வந்திருந்தது. குதிரையுடன் நிலவும், இருண்ட வானத்தில் வெள்ளிப் பந்து போல உருண்டுவந்தது.

அவ்வப்போது திரும்பித் திரும்பி லோகா மாறனின் முகத்தை உற்றுக் கவனித்தாள். வாலிபப் பிராயத்தவன். பலநூறு ஆண்டு காலம் ஆட்சிபுரிந்த அரசகுலத்தின் ராஜகளை அவன் முகத்தில் பிரகாசித்தது. பார்க்க இலட்சணமாக இருக்கிறான். வாட்டச் சாட்டமாகவும் இருக்கிறான். முகத்தில் கம்பீரம் இருக்கிறது. மனம் மட்டும் இவ்வளவு மென்மையாய் இருப்பது எப்படி?

அவளுக்கு அவனிடம் இப்போது அளவு கடந்த நன்றி தோன்றி யது. தனக்காக ஒருவன் கஷ்டத்தையெல்லாம் பொருட்படுத்தாமல் ஊருக்கு வந்தானே என்ற எண்ணமே நன்றியுணர்வுக்குக் காரணம். ஆனால், நன்றிக்கு மேலும் ஒரு உணர்வு. இப்போது மாறன்மேல் அவளுக்கிருந்த சிநேக உணர்ச்சி பன்மடங்கு பெருக ஆழ்ந்த அன்பாய் மாறியிருந்தது. எவ்வளவு கீழ்த்தரமான மனிதர்களுக்கு இடையில் தனக்காக உயிரைப் பணயம் வைத்த இவன் ஒரு மாணிக்கம் என்று நினைத்துக்கொண்டாள். அவளுடைய இருதய அந்தரங்கத்தில் குடிகொண்டிருக்கும் அந்த அன்பை சீக்கிரம் அவனிடம் எப்படி வெளிப்படுத்துவது என்று தனியாய்த் தவித்தாள்.

எங்கும் நில்லாமல் சென்றார்கள். சற்று நேரம் இளைப்பாறிச் செல்லலாம் என்றால் கூட முடியாது. ரவிதாசனின் கண்ணில் மீண்டும் படக்கூடாது. சந்திக்க நேர்ந்து விட்டால் ஆபத்தாய்ப் போய்விடும் என்ற எண்ணத்தில் விரைந்தனர். தஞ்சையை நெருங்க நெருங்க நல்ல சுறுசுறுப்பைப் பெற்றிருந்தது குதிரையின் ஓட்டம்.

"ஒரு நாழிகை நேரத்தில் எங்கள் மாளிகை வாசலை அடைந்து விடலாம் போலிருக்கிறது. அங்கு உமக்கு நல்ல சிகிச்சை தந்து விருந்தும் வைக்கலாம்" என்றாள் லோகா.

"அது சாத்தியமில்லை என நினைக்கிறேன்" என்றான் மாறன்.

லோகாவுக்கு அதிர்ச்சி. "எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே?" என்றாள்.

"கோட்டைக்குள் பிரவேசிப்பது அவ்வளவு சுலபம் அல்ல. போய்ப் பார்ப்போம்" என்றான்.

சற்று நேரத்துக்கெல்லாம் தூரத்தில் வானுயரத்துக்கு தஞ்சைக் கோட்டை மதில்கள் தென்பட்டன. மனித நடமாட்டமே இல்லாத சந்துகள் வழியாகப் புகுந்துசென்று நகருக்குள் பிரவேசித்தார்கள். கோட்டைக்கு அருகே சென்றனர். மாறன் பயந்தது போல அகழியின் மேல் பாலம் தூக்கப்பட்டிருந்தது. கதவோ பூட்டிக் கிடந்தது!

கோட்டை வாசல் கண்ணுக்குத் தெரிந்தது. ஆனால், அதனால் ஒரு பயனும் இல்லை. பொழுது விடிவதற்குள் வேற்று மனிதர்கள் உள்ளே செல்ல இயலாமல் கதவு சாத்தப்பெற்று பூட்டி விட்டனர். கோட்டை மதிலுக்கு அப்பால் மிருதுவான மெத்தை இருந்தது. சூடான உணவிருந்தது. பாதுகாவலுடன் வீடிருந்தது. அதற்குள் சென்றுவிட்டால் வேட்டைக்குப் பயந்த வேங்கைமான் போல இனி ஓடிக்கொண்டே இருக்கவேண்டாம்.

"தஞ்சாவூர்க் கோட்டை மதில் ஓரத்தில் இப்படி நள்ளிரவில் வந்திருக்கிறோமே. கதவைத் திறந்து வைக்காமல் பிரதமரே நம்மைக் கைவிட்டு விட்டாரே" என்ற எண்ணம் அவனுக்கு வந்தது. "வேறு வழி கண்டாகவேண்டும். இல்லையென்றால் பொழுது விடிவதை நாம் பார்ப்பதே 'கடினம்" என்று எண்ணினான்.

❖ ❖ ❖



### அத்தியாயம் தொண்ணூற்று ஐந்து

## அய்யனார் அழைத்தார்!

"இவ்வளவுதானா? இல்லை இன்றிரவு இன்னமும் உண்டா?" என்று நினைக்கும் அளவுக்கு சுவாரசியமான இரவு. அது கதையைக் கேட்பவருக்கு. அனுபவிப்பவருக்கோ நரகத்தைப் பெயர்த்தெடுத்துவந்து பூமியில் நட்டு வைத்துவிட்டார்களோ என்றே சந்தேகம் தோன்றும்.

தஞ்சையின் கோட்டைச் சுவர்களுக்கு மேலே கம்பீரமாகத் தலைதூக்கி நின்ற மாளிகையின் தங்கக் கலசம் நிலவொளியில் தகதகவென்று ஒளிமயமாய் விளங்கிற்று. ஆனால், மாலைவரை தடபுடல்பட்டுக்கொண்டிருந்த கோட்டை வாசலிலும் சரி, மதில் சுவரைச் சுற்றியும் சரி, இப்போது வெறுமையாய் இருந்தன. முக்கியமாக, வாசல் பக்கம் அமர்க்களமில்லாமல் அமைதி குடிகொண்டு விளங்கிற்று. இருள் அதைச்சுற்றிப் பரவியிருந்தது.

காட்டிலிருந்து திரும்பி வரும் அவர்களை வரவேற்பதற்குக், கோட்டை வாசல் கொடிகளாலும் தோரணங்களாலும் தொங்கல் மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டு விளங்கினால்தான் அதிசயம் என்று மாறனுக்கு நன்கு தெரியும். தஞ்சைக் கோட்டையை இரவில் மூடும் விஷயத்தை அவன் முன்பே அறிவான். ஆனால், இன்று ஒரு நாள்மட்டும் விதி விலக்காய், நாம் வருவோம் என்று திறந்து வைத்திருக்கலாம் என்று ஏதோ ஒரு நப்பாசை

ஆனால், முதலில் பயந்தபடி தஞ்சைக் கோட்டையின் கதவுகள் உட்புறத்தில் கனமான எஃகுச் சட்டங்களினால் தாழிடப்பட்டு, அவை பெரிய பூட்டுகளினால் பூட்டப்பட்டிருந்தன. அகழிக்கு அப்பால் கோட்டை வாசலின் வெளிப்புறத்தில் காவலர்கள் இருவர் மட்டுமே கையில் வேலுடனும், இடையில் வாளுடனும் நின்று காவல் புரிந்தார்கள். அவர்களைச் சென்று அடைவ தென்றாலே அகழியைக் கடக்கவேண்டும்

ஆகா, காட்டில் அனுபவித்தைக்காட்டிலும் பெரியதான தடை வந்து குறுக்கிட்டிருக்கிறது என்று மாறன் யூகித்தான். ஆனால், அதை எதிரிகள் செய்யவில்லை. நண்பர்களே செய்திருந்தனர்.

இரண்டு நாட்களாய் ஒரே இலக்காய் இருந்து தஞ்சையை எட்டியாயிற்று. ஆனால், இனி கணக்கில் வராத பலவற்றைப் பற்றியும் கவலை கொள்ள வேண்டும். முக்கியமாக "பொழுது விடிய இன்னும் ஓரிரு முகூர்த்தந்தான் இருக்கிறது. காலை சூரியனைப்

பார்க்க ஏதுவாக உயிரைப் பிடித்து வைத்துக்கொள்ள முயற்சிக்க வேண்டும்.''

மாறனுக்கு ஆதங்கம் அதுமட்டுமல்ல. 'நமக்கு எதுவுமே உலக வழக்கின்படி நடவாதா?' என்ற விரக்தி மனதை அரித்தது. ''அவன வன் காதலியை ஏகாந்தமாக அல்லி மலர்நிறைந்த தடாகத்தின் கரையில் சந்திக்கிறான். நான் மட்டும் இப்படிப் பூட்டியக் கோட்டையின் கதவுகளுக்கு வெளியே அகப்பட்டு, துரத்தும் பகைவர்களை எதிர்கொள்ளும் நெருக்கடியில் அவளுடன் இருக் கிறேனே'' என்ற கோபம்.

லோகாவுக்கோ பல நாட்கள் தன் மாளிகையின் பலகணியின் வழியாக தற்போது நின்றிருந்த இடங்களைக் கண்டு ரசித்த ஞாபகம் வந்தது. இப்போது அதற்கு நேர்மாறாக தஞ்சை மாநகரத் துக் கோட்டை மதில்களுக்கு அப்பால் கோயில் கோபுரங்களும், அரண்மனை விமானங்களும், கலா மண்டபங்களும் தெரிந்தன. ''இந்தக் குளிரை அடித்து விரட்டும் மெத்தையும் போர்வையும் கொண்ட படுக்கையறை கோட்டைக்கு உள்ளே இருக்கிறது. நம்மால் உள்ளே செல்ல முடியவில்லையே'' என்ற வருத்தம் அவளுக்கு.

''காட்டு வழியில் பல காத தூரம் ஒரு தொல்லையும் இல்லாமல் வந்தாயிற்று. நாடு நெருங்கும்போது கோட்டையை இரவுக்கு இரவு பூட்டுகிறார்கள் என்பது எனக்கு இதுவரைத் தெரியாமல் போயிற்றே'' என்றாள். ''சரி ஏதேனும் ஏற்பாடு செய்யுங்கள். உள்ளே செல்லவேண்டும்'' என்றாள். அவள் பேசும்போது அவ்வப் போது திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே பேசினாள். அபாயம் பின் தொடர்கின்றதா என்ற அச்சம் அவளுக்கு.

அவனோ தலையை அசைத்தான். ''உன் வீட்டை அடைவது அவ்வளவு எளிது என்று கருதுகிறாயா? இரவில் தஞ்சாவூர்க் கோட்டைக்குள்ளேயே யாரும் பிரவேசிக்க முடியாது.''

''ஏன் முடியாது? கோட்டைக் கதவு திறந்திராவிட்டால், கதவைத் திறக்கச் சொல்லிக் கேட்போம்'' என்றாள்.

''முடியாது. போய் நாம் யாரென்று சொன்னாலும் அவர்களால் கதவை இரவில் திறப்பதற்கு ஏகப்பட்ட சிக்கல்கள்'' என்றான். ''அந்திப் பொழுதில் மூடப்படும் அவ்வாசலின் பெருங்கதவுகள் அரசர் அல்லது பிரதமர் உத்தரவின்றி திறக்கப்படுவதில்லை.''

''அதற்கென்ன? சக்கரவர்த்தியின் ஆக்ஞை வந்தவுடனே கதவைத் திறக்கட்டுமே? நீர் வலைவீசித் தேடும் பழுவூர்ப் பெண்



வெளியில் நிற்கிறாள் என்று சொல்லியனுப்புவோம். அரசர் எழுந்து உத்தரவிடுவார்'' என்றாள்.

மாறனுக்கும் தஞ்சை நெருங்கி விட்டது என்ற குதூகலம்தான். ஆனால், அதே சமயத்தில் தஞ்சைச் சுவர்களைக் கண்டவுடன் இன்னதென்று தெரியாத ஒருவகை பயமும் குடிகொண்டிருந்தது. ''எக்காரணம் கொண்டும் கோட்டையை நெருங்க வேண்டாம்!'' என்று எச்சரித்தது அவன் மனம்.

''இல்லை இல்லை. இந்த இருளில் எங்கு எதிரி மறைந்திருக் கிறான் என்று தெரியாது. நிச்சயம் நாம் இங்குதான் வருவோம் என்று அவனுக்குத் தெரியும். அரசருக்குத் திருப்பள்ளியெழுச்சிப் பாடும் முன் நமக்கு மங்களம் பாடி நேரே மேல் லோகத்துக்கு அல்லவா அனுப்பிவிடுவார்கள். உள்ளே செல்லும் போது பாண்டி யர்கள் நம் இதயத்துக்குள் அம்புகளைப் பாய்ச்சி விடுவார்கள். அதுவரை கூட காத்திருக்க மாட்டார்கள். கோட்டையின் விசால மான வாசலருகே சென்று நாம் யாரென்று புரிய வைக்கும் தருவாயில் அம்புகள் வந்து முதுகில் பாய்வதென்னவோ உறுதி. இவ்வளவு தூரம் வந்தபின் இந்த அபாயத்தை ஏன் எதிர் கொள்ளவேண்டும்?'' என்றான்.

''சீ. எவ்வளவு பைத்தியகாரத்தனமான உத்தரவு. சோழ நாட்டில் யார் இப்படி கிறுக்குத்தனமான சட்டங்களெல்லாம் எழுதுவது?'' என்றாள் லோகா.

அவள் முகத்தை அண்ணாந்து பார்த்தவன், ஏதோ சொல்ல எண்ணாதவன் போல வாயை இறுக மூடிக்கொண்டான். பின் சொல்லாவிட்டால் துளைத்து எடுத்துவிடுவாள் என்று அறிந்து ''சொன்னால் கோபப்படமாட்டாயே?''என்றான்.

''ஹூஹூம்'' என்றாள். அந்த சட்டம் எழுதியவரைச் சென்று நேரே நாலு வார்த்தைகளாவது கேட்கவேண்டும் என்ற ஆதங்கம் அவளுக்கு.

''உன் அப்பாதான் கோட்டையின் காவலராய் இருக்கும்போது இந்தச் சட்டத்தை எழுதினார்''என்றான் மாறன்.

மாறன் இதைச் சொன்னால் அவள் கண்களில் தீப்பொறி பறந்து, நிலைமை விரஸமாய்ப் போய்விடக்கூடும் என்று நினைத் தான். அதனால் தயங்கித் தயங்கிச் சொன்னான்.

ஆனால், அவன் அதை இவ்வாறு கூறியதும், கொல்லென்று சிரித்துவிட்டாள் லோகா. ''பழுவேட்டரையர் ஆக்ஞையிட்ட சமயம் நினைத்தாவது பார்த்திருப்பாரா, தன் மகள் இரவில் கோட் டைக்கு வெளியே அகப்படுவாளென்று?'' என்றாள்.

''ஆதித்தனின் கொலைக்குப்பின் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளவேண்டும் என்று இரவில் கோட்டை கதவுகளைப் பூட்டுகிறார்கள். தஞ்சையிலேயே வசிக்கிறாய். இதுவரை இந்த வழக்கம் உனக்குத் தெரியாதா? நாடு நகரமெல்லாம் அறிந்த விஷய மாயிற்றே?'' என்றான் அவன்.

''சம்புவராயரே. எனக்கு இதுமட்டுமல்ல. உலகமே இப்போது தான் தெரிய வந்திருக்கிறது'' என்றாள். அந்த வார்த்தைகளில் பல அர்த்தங்களும் இருந்தன போலத் தோன்றியது மாறனுக்கு.

கால்வலியைப் போக்க இருவருமாக நடந்து சென்று ஒரு மரத் தடியில் அமர்ந்தனர். குதிரையையும் அம்மரத்தில் கட்டிவிட்டனர். மரத்தடியில் இருவரும் அமர்ந்த பின் சுற்றுச் சூழலைக் கவனித் தனர். அபாயம் ஒன்றும் தற்போது தெரியவில்லை. வானமும், பூமியும் அந்தக் நள்ளிரவு நேரத்தில் மதிமயங்கி அசைவற்று நின்றன. தூரத்தில் தெரிந்த காட்டு மரங்களின் கிளைகள்கூட அசையாமல் நின்றன.

மரத்தடியில் அமர்ந்தபடி உள்ளே தங்களை அழைத்து அரவணைக்கத் தவறியத் தஞ்சையை நோட்டம் விட்டனர். ஒரு பெரிய நகரத்தின் தகர்க்கமுடியாத கோட்டை வாசலைப் போல தான் இருந்தது அதன் வெளிப்புறம். வாசலுக்கு இருபுறத்திலும் எழுந்த நெடுஞ்சுவர்கள் கோட்டைச் சுவர்களாய் மாறி வளைந்து சென்றன என்று மங்கிய நிலா வெளிச்சத்தில் தெரிந்தது. தினம் தினம் பார்த்ததால் இதுவரை அதன் வலிமை தெரியவில்லை. இயற்கையின் பாதுகாப்புகள் இல்லாத இடம் தஞ்சை. காவிரி ஆறும் அதன் கிளையாறுகளும் மட்டுமே ஒரு காவல். அதனால் கட்டும் போதே மதில்களை உயரமாய்க் கட்டினர் முத்தரை யர்கள். எனினும் கட்டி முடித்தவுடன் சோழர்களிடம் அதை இழந்தனர்.

மாலையிலேயே கோட்டைக் கொத்தளங்களில் தீவர்த்திகள் மூட்டியாகி விட்டது. தீ ஜுவாலைவிட்டுக் காற்றில் ஆடி அசைந்து எரிந்தது. இனி இரவெல்லாம் கோட்டை வாசலையொட்டி அந்த வெளிச்சம் இருக்கும். அகழியைக் கடந்துவிட்டாலும், சுவர் ஓரமாகச் சென்று பதுங்க முடியாது.

சுவருக்கு மேல்புறம் தீப்பந்தங்களும் தீவர்த்திகளும் ஏற்றப் பட்டு காவலர்கள் இருளில் காவல் புரிந்தனர். தஞ்சை நகரின் சுவருக்கு மேல் அவர்கள் குறுக்கும் நெடுக்குமாய் நடக்கவே கீழே அகழியில் அவர்களின் பிம்பமும் நடை பழகியது. அதைப் பார்த்த



மாறனுக்கு வருத்தம். இவ்வளவு அருகில் வந்துவிட்டு உள்ளே செல்ல முடியவில்லையே என்று.

இருவருமாக அமைதியாய் அமர்ந்திருந்தனர். அவ்வப்போது கண்களை நன்றாய் சுழலவிட்டுத் தேடினான் மாறன். ஒரு ஆபத்தும் தெரியவில்லை. லோகாவுக்கு அவனது மௌனம் பிடிக்க வில்லை போலும். ஏதாவது வாயைக் கிளறிக்கொண்டிருந்தாள். ''கோட்டைக்குள் பிரவேசிக்க வேண்டுமென்பவன் எப்படியும் கதவுகளின் வழியாகத்தான் உள்ளே செல்லவேண்டுமல்லவா? செங்குத்தான கோட்டை மதில் சுவர்வழியாக ஏறமுடியாது. கதவு களைப் பூட்டிவிடுவார்கள் என்று உமக்கு ஏற்கனவே தெரியும். பின் ஏன் தஞ்சைக்கு வந்தீர்?'' என்று வினவினாள்.

மாறன் ''இளவரசி நேரே குதிரையைக் கடம்பூருக்கு விட்டிருக்கவேண்டும் என்று எனக்கும் ஆசை தான். ஆனால், பிரதமர் கணக்கிட்டிருப்பார் நாம் இன்று வருவோமென்று என்று நினைத்தேன். ஆனால், இதற்கு முன் நாங்கள் பெற்ற தோல்வி களை நினைத்துக்கொண்டு, இப்படி அதிவேகத்தில் வெற்றியுடன் வருவோம் என்று முடிவு கட்டியிருக்கமாட்டார் போலும்'' என்றான்.

''இப்படி அபகீர்த்தி பெறும் அளவுக்கு அப்படி என்ன தோல்வி அடைந்தீர்? என் அக்காவை எனக்காக மன்னித்து உயிர்பிச்சைக் கொடுத்தீரே.அது தானே?'' என்றாள் லோகா.

அந்த கோடிக்கரைச் சம்பவத்திலிருந்துப் பேச்சை மாற்ற முற்பட் டான் மாறன். அது அவன் இவளுக்காகச் செய்த தியாகமே அல்ல. ஆள் பலமில்லாததால் பாண்டியருடன் போராடாமல் வைணவன் பேச்சைக் கேட்டு மரத்தின் மேலேறி வேடிக்கை பார்த்துவிட்டு வந்துவிட்டான். ஆனால், அதையே இவன் வேண்டுமெனச் செய்தான் என்று நினைத்துப் பாசம் காட்டுகிறாள் இந்த பாவை. இப்போது அந்த எண்ணம் தனக்குச் சாதகமாக இருக்கிறது. அதை ஏன் மாற்றவேண்டும்?

''அதுவல்ல. இலங்கைக்குத் தோல்வி அடைவதற்கென்றே சென்றோம். அது'' என்றான்.

''அதை பற்றிச் சொல்லுங்களேன். பொழுது விடிய நேரமாகும்'' என்றாள்.

சொன்னான் மாறன். அப்படி நீரும், இருளும் சூழ்ந்த பகுதியில் ஒளித்துவைக்கப்பட்டிருந்தப் புதையலைப் பற்றிச் சொன்னான். தாதிக்கும் ஆதவனென்றும் அரக்கனின் இடமென்றும், வேங்கை

யின் காலடியென்றும் தெளிவாய்ச் சொல்லித் தீவிரமாய் குழப்பிய கவிதையைப் பற்றிச் சொன்னான்.

''ஆனால், ஒன்று. அந்தக் கவிதையை எம்மிடம் சொன்னவன் ஒரு பெண்ணால்தான் அதைக் கண்டு பிடிக்க முடியுமென்றும் சொன்னான். உன்னை இலங்கைக்கு அழைத்துச் சென்றிருக்க வேண்டும்'' என்றான்.

சிரித்தாள் லோகா. ''அவ்வளவு மதிநுட்பம் என்னிடமிருந்தால் நான் ஏன் பாண்டியரிடம் சென்று அகப்பட்டுக்கொள்கிறேன்?'' என்று வினவினாள்.

''ஆனால், இந்த முறை பிரதமர் எனக்கு இட்ட வேலையைச் சீராகச் செய்து முடித்து விட்டேன். உன்னைக் கொண்டு சென்று கோட்டைக்குள் சேர்த்துவிட்டால் எனக்கு பெரும் வெற்றிதான். அதற்குப் பிரதமர் எனக்குப் பரிசளிக்காவிட்டாலும், உன் தந்தை மகளை மீட்டு வந்ததற்குத் தக்க பரிசளிக்கவேண்டும்'' என்றான்.

மனதுக்குள் 'இவளைக் கொண்டு போய் பழுவூர் அரசர் வீட்டில் விட்டு விட்டு, இவளையே பரிசாய்க் கேட்கவேண்டும்' என்று நினைத்தான் மாறன்.

பின் ''உன்னைக் கொண்டு போய் வீட்டில் சேர்த்தால் என்ன கொடுப்பார் உன் தந்தை?'' என்றான்.

என்ன கொடுப்பார் என்று கேட்டவனுக்கு, 'என்னைக் கொடுப்பார்' என்று சொல்ல நா துடித்தது லோகாவுக்கு. ஆனால், ''அவருக்கு உம் மேல் அவ்வளவாக உயர்ந்த அபிப்பிராயம் கிடையாது. இனிமேல் அது வந்தால் ஏதாவது பரிசைக் கொடுப்பார்'' என்று மிகவும் ஜாக்கிரதையாகப் பதிலளித்தாள்.

அவளுக்கே விளங்கவில்லை. இவனுடன் இருக்கும் போது பலமுறை தன் உதடுகளைக் கடித்துக் கொண்டு, அடுத்து வரும் வார்த்தையைத் தடுத்து நிறுத்த வேண்டியிருந்தது. தன்னை மீறித் தன் மனமும் உடலும் ஏன் இன்று செயல்படுகின்றன என்று அவளுக்குப் புரியவில்லை. அதுவும் இந்த இருளில் வேறு. விபரீத அர்த்தம் கொள்ளவைக்கும் பட்டப்பகலில் பகிரங்கமாகக் கூறக்கூடிய வார்த்தைகள்.

''வாயைக் கிளறும் அவனுடைய தாபத் தீயில் எண்ணெய் ஊற்றுவது போலிருக்கும் ஒரு செயலையும் செய்துவிடக்கூடாது'' என்று உறுதியாய் இருந்தாள் லோகா.

லோகா ''இன்றைக்கே தஞ்சைக்குள் பிரவேசிக்கலாம் என்ற எண்ணம் எனக்கு இருந்தது. அது இப்போது சாத்தியமில்லை



என்கிறீர். இரவு முழுவதும் எங்கே கழிப்பது?'' என்று பேச்சை மாற்றி வினவினாள்.

''எங்கே என்பதை விட எப்படி மறைவாகக் கழிப்பது என்பது தான் முக்கியம்?''

''ஏன்?''

இவ்விடத்திலிருந்து எந்த நிமிஷமும் கிளம்புவதற்கு நாம் சித்தமாக இருக்கவேண்டும். நாம் இங்குதான் நேரே வருவோம் என்று பாண்டியருக்குத் தெரியும். இனி மலரைச் சுற்றி வண்டுகள் போல நம்மைச் சுற்றி மொய்த்துவிடுவார்கள்'' என்றான்.

சொன்னவன் அப்படியே சற்றுத் தூரத்தில் இருளுக்குள் கவனித்து உற்றுப்பார்த்தான். பின்அவளுடைய கரத்தைப் பற்றித் ஏதோ அபாயம் என்று தெரிவிப்பதற்கு அறிகுறியாக அழுத்திப் பிடித்தான்.

அவன் கண்கள் காட்டிய திக்கை லோகாவும் பார்த்தாள். அங்கிருந்து தீவர்த்திகளுடன் சிலர் மெல்ல வருவது தெரிந்தது. தீவர்த்திகள், வழியில் ஓரிடத்தில் சிறிது நேரம் நின்றன. ''அங்கே நின்று என்ன பார்க்கிறார்கள்?'' என்று அவள் கேட்கவேண்டியதே இல்லை; தங்களைத்தான் என்று தெரியும். ரவிதாசன் தஞ்சைக்கு வந்து சேர்ந்துவிட்டான். நிச்சயமாக மாயாவிதானவன். வெள்ளத்தைக் கடந்து, தொலைதூரம் வந்து அதற்குள்ளாக ஆட்களைத் தேடிச் சேர்த்து, தேடுதல் வேட்டையை மீண்டும் தொடர்ந்து விட்டான். எப்படி அவனால் இவ்வளவும் முடிகிறது?

விடிவதற்கு ஒரு ஜாம நேரந்தான் பாக்கியிருந்தது என்றாலும் அந்த ஒரு ஜாமமும் ஒரு சதுர்யுகமாகத் தோன்றியது. பொழுது புலரும் சமயத்தில் கோட்டையின் கதவுக்கு அருகே இருக்க வேண்டும் என்ற திட்டத்தை உடனே மாற்றிக் கொண்டான் மாறன். இனி அது ஆபத்து. இப்போது என்ன செய்வது? ஏதோ யோசித்துக் கொண்டிருந்த மாறன், சட்டென்று யோசனையை நிறுத்தி ''ஒரு இடம் எனக்குத் தெரியும். கோட்டையின் தென் மேற்குப் பகுதியில் இருக்கும் அய்யனார் கோயிலே ஒளிவதற்குச் சிறந்த இடம்'' என்றான்.

இறைவனுடைய கருணை வெள்ளத்தை அளவிடமுடியாது. அணை போட்டுத் தடுக்கவும் முடியாது. நம்மால் அவரது திட்டத்தையும் முழுவதுமாகப் புரிந்துக் கொள்ள முடியாது. ''அய்யனார் நம்மை அழைக்கிறார். அய்யனார் வாள் வெகு நாட்களாய் பலி கேட்டுக்கொண்டிருந்தது'' என்றான் மாறன்.

''அதனால் அங்கே அவர் சன்னதியில் ரவிதாசனைப் பலிக் கொடுப்போம்'' என்று சபதமிட்டான்.

நடக்கும் விஷயங்களைக் கண்டு கலங்கிப் போயிருந்த லோகாவின் முகத்தைப் பார்த்து அவள் மனச்சுமையைக் குறைக்க ''வேடிக்கையாய்ச் சொன்னேன். ஆனால், எனக்கு ஒன்று தான் பயம். அம்மதிரி இடங்களில் இளம் பெண்களின் இரத்தத்தை உறிஞ்சும் ரத்தக் காட்டேரிகளும் உள்ளன என்று கேள்விப் பட்டிருக்கிறேன்'' என்றான்.

லோகா இதற்குத் தக்க மறுமொழி ஏதேனும் சொல்ல வேண்டும் என்று எண்ணித் தனது தொண்டையைக் கனைத்துக் கொண்டாள் ''பெண்ணைக் கடத்தும் பாண்டியரையும், ஆசை வார்த்தைக் காட்டி மயக்கும் சம்புவராயரையும் விட இந்தக் காட்டேரிகள் எவ்வளவோ மேல்'' என்றாள்.

''அழகாகப் பேசக் கற்றுக்கொண்டுவிட்டீர்'' என்று வியந்தான் மாறன்.

''எல்லாம் சகவாச தோஷந்தான்!'' என்றாள் புன்னகையுடன்.

நினைவைத் தடுமாறச் செய்யும் மாய சக்தி இந்தப் பெண்ணின் வார்த்தைகளிலும் புன்னகையிலும் இருகின்றதே? அவள் பேசப் பேச அவள் எதிரில் இருந்து இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் போலிருந்தது மாறனுக்கு.

''சரி இப்போது எழுந்து வாரும்! போகவேண்டும்'' என்று சொல்லி அவளுக்குக் கையைக் கொடுத்து எழச்செய்தான். விரைவில் செயல்படவேண்டும் என்ற அவனது அவசரத்துக்கு எதிரியின் வரவு மட்டுமே காரணமல்ல. இங்கே இவள் மோகனத்தைக் கண்டு செயலற்று லயித்திருந்தால் என்னாவது? ''பெண்ணின் அழகைக் கண்டு மோகித்திருந்தால் பாண்டியரிடம் தண்டனை பெறுவது நிச்சயம்'' என்று பயந்தான்.

''எனக்கு இணை ஈரேழு பதினாலு உலகத்திலும் கிடையாது!'' என்று சிருங்காரம் செய்து கொள்ளும் பெண்களுக்கு இடையில் இப்படி கஷ்டக் காலத்திலும் மிகச் சாதாரணமாய் காட்சி கொடுத்த இவளின் மோகனம் அதிசயமாய் இருந்தது. காட்டிலிருந்து வெளியேறும் போது கிழிந்த உடைகளுடன், உறக்கம் இன்றிச் சுருங்கிய முகத்துடன் இருக்கும்போதே இவ்வளவு வனப்புடன் தோன்றும் இந்த யுவதி தான் இளமைக்கே ஒரு எடுத்துக்காட்டு என்று நினைத்தான்.

பெண் பிரேமையென்பது வாலிபத்தில் ஏற்படும் பிரமை என்று காதலைப் பற்றி மூடமதியினர் சொல்வார்கள். வேறெந்தக் கவலையும் இல்லாதபோது எழும் ஆர்வம்தான் காதல் என்று மடையர்கள் கூறுவார்கள். ஆனால், காதலென்பது அரசர்களுக்கும் ஆண்டிகளுக்கும் உண்டு, ஏன் முற்றும் துறந்த முனிவர்களுக்கும் பெண்ணின் மீது பிரேமை ஏற்படுகிறது.



இப்படி மறு நாள் காலையில் உயிரைத் தக்க வைத்திருப்போமா என்று தெரியாத நெருக்கடியான நிலையிலும் கூடத்தான் காதல் வருகிறது!

❖ ❖ ❖

## அத்தியாயம் தொண்ணூற்று ஆறு
## பூமிக்கு என்ன பசி?

**மா**றனுக்குக் காலைவரை உயிர்பிழைத்து கோட்டைக்குள் பிரவேசம் செய்துவிடலாம் என்ற நம்பிக்கை இன்னமும் இருந்தது. 'இல்லாவிடில் இவ்வளவு தூரம் வந்திருப்போமா? அதுவும் பெரும் இடையூறுகளையெல்லாம் கடந்து'' என்ற எண்ணம்.

நம்பிக்கை இருந்தாலும் ஆதவன் வரும்முன் கோட்டைக்குள் செல்ல ஒரு வழி நிச்சயம் கிடைக்கும் என்று சொல்ல முடியாது. அது மட்டுமல்ல. விடிவதற்கு முன்னால் பாண்டியரால் இன்னும் பல இடையூறுகள் நேரும் என்றுதான் அவன் கவலை கொண்டான். அவனுடைய தோளில் அடிபட்ட இடத்தில் இன்னமும் இலேசான வலி உணர்ச்சி இருந்து கொண்டேயிருந்தது. வழியில் அவன் வலியினால் அல்லது அதிக ரத்த வெளியேற்றத்தினால் மூர்ச்சையடைந்து விழலாம் என்னும் வாய்ப்புமிருந்தது.

'பல போர் முனைகளில் நீ சண்டை செய்தவன். இந்த வலியைத் தாங்கும் வலிமையை நீ உண்டு பண்ணிக் கொள்ளவேண்டும்' என்று தனக்குத்தானே சதா நினைவுபடுத்திக் கொண்டான் மாறன்.

அவர்களைத் தேடிவரும் மந்திரவாதி ரவிதாசனின் கண்ணில் படாமல் தஞ்சைக்குள் போவது மிகவும் பிரயாசையாக இருக்கும். ரவிதாசன் அடுத்து என்ன செய்வான் என்று குடந்தை ஜோசியரால் கூட சொல்லமுடியாது. ஆனால், நிச்சயம் பின்னால் வருவான். அதுவும் அதிக ஆள்பலத்துடன்தான் வருவான். நிச்சயம் எங்கு ஒளிந்தாலும் பின் தொடர்ந்து வருவான். ரவிதாசனுக்கு இப்போது அடக்க முடியாத ரௌத்ராகாரமான கோபம் இருக்கும். அவர்கள் அவன் கையில் அகப்பட்டால் என்ன சேதம் நேருமோ? போதும்

போதாததற்கு இந்தச் சமயம் மாறன் கையில் வேறு அடிபட்டிருந்தது. ஆயுதமும் இல்லை.

தாங்கள் எங்கே செல்வோம் என்பதை ரவிதாசன் கணக்கிட்டிருப்பான். அதுவே மாறனைக் கோட்டையை விட்டு அகலச் செய்தது. சுற்றிலும் அபாயம் சூழுமுன் போய்விடவேண்டும். இரவு முழுவதும் வேறெங்காவது ஒளிந்து கொள்ளவேண்டும். தான் மயக்கமுற்றாலும் லோகா பத்திரமாக இருக்க ஒரு இடத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றது அவன் மனம். கோட்டைக்கு அருகே இரவில் தங்க அவர்கள் விரும்பவில்லை. கோட்டைச் சுவர் கண்ணுக்குத் தெரியாத தூரத்துக்குத் தாண்டிப் போனார்கள். எப்போதோ வரப்போகும் எதிரியைத் தடுக்க இந்த மதில்கள் எழுப்பப்பட்டன. இன்று நாம் அதனால் மாட்டிக்கொண்டோமே என்ற கோபம் அவற்றின் மீது. தத்தம் வாசஸ்தலத்தை நோக்கி செல்ல முடியாமல் தடுத்தன அந்த மதில்கள்.

ரவிதாசனை எண்ணியவுடன் மாறன் வேகமாக நடந்தான். ஆரியப் படை வீடு, பம்பைப்படை வீடு, புதுப்படை வீடு, மணப்படை வீடு என்று வீரர்கள் வாழும் பகுதிகளின் வழியாகச் சென்றால் பின்னர் யாரும் தொடரமட்டார்கள். ஆனால், அவையெல்லாம் கோட்டையின் மேற்குப் பக்கத்தில் இருந்தன. இன்று மாறன் உடல் இருந்த நிலையில் அவ்வளவு தூரம் பயணிக்க முடியாது.

இரவைக் கழிப்பதற்கு நல்லதொரு இடத்தை மனதால் முடிவு செய்துவிட்டான் மாறன். தஞ்சையின் வரைபடம் மாறனுக்கு அத்துபடி. கோட்டையைச் சுற்றி அகழி, அதை சுற்றி ஊர். ஆனால், தென் கிழக்குத் திசையில் மட்டும் ஊர் இல்லை. அங்கு அய்யனார் கோயில் இருந்தது. அதை நோக்கிப் பயணிக்கும்போது ஊருக்கு அப்பால் சமீபத்தில் எங்கேயாவது பாழடைந்த மண்டபம் அல்லது சத்திரம் சாவடி இல்லாமலா போகும்?அப்படியில்லாவிட்டால், இரவு அய்யனார் கோயிலுக்கு போய்த் தங்கி விடுவது நல்லது. அங்கேயுள்ள சிலைக்கு பின்னால் நிம்மதியாகப் படுத்து உறங்கலாம்.

உறக்கம் என்பது இப்போது இருவருக்கும் மிகவும் முக்கியமாகத் தெரிந்தது. நடக்கும்போதே கண் இமைகள் கனத்துப் போய்க் கீழிறங்கின. முதலில் எங்காவது படுத்து உறங்கவேண்டும். உடலும், மனமும் அவ்வளவு களைத்துப் போயிருந்தன.

லோகா நினைத்துக் கொண்டாள். 'அந்த நாட்களில் பஞ்சு மெத்தையில் புரண்டு புரண்டு படுத்துக்கொண்ட பிறகும் தூக்கம் வருவதாயில்லை. சுகமிருந்தும் எவ்வளவு இரவுகள் சிவராத்திரியாயின. ஆனால் இன்று படுக்க ஒரு ஆபத்தில்லாத இடத்தைத் தேடி அலையவேண்டியிருக்கிறதே.'



"சம்புவராயவரே! இனிமேல் என்னால் நடக்க முடியாது. இரவு இவ்விடத்திலேயே படுத்திருக்கலாம்" என்றாள் அவள் பலமுறை.

"இன்னமும் கொஞ்ச தூரம்தான் அந்த அய்யனார் கோயில். யார் கண்ணிலும் படாமலிருப்பதற்கு அதுவே நல்ல இடம்!" என்று சொல்லிச்சொல்லி அவளை வலுக்கட்டாயமாக அழைத்துச் சென்றான். வெகு தூரம் அலைந்த பிறகு சற்றுத் தூரத்தில் வெளிச்சம் ஒன்று தெரிவதைப் பார்த்தார்கள். அந்த வெளிச்சத்தைக் குறிவைத்துக் கொண்டு வெகு விரைவாக நடந்தார்கள்.

ஆனால், அருகில் வரவர அந்த வெளிச்சத்தை மரங்கள் மறைத்தன. "அப்பா! இங்கே இருக்கிற இருள் பாதாளத்தைக் கூட தோற்கடித்துவிடும் போலிருக்கிறதே!" என்றாள் லோகா.

அதைக் கேட்ட மாறன் சிந்தித்தான். பகல் வேளையிலேயே விடுவிடுவென்று உள்ளே நுழைந்து போகும் இடமில்லை அய்யனார் கோயில். இந்த ஏகாந்தக் காட்டுப் பிரதேசத்தில் பட்டப் பகலில் வந்தாலே திகிலாயிருக்கும். அதுவும் இப்போது நள்ளிரவில் சென்றால் இவள் பயத்தில் மூர்ச்சையடைந்துவிட்டால் என்ன செய்வது என்றுகூட எண்ணினான் .

அதற்கு ஏற்றாற்போல் சுற்றுமுற்றும் உற்றுப் பார்த்துக் கொண்டே போனவர்களுக்குத் திடீரென்று ஒரு கோரமான காட்சி கண்ணுக்குத் தெரிந்தது. உடனே அவர்களுடைய நடையின் வேகமும் குறைந்தது. சாலையின் ஓரத்தில் பெரிய பாறைக்கற்கள் போல ஏதேதோ வெவ்வேறு உருவங்களில் கிடந்தன. புரியாத உருவம் கொண்ட அவை இருளில் பயம் கொடுத்தன. இவையென்ன பாறைகளா? இப்படி அஷ்டகோணலாக இருக்கின்றனவே என்று நினைக்கத் தோன்றியது.

சற்று உற்றுப் பார்த்தால், அவை கோயிலுக்குச் செல்லும் பாதைக்கெதிரே பிரம்மாண்டமான உயரங்களில் நின்ற யானை, குதிரை முதலிய வாகனங்கள் என்று தெரிந்தது. ஒரு காலத்தில், வேண்டுதலுக்காக பக்தர்கள் செய்துவைத்த அந்த மண் யானை, குதிரைகள் வெகு பழமையானவை என்றும் தெரியவந்தது. அவையெல்லாம் காலத்தின் கைவரிசையில் உடைந்து போயிருந்தன. எனினும் யாரும் அவற்றை அகற்றாமல் அங்கேயே கிடந்தன. ஆகையினால், யானைகளும் குதிரைகளும் சாய்ந்தும் உடைந்தும் பாதையின் ஓரத்தில் போர் முடிந்த களமாகக் காட்சித் தந்தது.

அவ்விடம் அய்யனார் கோயிலல்ல. உள்ளடங்கி இருந்த கோயிலுக்கு வருவோரை வழிகாட்டி வரவேற்கப் பிரதான சாலையில் வைக்கப்பட்டிருந்தவை அவை. கவனித்துப் பார்த்தால் அந்த இடத்தில் சாலையிலிருந்து பிரிந்து ஒரு குறுகிய ஒற்றையடிப் பாதை போவது தெரியவந்தது. முச்சந்தியில் மண் யானைகள் மட்டுமல்ல. அங்கு கல்தூண்களும் சாய்ந்து கிடந்தன. அய்யனார் கோயிலுக்கு முத்தரையர் காலத்தில் அமைக்கப்பட்ட வரவேற்பு வளைவுத் தூண் சாய்ந்து, பின் மூன்று பாகமாய் உடைந்திருந்தது.

''இளவரசி, சற்று நேரம் ஓய்வெடுங்கள்'' என்று சொல்லிக் கீழே விழுந்துக் கிடந்த பழைய தூண் ஒன்றின் பேரில் லோகாவைக் கைதாங்கலாக உட்கார வைத்தான் மாறன்.

அமர்ந்துகொண்ட லோகா தன் ஆதங்கத்தை வெளிக் கொட்டினாள். ''கோட்டைக் கதவு பூட்டிக் கிடந்ததைக் கண்டதும் எனக்கு எவ்வளவு கோபம் வந்தது தெரியுமா? காலம் அப்படி ஆகிவிட்டது! என்ன செய்ய? கெட்டவருக்குப் பயந்து நல்லவரையும் உள்ளே விடமாட்டேன் என்று சொல்கிறார்கள்'' என்றாள்.

'கோட்டைக்குள் செல்ல உனக்கு என்ன அவசரமா?' என்று கேட்க நினைத்தான் மாறன். அவனுக்கும் ஆசைதான். கோட்டைக்குள் எல்லா சுகங்களும் இருந்தன. படுக்க மெத்தை, தலைக்கு மேல் ஒரு கூரை, உண்ண உணவு. நிம்மதியாய்த் தூங்கவிடும் கட்டுக்காவல். ஆனால், உள்ளே சென்றவுடன் இவள் பிரிந்து போவாள். அவரவர் வீட்டுக்குப் போகவேண்டிய நிர்பந்தம் ஏற்படுமே என்ற வருத்தம். பின் அவளுடைய தரிசனத்தை முடிவு செய்வது பழுவேட்டரையரின் கரிசனம் என்றாகிவிடும்.

லோகா, தங்களை இந்த நிலைக்கு ஆளாக்கிய பாண்டியர் படையைத் திட்டிக்கொண்டிருந்தாள். ''சோழனுடைய படையை எதிர்த்துத் துவம்ஸம் செய்வதற்குத் துப்பில்லை. பெண் பிள்ளைகளைக் கடத்திப் போராட்டம் நடத்துகிறான். நம்மை பின் தொடர்ந்து கோட்டைக்குள் ரவிதாசன் வந்தால் அப்பா அவனை வெட்டிக் கைகால்களை அடுப்பிலே வைத்துவிடுவார்'' என்றாள்.

''லோகா, நேற்றுகூட ரவிதாசன் கோட்டைக்கு உள்ளே வந்திருப்பான். ஆனால், உன் அப்பாவிடம் பேசினானா என்று தெரியாது. நேற்று மட்டும் உன் வீட்டில் அடுப்பு வைக்கவில்லையோ? இல்லை அளவுக்குமேல் விறகு இருந்ததோ?'' என்றான் மாறன் சிரித்துவிட்டு.

''என்ன சொல்கிறீர் சம்புவராயரே?''



''அவன் மாறுவேஷத்தில் மன்னன். அந்தக் கலையில் இந்த தேசத்தில் அவனுக்கு நிகரில்லை'' என்றான். அதுபோல பல விஷயங்களில் ரவிதாசன் தன்னை விடச் சிறந்தவன் என்று தெரியும் மாறனுக்கு. ரவிதாசனைப் பற்றிப் பேசியவுடன் அவனது கடமையுணர்வு அதிகரித்தது. 'வீணாக ஏதும் செய்யாதே. கோட்டைக்கு உள்ளே அவளைக் கூட்டிச் சென்று விட்டு மறு காரியம் பார்'' என்றது அவன் மதி. இன்று இரவு மட்டும் பாண்டியனைச் சந்திக்காமல் உள்ளே சென்று விடவேண்டும். ஆனால், என்றைக்கு அது நிகழ்ந்தாலும் ரவிதாசனின் மரணம் தன் கையில்தான் என்று சபதம் செய்து கொண்டான்.

இதைப்பற்றி அதிகமாகச் சிந்திப்பதற்குள்ளே அவர்களுடைய சுற்றுப்புரத்திலிருந்து சில சப்தங்கள் எழுந்து, அவர்கள் காதில் விழுந்தன. உடனே காதுகொடுத்துக் கவனித்துக் கேட்க ஆரம்பித்தான். இரவில் வெளிவரும் ஜீவராசிகளின் சப்தமவை. மரப் பொந்திலே கோட்டான்களும் மரக்கிளைகளில் தலைகீழாகத் தொங்கும் வௌவால்களும் நிறைந்த இடமது. காலையில் அவற்றின் பேச்சு மூச்சே தெரியாது. ஜனசூன்யமாகத் போய்விடும் இரவுகளில் மட்டுமே அவை வெளிவரும். அதுவரையில் உட்கார்ந்திருந்தபடியே பேசிக்கொண்டிருந்த மாறனுக்கு அவை ஏதோ எச்சரித்திருக்க வேண்டும். அவன் துள்ளிக் குதித்து எழுந்தான். கோயிலுக்குள் சென்றுவிட்டால்தான் அபாயம் குறையும் என்று முடிவெடுத்தான். ''நாம் இங்கு இருப்பதும் உசிதமில்லை. சற்று உள்ளே சென்றுவிடுவோம்'' என்றான். லோகாவின் பயம் அவனைப் பிடித்திருந்த அவள் கை நடுக்கத்தில் தெரிந்தது.

கோயில் பூசாரி தினசரி வரக்கூடியப் பாதை ஒன்று தெரிந்தது. இருவரும் அடர்த்தியாக மண்டிக் கிடந்த மூங்கில் புதர்களின் இடையில் குறுகலான ஒற்றையடிப் பாதை வழியாக நடந்தனர். அவ்வப்போது உடம்பில் முட்கள் கீறாமல் தடுக்கமுடியவில்லை.

கிட்ட நெருங்க நெருங்கக் கோயிலுக்கு முன்னால் மண்ணால் செய்துக் காளவாயில் சுடப்பட்டு வைத்திருந்த பிரம்மாண்டமான வீரர்களின் சிலைகளும், மண்யானைகளும், குதிரைகளும், நிலவொளி வெளிச்சத்தில், கோரமாகக் காட்சியளித்தன.

அய்யனார் முக்கால் பனைமர உயரத்தில் இருந்தார்- கையில் ஒரு சுண்ணாம்புச் சுதையில் ஆன வாளோடு! அவர் அருகே இரண்டு காவலாளிகள். அவர்கள் பின்னால் இரு குதிரைகள் தங்கள் காலடிக் குளம்புகளை அந்தக் காவலளிகளின் தோள் பட்டையின் மீது பதித்தபடி நின்றன. பயம் உண்டாக்க வேண்டிய வேலையை ஏற்றிருந்தார் அய்யனார். துஷ்டர்கள் யாரும் கிராமத்

தின் அருகில் வராதபடி பார்த்துக் கொள்ள இவரைக் காவலுக்கு அமர்த்துவது வழக்கம்.

கடவுள்கள் எல்லோரும் சாந்தமாகவே இருக்கவேண்டும் என்று ஆன்மீகத்தில் சட்டமில்லை. காபாலிகர்கள் பூசிக்கும் இரத்தபலி கேட்கும் காளி கோரமாய்த்தான் இருப்பாள். ஏன், சாந்தமாய் இருக்கும் கடவுள்களின் கோயில் கருவறை வாசலில் இருக்கும் துவாரபாலகர்கள்கூட வெளிநீட்டிய பல்லுடனும், வெளித் தள்ளிய நாக்குடனும் கோரமுகம் கொண்டுதானிருப்பார்கள். அது போலத்தான் இந்த அய்யனாரும். ஊர் எல்லையில் பெரிய வாளுடன் இருப்பார். தீய சக்திகள் ஊருக்குள் காலடி வைக்காமல் பார்த்துக்கொள்வார்.

தரையில் நாட்டப்பட்டிருந்த சூலாயுதத்தைத் தாண்டினால் பலி பீடம். அது அய்யனாரும் அவ்வபோது ரத்தபலி கேட்பார் என்பதை நினைவூட்டியது. பலிபீடத்துக்குப் பக்கத்தில் இருந்த ஒரு பெரிய வாள். பார்க்க மிகப் பயங்கரமாயிருந்தது. கறுத்துபோன ரத்தக்கறை அதைச் சுற்றியிருந்தது.

குறி சொல்பவன் திடீரென சாமி வந்து கத்துவான். ''அய்யனாருக்கு அதிக தாகமாயிருக்கிறது. இரத்த தாகம்'' என்று. உடனே பூசாரிகளெல்லாம் ஆட்டம் போட்டு உற்சவம் கொண் டாடி பலி கொடுப்பார்கள். நரபலியல்ல. ஆடுகளைத்தான் பலியாகக் கொடுப்பார்கள். சினை ஆடுகளைக் கொண்டு வந்து தலையை வெட்டி, அந்த தலைகளைத் தட்டில் வைத்து அய்யனா ருக்குப் படைப்பார்கள். படைத்தால்தான் காவல் வேலையை அவர் வெகு நன்றாய்ச் செய்வார் என்கிற நம்பிக்கை.

சர்வலங்காரத்துடன் இருந்தார் அய்யனார். எந்த ஆபரணமும் கழட்ட முடியாமல் சுதைவேலையிலேயே செய்திருந்தார்கள். அய்யனாரைக் கண்டு அளவிலாத வியப்பில் ஆழ்ந்து மௌனமாக நின்று கொண்டிருந்தார்கள் மாறனும் லோகாவும். பூசாரி சில தீவர்த்திகளில் இரவெல்லாம் கொழுந்துவிட்டெரியும்படி விட்டு விட்டு சென்றுவிட்டார். இருட்டை அக்கினிக் கொழுந்து விரட்டி யடித்திருந்தது.

அய்யனாருக்கு முன்னால் நின்று இருவரும் கை கூப்பி வேண்டினார்கள். பின் சற்று பக்கத்தில் ஏதேனும் ஒளிவு மறைவாக இடம் இருக்கிறதா என்று தேடினார்கள்.

முணுமுணுக்கும் குரலில் ''அய்யனாரிடம் என்ன வேண்டினீர் சம்புவராயரே'' என்றாள் லோகா.



''சுவாமி தரிசனத்துக்கு நம்மைதவிர இன்று வேறு யாரும் வராமலிருக்க வேண்டும் என்றுதான் வேண்டினேன்'' என்றான் மாறன்.

''சரி, நீ என்ன வேண்டிக்கொண்டாய்? என்றான் பதிலுக்கு மாறன். உண்மையில் லோகா தான் வேண்டிக்கொண்டதை வெளியேசொல்ல இயலாமல் அவள் நாணம் தடுத்தது. அவளது வேண்டுதல் மாறனின் வேண்டுதலைப்போல தற்காலிக நிகழ்சி களுக்காக மட்டுமல்ல. இன்று இரவு கோட்டைக்குள் அசம்பா விதம் ஏதுமில்லாமல் செல்வதில் தொடங்கி அடுத்த முப்பது ஆண்டுகளுக்கு அவளது வாழ்க்கை எப்படி அமைய வேண்டும் என்றுகூட வேண்டிக்கொண்டுவிட்டாள் பழுவூர் இளவரசி.

லோகாவுக்கு, தான் மாறனின்மேல் வைத்திருக்கும் அன்புக்கு, பதில் அன்பு அவன் கொள்வானா என்று சந்தேகம் வந்தது. பெண்களின் அழகையும் மாட்சிமையையும் கண்டு ஆண்கள் சுற்றிச்சுற்றி வலம் வருவதுண்டு. அதனால்தான் சர்வ நேரமும் சர்வலங்காரத்துடன் இருக்கும்படி உயர்குடிப் பெண்களுக்கு அறிவுரை கூறப்பட்டது. ஆனால், இப்படி பல்வேறு விதமான கஷ்டம் சூழ்ந்த நிலைகளிலும் தன்னைப் பார்த்தவன் எப்படித் தன் மேல் காதல் கொள்வான்? அரண்மனையில் அன்னநடை பயில லாம். ஆனால், காட்டில் இவ்வளவு காத தூரம் எப்படி அன்ன நடை பயில முடியும்? அதுமட்டுமல்ல. எந்த சிருங்காரத்துக்கும் வாய்ப்பில்லை. கூந்தல் முடிப்பிலே அழகில்லை. குறுநகையில்லை. ஆடையில் கூட கிழிசல் இல்லாமல் இல்லை.

ஆனால், எல்லாவற்றிரும் அப்பாற்பட்ட ஒரு உள்அழகு அவளிடம் இருந்தது. அதுதான் அவனை ஏற்கனவே அவளிடம் ஈர்த்திருந்தது என்று அவள் அறிந்திருந்தால் அய்யனாரிடம் வேறு ஏதாவது உருப்படியாக வேண்டியிருப்பாள்.

சொன்னதையே சொல்லும் கிளியினைப் போல் திரும்பத் திரும்பப் பேசும் பெண்களுக்கிடையில் தானாகச் சிந்திக்கும் பெண்ணிவள். 'இவள் போன்ற ஒரு பெண்ணின் அரவணைப்புப் போதும், நம் பழையத் தோல்விகளெல்லாம் மறந்து போக' என்று நினைத்திருந்தான் மாறன்.

இரவு முழுவதும் கோட்டைக்கு வெளியில்தான் என்ற நிச்சயம் ஏற்பட்டு ஒருபுறம் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. எனினும் வாழ்க்கையைப் பற்றி ஆனந்தக் கனவு கண்டுகொண்டிருந்த அந்தச் சில நிமிஷங்களில் அந்த காதலர்கள் சொர்க்கத்தில் தான் இருந் தார்கள். இருவருக்கிடையில் சம்பாஷணையெல்லாம் ஏதோ

வெறும் வார்த்தைகளாய் இருக்கவில்லை. இப்போது பலவகைப் பொருள் ததும்பி விளங்கிற்று. நிகழ்காலம் மட்டும் சுமூகமாய் முடிந்தால், ஆகா வருங்காலம் எவ்வளவு ஆனந்தமயமாக இருக்கப் போகிறது என்ற குதூகலத்தை வெளிக் காட்டிய உரையாடல்கள் அவை!

கற்பனையென்னும் மாயா உலகத்தில் வாழ்கிறவர்கள் காதலில் வசப்பட்டவர்கள்.அந்த உலகத்தில் செடி கொடிகள் பசுமையாய்த் தெரியும். வானம் அதிக நீலமாகத் தெரியும். இருட்டுக் கூட அழகாகத் தெரியும்.

அப்படிப்பட்ட உலகில் வாழ்ந்து கொண்டிருந்தான் மாறன். இந்தப் பாழாய்ப் போன பாண்டியர்கள் வந்து விடப் போகிறார்கள் என்று மனது அடிக்கடி எச்சரிக்காவிட்டால் இன்னும் கொஞ்சம் நேரம் தனிமையில் அவளுடன் இருக்கலாமே என்று தோன்றியது. இத்தனை நேரமும் கனவு உலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த மாறன் இவ்வுலகத்துக்குத் திடும் என்று வந்தான்.

அச்சமயம் மேகமண்டலத்துக்குப் பின்னே நிலவு ஒளிந்து கொண்டிருந்தது. எங்கும் இருள். லோகாவும் மாறனும் அய்யனாரைக் கும்பிட்டுவிட்டு ஏதாவது மறைவிடம் கிடைக்குமா என்று தேடி நடந்தனர். திடீரென அவனருகில் கைதாங்கலாக நடந்து வந்துக்கொண்டிருந்த லோகாவைக் காணவில்லை. ஏதோ ஒரு சக்தி அவளை இழுக்க, அவள் பிடி அவன் கையிலிருந்து நழுவிச் சென்றது. கீழ்நோக்கி இழுக்கப்பட்டாள் லோகா. அவளுக்குக் கத்தக் கூட நேரம் இல்லை. மாறனுக்கு, தரையே வாய் முளைத்து அவளை விழுங்கிவிட்டதோ என்கிற ஐயம். ஒரு கணம் கையைப் பிடித்து இருந்தாள்; மறு கணமே இருளில் மறைந்தாள். பூமி அவளை அப்படியே விழுங்கி விட்டதாகத்தான் தோன்றியது. இதுவென்ன ஐய்யனாருடைய அற்புத சக்தியா?

மாறனது இதய துடிப்புச் சிறிது நேரம் நின்று போயிற்று. தடுமாற்றத்துடன் சுற்றிப்பார்த்தான். கால் இடறி விழுந்திருந்தால் கூட தரையில் அல்லவா கிடப்பாள்? ஆனால், லோகாவைக் காணவேயில்லை.

தன்னுடைய ஆகாசக் கோட்டைகளெல்லாம் தகர்ந்துத் தூள் தூளாகப் போய்க் கொண்டிருப்பதை உணர்ந்தான். எதிரி பாண்டியன் மட்டுமல்ல. ஏதோ ஒரு மனிதச் சக்திக்கு அப்பாற்பட்ட பூதாகார சக்தியொன்றும் அவனுடன் மறைமுகப் போரை நடத்திக்கொண்டிருந்தது. இந்த மாய வலையில் நாம் ஏன் சிக்கினோம் என்ற பய உணர்ச்சி அவனுக்கு அப்போது ஏற்பட்டது.



அவ்வளவு அழகும் சாந்தகுணமும் பொருந்திய இனிய காதலி அருகில் வந்து கொண்டிருந்தாள். இப்போது திடீரென்று பூமி அவளை விழுங்கிவிட்டது. கையில் பிடித்திருந்த அவளை யாரோ இழுத்தது போல ஒரு உணர்வு அல்லவா ஏற்பட்டது? என்னவெல்லாமோ எண்ணங்கள் அவன் மனதில் ஓடியன. பூமிக்குப் பசி வந்து அவளை விழுங்கிவிட்டதா என்ன?

கண்ணால் கண்ட இந்த மாயத்தை நம்புவதா, வேண்டாமா? என்று தெரியாமல் மாறன் சிறிது நேரம் திகைத்துப்போய் முரண்பட்ட உணர்ச்சிகளோடு நின்றான்.

தலை சுற்றியது. தேகமெல்லாம் நடுங்கியது. உதடுகளும் துடித்தன. என்னவெல்லாமோ கத்த வேண்டுமென்று உள்ளம் துடித்தது. புயற்காற்று அடிக்கும்போது சமுத்திரம் கலங்குவது போல் கலங்கியது மாறனது மனம்.

❖ ❖ ❖

## அத்தியாயம் தொண்ணூற்று ஏழு
## சுரங்கத்துக்குள் காதல்

**உ**ண்மையில் தன்னருகிலிருந்த லோகா மாயமாய் மறைந்து விட்டாள் என்பது மாறனுக்கு ஒரு வித அச்சத்தையே கொடுத்தது. 'திடமான தரையில் எப்படி பூமி வாயைப் பிளந்து அவளை விழுங்கியது?'

ஆயிரமாயிரம் கேள்விகள் அவனைச் சுற்றியிருந்த இருளை அதிகப்படுத்தியது. 'அவள் எப்படிக் காணாமல் போனாள்? தன் கையைப் பிடித்து வந்தவளை ஏதோ சக்தி அபகரித்தது போலல்லவா இருந்தது?'

'இது என்ன மாயாஜாலம்? ரவிதாசனின் கத்தியினால் வெட்டுப் பட்டதில் நம் மூளை குழம்பிவிட்டதா என்ன?' என்று நினைத்தான். இல்லை, இவ்வளவும் ஒருவேளை கனவில் காண்கிறோமோ என்றுகூட அவனுக்குத் தோன்றியது. சிறிது நேரத்தில் விழித்து எழுந்தவுடன் கடம்பூரிலோ, தஞ்சை விருந்தினர் மாளிகையிலோ இருப்போம் என்று ஆறுதல் சொல்லிக் கொண்டான்.

பூமிதான் அவளை விழுங்கியதோ இல்லை, முன்பொருமுறை நாம் கோடியக்கரையில் கண்ட புதைமண்தான் இதுவோ? சேற்றுக்

குழிகளைப் பற்றி மாறன் கேள்விப்பட்டதுண்டு. ஆடு, மாடுகள், குதிரைகள், யானைகள் கூட அப்பள்ளங்களில் அகப்பட்டுக் கொண்டால் சிறிது சிறிதாக உள்ளே அமுங்கிக் கொண்டே போய்க் கடைசியில் முழுதுமே மூழ்கி மறைந்து விடுமாம்! அத்தகைய புதைகுழிதானோ இது?அப்படியென்ன பூமிக்கு பசி? இப்படி தினம்தினம் யாரையேனும் விழுங்கிவிடுமா என்ன?

'நம்மை மீறிய சக்தி ஒன்று நம்மை வழி மறிக்கின்றதா? நம்முடைய சோதனைகாலம் முடிவடையும் எனத் தோன்ற வில்லையே. இப்படித் தொடர்கிறதே' என்று மனம் நொந்தான்.

மாறன் சுற்றிலும் தன் பார்வையைச் செலுத்தித் தேடலானான். இந்தப் பாழாய்ப்போன இருளில் எப்படித் தேடுவது? தன் குரலின் சக்தியையெல்லாம் உபயோகித்துக் கத்தலாம் என்றால், அதைக் கேட்டு முதலில் அந்த அயோக்கியர்கள்தான் வருவார்கள். அது இன்னமும் அபாயத்தைத்தான் கூட்டும்.

இப்படி பலவாறு குழம்பித் திகைத்து நின்ற மாறனின் காலடிக்கு அருகில் ஒரு சலசலப்புக் கேட்டது. ''சம்புவராயரே, சம்புவ ராயரே'' என்று ஒரு மெல்லியக் குரல் அவன் நினைவுகளைக் கலைத்தது.

அக்குரல் மாறனுக்கு எல்லையற்ற ஆச்சரியத்தை உண்டாக் கிற்று. நிச்சயம் அது லோகாவின் குரல்தான். மாயமாய் மறைந்து விட்டாள் என்று நினைத்த லோகாவின் குரல் இப்போது மெல்லியதாய் இருளில் கேட்டது. 'இதுவும் அந்த மாய வலையில் ஒரு அம்சமோ?' மீண்டும் குரல் கேட்கவே, கனவு காணவில்லை, இதுவெல்லாம் உண்மையாக நடப்பவைதான் என்று நம்பிக்கை பெற்றான்.

கண்ணுக்குத் தெரியாத இடத்திலிருந்து லோகா ''சம்புவராயரே, நான் தான். க்ஷேமமாய் இருக்கிறேன். சீக்கிரம் கோயிலிருந்து தீவர்த்தியை எடுத்து வாருங்கள்'' என்றாள்.

'இவள் எதற்காக தீவர்த்தியைக் கேட்கிறாள்? எங்கிருக்கிறாள் என்று சொன்னால், ஒரு கை கொடுத்துத் தூக்கி விட்டுவிடலாம்' என்று முதலில் நினைத்த மாறன் 'சரி எதற்கும் விளக்கிருந்தால் நல்லதுதானே' என்று விரைவாக அய்யனார் கோயிலை நோக்கி ஓடினான். அய்யனார் சிலைக்கு இருபுறமும் தீவர்த்திகள் ஏற்றி வைக்கப்பட்டிருந்தன. சுவரில் சொருகியிருந்த தீவர்த்தி ஒன்றை எடுத்துக்கொண்டு திரும்பும்போது, அய்யனார் கோயிலில் முன் இருந்த பலிபீடத்தில் ஒரு பெரிய வாள் செங்குத்தாக நிற்பதைக் கண்டான். மாறனது வாள் ஆற்றுடன் போனதால் கையில்



ஆயுதம் ஏதுமில்லை. கொஞ்ச நேரம் உபயோகித்துக்கொள்ளலாம் என்று பலி பீடத்தின் அருகில் சென்று அதையும் எடுத்துக் கொண்டான்.

தூக்குவதற்கு கனமாய் இருந்தது அந்த வாள். அதைத் திருவிழாக்களில் வைத்து தூபதீபம் காட்டிக் கன்னத்தில் போட்டுக் கொள்வதற்கான வாள் என்று மட்டும் நினைக்க முடியாது. சில நாட்களில் சினை ஆடுகளைக் கொல்வதற்காகவும் அதை உபயோகிப்பார்கள். அய்யனார் எப்போது பலிக் கேட்பார் என்று தெரியாது. அதனால் அது கூர் தீட்டி ஆயத்தமாக இருந்தது. இது ஒன்றிருந்தால்போதும். பனை மரத்தில் ஏறி நொங்குக் குலையைத் நுண்டிப்பது போல எதிரிகளின் தலைகளை வெட்டிச் சாய்ப்பதற்கு ஏற்ற வாள்.

ஒரு கையில் தீவர்த்தி ஏற்கனவே இருந்தது. அடிபட்ட கையில் வாளையும் ஏந்தும்போதுதான் அந்த வலி மாறனுக்கு முழுமை யாகத் தெரிந்தது. கத்தியை எடுக்கக் குனிந்தபோது மாறன் கையிலிருந்த அந்த தீவர்த்தி அசைந்ததில் சட்டென ஒரு நிழல் சிலையின் மீது பரவியது.

'அய்யனார் முகத்தில் இது என்ன இவ்வளவு உக்கிரம்? இவர் ஆயுதத்தை வேறு நாம் எடுத்துக் கொள்கிறோமே. ஏற்கனவே நமது நிலை மோசமாக இருக்கிறது. இதில் தெய்வ குற்றம் வேறா?' என்று அவன் தன்னை தானேக் கேட்டுக் கொண்டான். பின் ஆபத்துக்குப் பாவமில்லை என்று தலையை திருப்பிக்கொண்டான்.

தீவர்த்தியின் வெளிச்சத்தில் லோகாவின் குரல் கேட்ட இடத்தைக் கண்டுபிடித்தான் மாறன். ஏதோ தூர்க்கப்பட்ட ஆளுயரக் கிணறு போல இருந்தது. அதில் லோகா க்ஷேமமாக நின்றிருந்தாள் என்று வெளிச்சத்தில் தெளிவாகத் தெரிந்தது.

'அப்பா, அவள் உயிருக்கு ஒரு ஆபத்தும் இல்லை. நல்ல வேளை! பூமி அவளை விழுங்கிவிட்டது என்றல்லவா பயந்து விட்டேன்' என்று நினைத்தான். வாளைக் கீழே போட்டுவிட்டு அடிபடாமலிருந்த கையைக் கீழே குழிக்குள் நீட்டி ''மேலே வா'' என்றான். 'கொஞ்சம் சிரமத்துடன் அவளை மேலே தூக்கிவிட்டு பின் சீக்கிரமாக ஒளிந்து கொள்ள இடம் பார்க்க வேண்டும்' என்று நினைத்தான்.

இவன் நீட்டியக் கரத்துக்குப் பதில் கரத்தை அவள் கொடுக்க வில்லை. ''சம்புவராயரே, நம் திட்டத்தில் ஒரு சிறிய மாற்றம். மெல்ல தீவர்த்தியை என்னிடம் கொடுத்துவிட்டு, நீங்கள் கீழே இறங்கி வாருங்கள்'' என்றாள் அவள்.

மாறனுக்கு ஒன்றும் புரியவில்லை ''சீ சீ! அசடே! என்ன மாற்றிச்சொல்கிறாய். நீ அல்லவா மேலே வரவேண்டும. உனக்கு என்ன பைத்தியமா? நீ மேலே வருகிறாய் என்று சொல்'' என்றான். கீழே விழுந்த அதிர்ச்சியில் உளறுகிறாள் போல என்று நினைத் தான்.

''இல்லை, இல்லை! கீழேதான் வந்து பாருங்களேன். உங்களுக்கு ஆர்வம் ஏற்படும். இங்கு இரவைக் கழிக்க நல்லதொரு இடமும் இருக்கிறது'' என்றாள்.

தயக்கம் என்பது மாறனுடைய முகக்குறியில் தெளிவாகத் தெரிந்தது. அந்த குழியில் லோகாவின் பேச்சைக்கேட்டு இறங்கு வதற்கு மாறனுக்கு அவ்வளவாக மனம் இல்லை. அவன் கீழே இறங்கிச் செல்லும் யோசனையை ஆதரித்ததாகத் தெரியவில்லை. ஐயோ! மானிட வாசமேயில்லாத அந்தக் குழியிலே ஏதாவது நாகசர்ப்பம் இருந்து நம்மைத் தீண்டிவிட்டால் என்னாவது என்ற பயம் முதலில். அதுமட்டுமல்ல ஒளிந்து கொள்ள இது தகுந்த இடம் என்பதைக் குறித்து அவன் துளிக்கூட மகிழவில்லை. ''குழிக்குள் பதுங்கிக் கொண்டால் மட்டும், ரவிதாசன் கண்டு பிடிக்க மாட்டானா என்ன?'' என்றான்.

''இது வெறும் குழி போலத் தெரியவில்லை. இங்கு ஒரு பாதை வேறு தெரிகிறது'' என்றாள் கீழேயிருந்து லோகா.

மாறனுக்கு இதயம் ஒரு துள்ளுத் துள்ளியது. கோட்டைக்கு உள்புறம் செல்லும் வாயிலைத் தற்செயலாகக் கண்டுபிடித்து விட்டாளோ லோகா? 'அக்காலங்களில் இந்த நகரத்துக்குள் நுழையும் சுரங்கங்கள் பலவும் இருக்கும் என்று கேள்விபட்டிருந் தோமே. இத்தனை நாளும் தஞ்சைக்கு அடியில் நமக்கு இப்படி ஒரு சுரங்க வழி இருப்பது தெரியாமற் போயிற்றே? யார் கண்டது? இன்று இரவு நமது வீட்டுக் கட்டில்களில் தூங்கக்கூட வாய்ப்புண்டு' என்று நினைத்தான்.

ஆனால், அவனுக்கு மேலும் சந்தேகங்களும் எழுந்து, அவனை உள்ளே குதிக்கவிடாமல் தடுத்தன. ஐம்பது ஆண்டு அமைதியில் சுரங்கம் எல்லாம் தூர்ந்துப் போய்விட்டிருக்கும். இதன் உள்ளே புகுந்தால் இதற்கு இன்னொரு வாசல் இருகின்றதோ இல்லையோ? அப்படியிருந்தால் அது எங்கே கொண்டு போய் விடுமோ? ''வெள்ளப்பெருக்கில் பொந்துக்குள் அகப்பட்ட எலிகள் போல நாம் மாட்டிக்கொள்ளக்கூடாது. உள்ளே மாட்டிக்கொண்டால் தப்பிப் பிழைத்தல் புனர் ஜன்மந்தான்!'' என்றான்.



லோகாவுக்கு அவன் பயத்தில் உடன்பாடில்லை. ''வெளியில் இருந்தால் காலை உதயத்தையே பார்ப்பது கடினம்'' என்றாள் குழிக்குள்ளிருந்து.

அவள் வாதத்தை மறுபேச்சின்றி ஒப்புக்கொண்ட மாறன் சுற்றி முற்றிப் பார்த்து இதைவிடப் பாதுகாப்பாக இரவை கழிக்க வழி யில்லை என்று முடிவுக்கு வந்தான். பழைய காலத்தில் கோட் டைக்குள் செல்லச் சுரங்கங்கள் இருந்தன. இதுவும் அதில் ஒன்று தான். சென்று தான் பார்க்க வேண்டும். அதனால் விளையும் அபாயத்தையும் சமாளித்துக் கொள்ள வேண்டும் - இவ்விதம் எண்ணிக் குழிக்குள் இறங்க ஆயத்தமானான்.

ஆனால், இதற்குள்ளே எப்படிப் பிரவேசிப்பது? உடனே கீழே குதிக்க முடியவில்லை. கை வலித்தது. இந்த கையை வைத்துக் கொண்டு மீண்டும் மேலே ஏற முடியுமா என்று சந்தேகம் வேறு. முதலில் வாளை உள்ளே போட்டான். பின் தீவர்த்தியை அவளிடம் குனிந்து கொடுத்துவிட்டு, உள்ளே குதித்தான்.

துள்ளிக் குதித்துக் குழியின் தரையில் இறங்கினான். தரையில் கால்பட்ட அதிர்ச்சியில் அடிப்பட்ட கையில் வலி அவன் பிராணனை வாங்கிவிடுமோ என்றே பயம் வந்தது. அப்போது அந்தப் புண் வலித்ததால் உடலெங்கும் நடுக்கமுற்றான். கத்தாமல் அவன் அடக்கிக் கொண்டதில் ஏற்பட்ட முகமாறுதலினால் அவன் இருந்த சிரமத்தில் இருக்கின்றான் என்று தெரிந்து கொண்டாள் லோகா.

''உமது கை எப்படியிருக்கிறது ?'' என்று கேட்டவாறே இரவிலும் சரியான இடத்தில் கையை வைத்துத் தடவிப்பார்த்தாள் லோகா.

'ஐயோ! இவள் வேறு கொல்கிறாளே. இந்த சுகத்தில் திளைத்திருந்தால் எதிரி வந்தால் கூடச் சரணடைந்து விடுவோம்.' என்று பயந்தான் மாறன். அவள் அவனுடைய அடிபட்ட கையைப் பிடித்து இருக்கையில் என்ன இன்ப வேதனை கலந்திருக்கிறது! உவகையின் உச்சிமேட்டில் கொண்டுப் போய்ச் சேர்த்தது அவனை.

தீவர்த்தியின் வெளிச்சத்தில் அந்தக் குழி நன்றாய்த் தெரிந்தது. ஒளிந்து கொள்ளவும் நல்ல இடம். வெளியேற வழி இருக்கின்றதா என்று கூடப் பார்த்துவிடலாம். ஏனெனில் அது வெறும் குழியல்ல. அதன் ஓரத்தில் கோட்டையை நோக்கி ஒரு சுரங்க வழிதெரிந்தது. மாறனுக்கு நம்பிக்கை பிறந்தது. ''கோட்டைக்கு இவ்வளவு அருகில் சுரங்கம் தோண்ட அவசியம் தான் என்ன? இங்கிருந்து

முன்னூறு காலடிகளில் கோட்டைச் சுவர் கடந்த பின் அது திறக்கும். எப்படியும் வெளியில் இருப்பதைவிட அதிகப் பாதுகாப்பு உண்டு'' என்று முடிவுகள் பலவும் ஒரு நொடியில் எடுத்தான்.

பழுவூர் அரசிளங்குமரியைப் பார்த்து ''உம்மை பூமி விழுங்கி விட்டது என்று நினைத்தேன்'' என்றான்.

''ஓ! கவலைப்பட்டீரோ?'' என்றாள் ஓரக் கண்ணில் பார்த்தபடி.

உண்மையில் மிரண்டு போய்விட்டான் மாறன். ஆனால், சமாளித்தபடி ''இல்லை, இல்லை'' என்றான்.

''அண்டபுளுகு, ஆகாசப் புளுகு என்பது இதுதான் சம்புவ ராயரே'' என்றாள். லோகா இப்போது மாறனை இளவரசே என்று அழைப்பதில்லை. இப்படிச் சம்புவராயரே என்று செல்லமாய்த் தான் அழைக்கின்றாள்.

மாறனுக்கு மனதின்பளு குறைந்தது. அந்நகரின் பாதாளக் காராக்கிருகம் போலிருக்கும் சுரங்கத்தில் அகப்பட்டுக் கொண்டா லும் அருகில் ஒரு தேவதையுடன் அகப்பட்டுக் கொண்டது நல்லதுதான் என நினைத்துக் கொண்டான்.

கடமை அழைக்கிறது என்று நினைவுபடுத்திக்கொண்டு சுரங்கத்தை ஆராயச் சென்றான் மாறன். ஒரு மரத்தின் வேர் அந்தக் குழியில் வெளி வந்திருந்தது. அதுவே அந்தச் சுரங்க வழியை மூடியது. அதை அகற்றிக் கொண்டு உள்ளே நுழைந்தனர் இருவரும்.

இருட்டு என்றால், இப்படிப்பட்ட இருட்டைக் யாராலும் கற்பனை கூடச் செய்யவும் முடியாது. இந்த தீவர்த்தியில்லை யென்றால் என்ன செய்ய முடியும்? மேலுலகில் நாலு ஜாம நேரந்தானே இரவுக்காலம் . இங்கு ஆயிரம் ஜாமம். இல்லை, இல்லை கோடி ஜாமம். இங்கு என்றுமே பொழுது புலர்ந்து, கருநிற இரவு வெளியேறாது. சதா சர்வகாலமும் இருட்டுதான். சில சுரங்கங்களில் நல்ல காற்றே இருக்காது. அவற்றுள் இறங்கி விட்டால், சுவாசிக்கக் காற்றில்லாமல் உயிரோடு சமாதிதான்! இறங்கியவனை அந்தச் சுரங்கம் விழுங்கி ஏப்பம் விட்டு விடும்! சுரங்கம் என்றாலே நரகத்தின் பிரதிபலிப்புத் தான் என்று நினைத்த வர்களும் இருந்தார்கள். வௌவால்களும், இருள் படிந்தப் பூமியின் அடிப்பிரதேசமும், வீரனையும் அச்சுறுத்தக்கூடியவை.

சுரங்கம் அகலமாக இல்லாவிடினும் உயரமாக இருந்தது. நிச்சய மாகத் தலை இடிக்காது. ஏன்? ஒரு தீவர்த்தியை உயர்த்திக்கூடப் பிடிக்கமுடியும். தரை மேடு பள்ளமாக தான் இருந்தது . அதிக போ



க்குவரத்து உபயோகித்திருந்தால் சமதளமாய் இருந்திருக்கவேண்டும். அதனால் இதை மறந்துவிட்டனர் மாந்தர் என்று தெரிந்தது.

''இதைக் குடைந்தெடுக்க எவ்வளவு சிரமப்பட்டிருப்பார்கள்?'' என்றாள் லோகா.

''இல்லை, இல்லை! குடைவதெல்லாம் பாறையிருக்கும் இடத்தில் தான். இங்கு அப்படியல்ல. தஞ்சையில்தான் பாறையே இல்லையே. களிமண்ணில் வாய்க்கால் போலத் தோண்டிவிட்டு மேலே மர உத்திரம் வைத்து, அதன்மேலே மண்ணைப் போட் டிருப்பார்கள்'' என்றான்.

சுரங்கப் பாதையில் புகுந்த இருவரும் அது போகும் வழி யெல்லாம் சென்றார்கள். தீவர்த்தியின் வெளிச்சத்தில் இருள் தன் இந்திர ஜால வித்தைகளைக் காட்டிக் கொண்டிருந்தது. அண்டைச் சுவர்களில் பயங்கரப் பேயாட்டம் போல இவர்கள் உருவங்களின் அகோரமான நிழல் தாண்டவமாடியது. அதைவிட, தீவர்த்தியி லிருந்து அக்கினி சுவர்களில் படர்ந்திருந்த சிலந்திவலைகளுக்குப் பரவியது. ஒரு கண் சிமிட்டும் நேரம் மட்டுமே எரிந்த சிலந்தி வலைகள் முதலில் பயம் கொள்ளச் செய்தன.

குறுகலான சுரங்கப் பாதை வழியாக அவர்கள் சென்றார்கள். பாதை வளைந்து வளைந்து சென்றது. முடிவில்லாமல் சென்று கொண்டிருப்பதாகத் தோன்றியது. அடிக்கடி வித்தியாசமான காலடிச் சத்தமும் பயங்கரத்தை உண்டாக்கின. பின்தொடர்ந்து யாரேனும் வருகிறார்களா என்று கவனமாகக் கேட்டான் மாறன். ஆனால், அந்த சுரங்கச் சுவரில் தங்கள் காலடி சப்தம்தான் எதிரொலிக்கின்றது என்று தெரிந்தது. அது மட்டுமல்ல, சில சமயங்களில் அவர்களின் மூச்சு சப்தமேகூட எதிரொலித்துப் புயல் போலக் கேட்டது.

ஒவ்வொரு அடியாக காலை ஊன்றி வைத்து, கீழே விழுந்து விடாமல் கவனமாக நடந்தனர். நிழல்கள் தரையை மேடு பள்ள மாகக் காட்டியபோது சம தளமாகவே இருந்தது தரை. அதற்கு நேர்மாறாக சமதளம் என்று நினைத்துக் காலை அழுத்திக் கீழே வைத்தவன் அடிக்கடித் தடுமாறினான். நல்ல வேலை தீவர்த்தி கீழே விழுந்து அணையாமல் பார்த்துக் கொண்டான்.

சற்று நேரத்துக்கெல்லாம் மாறன் மனம் அடைந்திருந்த நிலையை அந்த இருண்டச் சுரங்கம் நன்கு பிரதிபலித்தது. ஆகா, கோட்டைச் சுவர் இவ்வளவு அருகில் உள்ளது என்று நினைத்து உள்ளே இறங்கியது தவறு என்று இப்போது நினைத்தான் மாறன்.

அப்புறம் இந்த பாதை தவறென்று தெரிந்தால் இத்தகைய கும்மிருட்டில் எப்படித் தட்டுத் தடுமாறி வெளியேறுவது?

அயர்ந்து போயிருந்தனர் இருவரும். சற்று அமர்ந்து விட்டுச் செல்லலாம் என்று ஒரு இடத்தைத் தேர்ந்தெடுத்தான் மாறன். தீவர்த்தியைச் சொருகுவதற்குச் சுவரில் வளையங்கள் பலவற்றை இச்சுரங்கம் உபயோகத்தில் இருந்த போது ஆங்காங்கே பதித்திருந்தார்கள். அதில் தீப்பந்தத்தைச் சொருகிவிட்டுத் தரையில் அமர்ந்தனர்.

லோகா சுவரின் மீது ஒய்யாரமாகச் சாய்ந்துக் கொண்டு ஓய்வெடுத்தாள். அப்போது அவள் பார்வை மாறனின் மீது பட்டது. எவ்வளவு கரிசனம் கொண்டவன்! கட்டமைந்த தேகமும், களை பொருந்திய முகமும் உடையவன். ஆனால், அவனது முகத்திலிருந்த சுருக்கங்களும், மேகம் மூடியது போல் காட்சி அளித்த முகமும் இந்த இளைய வயதில் அவன் வாழ்க்கை அனுபவங்களினால் பெற்ற முதிர்ச்சியைக் காட்டின. முன்பே, லோகாவுக்கு மாறன் மேல் அதிகமான மதிப்பு இருந்தது. அவளுடைய அந்தரங்கத் தோழிகளிடம் பல சமயம் அவனைப் பற்றிப் பேசி மகிழ்ந்தும் வந்தாள். இப்போது அவளுடைய உயிரை வேறு காப்பாற்றி விட்டான். ''தன் துயர் தீர்க்க உதவிசெய்யக் காட்டுக்கு வந்தானே. இவன் மனமாற அன்பு செலுத்தித் தன்னை வாழ்நாளெல்லாம் நடத்துவான் என்பதில் சந்தேகம் இல்லை'' என்ற முடிவுக்கு வந்தாள்.

'கல்யாணம் ஆகாமல் ஒரு இளைஞனுடன் இரவைக் கழிப்பதா?' என்று முதலில் யோசித்தவள் தற்சமயம் 'யார் என்ன வேணுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். எனக்கு இன்று இருக்கிற இன்பமும் பூரிப்பும் சொல்லி முடியாது. உள்ளுக்குள் எவ்வளவோ எனக்கு ஆனந்தமாயிருக்கிறது. என்னுடைய ஆனந்தத்தை வெளியே காட்டாமல் இருப்பதே கடினமாக இருக்கிறது' என்று நினைத்துக்கொண்டாள்.

தீவர்த்தியை வைத்துவிட்டு அந்த வெளிச்சத்தில் மாறனும் லோகாவைப் பார்த்தான். பழுவூர் இளவரசியின் பிம்பம்கூட சுவரின் மீது அழகாய்த் தெரிந்தது. அந்த வெளிச்சத்தில் அவளுடைய திருமுகத்தை ஏறிட்டுப் பார்க்கத் தயங்கியவன் அவள் நிழலையே ரசித்தான். முகத்தின் ஒவ்வொரு பாகமும் தன்னுடைய பிரத்யேக நிழலை உருவாக்கிக்கொண்டிருந்தது. அப்பெண்ணின் நிழல் வடிவமும் அழகாகத்தானிருந்தது. அதில் கண் இமைகளும், இமை முடிகளும் கூட அழகாக இருந்தன. இதற்குள்ளாக லோகா



வைப் பேணிப் பாராட்டும் 'ஒற்றை மனித ரசிக மகாசபை'யாக மாறிவிட்டான் மாறன். அவள் நடையை ரசித்தான். பாவனையை ரசித்தான். அவளுடைய பேச்சும் சரி, மௌனமும் சரி ஒன்றாய்ச் சேர்ந்து அவனைத் தன்வயமிழக்கச் செய்தன.

இவ்வகையான சூழலில் யாரும் தங்களுக்குள் அன்பைப் பரிமாறி மகிழ்வார்கள் என்றே நினைக்க முடியாது. பூமிக்கு அடியில், காரிருள். பின்னே பகைவர். முன்னே வெளிவரக் கதவேதும் இருக்குமா என்று தெரியாத நிலை. அந்த இளமங்கையின் உள்ளத்திலும் அவ்வீரனின் மனதிலும் அப்படி என்ன ஆனந்தம் குடி கொண்டிருக்குமோ, தெரியாது! எனினும் காதல் இதையெல்லாம் பார்க்குமா என்ன? இனிய பகற்கனவுகளுக்கு ஏற்றாற்போல் இல்லாத இந்தச் சுரங்கத்தில் ஒரு காதல் அரங்கேறியது.

''இரவை எப்படி கழிப்பது?'' என்றாள் லோகா.

''இளவரசி! நீர் என்ன சிறிய குழந்தையா? உமக்கு வேடிக்கை, விநோதங்களைக் காட்டி உற்சாகப்படுத்த?'' என்று அவன் கேட்டான்.

''வேடிக்கை, விநோதமெல்லாம் வேண்டாம். உமது கதையைச் சொல்லுங்கள். மாறனைப் பற்றி முழுவதுமாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் அவளுக்கு. தயங்கிய மாறனைப் பார்த்து ''உமது கதையைப் பிற்பாடு சொல்வதாகத் தட்டிக் கழித்துக் கொண்டு வந்திருக்கிறீர்கள். இப்போதாவது சொல்லுங்களேன். தஞ்சாவூர்க் கோட்டை இன்னும் வெகுதூரத்தில் இருக்கிறது'' என்றாள்.

மடையைத் திறந்துவிட்டது போலிருந்தது மாறனுக்கு. தன் கதையைச் சொன்னான். தன் சோகத்தைச் சொன்னான். தன் தங்கையின் காதலைத் தானே முன் நின்று கெடுத்துவிட்டதைச் சொன்னான். தான் செய்த குற்றத்துக்கு அனுபவிக்கும் தினசரி மரணத்தை சொன்னான். அவன் சொல்லச் சொல்ல அவன் மீது நங்கைக்குக் காதல் மேலும் அதிகமாயிற்று.

''முன்னொரு காலத்தில் நூற்றுக்கணக்கான வீரர்கள் புடை சூழ இந்த நகரத்தில் உலா வருவோம். இன்று அதெல்லாம் இல்லை. அருமைப் புதல்வியை என் தாய் பறி கொடுத்து இப்போது ஐந்து ஆண்டுகளுக்குமேல் ஆகிவிட்டன. இத்தனை காலமும் அவர் உயிர் வாழ முடிந்தது என்றால், அது அவள் என் மேல் கவனம் செலுத்திய காரணத்தினாலேதான். என் வீட்டில் குடிக்கொண்டிருந்த சூனியத்தின் வேதனையை மேலும் அதிகப்படுத்தும்படியாக நான்வேறு வெளியேறி வந்துவிட்டேன்'' என்றான்.

ஒரு நொடி மாறன் தான் சொன்னதைப் பற்றிச் சிந்தித்தான். உண்மையில் இப்போது அவன் நிலை, அவன் சொல்லிய அளவுக்குச் சோகமாக இல்லை என உணர்ந்தான். ''தற்சமயம் எதிர்காலத்தைப் பற்றிக் கொஞ்சம் நம்பிக்கை வருகிறது'' என்று சொல்லிவிட்டு ஓரக் கண்ணால் அவளைப் பார்த்தான்.

பேசிக்கொண்டிருக்கும் போதே உறக்கம் தழுவியது லோகாவை. மாறனின் தோளின் மீது சாய்ந்தாள். அவளை அப்படியே அவன் மடியின் மீது படுக்க வைத்தான். குழந்தையின் மணித் தொட்டிலை ஆட்டுவதுபோல மெல்ல மெல்லக் காலை அசைத்தான். அவளும் படுத்த நொடியில் அசந்து தூங்கினாள். 'தன் இரும்பையொத்த மடி அவளுக்கு மிருதுவான மெத்தையைப் போலிருந்ததா?' என மாறன் வியந்தான்.

மாறன் தீவர்த்தியின் வெளிச்சத்தில் உறங்கும் லோகாவின் முகத்தைப் பார்த்தான். உறக்கத்தில் குழந்தையைப் போலிருந்தது அவள் முகம். பூவின் மெல்லிய இதழ் போன்ற மிருதுவான சரீரத்தையுடைய லோகா தூக்கத்தில் அவ்வளவு அழகாக இருந்தாள்.

'இது என்ன பைத்தியக்காரத்தனம்?' என்று நினைத்தான். இவளோடு பேச ஒரு நாழிகை கிட்டாதா என்று ஏங்கிய காலமுண்டு. ஆனால், நாட்கணக்காய் இவளுடன் இருக்க வாய்ப்புக் கிட்டி விட்டது. தன் நாட்டத்துகுரியவள் நடுநிசியில் யாருமே இல்லாத இடத்தில் தன்னுடன் தனியாக இருக்கிறாள்.தன் மடியில் தான் விரும்பும் பெண் படுத்துறங்குவது என்பது இன்பம் தான். ஆனால், வெகு நேரம் அவனால் அந்தச் சுகத்தை அனுபவிக்க முடியவில்லை. இமை ஒவ்வொன்றிலும் ஒரு கல்லைக் கட்டித் தொங்கவிட்டது போலத் தோன்றியது அவனுக்கு. பல நாட்களானது அவனும் தூங்கி.

உறக்கம் என்ன ஒட்டு வியாதியோ? மடியில் ஒரு தேவியிருக்கும் போதே நித்திரா தேவியும் வந்து அவனை அணைத்துக் கொண்டாள். நித்திராதேவியுடன் போராட முடியாமல் சாய்ந்தான் அந்த மாவீரன். அவனையும் உறக்கம் தழுவவே சுரங்கத்தின் சுவரின் மீது சாய்ந்து தானும் உறங்கிவிட்டான். இரு தேவிமாரின் அரவணைப்பில் சுந்த மாறன் தூங்கினான்.

பீதி நிறைந்த நேரம். பூமிக்கடியில் இருந்தனர். பின்னால் பகைவர். கையிலோ காயம். ஒவ்வொரு நொடியும் அவனை அது பலவீனப்படுத்தியது. பொய்க் கோபம் கொண்ட காதலர்கள் 'கண்ணே என்ன கோபம்? ஏன் பாராமுகம்?' என்று கேட்டுக்



கொண்டிருக்கும் சராசரிக் காதல்களுக்கு நடுவே இது ஒரு விந்தையான காதல்!

❖ ❖ ❖

## அத்தியாயம் தொண்ணூற்று எட்டு

## புதிர் அவிழ்கிறது...!

பனி படர்ந்த மலைப் பிரதேசம் ஒன்றில் இருவரும் தனியாய் இருப்பதாய்க் கனவு கண்டான் மாறன். அவன் மடியில் அவனது ஆருயிர் காதலி லோகா படுத்து உறங்கிக்கொண்டிருந்தாள்.

சுற்றிலும் இயற்கையின் தாண்டவம். வானைக் கிழித்த மலையுச்சிகள். பூமியின் பரப்பளவுக்குச் சவால் விடும் அளவுக்கு மேலே மேக மண்டலம். இருவரும் அமர்ந்திருந்த இடத்தைச் சுற்றிப் பசுமை நிறைந்த புல்வெளிகள்.

அப்போது வெகு தூரத்தில் யாரோ ஒருத்தி ஓடி வருவது தெரிந்தது. இந்தக் காதலர் பிரதேசத்தில் அவளுக்கென்ன வேலை? ஏன் தலை தெறிக்க ஓடி வருகிறாள்?

அவளை அடையாளம் காணும்முன் அவளது வார்த்தைகள் தான் மாறனுக்கு முதலில் எட்டின. ''அண்ணா! அண்ணா'' என்று அலறியபடி ஒரு பெண் பாய்ந்தோடி வந்தாள். அந்தப் பெண் தன் காலஞ்சென்ற தங்கை மணிமேகலை தான் என மாறனால் அடையாளம் கண்டு கொள்ள முடிந்தது.

வந்தவள் மணிமேகலை. தன் ஆருயிர்த் தங்கை. ''அண்ணா! எழுந்திரு. நேரமாகிறது'' என்றாள். சட்டென அதே சமயத்தில் யாரோ அவனைக் குலுக்கி எழுப்பியது போலிருந்தது. திடுக்கிட்டுக் கண் விழித்தான் மாறன். அருகிலிருந்த தீப்பந்த ஒளி மெல்ல மெல்லக் குறைந்து கொண்டிருந்தாலும் அணையவில்லை எனக் கண்டான்.

அவன் மடிமீது அவளுடையக் கரத்தை மடித்துவைத்து இதுவரை குழந்தை போலத் தூங்கிய லோகாவும் திடுக்கிட்டு எழுந்தாள். ஒருவரின் கனவில் இருவரும் அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்த நிலை.

முதலில் எழுந்த மாறன் தன் மடியில் லோகா தன்னை மறந்து தூங்குவதைக் கண்டான். கொஞ்சமும் கவலையோ சங்கோஜமோ

இல்லாமல் அவன் மடியில் தூங்கிவிட்டாளே. அரைத் தூக்கத்தில் உயர்குடிப் பெண்களின் நாணம் குறைந்ததோ, இல்லை வேண்டும் என்றே செய்தாளோ தெரியவில்லை. அவன் மடியில் சாய்ந்த வுடன் உறங்கிவிட்டாள். இப்போது திடீரென விழித்து எழ வேண்டியிருந்தது. 'ச்சீ ஏன் எழுந்தோம்?' என்றிருந்தது மாறனுக்கு. தன் விதியை நொந்தான். 'கற்பனை ஓடத்தில் படகேறி முழுநேரம் பிரயாணம் செய்யும் காதலர்களுக்கு இப்படியொரு வாய்ப்புக் கிடைக்குமானால் எவ்விதம் சந்தோஷப்படுவார்கள்! ச்சீ! நம்மால் இதைக் கூட அனுபவிக்க முடியவில்லையே?'

தூக்க மயக்கத்தில் இருந்த இருவரும் இன்னமும் கொஞ்ச நேரம் ஓய்வெடுக்கலாமென்றால், இதுவரை எவ்வளவு நேரம் தூங்கினோம் என்று தெரியாமல் விழித்தார்கள்.

''சம்புவராயரே இன்னமும் கொஞ்ச நேரம் இருந்துவிட்டு செல்லலாம் அல்லவா?'' என்றாள் லோகா.

''இளவரசி, உம்மைக் கொண்டுபோய் ஊரில் சேர்த்தால்தான் என் கடமை முடியும்''

''ஓகோ அப்போது தான் பரிசையும் கேட்டுப் பெறலாம் என்ற எண்ணமோ? அது சரி, குதிரை மீது, அல்லது யானைமீது பவனி வருவோம் எனக் காத்திருப்பார்கள். இப்படித் தரைக்கு அடியி லிருந்து புழுக்கள் போல வந்தால் என்ன சொல்வார் பிரதமர்?'' என்றாள்

''அவரைப் பற்றி உமக்குத் தெரியாது. கூடச் சென்ற பிராமணன் எங்கே? எடுத்துச் சென்ற குதிரை எங்கே? என்று கணக்குக் கேட்பார்.''

அவள் உடல் குலுங்கச் சிரித்தாள். ''அதற்கு என்ன பழுவூர் லாயத்திலிருந்து நூறு குதிரைகளைத் தரச் சொல்கிறேன்'' என்றாள் லோகா சிரித்தபடி. ''குதிரைகளை நான் கொடுத்துவிடுகிறேன். பின்னர் பிரதமர் உமக்கு என்ன பரிசு கொடுப்பார்?''

''அவர் ஏன் கொடுக்கவேண்டும். பழுவூர்க் குலமல்லவா எனக்கு கடன்பட்டிருக்கிறது?'' என்றான் மாறன்

இதற்குள்ளாக மாறன் மீது அவளுக்குக் குன்றாத பிரியம். குன்றளவுக்கு பிரியம். நுனி நாக்கில் அவன் பெயரை உச்சரிக்கும் போதெல்லாம் சுகமாய்த்தானிருந்தது. அது போலத் தன் மேல் மாறனுக்குக் கொள்ளை ஆசைதான் என்று உள்ளூற ஒரு பெண்ணுக்கே இருக்கும் உள்ளுணர்வால் தெரியவந்தது. அவ்வப் போது அதை சோதித்துப் பார்க்கவேண்டும் என்ற ஆசையும் காதலுடன் கூடி வரும் குறும்பும் ஒன்று சேர்ந்து கொண்டன.



''மீண்டும் மீண்டும் அங்கேயே வருகிறீர்கள். நொந்து நூலாய்ப் போயிருக்கிறது எம் குலம். உம்மைப் போன்ற மாபெரும் வீரரின் செயலுக்கு ஈடாய்க் கொடுக்க என்ன இருக்கிறது அங்கே?'' என்றாள் ஓரக்கண்ணால் பார்த்துக் கொண்டே.

கடுமையான மனிதர்களையே வாழ்க்கை முழுவதும் பார்த்துப் பழகிய லோகாவுக்கு ஆச்சரியம். காட்டில் தன்னைத் தேடி வந்தானே. எப்பேர்ப்பட்ட கஷ்டமான சந்தர்ப்பத்திலும் அவ ளிடம் எவ்வளவு கரிசனம் காட்டினான். ஆகா ஒரு மனிதனுக்குள் இவ்வளவு மென்மையா? அந்த நொடியில் தான். நேசிக்கத் தொடங்கினாள் அவனை. இப்படிப்பட்டவன் தனக்கே வேண்டும் என்னும் எண்ணம் நிமிஷத்திற்கு நிமிஷம் அதிகமாய் வளர்ந்தது. மாறன் பேரில் காதல் கொண்டு அவனையே கல்யாணம் செய்து கொள்ளுவதென்று தீர்மானித்திருந்தாள் லோகா. இராஜகுலத் துக்குப் பெண்கள் தங்களுக்குப் பிடித்தமான ஆண்மகனைப் பார்த்துவிட்டுத்தான் மனதைச் செலுத்துவது என்பது எங்காவது உண்டா? கதைகளிலும் காவியங்களிலும் சித்திரங்களைப் பார்த்து விட்டும், கீர்த்தியைக் கேட்டுவிட்டும் காதல் கொண்ட பெண் களைப் பற்றி அடிக்கடி கேள்விப் பட்டிருக்கிறோம். ஆனால், இந்த மாபெரும் வாய்ப்பு லோகாவுக்குத்தானே கிடைத்திருந்தது.

மாறனும் நேரடியாகப் பேசவில்லை. ''கவலைப்படாதீர் இளவரசி, எனக்கு வேண்டிய ஒரு பொருள் இருக்கிறது, பனைக் கொடி பறக்கும் மாளிகையில். ஆனால், முதலில் உம்மைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு அதன் பின் கேட்டுப் பெற்றுக் கொள்வேன்'' என்றான்.

லோகாவின் அடக்கமும், இனிமை ததும்பிய வார்த்தைகளும் கந்தமாறனைத் தன் வயம் இழக்கச் செய்துவிட்டன. ஒவ்வொரு முறையும் தன் கரிய கண்களினால் அவனை அவள் உற்று நோக்கியபோது, அந்தப் பார்வையின் சக்தியைத் தாங்க முடியாத அவன், தன் பார்வையைத் தரைக்குத் திருப்பினான். மனதில் அவனுக்கு இருந்த ஆசையே அந்தக் குற்ற உணர்வுக்குக் காரணம். அவளது மோகன சௌந்தரியம் அவனை போதைக் குள்ளாக்கிய போதிலும் பின்னர் அவனுள் இருந்த வீரன் தன் இடத்தை நிலைநாட்டினான். 'இந்தப் பெண்ணோ கலியாணம் ஆகாதவள். தனியாக இரவைத் தன்னுடன் கழிக்கிறாள். அவளிடம் எப்படி நடந்து கொள்வது? எவ்வாறு பேசுவது? மனத்தில் காதலை வைத்துக்கொண்டு சாதாரணமாகப் பேசித்தானாகவேண்டும்.'

அவள் மனதில் என்ன எண்ணம் ஓடுகிறது என்பதைத் தெரிந்துக் கொள்ள அவனுக்கு மிகவும் ஆவலாயிருந்தது. ஆண்களுக்கு

அகத்தின் அழகு முகத்தில் தெரியும், கண்ணாடியைப் போல. பெண்களின் இதயமோ கடலின் ஆழம். இல்லை, அதை விடவும் ஆழம்!

பெண்கள் எப்போதும் மனதை மூடி மறைத்துக் கொள்வார்கள் என்று கேள்விப்பட்டிருந்தான் மாறன். அவர்களால் முகத்தில் முறுவல் கொண்டு மனதில் வஞ்சம் வைக்க முடியும். முகத்தில் மோதல் வைத்து மனதில் காதல் வைக்க முடியும்.

தானே முன் சென்று 'லோகா உன்னை நான் காதலிக்கிறேன். என்று சொல்லித் தொலைப்பதற்கு என்ன?' என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டான். ஆனால், அதிலொரு சிக்கல். அவளைக் காப்பாற்றியதால் தான் லாபமடைய நினைக்கிறான் என்று அவள் நினைத்துவிட்டால்?

காதலைப் பற்றி வர்ணிப்பதற்கு அதை அனுபவித்து பார்க்காத ஆயிரம் கவிஞர்களின் கற்பனாசக்தி போதாது. ஆனால், காதலைச் சந்தித்த பின்பே சாமானியரும் கூடக் கவிதை எழுதத் தொடங்கியிருப்பார்கள் என்பதில் ஐயம் இல்லை. காதலென்பது மனிதர்களுக்கு தெய்வம் கொடுத்திருக்கும் ஒரு வரப்பிரஸாதம். மனித ஜன்மம் எடுத்தவர்கள் ஒரு முறையாவது காதலித்துப் பார்க்க வேண்டும். மதி படைத்தவர் வாழ்நாளில் ஒரு முறையாவது மயங்கவேண்டும் இந்தக் காதலில். கள் கொடுக்கும் மயக்கம் கால் தூசு பெறாது. என்பது போலான எண்ணங்கள் மாறனின் மனதில் ஓடின.

அடியான் இங்கிருந்தால் என்ன சொல்லியிருப்பான்? "முதியோர்கள் நமக்குச் செய்த உபதேசத்தையெல்லாம் மறந்து விட்டோம்! பெண்களின் மோகத்தைப் போல் உலக வாழ்க்கையில் பொல்லாத மாயை வேறொன்றுமில்லை" என்றிருப்பான்.

மாறன் நினைத்துக்கொண்டான் 'வாழ்க்கையில் வெற்றி பெற விரும்புவோன் பெண்களின் மோக வலையில் விழவே கூடாது. விழுந்தால் அவன் ஒழிந்தான்!' என்று சொன்ன அடியான் இப்போது எம்மைப் பார்த்தால், ரத்தம் கொதித்துக் 'குய்யோ முய்யோ' என்று குதிப்பது நிச்சயம்.'

மாறன் நிலைமையை சுதாரித்துக் கொண்டான். எதிரி பாண்டியனல்ல. இரவு பயந்தாற்போல எதிரி ஒரு மாய சக்தியல்ல. தற்போதைய எதிரி தனக்குத் தோன்றிய காதல்தான். அதுவே வேகத்தையும் குறைக்கும், விவேகத்தையும் குலைக்கும். அவனுடைய சமூகத்தில் அறிவு மங்கியது, மயக்கம் ஆட்கொண்டது மாறனுக்கு. ஐயோ! இது என்ன பயங்கர அபாயம்!



"இப்போது இந்தச் சல்லாபம் போதும் எழுந்திரு. வெளியே செல்லும் வழியைப் பார்ப்போம்" என்று அவசரப்படுத்தினான். இருவரும் நடையைக் கட்டினார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் அவர்கள் போய்க் கொண்டே இருப்பது போலிருந்தது. கணக்கிட்டதைவிட வழி சற்று அதிகமாக இருந்தது. முதலில் அவர்கள் நினைத்தது அய்யனார் கோயிலைத் தாண்டி அகழி. அதை தாண்டிக் கோட்டை மதில். அப்புறம் சுரங்க வழி திறக்குமென்று. அது சரியாய் இருந்தால் இந்தச் சுரங்கம் இதற்குள்ளாக ஊருக்குள் சென்றிருக்குமே? ஆனால், சுரங்கம் முடிந்த பாடில்லை.

"இந்த இருட்டில் நம்மை சுற்றிச் சுற்றி அழைத்துச் செல்கிறதோ என்னவோ?" என்ற எண்ணம் வந்தது.

தஞ்சையைச் சுற்றி எங்கும் களிமண். பாறையென்றால் குடைந்து சுரங்கம் செய்ய எளிது. குடைந்த பின் சுவர்களும் உட்கூரையும் தானாக நிற்கும். ஆனால், களி மண்ணில் ஆங்காங்கே யந்திரங்கள் வைக்க வேண்டும். ஆனாலும், இதில் ஒரு அதிர்ஷ்டம் கட்டுபவனுக்கு. வேண்டுமென்றபடி சுரங்கத்தை அமைத்துக் கொள்ளலாம். நடப்பவனுக்கே தெரியாமல் ஆற்று வளைவைப் போல் சுரங்கத்தை அமைக்கலாம். உள்ளே செல்பவன் சுற்றிச்சுற்றி அலைய நேரிடும்.

மாறன் அருகிலிருந்ததால் லோகா இந்த கும்மிருட்டிலும் பயப்பிராந்திக் கொண்டவளாகத் தெரியவில்லை. ஒரு கையில் வாளும் ஒரு கையில் தீப்பந்தமும் ஏந்தியபடி அவன் முன்னேற, அவனது நிழலை விட்டு அகலாமல் அவளும் சென்றாள்

ஆனால், மெல்ல மெல்ல நல்ல உறக்கத்துக்குப்பின் லோகாவுக்குப் பசித்தது. " சம்புவராயரே, நான் கடைசியாகக் காட்டில் சாப்பிட்டது தான். அதுவும் வேண்டா வெறுப்பாகச் சாப்பிட்டது. இப்படி ஓடிப் போகப்போகிறோம் என்று தெரிந்திருந்தால் நன்றாய் மூக்கைப் பிடிக்கச் சாப்பிட்டிருப்பேன்" என்றாள்.

லோகா இப்போது அதிருப்தியுடன் முணுமுணுத்துக் கொண்டிருந்ததை மாறன் பார்த்தான். இதெல்லாம் என்ன விபரீதத்தில் போய் முடிகிறதோ என்று கவலைப்பட்டுக் கொண்டே சென்றவனுக்கு உணவு தான் கடைசிப் பிரச்சனையாய்த் தோன்றியது. ஆனால், லோகாவுக்கு உணவைத் தவிர வேறு ஏதும் இப்போது தோன்றவில்லை.

"இப்படி உணவில்லாமல் இருந்தால் நாளைய தினம் நம்முடைய வாழ்நாள் முடிந்துவிடும்" என்றாள்.

''இல்லையில்லை! பசியால் சாக ஒரு வாரமாவது ஆகும்'' என்று அவன் ஆறுதல் சொன்னான்.

''இப்படி நம்மை பட்டினிக்குள்ளாக்கியது இந்தப் பாண்டியர் படை. சம்புவராயரே! விசித்திர சித்தரான உமக்கு இந்திர ஜால வித்தையேதும் தெரியாதா? ஏதாவது உணவைத் தயாரித்துக் கொடுங்களேன். ஓர் ஆழாக்கு அரிசியோ, ஒரு பிடி கம்போ இருந்தால் கூட போதும் எனக்கு'' என்றாள்.

''இன்றைக்கு இருக்கும் நிலையில் வெளவால் பொரியல் வேண்டுமானால் தருகிறேன். அது கூட இந்த இருட்டில் அவற்றைப் பிடிக்க முடியுமா என்று தெரியவில்லை'' என்றான்.

''காட்டிலேயே இருந்திருந்தால் யாரேனும் யூகித்துத் தேட வருவார்கள். ஆனால், இங்கு நாம் இருக்கிறோம் என்று யாருக்குத் தெரியும்? ஒருவேளை வெளிசெல்லவே முடியாமற் போய் விட்டால்?'' என்றாள்.

''தட்டுத் தடுமாறி வந்த வழியே சென்றுவிடுவோம்'' என்று நம்பிக்கையுடன் கூறினான் மாறன். ஆனால், அவன் குரலில் சந்தேகமிருந்தது. 'இவ்வளவு வளைவு சுழிவுகளைக் கடந்தல்லவா வந்தோம். நம்மால் அய்யனார் கோயிலுக்குத் திரும்பிச் செல்ல வழியை கண்டுபிடிக்க முடியுமா?' என்ற சந்தேகம்.

மேலும் தொடர்ந்தான் ''வீணாக நொந்து கொள்ளாதே! எப்படிப் பட்ட சுரங்கப் பாதைகளுக்கும் இரு வழிகள் இருக்கும். இரு பக்கமும் வழியில்லையென்றால் பின் சுரங்கத்தின் பயன்தான் என்ன? ஓரிடத்திலிருந்து மற்றும் ஒரு இடத்துக்கு யாருக்கும் தெரியாமல் இட்டு செல்வதற்கே சுரங்கத்தைப் பெரும் செலவில் கட்டுவார்கள். முற்றுகைக்கு உள்ளானவர்கள் பசி, பட்டினிக்கு ஆளாகி மடிவதுண்டு. அப்போது உணவை உள்ளே கொண்டு செல்வதற்கும், பல சமயம் அரசரை வெளியே கொண்டு வருவதற்கும் தான். முற்றுகை வெகு நாட்களாய்த் தொடர்ந்தால் எதிரியிடம் சரண் அடையாமல் அரசர் வெளியேறிப் போரை எதிரியின் பின்பக்கமாய் தொடங்கலாம் அல்லவா?

ஆனால், மாறனுக்கும் மனதுக்குள் ஒரு பயம். இது நிச்சயமாக சோழர்காலத்தில் கட்டப்பெற்ற சுரங்கம் இல்லை. அதற்கு முன் தஞ்சையை ஆட்சி புரிந்த முத்தரையர் காலத்தில் கட்டப்பெற்றது என்று தெரிந்தது. பின்னால் வந்த சோழர்கள் யாரேனும் தெரியாமல் ஒரு வாசலுக்கு மேலே ஏதாவது கட்டடத்தைக் கட்டியிருந்தால் வெளியே செல்ல முடியாது.



சுரங்கத்தின் விளிம்பைத் தொட்டுக் கொண்டு போய்க் கொண்டிருந்த லோகா சுவர்ப்புறத்தே கையை வைத்துத் தடவிச் சென்றாள். அதில் முத்து முத்துக்களாய் நீர்த் துளிகள் இருந்தன. பனியின் குளுமை அதிலிருந்தது. ''அப்பா இந்த இருளுடன் சேர்ந்து நம்மை சூழ்ந்திருக்கும் நீரும் கொல்கிறதே'' என்றாள் லோகா.

நடந்து வந்த மாறன் திடீரென நின்றான். ''இது என்ன கருத் திருமனின் கவிதையில் உபயோகிக்கப்பட்ட அதே வார்த்தைகளை இவளும் பயன்படுத்துகிறாளே?'' என்று அவன் யோசித்தான்.

அவன் பந்தத்தை உயர்த்திப் பிடித்தான். சுவரெங்கும் நீர்த் துளிகள். சுரங்கமே வேர்த்தது போலிருந்தது. வடவாற்றின் தரை மட்டத்தை விட அந்தச் சுரங்கம் கீழே இருந்தபடியால் சுவரெல்லாம் தண்ணீராயிருந்தது. சுவர்மட்டுமல்ல. உட்கூரையும் தரையும் கூட ஈரமாயிருந்தது.

லோகா ''உமக்குப் புரியவில்லையா சம்புவராயரே. நாம் இப்போது கோட்டையின் அகழிக்கு நேர் அடியில் இருக்கிறோம். இதைத் தாண்டியவுடன் வேங்கையின் காலடியை அடைந்து விடுவோம்'' என்றாள்.

மாறன் சட்டென உறைந்தான். அவன் செவிகளில் அவளது வார்த்தைகள் விழுந்தவுடன் புரியாத உணர்வுகள் ஏற்பட்டன.

''அதுவும் புரியவில்லையா? கோட்டைக் கொத்தளத்தில் பறக்கும் கொடியில் இருக்கும் வேங்கையின் அடியில் சென்று விடுவோம்'' என்றாள்

மாறனுக்குப் போர்க்களத்தில் நிராயுதபாணியாக நிற்கும்போது மறைமுக எதிரி சரமாரியாக அம்புகளை எய்து தாக்கியது போல் ஒரு உணர்வு. 'இது என்ன? தரைக்கு அடியில் தள்ளிவிட்டு விதி விளையாடுகிறது?'

உண்மையில் அந்த வார்த்தைகள் அவன் செவி வழியாக மூளைக்குச் சென்று அங்கேயும் ஒரு தீப்பந்தத்தை ஏற்றியிருந்தது. கையிலிருந்த வலியினால் அவனது மனம் ஏற்கனவே தெளிவாய் இருந்தது. மற்ற எல்லா நினைப்புகளும் அகன்றன. ஏதோ விதி வசத்தால் இந்தப் பெண்ணின் வார்த்தைத் தொடர் நமது புதிர்களைப் பந்தாடிவிடுமோ?

பாதிப் புதிரைக் கட்டவிழ்த்தவள்தான் மீதியையும் சொல்ல வேண்டும். லோகாவை நோக்கி ''இந்த சுரங்கத்துக்குள் இருட்டு எப்பொழுதும் இருக்கும். ஈரப்பதமும் இருக்கும். இன்னும் ஒன்று சொல்லேன். ஏதாவது இடத்தில் மற்ற இடங்களைவிடத்

தாமதமாகச் சூரியன் எழுமா? அப்படிப் பட்ட இடமேதும் உனக்குத் தெரியுமா?''

''என்ன சம்புவராயரே, கிண்டல் செய்கிறீரா?'' என்றாள் லோகா பதிலுக்கு.

''ஆம். நானும் அப்படித்தான் நினைத்தேன். அப்படி இடம் ஒன்றும் இல்லை'' என்று சமாளித்தான் மாறன்.

லோகா அதற்கு, ''நான் அதைச் சொல்லவில்லை. பல மாத காலமாக தஞ்சையில் வாழ்ந்துவிட்டு இது கூடத் தெரிய வில்லையே என்று தான் கேட்டேன்'' என்றாள்.

அவன் அப்போது முன்னைவிட அதிகப் பரப்பரப்புடனே, ''தேவி! இது என்ன? எதைப்பற்றிச் சொல்கிறீர்கள்? '' என்று கேட்டான்.

''தஞ்சைக்கோட்டைக் கொத்தளங்களுக்குப் பின்னால் சூரியன் உதிக்கச் சற்று நேரமாகும். உமக்கு தெரியாதா? நம் கோட்டைக் கொத்தளங்களினால் உதயம் நமக்குத் தெரியத் தாமதமாகும். சூரியன் இங்கு எட்டிப் பார்க்கும் முன், நல்ல இருட்டில் நம் சேவல்கள் கத்திவிடும் என்பதை நீர் கவனித்ததில்லையா?'' என்றாள். ''அது ஏன் தெரியுமா? கோட்டைக்கு வெளியே அவற்றின் சொந்தக்காரச் சேவல்கள் சூரியனை இவற்றுக்கு முன்னால் பார்த்துக் கத்திவிடும். அதற்குப் போட்டியாக இவையும் இரவில் கூவும்'' என்றாள்.

மாறனின் உடலில் ரோமங்கள் எழுந்து நின்றன. இந்தப் பெண்ணின் வாயிலிருந்து உதிர்த்த வார்த்தைகள் நூறாண்டு காலக் கேள்வியைக் கட்டவிழ்த்து விட்டனவோ என்னவோ?

''அதெல்லாம் இருக்கட்டும். என் அறிவைப் பரீட்சிக்கிறீர்களா என்ன சம்புவராயரே? இப்படிக் கேள்வி கேட்டுக் கொண்டிருந் தால் நாம் சென்று சேர்ந்தால் போலத்தான். கேள்விக் கணைகள் தீர்ந்தனவா. இல்லை வேறு ஏதேனும் உண்டா?'' என்றாள்

''இன்னமும் கேள்வி ஒன்று தான். அரக்கர் ஆண்ட நாடு ஏதேனும் இப்பிராந்தியத்தில் உள்ளதா?''என்றான்.

கலகல வென்று வாய்விட்டுச் சிரித்தாள் பழுவூர் இளவரசி. ''சம்புவராயரே! நீர் கடம்பூரிலேயே வளர்ந்து ஒன்றும் தெரியாமல் இருக்கிறீர். நம் தஞ்சைக்கு எப்படி பேர் வந்தது என்று நினைக்கிறீர்? தஞ்சகன் என்னும் அரக்கன் ஒருவன் உருவாக்கிய பிரதேசம் இது. அதனால் தான்'' என்றாள்.



மாறன் சட்டெனத் தரையில் அமர்ந்தான். கடைசிப் பூட்டும் திறக்கப்பட்டுவிட்டது. மாறனுக்குப் புது நம்பிக்கை பிறந்தது. அதற்கு முக்கியக் காரணம் இன்னும் கூட ஒன்று. சாகும்போது சாபம் போலக் கருத்திருமன் சொன்னது தான்.

''ஒரு பெண்ணே அந்த பாண்டிய நாட்டுப் பொக்கிஷத்தைக் கண்டு எடுப்பாள் என்றான் அல்லவா. தற்சமயம் அருகிலிருந்தது, உனக்கு வேண்டுமானால் தேவதையாய் இருக்கலாம். உலகுக்கு அவள் பெண் தானே?''

❖ ❖ ❖

## அத்தியாயம் தொண்ணூற்று ஒன்பது
## பாண்டியப் பொக்கிஷம்!

அசுரன் முன்னம் ஆண்டிருக்க
நீரும் இருளும் சூழ்ந்திருக்க
ஆதவன் சற்றே தாழ்ந்திருக்க
வேங்கையின் காலடியில் வேந்தன்முடி!

சாகும் முன்னர் அந்தக் கருத்திருமன் பரிசளித்த விடுகதைக் கவிதையே திரும்பத்திரும்ப மாறனின் தலையில் முரசொலி போல ஒலித்தது. இப்படி ஒவ்வொரு வரிக்கும் உள்ள அர்த்தம் இந்தப் பாதாளச் சுரங்கத்துக்கு பொருந்துகிறதே. அது எப்படி?

அதிலும் விந்தையோ விந்தை. பாண்டியனின் ஆருயிர் நண்பனின் இருப்பிடத்தைக் குறிக்கின்றது அந்தக் கவிதையென்று எண்ணினால், அதற்கு நேர்மாறாக அவனுடைய பரம எதிரியின் கோட்டையை அல்லவா இப்போது அக்கவிதை குறிக்கின்றது? இந்த இருள் தன்னைப், பைத்தியமாக ஆக்கப் பார்க்கிறதா?

இந்தக் கவிதைக்கு அர்த்தம் தெளிவாக இருக்கிறது என்றுதானே ஈழத்துக்கு அவ்வளவு தூரம் எல்லோரும் சென்றோம். அது கிடைக்காமல்தான் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டு திரும்பினோம். அந்த கவிதை சுட்டிக் காட்டும் இடத்தைத் தேடிப்பிடிக்க உயிரைப் பணயம் வைத்தவர் எவ்வளவு பேர்? ஆனால், இப்போது அந்தக் கவிதை, ஓரிடத்தையல்ல, பலவிடங் களுக்கும் பொருந்தும் போலவே? ஆனால் ஒன்று. சாகும் தறுவாயில் கருத்திருமன் சொல்லிச் சென்றது போல இன்று ஒரு

பெண்ணின் நாவிலிருந்து அந்தக் கவிதைக்குப் புதியதொரு விளக்கம் கேட்க நேர்ந்தது.

"மாறா! நன்றாய் மூளையைச் செலுத்தி யோசி! இதில் ஏதோ முக்கியமான குறிப்பு ஒன்று ஒளிந்திருக்கிறது" என்று எச்சரித்தது அவன் மனம்.

'சூரியனுடைய செங்கதிர்கள் தாமதமாய் வரும் கோட்டைக் கொத்தளம் சூழ்ந்த பகுதியாய்த் திகழ்ந்தது தஞ்சை. அதை ஆண்ட வேங்கைக் கொடி கொண்டோனின் காலடியில்தான் இந்த சுரங்கம் இருந்தது. உண்மையில் இந்த வேங்கையாம் சோழனின் காலடியில் இருந்த இருள் சூழ்ந்த ஈரச் சுரங்கத்தைப் பார்த்தே அந்த கவிதையைப் பாண்டியன் எழுதினானோ என்னவோ? சோழனுக்கு அடிபணிந்த ஈழம் என்று எண்ணினோமே. செங்கதிர்த் தேவன் படாத இடமிது. இலங்கையின் நிழல் படிந்த காடுகள் என நினைத்துப் பல ஆண்டுகள் தேடினோமே. எவ்வளவு உயிர்கள் அதில் பலியாயின? இரவு பகல் அறுபது நாழிகையும் இருட்டாகவே இருக்கும் நாடிது. அதுவும் இதுவே உண்மையாக நீர் சூழ்ந்த பகுதி. ஈழத்தீவுக்குக் கூட நாலு பக்கம்தான் நீர். இங்கு ஆறு பக்கமும் நீர்- உட்கூரையையும் தரையையும் சேர்த்து. இந்தச் சுரங்கத்துக்கு சுற்றியுள்ள சுவர்களில் எல்லாம் வேர்வைத் துளிகள் போல நீர். அதுவும் தஞ்சையை முன்பொருகாலத்தில் அரக்கன் ஆண்டானாம். இதுவரை நமக்குத் தெரியாதே; அரக்கன் என்றவுடன் நாம் இராவணனையல்லவா நினைத்தோம்?'

ஆகா! நாம் எல்லாம் நினைத்ததை விட இவ்விடமே ஈழத்தை விட அந்த கவிதைக்குப் பொருந்தும் போலிருக்கிறதே! இந்தப் பெண்ணுக்குத் தோன்றியது அநிருத்தர் போன்ற மாமேதைகளுக்கு கூடத் தோன்றவில்லையே. அல்லும் பகலும் அலைந்து திரிந்து அந்த விடுகதையின் சொல்லும் பொருளும் அறிய ஒரு நூறாண்டுக்கு மேதைகளெல்லாம் முயற்சித்துக் கொண்டிருக்கும்போது ஒரு பெண் அந்த முடிச்சை அவிழ்த்துவிட்டாளா? இல்லை, இன்னமும் வேறேதாவது இடத்தை அந்தக் கவிதைக் குறிக்கின்றதா? அடுத்த சில நிமிடங்களே விடையளிக்கும்.

விடையை அறிய ஆர்வம் மட்டுமல்ல, ஏதோ ஒரு மறைமுகச் சக்தி மாறனை ஒரு உத்வேகத்துடன் இட்டுச் சென்றது. அவன் கையில் தீப்பந்தம் இருக்கவே லோகாவும் அவன் பின்னால் சென்றாள். பாதை குறுகிக் குறுகி வந்து கடைசியில் திடீரென ஒரு பெரிய இடத்துக்கு அவர்களை இட்டுச் சென்றது.



அவ்விடத்தில் ஒரு சதுரமான மண்டபம் தெரிந்தது. மண்டபத்தின் சுவர்களிலே ஒரு காலத்தில் சிறப்பாய் இருந்திருக்கும் சித்திரங்கள் எல்லாம் இப்போது நிறம் மங்கிப் போயிருந்தன. அவையெல்லாம் தீபந்தத்தின் ஒளியில் மங்கலாகக் கண்ணுக்குப் புலனாயின. உயிர்பெற்றது போல் தாண்டவமாடி பல நாள் கழித்து வந்த விருந்தினரை அவை வரவேற்றன.

மண்டபத்தின் முகப்பில் இருவரும் சிலைகளைப் போல் அசையாமல் நின்றனர். ஒரு வேளை ஏதோ கட்டடத்தின் கீழ் உள்ள அஸ்திவாரப் பகுதியை நிலவறையாய் மாற்றியிருப்பார்கள் போலும். ஆனால், தரைக்குக் கீழ் ஏன் இவ்வளவு முயற்சி?

மீண்டும் இருவருமாக அந்த அறையை உற்றுப் பார்த்தனர். இந்தச் சுரங்கத்துக்குள் எவ்வளவு பெரிய அறை. எவ்வளவு பிரம்மாண்டமான கதவு. இதற்கு எவ்வளவு பெரிய பூட்டு! அப்பப்பா! இதற்கெல்லாம் என்ன அர்த்தம்?

உள்ளே இருக்கும் பொருள் விலை உயர்ந்ததாய் இருக்க வேண்டும். இல்லையென்றால், இவ்வளவு சிரமம் எடுத்து இந்த அறையை உருவாக்குவானேன்? அறைக்குள்ளே புகுந்து பார்க்க வேண்டியதுதான்!

நாலா பக்கமும் நிசப்தம் நிலவியது. சற்று நேரத்துக்கெல்லாம் மாறன் முற்றிலும் மாறிப்போய்விட்டான். லோகா அருகே நிற்பதைக் கூட மறந்தான் போலும்! "இது தான் விடையென்று என் மனத்தில் ஏனோ நிச்சயமாகத் தோன்றுகிறது" என்றான் சம்புவராயன்.

"சம்புவராயரே. எதற்கு விடை?" என்றாள் லோகா. அவளுக்கு அவன் வெளியே செல்ல வழி கண்டுபிடித்துவிட்டான் என்ற நினைப்பு.

"பெண்ணே, நீ நெடு நாளாய் யாருக்கும் விளங்காமலிருந்த ஒரு விடுகதைக்கு பதில் கொடுத்திருக்கிறாய். உன் பதில் சரியாய் இருந்தால் பாண்டிய நாட்டு மணி மகுடம் நம் கையில் இன்னும் சில நிமிடங்களில் கிட்டும். அந்த சூட்சுமத்தை முழுவதுவும் கட்டவிழ்த்துவிட்டாயா என்பது இன்னமும் விரைவில் தெரிந்து விடும்" என்றான்.

அவளுக்கும் ஆர்வம் பிறந்தது. "அப்படியானால், அதைப் பரீட்சித்துப் பார்த்துவிடலாம், சம்புவராயரே" என்றாள்.

நடுங்கிக் கொண்டிருந்த அவன் கை இப்பொழுது நிதானமாய் நிற்க முடியாமல் தள்ளாடியது. தீப்பந்தம் நடுங்கியதில் சுவரில்

நிழல்கள் ஆடின. தீப்பந்தத்தை அவளிடம் ஒப்படைத்துவிட்டுப் பூட்டியிருந்தக் கதவை திறக்க முற்பட்டான்.

வெறும் கைக்கு அந்த நூறாண்டுப் பூட்டு அசையாமல் இருக்கவே, லோகாவைத் தள்ளி நிற்கச்சொல்லி, அய்யனார் வாளைத் திருப்பி கைப்பிடியால் பூட்டை ஒரு தட்டுத் தட்டினான். அது நொறுங்கியது. பெரும் சப்தத்துடன் தரையில் விழுந்தது.

இனி அந்தப் புதிரின் விடைக்கும் அவனுக்கும் இடையே அந்த கதவு மட்டும்தான் இருந்தது. கை நடுநடுங்க அந்த கதவைத் தள்ளினான். கிரீச் என்று கதறிய கதவைத் திறந்தான் மாறன். உள்ளிருந்து ஒரு தூசு படிந்த ஈரக்காற்று வெளியேறியது.

மாறனது நெற்றியில் வியர்வை துளிர்த்து நின்றது. மீசை துடி துடித்தது. கை கால்கள் வெடவெடத்து ஆடின. நெற்றி வியர்வை யைத் துடைத்துக் கொண்டு திரும்பி லோகாவைப் ஒரு முறை பார்த்துவிட்டு உள்ளே காலடி எடுத்து வைத்தான்.

அந்த அறையின் கதவு இலேசாகத் திறந்தவுடன் இருவருடைய நெஞ்சமும் படபடவென்று அடித்துக் கொண்டன. ஒரு நூறாண்டுக்கு பின், முதன் முறையாக அந்த அறையில் வெளிச்சம் பரவியது. இவர்களது அசைவுகளை பயங்கரமாக உருவெடுக்கச் செய்தது தீப்பந்தத்தின் நிழல்.

அந்த அறைக்குள் புகுந்தான் மாறன். அறையில் கால்வைக்கவே இடமில்லை. கத்திகளும், கேடயங்களும், வாள்களும், வேல் களும், ஈட்டிகளும், சூலங்களும், வில்களும், அம்பறாத் தூணி களும். இன்னும் விதவிதமான விசித்திர ஆயுதங்களும் குவிந்து கிடந்தன. போரில் உபயோகம் காணாது இன்று துருப்பிடித்த இன்னும் எத்தனையோ ஆயுதங்களும் மற்ற கருவிகளும் அங்கே இருந்தன. இத்தனை ஆயுதமும் இங்கிருக்க என்ன அவசியம்? எதோ ஒரு பொருளைக் காத்திடச் சந்தர்ப்பம் எழுந்தால் உதவியாயிருக்கும் என்று வைத்திருந்தனரோ?

மாறன் தீப்பந்தத்தை மீண்டும் வாங்கிக் கொண்டான். இங்கும் அங்குமாய் அதைத் திருப்பி அறையைத் தேடலானான். அறையின் பின் பக்கச் சுவரில் மேடைகள் அமைத்திருந்தனர். அதில் பல செப்புப் பாத்திரங்கள் இருந்தன. காலால் ஆயுதங்களை ஒதுக்கி விட்டு முன்னால் சென்று அவற்றை ஆராய்ந்தான் மாறன்.

தீவர்த்தியின் ஒளியில் ஒரு மின்னல் அடித்தது போலிருந்தது. அதனுள்ளே குவியல் குவியலாக ஜாஜ்வல்யமான ரத்தினங்களும், கோமேதகங்களும், வைரங்களும், மரகதங்களும் பிரகாசித்துக் கொண்டிருந்தன. தீப்பந்த வெளிச்சத்தில் இந்தச் செல்வ



மெல்லாம் அந்தச் சுரங்கத்தை ஒரு மாயாபுரியாக ஆக்கிக் கொண் டிருந்தன.

இந்தப் பொக்கிஷமெல்லாம், லோகாவை ஒரே ஆச்சரியக் கடலில் ஆழ்த்தியிருந்தது. அவற்றையெல்லாம் அவள் பார்த்துப் பார்த்து மெய்மறந்து நின்றாள். பெரும் செல்வந்தர் குடும்பத்தில் பிறந்திருந்தாலும் இவ்வளவு செல்வத்தை ஒன்றுசேர்ந்து அவள் பார்த்ததில்லை. ''பரவாயில்லை, இனி செத்தாலும் செல்வந்தராய் சாகலாம்'' என்றாள் லோகா

ஆனால், மாறன் அவளுடைய வார்த்தைகளையெல்லாம் பொருட்படுத்தவேயில்லை. ''பாண்டிய நாட்டின் வளமெல்லாம் இங்கு கொண்டு வரப்பட்டபோது, அந்தப் பொக்கிஷமும் இங்கு தானிருக்கவேண்டும்'' என்றான்.

தீப்பந்தத்தை வேறு திசைக்குத் திருப்பினான். அந்த மேடையின் பின்னே ஒரு துவாரம் தெரிந்தது. அந்த சதுர வடிவ துவாரத்தில் ஒரு பெட்டியிருந்தது. அந்த பெட்டகத்தின் முன்புறத்தில் வந்து நின்று அதன் மேலிருந்த மீன் சின்னத்தைப் பார்த்த மாறனுக்கு உடம்புப் புல்லரித்தது.

அவர்கள் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. லோகாவோ சற்றும் அசையாமல் தன் கண் முன்னால் என்ன தோன்றப் போகிறதோ என்ற ஆர்வத்துடன் பார்த்தாள். பொன்னையும் மணியையும் தரையில் கொட்டிவைத்தவர்கள், எதோ ஒன்றைப் பூட்டி வைக்கவேண்டும் என்று நினைத்தால், அதன் மதிப்பு என்னவாயிருக்கும்?

பெட்டகத்தைத் திறக்க நடுக்கத்துடன் ஆடிக்கொண்டிருந்த கையை நீட்டினான். மனம் சிறிது கலங்கியிருந்தது. தோல்வி அவனைப் பாதாளத்திலும் பின் தொடருமோ? அடுத்த கணத்தில், ஒரு சப்தத்துடன் கதவு திறந்தது. தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்தான். காண்போர் கண்களையும் உள்ளத்தையும் ஒருங்கே கவர்ந்து பரவசப்படுத்திய அந்தக் கிரீடம் அவர்கள் எதிரில் ஜொலித்தது. அத்துடன் அந்த ரத்தினஹாரமும் பிரகாசித்தது. இருவரும் அதைக் கண்ணிமையாது கண்டனர். சிறிது நேரம் செயல் இழந்து ஸ்தம்பித்து நின்று விட்டனர். வாயடைத்துப் போய் மௌன மாயினர். மூச்சுச் சத்தங்கூட அச்சமயம் அடங்கி நின்று போயிருந்தது.

பல கிரீடங்களை மாறன் கண்டிருந்தான் இதுவரை. ஆனால், இதில் வித்தியாசமாக முத்துவரிசைகள் தொங்கிக் கொண்டிருந்தன. கொற்கை முத்துகளுக்கு பெயர்போனது அல்லவா பாண்டியநாடு?

அழகிற்குப் பெயர்போன பாண்டியர்களின் கலை கூட அந்த கிரீடத்தின் மோகன வடிவத்தை செய்திருக்கமுடியாது. நிச்சயமாக மனிதன் ஒருவன் அதை உருவாக்கியிருக்கவே முடியாது என்ற முடிவுக்கு வந்தனர். இருட்டிலேயே என்ன அழகு! இருள் படிந்த அறையில் தீப்பந்த ஒளியிலேயே என்ன ஜொலிப்பு! இதுவே அலங்கரிக்கப்பட்ட அரண்மனை அறையில் எப்படி இருக்கும்? அதை அணிந்த பாண்டிய மன்னனுக்கு அவனது மக்கள் எவ்வித விசுவாசத்தை காட்டுவார்கள்? அதன் முக்கியத்துவம் மாறனுக்கு இப்போது முழுமையாகப் புரிந்தது.

இருவரும் கண் கொட்டாமல் அதையே பார்த்திருந்தனர். "இது உண்மையில் நடப்பதுதானா?" என்று சந்தேகித்துச் செயலிழந்து நின்றனர்.

"உயிருடன் மட்டுமாவது தப்பிக்கலாமா என்று ஏங்கியபோது விதி தங்களுக்கு அளித்திருக்கும் சூசகந்தான் என்ன?" என்று புரியாமல் நின்றனர். தோல்விக்கு இடையே மாபெரும் வெற்றியா? நூறு ஆண்டு காலமாக சோழர் தேடிக்கொண்டிருந்த மணிமகுடத்தை இளம் சம்புவராயன் கண்டு பிடித்துவிட்டான். சரித்திரத்தில் இடம் பிடிக்க எண்ணியவன் சரித்திரத்தையே மாற்றியமைத்துவிட்டான்.

லோகாவுக்கோ அதிசயத்திலும் அதிசயம். அரசியல் என்பது மெதுவாக நகரும் நிகழ்வுகளின் தொடர் என்று எண்ணியவளுக்கு இப்படி அதிவேகத்தில் காரியங்கள் நடப்பது பெரும் ஆச்சரியத் தைக் கொடுத்திருந்தது.

அந்தக் கிரீடத்தைக் கையில் எடுத்து லோகா பார்த்துக் கொண்டிருந்தாள். "எவ்வளவு அழகாக இருக்கிறது?" என்று பெண்களுக்கே தங்கத்தின் மீது இயற்கையாக இருக்கும் ஆர்வத்தை வெளிக்காட்டினாள் லோகா.

"இதை அணிந்த முதல் நபரும் பெண் தான்" என்றான் மாறன்.

"யாரது?"

"மீனாட்சிதேவி கடவுளைச் சொன்னேன்" என்றான் மாறன்.

உடனே தெய்வக் குற்றத்துக்குப் பயந்து பயபக்தியுடன் இருந்த இடத்திலேயே அதை வைத்துவிட்டாள் லோகா.

மாறன் அதைக் கண்டு சிரித்துவிட்டு "இளவரசி, ஒரு நூறாண் டாகச் சோழர் தேடியது அவர்கள் காலடியில் இருந்திருக்கிறது. இது மீனாட்சி தேவியே அணிந்த மணிமகுடம். இது தேவேந்திரன்



கொடுத்த ரத்தின ஹாரம். அதிர்ஷ்டம் என்றால், இதுவல்லவா அதிர்ஷ்டம்!" என்றான்.

உண்மைதான். இந்த நகைகள் அழகுக்கு மட்டும் பிரசித்த மானவை அல்லவே? சரித்திரத்தில் பிரபலமானவையும் கூட. தன்னோடு வெற்றி என்றும் கூட வந்ததில்லை என்று எண்ணிய அவனுக்கு அதுவரை ஏற்பட்டிருந்த மனக்குறை தீர்ந்தது.

ஆனால், இன்னமும் பாண்டியர் தனக்கு அளித்திருக்கும் புதிர் என்னவென்று மாறனுக்கு புரியவிலை. அந்தச் சூசகத்தின் பொருள் இன்னதென்பதை அவன் இன்னும் அறியவில்லை. எதிரியின் காலடியில் இதை ஒளித்துவைப்பானேன்.?

அச்செயலுக்கு பின்னால் இருந்த பண்டியனின் நோக்கம் புரியவில்லை. என்ன மாயமந்திரம் இது? சோழர்களின் மீது பாண்டியருக்கு தான் எவ்வளவு துவேஷம்? ஆனால், அவர்களின் பரம பொக்கிஷத்தை அவன் காலடிக்கு கீழே வைத்துவிட்டனரே?

அதன் பின் அவனுக்குப் புரிந்தது. 'இந்தப் பொக்கிஷத்தை சமீப காலத்தில் கொண்டு வந்து வைக்கவில்லை. ஒரு நூறாண்டுக்கு முன்னால் வைத்திருந்தனர். சோழருக்கு பயந்து வைக்கவில்லை. பல்லவருக்கு அஞ்சி வைத்தனர். அப்போது தஞ்சை பாண்டியரின் நண்பர்களாம் முத்தரையரிடம் அல்லவா இருந்தது? ராஜசிம்ஹன் காலத்தில் அதன் நிஜமான உறைவிடத்திலிருந்து எல்லோருடைய கவனத்தையும் அகற்றவே ஈழமென்றும் கவிதையென்றும் நாடகமாடியுள்ளனர். அதனால் அதைக் கைப்பற்ற நினைத்த சோழர்களது நோக்கமும் நிறைவேறவில்லை.'

தற்போதைய பிரச்சனைக்கு வந்தாள் லோகா. "நம்மால் இனி வெளியே செல்ல முடியாவிட்டால் என்ன செய்வது?"

"நாமே இந்த நகைகளை அணிந்து கொள்வோம். நீயே ராணி, நானே ராஜா" என்றான் கொல்லென்றுச் சிரித்துவிட்டு.

"ஆசையைப் பார்" என்றாள் நாணித் தலைக்குனிந்து.

"இவ்வளவு முககாந்தியும் சௌந்தரியமும் உள்ள பெண்ணை அருகில் வைத்துக்கொண்டு உயிர்விடுவது ஆனந்தமாய்த் தான் இருக்கும். ஆனால், நாம் வெளியேசெல்ல வேண்டும். அதுவும் வாழ்க்கையின் பெரும் வெற்றியைப் பெற்று விட்டு. சரித்திரத் தையே மாற்றும் செயல் ஒன்றைச் செய்து விட்டு" என்று நினைத்தான் மாறன்.

ஆனால் லோகா கேட்டதில், அவனுக்கே ஒரு சந்தேகம். சரித்திரத்துக்கு பதில் சொல்லவேண்டிய கடமை மாறனுக்கு உண்டு என அறிந்திருந்தான். 'இந்தக் கிரீடத்தை இதே இடத்தில்

வைத்துவிட்டுச் சென்றுவிடலாமா? அதை எதிர்காலத்தில் யாரேனும் கண்டு பிடிக்க வாய்ப்பிருக்கிறது. அதை எடுத்துச் சென்று தாங்களும் இந்த சுரங்கத்தின் இடுக்கு ஒன்றில் அகப்பட்டு மாண்டுவிட்டால் அது எதிர்காலத்திலும் யாருக்கும் கிடைக்காமல் போகுமே?' என்று யோசனை செய்தான்.

''இல்லை, நாம் வெளியேற இன்னமும் நல்லதொரு காரணம் கிடைத்துவிட்டது. நாம் வெளியே சென்றாகவேண்டும். அதற்கு வேறோர் அவசியமும் ஏற்பட்டிருக்கிறது'' என்றான் மாறன்

''என்னை விட, உங்கள் உயிரை விட இந்த மணிமகுடத்தைச் சோழ அரசனிடம் ஒப்படைக்க வேண்டியது முக்கியமா?'' என்றாள் அவள். அந்தக் கிரீடத்தின் மேல் அவளுக்கு ஒருவகையான பொறாமையே வந்துவிட்டது.

''இளவரசி! சமயோசிதமாகக் காரியம் செய்தீர். பன்னெடுங் காலமாகக் இதைக் காலடியில் வைத்துக் கொண்டே கடல் கடந்த அண்டை நாடுகளில் தேடிக்கொண்டிருந்தார்கள். இந்த பொக்கிஷம் தேடினாலே கிடைப்பது மிக மிக அபூர்வம். சரித்திரத்தை மாற்றக்கூடிய பொருட்கள் மிகச் சிலவே உள்ளன. அதில் இதுவும் ஒன்று'' என்றான் மாறன்.

''இதுவரை மேதாவிமேதைகள் யாரும் செய்ய முடியாத செயலை நீ செய்தாய்! இதைக் கண்டுபிடித்தது என் அதிர்ஷ்டம்! என்றாலும், அதில் முக்கியமான பங்கு உனது. இந்த வெற்றியெல்லாம் உனக்குத்தான் சேரும்'' என்று பெருந்தன்மையாகக் கூறினான். ''இனி பிரதமர் அநிருத்தர் எண்ணியிருந்த காரியத்துக்கு ஏதும் தடங்கல் ஏற்படுமோ என்ற அச்சமின்றிச் செயல்படுத்த முடியும்'' என்றும் சொன்னான்

''இருட்டு படையெடுத்த சமயம் பார்த்துக் கோழைத்தனமாகவும், திருட்டுத்தனமாகவும் தஞ்சைக்குள் பிரவேசிக்க அவசியம் ஏற்பட்டது. அதுவும் விதி வசம் தான். இல்லையென்றால், நூறு போர்க்களங்களில் பெறாத வெற்றியை நாம் இன்று பெற்றிருக்க முடியுமா? நாம் தற்செயலாகச் சரித்திரத்தின் பாதையை மாற்றி விட்டோம் என்று நினைக்கிறேன்.''

''சரித்திரத்தின் வழி இருக்கட்டும். நாம் வெளியே செல்லும் வழி எங்கே?'' என்றாள் பொறுமையிழந்த லோகா.

''எனது யூகம், வழி வெகு அருகில் உள்ளது என்பது தான்'' என்று நம்பிக்கை தெரிவித்தான் மாறன்.



''நல்லவேளை. வீட்டுக்குச் சென்று என்னவெல்லாமோ செய்யலாம் என்று கனவு கண்டு வந்தேன். அந்தக் கனவை நனவாக்கத் தாங்கள் உதவி புரியுங்கள்!'' என்றாள் லோகா.

''வா சீக்கிரம்!'' என்று அவள் கையைப் பிடித்து இழுக்காத குறையாக நடந்தான். அவள் கையில் பாண்டியப் பொக்கிஷங்கள். இவன் கையில் தீப்பந்தம்.

ஆனால், வருத்தத்துக்குரிய விஷயமும் இருந்தது. தீப்பந்தத்தியிலிருந்து வர வர ஒளி குன்றி வந்தது. சிறிய வெடிப்பு சப்தங்கள் கேட்டன. அந்தச் சுடர் முழுவதுமாய்த் தன் பிராணனை விடுவதற்குமுன் வெளியே செல்லும் வழியைக் கண்டுபிடிக்க வேண்டிய நிர்பந்தம்.

அறையைக் கடந்த பின் சுரங்க வழி விசாலமானதாகவே இருந்தது. சற்றுத் தூரம் போனதும் வழி வளைந்து செல்வதாகத் தோன்றியது. பின்னர் மேலே ஏறும்படி படிகள் திடீரென வந்தன. முதல் படியில் மாறன் காலை இடித்துக்கொண்டான். படிகள் ஏறியதனால் பாதாளத்திலிருந்து மீண்டும் தரை மட்டத்துக்கு வந்து விட்டோம் என்று தோன்றியது. அதனால் சீக்கிரம் சுரங்கம் முடியும் என்றும் தோன்றியது.

அப்போது தீப்பந்தத்தில் கொஞ்சம் கொஞ்சமாக வெளிச்சம் குறைவாகி வருகிறது என்று இருவரும் அறிந்தனர். வெளிச்சத்தின் குறைவுடன் புகை அதிகமாவதும் தெரிந்தது. இன்னமும் கொஞ்ச நேரமே அது எரியும் என்று எண்ணினார்கள்.

ஆனால், எதிர்பாராமல் திடீரென தீப்பந்தத்தில் சுற்றியிருந்தத் துணி கீழே விழுந்து அது தன் கடைசிக் சுடரையும் கருக்கிக் கொண்டு மாண்டுபோனது. மறுகணம் வெளிச்சமும் மறைந்தது.

இவ்வளவு நேரம் தோற்றுப் போயிருந்த தன் ராஜ்ஜியத்தை இருள் மீண்டும் கைப்பற்றிக்கொண்டது.

❖ ❖ ❖

## அத்தியாயம் நூறு
## மீளமுடியுமா?

தீ அணைந்ததுதான் தாமதம், ஏதோ அதுவரை காத்திருந்த கரும்பூதம்போல இருள் அவர்களை ஆக்கிரமித்தது. மூச்சு

முட்டியது போலொரு பிரமைகூட அத்துடன் அவர்களை ஆட்கொண்டது.

மாறனைப் பின்தொடர்ந்து வந்த லோகா "ஐயையோ! விளக்கு அணைந்துவிட்டதே!" என்றாள்.

"நல்ல வேளை! காரியம் ஆனபிறகு அணைந்தது! போனால் போகட்டும்" என்றான் மாறன். இப்போது வந்த இருட்டு முன்பே வந்திருந்தால் அந்தப் பொக்கிஷங்களைக் கண்டுபிடித்திருக்க முடியாதென்று நினைத்துக் கொண்டான்.

"காரியம் முடிந்ததா? நாம் வெளியேறினால்தான் அது முழுமை யாக முடியும் " என்று நினைவு படுத்தினாள் லோகா.

கும்மிருட்டில் அடியோடு செயல் இழந்து நின்றனர். அந்தச் சுரங்கம் போல அவர்களது தற்போதைய நிலைமையும் இருளடைந்திருக்கிறது என்றறிந்தனர். அந்தக் கிரீடம்தான் அவர்களுக்கு துர் அதிர்ஷ்டத்தைத் தருகின்றதோ என்ற நினைப்பு வேறு லோகாவுக்குக் கூடுதலான அச்சத்தைக் கொடுத்தது.

அவன் வைத்திருந்த தீப்பந்தத்தையும் கையிலிருந்து எறிந்து விட்டான். அதிலிருந்து புகைதான் அதிகமாக வந்தது வெளிச் சத்தை விட. "ஐயா! நீங்கள் அவசரப்பட்டு ஒரு தீப்பந்தத்தை மட்டும் எடுத்துவந்தீர்கள். அது தான் தவறு" என்று குற்றம் சாட்டினாள் லோகா.

"இரண்டை எடுத்து வந்திருந்தாலும் ஒரே நேரத்தில் அணைந்து விடுமல்லவா?" என்றான் மாறன்.

"ஒன்றை அப்போதே அணைத்துவிட்டு, வேண்டும் என்றபோது மற்றொன்றிலிருந்து ஏற்றியிருக்கலாம் அல்லவா?" என்றாள் அவள்.

"ஓ! அப்படி ஒரு வழி இருக்கிறதா?" என்றான். தன்னுடைய மதிக்கு அது எட்டவில்லையே என்ற சிறிய வருத்தம் அவனுக்கு. "இனி அதைப் பற்றிப் பேசிப் பயனில்லை."

இருட்டு லோகாவுக்கு அச்சமூட்டுவதாயிருந்தது. ஆனால், அவனருகில் இருந்தால் அந்தக் கஷ்டமிராது என்று அவளுக்குத் தோன்றியது. அவனை நெருங்கிக் கொண்டாள். அவளுடைய மூச்சுக் காற்று தன் மேல் பட்டதை இப்போது அவனால் உணர முடிந்தது.

இருளிலும் அவள் முகத்தை மாறனால் கற்பனை செய்து கொள்ள முடிந்தது. அவளுடைய கண்கள் அச்சமயம் தடாகம் ஒன்றை ஒத்திருக்கவேண்டும். இன்னமும் ஏதாவது ஒரு சின்னக் காரணம் ஏற்பட்டாலும் அழுதுவிடுவாள் என்று மாறனுக்குத் தெரியும். இவ்வளவு சின்ன வயதில் அவள் பார்த்த பயங்கரங்கள் அவளை மிரளச் செய்திருந்தன. அத்தகைய காரணத்தை மீண்டும் ஏற்படுத்திக் கொடுக்க அவன் தயாராக இல்லை. ஆதரவாய்ப் பேசினான். வேடிக்கையாயும் பேசினான்.



"இளவரசி, ஏன் அவசரப்படுகிறீர்கள்? வழியைக் கண்டு பிடித்துவிட்டால் உம்மை விட்டுப் பிரிய மனமின்றி பிரிந்து செல்ல நேரும்" என்றான்.

அவன் சொன்னதில் அவள் நாணி முகம் சிவந்ததை அந்த இருட்டு மறைத்துவிட்டது. பொய்யான பயத்துடன் அவளும் "ஐயா! அதற்காக இங்கேயே இருக்கும்படி சதி செய்யாதீர். வெளியே கொண்டுபோய் விடுங்கள். உமது மாளிகையிலேயே வேண்டுமானால் வந்து தங்குகிறேன்" என்றாள்.

அந்த வார்த்தைகள் வெளிவந்தவுடன் தனது உதட்டை கடித்துக் கொண்டாள் லோகா. அவள் முகத்தில் வெளியேதோன்றிய அன்பானது அவனுக்குத் தெரிந்துவிடாமல் இருள் மூடியது நல்லது தான். "இவன்முன் நம் கூச்சமெல்லாம் விடைபெற்றுக் கொண்டுவிடும் போலிருக்கிறதே. இப்படி இவனிடம் இதயத்தைப் பறிகொடுத்துவிட்டுத் தவியாய்த் தவிக்கிறோமே.என்ன வார்த்தை கேட்கப்போனோம்? என்னைத் கலியாணம் செய்துக் கொள் கிறாயா என்று எந்த பெண்ணாவது கேட்பாளா? எந்த பெண்ணும் தனது ஆசையை அப்படி வெளியிட்டுவிடக்கூடாது. அது தமிழ் பெண்மைக்கு அழகல்லவே" என்று நாணம் கொண்டாள்.

ஆனால், மனதுக்குள் ஒரு நிம்மதி. "மெய்யாகவே கர்மவினை யானது நம்மை இணைக்கப்போகிறதோ என்னவோ. இல்லை யென்றால் இந்தப் பாதாளத்தில் அவனுடன் தன்னந்தனியாக எப்படி மாட்டிக்கொண்டோம்" என்றும் நினைத்தாள்.

"பயம் கொள்ளாதீர் இளவரசி. விளையாட்டுக்கு சொன்னேன். நாம் உயிரோடு திரும்பிப்போய் குடும்பத்தினரைப் பார்ப்போம் என்பது நேற்று வரை நிச்சயமில்லை. ஆனால், இப்போது அரசரிடம் நான் சொல்லுவதற்கு எத்தனையோ நற்செய்திகள் இருக்கின்றன. சரித்திரத்தை மாற்றக்கூடிய பொருளை நாம் கண்டு பிடித்துவிட்டோம். நூறாண்டுக் காலமாய் அலைந்து திரிந்து காடு மலையெனக் கடல் கடந்து தேடிய பொக்கிஷம் இன்று நம்மிடம் அகப்பட்டுள்ளது. இனி நல்லதொரு முயற்சி செய்து மேலே செல்ல முயல்வோம்" என்றான்.

ஏற்கெனவே தஞ்சைக்குச் சென்றுவிடவேண்டும் என்று மிகுந்த ஆர்வம் கொண்ட மாறன், இப்போது கிடைத்த இரட்டைச் சாதனையின் வேகத்தினால் பன்மடங்கு அதிக பலம் கொண்டிருந்தான். அந்த வெற்றியில் மலையைப் பெயர்த்தெடுக்கும் வலிமை கூடப் பெற்றிருந்தான். வெற்றிகளை உலகுக்கு வெளிப்படுத்தவேண்டும் என்ற ஆர்வமும் அவன் தோள்களுக்கு மேலும் வலிமை அளித்தன.

லோகாவும் ''அதுமட்டுமல்ல. நாம் வெளியே சென்றால் தான் அய்யனாருக்கு அவரது வாளும் கிடைக்கும். அதற்காகவாவது நம்மை வெளியே கொண்டு சேர்த்துவிடுவார்'' என்று நம்பிக்கை தெரிவித்தாள்.

உண்மையில் உடற்சோர்வும் மனச்சோர்வுமுற்று, முக்கால் பிராணனை இழந்திருந்த மாறனுக்கு அந்த பாண்டியப் பொக்கிஷங்களைக் கண்டபின் பேரானந்தம். அவனுக்கு அதிகரித்திருந்த கடமைச் சுமை அவனைத் தளரவிடவில்லை. அதற்கு நேர்மாறாக அந்தப் பொருட்கள், புத்துயிர் அளித்து உற்சாகம் ஊட்டின. பாண்டிய குலத்தின் விலையில்லாப் பொக்கிஷம் தன் கையில் இருக்கிறது. அது பலவிதங்களில் அளவற்ற சந்தோஷத்தைக் கொடுத்தது. தன்னைப் படாத பாடு படுத்திய பாண்டியரைப் பழிவாங்கிவிட்டோம் என்பதற்காக மட்டுமல்ல. அதன் காட்சி அவன் பயத்தைத் தணித்து ஓரளவு உற்சாகத்தையும் அளித்தது. நிச்சயமாக இந்தப் பொக்கிஷம் தாங்கள் வந்த திசையிலிருந்து வந்திராது. அது கோட்டைக்குள் இருந்துதான் வந்திருக்க வேண்டும். அதனால் அவர்கள் செல்லும் திசை சரியானது தான். அது தஞ்சைக்குள் தான் தங்களை இட்டு செல்லும்.

ஆனால், இருவருக்கும் இருளில் வழி கண்டு பிடிப்பது எப்படி என்றுதான் தெரியவில்லை. ''ரவிதாசன் போல உமக்கு மாயம் தெரிந்தால் நன்றாய் இருக்கும்'' என்று சொல்லி அவன் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள் லோகா.

அவன் அருகில் வந்ததும் அவளது குவளை மலர்க் கண்கள் இருளில் மின்னின. ''இதற்கு மாயமந்திரம் எல்லாம் தவமிருந்து கற்கவேண்டுமா என்ன? உன் கண்ணின் வெளிச்சம் கொண்டே இந்தச் சுரங்கத்தில் வழி கண்டு பிடித்துவிடலாம்'' என்றான்.

அவள் நாணத்தில் கவலையை மறந்தாள் ''அப்பப்பா! ஆண்களுக்கெல்லாம் வாளேந்தத் தெரிகிறதோ இல்லையோ; வழி கண்டுபிடிக்கத் தெரிகிறதோ இல்லையோ, நன்றாய் வாயாடத் தெரிகிறது. கலி முற்றிவிட்டது. அய்யா, தேனில் குழைத்து வந்த



அந்த வார்த்தைகள் எல்லாம் போதும். வெளியே செல்ல வழி கண்டுபிடியுங்கள்'' என்று சொல்லிச் செல்லமாக மாறனை ஒரு தள்ளுத் தள்ளினாள். ''அம்மம்மா! பெண்மையின் மிருதுத் தன்மைக்கு அளவேயில்லை?'' என்று நினைத்தான் மாறன்.

குழந்தைகள் போல ஒருவர் கையை ஒருவர் பிடித்துக்கொண்டு சுரங்கத்தின் ஈரமான சுவரை ஒட்டியபடியே நடந்தனர். சுரங்கமாயிருந்தால் என்ன? நரகமாய் இருந்தால் தான் என்ன?காதலர் வாழுமிடமெல்லாம் ஒரு சொப்பனபுரி தானே?

மாறனுக்கு முதல் நாள் இரவு நடந்த சம்பவங்கள் எல்லாம் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன. அவற்றை எண்ணினால், எல்லாம் ஒரு கனவு மாதிரி இருந்தது. நிகழ்ச்சிகள் எல்லாம் உண்மை தான் என்பதை நிரூபித்துக் கொண்டு கையில் இருந்தது பாண்டிய நாட்டுப் பொக்கிஷம். நாடே வியக்கும்படியான செயல்களைப் புரிந்திருக்கிறோம். ஒன்றல்ல இரண்டு. பழுவூர் இளவரசியை மீட்டது. பாண்டியர் பொக்கிஷத்தைக் கண்டு பிடித்தது. அந்த இரண்டு சாதனைகளுக்கும் ஏற்ற சன்மானத்தைப் பெறவேண்டும். ''கிடைத்த இரண்டு பொருட்களில் ஒன்றை நீயே எடுத்துக்கொள் என்று பிரதமர் சொல்லுவார். அப்போது யோசிக்காமல் பொன்னைச் சோழருக்கும், பெண்ணை சம்புவராயருக்கும் கேட்கவேண்டும்'' என்று கற்பனைச் செய்து கொண்டான். அந்தக் கற்பனையில் குதூகலம் அடைந்தான்.

தோல்வி தோல்வி என்று திரும்பிய இடமெல்லாம் தோல்வியையே சந்தித்தவனுக்கு மாபெரும் வெற்றி. அதற்குப்பின் கிட்டிய வெற்றியை வெளிப்படுத்த ஒரு வெறி.

ஆனால், முதலில் இருள்படிந்த இந்தச் சுரங்கத்தைவிட்டு வெளியேறவேண்டும். இருவரும் சுவர்களைத் தடவியபடியே நடந்தனர். இருவரும் அடிக்கடி மேலே இடித்துக் கொண்டதால் சுரங்கம் சுருங்கியது போல் ஒரு உணர்வு.

திடீரெனச் சுருங்கியச் சுரங்கம் முடிந்தே விட்டது என தெரியவந்தது. ஒரு கையை முன்னால் நீட்டியபடி மாறன் நடந்துக் கொண்டிருந்தான். இல்லையென்றால் முட்டிக்கொண்டு முகம் புடைத்துப் போயிருக்கும்.அதை இருவரும் எதிர்பார்க்கவில்லை.

சந்தேகமில்லாமல் சுரங்கம் முடிந்து விட்டது. அய்யனார் கோயிலுக்குத் திரும்பி செல்வது, அதுவும் பூரண இருளில் செல்வதென்றால் இயலாத காரியம்.

''இத்தனை நேரமும் உனக்கு உதவி செய்து வந்த அதிர்ஷ்டம் எங்கே போயிற்று?'' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான் மாறன்

''இப்போது என்ன செய்வது?'' என்றாள் லோகா

மாறன் தைரியமாக பதில் கொடுத்தான் ''ஒன்றும் முழுகிப் போய்விடவில்லையே! இவ்வளவு தூரம் பாதாளத்தில் சுரங்கம் வெட்டியவர்கள் நிச்சயமாக அதற்கு இருபுறமும் வழி வைத்திருப்பார்கள். நாம் இன்னுமொரு வழிக்கு வந்துவிட்டோம்.

சுரங்கப் பாதையை உள்ளேயிருந்து திறப்பதற்கு என்ன உபாயம் என்று தெரிந்து கொள்ள மாறன் சுற்றும் முற்றும் பார்த்தான். சுரங்கத்தின் சுவர்களைத் தட்டிப்பார்த்தான். பின் உட்கூரையைத் தட்டிப்பார்த்தான். சுரங்க வழியிலிருந்து வெளியே செல்ல மார்க்கத்தைக் காணாமல் திண்டாடினான். வழியேதும் இல்லை என்பது ஓரிரு நொடிகளில் தெரிந்தது. களைத்துப் போய் அமர்ந்தான் மாறன். ஆனால், லோகா இன்னமும் சுரங்கச் சுவற்றில் துழாவிக்கொண்டிருந்தாள்.

திடீரென ''சம்புவராயரே இங்கு பாருங்கள்'' என்றாள் லோகா. இருளாய் இருந்ததால் அவன் கையைப் பிடித்து அவளே சுவற்றின் மேல் வைத்தாள். ஒரு இடத்தில் நகத்தளவுக்கு சின்னஞ்சிறு இடுக்கு அவன் விரல்களுக்குத் தென்பட்டது. அதன் ஓரத்தில் கையை வைத்தால் அதன் வழியாக மெல்லிய காற்று வந்து கொண்டிருந்தது. அதுவும் சுத்தமான காற்று. ஓரிரவு முழுவதும் பூமிக்கடியில் ஈரக் காற்றைச் சுவாசித்துவிட்டவர்களுக்கு இது தேவாமிர்தம் போலிருந்தது. காற்றில் மலர்களின் மணம் கூடச் சேர்ந்து வந்தது போல பிரமை. சரியாய்ச் சொல்லப்போனால் மல்லிகை மலர்களின் மணம். மாறன் நினைத்துக்கொண்டான். 'நல்ல சகுனம் தான். லோகாவை நாம் முதல் முதலில் அடையாளம் கண்டதே அந்த மல்லிகை வாசத்தால் தானே?'

சுவரின் மேல் அந்தப் பிளவு தொடர்ந்து சென்றது. விரலை வைத்து அதன் முழுச் சுற்றளவையும் தொட்ட மாறனுக்கு நிச்சயமாக அது தனியாகப் பதிக்கப்பட்ட சதுரவடிவத்திலான கல்தான் என்பது தெரிந்தது.

ஆனால், இந்த வாயிற்கதவு எங்கு நம்மை இட்டுச் செல்லும்? சுற்றிச் சுற்றிப் பகைவன் காலடியில் தான் நாம் பூமியிலிருந்து எழுவோமா? இல்லை. கோட்டைக்குள்ளா? இல்லை இதற்கு பின் சுரங்கம் தொடருமா? தெரியாது. எதுவானாலும் திறந்துதான்



ஆகவேண்டும். உள்ளே இருட்டும் பழைய காற்றும் தாங்க முடியவில்லை.

அதை தள்ளிப் பார்ப்போம் என்று இருவருமாக மூச்சிறைக்கத் தள்ளினார்கள். அம்முயற்சியில் மலரினும் மிருதுவாக இருந்த அந்த பெண்ணின் தோள் அவன் மீது அவ்வப்போது சாய்ந்தது. அவ்வப்போது கல் அசைவது போல் ஒரு உணர்வு. பிரமையா என்றுகூட நினைத்தனர்.

இன்னமும் அழுத்தமாகக் கல்லைத் தள்ளினார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் கல்லின் ஓரத்தில் சற்று வெளிச்சம் அவர்கள் கண்ணுக்குத் தென்பட்டது. சுத்தமான காற்று அந்த இடுக்கின் வழியாக மேலும் உள்ளே வந்தது. தாகத்தில் இருப்பவர் நீர் அருந்துவது போல இருவரும் அதை நன்றியுடன் சுவாசித்தார்கள்.

''நாம் பிழைத்துப் போனோம்!'' என்று நினைத்து இருவருமாகத் திரும்பவும் முழு முயற்சியுடன் அந்த கல்லைத் தள்ளினார்கள். பின் சட்டென்று கல் வெளியே சாய்ந்தது. அது விழுந்த சப்தம் சுரங்கத்தில் குடி கொண்டிருந்த மௌனத்தில் பெரும் அதிர்வாய்க் கேட்டது.

ஒரு வழி ஏற்பட்டது. கல் விழுந்தவுடன் முதலில் வெளியே அனுபவித்தது பூவின் வாசனை. அப்போது சுரங்கத்துக்குள் அனுபவித்தது பிரமையல்ல. வெளியுலகின் ஒளி கண்களைக் கூசவைத்தது. அத்துடன் சுரங்கத்தில் குடிகொண்டிருந்த இருள் மெல்லக் கரையத் தொடங்கியது. சுரங்கத்தின் துவாரம் வழியாக விசாலமான மண்டபம் ஒன்றும் தெரிந்தது. அதற்கு அப்பால் அபூர்வமான காட்சி ஒன்றும் தென்பட்டது.

பெண்களின் கூந்தல்களைப் போல சுற்றியிருந்த செடிகளில் தாழம்பூ, செவ்வந்திப்பூ, மல்லிகை, முல்லை, இருவாட்சி, செண்பகம் முதலிய மலர்கள் கொத்துக் கொத்தாய் அலங்கரித்தன. எங்கும் செடிகொடிகள் மண்டிக்கிடந்தன. எனினும் அவை எதுவும் காட்டுச் செடிகளோ களைகளோ இல்லை. அன்பாய் வளர்ந்த செடி கொடிகள். சிங்காரத் தோட்டமது. இருட்டிலிருந்து வந்தவர்களுக்கு அது அப்படியே தேவலோகம் போலத் தோன்றியது.

ஆனால், நிதானமாகச் செயல்பட்டனர் இருவரும். முதலில் சற்றுப் பயத்துடன் எட்டிப்பார்த்தார்கள். பாதாளத்தில் திசையும் தெரியவில்லை, திக்கும் தெரியவில்லை. 'இந்த இரவில் வெளியே சென்றால் என்னவெல்லாம் தீமை நமக்கென இன்னமும் இருக்குமோ. முதலில் கோட்டைக்குள் வந்துவிட்டோமா, இல்லை சுற்றிச் சுற்றி வெளியில் தானிருக்கிறோமா? துவாரத்துக்கு

வெளியில் தன்னைத் தேடி வந்தவர்கள் காத்திருந்தால்?... சுரங்கத்தின் வாசலில் நின்றுகொண்டு பாண்டியன் இன்னமும் உபத்திரவம் செய்வானோ' என்றெல்லாம் எண்ணமிட்டது அவர்கள் மனம்.

வெளியே ஆள் நடமாட்டம் தென்படவில்லை. அதனால் துவாரம் வழியாக முதலில் மாறன் வெளியேசென்றான்.அவளுக்கு உதவிக் கரம் நீட்டுவான் என்று நினைத்த லோகாவுக்கு அதிசயம். அதற்கு பதிலாக ஓங்குவதற்கு ஏதுவாக அய்யனாரின் வாளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு இன்னமும் ஏதாவது விபரீதம் வருமா என்றுச் சுற்றுப்புறத்தை உற்று நோக்கினான். அதன் பின்தான் கை நீட்டி லோகாவையும் வெளியே வரச்செய்தான்.

பாதாளத்தில் நேரம் சென்றது தெரியவில்லை. வெளியே அப்போது தான் விடிந்து வெளிச்சமாயிருப்பதைக் கண்டனர் இருவரும். வெகு நேரமாக வானத்தின் எல்லையில் குமுறிக் கொண்டிருந்த மேகங்கள் வானை முழுவதுமாய் ஆக்கிரமித்திருந்தன. வானத்து முகில்கள் கருமை நிறத்தை அடைந்து உலகத்தை நனைக்கத் தயாராயிருந்தன. அவர்கள் இருவரும் வெளியேவரக் காத்திருந்தது போல வானவீதியில் பவனி வந்து கொண்டிருந்த ஆயிரமாயிரம் கருமேகங்கள் தங்கள் பெட்டகத்தைத் திறந்து வைரம் போன்ற மழைத்துளிகளை அவிழ்த்து விட்டன. சாரைச் சாரையாய் வரும் போர்வீரர்கள் போல அந்த நீர்த்துளிகள் பூலோகத்தின் மீது படையெடுத்தன.

ஆனால், சுரங்கம் திறந்த இடத்தில் மழைவரவில்லை. அதற்கு மேலே கல்லால் அமைக்கப்பட்ட நான்கு கால் மண்டபம் இருந்தது. அழகிய வேலைப்பாடுகள் நிறைந்த மண்டபம்.

''சுரங்கத்துக்கெல்லாம் வாயில் மண்டபம் கட்டுவார்களா என்ன? இது பரமரகசியமாய் இருக்கவேண்டும் எனறல்லவா யோசிப்பார்கள்?'' என்று மாறன் வியந்தான்.

வரும் மழையைப் பற்றி கவலையில்லாமல் வெளியே குயில்கள் மேகத்துக்கு பின் மறைந்திருந்த உதய ஞாயிறைப் பார்த்துப் பாடியது அவர்கள் காதுகளில் அபய கீதமாக தொனித்தது.

ஆகா. குயிலின்பாட்டு, சுத்தமான காற்று, மலரின் மணம், உதயத்தின் வெளிச்சம். மானிடர் வாழும் உலகை உயிருடன் எட்டிவிட்டோம் என்ற நினைவு இருவரின் மனதிலும் இருந்தது.

''சம்புவராயரே! சுரங்கத்துக்குள்ளேயே நமது ஆயுட்காலம் முடிந்து கைலாசப் பதவியை அடையும் வரையில் நாம் வட்டம் வட்டமாகச் சுற்றிக் கொண்டிருப்போம் என்று நினைத்து



விட்டேன்'' என்றாள் லோகா. ''அதுமட்டுமல்ல என்றாவது மேலிருக்கும் வீடொன்றுக்கு அஸ்திவாரம் தோண்டும்போது இரண்டு எலும்புகூடுகள் கிடைக்கும். அருகே இந்தப் பாண்டிய நாட்டுப் பொக்கிஷங்கள் இருக்கும் என்றுகூடக் கற்பனையெல்லாம் செய்துவிட்டேன். மிக்க நன்றி. வெளிக் கொண்டு விட்டதற்கு வந்தனம்'' என்றாள்.

தானும் மாறனும் எத்தனையோ இன்பமான நேரங்களைக் கழித்த அந்த சுரங்கத்தைப் பார்த்தாள் லோகா. அந்தச் சுரங்க இருட்டை வெறுக்கத் தோன்றவில்லை அவளுக்கு. தன் வாழ்வில் அது முக்கியமான திருப்பம் ஒன்றை ஏற்படுத்தியிருந்தது.

''சரி எங்கே இருக்கிறோம் என்று ஆராய்வோம்'' என்றான் மாறன். ''உமக்கு ஏதேனும் அடையாளங்கள் தெரிகின்றனவா என்று பார்'' என்றான்.

சுற்றிப் பார்த்த லோகா ''இது காடு போலில்லை. பக்குவமாகச் செடி கொடிகளைத் தட்டிக்கொடுத்து வளர்த்தது தெரிகிறது. நல்ல பராமரிப்பில் பூத்துக் குலுங்கிய மலர்களின் வாசம் தெரிகிறது'' என்றாள்.

சற்று யோசித்துவிட்டு லோகா ''இந்த இடம் எனக்குத் தெரிந்திருக்கிறதே'' என்றாள். இது என் பூர்வ ஜன்மத்தின் நிகழ்ச்சியா? இல்லை, என்றோ தோன்றி இன்று என் மனதில் தேய்ந்து மறைந்து போன பழைய கனவா?''

ரகசியம் பேசுவது போன்ற மெல்லிய குரலில் லோகா கூறினாள். ''நம் கண் முன்னால் தெரியும் இந்தக் காட்சியை நான் இதற்கு முன் நிச்சயமாகப் பார்த்திருக்கிறேன். சம்புவராயரே. உமக்கு அந்த அனுபவம் உண்டா. ஏதோ ஒரு புது இடத்துக்குப் போனபிறகு, அங்கு அதற்குமுன் எப்போதோ வந்து சென்ற உணர்வு வருமே. பூர்வ ஜன்ம வாசனை என்பார்களே. அது போல எனக்குத் தற்சமயம் தோன்றுகிறது ''என்றாள்.

மாறனும் ஆமோதித்தான் ''எனக்கும் அப்படித்தான் இருக்கிறது. எனக்கு நெருக்கமானவர்களின் வீடு போலவும் இருக்கிறது இது'' என்றான்.

''அப்படியா நல்லது. இது யார் வீடு?'' என்று கேட்டாள் லோகா.

அவன் அவளைப் பார்த்துப் புன்னகை புரிந்து, ''ஆம் இளவரசி. இங்கு நீர் பலமுறை வந்திருக்கிறீர். பூர்வ ஜன்மத்தில் அல்ல. நிகழும் இந்த ஜன்மத்திலும் தான். இது உங்களுக்குச் சொந்தமான,

பனைமரக்கொடி பறக்கும் பழுவூர் அரண்மனையின் தோட்டம்'' என்று சொல்லி மனம் விட்டுச் சிரித்தான் மாறன்.

''ஆகா அப்படியா?'' என்றாள் பழுவூர் இளவரசி. அவள் முகம் மலர்ந்திருந்தது. ''அப்படியென்றால் சம்புவராயரின் குலத் தோன்றலின் வரவு நல்வரவு ஆகுக'' என்றாள்.

சுரங்க வழியையொட்டிப் பல மலர்ச் செடிகள் பூத்துக் குலுங்கின. இருவரும் பாண்டியரின் பொக்கிஷத்தை எடுத்துக் கொண்டு வெளிவந்த சலசலப்பில் அவர்கள் மேல் பூஞ்செடியி லிருந்து மலர் மாரி பொழிந்தது.

தன் காதலியெனும் ஒற்றை ஆள் கொண்ட பரிவாரத்தோடு இயற்கை அளித்த வரவேற்பை ஏற்றுக்கொண்டு, தஞ்சை மாநகருக் குள் இளம் சம்புவராயர் பிரவேசித்தார்.

❖ ❖ ❖

**இரண்டாம் பாகம் முற்றிற்று**